श्रीहरिः

श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचितं

# श्रीबृन्दावनमाहात्म्यम्

ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிஸ்வாமிகள்

அருளிச்செய்த

# ஸ்ரீப்ருந்தாவனமாஹாத்ம்யம்

श्रीहरिः

# प्रस्तावना

इह खलु श्रीबृन्दावनमाहात्म्यमिति पुराणं समर्प्यते भक्तमण्डले । पुराणं नाम सर्गप्रतिसर्गादिदशलक्षणयुक्तमिति विद्मः । इतिहासपुराणानां पञ्चमवेदत्वं महद्भिर्मानितम् । अष्टादशपुराणानि निर्णीतानि । कानिचिदुपपुराणान्यपि सन्ति । इतिहासपुराणानां सुहृत्संमितत्वाच्छ्रोतृणां हृदये धर्मश्रद्धाबोधकत्वं कविभिरामोदितम्। पुराणानां महर्षिभिरेव कृतत्वे सत्यपि श्रीबृन्दावनमाहात्म्यस्य सर्गप्रतिसर्गादिदशलक्षणसंपन्नत्वात् पुराणत्वं युक्तमेव। किञ्च प्रेमिकेन्द्रमहाशयानां ब्रह्मर्षितुल्यत्वात्तद्विरचितमिदं पुराणमेवेति वक्तुं न्याय्यम् । पुरा नवस्यैव विषयस्याद्यास्मत्काले पुराणत्वमिति निरुक्तम् । तत्प्रकारेण श्रुतिस्मृतीतिहासपुराणप्रमाणप्रसिद्धभगवद्विषयाणामेवात्र नवीनमिव सङ्कीर्तितत्वादत्रोक्तविषयाणां पुराणत्वमनिवार्यमेव ॥

सर्वेषु पुराणेषु सारतमं श्रीमद्भागवतमिति विद्वत्सभायां निराक्षेपमङ्गीकृतम् । किन्तु श्रीकृष्णलीलाप्रचुरे तादृशे पुराणे राधानामापि परमरहस्यत्वाच्छ्रीशुकदेवेनोपगूहितमिति विद्मः । श्रीराधाया माहात्म्यं नारदीयब्रह्मवैवर्तस्कान्दवराहपाद्माख्यपुराणेषु श्रीव्यासाचार्यैस्तत्र तत्र विशदमेव वर्णितम् । ब्रह्मसंहितागर्गसंहितानारदपाञ्चरात्रकृष्णयामलतन्त्रादिशास्त्रेष्वपि राधामाहात्म्यमुपासनं च संयक् प्रकाशितमेव ॥

आचार्यसार्वभौमेषु प्रथमश्रेण्यां पट्टाभिषिक्तैः शङ्करभगवत्पादै-र्यमुनाष्टकजगन्नाथाष्टकश्रीपत्यष्टकाच्युताष्टकादिस्तोत्रग्रन्थेषु श्रीराधानाम व्यक्तमेव कीर्तितम् । विशिष्टाद्वैतसंप्रदाये वेदान्त-देशिकाख्याप्रसिद्धमहात्मभिः स्वरचितयादवाभ्युदयमहाकाव्ये श्रीराधानाम सङ्कीर्तितम् । नढादूरम्माळ् विरचितयतिराजविजय-नाटकप्रथमश्लोकेऽपि राधामाहात्म्यं प्रकाशितम् । वरवरमुनिकृत-राजगोपालस्तोत्रे वरदराजदासकृतद्राविडभागवते च राधावर्णनं कृतम् ॥

माध्वमते महनीयतमेन कनकदासेन पुरन्दरदासपुत्ररत्न-भूतमध्वपतिना च राधानाम गीतम् । श्रीवल्लभविट्ठलनाथ-हरिचरणरसिकसूरदासाद्यष्टकविरत्नैरपि राधालीला सुवर्णिता । निम्बार्काचार्येण जयदेवहरिदासादिभिश्च व्रजवासिभिः श्रीराधालीला बहुशो वर्णिता । तथा श्रीकृष्णचैतन्यरूपसनातनरघुनाथकर्णपूरादि-गौडीयमहाकविभिश्च राधाविलासो वर्णितः ॥

चण्डिदासविद्यापतिभद्राचलरामदासक्षेत्रज्ञवेङ्कटरामसद्गुरु-नारायणतीर्थसदाशिवब्रह्मेन्द्रविजयगोपालयतिनारायणभट्टाद्रि-नामदेवैकनाथजनामीराप्रमुखपरमभागवतैरपि राधाकृष्णलीलारसो बहुधाऽनुभवितः ॥

एतत्सर्वमास्वाद्याभिनवव्यासावतारभूतैः काव्य-नाटकालङ्कारसाहित्यसरणिरसिकाग्रेसरैः पाणिनीयव्याकरण-

शब्दरूपनिरूपकैर्न्यायनलिनीविकासकारणभूतप्रभाकरैः मीमांसा-मञ्जरीमञ्जुळकण्ठैः वेदान्तविद्यार्णवमथनलब्धाचार्यहृदयामृत-वितरणप्रवीणैः सहस्रशो भगवद्गुणप्रवचनप्रभाविद्रावित-कलिकलुषितजनमोहान्धकारैः सन्ततं तालमृदङ्गवीणासहित-गानकलासन्तोषितश्रीराधारमणभक्तकोलाहलनित्यसेवधुरन्धरैः अस्मत्तातपादैः श्रीकृष्णप्रेमिमहाप्रभुश्रीचरणैः सकलभागवत-मण्डलप्रमोदवर्धनाय प्रणीतमिदं श्रीबृन्दावनमाहात्म्यम् ॥

पठनलेखनश्रवणसङ्कीर्तनैरेव नूनमस्य रसानुभवः साक्षाल्लभ्यते साधुभिः । सरसमधुरललितकविताशैली प्रेमिकानन्य-साधारणीति विदितमेव । रत्नाकरे रत्नलाभ इवार्थगांभीर्यमपि शास्त्रज्ञानां सदसि श्लाघितमेव ॥

प्रेमिकग्रन्थेषु कौस्तुभरत्नप्रतिरूपमिदं श्रीमद्बृन्दावनमाहात्म्यं परमरसिकानां भागवतानां करतलकमले समर्प्यते । सम एवास्माकमानन्दः । वयं प्रेमिकचरणभक्तिमेव प्रार्थयामः ॥

श्रीरङ्गम्
श्रवणद्वादशी
५-९-२००६

इत्थं
भवतां दासभूतो
वेङ्कटकृष्णः
हरिः

ஸ்ரீஹரி:

# முகவுரை

ஸ்ரீஸ்ரீ அண்ணா ஸ்ரீகிருஷ்ணப்ரேமி ஸ்வாமிகள் அருளிச்செய்த க்ரந்தங்களுள் **ஸ்ரீப்ருந்தாவனமாஹாத்மியம்** என்ற இந்த நூல் சூடாமணி போன்றது. இதில் **ஆதிகாண்டம், ஸ்ருஷ்டிகாண்டம், க்ஷேத்ரகாண்டம், கோவிந்தகாண்டம், தேவீகாண்டம், லீலாகாண்டம், மதுராகாண்டம், துவாரகா காண்டம், பாகவததர்மகாண்டம், வைபவகாண்டம்** முதலிய பத்து காண்டங்கள் உள்ளன.

ஆதிகாண்டத்தில் குருமஹிமையும், ஸத்ஸங்கத்தின் அவசியமும், ப்ருந்தாவனவர்ணனை, கோபீப்ரேமை, ராதாக்ருஷ்ணலீலை முதலியவைகள் வர்ணிக்கப்படுகின்றன.

ஸ்ருஷ்டிகாண்டத்தில் ராதாகிருஷ்ணனின் முதல் அவதாரமான அனந்தபத்மநாபனின் தோற்றம், பிறகு ப்ரம்மா ருத்ரன் ஸனகாதிகள் நவப்ரஜாபதிகள் மனுமுதலியவர்களின் தோற்றமும், ஸ்ரீவராஹஅவதாரமும், மத்ஸ்ய கூர்ம நரஸிம்ம அவதாரங்களும், ப்ரஹ்லாதசரித்ரமும் சொல்லப்படுகிறது.

க்ஷேத்ரகாண்டத்தில் துருவசரித்ரம், அம்பரீஷசரித்ரம், ஸ்ரீராமாவதாரம், சத்ருக்னனின் வைபவம், மதுராபுரிநிர்மாணம், ப்ருந்தாவனம் கோவர்தனம் யமுனைமுதலியவைகளின் மாஹாத்மியமும் சொல்லப்படுகிறது.

கோவிந்தகாண்டத்தில் ஸ்ரீக்ருஷ்ணாவதாரம், பாலலீலை, நவனீதசௌர்யம், ப்ருந்தாவனலீலை, காளீயநர்த்தனம், கோவிந்தபட்டாபிஷேகம்முதலிய லீலைகள் மிகவும் அழகாக சொல்லப்படுகிறது.

தேவீகாண்டத்தில் ஸ்ரீராதையின் அவதாரம், பாலலீலை, க்ருஷ்ணப்ரதமதர்சனம், க்ருஷ்ணப்ரேமை, க்ருஷ்ணவிரஹம், நீலா என்கிற நப்பின்னை, சந்த்ராவளி இவர்களின் லீலைகள் சொல்லப்படுகிறது.

லீலாகாண்டத்தில் லலிதாமுதலிய அஷ்டஸகிகளின் திருக்கல்யாணமும், தானலீலை, வம்சீஹரணலீலை, நௌகாலீலை, ராஸலீலை, நிகுஞ்ஜலீலை என்னும் பல லீலைகள் மிகவும் மதுரமாக வர்ணிக்கப்படுகின்றன.

மதுராகாண்டத்தில் அக்ரூரரின் பக்தி, கோபிகைகளின் விரஹதாபம், கண்ணனின் மதுராயாத்திரை, கம்ஸவதம், குருகுலவாஸம், உத்தவஸந்தேசம் இவைகள் சொல்லப் படுகின்றன.

துவாரகாகாண்டத்தில் ருக்மிணீகல்யாணம், அஷ்ட மஹிஷிகளின் கல்யாணம், குருக்ஷேத்திர யாத்திரை, ராதையை மீண்டும் சந்தித்தல், பாரதகதாஸங்க்ரஹம், பகவானின் அந்தர்தானம் முதலியவைகள் சொல்லப்படுகின்றன.

பாகவததர்மகாண்டத்தில் பக்தி ஞான வைராக்ய லக்ஷணமான பாகவததர்மம், வேதம் உபநிஷத் பகவத்கீதை முதலிய சாஸ்திரப்ரமாணங்களின் அடிப்படையில் புரியாத அரும் பெரும் விஷயங்கள் சொல்லப்படுகின்றன.

வைபவகாண்டத்தில் கண்ணபிரானின் பெருமை பலவேறு கோணத்திலும் மிகவும் ஆச்சர்யமாகவும், மதுரமாகவும் நிரூபிக்கப்படுகிறது.

இந்த ஸ்ரீப்ருந்தாவனமாஹாத்ம்யம் க்ருஷ்ணபக்தர் களுக்கு ஒரு பொக்கிஷமாகும். படிப்பதற்கும், கேட்பதற்கும் அலுக்கவே அலுக்காது. மிகவும் லலிதமான மதுரமான ஸரஸமான பதப்ரயோகமுள்ள ப்ரேமிகவாணி, ரஸிகஜனங் களின் சித்தத்தில் ஆனந்தப்ரவாஹத்தைத் தரும் என்பது நாம் அறிந்த விஷயம். ஸாக்ஷாத் ஸ்ரீக்ருஷ்ணஸ்வரூபமாகவே இருக்கும் ஸ்ரீமத்பாகவதத்திலுங்கூட காணக்கிடைக்காத ஸ்ரீராதாக்ருஷ்ணலீலைகள் ஸ்ரீப்ருந்தாவனமாஹாத்ம்யத்தில் வெகு ரஸமாக வர்ணிக்கப்படுகிறது.

ஸ்ரீப்ருந்தாவனமாஹாத்ம்யம் ராதாக்ருஷ்ணலீலையை மட்டும் சொல்லுவதோடில்லாமல் மும்மூர்த்திகளுக்கும் முதல்வன் க்ருஷ்ணபரமாத்மா என்றும், க்ருஷ்ணனிடத்தி லிருந்தே உலகஸ்ருஷ்டியும், நாநாவித அவதாரங்களும், துருவ ப்ரஹ்லாத ருக்மாங்கதன் முதலிய பக்தர்களின் சரித்ரமும் க்ருஷ்ணலீலையாகவே வர்ணிக்கப்படுகிறது. மதுரா த்வாரகா குருக்ஷேத்திர லீலைகளிலுங்கூட ஸ்ரீராதையின் ப்ரேமையை எப்படியோ கொண்டுவந்து நிரூபணம் செய்துவிடுகிறார் ப்ரேமிகன்.

பாகவததர்ம வைபவகாண்டங்களிலும் பக்திஸித்தாந்தமே செய்யப்படுகிறது. **க்ருஷ்ணனே பரப்ரம்மம்** என்றும், **க்ருஷ்ணனே ப்ரக்ருதிபுருஷநியாமகன்** என்றும், **க்ருஷ்ணனே ஈச்வரன்** என்றும், **க்ருஷ்ணனே நாயகோத்தமன்** என்றும், **க்ருஷ்ணனே ஸகலகலாவல்லபன்** என்றும், **க்ருஷ்ணனே தர்மஸ்தாபகனான ராஜாதிராஜன்** என்றும், **க்ருஷ்ணனே அஷ்டமஹாஸித்தியுமுள்ள யோகேச்வரன்** என்றும், **க்ருஷ்ணனே கடமையைச் செய்யும் கர்மயோகி** என்றும், **க்ருஷ்ணனே தத்துவத்தை போதிக்கும் ஞானகுரு** என்றும், **க்ருஷ்ணனே அபரிமித பலபராக்ரமமுள்ள சிறந்த போர்வீரன்** என்றும், **க்ருஷ்ணனே மிகவும் ரஸிகனான ராஸவிஹாரி** என்றும் பலவேறு கோணங்களிலும் **க்ருஷ்ணனுக்கு ஈடு எந்த தெய்வமும் ஆகாது** என்றும் நிரூபிக்கிறார் ப்ரேமிகன். இதன் அருமை படிப்பவர்களுக்குத் தானாகவே புரியும்.

இவ்வளவு நாட்கள் ரகசியமாக வைக்கப்பட்டிருந்த இந்தப் புராணம் இப்பொழுது வெளியிடப்படுகிறது. ஸ்ரீப்ருந்தாவனமாஹாத்ம்யத்தை ஸ்ரீப்ருந்தாவனத்திலேயே வெளியிடுவதுதான் உசிதம். ஸ்ரீஸ்ரீஅண்ணாவின் அனுமதி பெற்று **ப்ரேமமாதுரீகுஞ்ஜஸேவாஸமிதி** இந்தப் புத்தகத்தை பக்தர்களுக்கு வழங்குகிறது.

ஸ்ரீரங்கம் இப்படிக்கு,
ச்ரவணத்வாதசி R ரங்கன்
5-9-2006

श्रीहरिः

# श्रीबृन्दावनमाहात्म्यम्

## विषयसूचिका

## क्षेत्रकाण्डम्

## श्रीगोविन्दकाण्डम्

## देवीकाण्डम्

## लीलाकाण्डः

## मधुराकाण्डः

## द्वारकाकाण्डः

## भागवतधर्मकाण्डः

## श्रीकृष्णवैभवकाण्डम्



**अध्यायसंख्या-१६६**

।। श्रीभक्तकोलाहलार्पणमस्तु ।।

श्रीहरिः

# श्रीबृन्दावनमाहात्म्यम्

## ध्यानश्लोकाः

प्रत्यक्षरं रससुधां शुकदेववाणी-
जालेषु यो गुरुवरो रसिकौघमध्ये ।
जानाति चैवमनुभावयति स्वकान् स
श्रीप्रेमिको विजयते कविचक्रवर्ती ।।

त्वद्ग्रन्थं हृदि सुन्दरीं विदधती बृन्दामहत्वाभिधां
स्वात्मानं वृषभानुजां व्रजपतिं त्वां मानसं श्रीवनम् ।
जानन्ती सुखमेत्य तत्प्रतिकृतिं कुर्वे कथं ते प्रिय
मत्साध्यं तव किं प्रभो गुणनिधे श्रीप्रेमिकेन्द्रप्रभो ।।

निधये भक्तितत्त्वानां गतये च महात्मनाम् ।
अस्माकं पतये तुभ्यं प्रेमिकाय नमो नमः ।।

यस्य पादनखज्योतिरज्ञानध्वान्तनाशनम् ।
तस्मै श्रीगुरुदेवाय नतिरस्त्वात्मबन्धवे ।।

अखण्डपरिपूर्णस्य ब्रह्मणः परमात्मनः ।
निकेतनं परं यत्तद्बृन्दावनमहं भजे ।।

नन्दं यशोदां गोपालान् गोपीश्च प्रेमतत्पराः ।
खगान् मृगान् भूरुहांश्च वारं वारं नमाम्यहम् ॥

कदम्बशाखामाश्रित्य कालिन्दीकाननान्तरे ।
राधानामानि कूजन्तं वन्दे गोविन्दकोकिलम् ॥

राधिकाकुचकस्तूरीकुङ्कुमाङ्कितवक्षसम् ।
शृङ्गाररसमूर्तिं तं भक्तकोलाहलं भजे ॥

यः पठेच्छृणुयाद्वापि भक्तियुक्तो दिने दिने ।
इदं श्रीवनमाहात्म्यं स भवेत्कृष्णबान्धवः ॥

कृष्णप्रीतिकरं पुण्यं कृष्णभक्तसुखावहम् ।
पठन् श्रीवनमाहात्म्यं दुःखग्रामाद्विमुच्यते ॥

लोकवेदविमुक्तानां वैष्णवानां महात्मनाम् ।
इदं श्रीवनमाहात्म्यं कर्णानन्दप्रदं भवेत् ॥

श्रीहरिः

श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचितं

ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிஸ்வாமிகள் அருளிச்செய்த

# श्रीबृन्दावनमाहात्म्यम्

# ஸ்ரீப்ருந்தாவனமாஹாத்ம்யம்

## आदिकाण्डम्

## ஆதிகாண்டம்

### अथ प्रथमोऽध्यायः

### முதல் அத்தியாயம்

यस्य पादनखज्योतिरज्ञानध्वान्तनाशनम् ।
तस्मै श्रीगुरुदेवाय नतिरस्त्वात्मबन्धवे ॥१॥

1. எவருடைய திருவடியிலுள்ள நகத்தின் ஒளி அக்ஞான மாகிய இருளைப் போக்குமோ அந்த ஆத்மபந்துவான குருதேவருக்கு எனது வணக்கம்.

अखण्डपरिपूर्णस्य ब्रह्मणः परमात्मनः ।
निकेतनं परं यत्तद्बृन्दावनमहं भजे ॥२॥

2. அகண்டமாய் எங்கும் வ்யாபித்துள்ள பரம்பொருளாகிய பரமாத்மாவிற்கு சிறந்த இருப்பிடமாகிய ப்ருந்தாவனத்தை நான் பஜிக்கிறேன்.

नन्दं यशोदां गोपालान् गोपीश्च प्रेमतत्पराः ।
खगान् मृगान् भूरुहांश्च वारं वारं नमाम्यहम् ॥३॥

*3. நந்தகோபரையும், யசோதையையும், மற்ற ஆயர்களையும், ப்ரேமையையே லக்ஷியமாகக்கொண்ட கோபிகைகளையும், பசு பக்ஷிகளையும், செடிகொடிகளையும் பல தடவை வணங்குகிறேன்.*

कदम्बशाखामाश्रित्य कालिन्दीकाननान्तरे ।
राधानामानि कूजन्तं वन्दे गोविन्दकोकिलम् ॥४॥

*4. யமுனைக்கரையில் ப்ருந்தாவனத்தில் கதம்பமரத்தில் உட்கார்ந்து ராதே! ராதே! என்று கூவுகின்ற கோவிந்தனாகிய குயிலை வணங்குகிறேன்.*

राधिकाकुचकस्तूरीकुङ्कुमाङ्कितवक्षसम् ।
शृङ्गाररसमूर्तिं तं भक्तकोलाहलं भजे ॥५॥

*5. ராதையினுடைய கஸ்தூரிகுங்குமத்தினால் அடையாளம் செய்யப்பட்ட மார்புடைய ச்ருங்கார மூர்த்தியான பக்தகோலாஹலனை பஜிக்கிறேன்.*

पुण्ये वेणानदीतीरे नानावृक्षसमाकुले ।
विप्रोत्तमसमाकीर्णे पक्षिजालकुतूहले ॥६॥

केतकीगन्धसम्युक्तगन्धवाहनिषेविते ।
अश्वत्त्थमूले विमले मृदुले हरिणाजिने ॥७॥

वीरासने सुखासीनं मन्दस्मितमुखाम्बुजम् ।
उत्फुल्लपद्मनयनं निर्हैतुककृपानिधिम् ॥८॥

तुलसीमणिहारञ्च घनश्यामलविग्रहम् ।
ऊर्ध्वपुण्ड्रललाटञ्च कौशेयाबद्धशीर्षकम् ॥९॥

मुहुर्मुहुः कीर्तयन्तं रणयन्तं विपञ्चिकाम् ।
मञ्जीरभूषितपदं सर्वमङ्गलविग्रहम् ॥१०॥

आनन्दबाष्पसुस्निग्धकपोलं पुलकाञ्चितम् ।
हरिभक्ताग्रगण्यं तं ज्ञानवैराग्यभूषणम् ॥११॥

सद्गुरुं सर्वजगतामवलोक्य प्रणम्य च ।
पप्रच्छुः साञ्जलिपुटं सर्वे भागवतोत्तमाः ॥१२॥

6 -12. தாழம்பூ மணம் வீசுகின்ற மந்தமாருதமுடையதும், பக்ஷிகூட்டங்களுக்கு குதூஹலமானதும், பிராம்மணோத்தமர் களால் சூழப்பட்டதும், பலவிதமான வ்ருக்ஷங்களால் நெருக்க மானதுமான புனிதமான வேணாநதியின் (பெண்ணையாற்றின்) கரையில், அரசுமரத்தின் அடியில், ம்ருதுவான சுத்தமான மான் தோலில் வீராஸனத்தில் அமர்ந்திருப்பவரும், மந்தஹாஸம் தவழும் முககமலமுடையவரும், மலர்ந்த தாமரைபோன்ற கண்கள் உடையவரும், காரணமற்ற கருணைக்கடலும், துளஸீ மணிமாலை அணிந்தவரும், நீலமான மேனி உடையவரும், நெற்றியில் கோபீசந்தனம் அணிந்தவரும், தலையில் ப்ரபன்ன பாகை அணிந்தவரும், வீணையை மீட்டிக்கொண்டு அடிக்கடி பாடுகின்றவரும், கால்களில் சலங்கை அணிந்தவரும், ஸர்வ மங்களமூர்த்தியும், ஆனந்தக்கண்ணீர் விடுபவரும், சிலிர்த்த மேனிஉடையவரும் ஹரிபக்தர்களில் சிறந்தவரும், ஞான வைராக்யமே பூஷணமாகக் கொண்டவருமாகிய எல்லா உலகங்களுக்கும் ஸத்குருவான அவரைக் கண்டு, கைதொழுது பாகவதோத்தமர்கள் யாவரும் கேட்டார்கள்.

भागवता ऊचुः

जन्मान्तरसहस्रेषु कलितैः सुकृतैर्वयम् ।
भवन्तं सर्वजगतां सद्गुरुं शरणङ्गताः ॥१३॥

किं शास्त्रैः किमनुष्ठानैः किं वा वेदान्तचर्चया ।
यस्य भक्तिर्न हि दृढा सद्गुरोः पादपद्मयोः ॥१४॥

किमलभ्यं त्रिभुवने प्रसन्ने देशिकोत्तमे ।
यत्कटाक्षैकलक्ष्याणां सुलभः श्रीपतिः सदा ॥१५॥

अज्ञानध्वान्तमुग्धानां गुरुरेव गतिर्नृणाम् ।
वनान्तरनिसृष्टानामन्धानां पथिको यथा ॥१६॥

तस्मात्त्वमेव शिष्याणामस्माकं दैवतं परम् ।
भवतः श्रोतुमिच्छामो धर्मान् भागवतान् वयम् ॥१७॥

किं दैवं परमं नृणां सर्वमङ्गलकारणम् ।
किं साधनञ्च किं साध्यं क्षेत्रेषु च किमुत्तमम् ॥१९॥

पर्वतेषु च कः श्रेष्ठः काननेषु किमुत्तमम् ।
का नदी सर्वतीर्थानां श्रेष्ठा पापविनाशिनी ॥१९॥

अव्याजकरुणासिन्धो सद्गुरो शिष्यवत्सल ।
वद सर्वं तदस्माकमज्ञानं नाशय प्रभो ॥२०॥

### பாகவதர்கள்

*13-20.* ஸர்வ உலகங்களுக்கும் குருவான தங்களை பூர்வ புண்யத்தினாலேயே நாங்கள் சரணமடைந்தோம். ஸத்குருவின் திருவடிகளில் பக்திஇல்லாதுபோனால் சாஸ்திரங்களைப் படிப்பதாலோ, வேதாந்தத்தை சர்ச்சை செய்வதாலோ, கர்மாக்களை அனுஷ்டிப்பதாலோ என்ன பயன்? எவருடைய கடாக்ஷத்தினால்மட்டும் பகவான் சுலபமாய் கிடைப்பானோ அந்த ஸத்குரு ப்ரீதி அடைந்து விட்டால் மூவுலகிலும் எதுதான் கிடைக்காது? காட்டில் அகப்பட்டுக்கொண்ட குருடர்களுக்கு வழிப்போக்கன் துணையாவது போல் அக்ஞானமாகிய இருளில் மயங்கியவர்களுக்கு குருவே கதியாவார். ஆகையினால் சிஷ்யர் களாகிய எங்களுக்கு தாங்களே பரதெய்வம். தங்களிடமிருந்து பாகவததர்மங்களை கேட்க விரும்புகிறோம். **சிறந்த தெய்வம் எது? சிறந்த சாதனம் எது? சிறந்த சாத்யம் எது? க்ஷேத்திரங்களில் சிறந்தது எது? மலைகளில்சிறந்தது எது? வனங்களில் சிறந்தது எது? தீர்த்தங்களில் சிறந்தது எது?** குருணைக்கடலே! ஸத்குருவே! எங்களுக்கு இதைச் சொல்லவேண்டும்.

इति संप्रश्नसंहृष्टो भगवान् सद्गुरुस्तदा ।
प्रेमगम्भीरया वाचा बभाषे भक्तवत्सलः ॥२१॥

*21.* இந்தக்கேள்வியால் மகிழ்ச்சி அடைந்த பக்த வத்ஸலனும் பகவானுமாகிய ஸத்குரு ப்ரேமையுடன் கம்பீரமாகச் சொல்லலானார்.

### *श्रीसद्गुरुरुवाच*

साधु पृष्टं भागवता भगवत्तत्त्वमुत्तमम् ।
वदामि तद्गुह्यमपि शृणुत प्रेमतत्पराः ॥२२॥

नृणामक्षीणपापानां कोटिजन्मान्तरेष्वपि ।
हरिभक्तिर्न जायेत सुराणामपि दुर्लभा ॥२३॥

महापुण्यफलादेव भगवन्नामकीर्तने ।
प्रवृत्तिर्जायते नूनं नान्यथा वैष्णवोत्तमाः ॥२४॥

तमोगुणप्रमत्तानां नराणां पापकर्मभिः ।
असूया जायते हन्त विष्णुमाहात्म्यवर्णने ॥२५॥

वेदे रामायणे चैव धर्मशास्त्रेषु भारते ।
सात्त्विकेषु पुराणेषु हरिरेव परः स्मृतः ॥२६॥

ब्रह्मरुद्रादयो देवाः कामितार्थफलप्रदाः ।
स्वरूपभूताः कृष्णस्य तेषामात्मा स्वयं हरिः ॥२७॥

ஸ்ரீஸத்குரு

*22-27. பாகவதர்களே! இது நல்ல கேள்வி. ரஹஸ்ய மாயிருந்தாலும் அந்த உத்தமமான பகவத்தத்துவத்தை சொல்லுவேன். ப்ரேமையுடன் கேட்பீராக. பாபம் போகாத மனிதர்களுக்கு கோடிஜன்மத்திற்குப்பிறகும்கூட தேவர் களுக்கும் துர்லபமான ஹரிபக்தி உண்டாகாது. வைஷ்ண வோத்தமர்களே! அளவுகடந்த புண்யத்தின் பயனாலேயே பகவன்னாமகீர்த்தனத்தில் ஈடுபாடு உண்டாகிறது. பாபிகளான ஜனங்களுக்கு தமோகுணத்தினாலேயே விஷ்ணுவின் மஹிமையைச் சொல்லும்போது பொறாமை உண்டாகிறது. வேதத்திலும் தர்மசாஸ்திரங்களிலும், ராமாயணத்திலும், பாரதத்திலும், ஸாத்விகமான புராணங்களிலும் ஹரியே பரதைவமென்று சொல்லப்படுகிறார். விரும்பிய பலனைத் தருகின்ற ப்ரம்மா, ருத்ரன்முதலிய எல்லா தேவர்களும் க்ருஷ்ணனுடைய சொரூபமே ஆவார்கள். அவர்கள் யாவருக்கும் ஹரியே ஆத்மா.*

हरिरेव परं ब्रह्म जगन्मङ्गलकारणम् ।
यस्य वक्षःस्थले नित्यं श्रीर्वसत्यनपायिनी ॥२८॥

श्रीकृष्णप्रेममाधुर्यास्वादनं साध्यमुत्तमम् ।
तन्नामकीर्तनं नृणां साधनं परमं कलौ ॥२९॥

क्षेत्रेषु मधुरा श्रेष्ठा जातो यत्र हरिः स्वयम् ।
गोवर्धनः पर्वतेषु नदीषु यमुना तथा ॥३०॥

कृष्णपादाङ्कितं श्रीमद्बृन्दारण्यं वनेष्वपि ।
ब्रह्मादयोपि लोकेशा यत्र वाञ्छन्ति संभवम् ॥३१॥

28-31. எவருடைய மார்பில் நீங்காதபடி லக்ஷ்மிதேவி நித்யமும் வஸிக்கிறாளோ அந்த ஹரியே உலகத்தின் மங்களத்திற்குக் காரணமான பரப்ரும்மம். க்ருஷ்ணனிடம் ப்ரேமையே சிறந்த ஸாத்யம். க்ருஷ்ணநாமகீர்த்தனமே கலியில் சிறந்த ஸாதனம். க்ஷேத்திரங்களில் கண்ணன் அவதரித்த மதுரையே சிறந்தது. மலைகளில் கோவர்தனமும், நதிகளுக்குள் யமுனையும் சிறந்தது. ப்ரும்மாமுதலிய தேவர்களும் எங்கு பிறக்க விரும்புகின்றனரோ, க்ருஷ்ணனுடைய திருவடிபட்டதான அந்த ஸ்ரீப்ருந்தாவனமே வனத்தில் சிறந்தது.

तस्मात् सञ्जातवैराग्यः कृष्णध्यानपरायणः ।
यो वसेद्यमुनातीरे स हि भागवतोत्तमः ॥३२॥

सर्वधर्मान् परित्यज्य गत्वा बृन्दावनं नरः ।
पुनरावर्तते नैव घोरे संसारवर्त्मनि ॥३३॥

स्वर्गाच्च पारमेष्ठ्याच्च वैकुण्ठादपि साधवः ।
वरं बृन्दावने जन्म लतावृक्षतृणादिषु ॥३४॥

किमत्र चित्रं सन्तः श्रीबृन्दारण्यानुवर्णने ।

यत्र सर्वं मुकुन्दस्य प्रेमस्पर्शेन लालितम् ॥३५॥

*32-35.* ஆகையினால் உலகவாழ்க்கையில் விரக்தி அடைந்து, கிருஷ்ணத்யானமே லக்ஷ்யமாகக்கொண்டு, ப்ருந்தாவனத்தில் வஸிப்பவனே பாகவதோத்தமன். எல்லா தர்மங்களையும்விட்டு ப்ருந்தாவனத்திற்குச் சென்றவன் கோரமான ஸம்ஸாரத்திற்குத் திரும்பமாட்டான். சொர்கத்தைக் காட்டிலும், ப்ரும்மலோகத்தைக் காட்டிலும், வைகுண்டத்தைக் காட்டிலும் ப்ருந்தாவனத்தில் ஒரு கொடியாகவோ, செடியாகவோ, புல்லாகவோ பிறப்பது சிறந்தது. ஸாதுக்களே! கண்ணனால் ப்ரேமையுடன் வளர்க்கப்பட்ட ப்ருந்தாவனத்தின் மகிமை சொல்லில் அடங்குமோ!

इत्युक्त्वा बाष्पपूर्णाक्षो गद्गदस्तब्धभाषणः ।
न्यमीलयन्नेत्रपद्मं कृष्णध्यानाय सद्गुरुः ॥३६॥

*36.* இவ்வாறு சொல்லி ஸத்குரு தழுதழுத்த குரலுடன் ஆனந்தக்கண்ணீருடன் கண்களை மூடி கிருஷ்ணத்யானம் செய்து கொண்டிருந்தார்.

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये आदिकाण्डे प्रथमोऽध्यायः॥ १॥*

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமி ஸ்வாமிகள் அருளிச்செய்த ப்ருந்தாவனமாஹாத்ம்யம் ஆதிகாண்டத்தில் முதல் அத்யாயம் முற்றும்.**

## अथ द्वितीयोऽध्यायः

## இரண்டாவது அத்யாயம்

एवं सद्गुरुवक्त्राब्जसञ्जातवचनामृतम् ।
आपीय साधवो हृष्टाः पुनरूचुर्गुरूत्तमम् ॥१॥

1. இவ்வாறு ஸத்குருவின் வசனமாகிய அம்ருதத்தைப் பருகி மகிழ்ச்சி அடைந்த ஸாதுக்கள் மறுபடியும் ஸத்குருவைப் பார்த்துச் சொன்னார்கள்.

**भागवता ऊचुः**

ऋतुमन्नन्दनवनं दिव्यं चैत्ररथं तथा ।
काम्यञ्च नैमिशारण्यं दारुकावनमेव च ॥२॥

सन्त्यज्यान्यान्यरण्यानि बहूनि भवता कथम् ।
बृन्दावनं श्रेष्ठमिति कथितं देशिकोत्तम ॥३॥

तस्य बृन्दावनस्यैव माहात्म्यं वद विस्तरात् ।
यत्र साक्षाद्धरिर्नित्यं रमते प्रेयसीगणैः ॥४॥

**பாகவதர்கள்**

2-4. ருதுமது, நந்தனம், சைத்ரரதம், காமியம், நைமிசம், தாருகாவனம் முதலிய பல காடுகளைவிட்டு ப்ருந்தாவனமே சிறந்ததென்று தங்களால் சொல்லப்பட்டது. குருதேவரே! க்ருஷ்ணன் கோபிகைகளுடன் எங்கு தினமும் விளையாடுகின்றானோ அந்த ப்ருந்தாவனத்தின் மகிமையை விஸ்தாரமாகச் சொல்லுவீராக!

एवं साधुभिरापृष्टः कृष्णकीर्तनलालसः ।
उवाच मधुरं वाक्यं ध्यायन् बृन्दावनं गुरुः ॥५॥

5. இவ்வாறு ஸாதுக்களால் கேட்கப்பட்ட ஸத்குரு க்ருஷ்ணகீர்த்தனத்தில் ஆசையுடையவராக ப்ருந்தாவனத்தை த்யானம் செய்துகொண்டு மதுரமாய்ச் சொன்னார்.

**श्रीसद्गुरुरुवाच**

अहो बृन्दावनस्यैतन्माहात्म्यं परमाद्भुतम् ।

वाचामगोचरमपि प्रवदामि हरिप्रियाः ॥६॥

मन्दारचम्पकाश्वत्त्थकिंशुकाशोकपाटलैः ।
तालहिन्तालपुन्नागतमालसुरदारुभिः ॥७॥

शम्याकपारिजाताम्रसन्तानहरिचन्दनैः ।
अन्यैर्बहुविधैर्वृक्षैर्नवपल्लवशोभितैः ॥८॥

विकसत्पुष्पसङ्कीर्णैः फलतर्पितखेचरैः ।
आवृतं यमुनातीरे बृन्दारण्यं विराजते ॥९॥

मल्लीचम्पकमन्दारचन्दनामोदशालिना ।
निषेव्यते मन्दमन्दं मारुतेन वनं हरेः ॥१०॥

गन्धवाहस्पन्दितेभ्यो वृक्षेभ्यो यमुनावने ।
प्रसूनानि विचित्राणि निपतन्ति मुहुर्मुहुः ॥११॥

वसन्ति वृक्षशाखासु वीचीकूचीति वादिनः ।
शकुन्तनिकरास्तत्र कृष्णकीर्तनतत्पराः ॥१२॥

इतस्ततः सञ्चरन्ति झङ्कारस्वरसंयुताः ।
मकरन्दसुगन्धेन प्रमत्तास्तत्र षट्पदाः ॥१३॥

अवलोक्य घनश्यामं गोपीनां प्रियवर्धनम् ।
नृत्यन्ति नीलकण्ठाश्च केकाकेकेति वादिनः ॥१४॥

ஸ்ரீஸத்குரு

*6-14. ஹரிதாஸர்களே! மிகவும் அற்புதமான ப்ருந்தாவன*

மாஹாத்ம்யம் சொல்லில் அடங்காது! ஆயினும் சொல்வேன். மந்தாரம், சம்பகம், அசோகம், அரசு, புரசு, பாதிரி, பனை, கூந்தல்பனை, புன்னை, தமாலம், தேவதாரு, கொன்னை, பாரிஜாதம், மா, சந்தனம், செஞ்சந்தனம் முதலிய பல மரங்கள் புஷ்பித்ததாகவும், பழம் நிறைந்ததாகவும், பக்ஷிகள் சூழ்ந்ததாக வும், யமுனைக்கரையில் உள்ள அந்த ப்ருந்தாவனத்தில் இருக்கின்றன. மல்லிகை, சம்பகம் மந்தாரம், சந்தனம், இவைகளின் ஸுகந்தத்துடன்கூடிய மந்தமாருதம், எப்பொழு தும் அங்கு வீசிக்கொண்டேயிருக்கிறது. காற்றில் அசைகின்ற மரங்களிலிருந்து பல வண்ணப்பூக்கள், அடிக்கடி கீழே சிந்திக் கொண்டிருக்கின்றன. வீசீ, கூசீ, என்று கூவும் பறவைகள் க்ருஷ்ணகீர்த்தனத்தில் மயங்கி, மரக்கிளைகளில் உட்கார்ந்திருக் கின்றன. வண்டுகள் ஜங்காரம் செய்துகொண்டு இங்குமங்கும் சுற்றுகின்றன. கோபிகைகளின் ப்ரேமையை வளர்க்கும் நீலவர்ண கண்ணனைக் கண்டு மயில்கள் ஆடுகின்றன.

मातङ्गसिंह्मशार्दूलधेनूरगशिखण्डिनः ।
विहरन्ति सदा तत्र प्रेमयुक्ताः परस्परम् ॥१५॥

तृणलग्नमुखास्तत्र कृष्णसाराः पुनः पुनः ।
पश्यन्ति यमुनातीरं कृष्णदर्शनकाङ्क्षया ॥१६॥

गावो वत्साश्च गोविन्दं हंभारावेण संयुताः ।
आह्वयन्ति प्रहृष्टाश्च कृष्णवीक्षणवर्धिताः ॥१७॥

लतागृहेषु वल्लव्यः प्रतीक्षन्ते प्रियं हरिम् ।
नानालङ्कारसम्युक्ता नाट्यसङ्गीतकोविदाः ॥१८॥

तिष्ठन्त्यम्बरमाश्रित्य मन्मथोन्मथितेन्द्रियाः ।
कृष्णदर्शननिर्मुक्तनीवीबन्धाः सुरस्त्रियः ॥१९॥

उत्तमाङ्गधृतक्षीरदधिकुंभाश्च गोपिकाः ।
पुनः पुनः सञ्चरन्ति कृष्णसङ्गमकाङ्क्षया ॥२०॥

पीपीपीपीति कूजन्ति पर्णवाद्येन बालकाः ।
नानाक्रीडासमायुक्ता धेनुचारणदीक्षिताः ॥२१॥

पुलिन्दकन्या गोविन्ददर्शनानन्दमोहिताः ।
विस्मृत्य गृहकार्याणि तिष्ठन्ति वनभूमिषु ॥२२॥

15-22. யானையும் சிங்கமும், புலியும் பசுவும், மயிலும் பாம்பும் விரோதமில்லாமல் சேர்ந்து விளையாடுகின்றன. மான்கள் வாயில் புல்லைக் கவ்வியவாறு பலதடவை கண்ணன் வருகிறானோவென்று யமுனைக்கரையை நோக்கியவாறு நிற்கின்றன. கண்ணனின் பார்வையாலேயே வளர்க்கப்படும் பசுக்களும் கன்றுகளும், அம்பா.... என்று கூவி கண்ணனை அழைக்கின்றன. நாட்டியத்திலும் ஸங்கீதத்திலும் தேர்ச்சிபெற்ற கோபிகைகள் அலங்காரம் செய்துகொண்டு நிகுஞ்ஜங்களில் கண்ணனை எதிர்பார்த்தவண்ணமிருக்கின்றனர். ஆகாயத்தில் தேவதாஸ்த்ரீகள் கண்ணனைக் கண்டு மதிமயங்கி நிற்கின்றனர். தலையில் தயிர்க்குடம் தாங்கி கோபிகைகள் கண்ணனைக் காணும் ஆசையினால் இங்குமங்கும் அலைகின்றனர். விளையாடிக்கொண்டே மாடு மேய்க்கும் சிறுவர்கள் இலை ஊதலைக் கொண்டு பீப்பீ........ பீப்பீ என்று வாசிக்கின்றனர். கண்ணனைக் கண்டு மயங்கிய வேடுவகன்னிகைகள் வீட்டு வேலைகளை மறந்து வனத்தில் நிற்கின்றனர்.

विकसत्कञ्जकल्हारकुमुदोत्पलभूषणा ।
कल्लोलमेखला तत्र कालिन्दी परिगच्छति ॥२३॥

नानावृक्षसमाकीर्णो नानापक्षिसमाकुलः ।

नानाप्रस्रवसुस्निग्धो नानामृगसमन्वितः ॥२४॥

नानाधातुप्रदीप्ताङ्गो नानापुष्पसुगन्धितः ।
प्रकाशते गिरीन्द्रोऽपि कृष्णध्यानपरायणः ॥२५॥

*23-25.* தாமரை, செங்கழுநீர், அல்லி, நீலோத்பலம் இவைகள் பூத்ததால் அழகிய அலைவீசும் யமுனைநதி சுழன்று ஓடுகிறது. பல மரங்களும், பல பக்ஷிகளும், பல மிருகங்களும் சூழ்ந்ததான கோவர்த்தனமலை, நீர்வீழ்ச்சிகளால் குளிர்ந்த தாகவும், பல புஷ்பங்களால் மணமுடையதாகவும், பல தாதுப் பொடிகளால் ஜொலிக்கின்றதாகவும், க்ருஷ்ணத்யானம் செய்வதுபோல் மௌனமாய்ப் பிரகாசிக்கிறது.

एवं प्रेमरसाविष्टे भगवान् यमुनावने ।
वादयन् मुरलीं नित्यं क्रीडति प्रेयसीगणैः ॥२६॥

क्वणत्कनकमञ्जीरः कनकाम्बरशोभितः ।
कज्जलालिप्तनयनो हरिचन्दनचर्चितः ॥२७॥

वनमाली घनश्यामो वैजयन्तीविभूषितः ।
ताम्बूलपूरितमुखः कस्तूरीतिलकाङ्कितः ॥२८॥

दिव्यालङ्कारसम्युक्तो नानाभूषणभूषितः ।
त्रिभङ्गिललिताकारस्त्रिजगन्मोहनस्मितः ॥२९॥

रमणीयमुखाम्भोजो रासनाट्यविशारदः ।
रमते राधया नित्यं रमणीभिः समन्वितः ॥३०॥

*26-30.* இவ்வாறு ப்ரேமரஸம் நிரம்பிய ப்ருந்தாவனத்தில் கால்சலங்கை அணிந்தவனும், பீதாம்பரதாரியும், கண்களில்

மை தீட்டிக்கொண்டிருப்பவனும், ஹரிசந்தனம் பூசிக் கொண்டிருப்பவனும், மேகச்யாமளனும், வைஜயந்தி வனமாலை அணிந்திருப்பவனும், தாம்பூலம் போட்டுக் கொண்டிருப்பவனும், கஸ்தூரிதிலகம் இட்டுக்கொண்டிருப்ப வனும், திவ்யமான அலங்காரம் உடையவனும் பலவிதமான பூஷணங்கள் அணிந்து கொண்டிருப்பவனும், மூன்று வளைவுடன் ஒய்யாரமாய் நிற்பவனும், மூவுலகங்களையும் மயக்கும் மந்தஹாஸமுடைய அழகிய முகமுடையவனும், ராஸநாட்டியமாடுகின்றவனுமாகிய பகவான் ராதையுடனும், கோபிகைகளுடனும்கூடி தினமும் விளையாடுகிறான்.

तस्यैव पादचिह्नेन शङ्खचक्राब्जशोभिना ।
अलङ्कृतं वनं ह्येतद्वनानामुत्तमं वनम् ॥३१॥

तस्यैव मुरलीगानमाधुर्यस्निग्धवायुना ।
संसेवितं वनं ह्येतद्वनानामुत्तमं वनम् ॥३२॥

गोविन्दपदमञ्जीरध्वनिव्याप्तमहीधरम् ।
यमुनाया वनं ह्येतद्वनानामुत्तमं वनम् ॥३३॥

कृष्णकान्ताकुचद्वन्द्वकुङ्कुमाङ्कितयामुनम् ।
पुण्यतीर्थं वने यस्मिन् वनानामुत्तमं हि तत् ॥३४॥

तस्माद्बृन्दावनं श्रेष्ठं कथितं साधवो मया ।
यस्य स्मरणमात्रेण कृष्णभक्तिः प्रजायते ॥३५॥

*31-35.* சங்கம், சக்கரம் தாமரை முதலிய ரேகைகள் உடைய கண்ணனுடைய திருவடிகளால் அடையாளம் செய்யப்பட்டதும், வேணுகானத்தின் இனிமையால் குளிர்ந்த மந்தமாருதம் வீசுகின்றதும், கண்ணனின் காற்சலங்கையின்

ஒலி கேட்கின்ற கோவர்த்தனமலை உடையதும், ராதையின் குங்குமம் மணக்கும் யமுனாஜலம் உடையதுமாகிய ப்ருந்தாவனமே வனங்களில் சிறந்ததல்லவா! ப்ருந்தாவனம் என்கிற சொல்லில் க்ருஷ்ணப்ரேமை தானே உண்டாகும். ஸாதுக்களே! ஆகையினால்தான் ப்ருந்தாவனம் சிறந்ததென்று சொல்லப்பட்டது.

इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये आदिकाण्डे श्रीबृन्दावनवर्णनं नाम द्वितीयोऽध्यायः॥ २॥

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிஸ்வாமிகள் அருளிச்செய்த ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்ம்யம் ஆதிகாண்டத்தில் இரண்டாவது அத்யாயம் முற்றும்.**

## अथ तृतीयोऽध्यायः

## மூன்றாவது அத்தியாயம்

### श्रीसद्गुरुरुवाच

अद्य वक्ष्यामि कृष्णस्य चेष्टितं परमाद्भुतम् ।
शृण्वतां स्मरतां नित्यं परमानन्दवर्धनम् ॥१॥

भगवान् प्रातरुत्थाय सुप्रसन्नो दिने दिने ।
यशोदयाऽलङ्कृतश्च वराम्बरविभूषणैः ॥२॥

कृत्वापि भोजनं स्वादु दधिक्षीरसमन्वितम् ।
गोपालबालसम्युक्तो धेनुचारणतत्परः ॥३॥

वादयन् मधुरं वेणु वनमालाविभूषणः ।
आगच्छति महारण्यं स्वपादपरिलाञ्छितम् ॥४॥

## ஸ்ரீஸத்குரு

1-4. கேட்பதற்கும், நினைப்பதற்கும், பரமானந்தத்தைத் தரும் மிகவும் அற்புதமான க்ருஷ்ணலீலையைச் சொல்லுவேன். கேட்பீராக. தினந்தோறும் காலையில் கண்ணன் எழுந்திருந்து பீதாம்பரத்தாலும், பூஷணங்களாலும் யசோதையினால் அலங்கரிக்கப்பட்டவனாய், தயிர்பாலுடன்கூடிய இனிய போஜனத்தை சாப்பிட்டுவிட்டு வனமாலை அணிந்துகொண்டு மதுரமாய் குழலூதிக்கொண்டே தனது அடிச்சுவடினாலழகிய ப்ருந்தாவனத்திற்கு வருகிறான்.

कोटिमन्मथलावण्यं नवाम्भोधरमेदुरम् ।
दिव्यपीताम्बरधरं दीप्तनानाविभूषणम् ॥५॥

वैजयन्तीलतोरस्कं त्रिभङ्गिललिताकृतिम् ।
पूर्णचन्द्राननं कृष्णं पुण्डरीकायतेक्षणम् ॥६॥

मुरलीवादनपरं महिलाजनमोहनम् ।
अव्याजमन्दहासञ्च बर्हिबर्हावतंसकम् ॥७॥

शिञ्जानमञ्जुमञ्जीरं सर्वलोकानुरञ्जकम् ।
अवलोक्य भृशं हृष्टा भवन्ति वनवासिनः ॥८॥

5-8. கோடிமன்மதர்களையும் வெல்லும் அழகுடையவனும், நீருண்டமேகம்போல் குளிர்ந்தவனும், பீதாம்பரதாரியும், பற்பல பூஷணங்கள் அணிந்தவனும், வைஜயந்திமாலை புரளும் மார்பு உடையவனும், மூன்றுவளைவாக அழகாக நிற்பவனும், பூர்ணசந்திரனைப்போன்ற முகமுடையவனும், தாமரைக் கண்ணனும், குழலூதுபவனும், கோபிகைகளை மயக்குபவனும், காரணமற்ற மந்தஹாஸமுடையவனும், மயிலிறகு அணிந்தவனும், கால்சலங்கை அணிந்தவனும், எல்லா

உலகங்களையும் மயக்குபவனுமாகிய கண்ணனைக் கண்டு காட்டில் வசிக்கும் ப்ராணிகள்கூட மகிழ்ச்சியடைந்தன.

वृषभानुकुमारी च सखीजनसमन्विता ।
आदित्यपूजाव्याजेन बृन्दारण्यमुपागता ॥९॥

तत्रावलोक्य गोविन्दं नानाभावरसोज्ज्वला ।
तिष्ठत्यानन्दसंमुग्धा कन्दर्पवशमागता ॥१०॥

तया सार्धं मुकुन्दोपि यमुनातटकानने ।
दिने दिने सञ्चरति प्रेमालिङ्गनतत्परः ॥११॥

*9-11.* வ்ருஷபானுகோபரின் பெண்ணாகிய ராதையும் தோழிகளுடன்கூட ஸௌர்யபூஜை செய்யும் வ்யாஜத்தில் ப்ருந்தாவனம் வந்து அங்கு கண்ணனைக் கண்டு ரஸமான பற்பல மனோபாவத்துடன் மோஹித்து ஆனந்தத்தில் திளைத்து நிற்கிறாள். கண்ணனும் அவளுடன் யமுனைக்கரையில் தினந்தோறும் ஸஞ்சாரம் செய்கிறான்.

नवचम्पकवर्णाभां नीलाम्बरविराजिताम् ।
कमनीयमुखाम्भोजां कर्णान्तायतलोचनाम् ॥१२॥

कुटिलालकसम्युक्तां नवकुङ्कुमशोभिताम् ।
मौक्तिकोज्ज्वलनासाञ्च नानाभूषणभूषिताम् ॥१३॥

कुंभस्तनीं वरारोहां कुन्तलाबद्धमल्लिकाम् ।
सुगन्धागरुदिग्धाङ्गीं सुन्दरीं वृषभानुजाम् ॥१४॥

परिरभ्य प्रियां कृष्णः प्रेमभाषणमोहितः ।
इतस्ततः सञ्चरति प्रेम्णा सन्दर्शयन् वनम् ॥१५॥

*12-15.* புதிய சம்பகபுஷ்பம்போன்ற வண்ணமுடைய வளும், நீலபட்டாடை அணிந்தவளும், அழகிய முகமுடைய வளும், காதுவரை நீண்ட பார்வையுடையவளும், சுருள் சுருளான கேசமுடையவளும், புதியகுங்குமத்தால் சோபிக்கின்ற வளும், மூக்கின் நுனியில் முத்து அணிந்தவளும், பலவித பூஷணங்கள் அணிந்தவளும், கூந்தலில் மல்லிகை சூட்டிக் கொண்டிருப்பவளும், சுகந்தமான சந்தனம் பூசிக்கொண்டிருப்ப வளும், அழகியுமான ராதையை அணைத்தவாறு கண்ணன் கொஞ்சிக்கொஞ்சி பேசிக்கொண்டே ப்ருந்தாவனத்தைக் காட்டிக்கொண்டு இங்குமங்கும் அலைகிறான்.

क्वचित् क्रीडति गोविन्दो राधया यमुनाजले ।
प्रवालमौक्तिकाकीर्णे कल्लोलकुलसङ्कुले ॥१६॥

विकसत्पद्मकल्हारकुमुदोत्पलराजिते ।
हंसकारण्डवैर्युक्ते यादोगणसमाश्रिते ॥१७॥

सलिलस्निग्धसर्वाङ्गीं निबिडस्तनमण्डलाम् ।
आलिङ्गयति गोविन्दः प्रेयसीं प्रेमपूरितः ॥१८॥

*16-18.* முத்தும், பவளமும் கொழிக்கின்ற அலைகள் உடையதும், தாமரை, செங்கழுநீர், குமுதம், நீலோத்பலம், இவைகளால் சோபிக்கின்றதும், ஹம்ஸம், நீர்க்கோழி, இவைகளுடன் கூடியதும், மீன் முதலிய ஜலஜந்துக்களால் ஆச்ரயிக்கப்பட்டதுமான யமுனாஜலத்தில் ப்ரேமையுடன் கண்ணன் ராதையை ஆலிங்கனம் செய்துகொண்டு ஜலக்ரீடை செய்கிறான்.

राधा विध्यति पद्मेन तथा सिञ्चति वारिणा ।
करेणालिङ्ग्य गोविन्दं क्वणत्कङ्कणशोभिना ॥१९॥

क्वचित्पुलिनमागत्य नानाक्रीडासमन्वितः ।

मुकुन्दो मृगशाबाक्षीं धावन्तीमनुधावति ॥२०॥

*19-20. ராதை கண்ணனை யமுனாஜலத்தினால் நனைத்து தாமரைப்பூவினால் அடிக்கிறாள். யமுனைமணலில் ஓடுகின்ற ராதையைப் பிடிக்கவேண்டி கண்ணனும் ஓடுகின்றான்.*

क्वचिन्मन्दारमूले च पतत्प्रसवसुन्दरे ।
केशप्रसाधनं तस्याः करोति प्रियभाषणः ॥२१॥

पुष्पग्रहणकामां तां प्रेयसीं प्रेममोहितः ।
अंसे वहति गोविन्दो मूले कल्पतरोः क्वचित् ॥२२॥

*21-22. ஒருகால் பூக்கள் சிந்தும் அழகிய மந்தார மரத்தினடியில் கண்ணன் ப்ரியமாய்ப் பேசிக்கொண்டே ராதைக்கு தலை பின்னி விடுகிறான். பூப்பறிக்க விரும்பும் அவளை தனது தோளில் தூக்கிக்கொள்கிறான்.*

क्वचिद्वादयते वेणुं सङ्गीतकुशलो हरिः ।
गायन्त्यां वीणया सार्धं राधिकायां वनान्तरे ॥२३॥

आरुह्य प्रियया नावं यमुनासलिलान्तरे ।
क्वचित्क्रीडति गोविन्दो नवमन्मथविग्रहः ॥२४॥

क्वचित् प्रेम्णा विलिखति प्रियायाः स्तनमण्डले ।
गोरोचनापत्रचित्रं पुलकाङ्कितविग्रहः ॥२५॥

क्वचित्प्रियायाश्चरणौ विलिप्तालक्तकारुणौ ।
संवाहयन् कराभ्याञ्च समाश्लिष्यति वक्षसा ॥२६॥

क्वचित्सुगन्धताम्बूलं प्रियाया वदनाम्बुजात् ।

गृह्णाति परमप्रीतो वदनेन स्वयं हरिः ॥२७॥

अशोकदलक्लृप्तायां शय्यायां रतिलोलुपः ।
शेते कामविलुब्धाङ्गो राधिकास्तनमण्डले ॥२८॥

23-28. ராதை வீணை வாசிக்கும்போது கண்ணன் குழலூதுகிறான். ஒருகால் கண்ணன் ராதையுடன் யமுனா ஜலத்தில் ஓடத்தில் செல்கிறான். ஒருகால் ராதையின் கன்னத்தில் கோரோசனைப் பொடிகளைக்கொண்டு பத்ரம் எழுதுகிறான். மற்றொருகால் ராதைக்கு நலங்கிட்டு பாதஸேவை செய்கிறான். மற்றொருகால் ராதைக்கு தாம்பூலம் கொடுத்து அவளிடமிருந்து தாம்பூலத்தைப் பெறுகிறான். அசோக தளத்தினால் செய்யப்பட்ட சயனத்தில் விளையாடுகிறான்.

पुन्नागवृक्षबद्धायां डोलिकायां क्वचिद्धरिः ।
रमते राधया साकं मन्दमारुतसेवितः ॥२९॥

क्वचित्प्रियायै गोविन्दो मधुराणि फलानि च ।
ददाति स्वयमाहृत्य क्षीरञ्च मधुरं तथा ॥३०॥

क्वचिन्निकुञ्जे रहसि प्रेमालिङ्गनतत्परः ।
करोति राधया सार्धं नानाश्रृङ्गारकेलिकाम् ॥३१॥

क्वचित्करोति प्रियया पुष्पकन्दुककेलिकाम् ।
शिञ्जानमञ्जुमञ्जीरचरणाङ्कितकाननः ॥३२॥

क्वचित्कल्पकवृक्षस्य मूले राधिकया सह ।
करोति द्यूतलीलाञ्च प्रमादात् प्रियया जितः ॥३३॥

राधामाधवयोरेवं चरितं परमाद्भुतं ।
रहस्यमपि संप्रोक्तं किं भूयः श्रोतुमिच्छथ ।।३४।।

*29-34.* புன்னை மரத்தில் ராதையுடன் கண்ணன் ஊஞ்சல் ஆடுகிறான். தேனினும் இனிய பழங்களையும், பாலையும் கண்ணன் ராதைக்கு தானே கொண்டு தருகிறான். ஒருகால் நிகுஞ்சத்தில் ராதையுடன் விளையாடுவான். மற்றொருகால் கால்களில் சலங்கை குலுங்கக் காட்டில் ஓடி ஓடி, ராதையுடன் பூப்பந்து விளையாடுவான். மற்றொருக்கால் கல்பசு வ்ருக்ஷத்தி னடியில் ராதையுடன் பகடையாடி தோற்றுப் போவான். மிகவும் அற்புதமான இத்தகைய ராதாக்ருஷ்ணலீலைகள் ரகசிய மானாலும் சொல்லப்பட்டன. மேலும் என்ன கேட்க விரும்புகிறீர்கள்?

इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये आदिकाण्डे
श्रीकृष्णलीलावर्णनं नाम तृतीयोऽध्यायः।।३।।

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமி ஸ்வாமிகள் அருளிச்செய்த ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்ம்யம் ஆதிகாண்டத்தில் மூன்றாவது அத்யாயம் முற்றும்.**

## अथ चतुर्थोऽध्यायः
## நான்காவது அத்யாயம்

### भागवता ऊचुः

भगवन् भवतो वाक्यं श्रुत्वाऽस्माकं पुनः पुनः ।
श्रीकृष्णलीलाश्रवणे महान् हर्षः प्रजायते ।।१।।

लोकवेदपरास्तत्र गोपिका यमुनावने ।
कथं भजन्ति गोविन्दं प्रेमभावेन तद्वद ।।२।।

**பாகவதர்கள்**

*1-2.* பகவானே! தங்களது வாக்யத்தைக் கேட்ட

எங்களுக்கு க்ருஷ்ணலீலையைக் கேட்பதில் மேன்மேலும் குதூஹலம் உண்டாகிறது. லௌகிக விஷயங்களையும், வைதிக விஷயங்களையும் கடந்தவர்களான கோபிகைகள் ப்ருந்தாவனத்தில் ப்ரேமையுடன் க்ருஷ்ணனை எப்படி பஜிக்கிறார்களோ அதைச் சொல்லவேண்டும்.

## श्रीसद्गुरुरुवाच

सुगोप्यमपि वक्ष्यामि गोपीभावं सुदुर्लभम् ।
मुनयोपि न ज़ानन्ति गोपीनां हृदयं मृदु ॥३॥

किं व्रतैः किमनुष्ठानैः किं योगैः किं जपादिभिः ।
विना गोविन्दपादाब्जभक्तिं प्रेमस्वरूपिणीम् ॥४॥

## ஸ்ரீஸத்குரு

*3-4. மிகவும் ரகஸ்யமாயிருந்தபோதிலும் கோபிகைகளின் ப்ரேமையைச் சொல்லுவேன். இதை முனிவர்கள்கூட அறிய மாட்டார்கள். கோபிகைகளின் உள்ளம் மிகவும் ம்ருதுவானது. கோவிந்தனிடம் ப்ரேமபக்தியைவிட்டு ஜபம், தவம் முதலிய மற்ற சாதனைகளால் என்ன பயன்?*

रसाः पञ्चैव मुख्या हि कृष्णभक्त्यास्तु साधवः ।
वात्सल्यसख्यमाधुर्यदास्यशान्ताभिधाश्च ते ॥५॥

वात्सल्येन यशोदा च सख्येन व्रजबालकाः ।
माधुर्येण च वल्लव्यः शान्तेन च शुकादयः ॥६॥

दास्येन दारुकाद्याश्च भजन्ति श्यामसुन्दरम् ।
नानाभावस्वरूपेण प्रेम्णैव सुलभो हरिः ॥७॥

किमन्यैः साधनैर्लोके भक्तिरेव गरीयसी ।
परमानन्दरूपा सा वशीकृतजनार्दना ॥८॥

5-8. ஸாதுக்களே! க்ருஷ்ணபக்தியில் ஐந்துவிதமான ரஸங்கள் முக்யமாகக் கருதப்படுகின்றன. அவைகளுக்கு வாத்ஸல்யம், ஸக்யம், மாதுர்யம், தாஸ்யம், சாந்தம் என்று பெயர். அவைகளில் வாத்ஸல்யத்தினால் யசோதையும், ஸக்யத்தினால் ஆயர்சிறுவர்களும், மாதுர்யத்தினால் கோபிகைகளும், சாந்தத்தினால் சுகர்முதலியவர்களும், தாஸ்யத்தினால் தாருகன்முதலியவர்களும் கண்ணனை பஜிக்கின்றனர். இத்தகைய ப்ரேமைக்கே கண்ணன் சுலபமாகிறான். கண்ணனை வசம் செய்யும் பக்தியே சிறந்தது. அதுவே பரமானந்தம்.

केवलेन हि भावेन माधुर्यरससम्युताः ।
प्रापुः कृष्णं परं कान्तमनायासेन गोपिकाः ॥९॥

योगिनां दुर्लभः कृष्णः श्रिय एकान्तवल्लभः ।
सुप्रीतः प्रेमभावेन गोपिकानां वशङ्गतः ॥१०॥

आबद्धहृदयाः कृष्णे प्रेमभावविमोहिताः ।
लोकवेदभयं त्यक्त्वा बृन्दारण्ये चरन्ति ताः ॥११॥

हरेर्निरीक्षणस्पर्शपरिरम्भणभाषणैः ।
विमुग्धा व्रजसुन्दर्यो नात्मागाराणि सस्मरुः ॥१२॥

9-12. மாதுர்யபாவத்துடன் கூடிய கோபிகைகள் பரமாத்மாவான க்ருஷ்ணனை தங்களது காதலனாய் பாவித்து சுலபமாய் அடைந்தனர். யோகிகளுக்கும் எட்டாதவனும், லக்ஷ்மிநாதனுமாகிய கண்ணன் கோபிகைகளின் அன்பிற்கு வசமானான். அவர்கள் கண்ணனிடமே பித்தேறியவர்களாய்

உலகத்தை மறந்து ப்ருந்தாவனத்தில் அலைந்தார்கள். கண்ணனுடைய கடாக்ஷம், ஸம்பாஷணை, ஆலிங்கனம் இவைகளால் மயங்கிய கோபிகைகள் **எல்லாவற்றையும்** மறந்தார்கள்.

यामुनं जलमादाय गच्छन्तीं तत्र कामपि ।
अवरुध्य पथि श्यामः परिरेभे रसाकुलाम् ॥१३॥

कस्याश्चिद्यमुनायां तु कुर्वन्त्याः स्नानमच्युतः ।
जहार लीलया वस्त्रं तस्थौ सा लज्जिता भृशम्॥१४॥

उत्फुल्लपद्मसौन्दर्यं पश्यन्तीं यमुनाजले ।
कराभ्यां पृष्ठतो गत्वा चक्रे नेत्रावरोधनम् ॥१५॥

13-15. யமுனையிலிருந்து தண்ணீர் எடுத்துச் செல்லும் ஒரு கோபியை கண்ணன் வழிமறித்து விளையாடுகிறான். யமுனையில் குளிக்கும்போது ஒரு கோபியின் ஆடைகளை எடுத்துக்கொண்டு ஓடுகிறான். யமுனையில் பூத்திருக்கும் தாமரையின் அழகைப் பார்த்தவண்ணம் இருந்த ஒரு கோபியின் கண்களைப் பின்புறமாகச் சென்று பொத்துகிறான்.

काचिन्निशान्तरे चन्द्रज्योत्स्नया परिराजिते ।
सुगन्धमन्दवाते च कूजत्कोकिलमण्डले ॥१६॥

समयोचितवेषा च समुत्पन्नकुतूहला ।
कन्दर्पवशमापन्ना चिन्तितश्यामसुन्दरा ॥१७॥

अचिन्तितकुलाचारा कृष्णसङ्केतकौतुका ।
गच्छत्यरण्यं त्वरया कृष्णसङ्गमकाङ्क्षिणी ॥१८॥

16-18. மந்த மாருதம் வீசுவதும், குயில் கூவுகின்றதுமாகிய ப்ருந்தாவனத்தில் நள்ளிரவில் நல்லநிலவில் ஒரு கோபி அலங்காரம் செய்துகொண்டு கண்ணனை நினைத்து மயங்கியவளாய்க் கண்ணனைத்தேடி ப்ருந்தாவனம் செல்கிறாள்.

काचिद्गोपी निकुञ्जस्था सर्वालङ्कारभूषिता ।
कृतपल्लवतल्पा च मधुरक्षीरसम्युता ॥१९॥

ताम्बूलचन्दनाद्यैश्च भोगोपकरणैः सह ।
प्रतीक्षते प्रियं कृष्णं द्वारेक्षणपरायणा ॥२०॥

19-20. மற்றொரு கோபி மிகவும் அழகாக அலங்காரம் செய்து கொண்டு நிகுஞ்சத்தில் கொழுந்துகளால் படுக்கை தயார் செய்து கொண்டு பால், தாம்பூலம், சந்தனம், இவைகளுடன் கண்ணனை எதிர்பார்த்தவண்ணம் நிற்கிறாள்.

काचिदुत्कण्ठिता गोपी कृष्णसङ्गविलम्बिता ।
नानावितर्कसम्युक्ता नक्षत्रगतिदर्शिनी ॥२१॥

मन्मथेन समाक्रान्ता श्वसन्ती च मुहुर्मुहुः ।
गायन्ती प्रियनामानि विदग्धा तत्र तिष्ठति ॥२२॥

21-22. மற்றொரு கோபி கண்ணனை எதிர்பார்த்தும் வராமல் போகவே பல ஆலோசனை செய்துகொண்டு பிரிவாற்றாமையால் துயரப்பட்டுக்கொண்டு கண்ணனின் நாமங்களை கீர்த்தனம் செய்துகொண்டு நிற்கிறாள்.

काचिद्बृन्दावने गोपी सङ्केतस्थलमागता ।
विप्रलब्धा च कृष्णेन प्रियसङ्गमकाङ्क्षिणी ॥२३॥

दूतीं प्रेष्यापि समयेऽनागतं प्राणवल्लभम् ।

स्मृत्वा स्मृत्वानुशोचन्ती रजन्यामस्ति सुन्दरी ॥२४॥

*23-24.* மற்றொரு கோபி ப்ருந்தாவனத்தில் கண்ணன் சொன்னபடி ஆசையுடன் வந்து, அவனால் ஏமாற்றப்பட்டு ஒருஸகியை தூது அனுப்பியும் கூட கண்ணன் வராமல் போகவே அழுது கொண்டிருக்கிறாள்.

अन्या काचित्प्रभाते तु गोविन्दं स्वयमागतम् ।
कज्जलालिप्तगण्डञ्च समाकुलविलोचनम् ॥२५॥

तिलकाङ्कितफालञ्च चन्दनालिप्तवक्षसम् ।
प्रियापादाङ्कितोरस्कं प्रियाकरनखाञ्चितम् ॥२६॥

प्रेयसीदन्तदष्टोष्ठमर्धनिद्रासमन्वितम् ।
अवलोक्य भृशं क्रुद्धा वदन्ती परुषं वचः ॥२७॥

पुष्पैः फलैः क्षीरपात्रैस्ताम्बूलशयनादिभिः ।
विध्यन्ती याहि याहीति वदति प्रेमपूर्वकम् ॥२८॥

*25-28.* மற்றொருவள் பொழுது விடிந்ததும் வந்திருக்கும் கண்ணனைக்கண்டு அவன் மார்பில் சந்தனத்தையும், வாயில் தாம்பூலத்தையும் கண்டுவெகுண்டு புஷ்பம், பழம், வெற்றிலை இவைகளால் அவனை அடித்து இங்கு வராதே, போ, போ, என்று சொல்லுகிறாள்.

काचिद्गोपी निकुञ्जस्था कृष्णप्रेमपरायणा ।
प्रणतेपि स्वयं कृष्णे प्रणयक्रोधतत्परा ॥२९॥

अनालोकिततद्वक्त्रा निरस्तव्रजनन्दना ।
पुनश्च शोकमापन्ना कलहान्तरिता स्थिता ॥३०॥

29-30. மற்றொரு கோபி கண்ணன் கெஞ்சிக்கேட்டும் கூட கோபத்துடன் இருந்துவிட்டு அவன் போனபிறகு வருந்துகிறாள்.

अन्या काचिन्नन्दसुते विदूरस्थे समाकुले ।
प्रलपत्यनिशं तत्र दूना प्रोषितभर्तृका ॥३१॥

31. மற்றொரு கோபி வெளியூர் சென்றிருக்கும் கண்ணன் குறிப்பிட்ட நேரத்தில் வராமல் போகவே கவலைப்பட்டு அழுது புலம்புகிறாள்

काचिन्निकुञ्जे गोपालं वशीकृत्य रहो निशि ।
क्रीडन्ती तेन सन्तुष्टा गोपी स्वाधीनभर्तृका ॥३२॥

तत्करालङ्कृताङ्गी च तदालिङ्गनमोहिता ।
तेन तत्रानुभुक्तास्ति परमानन्दनिर्भरा ॥३३॥

32-33. மற்றொரு கோபி கண்ணனைத் தனக்கு சொந்தம் செய்து கொண்டு நிகுஞ்சத்தில் ரகஸ்யமாக விளையாடுகிறாள்.

एवं गोपीजनैर्नित्यं पवित्रप्रेमसम्युतैः ।
समाश्रितो हरिस्तत्र चरति प्रियदर्शनः ॥३४॥

परमात्मा स्वयं भूत्वा विशुद्धप्रेममोहितः ।
सन्त्यज्य सर्वयोगीन्द्रान् गोपीनां वशमागतः ॥३५॥

तस्मात्प्रेम्णस्तु माहात्म्यं ननु वाचामगोचरम् ।
सर्वेश्वरोपि गोपीभिर्गृहीतो येन माधवः ॥३६॥

34-36. இவ்வாறு தூய அன்புடைய கோபிகைகளுடன் கண்ணன் ப்ருந்தாவனத்தில் ஸஞ்சரிக்கிறான். பரமாத்மாவான கண்ணன் தூய அன்பிற்கு வசமாகி எல்லா யோகிகளையும்

விட்டு கோபிகைகளிடம் அகப்பட்டான். ஸர்வேச்வரனாயினும் கண்ணன் கோபிகைகளுக்கு வசமானான் என்றால் ப்ரேமையின் பெருமை சொல்லில் அடங்குமோ!

इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये आदिकाण्डे गोपीभाववर्णनं नाम चतुर्थोऽध्यायः॥ ४॥

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிஸ்வாமிகள் அருளிச்செய்த ப்ருந்தாவனமாஹாத்ம்யம் ஆதிகாண்டத்தில் நான்காவது அத்யாயம் முற்றும்.**

# अथ पञ्चमोऽध्यायः

## ஐந்தாவது அத்தியாயம்

### भागवता ऊचुः

एकमेव पतिं प्राप्य सर्वास्ता वल्लवस्त्रियः ।
परस्पराविरोधेन सुखयन्ति कथं हरिम् ॥१॥

**பாகவதர்கள்**

1. எல்லா கோபிகைகளும் இவ்வாறு கண்ணனாகிய ஒரே பதியை அடைந்து பரஸ்பரம் விரோதமில்லாமல் கண்ணனை எப்படி ஸுகப்படுத்துகிறார்கள்?

### श्रीसद्गुरुरुवाच

ईर्ष्यायाः कारणं कामो यस्माद्दूरतरो हरिः ।
प्रेमैव स्वार्थरहितं वल्लवीषु प्रकाशते ॥२॥

न लक्ष्यं स्वसुखं तासां कृष्णसौख्याय केवलम् ।
ताभिः समर्पितं सर्वं मनोवाक्कायचेष्टितम् ॥३॥

यया क्रीडति गोविन्दस्तस्य तस्यां सुखं किल ।
तामेवाश्रित्य वल्लव्यो रमन्ते प्रेमपूर्वकम् ॥४॥

तेषामन्योन्यसौख्येन विशुद्धं प्रेम कुर्वताम् ।
गोपीजनानां गोविन्दः सर्वसौख्यप्रदायकः ॥५॥

ஸ்ரீஸத்குரு

*2-5. அஸூயைக்குக் காரணம் சுயநலமே. சுயநலமுடையவர்களுக்கு கண்ணன் வெகுதூரம். சுயநலமற்ற அன்பே கோபிகைகளிடம் ப்ரகாசிக்கிறது. அவர்களுக்கு தன்னுடைய ஸுகத்தில் லக்ஷியமில்லை. கண்ணனுடைய ஸுகத்திற்காகவே உடல், பொருள், ஆவி யாவையும் அர்ப்பித்து விட்டனர். கண்ணனுக்கு எப்பொழுது யாரிடம் ஸுகமோ அப்பொழுது அவளைக்கண்டு அன்புடன் மகிழ்ச்சி அடைவார்கள். தான் ஸுகப்படுவதைவிட பிறர் ஸுகப்படுவதை விரும்பும் அவர்களுக்கு கண்ணன் எல்லா ஸுகத்தையும் தருகிறான்.*

अवतीर्णस्य कृष्णस्य लोकक्षेमाय केवलम् ।
नित्यानन्दस्वरूपस्य भोक्तव्यं किं सुखं भुवि ॥६॥

तथापि निजसौन्दर्यदर्शनानन्दमोहिताः ।
विलोक्य रमते ताभिः कारुण्येनैव केवलम् ॥७॥

ये यथा तं प्रपद्यन्ते तांस्तथैव भजत्ययम् ।
भावातीतोपि भक्तानां भावग्राही जनार्दनः ॥८॥

गोविन्दपादसंस्पर्शसञ्जातप्रेमलक्षणाः ।
निर्जित्य प्राकृतं कामं निःस्वार्थास्तं भजन्ति ताः ॥९॥

6-9. இவ்வுலகின் க்ஷேமத்திற்காகவே அவதரித்திருக்கும் நித்யானந்த ரூபனான கண்ணனுக்கு இவ்வுலகில் அனுபவிக்க வேண்டிய ஸுகம் என்ன தான் உண்டு? ஆயினும் தன் அழகைக்கண்டு ஏங்கும் கோபிகைகளைக் கருணையினால் ஸுகப்படுத்துகிறான். எவரெவர்கள் எப்படி விரும்பினாலும் அவரவர்களிடம் அப்படியே பழகுவது அவனது சுபாவம். கோவிந்தனின் திருவடி ஸம்பந்தத்தினால் உண்டான ப்ரேம பக்தியால் காமத்தை வென்று, அவர்கள் சுயநலமற்று அவனையே பஜிக்கின்றனர்.

किमत्र चित्रं गोविन्ददासीनां कामसंयमे ।
यासां पदरजो नित्यं वाञ्छन्ति मुनिपुङ्गवाः ॥१०॥

कामा न हि विनश्यन्ति संसारक्लेशहेतवः ।
विना गोविन्दपादाब्जप्रेमभक्तिरसामृतम् ॥११॥

भावातीतं परं ब्रह्म यस्य कुर्यादनुग्रहम् ।
स एव मुच्यते बन्धाल्लोकवेदविनिर्मितात् ॥१२॥

कृष्णानुग्रहसञ्जातप्रेमविच्छिन्नशृङ्खलाः ।
भजन्ति कृष्णं वल्लव्यः कृष्णसौख्यपरायणाः ॥१३॥

वीक्ष्य ताः पञ्चविशिखो जितेन्द्रियसुखास्तदा ।
विमुच्य सशरं चापं जितोस्मीति ननाम च ॥१४॥

तासां श्रीकृष्णसान्निध्याद्भावातीतं परं सुखम् ।
प्रवृद्धं यमुनातीरे प्रवृत्ते रासमण्डले ॥१५॥

श्यामेन मोहिताः सर्वाः कामेन न हि मोहिताः ।

प्रेमैव वल्लवस्त्रीणां काम इत्युपचर्यते ॥१६॥

*10-16.* கோபிகைகளின் பாததூளியை முனிவர்களே விரும்புகின்றார்கள் என்றால் அவர்கள் காமத்தை ஜெயித்து விட்டார்கள் என்பதில் ஆச்சர்யமென்ன? க்ருஷ்ணபக்தி உண்டாகாதவரை ஸம்ஸாரத்தில் துக்கத்தைத் தருகின்ற ஆசைகள் அழிந்து போகாது. கல்பனைக்கெட்டாத பரமாத்மா எப்பொழுது ஒருவனுக்கு அருள் செய்வானோ அப்பொழுதே உலகவிஷயமானதும், சாஸ்திரவிஷயமானதுமான பந்தங்களி லிருந்து விடுதலையடைய முடியும். க்ருஷ்ணனின் திருவருளால் உண்டான ப்ரேமையால் பந்தங்கள் அறுந்துபோய் கோபிகைகள் க்ருஷ்ணஸுகமே லக்ஷ்யமென்று க்ருஷ்ணனை பஜிக்கின்றனர். சிற்றின்பத்தை வென்றுவிட்ட அவர்களைக் கண்டு மன்மதன் தோற்றுப்போய் வணங்கினான். அவர்களுக்கு யமுனைக்கரையில் நடந்த ராஸலீலையில் கண்ணனின் ஸாந்நித்யத்தினால் மனதிற்கெட்டாத பேரின்பம் கிடைத்தது. அவர்கள் கண்ணனிடம் மயங்கினார்களேயன்றி காமனிடம் மயங்கவில்லை. கோபிகைகளின் ப்ரேமபக்தியை புரியாதவர்கள் காமம் என்று சொல்கின்றனர்.

धर्मार्थकाममोक्षाख्यं पुरुषार्थचतुष्टयम् ।
तत्त्वज्ञैः सज्जनश्रेष्ठैर्नारायणपरं स्मृतम् ॥१७॥

धर्मः स्वनुष्ठितो येन कृष्णसन्तोषहेतवे ।
तस्यैव सफलो धर्मो भवबन्धविमोचकः ॥१८॥

अर्थः संपादितो येन कृष्णाराधनहेतवे ।
तस्यैव सफलश्चार्थः सर्वसौख्यप्रदायकः ॥१९॥

त्यक्त्वा श्रीकृष्णकैङ्कर्यं यः कैवल्यमवाप्नुयात् ।
सेव्यसेवकभावेन वर्जितं तस्य किं सुखम् ॥२०॥

कामोपि भगवद्रूपसौन्दर्ये क्रियते यदि ।
तस्यैव सफलः कामो भवबन्धविनाशकः ॥२१॥

17-21. அறம், பொருள், இன்பம், வீடு என்று புருஷார்த்தங்கள் நான்கு. அவைகளில் தர்மமும், க்ருஷ்ணனுடைய ப்ரீதிக்காகச் செய்யப்பட்டால்தான் அழியாத பலனைத்தரும். பொருளோ க்ருஷ்ணனின் ஆராதனத்திற்காக ஸம்பாதிக்கப்பட்டால்தான் பயனுடைத்தாகிறது. முக்தியிலும் ஸேவிக்கப்படும் ஈச்வரன், ஸேவகனான ஜீவன் என்கிற வேற்றுமை இல்லாவிடில் ஸுகம் ஏது? காமத்தையும் கண்ணனின் அழகில் செய்தால்தான் அது ஸபலமாகிறது.

तस्मात्समर्पयेद्धीरो रसानामुत्तमं रसम् ।
कृष्णाय रसिकेन्द्राय सन्त्यज्य प्राकृतं सुखम् ॥२२॥

सर्वे जीवाः स्त्रियः प्रोक्ताः कृष्ण एव परः पुमान् ।
यतः सर्वेश्वरः कृष्णस्तस्य जीवास्तु सेवकाः ॥२३॥

एतत्तत्त्वं न जानन्ति कृष्णस्य परमात्मनः ।
तस्मान्मुह्यन्ति वै मूढाः शरीरसुखतत्पराः ॥२४॥

यः स्मरेत्कृष्णलीलायां शृङ्गाररसमुत्तमम् ।
स एव रसिकश्रेष्ठो रसतत्त्वविदां वरः ॥२५॥

22-25. ஆகையால் ரஸங்களில் சிறந்த ச்ருங்கார ரஸத்தை சிற்றின்ப நாட்டமில்லாமல் ரஸிகேந்திரனான க்ருஷ்ணனுக்கே அர்ப்பணம் செய்யவேண்டும். எல்லா ஜீவன்களும் ஸ்த்ரீகளே. ஈச்வரனான க்ருஷ்ணன் ஒருவனே புருஷன். ஏனெனில் அவன் ஸ்வதந்திரன். ஜீவர்கள் அவனது அடிமை. இந்த ரஹஸ்யத்தை மூடர்கள் அறிவதில்லை. எவன் க்ருஷ்ணலீலையில் ச்ருங்கார ரஸத்தை பாவிக்கிறானோ அவனே ரஸிகர்களில் சிறந்தவன்

तस्माद्वैराग्यसंपूर्णस्त्यक्तस्वजनबान्धवः ।
भिक्षान्ननियमः शुद्धो निर्जित्य रसनेन्द्रियम् ॥२६॥

कौपीनाच्छादनपरः कृष्णकीर्तनतत्परः ।
शीतोष्णसुखदुःखादिद्वन्द्वेषु समबुद्धिमान् ॥२७॥

ध्यायन् बृन्दावने कृष्णं जगन्मोहनसुन्दरम् ।
संवसेद्यमुनातीरे पश्यन् लीलास्थलानि च ॥२८॥

*26-28.* ஆகையால் பந்துக்களைவிட்டு வைராக்யத்துடன் நாக்கை அடக்கி பிக்ஷை எடுத்து சாப்பிடுகின்றவனாய் சுத்தனாகி கௌபீனம் மட்டிலும் அணிந்துகொண்டு க்ருஷ்ணகீர்த்தனமே லக்ஷியமாய் சீதம் உஷ்ணம், ஸுகம் துக்கம்முதலிய த்வந்தங்களில் ஸமபுத்தியுடன் ப்ருந்தாவனத்தில் ஜகன்மோகன ஸுந்தரனான க்ருஷ்ணனைத் தியானம் செய்து கொண்டு அவன் திருவிளையாடல் செய்யும் இடங்களைப் பார்த்துக் கொண்டு யமுனைக்கரையில் வஸிக்கவேண்டும்.

इदमेव परं सौख्यमिदमेव परं तपः ।
इदमेव परं लक्ष्यं यमुनावनदर्शनम् ॥२९॥

किं योगेन च सांख्येन किं सन्यासेन कर्मभिः ।
एको बृन्दावने वासः कृष्णदर्शनदायकः ॥३०॥

अपि चेत्सुदुराचारो यो वसेद्यमुनातटे ।
कृष्णसन्दर्शनं तस्य सत्यं सुलभमेव हि ॥३१॥

*29-31.* இதுவே பேரின்பம். இதுவே பெருந்தவம். ப்ருந்தாவன தரிசனமே பெரும் லக்ஷியம். யோகம், ஆத்ம விசாரம், ஸந்யாசம், கர்மானுஷ்டானம் முதலியவைகள் எதற்கு?

ப்ருந்தாவனவாஸம் ஒன்றே க்ருஷ்ண தரிசனத்தைத் தந்து விடும். பல துராசாரங்களைச் செய்துகொண்டு ப்ருந்தாவனத்தில் வஸித்தாலும் க்ருஷ்ணதரிசனம் சுலபமாய்க் கிட்டிவிடும்.

इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये आदिकाण्डे गोपीप्रेमवर्णनं नाम पञ्चमोऽध्यायः॥ ५॥

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமி ஸ்வாமிகள் அருளிச்செய்த ஸ்ரீப்ருந்தாவனமாஹாத்ம்யம் ஆதிகாண்டத்தில் ஐந்தாவது அத்தியாயம் முற்றும்.**

# अथ षष्ठोऽध्यायः

## ஆறாவது அத்தியாயம்.

### श्रीसद्गुरुरवाच

पुरा कृतयुगे भक्तास्त्वम्बरीषध्रुवादयः ।
कलिन्दजातटे कृत्वा तपः सिद्धिमुपागताः ॥१॥

तथा त्रेतायुगे चैव भगवान् रघुपुङ्गवः ।
पालयामास नगरीं मधुरां व्रजमण्डले ॥२॥

द्वापरे भगवान् कृष्णः कालिन्दीतटकानने ।
सह वल्लवनारीभिश्चक्रेऽत्यद्भुतकेलिकाः ॥३॥

कलौ वैराग्यसंपन्नाः प्रेमभक्तिपरायणाः ।
वसन्ति यमुनातीरे बहवो भक्तपुङ्गवाः ॥४॥

ஸ்ரீஸத்குரு

1-4. க்ருதயுகத்தில் அம்பரீஷன், துருவன் முதலிய பக்தர்கள் ப்ருந்தாவனத்தில் தவம்செய்து ப்ரசித்தியடைந்தனர்.

அவ்வாறே த்ரேதாயுகத்தில் பகவானாகிய சத்ருக்னனும் வ்ரஜ பூமியின் தலைநகராகிய மதுரையை ஆண்டுவந்தார். த்வாபர யுகத்தில் அதே ப்ருந்தாவனத்தில் பகவானாகிய கண்ணன் கோபிகைகளுடன் லீலை செய்தான். கலியுகத்தில் ப்ரேம பக்தியையே லக்ஷியமாகக்கொண்டவர்களும், மற்ற விஷயங்களில் விரக்தியுடையவர்களுமான பல பக்தர்கள் ப்ருந்தாவனத்தில் வசிக்கின்றனர்.

### भागवता ऊचुः

श्रुत्वा वयं प्रहृष्टा स्मो भवतो वचनामृतम् ।
स्वामिन् कृष्णकथा पुण्या भक्तकर्णसुखावहा ॥५॥

आरुह्य स्यन्दनं कृष्णे गोविन्दे मधुराङ्गते ।
रुरुदुर्नितरां गोप्यो विरहेणेति शुश्रुम ॥६॥

त्यक्ते कलिन्दजारण्ये कृष्णेन परमात्मना ।
तत्र वासेन किं सौख्यं यतो दुःखतरं वनम् ॥७॥

**பாகவதர்கள்**

5-7. ஸ்வாமி! தங்களுடைய வசனமாகிய அம்ருதத்தைப் பருகி நாங்கள் மகிழ்ச்சியடைகிறோம். புண்ணியமான க்ருஷ்ணகதை பக்தர்களின் காதுக்கு சுகமளிப்பதாகும். கண்ணன் மதுரை சென்றதும் கோபிகைகள் பிரிவாற்றாமையால் அழுதார் களென்றும் கேட்டிருக்கிறோம். கண்ணன் விட்டுப்பிரிந்த அந்த ப்ருந்தாவனத்தில் வசிப்பதால் என்ன சுகம்?

### श्रीसद्गुरुरुवाच

रहस्यं परमं भक्ताः शृणुत प्रेमतत्पराः ।
लौकिका नैव जानन्ति कृष्णचेष्टितमद्भुतम् ॥८॥

मायामनुष्यवेषस्य कृष्णस्य परमात्मनः ।
लीलारहस्यं जानन्ति तद्भक्ता एव हि स्फुटम् ॥९॥

पुरन्दरेण क्रुद्धेन प्रेरितैः प्रलयाम्बुदैः ।
समाकुले गोकुले तु भगवान् भक्तवत्सलः ॥१०॥

एकेन बाहुना शैलं छत्राकमिव बालकः ।
उद्धृत्य गोकुलं सर्वं पालयामास माधवः ॥११॥

कृत्वापचारं कृष्णस्य दुष्टानां दर्पहारिणः ।
विज्ञाय देवदेवं तं शक्रोऽपि शरणं ययौ ॥१२॥

गोलोकादागता तत्र सुरभिः शिखरे गिरेः ।
चक्रेऽभिषेकं कृष्णस्य गोविन्देति जगुः सुराः ॥१३॥

ஸ்ரீஸத்குரு

*8-13. பக்தர்களே! இந்த ரகஸியத்தை கேளுங்கள். க்ருஷ்ணலீலையின் அதிசயத்தை சாதாரண மக்கள் அறிய மாட்டார்கள். க்ருஷ்ணபரமாத்மாவின் லீலாரகஸியத்தை பக்தர்களே அறிவார்கள். இந்திரனுக்குச் செய்ய வேண்டிய பூஜையை கண்ணன் தடுத்து விடவே, அவன் கோபம் கொண்டு ஏழு நாட்கள் விடாமல் மழை பொழியும்படிச் செய்யவே, கோவர்தனமலையைக் குடைபிடித்து, கண்ணன் கோகுலத்தைக் காப்பாற்றினானல்லவா! அப்பொழுது கண்ணனின் மஹிமை அறிந்து இந்திரன் சரணடைந்தான். காமதேனுவும் தனது பாலால் கண்ணனுக்கு அபிஷேகம் செய்தாள்.*

एवमादिसमालोक्य माहात्म्यं व्रजवासिनः ।
विस्मयं परमं प्रापुः कृष्णस्य परमात्मनः ॥१४॥

तं मेनिरे तदा गोपा मायामानुषविग्रहम् ।
साक्षान्नारायणं देवमवतीर्णं महीतले ॥१५॥

अचिरेण गमिष्यन्तं मधुरां देवकीसुतम् ।
विज्ञाय नारदात्सर्वे गोपालाः साश्रुलोचनाः ॥१६॥

रुरुदुर्नितरां दीना गोविन्दविरहाक्षमाः ।
ऊचुः प्राञ्जलयः कृष्णं गोकुलप्राणवल्लभम् ॥१७॥

*14-17. கோகுலவாசிகள் இத்தகைய கண்ணனின் மஹிமையைக் கண்டு ஆச்சர்யமடைந்தனர். கண்ணனை நாராயணனின் அவதாரமென்றும், கூடிய சீக்கிரம் கம்சனை வதம் செய்வதற்கு மதுரை போய்விடுவானென்றும் நாரதர் மூலம் அறிந்துகொண்டு கண்ணனிடம் வேண்டிக்கொண்டனர்.*

**व्रजवासिन ऊचुः**

श्रीकृष्ण पद्मपत्राक्ष पीताम्बरधराच्युत ।
कालमेघश्यामरूप कारुण्यरसपूरित ॥१८॥

जानीमस्त्वां देवदेवं गोवर्धनधरं प्रभुम् ।
प्रेमवात्सल्यनिलयं ब्रह्मेन्द्रशिवसन्नुतम् ॥१९॥

लोकक्षेमावतारस्त्वं स्वतन्त्रस्त्वं जनार्दन ।
तथा सर्वसमोसि त्वं सर्वकर्मफलप्रदः ॥२०॥

तथापि तव गोविन्द विरहं त्वतिदुःसहम् ।
सोढुं न शक्नुमः कृष्ण मा त्यजास्मान् कृपानिधे॥२१॥

लोकानां त्वं परं दैवमस्माकं त्वं सुतः किल ।
पश्यन्ति तत्त्वं मुनयो वयं तु प्रेमतत्पराः ॥२२॥

वात्सल्यसख्यमाधुर्यभावपूरितमानसान् ।
इमानाभीरवास्तव्यजनान् पालय माधव ॥२३॥

रथाङ्गयववज्रादिपदचिह्नविभूषितम् ।
तव लीलास्पदं कृष्ण मा त्यजेदं महावनम् ॥२४॥

तव दिव्याङ्गवर्णेन श्यामलां सूर्यनन्दिनीम् ।
मा त्यजेमां नदीं कृष्ण नित्यरासकुतूहलाम् ॥२५॥

तव पाणितले कृष्ण गिरीन्द्रं कन्दुकायितम् ।
गोवर्धनमिमं कृष्णध्यानमग्नं तु मा त्यज ॥२६॥

नन्दं यशोदां गोपालान् राधिकां गोपिकास्तथा ।
परिपालय गोविन्द मा त्यजास्मान् कृपानिधे ॥२७॥

इमे वयं वासुदेव त्वत्प्रेमपुलकीकृताः ।
अबलानामनाथानामस्माकं शरणं भव ॥२८॥

**கோகுலவாசிகள்**

*18-28. தாமரைக்கண்ணனான எங்கள் கண்ணா! கோவர்த்தனத்தை குடைதாங்கிய உன்னை ப்ரும்மா, சிவன், இந்திரன்முதலிய தெய்வங்களுக்கும் தெய்வமென்றும், உலகத்திற்கு க்ஷேமம் செய்வதற்காக அவதரித்திருக்கிறாய் என்றும் அறிந்து கொண்டோம். ஆயினும் நீ அன்புக்கும் வாத்ஸல்யத்திற்கும் இருப்பிடமானபடியால் உன் பிரிவைத்*

தாளமாட்டோம். நீ எங்களைக் கைவிடாதே! நீ உலகத்திற்கே பெரிய தெய்வம். ஆனாலும் எங்களுக்கு குழந்தை. உன்னிடம் பலவிதமாய் அன்பு செய்கின்ற இந்த ஆயர்மக்களைக் காப்பாற்று. விட்டுவிடாதே. நீ ஜலக்ரீடை செய்யும் யமுனையையும், குடையாய்ப் பிடித்த கோவர்த்தனத்தையும் விட்டுப் போகாதே. நந்தனையும், யசோதையையும், ஆயர் சிறுவர்களையும், ஆயர் சிறுமிகளையும், ராதையையும் விட்டு விடாதே. உனது ப்ரேமையையே லக்ஷியமாகக்கொண்ட அனாதையும், அபலையுமான எங்களுக்கு நீயே சரணம்.

**श्रीसद्गुरुरुवाच**

एवं प्रियजनैः पृष्टो भगवान्नन्दनन्दनः ।
प्रेमगद्गदया वाचा जगाद जनसंसदि ॥२९॥

**ஸ்ரீஸத்குரு**

29. இவ்வாறு பேசும் ஆயர்மக்களைக் கண்டு நந்தகுமாரனாகிய பகவான் ப்ரேமையால் தழுதழுத்த குரலில் பேசலானான்.

**श्रीभगवानुवाच**

मामेव शरणं प्राप्तं याचमानञ्च मत्कृपाम् ।
इमं भक्तजनं सर्वं न त्यजामि कदाचन ॥३०॥

सर्वधर्मान् परित्यज्य ये मां शरणमागताः ।
तेषां भक्तवरिष्ठानां योगक्षेमं वहाम्यहम् ॥३१॥

नाहं योगेन सांख्येन सुलभो न व्रतादिभिः ।
वशी कुर्वन्ति मां भक्ता विशुद्धप्रेमतत्पराः ॥३२॥

लोकनाथोप्यहं सर्ववेदशास्त्रविधानकृत् ।

अतिक्रम्य स्वनियमं भक्तैः सह वसाम्यहम् ॥३३॥

मयानुलालिता भक्ता न वाञ्छन्ति परं पदम् ।
किं पुनर्लोकसाम्राज्यं ब्राह्मं वा स्वर्गसंपदम् ॥३४॥

यद्यत्स्मरति मद्भक्तास्तत्तत्सत्यं करोम्यहम् ।
तस्मान्न मिथ्या सङ्कल्पो मद्भक्तानां मदात्मनाम् ॥३५॥

विज्ञाय मत्प्रियतमाः सङ्कल्पं भवतामहम् ।
बृन्दावनमिदं दिव्यं न त्यजामि कदाचन ॥३६॥

बृन्दावनञ्च यमुना गोवर्धनगिरिस्तथा ।
निकुञ्जं गोकुलञ्चैव सर्वं तन्नित्यमेव हि ॥३७॥

यशोदाद्या गोपिकाश्च गोपा नन्दादयस्तथा ।
राधिकाद्या मत्प्रियाश्च मया नित्यं वसन्ति हि ॥३८॥

यूयं मद्ध्यानयोगेन मत्सारूप्यमुपागताः ।
भयं विधातुं युष्माकमन्तकः शक्नुयात्कथम् ॥३९॥

न वो जरा न मृत्युश्च न व्याधिर्न च यातना ।
इमानि दिव्यरूपाणि युष्माभिः स्वीकृतानि हि ॥४०॥

अतः पश्यत गोलोकं तत्र बृन्दावनञ्च माम् ।
तथा नन्दं यशोदाञ्च राधामन्याश्च गोपिकाः ॥४१॥

**பகவான்**

*30-41.* என்னையே சரணமடைந்த பக்தர்களை நான் ஒருகாலும் கைவிட மாட்டேன். எனது பக்தர்களின் யோக

க்ஷேமங்களை நானே வஹிக்கிறேன். யோகம், ஸன்யாஸம் முதலிய மற்ற ஸாதனைகளுக்கு நான் சுலபமாகக் கிடைப்ப தில்லை. பக்தர்கள் சுத்தமான ப்ரேமையினால் என்னை வசம் செய்து கொள்கின்றனர். நானும் எந்த நியமத்தையும் பாராமல் பக்தர்களுடன் வசிக்கிறேன். என்னால் லாலனை செய்யப்பட்ட எனது பக்தர்கள் பேரின்பத்தைக்கூட விரும்ப மாட்டார் களென்றால் சிற்றின்பங்களை மதிப்பார்களா? பக்தர்கள் நினைப்பதை ஸத்யமாக்குகிறேன். இந்தப்ப்ருந்தாவனத்தை ஒருகாலும் விட்டுப்பிரிய மாட்டேன். ப்ருந்தாவனம், யமுனை, கோவர்த்தனம், நிகுஞ்சம், கோகுலம், இதுயாவும் அழிவற்றதாகும். திவ்யமானதாகும். யசோதை முதலிய ஆய்ச்சிமார்களும், நந்தன் முதலிய ஆயர்களும், ராதை முதலிய என் தோழிகளும் என்னை விட்டுப் பிரியாமல் வசிக்கிறார்கள். எனது ஸாரூப்யத்தையடைந்த உங்களை யமனால் தொடக்கூட முடியாது. உங்களுக்கு மூப்பு, வ்யாதி, மரணம், நரகம் முதலிய ஏதும் கிடையாது. உங்களது ரூபங்கள் திவ்யமானவை. திவ்யமான கோலோகத்திலுள்ள ப்ருந்தாவனத்தில் என்னையும் உங்களையும் பாருங்கள்.

**श्रीसद्गुरुरुवाच**

इति सर्वेश्वरः कृष्णः सर्वेषां व्रजवासिनाम् ।
गोलोकं दर्शयामास दिव्यं तत्प्रकृतेः परम् ॥४२॥

तत्र बृन्दावनं दिव्यं दिव्याञ्च यमुनां नदीम् ।
दिव्यं गोवर्धनञ्चैव दिव्यं गोकुलमेव च ॥४३॥

दृष्ट्वा तत्रापि गोविन्दं कोटिमन्मथविग्रहम् ।
मुरलीवादनपरं परमानन्दतुन्दिलम् ॥४४॥

यशोदया लालितञ्च नन्देन च महात्मना ।

समवेतञ्च गोपालैर्धेनुचारणतत्परम् ॥४५॥

रासमण्डलमध्ये च क्रीडन्तं राधया सह ।
दिव्यपीताम्बरधरं वैजयन्तीविभूषणम् ॥४६॥

आत्मनश्चापि पश्यन्तस्तत्र श्रीयमुनावने ।
प्रापुश्च परमं हर्षं प्रियत्यागभयं जहुः ॥४७॥

इति तेभ्यो दर्शयित्वा गोलोकं तमसः परम् ।
ब्रह्महृदे स्नापयित्वा चानिनाय पुनश्च तान् ॥ ४८॥

परं विस्मयमापन्नाः कृष्णमाहात्म्यमद्भुतम् ।
तच्च संस्मृत्य संस्मृत्य प्रापुः परमनिर्वृतिम् ॥४९॥

इदं तु परमं गुह्यं यः पठेद्भक्तिसंयुतः ।
स प्राप्नोति विशुद्धात्मा गोलोकं कृष्णपालितम्॥५०॥

ஸ்ரீஸத்குரு

*42-50. கோகுலவாசிகளுக்கு திவ்யமான கோலோகத்தைக் காண்பித்தான். அங்கு அவர்கள் திவ்யமான ப்ருந்தாவனத்தையும், யமுனையையும் கோவர்த்தனத்தையும், கோகுலத்தையும் பார்த்து அந்த கோலோகத்தில் கோடிமன்மதர்களை வெல்லும் அழகுடையவனும், வேணுகானம் செய்பவனும், பரமானந்த மூர்த்தியும், யசோதையினாலும், நந்தனாலும் லாலனை செய்யப்படுகின்றவனும்., சிறுவர்களுடன் மாடு மேய்ப்பவனும், ராதையுடன் ராஸலீலை செய்பவனும், வைஜயந்திமாலை அணிந்தவனும், பீதாம்பரதாரியுமான கோவிந்தனைக் கண்டு அவனுடன் தங்களையும் கண்டு பரமானந்தம் கொண்டனர். பிரிவினால் வரும் துன்பம் நீங்கப்பெற்றனர். மறுபடியும்*

அவர்களை ப்ரும்மதீர்த்தத்தில் நீராட்டி, கோகுலத்தில் கொண்டு விட்டான் கண்ணன். ஆச்சர்யமடைந்த ஆயர்கள் அதையே நினைத்து நினைத்து சுகப்பட்டனர். பரம ரகஸியமான இந்த கதையை படிப்பவனும், க்ருஷ்ணபக்தியால் சுத்தமான சித்தமுடையவனாகி கோலோகத்தை அடைவான்.

इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये आदिकाण्डे दिव्यगोलोकदर्शनं नाम षष्ठोऽध्यायः।। ६।।

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிஸ்வாமிகள் அருளிச்செய்த ப்ருந்தாவனமாஹாத்ம்யம் ஆதிகாண்டத்தில் ஆறாவது அத்யாயம் முற்றும்.**

# अथ सप्तमोऽध्यायः

## ஏழாவது அத்தியாயம்

### भागवता ऊचुः

वद गोलोकमाहात्म्यं सद्गुरो करुणानिधे ।
यत्र क्रीडति गोपीभिर्नित्ये बृन्दावने हरिः ।।१।।

**பாகவதர்கள்**

1. கருணைக்கடலான ஸத்குருவே! எந்த கோலோகத்தில் கண்ணன் கோபிகைகளுடன் தினமும் விளையாடுகிறானோ, அதன் மஹிமையைச் சொல்லவேண்டும்.

### श्रीसद्गुरुरुवाच

ब्रह्मलोकादूर्ध्वमेव गोलोकस्तु प्रकाशते ।
सर्वं ज्योतिर्मयं यत्र प्रकृतेः परमुत्तमम् ।।२।।

न योगेन न दानेन तपसा न व्रतेन च ।
बहुभिर्नियमैर्नैव गोलोकं प्राप्नुयान्नरः ।।३।।

लोकानामुत्तमो लोको गोलोकः संप्रकीर्त्यते ।
यत्र प्रकाशते कृष्णो गोपीमण्डलसेवितः ॥४॥

देवासुराणां सिद्धानां मुनीनामपि दुर्लभम् ।
प्राप्नुवन्ति च गोलोकं कृष्णभक्तियुता नराः ॥५॥

ஸ்ரீஸத்குரு

2-5. ப்ரும்மலோகத்தின் மேலாக கோலோகம் இருக்கிறது. அது மாயைக்கு அப்பாற்பட்டது. அங்கு எல்லாம் ஜோதிமயமானதே. யோகம், தானம், தவம் முதலிய ஸாதனைகளால் அதை அடைய முடியாது. தேவர்களுக்கும், அஸுரர்களுக்கும், ஸித்தர்களுக்கும், முனிவர்களுக்கும்கூட அது துர்லபமானது. அதை க்ருஷ்ணபக்தர்கள் மட்டிலும் அடைகின்றனர்.

तत्र बृन्दावने रम्ये नानावृक्षसमन्विते ।
कल्पकद्रुममूले च मन्दमारुतसेविते ॥६॥

चिन्तामणिमहारत्नसुवर्णोज्ज्वलमण्टपे ।
रत्नसिंहासने दिव्ये श्वेतच्छत्रसमन्विते ॥७॥

मृदुलास्तरणोपेते पर्यङ्के सोपधानके ।
वीरासने समासीनो भगवाञ्छ्यामसुन्दरः ॥८॥

दिव्यपीताम्बरधरो दीप्तनानाविभूषणः ।
शिञ्जानमञ्जीरधरो हरिचन्दनचर्चितः ॥९॥

कर्णान्तदीर्घनयनः कस्तूरीतिलकाञ्चितः ।
मुरलीमण्डितकरो बर्हिबर्हावतंसकः ॥१०॥

नित्ययौवनमूर्तिश्च सर्वसौन्दर्यसङ्ग्रहः ।
आलिङ्ग्य राधिकां देवीं वामभागनिवासिनीम् ॥११॥

नित्यं षोडशवर्षीयां जगन्मोहनसुन्दरीम् ।
दिव्यनीलाम्बरधरां नानाभूषणभूषिताम् ॥१२॥

कुंभस्तनीं विशालाक्षीं सुकपोलां शुचिस्मिताम् ।
कज्जलालिप्तनयनां कस्तूरीतिलकाञ्चिताम् ॥१३॥

नानानुलेपसन्दिग्धां मधुरां मृदुभाषिणीम् ।
नवचम्पकवर्णाभां नानाभावरसोज्ज्वलाम् ॥१४॥

आलोकयन् प्रेमयुक्तस्तत्कटाक्षविमोहितः ।
विशाखाललिताभ्याञ्च वीजितश्वेतचामरः ॥१५॥

अन्याभिर्गोपकन्याभिः कृतनानोपचारकः ।
यशोदया च नन्देन बलभद्रेण लालितः ॥१६॥

धेनुभिश्च सवत्साभिर्वात्सल्येन विलोकितः ।
पिकबर्हिणकीरादिशकुन्तानन्दवर्धनः ॥१७॥

ब्रह्मरुद्रमहेन्द्रादिसुराणामपि दुर्लभः ।
भक्तोत्तमैरेव सदा कीर्तितो नारदादिभिः ॥१८॥

विराजते सुप्रसन्नो भगवान् भक्तवत्सलः ।
प्रकाशयंश्च गोलोकं स्वानन्दमयतेजसा ॥१९॥

6-19. அந்த கோலோகத்தில் பலவிதமான மரங்கள் சூழ்ந்த ரம்யமான பிருந்தாவனத்தில், மந்தமாருதம் வீசுகின்ற கல்பகமரத்தினடியில், சிந்தாமணிமண்டபத்தில் வெண் குடையுடன்கூடிய ரத்தினஸிம்மாஸனத்தில், மிருதுவான மெத்தையின் மேல் வீராஸனத்தில் அமர்ந்திருப்பவனும், பீதாம்பரம் அணிந்தவனும், காற்சலங்கை முதலிய பல பூஷணங்கள் அணிந்தவனும், செஞ்சந்தனம் பூசிக்கொண்டி ருப்பவனும், கஸ்தூரிதிலகம் இட்டுக்கொண்டிருப்பவனும், காதுவரைநீண்ட பார்வையுடையவனும், கையில் குழலேந்திய வனும், மயிலிறகை மகுடமாய் அணிந்தவனும்,இளமை மாறாதவனும் நீலவர்ணனுமான கண்ணபிரான், எப்பொழுதும் பதினாறுவயது மாறாதவளும், உலகை மயக்கும் அழகுடைய வளும் நீலப்பட்டாடை அணிந்திருப்பவளும், பல ஆபரணங்கள் அணிந்திருப்பவளும், விசாலமான கண்கள் உடையவளும், அழகிய கன்னமுடையவளும், மந்தஹாஸம் புரிபவளும், கண்களில் மை தீட்டிக்கொண்டிருப்பவளும், கஸ்தூரிதிலகம் அணிந்து கொண்டிருப்பவளும், இனிமையான வளும், மெதுவாய்ப் பேசுகின்றவளும், புதிய சம்பகபுஷ்பம் போன்ற வர்ணமுடையவளும், சிருங்காரரஸத்தினால் ஜொலிப்பவளுமான ராதாதேவியை ஆலிங்கனம் செய்து கொண்டு கடாக்ஷம் செய்பவனாகவும், அவளுடைய கடாக்ஷத்தினால் மயங்கினவனாகவும், விசாகையும் லலிதையும் சாமரம் போட, மற்ற கோபிகைகள் பற்பல உபசாரங்கள் செய்ய, நந்தனும் யசோதையும் பலராமனும் லாலனை செய்ய, பசுக்களும், கன்றுகளும் அன்புடன் பார்க்க, மயில் குயில் கிளி முதலிய பக்ஷிகள் மகிழ்ச்சி அடைய, நாரதர்முதலிய பக்தர்கள் பாடவே, ப்ரும்மா ருத்ரன் இந்திரன் முதலிய தேவர்களுக்கும் துர்லபனாய், தனது காந்தியால் கோலோகத்தையே பிரகாசிக்கச் செய்பவனாக ஸுப்ரஸன்னமாய் விளங்குகிறான்.

तं प्राप्नुवन्ति गोलोकं तद्भक्ता एव केवलम् ।
कृष्णभक्तिविहीनानां वैकुण्ठादपि दुर्लभम् ॥२०॥

ये तु वात्सल्यभावेन भजन्ते गोकुलेश्वरम् ।
ते प्राप्नुवन्ति गोलोकं वसन्ति च यशोदया ॥२१॥

सख्यभावेन ये भक्ता भजन्ति श्यामसुन्दरम् ।
गोलोकं प्राप्य ते भक्ताः श्रीदाम्ना निवसन्ति च॥२२॥

ये तु माधुर्यभावेन भजन्ते मुरलीधरम् ।
ते प्राप्नुवन्ति गोलोकं वसन्ति सह राधया ॥२३॥

दास्यभावेन ये भक्ता भजन्ते नन्दनन्दनम् ।
ते संप्राप्य गोलोकमुद्धवेन वसन्ति हि ॥२४॥

शान्तभावेन ये भक्ता भजन्ति पुरुषोत्तमम् ।
गोलोकं प्राप्य ते भक्ता वसन्ति श्रीशुकेन च ॥२५॥

*20-25. க்ருஷ்ணபக்தி இல்லாதவர்களுக்கு வைகுண்டத்தைக் காட்டிலும் துர்லபமான அந்த கோலோகத்தை அவனுடைய பக்தர்களே அடைகின்றனர். கண்ணனிடம் வாத்ஸல்யம் காட்டி பக்தி செய்பவர்கள் கோலோகம் சென்று யசோதையுடன் வசிக்கின்றனர். கண்ணனிடம் தோழமை கொண்டு பக்தி செய்பவர்கள் கோலோகம் சென்று ஸ்ரீதாமனுடன் வசிக்கின்றனர். கண்ணனிடம் காதல்கொண்டு பக்தி செய்பவர்கள் கோலோகம் சென்று ராதையுடன் வசிக்கின்றனர். தன்னை கிருஷ்ணனின் தாஸனாக எண்ணி பக்தி செய்பவர்கள் கோலோகம் சென்று உத்தவனுடன் வசிக்கின்றனர். எல்லாம் கிருஷ்ணமயம் என்று பாவித்து பக்திசெய்பவர்கள் கோலோகம் சென்று ஸ்ரீசுகருடன் வசிக்கின்றனர்.*

कृष्णस्य नित्यलीलाया दर्शनार्थं भजन्ति ये ।
ते प्राप्नुवन्ति गोलोकं वैकुण्ठं तु मुमुक्षवः ॥२६॥

तस्माद्धि मोक्षकामानां गोलोको दुर्लभः स्मृतः ।
गोलोके लभ्यते वासो नित्यलीलाप्रियैर्हरेः ॥२७॥

गोलोकं प्राप्य ते भक्तास्तत्तद्भावानुसारतः ।
भजन्ति नित्यलीलायां नन्दनन्दनमीश्वरम् ॥२८॥

न रोगो न जरा मृत्युर्न दुःखं न सुखं तथा ।
केवलं कृष्णलीलाया रस एव प्रवर्तते ॥२९॥

*26-29. எப்பொழுதும் க்ருஷ்ணலீலையைக் காண விரும்புபவர் கோலோகத்தையும், மோக்ஷத்தை விரும்புபவர் வைகுண்டத்தையும் அடைகின்றனர். கோலோகத்தை அடைந்து அவரவர்களுடைய மனோபாவத்திற்கு ஏற்றபடி க்ருஷ்ண லீலைகளில் கலந்து கொள்ளுகின்றனர். மூப்பு, மரணம், வியாதி முதலிய துன்பமோ, சிற்றின்பமோ, ஏதும் அங்கு கிடையாது. கிருஷ்ணனின்லீலாரஸமே அங்கு நடைபெறுகிறது.*

वात्सल्यरसभक्तास्तु प्रविशन्त्येव गोकुलम् ।
तत्र पश्यन्ति कृष्णस्य बालक्रीडां दिने दिने ॥३०॥

सख्यभावयुता भक्ता गच्छन्ति यमुनावनम् ।
तत्र कुर्वन्ति कृष्णेन सन्ततं धेनुचारणम् ॥३१॥

माधुर्यरसभक्तास्तु निकुञ्जं प्रविशन्ति च ।
तत्र श्रीराधिकाकृष्णकेलिं पश्यन्ति सन्ततम् ॥३२॥

दास्यभावप्रिया भक्ताः प्राप्य श्रीगोकुलं तथा ।
दास्यं कुर्वन्ति कृष्णस्य तथा नन्दयशोदयोः ॥३३॥

शान्तभावयुता भक्ताः प्राप्य गोवर्धनं गिरिम् ।
कृष्णस्य विविधा लीला ध्यायन्ति श्रीशुकेन च॥३४॥

एवं गोविन्दभक्तानां यः पठेद्गतिमुत्तमाम् ।
सोऽप्यवाप्नोति गोलोकं कृष्णभक्तिपरायणः ॥३५॥

*30-35.* வாத்ஸல்யத்துடன் பக்தி செய்பவர்கள் அங்குள்ள கோகுலத்தை அடைந்து தினந்தோறும் கண்ணனின் பால லீலையைப் பார்க்கின்றனர். கண்ணனின் தோழனாய்ப் பக்தி செய்பவர்கள் அங்குள்ள பிருந்தாவனத்தில் கண்ணனுடன் மாடு மேய்க்கின்றனர். கண்ணனிடம் காதல்கொண்டவர்கள் அங்குள்ள நிகுஞ்ஜம் சென்று ராதாகிருஷ்ணலீலையைப் பார்க்கின்றனர். தாஸனாய் பக்திசெய்பவர்கள் அங்குள்ள கோகுலம் சென்று கண்ணனுக்கு கைங்கரியம் செய்கின்றனர். ஞானியாய் பக்திசெய்பவர்கள் அங்குள்ள கோவர்த்தன மலையை அடைந்து சுகருடன் க்ருஷ்ணலீலைகளைத் தியானம் செய்கின்றனர். இவ்வாறு கிருஷ்ணபக்தர்களின் உத்தம கதியைப் படிப்பவர்கள்கூட கோலோகத்தை அடைகின்றனர்.

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये आदिकाण्डे गोलोकमाहात्म्यं नाम सप्तमोऽध्यायः॥७ ॥*

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிஸ்வாமிகள் அருளிச்செய்த ப்ருந்தாவனமாஹாத்ம்யம் ஆதிகாண்டத்தில் ஏழாம் அத்யாயம் முற்றும்.**

## अथाष्टमोऽध्यायः

## எட்டாம் அத்தியாயம்

### *श्रीसद्गुरुरुवाच*

अथ वक्ष्याम्यहं भक्ता गवां माहात्म्यमुत्तमम् ।
यासां खुररजो नित्यं शिरसा वहति प्रभुः ॥१॥

पुरा पराजिता देवाः समरे दैत्यपुङ्गवैः ।
चतुर्मुखं पुरस्कृत्य हरिं शरणमाययुः ॥२॥

तेषां क्लेशविनाशार्थं चिन्तयन् दीनवत्सलः ।
आज्ञापयामास सुरान् क्षीराब्धिमथनाय च ॥३॥

देवासुराश्च सङ्गम्य ममन्थुः क्षीरसागरम् ।
मन्थानं मन्दरं कृत्वा सूत्रं कृत्वा च वासुकिम् ॥४॥

आविर्बभूव सुरभिः सर्वलोकशुभप्रदा ।
कौस्तुभं कल्पवृक्षश्च तथा हालाहलं विषम् ॥५॥

कल्पवृक्षं सुरेशश्च शिवो हालाहलं विषम् ।
नारायणः कौस्तुभं च जगृहे प्रीतिपूर्वकम् ॥६॥

ஸ்ரீ ஸத்குரு

*1-6. ஹே பக்தர்களே! பசுக்களின் குளம்படியிலிருந்து கிளம்பிய புழுதியைப் பகவானே சிரஸில் வஹிக்கிறானல்லவா? அந்தப் பசுவின் பெருமையைச் சொல்லுவேன். முன்னொரு காலத்தில் அஸுரர்களால் தோற்கடிக்கப்பட்ட தேவர்கள் பகவானை சரணமடைந்தனர். பகவான் திருப்பாற்கடலை கடை யும்படி உத்தரவிட்டான். தேவர்களும் அஸுரர்களும்கூடி மந்தரமலையை மத்தாகவும், வாஸுகியைக் கயிறாகவும் கொண்டு பாற்கடலைக் கடைந்தனர். அப்பொழுது காமதேனு, கல்பகவிருஷம், கௌஸ்துபம், ஹாலாஹல விஷம் முதலிய அரியபொருட்கள் உண்டாயின. கல்பகவிருக்ஷத்தை இந்திரனும், விஷத்தை சிவனும் கௌஸ்துபத்தை நாராயணனும் பிரீதியுடன் எடுத்துக்கொண்டனர்.*

कामधेनुस्तदा विष्णुं शरण्यं शरणङ्गता ।
कर्तव्यं किं मया देव वद मे भगवन्निति ॥७॥

तामुवाच महाविष्णुर्गच्छ त्वं पृथिवीमिह ।
नृणाममृतपानार्थं सृज धेनूः सहस्रशः ॥८॥

इति विष्णोराज्ञयैव सुरभिर्भुवमागता ।
ससर्ज धेनूः सर्वेषामुपकाराय केवलम् ॥९॥

गवां क्षीरेण मर्त्याश्च बभूवुरमरा भुवि ।
इच्छन्ति च गवामाज्यममराः स्वर्गवासिनः ॥१०॥

अमराश्च नराः सर्वे गवां क्षीरेण वर्धिताः ।
लेभिरे परमं सौख्यं ततः प्रीतः स्वयं हरिः ॥११॥

गोलोकं परमानन्दमक्षयं तमसः परम् ।
सुरभ्यैः सौरभेयीभ्यः प्रददौ कृपया प्रभुः ॥१२॥

धेनवो या वसन्तीह लोके निःस्वार्थजीवनाः ।
देहावसाने ताः सत्यं यान्ति गोलोकमुत्तमम् ॥१३॥

*7-13. அப்பொழுது காமதேனு விஷ்ணுவை சரண மடைந்து நான் என்ன செய்ய வேண்டும்? என்று கேட்டாள். விஷ்ணுவும், நீ பூலோகத்திற்குச்சென்று மனிதர்களுக்கு அம்ரு தத்திற்கு நிகரான பாலைத் தரவேண்டி ஆயிரக்கணக்கான பசுக் களைப் படைப்பாயாக என்றார். காமதேனுவும் யாவருக்கும் உபகாரம் செய்யவேண்டி பல பசுக்களைப் படைத்தாள். பசு வின் பாலால் மனிதர்களும் அமரர்களுக்கு நிகரானார்கள்.*

ஸ்வர்கவாஸிகளான அமரர்கள்கூட பசும்பாலை விரும்புகின்றனர். நரர்களும், அமரர்களும் கோக்ஷீரத்தால் ஸுகமடைந்தனர். காமதேனுவின் சுயநலமற்ற ஸேவையைக்கண்டு பகவான் காமதேனுவுக்கும் மற்ற பசுக்களுக்கும் அழிவற்ற பரமபதமான கோலோகத்தைத் தந்தான். ஆகையால் இங்கு வசிக்கும் பசுக்கள் யாவும் முடிவில் கோலோகத்தை அடைகின்றன.

तस्मात् करोति यो भक्त्या गोपूजाञ्च दिने दिने ।
सोपि गच्छति गोलोकं कृपया गोपिकापतेः ॥१४॥

ग्रासं ददाति यो भक्त्या धेनुभ्यश्च दिने दिने ।
तस्मै प्रसन्नो भगवान् ददाति निखिलान् वरान् ॥१५॥

यः कुर्याच्छृङ्गयोर्मध्ये धेनोः पूजां तु श्रद्धया ।
स प्राप्नोति परां भक्तिं ययैव सुलभो हरिः ॥१६॥

शालग्रामशिलामूर्तिं गोक्षीरेणाभिषिच्य च ।
सर्वपापविनिर्मुक्तो विष्णुलोकं स गच्छति ॥१७॥

प्रातरुत्थाय यः पश्येद्धेनुं मङ्गलरूपिणीम् ।
विमुक्तः सर्वदुःखेभ्यः शुभमाप्नोति मानवः ॥१८॥

यो धारयति सन्ध्यायां गोधूलिं शिरसा नरः ।
सर्वपापविमुक्तात्मा याति ब्रह्म सनातनम् ॥१९॥

दृष्ट्वा धेनुं वत्सयुतां यः करोति प्रदक्षिणम् ।
स प्राप्नोति नरः सद्यो भूप्रदक्षिणजं फलम् ॥२०॥

14-20. ஆகையால் தினந்தோறும் **கோ**பூஜை செய்பவனும் கோபாலனின் திருவருளைப்பெற்று கோலோகத்தை அடைவான். பசுக்களுக்கு தினந்தோறும் தீனிபோடுபவனுக்கு பகவான் விரும்பிய வரன்களைத் தருகிறான். பசுக்களின் சிரஸில் பூஜைசெய்பவன் க்ருஷ்ணபக்தியை அடைகிறான். அவனுக்கு பகவான் ஸுலபமாகிறார். சாளக்ராமத்தை கோக்ஷீரத்தால் அபிஷேகம் செய்பவன் பாபமெல்லாம் நீங்கப்பெற்று பரமபதமடைகிறான். காலையில் எழுந்திருந்து மங்களமான ரூபமுடைய பசுவை தினந்தோறும் பார்ப்பவன் எல்லாத் துன்பங்களிலிருந்தும் விடுபட்டு சுபத்தை அடைகிறான். மாலைப்பொழுதில் பசுவின் குளம்படிப் புழுதியை சிரஸால் வஹிப்பவன் பாபமெல்லாம் நீங்கப்பெற்று முக்தி அடைகிறான். பசுவையும் கன்றையும் வலம் வருபவன் பூப்ரதக்ஷிணம் செய்த பலனைப் பெறுகிறான்..

विप्राय कृष्णभक्ताय यो दद्याद्धेनुमुत्तमाम् ।
तस्मै कृष्णः सुप्रसन्नो वरानिष्टान् ददाति हि ॥२१॥

कपिलायाश्च पयसा योऽभिषिञ्चेच्छिवं नरः ।
संसारबन्धनिर्मुक्तः शिवसायुज्यमेति सः ॥२२॥

साक्षतैः कुसुमैर्धेनुं हरिद्राकुङ्कुमेन च ।
सा सौमङ्गल्यमाप्नोति पूजयेद्या पतिव्रता ॥२३॥

गोमलेन विशुद्धेन यद्गृहं परिमार्जितम् ।
तस्मिन् गृहे वसेन्नित्यं साक्षाल्लक्ष्मीर्वरप्रदा ॥२४॥

गोमूत्रं यः पिबेद्भक्त्या कुर्याद्वा प्रोक्षणं नरः ।
सर्वरोगविनिर्मुक्तो देवतुल्यो भवेत्तदा ॥२५॥

21-25. கிருஷ்ணபக்தனான ப்ராம்மணனுக்கு கோதானம் செய்வதால் கண்ணன் ப்ரீதியடைந்து விரும்பிய வரன்களைத் தருவான். காராம்பசுவின் பாலால் சிவலிங்கத்திற்கு அபிஷேகம் செய்பவன் கைலாஸபதத்தை அடைவான். அக்ஷதை, புஷ்பம், மஞ்சள், குங்குமம் இவைகளால் பசுவைப் பூஜிக்கும் பதிவ்ரதை ஸுமங்கலியாகவே இருப்பாள். பசுவின் சாணத்தினால் மெழுகப்பட்ட வீட்டில் லக்ஷ்மீ நித்யவாஸம் செய்வாள். கோமூத்திரத்தை பக்தியுடன் பானம் செய்தாலோ, ப்ரோக்ஷணம் செய்துகொண்டாலோ எல்லா ரோகங்களிலிருந்தும் விடுதலை பெறுவான்.

वृद्धां धेनुं वत्सहीनां यो भक्त्या पालयेन्नरः ।
स च प्राप्नोति गोलोकं भक्तिं संप्राप्य माधवे ॥२६॥

त्यजेत्प्राणांस्त्यजेद्बन्धूंस्त्यजेदात्मसुखानि च ।
न त्यजेत्सर्वदा धेनुं यथा वृद्धां स्वमातरम् ॥२७॥

यः स्पृशेच्चरणाग्रेण धेनुं वा वृषभं तथा ।
स याति नरकं घोरं गोविन्दविमुखो भवेत् ॥२८॥

विना योगेन यागेन विना ध्यानजपादिभिः ।
गवां शुश्रूषयैव स्यात् कृष्णस्य प्रीतिभाजनम् ॥२९॥

विसृज्य च सुरान् सर्वान् मुनीन्द्रान् राजसत्तमान् ।
स्वधर्मनिष्ठान् वेदज्ञान् वैश्यांश्च धनिकानपि ॥३०॥

ब्रह्मनिष्ठान् यतीन्द्रांश्च सिद्धान् विद्याधरांस्तथा ।
गोकुलं प्राप्य गोविन्दो गोपालैः सह मोदते ॥३१॥

कर्तुमिच्छति यो भक्तः कृष्णस्य प्रीतिमुत्तमाम् ।
सन्ततं पूजयेद्धेनुं मत्वा तां लोकमातरम् ॥३२॥

*26-32.* கன்று போடாத மூப்படைந்த பசுவைக் காப்பாற்றுபவன் கோலோகத்தை அடைவான். பசுவிற்காக வேண்டி பிராணன், பந்துக்கள், தேஹம், ஸுகம் எதையும் தியாகம் செய்யலாம். ஆனால் மூப்படைந்த தனது தாயாரைப் போல், மூப்படைந்த பசுவைத் தியாகம் செய்யவே கூடாது. பசுவையோ விருஷபத்தையோ காலால் உதைப்பவன் கோரமான நரகத்தை அடைவான். யோகம், யாகம், தியானம், ஜபம் ஏதுமில்லாமல் பசுக்களுக்கு ஸேவை செய்வதாலேயே கண்ணனின் பிரியத்தைப் பெற்றுவிடலாம். எல்லா முனிவர்களையும், தேவர்களையும், ஸித்தர்களையும், வித்யாதரர்களையும், ராஜ சிரேஷ்டர்களையும், வைதிகர்களான பிராம்மணர்களையும், தனிகர்களான வைச்யர்களையும் விட்டு கோவிந்தன் கோகுலத்தை அடைந்து ஆயர்களுடன்கூடி ஆனந்தப்படுகிறான். எனவே கண்ணனுக்கு அளவுகடந்த ப்ரீதியைச் செய்ய விரும்புகிறவன் லோகமாதாவான கோமாதாவைப் பூஜிக்கவேண்டும்.

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये आदिकाण्डे गोमाहात्म्यं नामाष्टमोऽध्यायः॥८॥*

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிஸ்வாமிகள் அருளிச்செய்த ப்ருந்தாவனமாஹாத்ம்யம் ஆதிகாண்டத்தில் எட்டாவது அத்யாயம் முற்றும்.**

# अथ नवमोऽध्यायः

## ஒன்பதாம் அத்தியாயம்

### भागवता ऊचुः

अद्य श्रीराधिकादेव्या माहात्म्यं वद सद्गुरो ।

सर्वेश्वरोपि श्रीकृष्णः कथं तस्या वशं गतः ।।१।।

**பாகவதர்கள்**

1. ஸத்குருவே! ராதாதேவியின் மஹிமையைச் சொல்லவேண்டும். ஸர்வேச்வரனாயிருந்தபோதிலும் ஸ்ரீக்ருஷ்ணன் அவளுக்கு எப்படி வசமானான்?

**श्रीसद्गुरुरुवाच**

शक्तिस्तु ह्लादिनी नाम ब्रह्मणः परमात्मनः ।
यया ह्लादयति ब्रह्म चेतनाचेतनं जगत् ।।२।।

अवतीर्णे वासुदेवे लोकक्षेमाय माधवे ।
अवतीर्णाऽभवत्सापि वृषभानुगृहे स्वयम् ।।३।।

चकार नाम तस्यास्तु राधेति मधुराक्षरम् ।
साक्षात्कृष्णोपि यन्नामरसास्वादनतत्परः ।।४।।

कल्याणगुणमाधुर्यदिव्यसौन्दर्ययौवनैः ।
मोहयामास गोविन्दं राधिका प्रेमरूपिणी ।।५।।

**ஸ்ரீஸத்குரு**

2-5. பரமாத்மாவின் அனந்த சக்திகளுக்குள் ஹ்லாதினி என்கின்ற சக்தியே கண்ணன் கோகுலத்தில் அவதரித்த பொழுது விருஷபானுகோபர் என்பவரின் குமாரியாக ராதை என்கிற பெயருடன் அவதரித்தாள். ராதை தனது குணம், அழகு, யௌவனம் இவைகளால் கண்ணனை மயங்கும்படி செய்தாள்.

तस्याः कटाक्षविशिखैर्विद्धवक्षःस्थलो हरिः ।
तत्सौन्दर्यविमुग्धात्मा मूर्च्छितो भवति प्रभुः ।।६।।

देव्या दिव्यशरीरस्य सुगन्धेन विमोहितः ।
राधा राधेति विलपन्नुन्मत्तश्चरतीश्वरः ॥७॥

विनिवेश्याधरे वंशीं कीर्तयन् मधुरं हरिः ।
राधानामानि सततं रमते यमुनातटे ॥८॥

तयोपभुक्तस्रग्गन्धवासोलङ्कारचर्चितः ।
भगवानपि कंसारिरात्मानं बहुमन्यते ॥९॥

क्वचिद्रहसि कुञ्जेषु राधाध्यानपरायणः ।
आत्मप्राणेश्वरीदासीर्वल्लवीः श्लिष्यति स्वयम् ॥१०॥

6-10. அவளுடைய கடைக்கண் பார்வையால் அடிக்கப் பட்ட கண்ணன் மூர்ச்சையாகிறான். அவளுடைய திருமேனி யின் சுகந்தத்தில் மயங்கிய கண்ணன் ராதே! ராதே! என்று கூவிக்கொண்டு ப்ருந்தாவனத்தில் ஸஞ்சரிக்கிறான். யமுனைக் கரையில் குழலூதும்போதும் கண்ணன் ராதையையே பாடுகிறான். அவளுடைய சூடிக்களைந்த மாலை முதலியவை களைக் கண்ணன் மிகவும் மதிக்கிறான். ராதையின் உயிருக்குயிரான தோழிகளிடம் அன்பு காட்டுகிறான்.

महाभावस्वरूपिण्या राधाया भक्तिनिष्ठया ।
वशीकृतो वासुदेवः सेवते तत्पदाम्बुजम् ॥११॥

संयोजयति कृष्णेन राधिका निजकिङ्करीः ।
निःस्वार्थेनैव कामेन प्रीणाति भगवानपि ॥१२॥

विधातुं जगदानन्दमवतीर्णा हि राधिका ।
निःस्वार्थप्रेमसंपूर्णे तच्चरित्रे किमद्भुतम् ॥१३॥

क्वचित्प्रणयकोपेन संयुक्ता दृश्यते हरौ ।
कोपं करोति मिथ्यैव रसोत्कर्षाय केवलम् ॥१४॥

कदाचिद्वञ्चयन् राधां चन्द्रावल्या गृहं गतः ।
रसिकेन्द्रस्तया रेमे तत्सौन्दर्यवशङ्गतः ॥१५॥

विप्रलब्धा तदा राधा चुक्रोश निशि कानने ।
दुःसहेन वियोगेन दुःखिता दूनमानसा ॥१६॥

11-16. ராதையின் பக்திக்கு வசமாகி கண்ணன் அவளுக்கு பாதஸேவை செய்கிறான். ராதை சுயநலமற்ற அன்பினால் தனது தோழிகளை கண்ணனிடம் சேரவிடுகிறாள். யாவரையும் ஆனந்தப்படுத்துவதே ராதையின் லட்சியம். தானே சுகப்பட வேண்டும் என்கிற எண்ணம் அவளுக்குக் கிடையாது. சில சமயம் விளையாட்டிற்காக கண்ணனிடம் கோபித்துக் கொள்ளுவாள். அது பொய் கோபமே. ஏனெனில் கோபித்துக் கொண்டால்தான் அன்பும், இன்பமும் வளரும்.

ईर्ष्यालेशोऽपि राधाया हृदये न हि सर्वदा ।
तथापि दुःसहप्रेष्ठविरहेणाभिरोदिति ॥१७॥

प्रातरुत्थाय गोविन्दः प्रेयसीखण्डिताधरः ।
मदालसो राधिकायाः सन्निधिं स्वयमागतः ॥१८॥

प्रियं निरीक्ष्य राधा च कोपारुणविलोचना ।
ताडयामास गोविन्दं पुष्पताम्बूलचन्दनैः ॥१९॥

**श्रीराधोवाच**

याहि माधव गोविन्द किं कार्यं दीनया मया ।

जाने त्वां कितवं नूनं युवतीजनवञ्चकम् ॥२०॥

चन्द्रावलीगृहं गच्छ सैव ते प्रेयसी किल ।
अनुरूपा च नाहं ते किं सुखं नीचया मया ॥२१॥

अहं बृन्दावने रम्ये करिष्ये व्रतमुत्तमम् ।
अनुज्ञां कुरु गोविन्द सफलं भवतु व्रतम् ॥२२॥

*श्रीसद्गुरुरुवाच*

एवमुक्त्वा च सा देवी रुरोदास्राकुलेक्षणा ।
मन्दं जगाद गोविन्दस्तत्समीपं मृदुस्मितः ॥२३॥

परिरभ्य प्रियां कृष्णः प्रेमभाषणपूर्वकम् ।
सान्त्वयामास सान्त्वज्ञो रसिकेन्द्रो हि माधवः ॥२४॥

*श्रीभगवानुवाच*

मम प्राणप्रिये देवि कोपेन तव किं सुखम् ।
तवैव विरहेणाहं दुःखितः किल कानने ॥२५॥

चन्द्रावलीं न जानामि का सा सङ्कीर्तिता त्वया ।
मम कान्ता त्वमेवासि सत्यं सत्यं वदाम्यहम् ॥२६॥

किं वृथा कुपितासि त्वं सदाचारयुते मयि ।
कामये तव पादाब्जं त्वमेव प्रेयसी मम ॥२७॥

*श्रीसद्गुरुरुवाच*

इत्युक्त्वा भगवान् कृष्णो राधायाः पादपल्लवम् ।

प्रगृह्य लालयामास मृदुतल्पे स्वयं हरिः ॥२८॥

एवं प्रेमरसावर्तभ्रमितो राधया सह ।
निकुञ्जे रमते नित्यं रसरूपो हि माधवः ॥२९॥

17-29. ஒருசமயம் கண்ணன் ராதையை ஏமாற்றிவிட்டு சந்திராவளியிடம் சென்று விட்டான். ராதை கண்ணனின் பிரிவாற்றாமையால் மிகவும் துக்கமடைந்தாள். அவளுக்கு கடுகளவும் பொறாமை கிடையாது. ஆயினும் கண்ணனின் பிரிவு துக்கத்தைத்தானே தரும். பொழுதுவிடிந்ததும் கண்ணன் வந்தான். அவனைக் கண்டதும் ராதைக்கு கோபந்தான் வந்தது. மாதவா! கோவிந்தா! உம்முடைய கதையை வெகுநாளாக நான் அறிவேன். உமது காதலியான சந்திராவளியின் வீட்டிற்கே நடப்பீராக. உமக்கு நான் பொருத்தமானவளில்லை. உமது அனுமதியைப் பெற்றுக்கொண்டு இன்றுமுதல் ஒரு விரதம் ஆரம்பிக்கப் போகிறேன் என்று அழுதுகொண்டே சொன்னாள். .கண்ணன் மெள்ள அவளிடம் சென்று சமாதானம் செய்தான். எனக்கு உயிருக்கும் மேலானவள் நீ. கோபத்தினால் என்ன ஸுகம்? உனது பிரிவினால் துன்பப் பட்டுக்கொண்டே ப்ருந்தாவனத்தில் நேற்றிரவைக் கழித்தேன். என் காதலி நீதானே. சந்திராவளி என்பது யார்? வீண் கோபம் வேண்டாம். நான் வழிதப்பி நடக்கமாட்டேன். இவ்வாறு சொல்லி ராதையை எப்படியோ ஸமாதானம் செய்து அவளுடன் விளையாடினான். ச்ருங்கார ரஸமே வடிவெடுத்தது போல் அல்லவா நம் கண்ணன்.

किमन्यैः शुष्कहृदयैर्दैवतैर्मुनिपूजितैः ।
एकमेव परं मन्ये रसरूपं तु माधवम् ॥३०॥

निग्रहानुग्रहपरा देवताः सन्ति कोटिशः ।
किन्तु प्रेमरसोन्मत्तं दैवं नान्यद्धरिं विना ॥३१॥

शुष्कवेदान्तिनः केचिद्वदन्ति ब्रह्म केवलम् ।
गोपीभावरसज्ञास्तु रसरूपं भजन्ति तम् ।।३२।।

रसं दधाति या देवी सा राधा मुनिभिः स्मृता ।
रस एव परं ब्रह्म रसो वै स इति श्रुतेः ।।३३।।

संस्मरन् दिव्यदम्पत्योर्लीलामृतरसं सदा ।
बृन्दावने वसेद्भक्तः प्रकुर्वन् सुखजीवनम् ।।३४।।

नित्यं श्रीयमुनास्नानान्नित्यं श्रीकृष्णदर्शनात् ।
नित्यं बृन्दावने वासात् परमन्यत्र किं सुखम् ।।३५।।

किं धर्मेण किमर्थेन मुक्त्या कामेन किं तथा ।
एको बृन्दावने वासः पुरुषार्थफलप्रदः ।।३६।।

सर्वधर्मान् परित्यज्य कामानर्थांश्च वैष्णवः ।
कृष्णलीलां स्मरन्नित्यं वसेच्छ्रीयमुनातटे ।।३७।।

30-37. ரஸரூபனான கண்ணனைவிட்டு வறண்ட ஹ்ருதய முடைய மற்ற தெய்வங்களால் என்ன இருக்கிறது? வரன் கொடுக்கவும், சபிக்கவும் பல தெய்வங்கள் உண்டு. ஆனால் ப்ரேமையில் மயங்கிய தெய்வம் கண்ணன் ஒருவனே. வறட்டு வேதாந்திகள் ப்ரும்மத்தை அரூபமானது என்கிறார்கள். பக்தர்களோ அதையே ரஸரூபமானது என்கின்றனர் ரஸமே பரப்ரும்மமான க்ருஷ்ணன். ரஸத்தைத் தரிப்பதால் தேவி ராதை என்று சொல்லப்படுகிறாள். ராதாக்ருஷ்ண திவ்யலீலைகளை சிந்தித்தவாறு ப்ருந்தாவனத்தில் வசிப்பதே ஸுகஜீவனம். தினமும் ப்ருந்தாவனத்தில் வாஸம். தினமும் யமுனையில் ஸ்நானம். தினமும் க்ருஷ்ணசிந்தனம். இதைவிட வேறு என்ன

ஸுகம் வேண்டும்? அறம், பொருள், இன்பம், வீடு எல்லாவற்றைக்காட்டிலும் பிருந்தாவனவாஸமே சிறந்தது எனவே எல்லாவற்றையும் விட்டுவிட்டு க்ருஷ்ணலீலையை தியானம் செய்துகொண்டு யமுனைக்கரையில் வஸிக்க வேண்டும்.

इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये आदिकाण्डे श्रीराधामाहात्म्यं नाम नवमोऽध्यायः॥९॥

இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிஸ்வாமிகள் அருளிச்செய்த ப்ருந்தாவனமாஹாத்ம்யம் ஆதிகாண்டத்தில் ஒன்பதாவது அத்யாயம் முற்றும்.

# अथ दशमोऽध्यायः

## பத்தாமத்தியாயம்

### श्रीसद्गुरुरुवाच

योषित्पुरुषसंयोगे यावदिच्छा प्रजायते ।
गोपीभावं न जानन्ति तावत्कामपरा जनाः ॥१॥

जन्मान्तरसहस्रेषु प्रकुर्वन् भक्तिसाधनम् ।
अन्ते प्राप्नोति गोविन्दे प्रेमभक्तिमहैतुकीम् ॥२॥

बहवो दुर्लभाश्चैव कृष्णप्रेमपरा नराः ।
प्रकाशते क्वापि पात्रे प्रेमभक्तिरहैतुकी ॥३॥

### ஸ்ரீஸத்குரு

*1-3. சிற்றின்பத்தில் நாட்டம் உள்ளவரை ஜனங்களுக்கு கோபிகைகளின் ப்ரேமபக்தி புரியாது. பல ஜன்மங்களில் பக்தி ஸாதனைகளைச் செய்து அதன் பயனாகத்தான் கண்ணனிடம் ப்ரேமை உண்டாகும். இத்தகைய ப்ரேமை அரிது.*

तमोभूतमिदं सर्वमव्यक्तं पुरुषोत्तमः ।
तत्र सुप्तञ्च पुरुषं निरीक्ष्य भगवान् हरिः ॥४॥

ह्लादिन्या परया शक्त्या स्वभावेन च चोदितः ।
सृष्ट्वा जगदिदं सर्वं प्रविश्य स्वयमेव हि ॥५॥

प्रदातुकामो जीवेभ्यः पुरुषार्थचतुष्टयम् ।
विराट्पुरुषरूपेण तस्थौ स्थूलवपुर्धरः ॥६॥

*4-6. பிரளயகாலத்தில் மாயையில் மயங்கிக் கிடக்கும் ஜீவர்களிடம் கருணையினால் உலகத்தைப் படைக்கும்படி தனது ஹ்லாதினிசக்தியால் தூண்டப்பட்ட க்ருஷ்ண பரமாத்மா ஜீவர்களுக்கு அறம், பொருள், இன்பம், வீடு இவைகளை தரவேண்டி உலகைப்படைத்து, அவ்வுலகத்தையே தனது வடிவமாகக் கொண்டு நின்றான்.*

तत्रापि मायया मुग्धं जीववर्गं विलोक्य सः ।
वेदं प्रकाशयामास पुरस्कृत्य प्रजापतिम् ॥७॥

असुरैः पीडितञ्चापि वेदमार्गं पुनः पुनः ।
नानावतारभेदेन परिपालयति प्रभुः ॥८॥

एवं निसर्गबन्धुर्हि परमात्मा सनातनः ।
तमवज्ञाय मूढात्मा निमज्जति भवार्णवे ॥९॥

*7-9. மாயையில் மயங்கிய ஜீவர்களுக்கு ஞானத்தைத் தரவேண்டி ப்ரும்மாவை முன்னிட்டுக்கொண்டு வேதத்தை வெளியிட்டான். அந்த வேதமார்கத்தை அஸுரர்கள் அழிக்கும்பொழுது பல அவதாரங்களைச்செய்து காப்பாற்றி னார். அழிவற்ற பரமாத்மாவைக் காட்டிலும் ஜீவர்களுக்கு தொடர்ந்து வரும் பந்து வேறு யாருமில்லை.*

स्वभावतः संप्रवृत्तं कारुण्यं तदहैतुकम् ।
विज्ञाय धीराः कवयस्तमेव शरणङ्गताः ॥१०॥

अशक्तानां योगमार्गे गन्तुं जीवात्मनां ननु ।
कृष्णस्य करुणासिन्धोः पदमेवावलम्बनम् ॥११॥

सनातनं देवदेवं योगिनामपि दुर्लभम् ।
वशीकुर्वन्ति भक्त्यैव रसिका वैष्णवोत्तमाः ॥१२॥

*10-12.* இயற்கையாகவே உண்டாகிற கண்ணனுடைய கருணையை அறிந்து ஞானிகள் அவனையே சரணடைகின்றனர். யோகமார்க்கத்தில் செல்ல சக்தியில்லாத ஜீவர்களுக்கு கருணைக்கடலான கண்ணனின் திருவடியே கதி. யோகிகளுக்கும் துர்லபனான அழிவற்ற தேவதேவனை ரஸிகர்களான வைஷ்ணவர்கள் பக்தியினாலேயே வசம் செய்து கொள்ளுகின்றனர்.

**भागवता ऊचुः**

वद सृष्टिरहस्यं तदस्माकं गुरुपुङ्गव ।
यस्य स्मरणमात्रेण कृष्णभक्तिः प्रजायते ॥१३॥

**பாகவதர்கள்**

*13.* குருநாதா! பகவான் இவ்வுலகத்தைப் படைத்த ரஹஸியத்தைச் சொல்லவேண்டும். அதைக்கேட்பதால் கிருஷ்ணபக்தி உண்டாகுமல்லவா?

**श्रीसद्गुरुरुवाच**

निर्गुणञ्च निराकारमव्यक्तं परमव्ययम् ।
कृष्णाख्यं शाश्वतं नित्यं पूर्णं ब्रह्म सनातनम् ॥१४॥

अनन्तशक्तिसंयुक्तं सर्वकारणकारणम् ।
ह्लादिन्या परया शक्त्या परिष्वक्तमभूत्तदा॥१५॥

परमात्मा निराकारो दिव्यरूपमुपेत्य सः ।
रमणीयरसाकारो ज्योतिरभ्यन्तरस्थितः॥१६॥

दिव्यपीताम्बरधरः सर्वाभरणभूषितः ।
मन्दस्मितमुखाब्जश्च द्विभुजो मुरलीधरः॥१७॥

व्यत्यस्तचरणाम्भोजनिबद्धमणिनूपुरः ।
नित्ययौवनमूर्तिश्च नीलज्योतिर्मयो हरिः॥१८॥

स्वयंभूः शाश्वतो नित्यः परमे व्योम्नि संस्थितः ।
अपश्यदात्मनात्मानमाद्यमेकं सनातनम्॥१९॥

एकाकी रन्तुकामश्च तदेच्छन्नितरं विभुः ।
सस्मार ह्लादिनीं शक्तिमात्मनो रसरूपिणीम् ॥२०॥

**ஸ்ரீஸத்குரு**

*14-20. நாமம், ரூபம் அற்ற அழிவற்ற பரம்பொருளே க்ருஷ்ணன். அளவுகடந்த சக்தியுள்ள அந்த பரமாத்மா ஹ்லாதினி என்கின்ற சக்தியுடன் கூடியபொழுது அழகிய ரூபம் உடையவனாக ஆனான். பீதாம்பரம் அணிந்தவனும், எல்லா ஆபரணங்களும் அணிந்தவனும், அழகிய மந்தஹாஸம் உடையவனும், வேணுகானம்செய்பவனும், திருவடிகளை மாற்றி வைத்துக்கொண்டிருப்பவனும், காற்சலங்கை அணிந்திருப்பவனும், இளமைமாறாதவனும், நீல ஜோதிவடிவ மானவனும், தானே உண்டானவனும், அழிவற்றவனுமான அந்த கிருஷ்ணபரமாத்மா சிதாகாசத்தில் தான்ஒருவனே*

இருப்பதைக்கண்டு விளையாட வேணுமென்ற ஆசைகொண்டு தனது **ஹ்லாதினீ சக்தி**யை நினைத்தான்.

आविरासीत्तदा देवी पराशक्तिः परात्मनः ।
स्वरूपेणैव दिव्येन ज्योतिरभ्यन्तरे तदा ॥२१॥

कोटिविद्युत्समाना सा किशोरी नवयौवना ।
दिव्यसौन्दर्यनिलया नानाभावसमाकुला ॥२२॥

दिव्यक्षौमपरीधाना सर्वाभरणभूषिता ।
दरान्दोलितदीर्घाक्षी प्रेमपूरितभाषणा ॥२३॥

21-23. அப்பொழுது அந்த ஹ்லாதினீசக்தி அழகிய வடிவங்கொண்டு **ராதை** என்கிற பெயருடையவளாய் பதினாறு வயதுடையவளாய், மின்னல்கொடிபோல் அழகியவளாய், திவ்யமான பட்டாடையும், பல ஆபரணங்களும் அணிந்தவளாய் அலைகின்ற விழியும், கொஞ்சுகின்ற மொழியும் உடையவளாய் ஜோதிவட்டத்தின் நடுவில் தோன்றினாள்.

स्ववामाङ्के निषण्णां तां परिरभ्य ततो विभुः ।
अद्भुतप्रेमभरितमाद्यं मिथुनमाबभौ ॥२४॥

कृष्णस्य स्पर्शमात्रेण साऽभवत्पुलकाङ्किता ।
सद्यो विनिःसृतास्तस्याः किरणाश्च सहस्रशः ॥२५॥

ते सर्वे राधिकादेव्या महाशक्त्यंशरश्मयः ।
अङ्गीकृत्य स्वरूपाणि परितस्तस्थुरच्युतम् ॥२६॥

ललितादिसखीबृन्दमेतद्वीक्ष्य च राधया ।
रासक्रीडां समारेभे परमव्योम्नि माधवः ॥२७॥

एवं रासरसोन्मत्तं राधिका रसरूपिणी ।
दिव्यं लीलास्थलं प्राप्तुं चोदयामास केशवम् ॥२८॥

*24-28.* தனது மடியில் உட்கார்ந்த ராதையை கண்ணன் தழுவிக்கொண்டான். அப்பொழுது அவள் மேனி சிலிர்த்தது. அவளிடமிருந்து பல கிரணங்கள் வெளிப்பட்டன. அந்த ஒவ்வொரு கிரணங்களிலிருந்தும் லலிதை முதலிய ஸகிகள் ஆவிர்பவித்தனர். கண்ணன் அவர்களுடன் சிதாகாசத்தில் ராஸலீலை செய்தான். இவ்வாறு ராஸலீலை செய்து கொண்டிருக்கும் கண்ணனை ராதை ஒரு லீலாஸ்தலத்தை அடையும்படி தூண்டினாள்.

सद्यः सङ्कल्पमात्रेण सत्यसङ्कल्प ईश्वरः ।
प्रादर्शयत् परे व्योम्नि गोलोकं शाश्वतं परम् ॥२९॥

बृन्दावनं गोवर्धनं यमुनाञ्च महानदीम् ।
पुलिनानि विचित्राणि गोकुलञ्च लतागृहम् ॥३०॥

प्रकाश्य कृपया देवो नित्यलीलां चकार सः ।
परमप्रेमसंमुग्धा राधा तं परिषस्वजे ॥३१॥

*29-31.* உடனே தனது ஸங்கல்பத்தினாலேயே அழிவற்றதான கோலோகத்தையும், அதிலுள்ள பிருந்தாவனம், கோவர்த்தனம், யமுனை, கோகுலம், நிகுஞ்ஜம், முதலியவை களையும் பிரகாசப்படுத்தி அதில் நித்யலீலையைச் செய்தான்.

तत्परिष्वङ्गमात्रेण बभूव पुलकाङ्कितः ।
तस्यापि रोमकूपेभ्यो गोपाः सर्वे विनिर्ययुः ॥३२॥

सर्वे नित्यस्वरूपाश्च सर्वे श्रीकृष्णपार्षदाः ।

लीलारसाय संभूता ब्रह्मणः परमात्मनः ॥३३॥

एवं गोलोकभुवने शाश्वते नित्यनिर्मले ।
मूले कल्पकवृक्षस्य चिन्तामणिमये गृहे ॥३४॥

रत्नसिह्मासने दिव्ये समासीनश्च राधया ।
सखीजनसमेतश्च राजते रसिकेश्वरः ॥३५॥

आद्यं मिथुनमाश्रित्य जगत्सर्वं प्रवर्तते ।
तस्मादेवात्र निखिलं योषित्पुरुषविग्रहम् ॥३६॥

*32.36. ராதை கண்ணனை ஆலிங்கனம் செய்து கொண்டாள். கண்ணன் மேனி சிலிர்க்கவே, கண்ணனின் பார்ஷதர்கள் ஆவிர்பவித்தனர். இவ்வாறு கோலோகத்தில் கல்பக விருக்ஷத்தினடியில், சிந்தாமணி மண்டபத்தில், ரத்ன ஸிம்மாஸனத்தில் வீற்றிருந்து ராதையுடனும், ஸகிகளுடனும் ரஸிகேந்திரனான கிருஷ்ணன் பிரகாசிக்கிறான். இந்த ஆதி தம்பதிகளே உலகத்திற்குக் காரணம்.*

*इति श्रीमत्परमहंसपरिव्राजकाचार्यवर्यसर्वप्राणिरक्षकजगद्गुरु-श्रीभगवन्नामबोधेन्द्रचरणारविन्दमकरन्दरसिकेन श्रीकृष्णप्रेमि-महाप्रभुणा विरचिते श्रीबृन्दावनमाहात्म्ये आदिकाण्डे सृष्टिरहस्यं नाम दशमोऽध्यायः ॥१०॥*

इति आदिकाण्डः समाप्तः॥

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிஸ்வாமிகள் அருளிச்செய்த ப்ருந்தாவனமாஹாத்ம்யம் ஆதிகாண்டத்தில் பத்தாவது அத்யாயம் முற்றும்.**

**ஆதிகாண்டம் முற்றும்**

श्रीहरिः

*श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचितं*

ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிஸ்வாமிகள் அருளிச்செய்த

# श्रीबृन्दावनमाहात्म्यम्

# ஸ்ரீப்ருந்தாவனமாஹாத்ம்யம்

## सृष्टिकाण्डम्

## ஸ்ருஷ்டிகாண்டம்

### अथ प्रथमोऽध्यायः

### முதல் அத்தியாயம்

*श्रीसद्गुरुरुवाच*

ब्रह्म तन्मिथुनं दिव्यं सर्वलोकैककारणम् ।
व्यक्तमेव वदत्येवं बृहदारण्यकश्रुतिः ॥१॥

गोलोके परमे धाम्नि वैकुण्ठे चिन्मये सदा ।
ब्रह्म तन्मिथुनं नित्यं रमते निजपार्षदैः ॥२॥

अप्राकृतत्वान्नित्यं हि तद्विष्णोः परमं पदम् ।
महाप्रलयकालेपि न नश्यति न जायते ॥३॥

इच्छामात्रेण कृष्णस्य लीलाविग्रहधारिणः ।
अरूपाश्च सरूपाश्च भवन्ति हरिपार्षदाः ॥४॥

अपरा प्रकृतिस्त्वन्या माया तु त्रिगुणात्मिका ।
यया संमोहिताः सर्वाः प्रसुप्ता जीवकोटयः ॥५॥

अनाद्यविद्यया सुप्तान् चिद्रूपान् पुरुषानिमान् ।
विलोक्य कृपया देवी राधिका कृष्णमब्रवीत् ॥६॥

ஸ்ரீஸத்குரு

1-6. உலகத்தைப் படைக்கும் பரம்பொருள் மிதுன ரூபமாய் (திவ்யதம்பதிகளாய்) இருக்கிறது என்று உபநிஷதம் கூறுகிறது. பரமபதமான வைகுண்டத்தில் அல்லது கோலோகத்தில் அந்த திவ்யதம்பதிரூபமான ப்ரும்மம் தனது தொண்டர்களுடன் விளங்குகிறது. அந்த பரமபதம் மாயைக்கு அப்பால் இருப்பதால் ப்ரளயகாலத்திலும் அழிவதில்லை. க்ருஷ்ணபரமாத்மாவின் பார்ஷதர்களான ஜீவர்களும் பகவானின் இச்சைப்படி ரூபத்துடனோ ரூபம் இல்லாமலோ இருப்பார்கள். முக்தியைப் பெறாத ஜீவன்கள் பகவானின் முக்குணவடிவான மாயையில் மயங்கிக் கிடக்கிறார்கள். அனாதிகாலம்தொட்டு மயங்கிக் கிடக்கும் ஜீவன்களைக் கண்டு ராதாதேவி கருணையுடன் க்ருஷ்ணனிடம் விண்ணப்பித்துக் கொண்டாள்.

श्रीदेव्युवाच

तमोभूतमिदं सर्वमव्यक्तं त्रिगुणात्मकम् ।
तत्र सुप्तञ्च पुरुषं कृपया पश्य माधव ॥७॥

केवलं लीलया देव भुवनं कल्पय प्रभो ।
ततः प्राप्नोतु पुरुषः पुरुषार्थचतुष्टयम् ॥८॥

ராதாதேவி

7-8. மாதவ! இருள்வடிவான இந்த மாயையையும், அதில்

தூங்கிக்கிடக்கும் ஜீவர்களையும் கருணையுடன் பார்க்க லாகாதா! ப்ரபுவே! விளையாட்டாக இவ்வுலகத்தைப் படைப்பீராக! அந்த உலகத்தில் ஜீவர்கள் அறம், பொருள், இன்பம், வீடு இவைகளை அடையட்டும்.

### श्रीभगवानुवाच

एवमस्तु महाभागे प्रीतोस्मि कृपया तव ।
लीलया भुवनं सर्वं सृजामि तव सन्निधौ ॥९॥

आवां प्रविश्य तत्रापि लीलाञ्च व्यावहारिकीम् ।
कुर्याव विविधां देवि परमानन्दवर्धिनीम् ॥१०॥

जीवः कर्मफलाधीनः सुखदुःखमयं जगत् ।
अवाप्य क्लेशसंपन्नः शनैरुपरतो भवेत् ॥११॥

तदा सत्सङ्गमात्रेण संप्राप्तज्ञानदर्शनः ।
प्राप्नोतु मत्पदाम्भोजं दृढया भक्तिनिष्ठया ॥१२॥

### ஸ்ரீபகவான்

9-12. மஹாபாக்யவதி! அப்படியே ஆகட்டும். உனது கருணையால் ப்ரீதி அடைந்தேன். உன் எதிரில் உலகத்தைப் படைக்கிறேன். நாமும் அவ்வுலகத்தில் அவதரித்து பல லீலைகளைச் செய்வோம். ஜீவர்களும் பூர்வகர்மங்களின் பயனாய் பல இன்பங்களையும் துன்பங்களையும் அடைந்து கஷ்டப்பட்டு உலக வாழ்க்கையில் ஓய்வு அடைவார்கள். அப்பொழுது ஸாதுசங்கத்தினால் ஞானம் உண்டாகி என் திருவடிகளில் பக்தியை அடைவார்கள்.

### श्रीसद्गुरुरुवाच

इत्युक्त्वा भगवान् कृष्णः सद्य एव कृपानिधिः ।
जगृहे सुन्दरं रूपं शुद्धसत्त्वगुणान्वितम् ॥१३॥

शान्तं चतुर्भुजं दिव्यं शङ्खचक्रगदाधरम् ।
कोटिमन्मथलावण्यं सर्वाभरणभूषितम् ॥१४॥

सापि शक्तिः प्रधाना च राधिका रसरूपिणी ।
सद्यो लक्ष्मीस्वरूपेण नारायणमुपागता ॥१५॥

ஸ்ரீஸத்குரு

*13-15.* இவ்வாறு சொல்லி க்ருஷ்ணபரமாத்மா சுத்தமான ஸத்வகுணத்துடன் கூடியதும், நான்கு கைகள் உடையதும், சங்கம் சக்ரம், கதை, பத்மம் இவைகளை தரிப்பதும், மிகவும் அழகானதும், எல்லா ஆபரணங்களும் அணிந்ததும், சாந்தமானதுமான விஷ்ணுருபத்தை தரித்துக் கொண்டார். ராதாதேவியும் லக்ஷ்மிருபத்துடன் பக்கத்தில் நின்றாள்.

अथ नारायणो देवो योगनिद्रामुपेत्य सः ।
स्त्रष्टुकामो जगत्सर्वं चक्रे ज्ञानमयं तपः ॥१६॥

तपोबलेन निखिलं ससर्ज भुवनं हरिः ।
स्वयमेव प्रविश्यापि सर्वत्र व्याप्य तिष्ठति ॥१७॥

यथैव विकृतं क्षीरं नवनीतमितीर्यते ।
तथा गुणविकारेण प्रकृतिर्महदुच्यते ॥१८॥

महत्तत्त्वादहङ्कारो बभूव त्रिगुणात्मिकः ।
त्रिविधो यः ससर्जेमं विचित्रं तत्त्वसङ्ग्रहम् ॥१९॥

शब्दतन्मात्रमाकाशं स्पर्शमात्रञ्च मारुतम् ।

रूपतन्मात्रमग्निञ्च रसमात्रं जलं तदा ॥२०॥

पृथिवीं गन्धतन्मात्रां ससर्ज भगवान् हरिः ।
पञ्चकर्मेन्द्रियाण्येवं पञ्चज्ञानेन्द्रियाणि च ॥२१॥

*16-21.* நாராயணன் உலகத்தைப் படைக்கவேண்டி ஆலோசனை செய்துகொண்டே யோகநித்ரையில் இருந்தார். அப்பொழுது அவருடைய சக்தியான மாயை பரிணாமத்தை அடைந்து மஹத்தத்வமாக மாறியது. மஹத்தத்வத்திலிருந்து அஹங்காரதத்வம் உண்டாயிற்று. அந்த அஹங்கார தத்வத்திலிருந்து சப்தத்தை குணமாகக்கொண்ட ஆகாயமும், ஸ்பர்சத்தை குணமாகக்கொண்ட காற்றும், ரூபத்தைக் குணமாகக்கொண்ட அக்னியும், ரஸத்தைக் குணமாகக் கொண்ட ஜலமும், கந்தத்தைக் குணமாகக்கொண்ட பூமியும், கண், காது, மூக்கு, நாக்கு, தோல் எனப்படும் ஞானேந்திரி யங்களும், வாக்கு பாதம், கை, குதம், குறி என்னும் ஐந்து கர்மேந்திரியங்களும் உண்டாயின.

चतुर्विंशतितत्त्वानां गणं प्राविविशद्धरिः ।
स्वयं विराट्स्वरूपेण सर्वलोकमयेन सः ॥२२॥

अथ विष्णोर्नाभिपद्माद्योगनिद्रामुपेयुषः ।
आविर्बभूव भगवान् ब्रह्मा लोकपितामहः ॥२३॥

आत्मानमेकमालोक्य तत्रैव सलिले विधिः ।
स्थितं पुष्करपर्णेपि परमाश्चर्यसंयुतः ॥२४॥

आत्मानमेव मेने स स्वयंभुवमनीश्वरम् ।
आविरासीत्तदा तत्र श्रीकृष्णः कूर्मरूपधृक् ॥२५॥

श्रीकूर्ममुपसर्पन्तं विलोक्य चतुराननः ।
तत्प्रभावमविज्ञाय पप्रच्छ प्रेमपूर्वकम् ॥२६॥

*22-26.* இவ்வாறு இருபத்துநான்கு தத்துவங்களையும் படைத்து அவைகளின் ஆத்மாவாக இருக்கும் பகவான் உலகமயமான விராட் புருஷவடிவத்தைத் தரித்தான். அந்த விஷ்ணுவின் நாபிகமலத்திலிருந்து ப்ரும்மதேவன் உண்டானார். அவர் எங்கும் ப்ரளய ஜலத்தையும், அதில் ஒரு தாமரையையும் அதில் தன்னையும் கண்டு, நாராயணனைக் காணாமல் தன்னையே முதன்முதலாக உண்டான ஈச்வரனாகக் கருதினார். அப்பொழுது க்ருஷ்ண பரமாத்மா ஒரு கூர்மவடிவம் தாங்கி அவருடைய எதிரில் வந்தார். அந்த ஆதிகூர்மத்தைப் பார்த்து ப்ரும்ம தேவன் கேட்டார்.

**ब्रह्मोवाच**

को भवानिह संप्राप्तः प्रलयैकमहार्णवे ।
स्वयंभुवो महेशस्य निर्भयं मम सन्निधिम् ॥२७॥

**ப்ரும்மா**

*27.* இந்த ப்ரளயஜலத்தில் ப்ரும்மதேவனான என் எதிரில் பயமில்லாமல் வந்த நீ யார்?

**श्रीभगवानुवाच**

अहं सर्वेश्वरो विष्णुः सर्वलोकैककारणः ।
मया सृष्टोसि कृपया त्वमद्य चतुरानन ॥२८॥

**ஸ்ரீபகவான்**

*28.* நான்தான் இவ்வுலகிற்குக் காரணமான சர்வேஸ்வரனான விஷ்ணு. ஹே ப்ரும்மதேவனே! நீ என்னால் படைக்கப்பட்டவன்.

**ब्रह्मोवाच**

अल्पमात्रप्रमाणस्त्वमहं तु चतुराननः ।
अजानन् मत्प्रभावं त्वमेवं जल्पसि गौरवात् ॥२९॥

**ப்ரும்மா**

*29. நீ சிறுவடிவம் உடையவனாய் இருக்கிறாய். நானோ நான்குமுகம் உடையவனாய் இருக்கிறேன். என் மகிமை அறியாமல் உன்னைப் புகழ்ந்து கொள்கிறாயே, இது தகுமா?*

**श्रीभगवानुवाच**

अद्यैव पश्य मे रूपमप्रमेयं महाद्भुतम् ।
अवज्ञां मा कुरु ब्रह्मन् कूर्मरूपोसि लीलया ॥३०॥

**ஸ்ரீபகவான்**

*30. அற்புதமானதும், அளவிடமுடியாததுமான எனது ரூபத்தை இப்பொழுதே பார்! என்னை அலட்சியம் செய்யாதே. விளையாட்டாகக் கூர்ம ரூபத்தில் வந்தேன்.*

**श्रीसद्गुरुरुवाच**

इत्युक्त्वा भगवान् कृष्णो विश्वरूपोऽभवत्तदा ।
सहस्रबाहुवदनः सहस्राक्षः सहस्रपात् ॥३१॥

सद्यश्चतुर्मुखो देवो भीतभीतः प्रणम्य च ।
बद्धाञ्जलिपुटः कृष्णं तुष्टाव श्रुतिवाक्यतः ॥३२॥

**ஸ்ரீஸத்குரு**

*31-32. இவ்வாறு சொல்லி பகவான் க்ருஷ்ணன் ஆயிரம் முகம்உடையதும், ஆயிரக்கணக்கான கண்கள் உடையதும், ஆயிரக்கணக்கான பாதங்கள் உடையதுமான விச்வரூபத்தை*

தரித்துக்கொண்டு நின்றார். அதைக்கண்ட ப்ரும்மதேவன் பயமடைந்து கைகூப்பி வணங்கித் துதிக்கலானார்.

**ब्रह्मोवाच**

नमस्ते जगदीशाय नमस्ते सर्वसाक्षिणे ।
नमस्ते विश्वरूपाय विश्वम्भर नमोस्तु ते ॥३३॥

त्वमेव जगतां नाथस्त्वमेवासि पिता मम ।
अपराधं न गणयन् प्रसीद पुरुषोत्तम ॥३४॥

अव्यक्तं व्यक्तिमापन्नं जानामि त्वां जगत्पतिम् ।
अप्रमेयप्रभावोसि ब्रह्मणापि मया प्रभो ॥३५॥

नारायण नमस्तेस्तु नवनीरदसन्निभ ।
शरणं भव मे स्वामिन् शङ्खचक्रगदाधर ॥३६॥

दासोऽहं किङ्करोऽहं ते सेवकोऽहं जनार्दन ।
आज्ञापय कृपासिन्धो यत्कर्तव्यं मया विभो ॥३७॥

**ப்ரும்மா**

33-37. ஜகதீச! சர்வசாட்சியான உமக்கு வந்தனம், விச்வம்பர! விச்வரூபனான உமக்கு வந்தனம். புருஷோத்தமா! நீரே உலகங்களுக்கு நாதன். நீரே எனக்கும் தந்தை. எனது குற்றங்களைப் பாராமல் அருள் செய்வீராக! நாமரூபமற்ற நீர் எனக்கு அருள் செய்யவேண்டி நாமரூபத்துடன் வந்ததாய் அறிந்தேன். உன் மகிமையை ப்ரும்மதேவனாகிய என்னால் கூட அறியமுடியவில்லை. நீலமேகச்யாமளா! நாராயணா! உமக்கு நமஸ்காரம். சங்கசக்ரகதாதர! ஸ்வாமி! நீரே சரணம். ஜனார்த்தனா! நான் தங்கள் அடிமை. நான் செய்ய வேண்டியதை ஆக்ஞாபிப்பீராக!

### श्रीभगवानुवाच

अभयं ते चतुर्वक्त्र मदंशोसि महामते ।
प्रकाशय जगत्सर्वं त्वमस्मात्प्रलयार्णवात् ॥३८॥

### ஶ்ரீபகவான்

38. நான்முகனே!நீ எனது அம்சமாய் தோன்றியவன். உனக்கு அபயம்! உலகத்தைப் படைப்பாயாக!

### ब्रह्मोवाच

नाहं जानामि सृष्टिञ्च संहारञ्च जगत्प्रभो ।
किञ्चिज्ज्ञोहं जडमतिः सर्वज्ञोसि त्वमेव हि ॥३९॥

### ப்ரும்மா

39. ப்ரபுவே! படைக்கின்ற முறையை நான் அறியேன். நான் அல்பஅறிவு உடையவன். நீரே எல்லாம் அறிந்தவர்.

### श्रीभगवानुवाच

भवान्निमित्तमात्रं हि प्रविश्य त्वां प्रजापते ।
सृजामि सकलं लोकं यशः प्राप्नुहि निर्मलम् ॥४०॥

### ஶ்ரீபகவான்

40. ப்ரும்மதேவ! உன்னைக் காரணமாகக்கொண்டு உமக்குள் இருந்து உலகம் யாவையும் நானே படைப்பேன். ஆனால் புகழை நீ அடைவாயாக!

### श्रीसद्गुरुरुवाच

इत्युक्त्वा भगवान् कृष्णो वासुदेवश्चतुर्भुजः ।
ब्रह्मणो हृदयं प्राप चिकीर्षल्लोकसङ्ग्रहम् ॥४१॥

तस्य प्रवेशमात्रेण कृष्णस्य परमात्मनः ।
स्वाभाविको ब्रह्मणस्तु नाशं प्राप रजोगुणः ॥४२॥

श्रीकृष्णचरणध्याननिर्मलेनैव चेतसा ।
सद्य एव जगत्सृष्टिं कर्तुं ब्रह्मोपचक्रमे ॥४३॥

एवं वदति च व्यक्तं तैत्तिरीयारुणश्रुतिः ।
यत्र कूर्मावतारोऽयं कीर्तितः परमात्मनः ॥४४॥

चरितं कूर्मरूपस्य ब्रह्मणो यः पठेन्नरः ।
स प्राप्नोति हरौ भक्तिं डम्भाहङ्कारवर्जितः ॥४५॥

ஸ்ரீஸத்குரு

*41-45.* இவ்வாறு சொல்லி க்ருஷ்ணபரமாத்மா ப்ரும்ம தேவனின் ஹ்ருதயத்தில் பிரவேசித்தார். உடனே ப்ரும்ம தேவனும் தனது ரஜோகுணம் நீங்கப்பெற்று சித்தசுத்தியை அடைந்து க்ருஷ்ணசரணத்தை த்யானம் செய்துகொண்டு உலகைப் படைக்கலானார். இவ்வாறு கூர்மாவதாரக் கதையை வேதம் சொல்லுகிறது. எவன் இதைப் படிப்பானோ அவன் ஜம்பம், அஹங்காரம் முதலியவை நீங்கப்பெற்று ஹரிபக்தியை அடைவான்.

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुणा विरचिते श्रीबृन्दावनमाहात्म्ये सृष्टिकाण्डे कूर्मावतारचरित्रं नाम प्रथमोऽध्यायः॥१॥*

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமி ஸ்வாமிகள் அருளிச்செய்த ஸ்ரீப்ருந்தாவனமாஹாத்ம்யம் ஸ்ருஷ்டிகாண்டத்தில் கூர்மாவதாரக்கதை என்னும் முதல் அத்தியாயம் முற்றும்**

# अथ द्वितीयोऽध्यायः

# இரண்டாம் அத்தியாயம்

## श्रीसद्गुरुरुवाच

आद्यस्य कल्पकालस्य वैचित्र्यं वर्णितं परम् ।
पाद्मं कल्पं प्रवक्ष्यामि शृणुध्वमिह साधवः ॥ १॥

भगवद्ध्यानपूतेन मनसा सत्त्वमाश्रितः ।
सनकादीन् ससर्जादौ लोकनाथः प्रजापतिः ॥ २॥

तान् विलोक्य विधाता च कुमारान् कनकप्रभान् ।
आदिदेश जगत्स्रष्टुं ज्ञानवैराग्यसंयुतान् ॥ ३॥

मोक्षधर्मप्रियाः सर्वे कुमाराः सनकादयः ।
बद्धाञ्जलिपुटाः प्रोचुः प्रणम्य पितरं विधिम् ॥ ४॥

## ஸ்ரீஸத்குரு

1-4. ஹே ஸாதுக்களே! உங்களுக்கு ஆதிகல்பகாலத்தின் பேதம் வர்ணிக்கப்பட்டது. இப்பொழுது பாத்மகல்பத்தைச் சொல்லுவேன். கேட்பீர்களாக! நாராயணனிடமிருந்து படைப்புத்தொழிலை ஏற்றுக்கொண்ட பிரும்மதேவன் முதன்முதலில் **ஸனகர், ஸனாதனர், ஸனந்தனர், ஸனத்குமாரர்** என்கிற இந்த நால்வரைப் படைத்து இதற்கு மேல் உலகைப் படைக்கும்படி அவர்களுக்கு உத்தரவிட்டார். மோக்ஷதர்மத்தில் விருப்பமுடைய அவர்கள் பிரம்மதேவனிடம் வணக்கத்துடன் விண்ணப்பித்துக் கொண்டார்கள்.

### कुमारा ऊचुः

अनाद्यविद्यया ब्रह्मन् विमुग्धा जीवकोटयः ।
स्वकर्मणैव संसारे भ्रमन्ति खलु दुस्तरे ॥ ५॥

त्वमस्मान् पुनरेवापि प्रवृत्त्यै चोदयस्यहो ।
निवृत्तिमार्गमाश्रित्य समुत्थाय भवार्णवात् ॥ ६॥

अद्यैव प्राप्तुमिच्छामस्तद्विष्णोः परमं पदम् ।
अनुज्ञां देहि कृपया सर्वज्ञोसि चतुर्मुख ॥ ७॥

### குமாரர்கள்

*5-7. பிரும்மதேவா! மாயையில் மோஹித்துக்கிடக்கும் ஜீவர்கள் தனது பூர்வகர்மத்திற்கு ஏற்றபடி இந்த கரைகாண முடியாத ஸம்ஸாரத்தில் சுழலுகிறார்களன்றோ! அப்படியிருக்க எங்களை மேலும் ப்ரவிருத்திமார்க்கத்திலேயே ஏன் தூண்டுகின்றீர்கள்? நாங்கள் துறவறம் மேற்கொண்டு ஸம்ஸாரக் கடலிலிருந்து கரையேறி விஷ்ணுபதத்தை அடைய விரும்புகிறோம். கருணை செய்து விடைதருவீராக.*

### श्रीसद्गुरुरुवाच

इत्युक्तो वेदगर्भश्च दृष्ट्वा तेषां दृढां मतिम् ।
उवाच कृपया देवः पुत्रान् सत्त्वगुणोद्भवान् ॥ ८॥

### ஸ்ரீ ஸத்குரு

*8. இவ்வாறு கேட்டதும் பிரும்மதேவன் ஸத்வகுணத்துடன் தோன்றிய குழந்தைகளான அவர்களுடைய திடபுத்தியைக் கண்டு கருணையுடன் சொன்னார்.*

### ब्रह्मोवाच

अप्रमेयं परं ब्रह्म निर्विकारं निरञ्जनम् ।

तत्कल्पयन्ति बहुधा ब्रह्मणा बुद्धिपूर्वकम् ॥ ९॥

एकं सन्तं तमीशानं नानाभावेन सम्युताः ।
भजन्ति बहवो लोके न तत्तत्त्वं विदन्ति ते ॥१०॥

एवं वदति वेदोपि साक्षान्नारायणात्मकः ।
अनुभूतिं विना ज्ञानमनर्थायैव केवलम् ॥११॥

तस्माद्भजध्वं कृष्णाख्यं परं ब्रह्म मुनीश्वराः ।
इमं पञ्चाक्षरं मन्त्रं जपन्तो दृढनिष்ठया ॥१२॥

हरिः शरणमित्येतन्मधुरं नामकीर्तनम् ।
कुर्वन्तः परया भक्त्या भजध्वं पुरुषोत्तमम् ॥१३॥

**ப்ரும்மா**

*9-13. நாமரூபங்களைக் கடந்த அந்த பரமாத்மாவை உபாஸனைக்காக வேண்டி வைதிகர்கள் பலவிதமாகக் கற்பனை செய்கின்றனர். உண்மையில் ஒரே பரமாத்மாவை அக்ஞானத்தினால் பலவிதமாய் பேதபுத்தியுடன் வழிபடுகின்றனர் என்று வேதம் சொல்லுகிறது. அனுபூதியில்லாத படிப்பு வீணாகிறது. எனவே நீங்கள் க்ருஷ்ணபரமாத்மாவை உபாஸனை செய்யுங்கள். **ஹரி:சரணம்** என்கிற இந்தப் பஞ்சாக்ஷர மந்திரத்தை ஜபம் செய்துகொண்டு புருஷோத்தமனிடம் பக்தி செய்யுங்கள்.*

**श्रीसद्गुरुरुवाच**

इत्युक्ता वेदगर्भेण कुमाराः सनकादयः ।
समुद्रतीरमागत्य तपश्चक्रुर्दृढव्रताः ॥१४॥

तपसा सुप्रसन्नोपि गोविन्दः पुरुषोत्तमः ।
आगत्य हंसरूपेण प्रददौ दर्शनं तदा ॥१५॥

शुद्धस्फटिकसङ्काशं हंसराजं विलोक्य ते ।
तमेव परमात्मानं जानन्तस्तुष्टुवुर्हरिम् ॥१६॥

ஸ்ரீஸத்குரு

*14-16.* இவ்வாறு பிரும்மா சொன்னதும் ஸனகர் முதலிய குமாரர்கள் ஸமுத்ரதீரத்திற்கு வந்து தவம் செய்தனர். புருஷோத்தமனாகிய கோவிந்தன் அவர்களுடைய தவத்தினால் மகிழ்ச்சியடைந்து அன்னபக்ஷிரூபத்தில் வந்து தரிசனம் தந்தான். வெள்ளைவெளேரென்ற ஹம்ஸபக்ஷியாய் வந்த பரமாத்மாவைக் கண்ட குமாரர்கள் நால்வரும் துதிக்க லானார்கள்.

*कुमारा ऊचुः*

नमस्ते हंसरूपाय नमस्ते सर्वसाक्षिणे ।
प्रयच्छ निर्मलं ज्ञानमविद्यां नाशय प्रभो ॥१७॥

त्वमेवासि परं ब्रह्म त्वमेव प्रकृतेः परः ।
तवैव कृपया देव जानीमस्त्वां सुरेश्वरम् ॥१८॥

अन्यथा मोहनिद्रायाः प्रत्युत्थानं न विद्यते ।
तवैव कृपया नृणां सत्त्वशुद्धिः प्रजायते ॥१९॥

देवदेवाय कृष्णाय वासुदेवाय योगिने ।
ब्रह्मणे हंसरूपाय नमो वाकमधीमहि ॥२०॥

त्वमेव जगतां नाथस्त्वमेवासि जगद्गुरुः ।
तथा परमहंसानां ज्ञानमोक्षप्रदो भवान् ॥२१॥

### குமாரர்கள்

17-21. ஹம்ஸரூபத்தில் வந்த ஸர்வஸாக்ஷியான உமக்கு நமஸ்காரம். பிரபுவே! எங்களுக்கு அக்ஞானத்தை நீக்கி ஞானத்தைத் தருவீராக. மாயைக்கு அப்பாற்பட்ட நீரே பரமாத்மா. உமது திருவருளாலேயே உம்மைப் புரிந்து கொண்டோம். அக்ஞானமாகிய தூக்கத்திலிருந்து எழுந்து கொள்வதற்கு உமது கருணையைத்தவிர வேறு வழியில்லை. தேவதேவா! க்ருஷ்ணா! வாஸுதேவா! யோகீச்வர! ஹம்ஸரூபியான பரமாத்மாவான உமக்கு நமோ நம : என்று சொல்லுகிறோம். நீரே ஜகன்னாதன். நீரே ஜகத்குரு. நீரே துறவிகளுக்கு ஞானத்தையும் மோக்ஷத்தையும் தருபவர்.

### श्रीसद्गुरुरुवाच

एवं स्तुतो जगन्नाथो मुनिभिः सनकादिभिः ।
उवाच कृपया वाक्यं सर्वतत्त्वार्थसङ्ग्रहम् ॥२२॥

### ஸ்ரீஸத்குரு

22. ஸனகாதி முனிவர்களால் இவ்வாறு துதிக்கப்பட்ட ஜகன்னாதன் கருணையுடன் ஞானோபதேசம் செய்தார்.

### श्रीभगवानुवाच

अहमेवास्मि तत्त्वेन नेह नानास्ति किञ्चन ।
मयैव संभृतं सर्वं पश्यत ज्ञानचक्षुषा ॥२३॥

अणोरणीयान्महतो महीयानहमेव हि ।
सर्वत्र व्याप्य तिष्ठामि जगदेतच्चराचरम् ॥ २४॥

आत्मानात्मविचारेण प्राकृतात्तत्त्वसङ्ग्रहात् ।
विमुक्तः परमं तत्त्वमात्मानमवलोकयेत् ॥ २५॥

पश्यन्नेवात्मनात्मानं सर्वकारणकारणम् ।
प्राप्नुयाद्भक्तियोगेन तद्विष्णोः परमं पदम् ॥२६ ।

**ஸ்ரீபகவான்**

23-26. உண்மையில் நான் ஒருவனே சத்தியமான பொருள். என்னைத்தவிர வேறு ஏதுமில்லை. இதுவெல்லாம் என்னாலேயே வஹிக்கப்படுகிறது என்பதை ஞானக்கண்ணால் பாருங்கள். அணுவிற்கணுவாய், பெரிதிற்குப் பெரிதாய் நானே சராசரம் யாவையும் வியாபித்து நிற்கிறேன். எது ஆத்மா, எது ஆத்மா அல்லாதது என்று விசாரித்து இந்த மாயையிலிருந்து விடுபட்டுப் பரமாத்மாவைக் காணவேண்டும். பக்தி யோகத்தினால் மூலகாரணமான பரமாத்மாவைக் கண்டவன் பரமபதத்தை அடைகிறான்.

**श्रीसद्गुरुरुवाच**

इत्युक्त्वा देवदेवोपि तत्रैवान्तर्दधे हरिः ।
आश्चर्यं परमं प्रापुः कुमारा ब्रह्मचारिणः ॥२७॥

जीवन्मुक्ताः कुमारास्ते सन्ततं पञ्चहायनाः ।
महाभागवताः सिद्धा जरामरणवर्जिताः ॥२८॥

नामसङ्कीर्तनपराः कथामात्रैकजीवनाः ।
सर्वलोकहितायैव सञ्चरन्ति मुनीश्वराः ॥२९॥

अव्याहतेष्ठमार्गाश्च योगिनश्चोर्ध्वरेतसः ।

भक्तानाञ्च मुमुक्षूणां तत्त्वमार्गप्रदर्शकाः ॥३०॥

गुरवो नारदस्यापि शिष्या हंसस्वरूपिणः ।
चरन्ति कृपया लोके लीलाविग्रहधारिणः ॥३१॥

हंसाख्यानमिदं भक्त्या यः पठेच्छृणुयादपि ।
प्राप्नोति चित्तनैर्मल्यं तथा दर्शनमात्मनः ॥३२॥

ஸ்ரீஸத்குரு

*27-32.* இவ்வாறு சொல்லி தேவதேவனான ஹரி மறைந்தார். குமாரர்கள் ஆச்சரியமடைந்தனர். அந்தக் குமாரர்கள் ஜீவன்முக்தர்கள். எப்பொழுதும் ஐந்து வயது மாறாதவர்கள். மூப்பும் மரணமுமற்ற ஸித்தர்கள். ஹரிநாம கீர்த்தனமே செய்துகொண்டிருக்கும் மஹாபாகவதர்கள். அவர்கள் ஜீவித்திருப்பதற்கு ஹரிகதையொன்றே போதும். அந்த முனிவர்கள் உலகில் யாவருக்கும் நன்மை செய்யவேண்டி ஸஞ்சரிக்கின்றனர். அந்த யோகிகள் தடையின்றி எங்கும் செல்லக் கூடியவர்கள் அவர்கள் ஊர்த்வரேதஸுகள். மேலும் பக்தியை விரும்புகிறவர்களுக்கும், முக்தியை விரும்புகிறவர் களுக்கும் வழிகாட்டிகள். ஹம்ஸரூபியான பகவானுக்கு சிஷ்யர்கள். நாரதருக்கும் குருவானவர்கள். இத்தகைய ஸனகாதிகள் விளையாட்டாக ரூபங்களைத் தரித்து இவ்வுலகில் ஸஞ்சரிக்கின்றனர். இந்த ஹம்ஸாவதாரக் கதையைப் படிப்பவனும், கேட்பவனும் சித்தசுத்தியையும், ஆத்ம தரிசனத்தையும் பெறுவான்.

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये सृष्टिकाण्डे सनकादिसृष्टिर्नाम द्वितीयोऽध्याय॥ २॥*

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமி ஸ்வாமிகள் அருளிச்செய்த ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்ம்யம் ஸ்ருஷ்டிகாண்டத்தில் இரண்டாவது அத்தியாயம் முற்றும்.**

# अथ तृतीयोऽध्यायः

## மூன்றாம் அத்தியாயம்

### श्रीसद्गुरुरुवाच

ततश्चतुर्मुखो देवः सृष्टिकर्मविलम्बितः ।
दुःसहं कोपमासाद्य तमोगुणयुतोऽभवत् ॥ १॥

आविरासीत्तदा तस्य भ्रूमध्यात्परमेश्वरः ।
ब्रह्मन् मे नाम देहीति रुरोद च स बालकः ॥२॥

नाम्ना रुद्र इति ख्यातो भव त्वमिति सान्त्वयन् ।
जगत्सृष्टिं विधातुं तमादिदेश प्रजापतिः ॥३॥

तमोगुणपरो देवो भूतप्रेतगणान् बहून् ।
ससर्ज योगशक्त्यैव घोरान् रुद्रगणानपि ॥४॥

ईदृशीं रुद्रसृष्टिं तां विलोक्य कमलासनः ।
प्राप दुःखं परं धाता महादेवमथाब्रवीत् ॥५॥

### ब्रह्मोवाच

जगन्नाशकरान् घोरानिमान् रुद्रगणान् शिव ।
त्वया सृष्टान् विलोक्यापि प्रीतिर्भवति मे न हि ॥६॥

### ஸ்ரீஸத்குரு

*1-6.* பிரும்மதேவன் ச்ருஷ்டி செய்வதில் தாமதம் ஏற்பட்டதால் கோபமடைந்தார். அப்பொழுது அவருடைய

புருவத்தின் நடுவிலிருந்து ஒரு குழந்தை தோன்றி தனக்கு பெயர் வைக்கும்படி அழுதான். ரோதனம் செய்ததால் ருத்ரன் என்று சொல்லப்படுவாய், என்று பெயர் சூட்டி அந்த ருத்ரனை உலகைப் படைக்கும்படி உத்தரவிட்டார். தமோகுணமுடைய ருத்ரனோ பூதங்களைப் படைக்கவே, மனம் வருந்திய ப்ரும்ம தேவன், உலகை நாசம் செய்யக்கூடிய இத்தகைய கோரமான பூதங்களைப் படைக்கவேண்டாமென்று தடுத்து விட்டார். அதைக் கேட்ட ருத்ரன் ப்ரும்மாவைப் பார்த்து சொன்னார்.

**रुद्र उवाच**

तमोगुणविमूढोऽहं सृष्टितत्त्वं न वेद्म्यहम् ।
त्वमेवासि जगन्नाथः पाप्मानं मे प्रणाशय ॥ ७॥

**ருத்ரன்**

7. தமோகுணத்தில் மோஹித்த எனக்கு உலகைப் படைக்கின்றமுறை தெரியவில்லை. நீர் லோகநாதனா யிருப்பதால் எனது தமோகுணத்தைப் போக்குவீராக.

**ब्रह्मोवाच**

हरिरेव परो देवस्तमेव शरणं भज ।
यस्य कारुण्यलेशेन त्वहमस्मि प्रजापतिः ॥८॥

स हि सर्वसुराध्यक्षः शुद्धसत्त्वगुणान्वितः ।
भजतस्ते तमीशान विनङ्क्ष्यति तमोगुणः ॥९॥

कैलासशिखरं गच्छ तवालं सृष्टिकर्मणा ।
भगवद्ध्यानयोगेन पाप्मानं ते प्रणाशय ॥१०॥

**ப்ரும்மா**

8-10. ஹரியே பரதெய்வம். அவருடைய கருணையால்தான் நான்

லோகநாதனாய் இருக்கிறேன். அவரையே சரணமடைவாய். அவர் சுத்தஸத்வகுணமுடையவர். அவரை பஜிப்பதால் உனது தமோகுணம் நீங்கும். நீ படைத்தது போதும். கைலாஸத்திற்குச் சென்று பகவானைத் தியானம் செய்து தமோகுணத்தைப் போக்கிக்கொள்.

### श्रीसद्गुरुरुवाच

इत्युक्तो भगवान् रुद्रः सृष्टिकर्म विसृज्य च ।
संप्राप्य शैलराजेन्द्रं तपश्चक्रे यथाविधि ॥११॥

घोरेण तपसा तस्य सुप्रसन्नः श्रियःपतिः ।
आविरासीत्कृपासिन्धुः शङ्खचक्रगदाधरः ॥१२॥

नीलमेघश्यामलाङ्गो भगवान् गरुडासनः ।
पुण्डरीकविशालाक्षः श्रीधरः पुरुषोत्तमः ॥१३॥

तं विलोक्य जगन्नाथं सर्वसद्गुणसम्युतम् ।
तुष्टाव प्रणतश्चापि भगवान् वृषभध्वजः ॥ १४॥

### ஸ்ரீஸத்குரு

*11-14. இவ்வாறு சொல்லப்பட்ட ருத்ரன் கைலாஸம் சென்று தவமியற்றினார். பகவானும் சங்குசக்ரகதாதரனாய், நீலமேகஸ்யாமளனாய், கருடவாஹனத்தில் காட்சி கொடுத்தார். சிவபெருமானும் வணங்கித் துதித்தார்.*

### रुद्र उवाच

नमस्ते सर्वलोकेश भूयो भूयो नमोस्तु ते ।
मायातीतो गुणातीतो निर्विकारस्त्वमेव हि ॥१५॥

प्रकृतेः पुरुषस्यापि त्वमेवासि नियामकः ।
व्यक्ताव्यक्तस्वरूपस्त्वं पाप्मानं मे प्रणाशय ॥१६॥

कर्म कर्मफलं चापि प्रधानं पुरुषस्तथा ।
सकलं त्वदधीनं हि पाप्मानं मे प्रणाशय ॥१७॥

चराचरमिदं सर्वं प्रविश्य निजमायया ।
विश्वरूपधरोसि त्वं पाप्मानं मे प्रणाशय ॥१८॥

रजसस्तमसश्चापि परस्तात् परमं पदम् ।
शुद्धसत्त्वगुणोसि त्वं पाप्मानं मे प्रणाशय ॥१९॥

अप्राकृते तु गोलोके परमे व्योम्नि संस्थितः
नित्यं लीलां करोषि त्वं पाप्मानं मे प्रणाशय ॥२०॥

तथैव हंसरूपं त्वां मुनयः सनकादयः ।
भजन्ति मोक्षलाभाय पाप्मानं मे प्रणाशय ॥२१॥

त्वमेवासि जगत्कर्ता ब्रह्मणापि समर्चितः ।
स्वयंप्रकाशरूपस्त्वं पाप्मानं मे प्रणाशय ॥२२॥

त्वयि सत्त्वं त्वयि ज्ञानं त्वयि कैवल्यमच्युत ।
सर्वभूतशरण्यस्त्वं पाप्मानं मे प्रणाशय ॥२३॥

**ருத்ரன்**

*15-23. ஸர்வலோகேச்வர! உமக்கு வந்தனம். நீர் மாயையைக் கடந்தவர். மாறுபாடற்றவர். ஜீவகோடிகளை*

நியமிப்பவரும் நீரே. அருவமாயும் உருவத்துடனும் இருப்பவர் நீரே. மாயை, ஜீவன், கர்மம், கர்மபலன் இது யாவும் உமக்கு அதீனமாயிருக்கிறது. எங்கும் வியாபித்து விச்வரூபனாயிருக்கிறீர். ரஜோகுணமும், தமோகுணமும் அற்ற சுத்தஸத்வ குணமுடையவர் நீரே. மாயைக்கு அப்பாற்பட்ட சிதாகாசத்திலுள்ள கோலோகத்தில் எப்பொழுதும் விளையாடுகின்றீர். ஹம்ஸாவதாரம் செய்த உம்மை ஸனகாதிகள் முக்தியை நாடி பஜிக்கின்றனர். நீரே உலகத்தைப் படைத்தவர். உம்மை ப்ரும்மாவும் வழிபடுகிறார். சுயம்ப்ரகாசவடிவமுடையவர் நீரே. ஸத்வகுணமும் ஞானமும் கைவல்யமும் உம்மிடமிருந்தே உண்டாகிறது. அச்சுத! நீரே சரணம். எனது தமோகுணத்தைப் போக்குவீராக.

### श्रीसद्गुरुरुवाच

एवं स्तुतो जगन्नाथः शम्भुना भक्तिपूर्वकम् ।
उवाच मधुरं वाक्यं जगन्मङ्गलविग्रहः ॥२४॥

### ஸ்ரீஸத்குரு

24. சிவனால் இவ்வாறு துதிக்கப்பட்ட மங்களமூர்த்தியான ஜகன்னாதன் மதுரமாய்ச் சொன்னான்.

### श्रीभगवानुवाच

प्रसन्नोस्मि स्तवेनाहं विहितेन त्वया शिव ।
स प्राप्नोति परं ज्ञानं यः पठेद्भक्तिपूर्वकम् ॥२५॥

अहमेव त्वमीशान त्वमेवाहं महेश्वर ।
आवयोरणुभेदोपि वस्तुतो नैव विद्यते ॥२६॥

आवां भेदेन पश्यन्ति विमूढाः पामराः नराः ।

अहं वसामि सततं हृदये तव शङ्कर ॥२७॥

दुस्तरा मम मायैषा नैव त्वां मोहयिष्यति ।
तमोगुणस्वरूपोऽयं पाप्मा चारोपितस्त्वयि ॥२८॥

जगत्सृष्टिं करोत्वेष वेदगर्भो मदात्मकः ।
तथा त्वमपि संहर्तुं जगत्सृष्टोसि मत्परः ॥२९॥

**ஸ்ரீபகவான்**

*25-29. சிவ! பக்தியுடன் செய்த உனது துதியினால் பிரஸன்னமானேன். இந்த ஸ்தோத்திரத்தை தினமும் படிப்பவன் ஞானத்தை அடைவான். மஹேச்வர! நானும் நீரும் ஒன்றல்லவா! நம்மிருவருக்கும் எள்ளளவும் பேதம் கிடையாது. நம்மை பேதபுத்தியுடன் பார்ப்பவர்கள் மூடர்கள். சங்கர! நான் உனது ஹிருதயத்தில் எப்பொழுதும் வஸிக்கிறேன். எனது மாயை உம்மை மயக்காது. உம்முடைய தமோகுணம் உம்மிடம் ஆரோபிக்கப்பட்டதேயன்றி உண்மையாக இல்லை. எனது மற்றொரு ரூபமாகிய ப்ரும்மா உலகைப் படைக்கட்டும். என்னை பரமாகக் கொண்ட நீர் உலகை ஸம்ஹாரம் செய்வீராக.*

**श्रीसद्गुरुरुवाच**

इत्युक्त्वा पुण्डरीकाक्षस्तत्रैवान्तर्दधे हरिः ।
शमयन् स्वकटाक्षेण शङ्करस्य तमोगुणम् ॥३०॥

एवं वदति च व्यक्तमाद्या शतपथश्रुतिः ।
यत्र प्रोक्ता रुद्रसृष्टिः सर्वपापविनाशिनी ॥३१॥

यः पठेदिदमाख्यानं शिवेनापि कृतं स्तवम् ।
सर्वपापविशुद्धात्मा स प्राप्नोति परं पदम् ॥ ३२॥

ஸ்ரீஸத்குரு

30-32. இவ்வாறு சொல்லி தாமரைக் கண்ணன் தனது கடாக்ஷத்தால் சிவனின் தமோகுணத்தைப் போக்கிவிட்டு மறைந்தார். இவ்வாறு வேதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இதைப் படிப்பவன் எல்லா பாபங்களிலிருந்தும் விடுபட்டு பரமபதத்தை அடைவான்.

इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये सृष्टिकाण्डे रुद्रसृष्टिर्नाम तृतियोऽध्यायः।। ३।।

இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமி ஸ்வாமிகள் அருளிச்செய்த ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்ம்யம் ஸ்ருஷ்டிகாண்டத்தில் மூன்றாம் அத்தியாயம் முற்றும்.

## अथ चतुर्थोऽध्यायः

## நான்காவது அத்தியாயம்

### श्रीसद्गुरुरुवाच

विष्णोः पन्नगपर्यङ्के योगनिद्रामुपेयुषः ।
वामदक्षिणकर्णाभ्यामाविर्भूतौ महासुरौ ।।१।।

मेघदुन्दुभिघोषेण सर्वलोकभयङ्करौ ।
कृष्णौ रक्ताम्बरधरौ विरूपाक्षौ महाबलौ ।।२।।

हेमाङ्गदधरौ धीरौ महावीरौ महोदरौ ।
ताम्रवर्णश्मश्रुमुखौ क्रूरवृत्तौ गदाधरौ ।।३।।

जातमात्रौ हि तौ वेदानपहृत्य महाबलौ ।
समुद्रमध्ये प्रच्छन्नौ तत्र स्वच्छन्दमूषतुः ।।४।।

एवं वेदेषु नष्टेषु ब्रह्मा लोकपितामहः ।
नितरां शोकमापन्नस्तुष्टाव जगतीपतिम् ॥५॥

ஸ்ரீஸத்குரு

1-5. சேஷசயனத்தில் விஷ்ணு யோகநித்திரை செய்யும் போது அவருடைய காதுகளிலிருந்து மது, கைடபன் என்கின்ற இரண்டு அஸுரர்கள் உண்டானார்கள். இடி முழக்கம் போன்ற குரலுடையவர்களும், பயங்கரமானவர்களும், கறுப்பான உருவமுடையவர்களும், சிவப்பான ஆடையணிந்தவர்களும், பொன்மயமான ஆபரணங்கள் அணிந்தவர்களும், மஹாபலம் பொருந்தியவர்களும், கதையைக் கையில் தாங்கியவர்களுமான அவர்கள் வேதத்தைத் திருடிக்கொண்டுபோய் கடலில் ஒளித்துவைத்துவிட்டு சுதந்திரமாய் மறைந்து வாழ்ந்தார்கள். இவ்வாறு வேதம் நஷ்டமானதும் ப்ரும்மா மனம் வருந்தி ஜகன்னாதனைத் துதித்தார்.

ब्रह्मोवाच

श्रियःपते नमस्तुभ्यं पाहि मां भक्तवत्सल ।
वेदवेद्य जगन्नाथ वेदानुद्धर माधव ॥६॥

शङ्खचक्रगदापाणे सर्वलोकेश्वरेश्वर ।
शाङ्र्गपाणे नमस्तुभ्यं शरणं भव केशव ॥७॥

आद्यं पुरुषमीशानमच्युतं प्रकृतेः परम् ।
निर्गुणञ्च निराकारं निर्मलं त्वां नमाम्यहम् ॥८॥

त्वमेव यज्ञरूपश्च यज्ञाराध्यस्त्वमेव हि ।
त्वमेव यज्ञफलदो यज्ञेशं त्वां नमाम्यहम् ॥९॥

ब्राह्मणाः सामगा नित्यं गायन्ति त्वां महेश्वरम् ।
सर्ववेदान्तवेद्योसि वेदानुद्धर केशव ॥१०॥

निष्किञ्चनानां विप्राणां त्वमेव परमं धनम् ।
वेदेनैव विदन्ति त्वां वेदोद्धारक ते नमः ॥११॥

श्रुतिर्भगवती साक्षाद्भवन्तमनुगच्छति
त्वमपि ब्राह्मणान्नित्यं वेदज्ञाननुगच्छसि ॥१२॥

नारायण नमस्तेस्तु वासुदेव जनार्दन ।
देवदेव जगन्नाथ कमलाक्ष नमोस्तु ते ॥१३॥

पुण्यश्लोक नमस्तुभ्यं पुराणपुरुषोत्तम ।
भुवनेश्वर गोविन्द वेदानुद्धर माधव ॥१४॥

*6-14. லக்ஷ்மீநாத! பக்தவத்ஸல! வேதவேத்ய! ஜகன்னாத! மாதவ! வேதங்களைக் கரையேற்றவேண்டும். சங்கசக்ரகதாதர! ஸர்வலோகேச்வர! சாரங்கபாணியே! கேசவ! நீரே சரணம். மாயைக்கு அப்பாற்பட்ட ஈச்வரனும், ஆதிபுருஷனும், குணமற்றவனும், ரூபமற்றவனும், குற்றமற்றவனுமாகிய உம்மை வணங்குகிறேன். யாகமும், யாகத்தில் ஆராதிக்கப்படுபவனும், யாகத்திற்கு ஈசனும், யாகத்தின் பலனைத் தருபவனுமாகிய உம்மை வணங்குகிறேன். உம்மையே பிராம்மணர்கள் ஸாமவேதத்தினால் பாடுகிறார்கள். உபநிஷதங்களில் அறியப் படுபவனும் நீயே. ஏழைகளான ஸாதுக்களுக்கு நீரே செல்வம். வேதம் உம்மையே பின்தொடர்கிறது. நீரோ வைதிகர்களைப் பின்தொடருகிறீர். நாராயண! வாஸுதேவா! ஜனார்த்தன! தேவதேவ! ஜகன்னாத! கமலாக்ஷ! புண்யச்லோக! புராண புருஷோத்தம! புவனேச்வர! கோவிந்தா! மாதவ! உமக்கு வந்தனம். வேதங்களைக் கரையேற்றுவீராக.*

### श्रीसद्गुरुरुवाच

एवं सङ्कीर्तितो विष्णुर्ब्रह्मणा परमेष्ठिना ।
जगतः परमो धाता भगवान् भक्तवत्सलः ॥१५॥

आविरासीत्तदा तत्र शङ्खचक्रगदाधरः ।
अतसीपुष्पसङ्काशो दिव्यपीताम्बरावृतः ॥१६॥

पुण्डरीकविशालाक्षः पुराणपुरुषोत्तमः ।
मेघगम्भीरया वाचा वेदगर्भमुवाच सः ॥१७॥

### ஸ்ரீஸத்குரு

*15-17.* ப்ரும்மாவினால் இவ்வாறு துதிக்கப்பட்ட பக்தவத்ஸலனான பகவான் காயாம்பூவண்ணனாய், பீதாம்பர தாரியாய், சங்கசக்ரகதாதரனாய்த் தோன்றி ப்ரும்மதேவனைப் பார்த்து சொன்னார்.

### श्रीभगवानुवाच

अभयं ते चतुर्वक्त्र प्रसन्नोस्मि स्तवेन ते ।
वेदानुद्धर्तुमिच्छामि मत्स्यरूपेण संप्रति ॥१८॥

भद्रं भवतु लोकेभ्यो भवान् भवतु विज्वरः ।
जानीहि मम चक्रेण निहतौ मधुकैटभौ ॥१९॥

### ஸ்ரீபகவான்

*18-19.* நான்முகனே! உனக்கு அபயம். உனது துதியைக் கேட்டு மகிழ்ந்தேன். மத்ஸ்யாவதாரம் செய்து வேதங்களைக் காப்பாற்றுவேன். மது கைடபர்களை எனது சக்ரத்தால் நாசம் செய்வேன். நீ வருந்தாதே உலகிற்கு மங்களம் உண்டாகட்டும்.

## श्रीसद्गुरुरुवाच

इत्युक्त्वा पुण्डरीकाक्षस्तत्रैवान्तर्दधे हरिः ।
अप्राकृतं मत्स्यरूपं दधार निजमायया ॥२०॥

हयग्रीवावतारेण निहत्य मधुकैटभौ ।
वेदानपालयत्तूर्णं मत्स्यरूपेण माधवः ॥२१॥

पुनः संप्राप्य निगमान् धाता पूर्णमनोरथः
भक्त्या संपूजयामास हयग्रीवं जनार्दनम् ॥२२॥

हयग्रीव हयग्रीव हयग्रीवेति यो जपेत् ।
जानाति कृपया विष्णोः साङ्गं वेदचतुष्टयम् ॥२३॥

## ஸ்ரீஸத்குரு

*20-23.* இவ்வாறு சொல்லி தாமரைக்கண்ணன் தனது மாயையினால் மத்ஸ்யரூபத்தைத் தாங்கி வேதங்களைக் கரையேற்றினான். ஹயக்ரீவனாய் அவதரித்து மதுகைடபர்களை வதம் செய்தான். வேதத்தைத் திரும்பிப் பெற்ற ப்ரும்மா ஹயக்ரீவமூர்த்தியைப் பூஜித்தார். ஹயக்ரீவமூர்த்தியின் திருநாமத்தை ஜபிப்பவன் அவருடைய திருவருளால் நான்கு வேதங்களையும் அறிவான்.

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये सृष्टिकाण्डे मत्स्यावतारचरित्रं नाम चतुर्थोऽध्यायः ॥४॥*

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமி ஸ்வாமிகள் அருளிச்செய்த ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்ம்யம் ஸ்ருஷ்டிகாண்டத்தில் நான்காம் அத்தியாயம் முற்றும்.**

# अथ पञ्चमोऽध्यायः

## ஐந்தாவது அத்யாயம்

### श्रीसद्गुरुरुवाच

ततो हिरण्यगर्भश्च मिथुनञ्च ससर्ज ह ।
स्वायंभुवं मनुञ्चापि शतरूपाञ्च कन्यकाम् ॥१॥

तौ दम्पती विधातारमूचतुर्भक्तिपूर्वकम् ।
किञ्च कर्तव्यमावाभ्यां तदिह प्रोच्यतामिति ॥ २॥

### ஸ்ரீஸத்குரு

*1-2. அதற்குப்பிறகு ப்ரும்மதேவன் சதரூபை மனு என்கிற ஒரு தம்பதியைப் படைத்தார். அவர்கள் நான்முகனை வணங்கி நாங்கள் என்ன செய்யவேண்டும் என்று கேட்டனர்.*

### ब्रह्मोवाच

मरीचिप्रमुखाः पुत्र मया सृष्टाश्च पूर्वजाः ।
ब्रह्मधर्मं पालयन्तु सृजन्तः परमाः प्रजाः ॥३॥

रक्ष त्वं क्षत्रधर्मेण भुवनञ्च यथा तथा
धर्मो हि परमो लोके सर्वमङ्गलदायकः ॥४॥

### ப்ரும்மா

*3-4. மரீசிமுதலிய முனிவர்கள் ப்ராம்மணதர்மத்தைப் பரிபாலிக்கட்டும். நீ க்ஷத்ரிய தர்மத்தைக் கடைபிடித்து உலகை ரக்ஷிப்பாய். ஏனெனில் தர்மந்தான் உலகத்தில் மங்களத்தைத் தரும்.*

### मनुरुवाच

एवमस्तु चतुर्वक्त्र करिष्ये धर्मपालनम् ।

कर्मभूमिरियं सर्वा निमग्ना प्रलयार्णवे ॥५॥

तामुद्धर महाबुद्धे समर्थोऽसि जगत्पते ।
यस्यां सुनिहितं नृणां पुरुषार्थचतुष्टयम् ॥६॥

மனு

5-6. நான்முகனே! அப்படியே செய்கிறேன். ஆனால் இந்த கர்மபூமி பிரளயஜலத்தில் மூழ்கிக் கிடப்பதால் அதைத் தூக்கி நிறுத்தவேண்டும். ஏனென்றால் பூமியே தர்மங்களைச் செய்து அதன் பலனைப் பெறுவதற்குத் தகுந்த இடம்.

श्रीसद्गुरुरुवाच

मनोर्वचनमाकर्ण्य परमेष्ठी प्रजापतिः ।
चिन्तामवाप सहसा पृथिव्युद्धारणं स्मरन् ॥७॥

समाहितेन मनसा कुंभकञ्च विधाय सः ।
भावयामास सानन्दं हृदयस्थं जनार्दनम् ॥८॥

ध्यानावसाने तत्प्राणो रेचकेन विनिःसृतः ।
तदैव तस्य नासाग्रादाविरासीज्जनार्दनः ॥९॥

वराहरूपो भगवान् ववृधे गिरिकूटवत् ।
चचार च महाकाशे कुर्वन् घर्घरितध्वनिम् ॥१०॥

तत्प्रभावमविज्ञाय शङ्कामाप प्रजापतिः ।
किमेतदद्भुतं सत्त्वमिति पुत्रैः समावृतः ॥११॥

तदा सर्वेश्वरो विष्णुर्ब्रह्मादीनाञ्च दुर्लभः ।

दधार धरणिं देवः पुष्करं गजराडिव ॥१२॥

माहात्म्यं तस्य तद्दृष्ट्वा पुत्रैः सह चतुर्मुखः ।
तुष्टाव प्रणतश्चापि श्रद्धया विहिताञ्जलिः ॥१३॥

ஸ்ரீஸத்குரு

*7-13.* மனுவின் வசனத்தைக் கேட்ட ப்ரும்மதேவன் ப்ராணாயாமம் செய்து ஹிருதயத்திலுள்ள பகவானைத் தியானம் செய்தார். தியானம் முடிந்ததும் அவருடைய மூச்சுக் காற்றின் வழியாக பகவான் வராஹரூப்த்தில் வெளிவந்தான். அவருடைய கர்ஜனையைக் கேட்ட ப்ரும்மதேவனும், மரீசி முதலியவர்களும் ஆச்சர்யமான இந்த உருவம் என்னவென்று ஸந்தேகத்தை அடைந்தனர். அப்பொழுது ஸர்வேச்வரனான விஷ்ணு, துதிக்கையால் யானை தாமரைப்பூவைத் தூக்குவதுபோல் இந்த பூமியைத் தூக்கினார். அதைக் கண்டு நான்முகன் கைகுவித்து வணங்கித் துதித்தார்.

ब्रह्मोवाच

नमो यज्ञवराहाय विष्णवे परमात्मने ।
उद्धर्तुमवतीर्णाय कर्मभूमिं स्वदंष्ट्रया ॥१४॥

वेदवेद्योसि गोविन्द सर्वलोकनमस्कृत ।
यज्ञस्वरूपं त्वां वेत्तुं पामरः शक्नुयात्कथम् ॥१५॥

सर्वकर्मसमाराध्य सर्वकर्मफलप्रद ।
सर्वेश्वर नमस्तुभ्यं साक्षी त्वं सर्वकर्मणाम् ॥१६॥

नमस्ते यज्ञरूपाय यज्ञोद्धारक ते नमः ।
प्रजापतीनां सर्वेषां प्रथमोऽसि प्रजापतिः ॥१७॥

उद्धृता पृथिवी देव सर्वप्राणिसमुद्भवा ।
त्वामेव पतिमिच्छन्ती वृणुते त्वां श्रियःपते ॥१८॥

ப்ருஹ்மா

14-18. பரமாத்மாவே! விஷ்ணுவே! இந்த கர்மபூமியைத் தூக்குவதற்கு அவதரித்த யக்ஞவராஹமூர்த்தியான உமக்கு நமஸ்காரம். கோவிந்த! வேதத்தாலேயே அறியத்தக்க உமது யக்ஞரூபத்தை ஒரு பாமரன் எப்படி அறிய முடியும்! ஸர்வேச்வர! எல்லா கர்மங்களாலும் ஆராதிக்கப்படுபவனும், எல்லா கர்மங்களுக்கும் பலனைத் தருபவனும், எல்லா கர்மங்களுக்கும் ஸாக்ஷியாய் இருப்பவனும் நீரே! யக்ஞரூபனே! யக்ஞத்தை ரக்ஷிப்பவனே! உமக்கு வந்தனம். தலைவர்கள் யாவருக்கும் முதல் தலைவன் நீரே. லக்ஷ்மீநாத! எல்லா ப்ராணிகளையும் பெறக்கூடிய இந்த பூதேவி உம்மையே பதியாக விரும்பி வரிக்கிறாள்.

श्रीसद्गुरुरुवाच

एतस्मिन्नन्तरे भूमिर्बद्धाञ्जलिपुटा स्वयम् ।
प्रेमगद्गदया वाचा चकार स्तोत्रमुत्तमम् ॥१९॥

ஸ்ரீஸத்குரு

19. இதற்கிடையில் பூதேவி கைகுவித்து வணங்கி தழுதழுத்த குரலுடன் துதி செய்தாள்.

भूमिरुवाच

यस्मात् पतिव्रता कन्या त्वयैवास्मि समुद्धृता ।
तस्मादेव जगन्नाथ भव मे प्राणवल्लभ ॥२०॥

इतःपरं न स्पृशामि त्वां विना पुरुषान्तरम् ।

त्वयैव पुरुषश्रेष्ठ यदस्मि परिरक्षिता ॥२१॥

का स्त्री पुरुषसारज्ञा पतिसंयोगकाङ्क्षिणी ।
सन्त्यजेत्पुरुषश्रेष्ठं त्वामेवं स्वयमागतम् ॥२२॥

एवं विचार्य सा देवी साक्षाल्लक्ष्मीश्च भार्गवी ।
तपसा बहुना लेभे त्वामेव प्राणवल्लभम् ॥२३॥

सापत्नदोषो न भवेदावयोः पुरुषोत्तम ।
वक्षःस्थलस्थिता लक्ष्मीर्यतो निःस्वार्थचेष्टिता ॥२४॥

### பூமிதேவி

*20-24.* ஜகன்னாத! நன்னடத்தையுடைய கன்னிகையான என்னை நீரே தொட்டுத் தூக்கியதால் நீரே எனக்கு ப்ராணநாதன். புருஷோத்தம! உம்மால் ரக்ஷிக்கப்பட்ட நான் இனி வேறு புருஷனை விரும்ப மாட்டேன். பதியை அடைய விரும்பும் எந்த கன்னிகைதான் தானே தேடிவந்த புருஷோத்தமனான உன்னை விடுவாள்? இவ்வாறு ஆலோசித்துத்தான் லக்ஷ்மிதேவியும் உம்மையே ப்ராண நாதனாய் அடைந்தாள். எங்கள் இருவருக்கும் பொறாமை உண்டாகாது. ஏனெனில் லக்ஷ்மிதேவி சுயநலமற்றவள்.

### श्रीसद्गुरुरुवाच

इत्युक्तो देवदेवश्च पृथिव्या ब्रह्मणापि च ।
सुप्रसन्नोऽभवद्विष्णुर्ब्रह्मरुद्रादिसेवितः ॥२५॥

उपयेमे च तां देवीं मेदिनीं पुरुषोत्तमः ।
श्रिया भूम्या च संयुक्तश्चक्रे गार्हस्थ्यमुत्तमम् ॥२६॥

इति यज्ञवराहस्य चरितं कल्मषापहम् ।
तैत्तिरीययजुर्वेदे कीर्तयन्ति द्विजोत्तमाः ॥२७॥

ஸ்ரீஸத்குரு

25-27. இவ்வாறு பிரும்மதேவனாலும், பூதேவியாலும் துதிக்கப்பட்ட தேவதேவனான விஷ்ணு ப்ரஸன்னமானார். பூமிதேவியையும் திருக்கல்யாணம் செய்துகொண்டு ஸ்ரீதேவியுடனும் பூதேவியுடனும் இல்லறம் நடத்தினார். இந்த வராஹ மூர்த்தியின் சரிதம் வேதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये सृष्टिकाण्डे वराहावतारचरित्रं नाम पञ्चमोऽध्यायः॥५॥*

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமி ஸ்வாமிகள் அருளிச்செய்த ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்ம்யம் ஸ்ருஷ்டிகாண்டத்தில் ஐந்தாவது அத்தியாயம் முற்றும்.**

# अथ षष्ठोऽध्यायः

## ஆறாவது அத்யாயம்

### श्रीसद्गुरुरुवाच

एकदा ब्रह्मणः पुत्रा महान्तः सनकादयः ।
इतस्ततः सञ्चरन्तश्चाजग्मुः कलशाम्बुधिम् ॥१॥

रुद्रस्याप्यग्रजाः सिद्धा बालकाः पञ्चहायनाः ।
हरिःशरणमित्येव कीर्तयन्तश्च सन्ततम् ॥२॥

दिगम्बरा दिव्यरूपाः सकलामरपूजिताः ।
दिदृक्षया श्रीपतेस्तु विविशुर्विष्णुमन्दिरम् ॥३॥

**ஸ்ரீஸத்குரு**

*1-3.* ஒருஸமயம் ப்ரும்மாவின் புத்ரர்களும், ருத்ரனின் மூத்தவர்களும், ஹரியே சரணமென்று கீர்த்தனம் செய்பவர் களும், ஐந்து வயது இளமை மாறாதவர்களும், தேவர்களாலும் பூஜிக்கத்தக்கவர்களுமான ஸனகர், ஸனாதனர், ஸனந்தனர், ஸனத்குமாரர் என்ற நால்வரும் பகவானை தரிசனம் செய்ய வேண்டி வைகுண்டம் வந்தனர்.

तान् दृष्ट्वा बालरूपांश्च कृष्णदर्शनकौतुकात् ।
अपृष्ट्वैव प्रविशतो द्वारपौ तौ न्यषेधताम् ॥४॥

अशपन् कुपिताः सद्यस्ताभ्यां भग्नमनोरथाः ।
महात्मानो महात्मानौ कृष्णसङ्कल्पचोदिताः ॥५॥

*4-5.* பகவானை தரிசனம் செய்வதில் குதூஹலத்தினால் கேட்காமலேயே உள்ளே செல்லும் பாலரூபத்திலுள்ள அந்த முனிவர்களை ஜயன் விஜயன் என்கிற த்வாரபாலகர்கள் தடுத்துவிட்டார்கள். தங்கள் விருப்பம் நிறைவேறாமல் கோபமடைந்த அந்த மஹான்கள் பகவானின் ஸங்கல்பத்தி னால் தூண்டப்பட்டவர்களாய் சபித்து விட்டார்கள்.

**सनकादय ऊचुः**

कृपानिधेर्भगवतः सर्वात्मसमदर्शिनः ।
युवां तु द्वारपालत्वं नार्हतो भेददर्शिनौ ॥६॥

तस्मादेवासुरत्वञ्च प्राप्नुतं सुरसत्तमौ ।
युक्तमेवासुरत्वं हि युवयोरतिवृत्तयोः ॥७॥

### ஸனகாதிகள்

*6-7.* யாவரையும் ஸமமாகப் பார்க்கும் கருணாநிதியான பகவானின் ஸன்னதியில் காவல் காப்பதற்கு பேதபுத்தியுடைய நீங்கள் தகுதியற்றவர்கள். எனவே அஸுரஜன்மத்தை அடைவீர்களாக.

### श्रीसद्गुरुरुवाच

इत्युक्त्वा सनकाद्यास्तु जयं विजयमेव च ।
सहसा विस्मयं प्रापुः स्मृत्वा कोपस्य कारणम् ॥८॥

तदा कृतापराधौ तौ वैकुण्ठद्वारपालकौ ।
भयेन संभ्रमं सद्यः प्रापतुः सुरसत्तमौ ॥९॥

### ஸ்ரீஸத்குரு

*8-9.* இவ்வாறு ஸனகாதிகள் ஜய விஜயர்களை சபித்து விட்டு தங்களுக்கு ஏன் கோபம் வந்தது என்று ஆச்சர்யப் பட்டார்கள். குற்றம் செய்த த்வாரபாலகர்களும் பயத்தையும், பரபரப்பையும் அடைந்தார்கள்.

स्वयं सर्वज्ञभावेन विज्ञाय भगवान् हरिः ।
आविरासीत्तदा तत्र रमया गरुडेन च ॥१०॥

ध्येयं परमहंसानां चारयन् स्वपदाम्बुजम् ।
करपद्मस्थितं पद्मं लीलया चालयन् हरिः ॥११॥

शङ्खचक्रधरः श्रीमान् दिव्यपीताम्बरावृतः ।
विशालफालसंशोभिकस्तूरीतिलकाञ्चितः ॥१२॥

वैनतेयांसविन्यस्तहस्तशोभितकङ्कणः ।

श्रीवत्सलक्षणो विष्णुः कौस्तुभामुक्तकन्धरः ॥१३॥

समन्तात् सेवितो भृत्यैश्छत्रचामरपाणिभिः ।
अपारकरुणासिन्धुर्मन्दहासमुखाम्बुजः ॥१४॥

*10-14.* எல்லாவற்றையும் அறிந்த பகவான் லக்ஷ்மி தேவியுடனும், கருடனுடனும் அங்கு தோன்றி சங்க சக்ர தாரியாய், பீதாம்பரம் உடுத்தியவனாய், விசாலமான நெற்றியில் கஸ்தூரி திலகமணிந்தவனாய், திருவடிகளில் தண்டைகளும், கைகளில் கங்கணமும், கழுத்தில் கௌஸ்துபமும், மார்பில் ஸ்ரீவத்ஸமும் உடையவனாய், மந்தஹாஸம் தவழும் கமல முகமுடையவனாய், வெண்குடை, சாமரம் இவைகளைத் தாங்கும் பார்ஷதர்களுடனும் அங்கு தோன்றினார்.

तं दृष्ट्वा द्वारपौ तौ च सनकाद्याश्च ते तथा ।
लज्जयाऽवाङ्मुखास्तस्थुः स्मृत्वा कोपमकारणम् ॥१५॥

तदा सर्वेश्वरो विष्णुः स्वयमूचे मुनीश्वरान् ।
हस्ताभ्यामञ्जलिं कृत्वा सान्त्वयन्नीश्वरोपि सः ॥१६॥

*15-16.* பகவானைக் கண்ட ஜய விஜயர்களும், ஸனகாதி களும் கைகுவித்து நின்றனர். அப்பொழுது விஷ்ணு ஸர்வேச்வர னாய் இருந்தபோதிலும் முனிவர்களை கைகுவித்து வணங்கி வரவேற்றுப் பேசலானார்.

**श्रीभगवानुवाच**

क्षमध्वं मुनयः सर्वे चापराधं मदीययोः ।
भवदीयं च मां ह्येतौ न जानीतो महेश्वरम् ॥१७॥

युष्माकमेव साधूनां विधेयोऽहं न संशयः ।

यदुक्तं सत्यमेवा..तु सजयं विजयं प्रति ॥१८॥

एवं हि पूर्वमेवात्र भृगुर्नाम महामुनिः ।
परीक्षां मद्गुणस्यापि कर्तुकामो दृढव्रतः १९॥

पदा विव्याध मे वक्षः स्वच्छन्दं मुनिसत्तमः ।
मन्येहं परमं श्रेयस्तच्चापि मुनिना कृतम् ॥२०॥

ममापि तर्ज· शापं ताडनं क्षेपणञ्च वा ।
कर्तुमर्हन्ति त सत्यं साधवः स्वामिनो हि मे ॥२१॥

अत एवानुमन्येऽहमनयोः शापमीदृशम् ।
ममैव दत्तः शापोयमपराधः कृतो मया॥२२॥

**ஸ்ரீபகவான்**

*17-22. முனிவர்களே! எனது த்வாரபாலகர்களின் குற்றத்தை மன்னித்து விடுங்கள். இவர்கள் என்னைத் தங்கள் அடிமை என்று அறிந்து கொள்ளவில்லை. ஸாதுக்களான உங்களுக்கு நான் தாஸனல்லவா! எனவே நீங்கள் விடுத்த சாபம் உண்மையாகவே ஆகட்டும். இவ்வாறுதான் முன்னொருநாள் ப்ருகு என்கிற முனிவர் என்னை பரிக்ஷை செய்ய வேண்டி எனது மார்பில் உதைத்தார். அதை நான் பெரிய பாக்கியமாகக் கருதினேன். என்னை அடிப்பதற்கும், திட்டுவதற்கும் ஸாதுக்களுக்கு உரிமையுண்டு. ஏனெனில் ஸாதுக்களே என் தெய்வம். இப்பொழுது அபராதம் செய்தவனும் நானே. சாபம் கொடுத்தவனும் நானே.*

**श्रीसद्गुरुरुवाच**

एवमुक्तं भगवता श्रुत्वा तु सनकादयः ।
दुःखिताः स्वकृतेनैव तुष्टुवुः पुरुषोत्तमम् ॥२३॥

**ஸ்ரீஸத்குரு**

23. இவ்வாறு பகவானால் சொல்லப்பட்ட ஸனகாதிகள் தங்கள் செயலில் வருத்தமடைந்து புருஷோத்தமனை துதித்தார்கள்.

**सनकादय ऊचुः**

भगवन् करुणासिन्धो क्षमायास्तव केशव ।
पारं न विद्मो गोविन्द वृथा तस्मात् क्षमापनम् ॥२४॥
अस्माकं कृतपापानां त्वं वृथा श्लाघसे गुणान् ।
एवं हि सात्त्विकत्वं ते स्वयमेव प्रकाशते ॥२५॥
अस्माकं सत्यकामानां वाक्यं सत्यं भवेत्तथा ।
भृत्ययोरनयोश्चापि कल्याणं स्यात्तथा कुरु ॥२६॥

**ஸனகாதிகள்**

24-26. கருணைக்கடலே! பகவானே! கேசவ! கோவிந்த! உமது பொறுமைக்கு எல்லையே இல்லை. குற்றம் செய்த எங்களை வீணாகக் கொண்டாடுகின்றீர். இதனாலேயே நீர் ஸத்வகுணமுடையவர் என்று தெரிகிறது. ஸத்யத்தை விரும்பும் எங்களுடைய வாக்கு பொய் போகக்கூடாது. த்வாரபாலகர்களும் க்ஷேமத்தை அடையவேண்டும். அப்படிச் செய்வீராக.

**श्रीभगवानुवाच**

युष्माभिर्विहितव्यं हि सद्भिः स्वच्छन्दवर्तिभिः ।
अविरोधेन तत्सर्वमनुमन्ये तथैव तत् ॥२७॥

**ஸ்ரீபகவான்**

27. ஸாதுக்களே! சுதந்திரமாய் நடக்கும் நீங்களே

அப்படி இரண்டிற்கும் விரோதமில்லாமல் நியமிக்கலாம். நான் அதை அனுமதிப்பேன்.

### सनकादय ऊचुः

जन्मत्रयावधिं कुर्मः शापस्यास्य श्रियःपते ।
तत्रापि रक्षितव्यौ तौ त्वयैव करुणानिधे ॥२८॥

### ஸனகாதிகள்

28. கருணாநிதியே! லக்ஷ்மீநாத! இவர்களுடைய சாபத்தை மூன்று பிறவிகள்மட்டும் என்று எல்லை வைக்கிறோம். அந்த மூன்று பிறவிகளிலும் தாங்களே அவதரித்து இவர்களை ரக்ஷிக்கவேண்டும்.

### श्रीसद्गुरुरुवाच

इत्युक्तो भगवान् सद्यो भृत्यवात्सल्यकातरः ।
एवमस्त्विति संप्राह सान्त्वयामास तौ तथा ॥२९॥

### ஸ்ரீஸத்குரு

29. இவ்வாறு சொல்லப்பட்ட பகவான் பக்தர்களிடம் உள்ள வாத்ஸல்யத்தால் வருந்தி அப்படியே ஆகட்டுமென்று சொன்னார். ஜய விஜயர்களையும் ஸமாதானம் செய்தார்.

### श्रीभगवानुवाच

जय त्वं विजयेनापि भुवं गच्छ महामते ।
अहञ्चैवागमिष्यामि युवयोर्विरहाक्षमः ॥३०॥

नापराधो हि युष्मासु शमादिगुणशालिषु ।
अवतारान् कर्तुमिच्छन्नाचरं त्वहमेव हि ॥३१॥

ஸ்ரீபகவான்

30-31. ஜய விஜயர்களே! நீங்கள் பூலோகம் செல்லுங்கள். உங்கள் பிரிவாற்றாமையால் நானும் அங்கு வருவேன். அடக்கம் முதலிய நற்குணங்களுள்ள உங்கள்மேல் குற்றமேதுமில்லை. பல அவதாரங்களைச் செய்ய விரும்பி நானே இப்படிச் செய்தேன்.

श्रीसद्गुरुरुवाच

इत्युक्त्वान्तर्दधे सद्यो भगवान् गरुडासनः ।
तौ चापि दितिपुत्रत्वं प्रापतुर्भृत्यसत्तमौ ॥३२॥

सज्जनातिक्रमो नूनं नाशयत्युत्तमं पदम् ।
विष्णुपार्षदयोश्चापि किमुतान्यन्नृणामिह ॥३३॥

ஸ்ரீஸத்குரு

32-33. இவ்வாறு சொல்லி பகவான் மறைந்தான். த்வார பாலகர்களும் அசுரஜென்மத்தையடைந்தார்கள். ஸாதுக்களுக்கு அபசாரம் செய்தால் உத்தமபதவியை இழக்க நேரிடும். ஜய விஜயர்களுக்கே அப்படியானால் சாதாரண மனிதர்களைப் பற்றிக் கேட்பானேன்.

इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये सृष्टिकाण्डे प्रह्लादचरित्रे षष्ठोऽध्यायः॥६॥

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமி ஸ்வாமிகள் அருளிச்செய்த ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்ம்யம் ஸ்ருஷ்டிகாண்டத்தில் ஆறாம் அத்தியாயம் முற்றும்.**

# अथ सप्तमोऽध्यायः

## ஏழாவது அத்யாயம்

श्रीसद्गुरुरुवाच

एवं शप्तौ महात्मानौ पार्षदौ परमात्मनः ।

स्थानाद्भ्रष्टावभवतां दैत्यौ लोकभयङ्करौ ॥१॥

हिरण्यकशिपुर्ज्येष्ठो हिरण्याक्षोऽनुजस्तथा ।
उभौ महाबलौ वीरौ देवानां दुःखदायकौ ॥२॥

ஸ்ரீஸத்குரு

*1-2.* இவ்வாறு சபிக்கப்பட்ட பகவானின் த்வார பாலகர்கள் பரமபதத்திலிருந்து நழுவி மிகவும் பயங்கரமான அசுரர்களாகப் பிறந்தார்கள். அவர்களில் ஜயன் ஹிரண்யகசிபுவாகவும், விஜயன் ஹிரண்யாக்ஷனாகவும் அவதரித்து தேவர்களுக்கு துன்பம் தந்தார்கள்.

हिरण्याक्षो महाबाहुर्गदापाणिर्महाबलः ।
लोके दिग्विजयं कर्तुं विनिश्चित्य चचार सः ॥३॥

सर्वत्र विजयं लब्ध्वा जगाम वरुणं प्रभुम् ।
तेन संप्रेषितो विष्णुं विचिकाय ततस्ततः ॥४॥

विज्ञाय नारदमुखाद्विष्णोः स्थानं महाबलः ।
पातालमाजगामाशु वराहवपुषो हरेः ॥५॥

तं दृष्ट्वा सूकराकारमरण्यपशुरित्ययम् ।
परिहासं चकाराथ तं प्राह भगवान् हरिः ॥६॥

युष्मद्विधान् ग्रामसिह्मान् मृगयामि सुदुर्मते ।
आगच्छ मे दृष्टिपथं मृगोऽहं वनगोचरः ॥७॥

एवं तद्भगवद्वाक्यं श्रुत्वा दैत्यवरस्तदा ।
गदया ताडयामास वराहं धरणीपतिम् ॥८॥

महद्युद्धमभूत्तत्र हिरण्याक्षवराहयोः ।
अन्ते वराहो भगवानवधीत्तं महासुरम् ॥९॥

तुष्टुवुर्निर्जराः सर्वे वराहं पुरुषोत्तमम् ।
न्यवेदयंस्तद्वधञ्च दैत्या दैत्येन्द्रसन्निधौ ॥१०॥

3-10. ஹிரண்யாக்ஷன் கையில் கதையைத் தாங்கி திக்விஜயம் செய்யப்புறப்பட்டு, எங்கும் அமோகமான வெற்றியையே அடைந்து முடிவில் வருணனை அடையவே, வருணனும் விஷ்ணுவிடம் செல்லும்படி சொல்லியனுப்பி விட்டார். பிறகு விஷ்ணுஇருக்குமிடம் தெரியாமல் தேடி யலைந்து நாரதர்மூலமாய் பாதாளத்திலிருப்பதாக கேள்விப் பட்டு வராஹமூர்த்தியிடம் வந்து சேர்ந்தான். பகவானைக் கண்டதும் காட்டில் அலையும் பன்றியல்லவா நீ என்று கேலி செய்யவே, பகவானும் உன்னைப்போன்ற நாட்டில் அலையும் நாய்களைத் தேடிக் கொண்டிருக்கிறேன் என்று சொன்னார். அதைக் கேட்ட அசுரன் வெகுண்டு வராஹமூர்த்தியை கதையினால் அடித்தான். ஹிரண்யாக்ஷனுக்கும் வராஹ மூர்த்திக்கும் பெரிய யுத்தம் மூண்டது. முடிவில் வராஹ பகவான் அசுரனைக் கொன்று விட்டார். தேவர்கள் மகிழ்ச்சி யடைந்து வராஹமூர்த்தியைத் துதித்தனர். அசுரர்களும் ஹிரண்யாக்ஷன் கொல்லப்பட்டதை ஹிரண்யகசிபுவிடம் தெரிவித்தார்கள்.

अनुजस्य वधं श्रुत्वा हिरण्यकशिपुर्भृशम् ।
दुःखितः कुपितश्चापि जगर्ज सदसि प्रभुः ॥११॥

11. தம்பியின் வதத்தைக் கேட்ட ஹிரண்யகசிபு மிகவும் கோபமடைந்து கர்ஜனை செய்தான்.

**हिरण्यकशिपुरुवाच**

वधिष्यामि वराहं तं निहनिष्यामि निर्जरान् ।

करिष्यामि तपो घोरं हरिष्यामि दिवं ध्रुवम् ॥१२॥

तावद्यूयं दैत्यराज्यं सावधानं हि रक्षत ।
तपः कृत्वा वरांल्लब्ध्वा शीघ्रमैष्यामि मन्त्रिणः॥१३॥

**ஹிரண்யன்**

*12-13.* மந்திரிகளே! நான் கடினமான தவம் செய்யப் போகிறேன். அந்தப் பன்றியை வதம் செய்யப் போகிறேன். தேவர்களைக் கொன்று ஸ்வர்கத்தை கைப்பற்றப் போகிறேன். அதுவரை நமது ராஜ்யத்தை கவனித்துக்கொள்ளுங்கள்.

**श्रीसद्गुरुरुवाच**

इत्युक्त्वा रोषताम्राक्षो हिरण्यकशिपुः खलः ।
राज्यं मन्त्रिषु निक्षिप्य तपः कर्तुं जगाम सः ॥१४॥

महेन्द्रपर्वते घोरं तपश्चक्रे महासुरः ।
ददौ वर्षसहस्रान्ते स्वयंभूश्च स्वदर्शनम् ॥१५॥

वरं वृणीष्व भद्रं ते वरदोऽहमुपागतः ।
इत्युक्तो ब्रह्मणा दैत्यो वव्रेऽसौ दुर्लभान् वरान्॥१६॥

नान्तर्बहिर्न रात्रौ वा न दिने मरणं भवेत् ।
नोपर्यधो नामरैश्च न दैत्यैर्नायुधैरपि ॥१७॥

एवं वृतोपि दैत्येन भगवान् कमलासनः ।
बाढमित्याह लोकेशस्तपोबलवशीकृतः ॥१८॥

**ஸ்ரீஸத்குரு**

*14-18.* இவ்வாறு சொல்லி ஹிரண்யன் மந்திரிகளிடம்

ராஜ்யத்தை ஒப்படைத்துவிட்டு தவம் செய்யப் புறப்பட்டான். ஆயிரம் ஆண்டுகள் மஹேந்திரமலையில் தவம் செய்யவே ப்ருேம்மதேவன் காட்சிகொடுத்து, விரும்பிய வரனை வேண்டிக் கொள் என்றார். இதைக்கேட்ட அசுரன் எனக்கு உள்ளேயோ வெளியிலோ, இரவிலோ பகலிலோ, கீழோ மேலோ தேவர்களாலேயோ அசுரர்களாலேயோ மரணம் சம்பவிக்கக் கூடாது என்று கேட்டான். அவனது தவத்திற்கு வசமான ப்ரும்மா அப்படியே ஆகட்டுமென்றார்.

एवं लब्ध्वा वरान् दुष्टः पुनः प्राप्य निजं पदम् ।
चकार स्ववशं लोकं कृत्वा दिग्विजयं प्रभुः ॥१९॥

इन्द्रमग्निं यमञ्चैव वरुणं वायुमेव च ।
कुबेरं निखिलान् देवान् बन्दीकृत्य शशास सः॥२०॥

सिद्धाश्च मुनयो देवा गन्धर्वाः पितरो नराः ।
सर्वे लोका दुःखमापुर्दैत्यराजेन्द्रहिंसिताः ॥२१॥

19-21. இவ்வாறு விரும்பிய வரனைப் பெற்ற ஹிரண்யன் உலகம் யாவையும் கைவசப்படுத்திக்கொண்டான். இந்திரன், அக்னி, யமன், வருணன், வாயு, குபேரன்முதலிய தேவர்கள் யாவரையும் சிறையில் வைத்தான். சித்தர்கள், முனிவர்கள், தேவர்கள், கந்தர்வர்கள், பித்ருக்கள், மனிதர்கள்முதலிய யாவரும் அசுரனால் பீடிக்கப்பட்டு துன்பமடைந்தனர்.

बहुवर्षसहस्रान्ते देवाश्च मुनिभिः सह ।
गत्वा क्षीराम्बुधिं भक्त्या तुष्टुवुः पुरुषोत्तमम् ॥२२॥

न्यवेदयन् विष्णवे ते स्वदुःखं मुनयः सुराः ।
दैत्यराजं नाशयेति प्रार्थयामासुरच्युतम् ॥२३॥

प्रह्लादे मम भक्तेऽयमपराधं करिष्यति ।
वधिष्यामि तदैवाहमित्याह भगवान् हरिः ॥२४॥

देवास्तेपि दिवं जग्मुः प्रीतेन मनसा तथा ।
प्रतीक्षमाणा दैत्येन्द्रवधमिष्टं दिने दिने ॥२५॥

22-25. இவ்வாறு பல்லாயிரம் ஆண்டுகள் சென்றதும் தேவர்களும், முனிவர்களும் திருப்பாற்கடல் சென்று பகவானைத் துதித்து, அசுரனை அடக்கவேண்டுமென்று வேண்டிக்கொண்டனர். எனது பக்தனான ப்ரஹ்லாதனுக்கு அபராதம் செய்யும்போது அவனை வதம் செய்வேன் என்று பகவான் சொன்னார். முனிவர்களும், தேவர்களும் ப்ரீதி அடைந்து திரும்பி இருப்பிடம் சென்றார்கள். அசுரனின் வதத்தை ஆவலுடன் தினந்தோறும் எதிர்பார்த்திருந்தார்கள்.

हिरण्यकशिपोः पुत्रः प्रह्लादो वैष्णवोत्तमः ।
सर्वसद्गुणसंपन्नः प्रेमभक्तिमतां वरः ॥२६॥

तत्प्रभावमविज्ञाय हिरण्यकशिपुः सुतम् ।
बालैः साकं गुरुकुलं प्रेषयामास बालकम् ॥२७॥

26-27. ஹிரண்யகசிபுவின் மகனான ப்ரஹ்லாதன் எல்லா நற்குணங்களும் பொருந்தியவனாகவும், பகவானிடம் ப்ரேமபக்தியுடையவனாகவும், வைஷ்ணவோத்தமனாகவும் இருந்தான். அவனது மஹிமையை அறியாத ஹிரண்யன் மற்ற சிறுவர்களுடன் கூட்டி பாடசாலைக்கு அனுப்பி வைத்தான்.

इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये सृष्टिकाण्डे प्रह्लादचरित्रे सप्तमोऽध्यायः ॥७॥

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமி ஸ்வாமிகள் அருளிச்செய்த ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்ம்யம் ஸ்ருஷ்டிகாண்டத்தில் ஏழாவது அத்தியாயம் முற்றும்.**

# अथाष्टमोऽध्यायः

## எட்டாவது அத்யாயம்

### श्रीसद्गुरुरुवाच

प्रह्लादं भगवद्भक्तमाजन्मज्ञानिनं सुतम् ।
पाठयामास दैत्येन्द्रो बालकैरितरैः सह ॥१॥

त्रिवर्गविषयान् पाठान् पठित्वापि सतां वरः ।
असार इति मेनेऽसौ हरिभक्तिरसोत्सुकः ॥२॥

कदाचिद्दानवेन्द्रस्तु प्रह्लादं वैष्णवोत्तमम्।
अङ्के निधाय सप्रेम पप्रच्छात्मजमादरात् ॥३॥

ஸ்ரீஸத்குரு

*1-3. பிறவியிலிருந்தே பகவத்பக்தனான ஞானியான ப்ரஹ்லாதனை ஹிரண்யன் மற்ற சிறுவர்களுடன் படிக்க வைத்தான். ஹரிபக்திரஸத்தை அறிந்த ப்ரஹ்லாதனோ அந்த லோகாயதமான பாடங்களை ஸாரமற்றதெனக் கருதினான். ஒரு நாள் ஹிரண்யன் குழந்தையான ப்ரஹ்லாதனை மடியில் வைத்துக்கொண்டு அன்புடனும், ஆதரவுடனும் கேட்டான்.*

### हिरण्यकशिपुरुवाच

सारमुद्धृत्य मे ब्रूहि श्रोतुमिच्छामि बालक ।
त्वया गुरुकुलं प्राप्य शास्त्रेषु पठितेष्विह ॥४॥

ஹிரண்யன்

*4. குழந்தாய்! பாடசாலை சென்றதுமுதல் நீ படித்த பாடங்களுக்குள் ஸாரமானதை எனக்குச் சொல்.*

### प्रह्लाद उवाच

आलोड्य सर्वशास्त्राणि विचार्य च पुनः पुनः ।

इदमेकं सुनिष्पन्नं ध्येयो नारायणः सदा ॥५॥

धर्मार्थकाममोक्षाणां साधनं परमोत्तमम् ।
एकमेव महाराज सुलभं हरिकीर्तनम् ॥६॥

एवं सति वृथा शास्त्रपठनं पाठनं तथा ।
हरिप्रसादमात्रेण सर्वार्थानाप्नुयान्नरः ॥७॥

**ப்ரஹ்லாதன்**

*5-7. தந்தையே! எல்லா சாஸ்திரங்களையும் பலமுறை பரிசீலனை செய்ததில் நாராயணத்யானமே ஸாரமான விஷயமென்று அறிந்தேன். அரசே! அறம், பொருள், இன்பம், வீடு இவைகளைப்பெற ஹரிகீர்த்தனமே சுலபமான ஸாதனம். ஹரியின் கிருபையால் எதையும் பெறலாமென்றால் வீணாய் பாடங்களைப் படிப்பது ஏனோ?*

**श्रीसद्गुरुरुवाच**

इत्युक्तवन्तं प्रह्लादं विलोक्य कुपितो नृपः ।
उपाध्यायं प्राह बालो भवता साधु शिक्ष्यताम् ॥८॥

मन्ये मूर्खा वैष्णवास्तु मयि द्वेषपरायणाः ।
एवं हि पाठयामासुर्मम बालं न संशयः ॥९॥

तान् वैष्णवान् विचार्याशु मामुपेत्य सुदुर्मतीन् ।
निवेदयत तान्नूनं प्रहरिष्यामि वञ्चकान् ॥१०॥

इत्युक्त्वा प्रेषयामास प्रह्लादं सपुरोहितम् ।
पाठशालां स दैत्येन्द्रो हिरण्यकशिपुर्महान् ॥११॥

ஸ்ரீஸத்குரு

8-11. இதைக் கேட்ட ஹிரண்யன் கோபமடைந்து உபாத்தியாயர்களைப் பார்த்து பாலகனை நல்லமுறையில் பழக்குங்கள். மூர்க்கர்களான வைஷ்ணவர்கள் என்னிடம் துவேஷமுள்ளவர்கள். அவர்கள்தான் என்னுடைய மகனுக்கு இத்தகைய பாடத்தைக் கற்பித்துவிட்டு மறைமுகமாயிருக்கிறார் கள். அந்த வஞ்சகர்களைக் கண்டுபிடித்துச் சொன்னால் அவர்களை நிச்சயமாய் தண்டிப்பேன் என்று சொல்லி ப்ரஹ்லாதனையும், உபாத்யாயரையும் பாடசாலைக்கு அனுப்பினான்.

ततस्तं वैष्णवं बालं पप्रच्छ स पुरोहितः ।
केनोपदिष्टं ते ब्रूहि हरिनामेति सादरम् ॥१२॥

स्वभावतो मम मनः श्रीनाथे रमते द्विज ।
न वेद्मि कारणं तत्र यथाऽयश्चुम्बके तथा ॥१३॥

एवं वदन्तं प्रह्लादं निर्भत्स्य बहुधा द्विजः ।
तं गुरुं तन्मुखाद्वेत्तुं न शशाक स देशिकः ॥१४॥

अथाचिरेण कालेन पुत्रमाहूय दैत्यराट् ।
पप्रच्छ मधुरं प्रेम्णा सारं ब्रूहि सुतेति सः ॥१५॥

12-15. பிறகு அந்த உபாத்தியாயர் ப்ரஹ்லாதனைப் பார்த்து, உனக்கு ஹரிநாமத்தை உபதேசித்தது யார் என்று கேட்டார். அதற்கு ப்ரஹ்லாதன் என் உள்ளத்தை இயற்கையா கவே பகவான் கொள்ளை கொண்டான். அதற்குக் காரணம் தெரியவில்லை என்றான். இவ்வாறு சொன்ன ப்ரஹ்லாதனை உபாத்தியாயர் பலவிதமாய் அதட்டினார். அவனோ தனது குருவான நாரதரைக் காட்டிக் கொடுக்கவில்லை. பிறகு கொஞ்ச

நாளில் ஹிரண்யன் ப்ரஹ்லாதனை அழைத்து முன்புபோலவே ஸாரமான பாடத்தைச் சொல்லும்படிக் கேட்டான்.

### प्रह्लाद उवाच

सारो हि सर्वशास्त्राणां हरिभक्तिर्न संशयः ।
विचार्य पूर्वमेवोक्ता किं पुनः पृच्छ्यते नृप ॥१६॥

सा भक्तिर्द्विविधा प्रोक्ता साध्यसाधनरूपिणी ।
श्रवणं कीर्तनं विष्णोः स्मरणं पूजनं तथा ॥१७॥

कैङ्कर्यं वन्दनञ्चापि प्रेमभक्त्यास्तु साधनम् ।
साध्या तु परमाभक्तिर्बाष्परोमाञ्चलक्षणा ॥१८॥

प्रेमरूपा यतो विष्णुं भक्तः साक्षात्करोति हि ।
भक्त्याः परतरं सारं शास्त्रेषु न हि वेद्म्यहम् ॥१९॥

**ப்ரஹ்லாதன்**

*16-19.* அரசே! எல்லா சாஸ்திரங்களிலும் ஹரிபக்தியே ஸாரம். இதை முன்பே சொல்லி விட்டேன். அந்த ஹரிபக்தி ஸாதனபக்தி என்றும், ஸாத்யபக்தி என்றும் இரண்டுவிதப் படுகிறது. கதாச்ரவணம், நாமகீர்த்தனம், தியானம், பூஜை, கைங்கர்யம், வந்தனம் முதலியவை ஸாதனபக்தியாகும். மேனி சிலிர்ப்பது, கண்ணீர் விடுவது முதலியவை ப்ரேமரூபமான ஸாத்யபக்தியாகும். பக்தியினாலேயே விஷ்ணுவை ப்ரத்யக்ஷமாய்க் காணமுடியும்.

### हिरण्यकशिपुरुवाच

एवं कर्णकठोराणि वाक्यानि वदसि प्रियम् ।
पुत्रं न हन्तुमिच्छामि क्षमया त्वामिहार्भक ॥२०॥

अयं पाठो दोषयुक्तः केन ते बोधितो वद ।
संहरिष्यामि तं सद्यो गुरुं दुर्मार्गदर्शकम् ॥२१॥

ஹிரண்யன்

20-21. பிள்ளாய்! கர்ணகடோரமான வாக்யங்களைச் சொல்லுகிறாய். உன்னை மகனென்று மன்னித்தேன். இந்தப் பாடம் குற்றமுள்ளது. இதை போதித்த குரு யாரெனச் சொல். துர்மார்க்கத்தைக் காட்டிய அவனைக் கொல்லுவேன்.

प्रह्लाद उवाच

बहूनां जन्मनामन्ते बहुपुण्यफलेन हि ।
जायते हरिभक्तिस्तु स्वयमेव नृणामिह ॥२२॥

कृपया देवदेवस्य सत्सङ्गं लभते नरः ।
यदृच्छया ततो भक्तिर्जायते गरुडध्वजे ॥२३॥

एवं सत्सङ्गलाभेन सद्गुरोरुपदेशतः ।
प्राप्नोति मानवः सत्यं हरिभक्तिं सुदुर्लभाम् ॥२४॥

ப்ரஹ்லாதன்

22-24. பல பிறவியில் செய்த புண்ணியங்களின் பயனாகவே ஹரிபக்தி தானே உண்டாகிறது. பகவானின் திருவருளால் முதன்முதல் ஸாதுஸங்கமும், பிறகு ஸத்குருவின் உபதேசமும், முடிவில் ஹரிபக்தியும் கிடைக்கிறது.

श्रीसद्गुरुरुवाच

इत्युक्तवन्तं तं पुत्रं हन्तुं कोपेन दानवः ।
आदिदेश भटान् सर्वान् विष्णुद्वेषपरायणः ॥२५॥

कुलनाशकरः पुत्रो वध्यतां वध्यतामयम् ।
त्रिलोकनाथं मां त्यक्त्वा विष्णुं भजति मूढधीः ॥२६॥

गजमारोप्य वा शीघ्रं सागरे सन्निपात्य वा ।
पाययित्वा विषं वापि पर्वतात्सन्निपात्य वा ॥२७॥

अग्निं प्रवेश्य वा घोरं वधं कुरुत किङ्कराः ।
अन्यथा मे महान् कोपो नैव शान्तिमवाप्नुयात् ॥२८॥

इत्याज्ञाप्ता भटाः सर्वे हिरण्येन दुरात्मना ।
सद्यः प्रतस्थिरे हन्तुं पुत्रकं वैष्णवोत्तमम् ॥२९॥

शङ्खचक्रधरं देवं सर्वदा हृदि भावयन् ।
न भयं प्राप बालोऽयं बहुधा भर्त्सितोऽपि च ॥३०॥

ஸ்ரீஸத்குரு

*25-30.* இவ்வாறு சொன்ன ப்ரஹ்லாதனைக் கொல்லும்படி அஸுரன் உத்தரவிட்டான். ஹே படர்களே! குலத்தைக் கெடுக்கவந்த இந்த பிள்ளையைக் கொன்று விடுங்கள். இந்த மூடன் லோகநாதனாகிய என்னைவிட்டு விஷ்ணுவிடம் பக்தி செய்கிறான். இவன் மேல் யானையை ஏற்றுங்கள். கடலில் தள்ளுங்கள், விஷம் கொடுங்கள், மலையில் இருந்து உருட்டுங்கள், தீயில் போடுங்கள். இவனைக் கொல்லாவிடில் எனக்கு சாந்தியில்லை. இவ்வாறு ஹிரண்யன் சொல்லவே அஸுரர்கள் குழந்தையைக் கொல்ல முயற்சித்தனர். ப்ரஹ்லாதனோ பகவானை த்யானித்தவாறு பயப்படாமலிருந்தான்.

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये सृष्टिकाण्डे प्रह्लादचरित्रेऽष्टमोऽध्यायः॥८॥*

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமி ஸ்வாமிகள் அருளிச்செய்த ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியம் ஸ்ருஷ்டிகாண்டத்தில் எட்டாவது அத்யாயம் முற்றும்.**

# अथ नवमोऽध्यायः

## ஒன்பதாவது அத்யாயம்

### श्रीसद्गुरुरुवाच

ते तु तं वैष्णवं बालं दैत्यराजप्रचोदिताः ।
विविधाभिर्यातनाभिः पीडयामासुरुन्मदाः ॥१॥

विषं ददुर्महाघोरं बालकाय महात्मने ।
पीत्वापि न ममारायं हरिनामप्रभावतः ॥२॥

गजमारोपयामासुः प्रह्लादोपरि दुर्मदाः ।
तथापि भगवद्भक्त्या न क्लेशं प्राप वैष्णवः ॥३॥

अग्निं प्रवेशयामासुः प्रह्लादं वैष्णवोत्तमम् ।
सोऽपि शीतोऽभवत्सद्यो हरिस्मरणमात्रतः ॥४॥

पर्वतात्पातयामासुर्बालकं तं वसुन्धरा ।
दधार कृपया प्रेम्णा न दुःखं प्राप वैष्णवः ॥५॥

समुद्रे पातयामासुर्न ममज्ज स बालकः ।
क्षीराब्धिशायिनं ध्यायन् महाभागवतोत्तमः ॥६॥

ध्यायन् सर्वत्र गोविन्दं वासुदेवं सनातनम् ।
द्वैतभावेन रहितः प्रशान्तहृदयोऽभवत् ॥७॥

तस्माद्धि तस्य भक्तस्य वधं कर्तुमिमे खलाः ।

न शेकुर्दैत्यराजस्य किङ्कराः कुपिता भृशम् ॥८॥

एवं प्रह्लादमाहात्म्यमप्रमेयं स्मरन् स्मरन् ।
राजापि दुःखं संप्राप तद्वधं कर्तुमक्षमः ॥९॥

कदाचित्पाठशालायां बालकाः प्रेमपूर्वकम् ।
पप्रच्छुः स्वसुहृच्छ्रेष्ठं प्रह्लादं वैष्णवोत्तमम् ॥१०॥

ஶ்ரீஸத்குரு

*1-10.* ஹிரண்யனின் உத்தரவுப்படி அஸுரர்கள் ப்ரஹ்லாதனைப் பலவிதமாய் துன்புறுத்தினர். கோரமான விஷத்தைக் கொடுத்தார்கள். ப்ரஹ்லாதன் அதைக் குடித்தும் ஹரிநாமமஹிமையால் சாகவில்லை. மேலும் அவர்கள் ப்ரஹ்லாதன்மேல் யானையை ஏற்றினார்கள். அப்பொழுதும் ப்ரஹ்லாதன் துன்பப்படவில்லை. ப்ரஹ்லாதனை தீயில் தள்ளினார்கள். ஹரிநாமமஹிமையால் அந்தத் தீயும் குளிர்ந்து விட்டது. பிறகு குழந்தையை மலையிலிருந்து தள்ளினார்கள். அவனை பூமிதேவி தாங்கிக் கொண்டாள். பிறகு கடலில் தள்ளினார்கள். அப்பொழுதும் அந்த பாகவதோத்தமன் முழுகவில்லை. எங்கும் வாஸுதேவனையே த்யானம் செய்து கொண்டு ப்ரஹ்லாதன் சாந்தமாய் இருந்தான். ஆகையால்தான் அஸுரர்களால் கொல்ல முடியவில்லை. ஹிரண்யனும் ஆச்சர்யமடைந்தான். ப்ரஹ்லாதனின் மஹிமையை நினைத்து துக்கமும் அடைந்தான். ஒருநாள் ப்ரஹ்லாதனைப் பார்த்து பாடசாலையில் கூடப்படிக்கும் மற்ற பிள்ளைகள் கேட்டனர்.

बालका ऊचुः

प्रह्लाद त्वं सदा विष्णौ करोषि रतिमुत्तमाम् ।
तस्मात्तव पिता क्रुद्धस्तव दुःखं ददाति हि ॥११॥

हरिभक्त्या किं फलं स्यात्तव दैत्यसुतस्य तु ।
अस्माकमसुराणां तु हरिः शत्रुः किल प्रभो ॥१२॥

**பிள்ளைகள்**

*11-12. ப்ரஹ்லாதா! நீ எப்பொழுதும் விஷ்ணுவிடம் பக்தி செய்கிறாய் ஆகையால்தான் உனது தந்தை கோபமடைந்து உன்னைத் துன்புறுத்துகிறார். நாமோ அஸுரர்கள். நமக்கு விஷ்ணு சத்ருவல்லவா? அந்த விஷ்ணுபக்தியால் என்ன பயன்?*

**प्रह्लाद उवाच**

हरिः सर्वोत्तमो देवो जगज्जन्मादिकारकः ।
स एव सर्वलोकानां पिता माता प्रभुर्गुरुः ॥१३॥

देवानां दानवानाञ्च मुनीनाञ्च तथा नृणाम् ।
सर्वेषामीश्वरो विष्णुर्भेददृष्टिर्न तस्य हि ॥१४॥

असुरेपि सुरे चैवं चण्डाले ब्राह्मणे तथा ।
दरिद्रे धनिकेप्येवं करुणां कुरुते हरिः ॥१५॥

सर्वेषामात्मभूतोसौ वासुदेवः सनातनः ।
न तस्य शत्रुर्मित्रञ्च न द्वेष्यो न प्रियस्तथा ॥१६॥

तथापि भजतां विष्णुर्भक्तानां भक्तवत्सलः ।
ददात्यात्मानमेवायं किं पुनर्वाञ्छितं वरम् ॥१७॥

तं प्राप्य शाश्वतं बन्धुं परमात्मानमव्ययम् ।
परमां शान्तिमाप्नोति भक्तिमान् ज्ञानवान्नरः ॥१८॥

अनित्यं निखिलं ह्येतद्बहुदुःखप्रदायकम् ।
अस्मिन् कामं परित्यज्य वासुदेवोऽनुचिन्त्यताम् ॥१९॥

मृतस्य जननं चापि जातस्य मरणं ध्रुवम् ।
तस्मात्संसारमोक्षाय स्मर्तव्यो भगवान् हरिः ॥२०॥

सकृत्स्मरणमात्रेण प्रीणाति भगवान् हरिः ।
स्वभक्तं नरकाद्घोरात्सद्यो रक्षति माधवः ॥२१॥

आपत्सु भगवान् पाति सर्वासु करुणानिधिः ।
अहमेव प्रमाणं हि मां जानीताभिरक्षितम् ॥२२॥

अग्निः शीतोऽभवत्सद्यो विषञ्चाप्यमृतं तथा ।
हरिभक्तिप्रभावेण निर्भयो निर्भरोस्म्यहम् ॥२३॥

मृत्युग्रस्तस्य लोकेऽस्मिन् सर्वथा पुरुषस्य तु ।
किमर्थेन च पाठेन गुरुणा तादृशेन वा ॥२४॥

तस्मात्सर्वं परित्यज्य श्रोतव्यं श्रुतमेव च ।
हरिं भजत सर्वेशमस्माकं रक्षको हि सः ॥२५॥

**ப்ரஹ்லாதன்**

*13-25. ஹரியே உயர்ந்த தெய்வம். அவரே உலகைப் படைத்தவர். எல்லா உலகங்களுக்கும் தாயும் தந்தையும் குருவும் அவரே. தேவர்களென்றோ, அஸுரர்களென்றோ, அவருக்கு பேத மில்லை. தேவன் அஸுரன், ப்ராம்மணன், புலையன், ஏழை தனிகன் என்னும் யாவரிடமும் அவருக்கு கருணை உண்டு. யாவருக்கும் அவரே ஆத்மா. அவருக்கு விரோதியோ,*

நண்பனோ இல்லை. பக்தவத்ஸலனாகிய அவர் தனது பக்தர்களுக்கு தன்னையே கொடுத்து விடுவார் எனில், மற்ற வரன்கள் தருவதைக் கேட்கவும் வேண்டுமா! அழிவற்ற பந்துவான அவரை அடைந்தால்தான் நிம்மதி. இந்த உலக வாழ்க்கை அநித்யமானது. துக்ககரமானது. எனவே இதில் பற்றுதலை நீக்கி வாஸுதேவனை த்யானிக்க வேண்டும். பிறப்பும், இறப்பும் மாறிமாறி வருகிறது. எனவே முக்தியை விரும்புகிறவன் ஹரியைத் த்யானம் செய்யவேண்டும். ஒருதரம் நினைத்தாலும் பகவான் தனது பக்தனை கோரமான நரகத்திலிருந்து காப்பாற்றுகிறான். ஆபத்துகளில் பகவான் காப்பாற்றுவானென்பதற்கு நானே ஸாக்ஷி. ஹரிபக்தியின் மஹிமையால் என்னைத் தீ கொளுத்தவில்லை. விஷம் கொல்லவில்லை. எந்த நிமிஷம் மரணம் வருமோ தெரியாது. எனவே ஹரிபஜனை செய்யுங்கள். வீணாய் இந்தப் பாடங்களைப் படிக்க வேண்டாம். ஹரி நம்மை ரக்ஷிப்பார்.

**श्रीसद्गुरुरुवाच**

एवं प्रह्लादवक्त्राब्जसञ्जातं वचनं मधु ।
निपीय बालकाः सद्यश्चक्रुर्गोविन्दकीर्तनम् ॥२६॥

**ஸ்ரீஸத்குரு**

26. இவ்வாறு ப்ரஹ்லாதன் சொன்ன அம்ருதம் போன்ற வாக்கியத்தைச் செவியாரப் பருகிய சிறுவர்கள் உடனேயே கோவிந்தகீர்த்தனம் செய்யலானார்கள்.

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये सृष्टिकाण्डे प्रह्लादचरित्रे नवमोऽध्यायः॥९॥*

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிஸ்வாமிகள் அருளிச்செய்த ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்ம்யம் ச்ருஷ்டிகாண்டத்தில் ஒன்பதாவது அத்யாயம் முற்றும்.**

# अथ दशमोऽध्यायः

## பத்தாவது அத்யாயம்

### श्रीसद्गुरुरुवाच

बालानामपि सर्वेषां दृष्ट्वा भक्तिं जनार्दने ।
गुरुपुत्रो भीतभीतो दैत्येन्द्राय न्यवेदयत् ॥१॥

कुपितो दैत्यराजोपि प्रह्लादं भक्तपुङ्गवम् ।
आनीय परिपप्रच्छ विनीतं पुत्रमुत्तमम् ॥२॥

### ஸ்ரீஸத்குரு

*1-2.* எல்லாக் குழந்தைகளுக்கும் ஹரிபக்தி உண்டாகி விட்டதைக் கண்ட உபாத்யாயர் பயந்துபோய் ஹிரண்யனிடம் தெரிவித்தார். ஹிரண்யனும் ப்ரஹ்லாதனை அழைத்துக் கோபத்துடன் கேட்டான்.

### हिरण्यकशिपुरुवाच

प्रह्लाद मन्दभाग्योऽसि वृथा भजसि केशवम् ।
मयि तिष्ठति सर्वेशे सर्वदेवनमस्कृते ॥३॥

किं फलं वासुदेवस्य नामसङ्कीर्तनेन ते ।
वद शीघ्रं मन्दबुद्धे त्वां नयामि यमक्षयम् ॥४॥

### ஹிரண்யன்

*3-4.* ப்ரஹ்லாதா! நீ பாக்யமில்லாதவன். தெய்வங்களுக்குத் தெய்வமாகிய நான் இருக்கையில் வீணாய்க் கேசவனைப் பஜிக்கின்றாய். வாஸுதேவனுடைய நாமஸங்கீர்த்தனத்தால் என்ன பயன்? புத்திகெட்டவனே! உன்னைக் கொல்லுவேன். சீக்கிரமாகச் சொல்.

### प्रह्लाद उवाच

मम तात नमस्तेस्तु सावधानं शृणु प्रभो ।
तवापि च ममाप्येवं सर्वेषामीश्वरो हरिः ॥५॥

वशीकृत्य विधिं स्वामिंस्तपसा बहुना त्वया ।
वरः प्राप्तो हि तस्मात्त्वं बलवानसि भूपते ॥६॥

ब्रह्मणो वरदस्यापि वरदो हरिरीश्वरः ।
बलेन तस्य देवस्य धृतं सर्वं जगत्पितः ॥७॥

सर्वलोकेश्वरं विष्णुं सर्वलोकैककारणम् ।
भजन् भक्त्या श्रद्धया च सर्वार्थान् प्राप्नुयान्नरः॥८॥

### ப்ரஹ்லாதன்

*5-8. என் தந்தையே! வணக்கம். கவனித்துக் கேட்பீராக. உமக்கும் எனக்கும் யாவருக்கும் ஹரியே ஈச்வரன். ப்ரும்மா விடமிருந்து பெற்ற வரத்தினால்தான் நீர் பலவானாக இருக்கிறீர் அல்லவா? அந்த ப்ரும்மாவிற்கும் வரன் கொடுத்தவர் ஹரியே. அவருடைய பலத்தால்தான் இவ்வுலகம் நிலைத்திருக்கிறது. அவரிடம் பக்தி செய்வதால் விரும்பிய பயனைப் பெறலாம்.*

### हिरण्यकशिपुरुवाच

वृथा त्वं कत्थसे मूढ सांप्रतं मर्तुमिच्छया ।
कोसौ विष्णुः क्व चास्तीति वद मे कुलनाशक ॥९॥

### ஹிரண்யன்

*9. குலத்தைக் கெடுக்க வந்தவனே! வீணாய் பிதற்றுகிறாய். மூடா! சாகவிரும்புகிறாய் போலும். அந்த விஷ்ணு யார்? அவன் எங்கு இருக்கிறான்? எனக்குச் சொல்.*

### प्रह्लाद उवाच

विष्णुः सर्वोत्तमो देवः सर्वत्र व्याप्य तिष्ठति ।
तं ज्ञानचक्षुषा पश्य सर्वव्यापिनमच्युतम् ॥१०॥

**ப்ரஹ்லாதன்**

*10. விஷ்ணுவே சிறந்த தெய்வம். அவர் எங்கும் வியாபித்து இருக்கிறார். எங்கும் நிறைந்த அவரை ஞானக்கண்ணால்தான் பார்க்க முடியும்.*

### हिरण्यकशिपुरुवाच

यदि सर्वत्र गोविन्दस्तिष्ठति प्रणतप्रियः ।
त्वया सङ्कीर्तितो देवः स्तम्भेऽस्मिन् किं न दृश्यते॥११॥

**ஹிரண்யன்**

*11. அந்த விஷ்ணு எங்கும் இருப்பது உண்மையாகில் இந்தத்தூணில் இருக்கிறானா? அப்படிஇருந்தால் ஏன் கண்களுக்குத் தெரியவில்லை?*

### श्रीसद्गुरुरुवाच

इत्युक्त्वा रोषताम्राक्षो हिरण्यकशिपुस्तदा ।
स्तंभं तताड बलवान् मुष्टिना भर्त्सयन् शिशुम्॥१२॥

तदा तत्रैव भगवानाविरासीच्छ्रियःपतिः ।
सत्यं विधातुं वचनं भक्तस्य पुरुषोत्तमः ॥१३॥

सिन्दूरारुणकेशाढ्यविस्तीर्णहनुरच्युतः ।
विद्युत्समानजिह्वाढ्यतीक्ष्णदंष्ट्राननः प्रभुः ॥१४॥

नेत्रद्वयजितानन्तसूर्यरश्मिमहाद्युतिः ।

भयङ्करमहाशब्दविद्रावितसुरासुरः ॥१५॥

सिह्मास्यः पुरुषाकारः करुणासिन्धुरीश्वरः ।
शरण्यः सर्वलोकानां भगवान् भक्तवत्सलः ॥१६॥

ஸ்ரீஸத்குரு

*12-16.* இவ்வாறு சொல்லிக் கோபத்துடன் ஹிரண்யன் குழந்தையை அதட்டிக்கொண்டே தூணில் குத்துவிட்டான். அப்பொழுதே பகவான் பக்தனின் வார்த்தையை உண்மையாக்க வேண்டி சிந்தூரம்போல் சிவந்த கேசமுடையவராகவும், மின்னல் போன்ற நாக்கும் கோரப்பற்களும் நிறைந்த வாயைத் திறந்தவராகவும், பலஸூர்யனுக்கொப்பான கண்கள் உடையவராகவும், பயங்கரமான கர்ஜனை செய்பவராகவும், மனிதசரீரமும் சிங்கமுகமும் உடையவராகவும் தோன்றினார்.

तं दृष्ट्वाऽसुरराजेन्द्रो गदामुद्यम्य वीर्यवान् ।
जगामाभिमुखं तस्य योद्धुकामः सुगर्वितः ॥१७॥

भगवानपि तं दुष्टं निपीड्य करजैस्तदा ।
निहत्य सर्वलोकानामभयं प्रददौ प्रभुः ॥१८॥

*17-18.* அவரைக்கண்ட அஸுரன் கதையை ஓங்கிக் கொண்டு எதிர்த்தான். பகவானும் அந்த துஷ்டனைக் கை நகங்களால் கிழித்துக் கொன்று உலகிற்கு அபயந்தந்தார்.

विलोक्य नरसिह्मं तं भीताः सर्वे सुरास्तदा ।
नातिदूरचरा विष्णुं तुष्टुवुः पुरुषोत्तमम् ॥१९॥

तदापि भगवान् विष्णुः शान्तिं न प्राप माधवः ।
प्रह्लादस्यैव भक्तस्य वैभवं दर्शयन् हरिः ॥२०॥

तदा संप्रेषयामासुः प्रह्लादं भक्तसत्तमम्।
सान्त्वनार्थं नृसिह्मस्य देवा लक्ष्मीपतेः प्रभोः ॥२१॥

प्रह्लादः सहसा विष्णुमुपेत्य विहिताञ्जलिः ।
चक्रे प्रणामं सप्रेम नरसिह्मं विलोक्य सः ॥२२॥

नरसिह्मः कृपासिन्धुर्भगवान् भक्तवत्सलः ।
तमुत्थाप्य शिशुं भक्तमङ्कमारोपयत्प्रभुः ॥२३॥

आघ्राय च शिरस्तस्य भक्तस्य भगवान् हरिः ।
चुचुम्ब प्रेमपूर्वं स नरसिह्मो दयानिधिः ॥२४॥

एवं नृसिह्मकारुण्यसुधया प्लावितो महान् ।
तुष्टाव भक्तवर्योपि प्रेमगद्गदया गिरा ॥२५॥

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये सृष्टिकाण्डे प्रह्लादचरित्रे दशमोऽध्यायः॥१०॥*

*19-25.* நரஸிம்மத்தைக் கண்ட தேவர்கள் பயந்து போனார்கள். எட்டியிருந்து துதித்தார்கள். ப்ரஹ்லாதனின் மஹிமையைக் காட்ட விரும்பிய பகவான் சாந்தியடைய வில்லை. அப்பொழுது தேவர்கள் நரஸிம்மமூர்த்தியை ஸமாதானம் செய்யவேண்டி ப்ரஹ்லாதனை அனுப்பினார்கள். ப்ரஹ்லாதனோ கைகுவித்த வண்ணம் கிட்டே அணுகி வணங்கினான். கருணைக்கடலும், பக்தவத்ஸலனுமான நரஸிம்மபகவான் அந்தக் குழந்தையைத் தூக்கி மடியில் வைத்துக்கொண்டு உச்சிமுகர்ந்து முத்தமிட்டார். இவ்வாறு நரஸிம்ம மூர்த்தியின் கருணையாகிய அம்ருதக் கடலில் மூழ்கிய பக்தப்ரஹ்லாதன் ப்ரேமையினால் தழுதழுத்த குரலுடன் துதிக்கலானான்.

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமி ஸ்வாமிகள் அருளிச்செய்த ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்ம்யம் ஸ்ருஷ்டிகாண்டத்தில் பத்தாவது அத்யாயம் முற்றும்.**

# अथैकादशोऽध्यायः

# பதினோராவது அத்யாயம்

### प्रह्लाद उवाच

विजयी भव गोविन्द विजयी भव माधव ।
विजयी भव लोकेश विजयी भव केशव ॥१॥

नमो नमो नृसिह्माय विष्णवे ते नमो नमः ।
नमो नमः श्रीधराय स्वामिने ते नमो नमः ॥२॥

प्रसीद नरसिह्म त्वं प्रसीद पुरुषोत्तम ।
प्रसीद कमलानाथ प्रसीद जगदीश्वर ॥३॥

नरसिह्म महासिह्म वीरसिह्म नमोस्तु ते ।
उग्रसिह्म श्रीनृसिह्म योगसिह्म नमोस्तु ते ॥४॥

भगवन् करुणासिन्धो भक्त्या तुष्यसि केवलम् ।
धनं मानं यशो लोके न ते सन्तोषहेतवे ॥५॥

*1-5. கோவிந்தா! மாதவா! லோகநாத! கேசவா! விஜயீபவ நரஸிம்ம! விஷ்ணுவே! ஸ்ரீதர! ஸ்வாமி! உமக்கு நமோநம: புருஷோத்தம! கமலாநாத! ஜகதீச்வர! அருள் புரிவீராக. நரஸிம்ம! மஹாஸிம்ம! வீரஸிம்ம! உக்ரஸிம்ம! லக்ஷ்மீ நரஸிம்ம! யோகஸிம்ம! உமக்கு வந்தனம். பகவானே! கருணைக்கடலே! பக்தி ஒன்றினாலேயே ப்ரஸன்னமாகிறீர். பணம், மானம், புகழ் எதையும் நீர் லட்சியம் செய்வதில்லை.*

चण्डालोपि कृपासिन्धो त्वद्भक्त्या पूज्य एव हि ।
त्वद्भक्तिरहितो विप्रश्चण्डालसदृशो ननु ॥६॥

नाहं बिभेमि ते वक्त्रं दृष्ट्वा सर्वभयङ्करम् ।
तीक्ष्णदंष्ट्रं चलज्जिह्वं विदीर्णमतिपाटलम् ॥७॥

भीतोऽस्मि भगवन् विष्णो दृष्ट्वा संसारसागरम् ।
तथापि त्वत्कथानौकामाश्रितोस्मि न मे भयम् ॥८॥

क्वाहं दैत्यकुले जातः क्व त्वं सर्वजगत्पतिः ।
तथापि मयि गोविन्द करोषि करुणां किल ॥९॥

सर्वेष्वपि कृपासिन्धो जनेषु करुणां कुरु ।
को नु प्रयासो गोविन्द भवसन्तारणे तव ॥१०॥

*6-10. கருணைக் கடலே! சண்டாளனாயினும் உமது பக்தி இருந்தால் பூஜிக்கத் தக்கவன். ப்ராம்மணனாயினும் உமது பத்தி இல்லாவிடில் சண்டாளனேயாவான். பயங்கரமான கோரப் பற்களும், அலைகின்ற நாக்கும் உடைய சிவந்த உமது முகத்தைக் கண்டு எனக்கு பயமில்லை. ஆனால் ஸம்ஸாரத்தைக் கண்டு தான் பயப்படுகிறேன். அந்த ஸம்ஸாரஸாகரத்தையும் உமது கதையாகிய ஓடத்தைக்கொண்டு தாண்டி விடுவேன். கோவிந்தா! அஸுரக்குழந்தையாகிய நான் எங்கே. ஸர்வேச்வரனாகிய தாங்கள் எங்கே. என்னிடங்கூட இவ்வளவு கருணையா! உலகில் யாவரிடமும் இத்தகைய கருணையைச் செய்வீராக. மக்களை ஸம்ஸாரத்திலிருந்து கரையேற்றுவதில் உமக்கு என்ன சிரமம்?*

न कामयेऽहं वैकुण्ठं कैवल्यं पुरुषोत्तम ।
भक्तिमेव प्रार्थयेऽहं त्वयि जन्मनि जन्मनि ॥११॥

साधुसङ्गं सदा देहि शरणागतवत्सल ।
तत्र सङ्कीर्तयन् स्वामिंस्त्वद्गुणान् भक्तिमाप्नुयाम् ॥१२॥

त्वद्भक्तसत्तमो देव नारदः सद्गुरुर्मम ।
तं स्मराम्यद्य गोविन्द महान्तमुपकारिणम् ॥१३॥

तस्यैव चरणाम्भोजे निधेहि करुणानिधे ।
सर्वदा मां रमानाथ नरसिंह्म नमोस्तु ते ॥१४॥

*11-14.* புருஷோத்தமா! நான் முக்தியையும் விரும்பவில்லை. பிறவிதோறும் பக்தியையே விரும்புகிறேன். சரணாகதவத்ஸல! ஸாதுஸங்கத்தையே எப்பொழுதும் கொடுப்பீராக. ஸ்வாமி! உமது குணங்களைப் பாடிப் புகழ்ந்து பக்தியை வளர்ப்பேன். தேவ! உமது பக்தர்களிற் சிறந்த நாரதரே எனது ஸத்குரு. அவருடைய பெரிய உபகாரத்தை இப்பொழுது நினைக்கிறேன். கருணாநிதியே! அவருடைய திருவடிநிழலில் எப்பொழுதும் என்னை வைப்பீராக. லக்ஷ்மீநரஸிம்ம! உமக்கு நமஸ்காரம்.

### श्रीसद्गुरुरुवाच

इत्युक्त्वा प्रेमबाष्पेण पूरिताक्षः सतां वरः ।
तूष्णीमास हरेरङ्के नारदं चिन्तयन् गुरुम् ॥१५॥

तं दृष्ट्वा बालकं भक्तं भगवान्नरकेसरी ।
उवाच मधुरं वाक्यं सान्त्वयन् कृपया प्रभुः ॥१६॥

### ஸ்ரீஸத்குரு

*15-16.* இவ்வாறு சொல்லி ஆனந்தக்கண்ணீர் விட்டுக்கொண்டு ப்ரஹ்லாதன் தனது குருவான நாரதரை சிந்தித்தவாறு பகவானின் மடியில் உட்கார்ந்திருந்தான். பகவானாகிய நரஸிம்மன் அந்தக் குழந்தையைக் கருணையுடன் ஸமாதானம் செய்து மதுரமாய் சொன்னார்.

### श्रीभगवानुवाच

वरं वृणीष्व भद्रं ते प्रीतोस्मि त्वयि बालक ।

दृढभक्तोसि सत्यं हि त्वत्तुल्यं नैव वेद्म्यहम् ॥१७॥

**ஸ்ரீபகவான்**

*17. குழந்தாய்! நீ திட பக்தனாய் இருப்பதால் உன்னிடம் ப்ரீதியடைந்திருக்கிறேன். வேண்டிய வரனைக் கேள். உனக்கு மங்களம் உண்டாகட்டும். உனக்கு நிகர் யாருமில்லை.*

**प्रह्लाद उवाच**

अकामोऽहं किङ्करोऽहं भक्तोहं प्रेमिकोस्म्यहम् ।
ज्ञात्वापि मम भावं त्वं किमेवं वदसि प्रभो ॥१८॥

लोके दर्शयितुं विष्णो भक्तभावं श्रियःपते ।
पृष्टवानिति मन्येऽहं सर्वज्ञस्त्वं जनार्दन ॥१९॥

न कामयेऽहं साम्राज्यं पारमेष्ठ्यं परं पदम् ।
त्वयि भक्तिं दृढां देव देहि मे जन्मजन्मनि ॥२०॥

**ப்ரஹ்லாதன்**

*18-20. ப்ரபுவே! நான் பயனைக் கருதாத ப்ரேம பக்தியுடைய தாஸனல்லவா? எனது மனோபாவத்தை அறிந்தும் ஏன் இப்படிச் சொல்லுகிறீர்? லக்ஷ்மீநாத! ஜனார்தனா! விஷ்ணுவே! எல்லாமறிந்த நீர் பக்தனின் மனோபாவத்தை உலகமறியச் செய்ய வேண்டுமென்று கேட்கிறீர் போலும்! நான் ஸாம்ராஜ்யத்தையோ, ப்ரும்மபட்டத்தையோ, பரமபதத்தை யோகூட விரும்பவில்லை. ஒவ்வொரு பிறவியிலும் உமது பக்தியையே விரும்புகிறேன்.*

**श्रीभगवानुवाच**

सत्यं वदसि भक्त त्वं बालोपि ज्ञानिनां वरः ।
भक्तिरस्ति सदा शुद्धा मयि ते सुदृढा ननु ॥२१॥

सर्वेषामपि भक्तानां चक्रवर्त्यसि बालक ।
अभिषिञ्चामि सानन्दं भक्तिसाम्राज्यमण्डले ॥२२॥

ஸ்ரீபகவான்

21-22. பக்தா! உண்மையைச் சொல்கிறாய். நீ குழந்தையாயினும் ஞானிகளில் சிறந்தவன். உனக்கு என்னிடம் சுத்தமான பக்தி எப்பொழுதும் திடமாகவே இருக்கிறது. குழந்தாய்! நீ பக்தர்கள்யாவருக்கும் சக்ரவர்த்தி. பக்திஸாம்ராஜ்யத்தில் உன்னை பட்டாபிஷேகம் செய்கிறேன்.

श्रीसद्गुरुरुवाच

इत्युक्त्वा भगवान् विष्णुर्नरसिंहः श्रियःपतिः ।
सान्त्वयन् बहुधा भक्तं तत्रैवान्तरधात्प्रभुः ॥२३॥

अथ भक्तोत्तमो विष्णुं स्मरन् सर्वत्र पण्डितः ।
पूजयामास निखिलानागतान् सुरसत्तमान् ॥२४॥

ब्रह्मा सर्वैः सुरैः साकमभ्यषिञ्चत्तदाऽर्भकम् ।
तस्मिन् दैत्येन्द्रसाम्राज्ये प्रह्लादं भक्तपुङ्गवम् ॥२५॥

ஸ்ரீஸத்குரு

23-25. இவ்வாறு சொல்லி லக்ஷ்மீநரஸிம்மமூர்த்தி தனது பக்தனை ஸமாதானம் செய்துவிட்டு மறைந்துவிட்டார். ப்ரஹ்லாதனும் அங்கு வந்திருந்த எல்லா தேவர்களையும் விஷ்ணுவின் ரூபமாகவே பூஜித்தான். ப்ரும்மதேவன் அந்த ப்ரஹ்லாதனை அஸுரஸாம்ராஜ்யத்தில் பட்டாபிஷேகம் செய்தார்.

यः पठेद्भक्तिमान्नित्यं प्रह्लादचरितं शुभम् ।
तस्मिन् प्रीणाति भगवान्नृसिंहो भक्तवत्सलः ॥२६॥

तस्मिन् प्रीते किमप्राप्यं सर्वलोकेश्वरे हरौ ।
हरिर्ददाति सुप्रीतः पुरुषार्थचतुष्टयम् ॥२७॥

26-27. எவனொருவன் இந்தப் ப்ரஹ்லாத சரித்திரத்தை தினமும் படிப்பானோ, அவனிடம் நரஸிம்மபகவான் ப்ரீதியடைகிறார். ஸர்வலோகேச்வரனான ஹரி ப்ரீதியடைகிறார். ஸர்வலோகேச்வரனான ஹரி ப்ரீதியடைந்துவிட்டால் அறம் பொருள் இன்பம் வீடு இவைகளில் எதுதான் கிடைக்காது!

इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये सृष्टिकाण्डे प्रह्लादचरित्रं नामैकादशोऽध्यायः॥११॥

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமி ஸ்வாமிகள் அருளிச்செய்த ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்ம்யம் ஸ்ருஷ்டிகாண்டத்தில் பதினோராவது அத்யாயம் முற்றும்.**

## अथ द्वादशोऽध्यायः

## பன்னிரண்டாவது அத்யாயம்

### श्रीसद्गुरुरुवाच

पौत्रो महाबलिर्नाम प्रह्लादस्य महात्मनः ।
आसीन्महामना धीरो वदान्यः सत्यभाषणः ॥१॥

स तु विश्वजिता विष्णुं यज्ञेनाराध्य दैत्यराट् ।
दिव्यं बलमवाप्याथ जिघाय युधि निर्जरान् ॥२॥

विद्राव्य निखिलान् देवान् संप्राप्य च दिवं प्रभुः ।
तत्रैव निवसन्नित्यं पालयामास वै जगत् ॥३॥

नर्मदायास्तटे पुण्ये निर्माय वरमाश्रमम् ।
यज्ञं बहुविधं चक्रे स तु धर्मपरायणः ॥४॥

## ஸ்ரீஸத்குரு

*1-4.* மஹாத்மாவான ப்ரஹ்லாதனுக்கு மஹாபலி என்ற ஒரு பேரன் இருந்தான். அவன் உதாரகுணமுடைய வள்ளல். ஸத்தியம் பேசுகின்ற தீரன். அவன் விஷ்ணுவை ஆராதித்து திவ்யமான பலத்தைப் பெற்று யுத்தத்தில் தேவர்களை வென்றான். தேவர்களை விரட்டிவிட்டு தேவலோகத்தைக் கைப்பற்றிக்கொண்டு அங்கேயே வஸித்தான். நர்மதாநதிக் கரையில் ஒரு ஆச்ரமம் அமைத்துக்கொண்டு அங்கு பல யாகங்களைச் செய்து வந்தான்.

स्वपुत्रान् दुःखितान् दृष्ट्वा देवमाताऽदितिस्तदा ।
पयोव्रतं चकारैषा कश्यपेन निबोधिता ॥५॥

तस्या व्रतेन भक्त्या च सुप्रसन्नो जनार्दनः ।
पुत्रत्वमगमद्देवः श्रवणद्वादशीदिने ॥६॥

उपनीतः कश्यपेन वामनः सप्तहायनः ।
यज्ञवाटीं बलेराप धृत्वा छत्रं कमण्डुलम् ॥ ७॥

तं दृष्ट्वा सुन्दराकारं वामनं ब्रह्मचारिणम् ।
नीलोत्पलदलश्यामं मौञ्चीकौपीनधारिणम् ॥ ८॥

छत्रं कमण्डलुञ्चैव बिभ्रतं शिखिनं तथा ।
परमं विस्मयं प्राप दैत्यराजो महाबलिः ॥ ९॥

स तस्मै स्वागतं प्राह दत्वाऽर्घ्यं पाद्यमीश्वरः ।
प्रसन्नवदनः प्राह विनीतो दैत्यपुङ्गवः ॥१०॥

5-10. அப்பொழுது தேவமாதாவான அதிதி தனது பிள்ளைகள் கஷ்டப்படுவதைக் கண்டு தனது கணவரான கச்யபர் சொன்னபடி பயோவ்ரதம் நடத்தினாள். அவளுடைய பக்திக்கு பிரஸன்னமாகி பகவான் சிரவணத்வாதசி புண்ய காலத்தில் வாமன மூர்த்தியாய் அவதரித்தான். குழந்தைக்கு ஏழு வயது ஆனதும் கச்யபர் உபநயனம் செய்வித்தார். வாமன மூர்த்தியோ ஒரு ஸமயம் மஹாபலியின் யாகசாலைக்கு வந்தார். மிகவும் அழகியவரும், ப்ரும்மச்சாரியும், நீலமான திருமேனி உடையவரும், மௌஞ்சீ, கௌபீனம், குடை, கமண்டலு இவைகளை தரிப்பவரும், சிரஸில் குடுமி உடையவருமாகிய வாமனமூர்த்தியைக் கண்டு மஹாபலி ஆச்சரியமடைந்தான். அவருக்கு பாதபூஜை செய்து நல்வரவு சொல்லி வணக்கத்துடன் சொன்னான்.

### महाबलिरुवाच

धन्योस्मि ब्राह्मणश्रेष्ठ भाग्यवानस्मि पण्डित ।
दुर्लभः सङ्गमो लोके त्वादृशानां महात्मनाम् ।। ११।।

गां काञ्चनं वा कन्यां वा प्रतीच्छ ब्रह्मवित्तम ।
सर्वं ददामि ते स्वामिन् यद्यदिच्छसि तद्वद ।।१२।।

**மஹாபலி**

11-12. ப்ராம்மண ச்ரேஷ்டரே! நான் பாக்யவானாக ஆனேன். தங்களைப்போன்ற மஹான்களின் வருகை அரிது. தங்களுக்கு பசுவோ, பணமோ, கன்னிகையோ, பூமியோ எதுவேண்டுமானாலும் தருவேன். சொல்வீராக.

### श्रीभगवानुवाच

ब्रह्मण्ये च वदान्ये च त्वयि दानवपुङ्गव ।
सर्वथा नैतदाश्चर्यं यत्सर्वं दातुमिच्छसि ।।१३।।

जातोस्युत्तमवंशे त्वं भार्गवेणापि शिक्षितः ।
ब्राह्मणे देवताबुद्धिं करोषि त्वं महामते ॥१४॥

भूमिं देहि तपः कर्तुं मत्पदत्रयसंमिताम् ।
एतावताऽलं दैत्येन्द्र त्वयि सर्ववरप्रदे ॥१५॥

**ஸ்ரீபகவான்**

*13-15.* அஸுரசிரேஷ்ட! ப்ராம்மணவிச்வாஸமுடையவனும், வள்ளலுமாகிய உன்னிடம் இது ஆச்சர்யமில்லை. ஏனெனில் நீ உத்தமவம்சத்தில் பிறந்திருக்கிறாய். சுக்ராசார்யருடைய சிஷ்யன். எனக்குத் தவம் செய்வதற்கு மூன்றடி பூமிதானம் செய்வாயாக. எனக்கு இம்மட்டிலும் போதுமானது.

**महाबलिरुवाच**

ब्रह्मबन्धो किमेतत्ते वृतमल्पं मयीश्वरे ।
यावत्प्रमाणं वपुषस्तावत्ते मनसोप्यहो ॥१६॥

मम सर्वं धनं वापि भूमिं वा राज्यमप्युत ।
प्राणान् पत्नीं सुतं वापि वृणीष्व त्वं यदीच्छसि ॥१७॥

**மஹாபலி**

*16-17.* ப்ரும்மபந்துவே! ஈச்வரனான என்னிடம் இந்த அல்பமான வரனைக் கேட்டீர். இதனால் உமது ஆக்ருதியளவே புத்தியும் இருக்கிறது. என்றாயிற்று. எனது எல்லா ராஜ்யத்தையும் தனத்தையும் பூமியையும் மனைவி மக்களுடன் என்னையும் உமக்கே தருவேன். பெற்றுக்கொள்வீராக.

**श्रीभगवानुवाच**

यथावकाशं विप्रेण कर्तव्यो हि प्रतिग्रहः ।
अधिकं योऽभिगृह्णीयात् स पापी भवति ध्रुवम् ॥१८॥

यदि ते भाग्यलेशोस्ति भूमिं देहि मया वृताम् ।
स्वभावतो विरक्तोस्मि किं धनेनामितेन मे ॥१९॥

**ஸ்ரீபகவான்**

*18-19.* அரசே! தேவையளவிற்கு 'தானம் வாங்குவது குற்றமில்லை. அதிகமாகச் சேர்ப்பவன் பாபியாவான். இயற்கையாகவே விரக்தியுடைய எனக்கு அதிக தனம் வேண்டாம். நான் கேட்டபடி பூமிதானம் செய்தால் போதும்.

**श्रीसद्गुरुरुवाच**

इत्युक्तवन्तं तं विष्णुमजानन् दनुजाधिपः ।
दातुं विनिश्चयं चक्रे वामनायैव वाञ्छितम् ॥२०॥

तं न्यषेधद्गुरुः शुक्रो दानवीरं महाबलिम् ।
आपद्धर्मं निवेद्यास्मै बहुधा ब्राह्मणोत्तमः ॥२१॥

तथापि विष्णवे दातुं पृथ्वीं निश्चित्य दैत्यराट् ।
पूजयामास तत्पादौ विन्ध्यावल्या च जायया ॥२२॥

महाबलिस्तु सुप्रीतो विष्णवे परमात्मने ।
ददौ तद्याचितां भूमिमात्मनाशमचिन्तयन् ॥२३॥

तदा तत्रैव गोविन्दो विश्वरूपोऽभवन्मुदा ।
त्रिविक्रमेण रूपेण विममे सधरां दिवम् ॥ २४॥

**ஸ்ரீஸத்குரு**

*20-24.* இவ்வாறு சொன்ன வாமனமூர்த்தியை விஷ்ணுவென்றறியாமல் மஹாபலி தானம் கொடுக்கத்

தீர்மானித்தான். அவனது குருவான சுக்ராசார்யரோ அதைத் தடுத்தார். அப்படிஇருந்தபோதிலும் விந்தியாவளி என்கிற மனைவியுடன் பரமாத்மாவான விஷ்ணுவிற்கு பாதபூஜை செய்து பூதானம் செய்துவிட்டான். உடனே ஸந்தோஷத்தி னால் விச்வரூபம் எடுத்துக்கொண்ட பகவான் த்ரிவிக்ரம மூர்த்தியாய் இரண்டு அடிகளால் பூமியையும் ஸ்வர்கத்தையும் அளந்து கொண்டார்.

तृतीयाय पदायास्य न शिष्टं किञ्चिदप्यहो ।
तस्माद्बबन्ध तं भक्तं सत्यसन्धं सताङ्गतिः ॥२५॥

तृतीयाय पदायासौ दत्वापि स्वशिरो नृपः ।
मम सत्यं पालयेति प्रार्थयामास भक्तिमान् ॥२६॥

भगवानपि गोविन्दः पादपद्मं सुरार्चितम् ।
निदधे तस्य मूर्ध्न्येव लोके धन्यतमो हि सः ॥२७॥

वञ्चयित्वा बलिं त्वेवं प्रगृह्य निखिलं जगत् ।
भगवान् सर्वलोकेशस्तद्भक्त्या वञ्चितोऽभवत्॥२८॥

ददौ शक्राय तत्सर्वमर्थकामाय वै जगत् ।
दैत्यराजाय भक्ताय ददावात्मानमप्ययम् ॥२९॥

अद्यापि नागलोकेऽसौ वर्तते हि महाबलिः ।
तद्द्वारपालको विष्णुस्तिष्ठत्येष गदाधरः ॥३०॥

यः पठेच्छ्रद्धया नित्यं पवित्रं चरितं बलेः ।
यशो धनञ्च सत्यञ्च प्राप्नुयाद्भक्तिमच्युते ॥३१॥

25-31. மூன்றாவது அடிக்கு அவனிடம் ஏதுமில்லாமற் போகவே அவனைக் கட்டினார். மஹாபலியோ தனது தலையை அளந்துகொண்டு ஸத்தியத்தைக் காப்பாற்றும்படி வேண்டிக் கொண்டான். பகவானும் தனது திருவடியை அவன் தலைமேல் சூட்டினான். அவனைக் காட்டிலும் பாக்யவான் யார்? அவனுடைய பக்திக்கு தானே கட்டுப்பட்டான். பொருளை விரும்பிய இந்திரனுக்கு ராஜ்யத்தையும், அருளை விரும்பிய மஹாபலிக்கு தன்னையும் தந்து விட்டான். இப்பொழுதும் பகவான் பாதாள லோகத்தில் மஹாபலியின் துவாரபாலகனாய் நிற்கிறான். தினமும் மஹாபலியின் சரிதத்தைப் படிப்பவர்கள் பணம், புகழ், ஸத்திய நிஷ்டை, பகவத்பக்தி இவைகளைப் பெறுவார்கள்.

इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमहात्म्ये सृष्टिकाण्डे वामनावतारचरितं नाम द्वादशोऽध्यायः।। १२।।

இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமி ஸ்வாமிகள் அருளிச்செய்த ஸ்ரீப்ருந்தாவனமாஹாத்ம்யம் ச்ருஷ்டிகாண்டத்தில் பன்னிரண்டாவது அத்தியாயம் முற்றும்.

# अथ त्रयोदशोऽध्यायः

# பதிமூன்றாவது அத்தியாயம்

## श्रीसद्गुरुरुवाच

कदाचित् क्षत्रिया लोके वीर्यमानमदान्विताः ।
चक्रुर्हिंसां प्रजानाञ्च सदा युद्धपरायणाः ।।१।।

धनं धान्यं पशून्नृणां संजह्रुः क्षत्रिया बलात् ।
भीतभीताः प्रजा आसन् स्वगृहेष्वपि दुःखिताः ।।२।।

मुख्यतो ब्राह्मणानाञ्च हिंसां चक्रुर्महात्मनाम् ।
परस्परं विरोधेन संजघ्नू राज्यकामुकाः ।।३।।

## ஶ்ரீஸத்குரு

*1-3.* ஒருசமயம் க்ஷத்ரியர்கள் தங்களுடைய பலத்தினால் கொழுப்பேறியவர்களாய் ப்ரஜைகளை துன்புறுத்தினார்கள். மக்களின் தனம், தான்யம், பசுக்கள் யாவையும் பலாத்காரமாய் பறிமுதல் செய்து கொண்டார்கள். மக்கள் யாவரும் நடுநடுங்கி தங்கள் தங்கள் வீடுகளில் துன்பப்பட்டுக்கொண்டிருந்தனர். முக்யமாக ப்ராம்மணர்களைத்தான் துன்புறுத்தினார்கள். ராஜ்யத்தைக் கைப்பற்ற வேண்டி ஒருவருக்கொருவர் போராடிக் கொண்டிருந்தனர்.

तदा विश्वेश्वरो विष्णुः प्रार्थितो मुनिमण्डलैः ।
नाम्ना राम इति ख्यातो जमदग्नेः सुतोऽभवत् ॥४॥

अधीतवेदवेदान्तो वीर्यशौर्यगुणान्वितः ।
पितृभक्तो मातृभक्तः क्षमावान् विजितेन्द्रियः ॥५॥

ब्रह्मचारी महाबुद्धिः सदा गोब्राह्मणप्रियः ।
सर्वसद्गुणसंपन्नो विरेजे भगवान् हरिः ॥६॥

*4-6.* அப்பொழுது சர்வேச்வரனான விஷ்ணு முனிவர்களின் வேண்டுகோளிற்கிணங்கி பரசுராமர் என்கிற பெயருடன் ஜமதக்னி முனிவரின் பிள்ளையாய் அவதரித்தார். வேத வேதாந்தங்களை அத்யயனம் செய்தவராகவும், வீர்யம் சௌர்யம்முதலிய குணங்கள் உடையவராகவும், பெற்றோர்களிடம் பக்தியுடையவராகவும், புலனடக்கமும் பொறுமையும் உடையவராகவும், சிறந்த புத்திமானாகவும், ப்ரும்மச்சாரியாகவும், பசுக்களிடமும், ப்ராம்மணர்களிடமும் ப்ரியம் உடையவராகவும் , எல்லா நற்குணங்களும் நிரம்பியவராகவும் விளங்கினார்.

कार्तवीर्यार्जुनो राजा सहस्रभुजसंयुतः ।
दत्तात्रेयोपासकश्च योगैश्वर्यसमन्वितः ॥७॥

सुदर्शनांशसंभूतो महात्मा बलदुर्मदः ।
आजगाम मुनेः स्थानमरण्ये मृगयां चरन् ॥८॥

तत्र दृष्ट्वा महासाध्वीं कुण्डोध्नीं सुरभिं नृपः ।
बलाज्जहार बलवान् जमदग्निमुपेक्ष्य सः ॥९॥

जमदग्निर्दुःखितोभूद्धृतायां गवि तापसः ।
अकुर्वन्नग्निहोत्रञ्च पत्न्या रेणुकया सह ॥१०॥

*7-10. இப்படி இருக்கையில் ஆயிரம் கைகள் உடைய கார்த்தவீர்யார்ஜுனன் என்கிற அரசன் தத்தாத்ரேயரை உபாசனை செய்து, அஷ்டமஹா சித்திகளும் பெற்று, தனது பலத்தினால் கர்வமடைந்தவனாய் இருந்தான். அவன் ஒருநாள் வேட்டையாடிக்கொண்டு ஜமதக்னி முனிவரின் ஆச்ரமத்திற்கு வந்தான். அங்குள்ள முனிவரை அலக்ஷியம் செய்து விட்டு காமதேனுவை பலாத்காரமாய்க் கொண்டுபோனான். பசுவை பறிகொடுத்துவிட்டு முனிவர் மனைவியான ரேணுகா தேவியுடன் அக்னிஹோத்ரமும் செய்யாமல் வருத்தமுடன் உட்கார்ந்திருந்தார்.*

तदा तत्रागतो रामो गवे यवसमावहन् ।
राज्ञश्चौर्यं विदित्वा स कोपं प्राप सुदुःसहम् ॥११॥

आदाय परशुं तीक्ष्णं दत्तं रुद्रेण शंभुना ।
युद्धं कर्तुमना धीरः प्राप माहिष्मतीं पुरीम् ॥१२॥

सहस्रबाहुना राज्ञा चतुरङ्गबलेन च ।
एको युद्धं चकारायं द्विजः षोडशवार्षिकः ॥१३॥

छित्वा भुजसहस्रं तं जघान युधि वीर्यवान् ।
आजहार च तां धेनुं संप्राप निजमाश्रमम् ॥१४॥

*11-14.* அப்பொழுது பசுவிற்கு தீனியைச் சேகரித்துக் கொண்டு அங்கு வந்த பரசுராமர், அரசன் பசுவை திருடிச் சென்றதைக் கேள்விப்பட்டு மிகவும் கோபமடைந்தார். ருத்ரனால் தரப்பட்ட கோடாரியை கையிலேந்தி யுத்தம் செய்ய வேண்டி மாஹிஷ்மதி நகரத்திற்குச் சென்றார். நால்வகை ஸைன்யத்துடன்கூடிய ஆயிரம் கையுள்ள அரசனுடன் பதினாறு வயதுள்ள ப்ராம்மணச் சிறுவனாகிய பரசுராமர் ஒருவரே யுத்தம் செய்தார். அவனது ஆயிரம் கைகளையும் துண்டித்து அவனையும் கொன்று பசுவை தனது ஆச்ரமத்திற்கு மீட்டு வந்தார்.

कालेन बहुना तस्य कार्तवीर्यस्य भूपतेः ।
पुत्राः परशुरामेऽस्मिन् द्वेषयुक्ता महात्मनि ॥१५॥

जमदग्निं हन्तुकामास्त्वाययुस्तस्य चाश्रमम् ।
दर्भं हर्तुं बहिर्याते रामे बलवतां वरे ॥१६॥

अग्निहोत्रं प्रकुर्वाणं मौनव्रतसमन्वितम् ।
जघ्नुस्तं ब्राह्मणं वृद्धं तत्पत्न्या वारिता अपि ॥१७॥

*15-17.* அந்த கார்த்தவீர்யார்ஜுனனின் பிள்ளைகள் வெகு காலத்திற்குப் பிறகு பரசுராமரிடம் த்வேஷம் உடையவர்களாய் ஜமதக்னி முனிவரை கொல்ல தீர்மானித்து பரசுராமர் இல்லாத சந்தர்பம் பார்த்து ஆச்ரமத்திற்கு வந்தனர். அக்னிஹோத்ரம்

செய்துகொண்டு மௌனமாய் உட்கார்ந்திருக்கும் முனிவரை ரேணுகாதேவி தடுக்கும்போதே கேளாமல் கொன்று விட்டனர்.

हा राम राम रामेति माता चुक्रोश रेणुका ।
आजगाम तदा सद्यस्तत्र रामो महाजवः ॥१८॥

निहतं पितरं दृष्ट्वा क्रोशन्तीञ्चापि मातरम् ।
हस्ते परशुमादाय क्षत्रान्ताय मनो दधे ॥१९॥

निक्षिप्य पितृदेहं तं मातरि प्रभुरीश्वरः ।
महाकोपेन संयुक्तश्चक्रे दिग्विजयं द्विजः ॥२०॥

त्रिःसप्तकृत्वः पृथिवीं कृत्वा निःक्षत्रियां प्रभुः ।
अभयं प्रददौ नृणां ब्राह्मणानां गवां तथा ॥२१॥

*18-21.* ரேணுகாதேவி ஹா ராம! ராம! ராம! என்று அழவே அதைக் கேட்டு ஓடிவந்த பரசுராமர் தந்தை கொல்லப்பட்டதையும், தாய் அலறுவதையும் கண்டு அளவு கடந்த கோபமடைந்து கோடாறியைக் கையில் ஏந்தி க்ஷத்ரிய குலத்தையே ஒழிக்க ப்ரதிக்ஞை செய்தார். தந்தையின் உடலை தாயினிடம் ஒப்படைத்துவிட்டு, திக்விஜயம் செய்து மூவேழு இருபத்தியோரு தடவை க்ஷத்ரியர்களை ஒழித்து பசுக்களுக்கும், ப்ராம்மணர்களுக்கும், மற்ற மக்களுக்கும் அபயம் தந்தார்.

आश्रमं स्वं पुनः प्राप्य सान्त्वयामास मातरम् ।
पितरं जीवयामास महिम्ना स्वेन माधवः ॥२२॥

सप्तर्षिमण्डले स्थानं ददौ पित्रे जगत्पतिः ।
समन्तपञ्चके क्षेत्रे यज्ञं चक्रे द्विजोत्तमः ॥२३॥

कश्यपाय महीं दत्वा महेन्द्रशिखरङ्गतः ।
तपश्चक्रे महावीरो रामो ब्रह्मविदां वरः ॥२४॥

दृप्तक्षत्रियनाशाय स्वदेहमतिनिर्मलम् ।
प्रविष्टां विष्णुशक्तिं तां सीतायाः पतये ददौ ॥२५॥

अथ रामो जामदग्न्यस्तापसोऽभूत् क्षमानिधिः ।
महेन्द्रशिखरे नित्यं वसति स्म तपश्चरन् ॥२६॥

*22-26.* அந்த பரசுராமர் தனது ஆச்ரமத்திற்கு திரும்பி வந்து தாயாரை சமாதானம் செய்தார். தனது பெருமையால் தந்தையையும் பிழைக்கச் செய்து ஸப்தரிஷிகளில் ஒருவராக இருக்கச்செய்தார். பிறகு குருக்ஷேத்திரத்தில் யாகம் செய்து பூமி முழுவதையும் கச்யபருக்கு தானம் செய்துவிட்டு மஹேந்திர மலைக்குச் சென்று தவம் செய்யலானார். கொழுப்படைந்த க்ஷத்ரியர்களை நாசம் செய்யவேண்டி தன்னிடம் ஆவேசித்திருந்த விஷ்ணுசக்தியை ஸீதாபதியான ராமனிடம் சேர்த்து விட்டார். பிறகு பரசுராமர் பொறுமைசாலியாய் மஹேந்திரமலையில் தவம் செய்துகொண்டு வசிக்கலானார்.

यः पठेद्भृगुरामस्य चरितं कल्मषापहम् ।
वीर्यवान् बलवांल्लोके सर्वत्र विजयी भवेत् ॥२७॥

विष्णुचक्रांशभूतोऽयं कार्तवीर्यार्जुनो नृपः ।
क्षत्रनाशाय जगतो लीलया नाटके यथा ॥२८॥

तं स्मरन् श्रद्धया भक्त्या कार्तवीर्याजुनं नृपम् ।
नष्टं द्रव्यमवाप्नोति वीर्यं तेजो न संशयः ॥२९॥

27-29. பாபங்களைப் போக்கும் பரசுராமரின் சரிதத்தைப் படிப்பவன் சிறந்த பலவானாகி உலகெங்கும் வெற்றியைப் பெறுவான். விஷ்ணுசக்ரத்தின் அம்சமாய் அவதரித்த கார்த்தவீர்யார்ஜுனனும் . நாடகத்தில் நடிப்பதுபோல் விளையாட்டாகவே பரசுராமரிடம் த்வேஷம் காட்டி க்ஷத்ரியர்கள் அழியக் காரணமாக இருந்தான். ச்ரத்தையுடனும் பக்தியுடனும் கார்த்தவீர்யார்ஜுனனை த்யானம் செய்தால் இழந்தபொருள் திரும்பிக் கிடைக்கும்.

इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये सृष्टिकाण्डे
परशुरामचरितं नाम त्रयोदशोऽध्यायः ।। १३ ।।

இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமி ஸ்வாமிகள் அருளிச்செய்த ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்ம்யம் ஸ்ருஷ்டி காண்டத்தில் பதிமூன்றாவது அத்யாயம் முற்றும்.

## अथ चतुर्दशोऽध्यायः

## பதினான்காவது அத்யாயம்

### श्रीसद्गुरुरुवाच

स्वायंभुवो मनुश्चाथ क्षत्रधर्मं समाश्रितः ।
भुवनं पालयामास विधाय स्मृतिमुत्तमाम् ।।१।।

प्रियव्रतोत्तानपादौ तस्य पुत्रौ यशस्विनौ ।
आकूतिर्देवहूतिश्च प्रसूतिस्तस्य कन्यकाः ।।२।।

उत्तानपादतनयो ध्रुवो भागवतोत्तमः ।
यः पञ्चहायनो बालस्तपसाऽतोषयद्धरिम् ।।३।।

तस्य वंशे पृथुर्जातः केशवांशसमन्वितः ।

धरित्रीं धेनुरूपां यो दुदोह निजतेजसा ॥४॥

भरतो नाम राजर्षिः प्रियव्रतकुलोद्भवः ।
यः प्रपेदे परं धाम संयमाज्जन्मभिस्त्रिभिः ॥५॥

ஸ்ரீஸத்குரு

*1-5.* ஸ்வாயம்புவமனு, மனுஸ்ம்ருதியைச் செய்து அதன் படி உலகை ஆண்டு வந்தார். அவருக்கு ப்ரியவ்ரதன், உத்தானபாதன் என்ற இரண்டு பிள்ளைகளும் ஆஹூதி, தேவஹூதி, ப்ரஸூதி என்கிற மூன்று கன்னிகைகளும் இருந்தனர். உத்தானபாதனுக்கு பாகவதோத்தமனான த்ருவன் பிறந்தான். அவன் ஐந்து வயதிலேயே தவம் செய்து பகவானைக் கண்டான். அவனுடைய வம்சத்தில் ப்ருது என்கிற அவதார புருஷன் தோன்றினான். ப்ரியவ்ரதனுடைய வம்சத்தில் பரதன் என்கிற ராஜரிஷி தோன்றினார். அவர் யோகாப்யாசத்தினால் மூன்று ஜன்மத்தில் பகவானைஅடைந்தார்.

मरीचिरत्र्यङ्गिरसौ पुलस्त्यः पुलहः क्रतुः ।
भृगुर्वसिष्ठो दक्षश्च कर्दमश्चापि नारदः ॥६॥

एते ब्रह्मकुमाराश्च महाभागवताः स्मृताः ।
यैः सृष्टाभिः प्रजाभिश्च समृद्धं भुवनत्रयम् ॥७॥

मरीचेः कश्यपः पुत्रो बहुभार्यः प्रजापतिः ।
विनता तस्य भार्या तु गरुत्मन्तमजीजनत् ॥८॥

तथा दितिस्तस्य भार्या सुषुवे च पतिव्रता ।
हिरण्यकशिपुं ज्येष्ठं हिरण्याक्षमथानुजम् ॥९॥

शापेन सनकादीनां सञ्जातौ दैत्यपुङ्गवौ ।
वराहसिंह्मरूपाभ्यां जघान मधुसूदनः ॥१०॥

6-10. மரீசி, அத்ரி, அங்கிரஸ், புலஸ்தியர், புலஹர், க்ரது, ப்ருகு, வஸிஷ்டர், தக்ஷர், கர்தமர், நாரதர், என்கிற இந்த மஹாபாகவதர்கள் ப்ரும்மாவின் குமாரர்கள். மரீசியின் பிள்ளை கச்யபர், அவருக்கு பல மனைவிகள். அவர்களுள் வினதை கருடபகவானைப் பெற்றாள். பதிவ்ரதையான திதி ஹிரண்யகசிபுவையும், ஹிரண்யாக்ஷனையும் பெற்றாள். ஸனகாதிகளின் சாபத்தினால் தோன்றிய அவர்களை பகவான் வராஹ அவதாரத்தினாலும், நரஸிம்மாவதாரத்தினாலும் வதம் செய்தார்.

प्रह्लादस्य प्रियं पौत्रं महाबलिमुपागतः ।
विष्णुर्वामनरूपेण ययाचे पृथ्वीमिमाम् ॥११॥

तद्भक्तिवशमापन्नो भगवान् भक्तवत्सलः ।
रसातले गदापाणिरद्यापि द्वारि तिष्ठति ॥१२॥

अत्रेरप्यनसूयायां पुत्रत्वं प्राप्य माधवः ।
नाम्ना दत्त इति ख्यातो योगशास्त्रमपालयत् ॥१३॥

पौलस्त्यतनयञ्चाथ राक्षसेन्द्रं तु रावणम् ।
जघान राघवो भूत्वा समरे सानुजं हरिः ॥१४॥

भृगुः सत्त्वपरीक्षायां विष्णोर्वक्षस्यताडयत् ।
क्षमावान् भगवान् विष्णुः पूजयामास तं मुनिम् ॥१५॥

11-15. ஹிரண்யகசிபுவினுடைய புத்ரன் ப்ரஹ்லாதன். ப்ரஹ்லாதனின் பேரன் மஹாபலி. அவனிடம் பகவான் மூன்று அடி பூமிதானம் பெற்று உலகை அளந்தார். அவனுடைய பக்திக்கு வசமாகி த்வாரபாலகனாய் இன்றும் நிற்கிறார். அத்ரியின் மனைவி அனஸூயை. அவளிடம் பகவான் தத்தாத்ரேயமூர்த்தியாய் அவதரித்தார். புலஸ்த்யரின் பேரன் ராவணன். அவனை பகவான் ராமாவதாரத்தில் வதம் செய்தார். ப்ருகுமுனிவர் மும்மூர்த்திகளில் யார் ஸத்வகுணம் உடையவர்? என்று பரீக்ஷை செய்யவேண்டி விஷ்ணுவின் பொறுமையை சோதித்து அறிந்துகொண்டு அவரையே பூஜித்தார்.

साक्षाल्लक्ष्मीर्भृगोः पुत्री तपसा बहुना हरिम् ।
आराध्य तत्प्रसादेन ज्येष्ठपत्न्यभवत्प्रभोः ॥१६॥

जमदग्निर्भृगोः पुत्रो जामदग्न्यो हरिः स्वयम् ।
अधर्मचेष्टितं क्षात्रमशेषं निजघान यः ॥१७॥

मार्कण्डेयो महायोगी भृगुवंशसमुद्भवः ।
आराध्य तपसा विष्णुं तस्य मायां ददर्श च ॥१८॥

भगवान् कपिलश्चापि कर्दमस्यात्मजोऽभवत् ।
श्रीमतीमुपयेमे यः साङ्ख्यज्ञो मातुराज्ञया ॥१९॥

नारदः सर्वशास्त्रज्ञः कृष्णसङ्कीर्तनप्रियः ।
यमाश्रित्य हरिं जग्मुर्ध्रुवकायाधवादयः ॥२०॥

16-20. லக்ஷ்மீதேவி ப்ருகுவின் புத்ரியாய் அவதரித்து தவம் செய்து பகவானின் பட்டமஹிஷியாக ஆனாள். ஜமதக்னி முனிவர் ப்ருகுவின் புத்ரர். அவருடைய புத்ரனாய் பரசுராமர் தோன்றினார். ப்ருகுவின் வம்சத்தில் மார்க்கண்டேயர்

தோன்றினார். விஷ்ணுவை ஆராதித்து பகவானின் மாயாவிபூதியைக் கண்டுகொண்டார். கர்தமரின் பிள்ளையாக பகவானே கபிலவாசுதேவனாய்த் தோன்றினார். சாங்கிய மதத்தைப் போதித்த அவர் தாயாரான தேவஹூதியின் உத்தரவுப்படி ஸ்ரீமதியை மணம் செய்து கொண்டார். எல்லா சாஸ்திரங்களும் அறிந்த நாரதர் க்ருஷ்ணகீர்த்தனத்தில் ப்ரியமுடையவர். ப்ரஹ்லாதன், த்ருவன் முதலியவர்கள் நாரதரின் சிஷ்யர்கள்.

नानावंशेषु भगवान् विष्णुर्नानावतारकृत् ।
धर्मं रक्षति धर्मात्मा तत्तत्कालानुसारतः ॥२१॥

श्रीमद्भागवते व्यक्तमेतत्सर्वं प्रकाशितम् ।
शुकेन व्यासपुत्रेण सर्वज्ञेन महात्मना ॥२२॥

सर्वत्र व्याप्य गोविन्दो नानारूपधरः स्वयम् ।
करोति विविधां लीलां परमात्मा सनातनः ॥२३॥

अन्येषामपि देवानां या लीलाः कर्णमञ्जुलाः ।
कृष्णस्यैवेति ता लीलाः शृणुयाद्भक्तसत्तमः ॥२४॥

सर्वेषामपि देवानामन्तर्यामी हरिः स्वयम् ।
तस्मात्तस्यैव माहात्म्यं तत्र तत्र प्रकाशते ॥२५॥

*21-25.* இந்த எல்லா விஷயங்களும் ஸ்ரீமத்பாகவதத்தில் வ்யாஸபுத்ரரான ஸ்ரீசுகமுனிவரால் விஸ்தாரமாகச் சொல்லப் பட்டிருக்கிறது. க்ருஷ்ணபரமாத்மா இவ்வாறு பலரூபங்களைத் தரித்து பலலீலைகளைச் செய்கிறார். உலகில் எல்லாம் அவருடைய உருவங்களே. நடப்பதெல்லாம் அவருடைய லீலைகளே மற்ற தெய்வங்களின் லீலைகளைக்கூட காதுக்கினிய க்ருஷ்ணலீலை என்றே பக்தன் கேட்க வேண்டும். ஏனெனில்

எல்லா தெய்வங்களுக்கும் ஹரியே அந்தர்யாமி.

सर्वदेवमयः कृष्णः सर्वलीलामयः स्वयम् ।
तस्मान्न जायते भेदो भक्तानां तत्त्वदर्शिनाम् ॥२६॥

तत्र तत्रांशभागेन दृश्यन्ते तस्य केलिकाः ।
पूर्णरूपेण ता लीलाः प्रकाशन्ते यदूद्वहे ॥२७॥

*26-27.* அந்த அந்த பக்தர்களுக்கு ஏற்றபடி அந்த அந்த தெய்வங்களாய் இருந்து லீலை செய்பவன் க்ருஷ்ணனே என்று அறிந்துகொண்ட ஞானிகளான பக்தர்களுக்கு பேதம் ஏற்படுவதில்லை. ஆங்காங்கே பகவானின் லீலை ஓரம்சமே காணப்படுகிறது. க்ருஷ்ணனிடமோ லீலைகள் பூர்ணமாய்க் காணப் படுகின்றன.

*इति श्रीमत्परमहंसपरिव्राजकाचार्यवर्यसर्वप्राणिसंरक्षकजगद्गुरु श्रीभगवन्नाम बोधेन्द्रचरणारविन्दमकरन्दरसिकेन श्रीकृष्णप्रेमिमहाप्रभुणा विरचिते श्रीबृन्दावनमाहात्म्ये सृष्टिकाण्डे वंशावलिसङ्ग्रहो नाम चतुर्दशोऽध्यायः ॥१४॥*

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமி ஸ்வாமிகள் அருளிச்செய்த ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்ம்யம் ஸ்ருஷ்டி காண்டத்தில் பதினான்காம் அத்யாயம் முற்றும்.**

॥ इति सृष्टिकाण्डः समाप्तः॥

**ச்ருஷ்டிகாண்டம் முற்றும்**

॥श्रीभक्तकोलाहलार्पणमस्तु॥

श्रीहरिः

श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचितं

ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிஸ்வாமிகள் அருளிச்செய்த

# श्रीबृन्दावनमाहात्म्यम्

# ஸ்ரீப்ருந்தாவனமாஹாத்ம்யம்

## क्षेत्रकाण्डम्

## க்ஷேத்ரகாண்டம்

### अथ प्रथमोऽध्यायः

### முதல் அத்யாயம்

*भागवता ऊचुः*

माहात्म्यं मधुरायाश्च गोवर्धनगिरेस्तथा ।
बृन्दाया यमुनायाश्च वद सद्गुरुपुङ्गव ॥१॥

पुण्ये मधुवने क्षेत्रे तपः कृत्वा ध्रुवो महत् ।
श्रीकृष्णदर्शनं लेभे तत्कथां वद सद्गुरो ॥२॥

**பாகவதர்கள்**

*1-2.* ஸத்குருநாதரே! மதுரை, கோவர்த்தனம் ப்ருந்தா தேவி, யமுனாதேவி, இவர்களின் மஹிமையைச் சொல்லுவீராக. புண்ணியமான மதுவனத்தில் (ப்ருந்தாவனத்தில்) தவம்செய்த துருவன் கதையையும் சொல்ல வேண்டும்.

श्रीसद्गुरुरुवाच

उत्तानपादो राजाऽऽसीत् स्वायंभुवमनोः सुतः ।
धर्मात्मा सत्यसन्धश्च महावीरो महामतिः ॥३॥

आस्तां तस्य कुटुम्बिन्यौ सुनीतिः सुरुचिस्तथा ।
ज्येष्ठा सुनितिः सुभगा सर्वसद्गुणसम्युता ॥४॥

तस्याः पुत्रो ध्रुवो नाम बालकः पञ्चहायनः ।
मेधावी बुद्धिमान् धीरो मानी दोषविवर्जितः ॥५॥

अनादृतापि भर्त्रा सा सुनीतिस्तु पतिव्रता ।
पुत्रस्य वदनं वीक्ष्य तुष्टिं कामप्यवाप सा ॥ ६॥

ஸ்ரீஸத்குரு

3-6. சுவாயம்புவமனுவின் புத்திரனும், தர்மாத்மாவும், ஸத்தியஸந்தனும், மஹாவீரனும், மஹாபுத்திமானுமாகிய உத்தானபாதன் என்கிற அரசன் இருந்தான். அவனுக்கு சுநீதி என்றும் சுருசி என்றும் இரண்டு மனைவிகள் இருந்தனர். மூத்த மனைவி சுநீதி நல்ல குணமுடையவள். அவளுக்கு துருவன் என்கிற புத்திரன் இருந்தான். அவன் ஐந்துவயது சிறுவனா யிருந்தபோதிலும் சிறந்த புத்திமானாகவும், தைரியசாலியாகவும், குற்றமற்றவனாகவும், மானமுடையவனாகவும் இருந்தான். சுநீதியை உத்தானபாதன் ஆதரிக்கவில்லை. பதிவிரதையான அவள் தனது புதல்வனின் முகத்தைக் கண்டு ஏதோ ஸந்தோஷத்துடன் வாழ்ந்துவந்தாள்.

आजगाम पितुर्गेहं कदाचिद्बालको ध्रुवः ।
यत्रास्ते सन्ततं राजा सुरुच्या सहितः प्रभुः ॥७॥

सुरुच्या संवदन्तं तमासीनं काञ्चनासने ।
अवलोक्य स्वपितरमगमत्त्वरया शिशुः ॥८॥

कुटिलालकसंयुक्तमव्यक्तकलभाषणम् ।
पूर्णचन्द्राननं बालं मातृमृष्टं स्वलङ्कृतम् ॥९॥

अङ्कं पितुः समारोढुमागच्छन्तं तथाऽऽदरात् ।
तं विलोक्य ध्रुवं देवी सरोषमवदत्स्फुटम् ॥१०॥

*7-10. ஒருஸமயம் சுருசியுடன் அரசன் இருக்கும் அரண்மனைக்கு குழந்தையான துருவன் வந்தான். அங்கு ஸிம்மாஸனத்தில் சுருசியுடன் வீற்றிருக்கும் தனது தந்தையைக் கண்டு ஆர்வத்துடன் ஓடி வந்தான். சுருள்சுருளான கேச முடையவனும், மழலை பேசுபவனும், பூர்ணசந்திரனைப் போன்ற முகமுடையவனும், தாயாரான சுநீதியால் நன்றாக அலங்கரிக்கப்பட்டவனும், தந்தையின் மடியில் ஆசையுடன் ஏறுவதற்கு வருபவனும், குழந்தையுமான துருவனைக் கண்டு சுருசிதேவி கோபமடைந்து சொன்னாள்.*

## सुरुचिरुवाच

रे मन्दभाग्य तिष्ठ त्वं किमिच्छसि संभ्रमात् ।
अङ्कं पितुः समारोढुं नार्हसि त्वं सुदुर्मते ॥११॥
कथं धैर्येण मे वेश्म प्रविश्यागतवानसि ।
यतस्त्वं नासि मे पुत्रो याहि ते मातुरन्तिकम् ॥१२॥

### சுருசி

*11-12. பாக்யமில்லாதவனே! ஏன் ஓடி வருகிறாய்? நில்! துர்புத்தியுடையவனே! தந்தையின் மடியில் ஏறுவதற்கு உனக்குத் தகுதியில்லை. எனது அரண்மனைக்கு எப்படி வந்தாய்? என்ன தைரியம் உனக்கு? நீ என் மகன் இல்லை. உன் தாயினிடம் ஓடு.*

### श्रीसद्गुरुरुवाच

मात्रा सपत्न्या संप्रोक्तः स्वपित्रापि तिरस्कृतः ।
उच्चैःस्वरेण प्ररुदन्नगमन्मातुरन्तिकम् ॥१३॥

तं विलोक्य प्रियं पुत्रं प्ररुदन्तञ्च सुस्वरम् ।
अपृच्छत्सान्त्वयन्ती सा नितरां दूनमानसा ॥१४॥

### ஸ்ரீஸத்குரு

*13-14.* இவ்வாறு மாற்றாந்தாயினால் விரட்டப்பட்டவனும், தந்தையினாலும் ஆதரிக்கப்படாதவனுமான துருவன் உரத்த குரலில் அழுதுகொண்டே தனது தாயினிடம் வந்தான். அழுதுகொண்டே வரும் தனது புதல்வனைக் கண்டு கலங்கிய சுநீதி அவனை ஸமாதானம் செய்யவேண்டி கேட்டாள்.

### सुनीतिरुवाच

गतवानसि कुत्र त्वं किं रोदिषि ममात्मज ।
क्रीडान्तरे वयस्यैस्त्वं किं जितोसि महामते॥१५॥

अथवा बालकैर्दुष्टैराविद्धोसि च मे वद ।
क्षुत्क्लान्तजठरो वासि स्तनं मे पिब बालक ॥१६॥

### சுநீதி

*15-16.* குழந்தாய்! நீ எங்கு சென்றாய்? ஏன் அழுகிறாய்? புத்திமானே! விளையாடும்பொழுது எந்தச் சிறுவனிடமாவது தோற்றுவிட்டாயா? அல்லது துஷ்டச் சிறுவர்கள் உன்னை அடித்துவிட்டார்களா? உனக்குப் பசியா? தாகமா? இந்தப் பாலைக் குடித்துக்கொண்டே நடந்ததைச் சொல்லு.

### ध्रुव उवाच

मातस्त्वं शृणु वृत्तान्तं मम दीनस्य शोचतः ।

अङ्कमारोढुकामोऽहं गतवान् पितुरन्तिकम् ॥१७॥

ताडयामास मां तत्र सपत्नीजननी भृशम् ।
कपोलं पश्य मे मातस्तत्कराङ्गुलिलाञ्छितम् ॥१८॥

துருவன்

17-18. அம்மா! கஷ்டப்படுகின்ற என் கதையைக் கேள். அப்பாவின் மடியில் ஏறுவதற்கு ஆசையுடன் சென்றேன். அங்கு சுருசியம்மா என்னை நன்றாக அடித்துவிட்டாள். அவள் கை விரல்கள் பதிந்துள்ள என் கன்னத்தைப் பாரம்மா.

सुनीतिरुवाच

मा शुचो मम बाल त्वं हन्त मे पापमीदृशम् ।
मम पापादपापस्त्वं शोकं संप्राप्तवानसि ॥१९॥

जनन्या मा कुरु क्रोधं सा पूज्या जननी त्वया ।
क्षमया लभ्यते सिद्धिः सर्वकार्येषु बालक ॥२०॥

न पिता तव राजाऽयं नाहं माता च पुत्रक ।
पिता नारायणो देवो माता लक्ष्मीस्तथा तव ॥२१॥

अनित्यं किल बान्धव्यं लोके मरणसङ्कुले ।
आत्मबन्धुः कृपासिन्धुर्भगवानेव नापरः ॥२२॥

तमेव भज गोविन्दं लोकानां पितरं गुरुम् ।
स एव रक्षको नूनं तव दीनस्य बालक ॥२३॥

सुलभो भगवान् कृष्णो दृढया भक्तिनिष्ठया ।
सुखाराध्यस्त्वादृशानां दुराराध्योपि योगिनाम् ॥२४॥

### சுநீதி

*19-24.* குழந்தாய்! நீ வருந்தாதே. அந்தோ! இது என்னுடைய பாபம். என் பாபத்தினால் நீ கஷ்டப்படுகிறாய். சுருசியம்மாவிடம் கோபமடையாதே. அவள் உன்னால் பூஜிக்கத்தக்கவள். பொறுமையால்தான் எல்லாக் காரியமும் கை கூடும். அரசன் உனக்குத் தந்தையில்லை. நானும் உனக்குத் தாயில்லை. உனக்குத் தந்தை நாராயணன். உனக்குத் தாய் லக்ஷ்மி தேவியே. அழியக் கூடிய இவ்வுலக வாழ்க்கையில் மனிதர்களின் உறவு அனித்யமானது. உண்மையான பந்து கருணைக்கடலான பகவானே என்றறி. உலகத்திற்குத் தந்தையான, குருவான கோவிந்தனையே பஜனை செய். குழந்தாய்! உனக்கு அவனே ரக்ஷகன். பகவானாகிய கிருஷ்ணன் திடமான பக்திக்கு சுலபமாகிறான். யோகிகளுக்கும் கிடைக்காத அவன் உன்னைப் போன்ற குழந்தைகளுக்கு சுலபமாய்க் கிடைக்கிறான்.

### श्रीसद्गुरुरुवाच

श्रुत्वा सुनीतिवचनं बालकोऽयं दृढव्रतः ।
निर्जगाम गृहात्सद्यः कृष्णदर्शनलालसः ॥२५॥

गच्छन्तं पथि तं बालं रुदन्तञ्च मुहुर्मुहुः ।
यदृच्छयाऽपश्यदेनं नारदः कृष्णचोदितः ॥२६॥

करं निधाय कृपया तस्यैव शिरसि प्रभुः ।
अपृच्छत् प्रेमसम्युक्तो विलोक्य वदनं शुभम् ॥२७॥

### ஸ்ரீஸத்குரு

*25-27.* இவ்வாறு சுநீதியின் வசனத்தைக் கேட்ட துருவன் திடசித்தத்துடன் கிருஷ்ணதரிசனத்தை வேண்டி உடனேயே வீட்டைவிட்டு வெளியேறினான். அழுதுகொண்டே செல்லும் அவனை க்ருஷ்ணனால் அனுப்பப்பட்ட நாரதர் நடுவழியில்

கண்டார். அவனது தலையில் கையை வைத்து கருணை செய்து கபடமற்ற அவன் முகத்தைக் கண்டு ப்ரேமையுடன் கேட்டார்.

### नारद उवाच

उत्तानपादतनय क्व गच्छसि महामते ।
हित्वा शोकेन सन्तप्तो गृहं सर्वसमृद्धिमत् ॥२८॥

### நாரதர்

*28.* உத்தானபாதனின் புதல்வனே! செல்வம் நிறைந்த உனது வீட்டைவிட்டு, அழுதுகொண்டே நீ எங்கு செல்கிறாய்?

### ध्रुव उवाच

सर्वज्ञोसि महाबुद्धे विज्ञाप्यं मम किं त्वयि ।
तिरस्कृतोस्मि पित्राऽहं वनं गच्छामि सांप्रतम् ॥२९॥

### துருவன்

*29.* ஞானிகளிற் சிறந்தவரே! தங்களுக்கே எல்லாம் தெரியும். உம்மிடம் விண்ணப்பிக்கவேண்டிய அவசியமில்லை? எனது தந்தையால் நான் நிராஹரிக்கப்பட்டேன். எனவே காட்டிற்குச் செல்லுகிறேன்.

### नारद उवाच

बहुदोषं वनं विद्धि पितरं सान्त्वयामि ते ।
तपः कर्तुं नार्हसि त्वं सुकुमारोसि बालक ॥३०॥

मुनीनामपि सर्वेषां कुर्वतां सुदृढं तपः ।
दुर्लभो भगवान् विष्णुः सर्वलोकेश्वरः प्रभुः ॥३१॥

सर्वदेवसमाराध्यो भगवान् मधुसूदनः ।

सोऽयं सुदुर्लभो देवः कथं ते वशमाप्नुयात् ॥३२॥

गच्छ त्वं गृहमेवाद्य दुर्लभं कृष्णदर्शनम् ।
बहूनि सन्ति भक्ष्याणि गृहे क्रीडनकानि ते ॥३३॥

**நாரதர்**

*30-33.* குழந்தாய்! காட்டில் பல துன்பங்கள் உண்டு. உனது தந்தையை நான் ஸமாதானம் செய்வேன். திரும்பி வா. நீயோ பச்சைக் குழந்தை. தவம் செய்யத் தகுதியற்றவன். ஸர்வலோகேச்வரனான அந்த விஷ்ணு திடமான தவம் செய்யும் முனிவர்களுக்குக்கூட எளிதில் கிடைக்காதவன். அத்தகைய மதுசூதனன் உனக்கு எப்படி சுலபமாவான்?உனக்கு க்ருஷ்ணதரிசனம் துர்லபம். வீட்டில் பல தின்பண்டங்களும், விளையாட்டுப் பொருள்களும் இருக்கின்றனவே. ஆகையால் வீட்டிற்கே திரும்பு.

**ध्रुव उवाच**

न कामये क्रीडनकं भक्ष्यं भोज्यं न कामये ।
केवलं कामये सोहं साक्षाच्छ्रीकृष्णदर्शनम् ॥३४॥

स एव हि पिता माता सखा बन्धुर्गुरुर्मम ।
तं दर्शय कृपासिन्धो योगिनामपि दुर्लभम् ॥३५॥

तव कारुण्यमात्रेण दुर्लभोऽपि हरिः स्वयम् ।
मम दृष्टिपथं नूनमागमिष्यति माधवः ॥३६॥

**துருவன்**

*34-36.* முனிவரே! நான் விளையாட விரும்பவில்லை. சாப்பாட்டையும் விரும்பவில்லை. க்ருஷ்ணதரிசனத்தை மட்டும் விரும்புகிறேன். எனக்குத் தாய், தந்தை, தோழன், குரு, பந்து

யாவரும் அந்தக் க்ருஷ்ணனேதான். யோகிகளுக்கும் கிடைக்காத அந்தக் க்ருஷ்ணனை நீர்தான் காட்ட முடியும். அந்த ஹரி உமது கருணையாலேயே என்னெதிரில் தோன்றுவார். இது நிச்சயம்.

### नारद उवाच

बालोऽपि त्वं समर्थोऽसि कर्तुं श्रीकृष्णदर्शनम् ।
त्वादृशानां बालकानां सुलभो भगवान् हरिः ॥३७॥

गच्छ शीघ्रं महाबुद्धे यमुनातीरकाननम् ।
तत्र श्रीवासुदेवस्य नामसङ्कीर्तनं कुरु ॥३८॥

सुप्रीतो भगवान् कृष्णो भक्तियोगेन केवलम् ।
अनन्यभक्तिसम्युक्तस्तमाराधय केशवम् ॥३९॥

### நாரதர்

*37-39.* துருவா! குழந்தையாயினும் நீயே க்ருஷ்ண தரிசனம் செய்யத் தகுதியுடையவன். உன்னைப்போன்ற குழந்தைகளுக்கு பகவான் சுலபமானவன். புத்திமானே! யமுனைக்கரையிலுள்ள காட்டிற்கு சீக்கிரமாய்ச் செல்வாயாக. அங்கு ஸ்ரீவாஸுதேவனின் திருநாமத்தை ஜபம் செய். உனது பக்தியினால் பகவானான க்ருஷ்ணன் ப்ரஸன்னமாவான்.

### श्रीसद्गुरुरुवाच

जगाम यमुनातीरमित्युक्तो बालको ध्रुवः ।
देवर्षिं तं परिक्रम्य प्रणम्य च दृढव्रतः ॥४०॥

वासुदेवात्मकं मन्त्रं नारदात्प्राप्य बालकः ।
तपश्चक्रे मधुवने पवित्रे यमुनातटे ॥४१॥

नारदो नगरीं गत्वा पुत्रशोकातुरं नृपम् ।
सान्त्वयामास कृपया सुनीतिं पुत्रवत्सलाम् ॥४२॥

ஸ்ரீஸத்குரு

40-42. இவ்வாறு சொல்லப்பட்ட குழந்தையான துருவன் நாரதரை வலம்வந்து வணங்கி விடைபெற்றுக்கொண்டு யமுனைக்கரையிலுள்ள மதுவனத்திற்கு வந்து தவம் செய்யலானான். நாரதரும் நகரத்திற்கு வந்து புத்திர சோகத்தினால் வருந்தும் அரசனையும் சுநீதியையும் ஸமாதானம் செய்தார்.

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये क्षेत्रकाण्डे ध्रुवचरित्रे प्रथमोऽध्यायः॥ १॥*

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமி ஸ்வாமிகள் அருளிச்செய்த ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்ம்யம் க்ஷேத்ரகாண்டத்தில் முதலாவது அத்தியாயம் முற்றும்.**

# अथ द्वितीयोऽध्यायः

# இரண்டாவது அத்யாயம்

### *श्रीसद्गुरुरुवाच*

ततश्च वैष्णवो बालो नासाग्रनिहितेक्षणः ।
ऊर्ध्वबाहुर्निराहारो निश्चेष्टः काष्ठवत्स्थितः ॥१॥

पादाङ्गुष्ठेन तिष्ठंश्च सर्वप्राणनिरोधकः ।
एकाग्रमनसा विष्णुं ध्यायंश्चक्रे तपो महत् ॥२॥

वर्षातपसमो धीरः पक्षिजालसमावृतः ।
सरीसृपैर्भक्ष्यमाणं नात्मानं वेद बालकः ॥३॥

बालकं तं धर्षयितुं देवाश्च कृतनिश्चयाः ।
भूतानि प्रेषयामासुस्त्वरया ध्रुवसन्निधिम् ॥४॥

भक्तियोगेन संसिद्धं नारायणपरायणम् ।
न शेकुस्ते धर्षयितुमपि लोकेश्वराः सुराः ॥५॥

अथ सङ्गम्य चान्योन्यं पुरस्कृत्य प्रजापतिम् ।
व्यजिज्ञपन् सुराः सर्वे लोकनाथाय विष्णवे ॥६॥

ஸ்ரீஸத்குரு

*1-6. பிறகு அந்த வைஷ்ணவச் சிறுவனான துருவன் ஒரு காலால் நின்றுகொண்டு, இரண்டு கைகளையும் உயரத்தூக்கி அஞ்ஜலி செய்துகொண்டு, ஆஹாரமில்லாமல், அசையாமல் கட்டைபோல் நின்றுகொண்டு, ப்ராணனையும் மனதையும் அடக்கி, விஷ்ணுவை தியானம் செய்துகொண்டே தவம் செய்தான். மழையிலும் வெய்யிலிலும் அசையாமல் நின்றான். பக்ஷிகள் அவன் மேல் கூடு கட்டின. எறும்பு, கரையான் இவைகள் கடித்தும் அவனறியவில்லை. அவனது தவத்தைக் கலைக்கவேண்டி தேவர்கள் பூதங்களை அனுப்பினார்கள். நாராயணனையே நம்பியிருக்கும் அவனை ஏதும் செய்ய முடியவில்லை. அதற்குப்பிறகு தேவர்கள் ஒன்றுகூடி ப்ரும்மாவை முன்னிட்டுக்கொண்டு விஷ்ணுவிடம் வந்து விண்ணப்பித்துக் கொண்டனர்.*

देवा ऊचुः

भगवन् बालकः कश्चिद्यमुनातीरकानने ।
तपः करोति सुदृढं सुराणामपि दुःसहम् ॥ ७॥

तपसा तस्य घोरेण दुःसहेनैव धर्षिताः ।

प्राप्तप्राणनिरोधाश्च वयं त्वां शरणङ्गताः ॥८॥

**தேவர்கள்**

7-8. பகவானே! யமுனைக்கரையில் ஒரு பாலகன் தவம் செய்கிறான். அவனுடைய தவத்தினால் தாக்கப்பட்ட நாங்கள் உம்மையே சரணமடைகிறோம்.

## श्रीभगवानुवाच

अहो संपीडिता यूयं तपसा बालकस्य ह ।
कण्डुकौशिकमुख्यानां मुनीनामपि वञ्चकाः ॥९॥

कथं वो बालकाद्भीतिरव्यक्तकलभाषणात् ।
यन्मां सर्वसुराध्यक्षं शरण्यं शरणङ्गताः ॥१०॥

**ஸ்ரீபகவான்**

9-10. ஆச்சர்யம்! கண்டு, கௌசிகன் முதலிய முனிவர்களைக் கூட கெடுத்துவிட்ட நீங்கள் ஒரு குழந்தையின் தவத்தினால் வருந்துகின்றீர்கள். மழலை பேசும் குழந்தையிடம் உங்களுக்கு பயம் எப்படி வந்தது?

## ब्रह्मोवाच

तत्र हेतुं न जानीमो बालकोऽयं दृढव्रतः ।
तस्य घोरं तपो हर्तुं सुरेशोऽपि न शक्नुयात् ॥११॥

**ப்ரும்மா**

11. அதற்குக் காரணம் தெரியவில்லை. அந்த பாலகன் வீம்புக்காரன். அவனது கோரமான தவத்தைக் கெடுக்க இந்திரனாலும் முடியாது.

### श्रीभगवानुवाच

मदाश्रयाणां भक्तानां साधूनाञ्च महात्मनाम् ।
अनहङ्कारिणां कोपि विघ्नं कर्तुं न शक्नुयात्॥१२॥

निर्विघ्नं मार्गमाश्रित्य भक्तियोगं दृढव्रताः ।
अनन्यनिष्ठया भक्ता वशीकुर्वन्ति मां सुराः ॥१३॥

पालयाम्यन्तरायेभ्यो मामेव शरणागतान् ।
साक्षाद्विघ्नेश्वरोऽप्यस्य विघ्नं कर्तुं न शक्नुयात्॥१४॥

अहमेव गमिष्यामि सांप्रतं ध्रुवसन्निधिम् ।
प्रेषयिष्यामि भवनं वरमिष्टं प्रदाय च ॥१५॥

### ஸ்ரீபகவான்

12-15. அகந்தையை விட்டு என்னையே சரணமடைந்த பக்தர்களின் பக்திக்கு யாரும் தடைசெய்ய முடியாது. தடையில்லாத மார்கமான பக்தியோகத்தைக் கடைபிடித்து வேறுவழியில் செல்லாத திடசித்தமுடைய பக்தர்கள் என்னை வசம் செய்கின்றனர். தேவர்களே! என்னையே சரணமடைந்த வர்களை இடையூறுகளிலிருந்து நானே காப்பாற்றுகிறேன். ஸாக்ஷாத் விநாயகமூர்த்தியாலுங்கூட எனது பக்தர்களுக்கு விக்னம் செய்ய முடியாது. நானே இப்பொழுது துருவனின் ஸன்னிதிக்கு போவேன். விரும்பிய வரனைத் தந்து அவனை வீட்டிற்கு அனுப்புவேன்.

### श्रीसद्गुरुरुवाच

इत्युक्त्वा पुण्डरीकाक्षो भगवान् गरुडासनः ।
प्रतस्थे यमुनातीरं भक्तदर्शनलालसः ॥१६॥

शङ्खचक्रगदापाणिं पुण्डरीकायतेक्षणम् ।
कौस्तुभामुक्तकण्ठञ्च कालाम्भोधरविग्रहम् ॥१७॥

श्रीवत्सलाञ्छनं देवं कनकाम्बरधारिणम् ।
काञ्चीकलापपर्यस्तं क्वणत्कनकनूपुरम् ॥१८॥

करपद्मं लाघवेन भ्रामयन्तं मुहुर्मुहुः ।
शङ्खेन क्षीरमादाय पाययन्तं कृपानिधिम् ॥१९॥

कोटिमातृसमं कृष्णं वात्सल्यमृदुभाषणम् ।
विलोक्य राजपुत्रस्तं परमाश्चर्यसम्युतः ॥२०॥

बद्धाञ्जलिपुटो बालः समुत्फुल्लविलोचनः ।
गोविन्दं स्तोतुमारेभे मनोवाचामगोचरम् ॥२१॥

ஸ்ரீஸத்குரு

*16-21.* இவ்வாறு சொல்லி தாமரைக் கண்ணனான பகவான் பக்தனைப் பார்க்கவேண்டி துடித்துக்கொண்டு கருட வாஹனத்திலேறி மதுவனம் வந்து சேர்ந்தான். சங்க சக்ரகதாதரனும், தாமரைக்கண்ணனும், கழுத்தில் கௌஸ்துப மணிந்தவனும், நீருண்ட மேகம்போல் நீலவர்ணமானவனும், மார்பில் ஸ்ரீவத்ஸமுடையவனும், பீதாம்பரதாரியும், தங்க ஒட்டியாணம் அணிந்தவனும், கால்களில் ஒலிக்கின்ற பொற்சிலம்பு அணிந்தவனும், கையில் ஒரு தாமரையை ஏந்தி லாகவமாய் சுழற்றுபவனும், தாயைவிட கோடிமடங்கு அன்பைப் பொழிபவனும், கொஞ்சிப் பேசுபவனும், கருணைக் கடலுமாகிய ஸ்ரீக்ருஷ்ணனைக் கண்டு ராஜகுமாரனாகிய துருவன் மிகவும் ஆச்சர்யப்பட்டு நின்றான். அப்பொழுது பகவான் அவனுக்கு தனது சங்கத்தினால் ஞானப்பாலை போட்டவே, உடனே பாலகனும் மலர்ந்த கண்களை

உடையவனாய் கைகுவித்த வண்ணம் மனதுக்கும் எட்டாத கோவிந்தனைத் துதிக்கலானான்.

## ध्रुव उवाच

यो देवः सर्वभूतात्मा ममापि हृदये वसन् ।
कर्मसाक्षी भवति मे वासुदेवं तमाश्रये ॥२२॥

यस्यानुग्रहलेशेन विमूढो बालकोऽप्यहम् ।
एवं स्तौमि जगन्नाथं श्रीनाथं तं नमाम्यहम् ॥२३॥

लोकान् सर्वानिमान् कृष्ण चिच्छक्त्या व्याप्य तिष्ठसि ।
तव चैतन्यमात्रेण प्रकृतिर्हि प्रवर्तते ॥२४॥

अविज्ञाय परं तत्त्वं सर्वकारणकारणम् ।
अहङ्कारविमूढास्तु दैवं निन्दन्ति पौरुषात् ॥ २५॥

न पौरुषं तेषु नूनं क्लीबा एव हि ते प्रभो ।
एते कर्मफलाधीना भ्रमन्ति भवसागरे ॥२६॥

अविद्यया विमुग्धानां मन्मथाक्रान्तचेतसाम् ।
अशक्तानामात्मजये पौरुषं कथमुच्यते ॥२७॥

जितेन्द्रिया महात्मानः सत्यधर्मपरायणाः ।
ते हि सत्पुरुषा लोके दासभूतास्तव प्रभो ॥२८॥

अतोहं कामये दास्यं दासानां तव माधव ।
त्वत्कथामृतमत्तानां विरक्तानां महात्मनाम् ॥२९॥

या विरक्तिः कृपासिन्धो भक्तियोगेन जायते ।
सा नैव जायते नृणां सर्ववेदान्तचर्चया ॥३०॥

तस्मादेव हि ते भक्ता जितसंसारवासनाः ।
निर्भया निर्भरा लोके सञ्चरन्ति दृढव्रताः ॥३१॥

भक्तिमेव दृढां देहि तवैव चरणाब्जयोः ।
त्वमेवासि परं दैवं सर्वदेवनमस्कृतम् ॥३२॥

**துருவன்**

22-32. ஸர்வாந்தர்யாமியான எந்த தேவன் என் ஹ்ருதயத்திலும் இருந்துகொண்டு நான் செய்யும் எல்லாக் கர்மங்களுக்கும் ஸாக்ஷியாய் இருக்கிறானோ, அந்த வாஸுதேவனை ஆச்ரயிக்கிறேன். எவருடைய திருவருளால் ஒன்றுமறியாத குழந்தையேயாயினும் நான் இவ்வாறு துதிக்கின்றேனோ ஜகன்னாதனும் ஸ்ரீநாதனுமான அந்த தேவனை வணங்குகிறேன். ஹே க்ருஷ்ணா! நீர் தனது ஞான சக்தியினால் இந்த எல்லா உலகங்களையும் வியாபித்து நிற்கிறாய். உனது ஞானசக்தியாலேயே இந்த மாயை இயங்குகிறதல்லவா? எல்லாக் காரணங்களுக்கும் காரணமான பரம்பொருளையறியாத அகந்தை பிடித்த மூடர்கள் மனிதபலத்தை நம்பி தெய்வத்தை நிந்திக்கின்றனர். ப்ரபுவே! பேடிகளான அவர்களிடம் மனிதபலமும் இல்லை. இவர்கள் கர்மபலன்களுக்கு அடிமையாகி ஸம்ஸாரத்தில் சுழலுகின்றனர். மாயையில் மோஹித்து காமவசப்பட்டு புலன்களை வெல்லச் சக்தியற்ற அவர்களிடம் மனிதபலம்தான் எப்படி இருக்கும்? புலன்களையடக்கிய ஸத்தியத்திலும், தர்மத்திலும் நிலை பெற்றிருக்கும் பெரியோர்களான உனது அடியார்களே உலகில் ஸத்புருஷர்கள் அல்லவா? ஹே மாதவ! உனது கதையாகிய அம்ருதபானத்தினால் மதம் பிடித்தவர்களும், விரக்தி உடையவர்களும், உனது தாஸர்களுமான பெரியோர்களுக்கு

பணிவிடை செய்ய விரும்புகின்றேன். கருணைக்கடலே! வைராக்கியமானது பக்தியோகத்தினால் எப்படி உண்டாகிறதோ அப்படி எல்லா வேதங்களையும் சர்ச்சை செய்வதாலுங்கூட உண்டாவதில்லை. ஆகையினால்தான் உனது பக்தர்கள் ஸம்ஸார வாஸனைகளை ஜயித்து உலகில் திட சித்தமுடையவர்களாய் பயமின்றி பாரமின்றி ஸஞ்சரிக்கின்றனர். நீரே எல்லா தெய்வங்களுக்கும் மேற்பட்ட தெய்வமாய் இருக்கிறீர். உமது திருவடிகளில் பக்தியைக் கொடுப்பீராக.

**श्रीसद्गुरुरुवाच**

एवं स्तुवन्तं भगवान् प्रेमवात्सल्यपूरितः ।
लालयन् सान्त्वयामास कृपया मृदुभाषणैः ॥३३॥

**ஸ்ரீஸத்குரு**

33. இவ்வாறு துதிக்கின்ற பாலகனை பகவான் அன்புடனும் அருளுடனும் கொஞ்சிப் பேசி ஸமாதானம் செய்தான்.

**श्रीभगवानुवाच**

तृप्तोस्मि कृपया बाल सुप्रसन्नोस्मि संप्रति ।
दुर्लभोऽपि सुराणाञ्च यस्तेहं सन्निधिङ्गतः ॥३४॥

सर्वलोकोत्तमं लोकं ध्रुवस्थानं ददामि ते ।
यत्प्राप्य न पुनर्जीवः प्राप्नुयाद्भववेदनाम् ॥३५॥

यस्याः सदुपदेशेन तपस्त्वं कृतवानसि ।
तामेव जननीं गत्वा सान्त्वय क्षिप्रमेव हि ॥३६॥

देहावसाने मामेवं पुनर्द्रक्ष्यसि बालक ।
मृत्योर्मूर्ध्नि पदं दत्वा तदा प्राप्नुहि मत्पदम् ॥३७॥

### ஸ்ரீபகவான்

*34-37.* குழந்தாய்! உன்னிடத்தில் கருணையால் ப்ரஸன்னமாயிருக்கிறேன். தேவர்களுக்கும் துர்லபமான எனது தரிசனத்தை உனக்குத் தந்தேன். எல்லா உலகங்களையும்விட சிறந்த உலகமான துருவமண்டலத்தை உனக்குத் தந்தேன். அதையடைந்த ஜீவன் மறுபடியும் ஸம்ஸாரத்தில் துன்பப்பட மாட்டான். எந்த உனது அன்னையின் நல்ல உபதேசத்தினால் இவ்வாறு தவம் செய்தாயோ அந்த தாயாரை சீக்கிரமே திரும்பிச் சென்று ஸமாதானம் செய்வாயாக. குழந்தாய்! இப்பிறவி முடிந்ததும் உனக்கு நான் மறுபடியும் தரிசனம் தருவேன். நீ மரணத்தை வென்று எனது பரமபதத்தை அடைவாயாக.

### श्रीसद्गुरुरुवाच

इत्युक्त्वा भगवान् विष्णुस्तत्रैवान्तर्दधे हरिः ।
ज्योतिषा नीलवर्णेन बालं विस्मापयन् प्रभुः ॥३८॥

एवं विष्णोर्नियमनं संप्राप्य त्वरया ध्रुवः ।
स्वदेशं प्राप्य धर्मात्मा ववन्दे पितरौ ततः ॥३९॥

उत्तानपादो राजा च सा देवी सुरुचिस्तथा ।
नष्टं पुनरपि प्राप्तं सान्त्वयामासतुर्ध्रुवम् ॥४०॥

शिरस्याघ्राय चालिङ्ग्य सुनीतिर्बालकं ध्रुवम् ।
शुश्राव चरितं तस्य माता तेनैव कीर्तितम् ॥४१॥

धन्यं यशस्यमायुष्यं पुण्यमानन्दवर्धनम् ।
पठन् ध्रुवस्य चरितं प्राप्नोति परमां गतिम् ॥४२॥

### ஸ்ரீஸத்குரு

38-42. இவ்வாறு சொல்லி பகவானாகிய விஷ்ணு தனது நீலவர்ண ஜோதியால் குழந்தையை ஆச்சரியப்படுத்திவிட்டு மறைந்து போனார். பகவானின் உத்தரவை மீறாமல் தர்மமறிந்த துருவனும் சீக்கிரமாகத் திரும்பிவந்து பெற்றோர்களை வணங்கினான். உத்தானபாத மஹாராஜனும், சுருசிதேவியும் திரும்பிவந்த துருவனைக் கண்டு மகிழ்ச்சியடைந்து ஸமாதானம் செய்தனர். அன்னையான ஸுநீதியும் பாலகனான துருவனை வாரியெடுத்து அணைத்து உச்சி முகர்ந்து அவன் முகத்தாலேயே அவனது கதையைக் கேட்டு மகிழ்ச்சி அடைந்தாள். அருளையும், பொருளையும், ஆனந்தத்தையும் தரக் கூடிய இந்த துருவ சரிதத்தைப் படிப்பவன் பரமபதத்தை அடைவான்.

इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये क्षेत्रकाण्डे ध्रुवचरित्रं नाम द्वितीयोऽध्यायः।। २।।

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிஸ்வாமிகள் அருளிச்செய்த ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்ம்யம் க்ஷேத்ரகாண்டத்தில் இரண்டாவது அத்தியாயம் முற்றும்.**

# अथ तृतीयोऽध्यायः

## மூன்றாவது அத்யாயம்

### श्रीसद्गुरुरुवाच

तस्मिन् मधुवने पूर्वमम्बरीषो दृढव्रतः ।
एकादशीव्रतञ्चक्रे तत्कथां प्रवदाम्यहम् ।।१।।

स्वतन्त्रः सर्वशक्तोपि भगवांल्लोकनायकः ।
भक्तेषु पारतन्त्र्यं तु प्रकाशयति चात्मनः ।।२।।

तुलसीदलमात्रेण सकृद्बाष्पोदकेन वा ।
विक्रीणाति स्वमात्मानं भक्तेभ्यो भक्तवत्सलः ॥३॥

न ब्रह्मा न च शर्वश्च न लक्ष्मीस्तस्य वेधसः ।
यथा तच्छरणा भक्ता भवन्ति प्रीतिभाजनम् ॥४॥

यथा भक्तेषु वात्सल्यं वर्तते जगतीपतेः ।
तथा नैव हि देवेषु सिद्धेषु च तपस्विषु ॥५॥

ஸ்ரீஸத்குரு

1-5. அந்த மதுவனத்தில் முன்னொருகாலத்தில் அம்பரீஷன் ஏகாதசி விரதத்தைச் செய்தான். அந்தக் கதையைச் சொல்லுகிறேன். ஸர்வவல்லமை உடைய பகவான் சுதந்திரனாக இருந்தபோதிலும் தான் பக்தர்களுக்கு அடிமை என்பதை விளக்குகிறான். ஒரு துளஸீதளத்தாலும், கண்ணீர்த்திவிலை ஒன்றாலும் மட்டும் பக்தவத்ஸலனான பகவான் தன்னை பக்தர்களிடம் விலைக்குக் கொடுத்து விடுகிறான். சரணமடைந்த பக்தர்களைக் காட்டிலும் பகவானுக்கு ப்ரும்மாவோ, ருத்திரனோ, லக்ஷ்மியோகூட ப்ரியமானவர்கள் இல்லை. பக்தர்களிடம் வாத்ஸல்யங்காட்டுவதுபோல் பகவான் மற்ற தேவர், முனிவர் யாரிடமும் காட்டுவதில்லை.

वैवस्वतमनोर्वंशे राजाऽऽसील्लोकसंमतः ।
अम्बरीष इति ख्यातो महाभागवतोत्तमः ॥६॥

वैष्णवाराधनपरो डम्भासूयाविवर्जितः ।
सत्यसन्धो महावीरो नित्यं ब्राह्मणसेवकः ॥७॥

स्वधर्मनिरतश्चैवं स्वजनस्यैव रक्षिता ।

जितेन्द्रियः क्षमाशीलो भगवद्ध्यानतत्परः ॥८॥

*6-8. வைவஸ்வதமனுவின் வம்சத்தில் அம்பரீஷன் என்கிற ஒரு அரசன் இருந்தான். அவன் ஸத்தியஸந்தனாகவும், தர்மத்தை ரக்ஷிப்பவனாகவும், தனது ஜனங்களை ரக்ஷிப்பவனாகவும், காமம், கோபம், டம்பம் அஸூயைமுதலிய அவகுணங்கள் அற்றவனாகவும், பகவானைத் தியானம் செய்வதையே லக்ஷியமாகக் கொண்டவனாகவும், அந்தணர்களையும் ஸாதுக்களையும் பூஜிப்பவனாகவும், பாகவதோத்தமனாகவும் இருந்தான்.*

सह पत्न्या स धर्मात्मा चकार द्वादशीव्रतम् ।
अनन्यनिष्ठया राजा विष्णुव्रतपरायणः ॥९॥

व्रतान्ते कार्तिके मासि जगाम यमुनावनम् ।
कर्तुमुद्यापनं राजा द्विजैर्भागवतैः सह ॥१०॥

एकादश्यां निराहारो विष्णुमभ्यर्च्य भूपतिः ।
कृष्णसङ्कीर्तनं चक्रे रात्रौ जागरणव्रतः ॥११॥

द्वादश्यां भोजयित्वा च ब्राह्मणान् वेदपारगान् ।
अथ तैरभ्यनुज्ञातः पारणायोपचक्रमे ॥१२॥

*9-12. அந்த அம்பரீஷன் தனது மனைவியுடன் ஒரு வருஷம் விசேஷ நியமத்துடன் துவாதசிவிரதத்தை அனுஷ்டித்து வந்தான். ஒரு ஆண்டு முடிந்ததும் உத்தியாபனஞ் செய்யவேண்டி ப்ருந்தாவனத்வாதசியன்று பாகவதர்களுடன் கூடி மதுவனத்திற்கு வந்து சேர்ந்தான். ஏகாதசியன்று உபவாஸமிருந்து, விஷ்ணுவைப் பூஜைசெய்து, இரவு தூங்காமல் க்ருஷ்ணஸங்கீர்த்தனம் செய்தான். துவாதசியில் வேதியர்களுக்கு அன்னமிட்டு தானும் பாரணை செய்யவேண்டி அவர்களிடம் விடைபெற்றான்.*

आविरासीत्तदा तत्र दुर्वासाश्च तपोनिधिः ।
स लेभे परमं हर्षं तं विलोक्य नराधिपः ॥१३॥

मुनीन्द्रोपि महातेजाः प्राप्य स्वागतसत्क्रियाम् ।
पारणाय वृतोप्येष स्नानार्थं यमुनाङ्गतः ॥१४॥

मुहूर्तार्धावशिष्टायां द्वादश्यां पारणं प्रति ।
मुनेर्मार्गं विलोक्यासौ राजा दुःखमवाप ह ॥१५॥

ब्राह्मणातिक्रमे दोषं द्वादश्यामप्यपारणे ।
पश्यन् स दुःखितो राजा चकार जलपारणम् ॥१६॥

एतस्मिन्नन्तरे योगी दुर्वासा मुनिपुङ्गवः ।
साक्षाद्रुद्र इव क्रुद्धश्चाजगाम ससंभ्रमम् ॥१७॥

दृष्ट्वा विनीतं राजानं विहिताञ्जलिसंपुटम् ।
बभाषे परुषं वाक्यं तपसा गर्वितो मुनिः ॥१८॥

*13-18.* அப்பொழுது தவவலிமையுடைய துர்வாஸ முனிவர் அங்கு தோன்றினார். அவரைக் கண்டு அரசன் மகிழ்ச்சியடைந்தான். நல்வரவு கூறி, பூஜை செய்து பாரணை செய்ய வரும்படி அவரை வேண்டினான். முனிவரோ தீர்த்தமாடி வருவதாகச் சொல்லி யமுனைக்குச் சென்று விட்டார். பாரணைக்கு காலங்கடந்துவிடவே முனிவரும் வராமற்போகவே அரசன் துக்கமடைந்தான். முனிவரை பூஜிக்காமல் சாப்பிடுவதும் தவறு, துவாதசியில் பாரணை செய்யாமலிருப்பதும் தவறு. என்ன செய்யலாம் என்று ஆலோசித்து அரசன் ஜலத்தையே பாரணையாக உட்கொண்டான். அதற்குள் முனிவர் மிகவும் கோபத்துடன் வந்து விட்டார். தனது தபஸினால் கர்வமடைந்தவரான

முனிவர், கை குவித்து நிற்கும் அரசனைக் கடுஞ்சொற்களால் திட்டினார்.

## दुर्वासा उवाच

नासि त्वं विष्णुभक्तश्च नासि धर्मपरायणः ।
अतिक्रम्य यतस्त्वं मां भोजनं कृतवानसि ॥१९॥

नाहमश्नामि राजेन्द्र तवोच्छिष्टं मुनीश्वरः ।
अद्यैव लोकाः पश्यन्तु ममैतत्तपसो बलम् ॥२०॥

फल्गुना भक्तियोगेन दृप्तोसि पृथिवीपते ।
तपस्विनामग्रगण्यं यतो मामवमन्यसे ॥२१॥

### துர்வாஸமுனிவர்

*19-21. அரசே! நீ விஷ்ணுபக்தனில்லை. தர்மமும் உன்னிடத்தில் இல்லை. ஏனெனில் என்னை அவமதித்து விட்டுப் பாரணை செய்து விட்டாய். உனது மிச்சத்தை நான் சாப்பிட மாட்டேன். எனது தவவலிமையை இப்பொழுது உலகம் பார்க்கட்டும். அல்பமான பஜனையால் கர்வம் பிடித்த நீ தவவலிமையுடைய என்னை அவமதித்தாயே!*

## श्रीसद्गुरुरुवाच

इत्युक्त्वा रोषताम्राक्षो दुर्वासस्तर्जयन्नृपम् ।
सपदि स्वजटांश्छिन्दन् कृत्यां चक्रे भयावहाम् ॥२२॥

आत्मानमनुधावन्तीं पैशाचीं वैष्णवो नृपः ।
दृष्ट्वापि चिन्तयन् विष्णुं न लेभे भयमण्वपि ॥२३॥

श्रीकृष्णचरणाम्भोजध्याननिर्मलचेतसाम् ।
देहाभिमानो नैवास्ति वैष्णवानां महात्मनाम् ॥२४॥

तदा सुदर्शनं चक्रमुज्ज्वलद्भास्करोपमम् ।
तत्राविरासीन्मुनये गर्विताय तपस्विने ॥२५॥

विष्णोर्भगवतश्चक्रं विलोक्य स मुनीश्वरः ।
देहाभिमानवेगेन प्रदुद्राव ततस्ततः ॥२६॥

हरिभक्तिं विना नूनं मुनीनामपि योगिनाम् ।
देहात्मबुद्धिरज्ञानसंभवा न विनश्यति ॥२७॥

त्रींल्लोकान् संपरिक्रम्य ब्रह्मादीन् लोकपालकान् ।
अप्राप्तशरणः सोऽयं प्रपेदे कलशाम्बुधिम् ॥२८॥

## ஸ்ரீஸத்குரு

*22-28.* இவ்வாறு சொல்லிக் கோபத்தினால் சிவந்த கண்கள்உடைய துர்வாஸமுனிவர் அரசனை அதட்டி அவனைக் கொல்லும்படி ஒரு பயங்கரமான பிசாசை ஏவினார். தன்னிடம் ஓடிவரும் அந்தப் பிசாசைக் கண்டும் விஷ்ணு பக்தனான அரசன் கொஞ்சமேனும் பயப்படவில்லை. ஏனெனில் ஸ்ரீக்ருஷ்ணனின் சரணகமலத்தை தியானம் செய்வதால் நிர்மலமான சித்தமுடைய வைஷ்ணவர்களான மஹான்களுக்கு தேஹாபிமானம் உண்டாவதில்லை. அப்பொழுது கர்வம்பிடித்த முனிவரை அடக்குவதற்காக கோடி ஸூர்யப்ரகாசமான விஷ்ணுசக்ரம் அங்கு தோன்றியது. அதைக்கண்ட முனிவர் தேஹாபிமானத்தால் ஓட்டம் பிடித்தார். ஹரிபக்தி இல்லாவிடில் முனிவர்களுக்குக்கூட தேஹாபிமானம் நீங்குவதில்லை. மூவுலகையும் சுற்றி, ப்ரும்மாமுதலிய தேவர்களையும் சரணமடைந்து, அபயம் கிடைக்காமல் அவர் திருப்பாற்கடலை அடைந்தார்.

## दुर्वासा उवाच

अविज्ञायैव माहात्म्यं वैष्णवानां त्वदात्मनाम् ।
अवज्ञां कृतवानस्मि पापं मे क्षन्तुमर्हसि ॥२९॥

त्वं शरण्योसि लोकानां प्रपन्नं पाहि मां प्रभो ।
सर्वपापविनाशोसि स्मरणेनैव केवलम् ॥३०॥

## துர்வாஸமுனிவர்

*29-30. ப்ரபுவே! உமது அடியார்களின் மஹிமையை அறியாமல் அவமானப்படுத்தி விட்டேன். எனது பாபத்தை மன்னிப்பீராக. நீர் உலகில் யாவருக்கும் ரக்ஷகரல்லவா? நினைத்தமாத்திரத்தில் எல்லா பாபங்களையும் போக்குபவ ரல்லவா? சரணாகதி செய்த என்னை ரக்ஷிப்பீராக.*

## श्रीभगवानुवाच

भक्तापराधं क्षन्तुं मे ज्ञानतोऽज्ञानतः कृतम् ।
सर्वपापहरस्यापि न हि शक्तिस्तपोधन ॥३१॥

ममेष्टं दैवतं भक्तास्तेषां दासोस्मि तापस ।
स्वातन्त्र्यं न हि पश्यामि न चेच्छामि तैर्विना ॥३२॥

ब्रह्मादयः सुराः सर्वे मुनयश्च फलार्थिनः ।
मद्भक्ताः किल निष्कामा मत्कैङ्कर्यपरायणाः॥३३॥

अद्यैव शरणं याहि नाभागतनयं मुने ।
पालयिष्यति नूनं त्वां मम चक्रात् क्षमानिधिः ॥३४॥

जातिभेदं वैष्णवेषु न पश्येद्धि कदाचन ।
एष भागवतो धर्मो दण्डवत्प्रणमेद्भुवि ॥३५॥

**ஸ்ரீபகவான்**

*31-35.* முனிவரே! தெரிந்தோ தெரியாமலோ செய்த பாகவதாபசாரத்தை மன்னிக்க எனக்குச் சக்தியில்லை. ஏனெனில் எனக்கு பக்தர்களே தெய்வம். நான் அவர்களுடைய தாஸன். நான் அவர்களைமீறி சுதந்திரமாய் இருக்க விரும்புவதில்லை. ஏனெனில் ப்ரும்மாமுதலிய தேவர்கள் யாவரும் பயனைக் கருதியே பக்தி செய்கின்றனர். எனது பக்தர்களோ பயனைக் கருதாது எனது கைங்கர்யத்தையே லக்ஷியமாகக் கொண்டிருக்கின்றனர். முனிவரே! அம்பரீஷனையே சரணமடைவீராக. அவன் பொறுமையுடையவன். உம்மைக் காப்பாற்றுவான். ஜாதிபேதம் பார்க்காமல் பாகவததர்மத்தை அனுஸரித்து அம்பரீஷனை வணங்குவீராக.

**श्रीसद्गुरुरुवाच**

इत्युक्तो लोकनाथेन दुर्वासा दुःखसम्युतः ।
अयोध्यां पुनरागत्य राजानं शरणङ्गतः ॥३६॥

महाभागवतो राजा पादस्पर्शविलज्जितः ।
तुष्टाव भगवच्चक्रं भक्तरक्षणतत्परम् ॥३७॥

सहसाऽन्तर्दधे चक्रं सहस्रारं रविप्रभम् ।
मुनीन्द्रं सान्त्वयामास नरेन्द्रो मृदुभाषणैः ॥३८॥

अन्नं चतुर्विधं भुक्त्वा दुर्वासा हृष्टमानसः ।
प्रशंसन् भक्तिमाहात्म्यं ब्रह्मलोकं जगाम ह ॥३९॥

स नूनं भक्तमाहात्म्यं लोके दर्शयितुं मुनिः ।
एवं लीलां चकारैव स तु साक्षाच्छिवः किल ॥४०॥

यः पठेदम्बरीषस्य चरितं किल्बिषापहम् ।
स प्राप्नोति परां भक्तिं वैष्णवेषु महात्मसु ॥४१॥

ஸ்ரீஸத்குரு

*36-41.* இவ்வாறு லோகநாதனால் சொல்லப்பட்ட துர்வாஸமுனிவர் மறுபடியும் அயோத்திக்கே திரும்பி வந்து அம்பரீஷனை சரணமடைந்தார். மஹாபாகவதனான அரசன் துர்வாஸ முனிவர் வணங்கியதால் வெட்கமடைந்து பக்தர்களை ரக்ஷிக்கக்கூடிய விஷ்ணுசக்ரத்தைத் துதித்தான். விஷ்ணு சக்ரமும் மறைந்து விட்டது. அரசன் முனிவரை ஸமாதானம் செய்தான். துர்வாஸமுனிவர் சாப்பிட்டுவிட்டு ஸந்தோஷ மடைந்தவராய்ப் பக்தியின் மஹிமையை வாயாரப்புகழ்ந்து கொண்டே ப்ரும்மலோகம் சென்றார். அந்த முனிவர் உண்மையில் அம்பரீஷனின் மஹிமையை உலகமறியச் செய்ய வேண்டுமென்றே இவ்வாறு லீலை செய்தார். அவர் ஸாக்ஷாத் சிவபெருமானுடைய அவதாரமல்லவா? அம்பரீஷ சரித்திரத்தைப் படிப்பவன் சித்தசுத்தியையும், பகவானிடமும், பாகவதர்களிடமும் பக்தியையும் அடைவான்.

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये क्षेत्रकाण्डे अम्बरीषचरित्रं नाम तृतीयोऽध्यायः॥ ३॥*

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமி ஸ்வாமிகள் அருளிச்செய்த ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்ம்யம் க்ஷேத்ரகாண்டத்தில் அம்பரீஷசரித்திரம் மூன்றாவது அத்தியாயம் முற்றும்.**

# अथ चतुर्थोऽध्यायः

## நான்காவது அத்யாயம்

### भागवता ऊचुः

एकादशीव्रतस्यास्य माहात्म्यं वद सद्गुरो ।
यदाचरणमात्रेण प्रीणाति भगवान् हरिः ॥१॥

### பாகவதர்கள்

*1. ஸத்குருவே! எதை அனுஷ்டிப்பதால் பகவானான ஹரி ப்ரீதியடைகிறானோ, அந்த ஏகாதசி விரத்தின் பெருமையைச் சொல்லுவீராக.*

### श्रीसद्गुरुरुवाच

आसीद्रुक्माङ्गदो नाम राजा परमधार्मिकः ।
महावीरो महाबाहुर्महाभागो महामनाः ॥२॥

गुणवान् शीलवान् श्रीमान् बुद्धिमान् प्रियदर्शनः ।
भक्तिमान् माधवेप्येवं तद्दासेषु महात्मसु ॥३॥

आसीत् सन्ध्यावली नाम तस्य पत्नी पतिव्रता ।
अनुरूपा गुणवती साक्षाल्लक्ष्मीरिवापरा ॥४॥

तस्य धर्माङ्गदो नाम पुत्रश्चासीन्महामनाः ।
पितृभक्तो मातृभक्तः सत्यधर्मपरायणः ॥५॥

### ஸ்ரீஸத்குரு

*2-5. ருக்மாங்கதன் என்கிற ஓரரசன் இருந்தான். அவன் மிகவும் தார்மிகனாகவும், சிறந்த வீரனாகவும், நல்ல குணங்கள்*

உடையவனாகவும், நன்னடத்தை உடையவனாகவும், நல்ல அழகுடையவனாகவும், புத்திமானாகவும், மஹான்களிடமும் மாதவனிடமும் பக்தியுடையவனாகவும் இருந்து வந்தான். அவனுக்கு ஸந்தியாவளி என்கிற ஒரு மனைவி இருந்தாள். அவள் அரசனுக்கேற்ற குணமுடையவள். மஹாலக்ஷ்மியைப் போன்றவள். புகழ் பெற்ற கற்புக்கரசி. அந்த இருவருக்கும் தர்மாங்கதன் என்கிற புத்திரன் இருந்தான். அவன் பெற்றொர்களிடம் பக்தியுடையவனாகவும், ஸத்தியத்திலும் தர்மத்திலும் நிலைபெற்றவனாகவும், சிறந்த புத்திமானாகவும் இருந்தான்.

स राजा वैष्णवान्नित्यं दृढया श्रद्धयाऽर्चति ।
तस्मात्तस्मै ददात्येव हरिः साधुसमागमम् ॥६॥

कदाचिन्नारदो वीणां रणयन् कीर्तयन् हरिम् ।
आजगाम कृपासिन्धुः पावयन् राजमन्दिरम् ॥७॥

तं दृष्ट्वा नारदं राजा महाभागवतोत्तमम् ।
उपचारैर्बहुविधैः पूजयामास सादरम् ॥८॥

बद्धाञ्जलिपुटो राजा भक्त्या स्वागतमब्रवीत् ।
नारदं परिपप्रच्छ निषण्णं काञ्चनासने ॥९॥

*6-9. அந்த அரசன் வைஷ்ணவர்களை சிரத்தையுடன் பூஜித்து வந்தான். எனவே பகவான் அவனுக்கு அடிக்கடி ஸாது ஸங்கத்தைக் கொடுத்து வந்தார். ஒருஸமயம் கருணைக் கடலான நாரதர் வீணையை மீட்டுக்கொண்டே ஹரிகீர்த்தனம் செய்துகொண்டு அரண்மனைக்கு வந்தார். மஹாபாகவதோத்தமரான நாரதரைப் பார்த்து அரசன் அன்புடன் உபசரித்துப் பூஜித்தான். அரசன் கைகுவித்த வண்ணம் நல்வரவு சொல்லி ஆஸனத்தில் அமர்த்தி இவ்வாறு நாரதரை கேட்டுக் கொண்டான்.*

### राजोवाच

मादृशानां गृहस्थानां महाभाग्यवशान्ननु ।
सङ्गमः प्राप्यते स्वामिन् त्वादृशानां महात्मनाम् ॥१०॥

अद्य नः पितरस्तृप्तास्तृप्ताश्च कुलदेवताः ।
सुप्रीतो भगवान् विष्णुरस्माकं तव सङ्गमात् ॥११॥

कोटिजन्मकृतेनैव पुण्येन भगवान् हरिः ।
सुप्रीतो निजदासानां सङ्गं नृणां ददाति हि ॥१२॥

येन प्रीणाति भगवान् सर्वदेवोत्तमो हरिः ।
तं धर्मं ब्रूहि भगवन् सर्वज्ञोसि कृपानिधे ॥१३॥

### அரசன்

*10-13. ஸ்வாமி! என்னைப் போன்ற க்ருஹஸ்தர்களுக்கு மஹாபாக்ய வசத்தாலேயே தங்களைப் போன்ற மஹான்களின் ஸங்கம் கிடைக்கிறது. இப்பொழுது தங்கள் வருகையால் எனது பித்ருக்களும், குலதெய்வங்களும், பகவானாகிய விஷ்ணுவும் ப்ரீதியடைந்தார்கள். பல பிறவிகளிற் செய்த புண்ணயங்களா லேயே ப்ரீதியடைந்த பகவானாகிய ஹரி மனிதர்களுக்கு ஸாது ஸங்கத்தைத் தருகிறார். எந்த தர்மத்தினால் எல்லா தெய்வங்களையும்விடச் சிறந்தவனான ஹரி ப்ரீதியடைவானோ அந்த தர்மத்தை எனக்குச் சொல்லுவீராக.*

### नारद उवाच

सुप्रसन्नोस्मि ते राजन्नाकर्ण्य मधुरं वचः ।
वदामि वैष्णवं धर्मं सावधानतया शृणु ॥१४॥

उत्तमं सर्वधर्माणां तपसामुत्तमं तथा ।

साधनानामुत्तमं तत्तीर्थानामुत्तमोत्तमम् ॥१५॥

एकादशीव्रतं पुण्यं येन तुष्यति माधवः ।
तत्समानं न जानेऽहं सुकृतं त्वधिकं कुतः ॥१६॥

**நாரதர்**

*14-16.* அரசே! உமது இனிமையான வசனத்தைக்கேட்டு மகிழ்ச்சியடைகிறேன். ஒருபாகவததர்மத்தைச் சொல்லுகிறேன். கவனித்துக்கேட்பாயாக. ஏகாதசிவிரதமானது எல்லா தர்மங்களைக் காட்டிலும், எல்லா தவங்களைக் காட்டிலும், எல்லாஸாதனைகளைக் காட்டிலும், எல்லாத் தீர்த்தங்களைக் காட்டிலும் மிகவும் சிறந்தது. அதற்கு நிகரான தர்மமே இல்லையென்றால் அதை விடச் சிறந்ததர்மம் ஏது? அதை அனுஷ்டிப்பதால் பகவான் ப்ரீதியடைகின்றான்.

दशम्यां वैष्णवो भक्तो वर्जयेद्रात्रिभोजनम् ।
एकादश्यामुपोष्यैव पूजयेत्कमलापतिम् ॥१७॥

रात्रौ जागरणं कुर्वन्नामसङ्कीर्तनं चरेत् ।
भक्तैः सङ्गम्य चान्योन्यं वीणामद्दलसम्युतम् ॥१८॥

गीतां भागवतञ्चापि श्रीमद्रामायणं तथा ।
एकादश्यां पठेद्भक्तः शृणुयात्कीर्तयेत्तथा ॥१९॥

एवं श्रद्धान्वितो भक्तः कुर्वन्नेकादशीव्रतम् ।
कृपया देवदेवस्य याति विष्णोः परं पदम् ॥२०॥

*17-20.* விஷ்ணு பக்தி உடையவன் தசமியன்று இரவு போஜனம் செய்யக் கூடாது. ஏகாதசியில் உபவாஸமிருந்து

லக்ஷ்மீநாதனைப் பூஜிக்க வேண்டும். இரவு தூங்காமல் வீணை, மிருதங்கம் முதலியவைகளுடன் பக்தர்களுடன் ப்ரேமையுடன் கூடி நாம ஸங்கீர்த்தனம் செய்ய வேண்டும். ஏகாதசியில் பாகவதம்,ராமாயணம், கீதை முதலிய புனிதமான நூல்களைப் படிக்கவும், கேட்கவும் வேண்டும். இவ்வாறு சிரத்தையுடன் ஏகாதசிவிரதத்தை அனுஷ்டிப்பவன் தேவதேவனான விஷ்ணுவின் க்ருபையினால் பரமபதத்தை அடைவான்.

राजसूयसहस्राणि हयमेधशतान्यपि ।
एकादशीव्रतस्यास्य न कदापि समं भवेत् ॥२१॥

यत्फलं सर्ववेदानां यत्फलं तपसामपि ।
यत्फलं सर्वयज्ञानां यत्फलं पुण्यकर्मणाम् ॥२२॥

यत्फलं सर्वदानानां तत्फलं लभते ध्रुवम् ।
एकादश्युपवासेन सत्यं सत्यं वदाम्यहम् ॥२३॥

फलं गोकोटिदानस्य कन्यादानशतस्य च ।
एकादशीव्रतं कुर्वन् लभते नात्र संशयः ॥२४॥

आसेतुबदरीयात्रां कृत्वा वा भूप्रदक्षिणम् ।
यत्फलं तत्फलं नूनमेकादश्यामुपोषणम् ॥२५॥

*21-25.* ஆயிரம் ராஜஸூயயாகமும், நூறு அச்வமேத யாகமும்கூட ஏகாதசி விரதத்திற்கு ஸமமாக ஆகாது. எல்லா வேதங்களுக்கும் என்ன பலனோ, எல்லா தானங்களுக்கும் என்ன பலனோ, எல்லா தர்மங்களுக்கும் என்ன பலனோ, அந்தப்பலன்கள் யாவையும் ஏகாதசிவிரதத்தினால் அடையலாமென்று ஸத்தியமாகச் சொல்லுகிறேன்.

கோடிக்கணக்கான **கோ** தானம் செய்வதாலும், நூற்றுக்கணக்கான கன்னிகாதானம் செய்வதாலும், ஸேது முதல் பதரிகாச்ரமம் வரை யாத்திரை செய்வதாலும் பூப்ரதக்ஷிணமே செய்வதாலும் என்ன பலன்கள் உண்டோ அதை ஏகாதசி விரதத்தினால் பெறலாம்.

ब्रह्मविड्क्षत्रियाणाञ्च शूद्राणाञ्चापि योषिताम् ।
विहितं मुनिभिर्नृणामेकादश्यामुपोषणम् ॥२६॥

देवाश्च पितरो यक्षाः सिद्धा गन्धर्वकिन्नराः ।
ब्रह्मरुद्रादयश्चापि कुर्वन्त्येकादशीव्रतम् ॥२७॥

*26-27. வேதியன், வேந்தன், வணிகன், வேளாளன் என்கிற நான்கு வர்ணத்தவரும், பெண்களுங் கூட ஏகாதசி விரதத்தைச் செய்ய வேண்டுமென்று முனிவர்கள் விதிக்கின்றனர். ப்ரும்மா, ருத்ரன் முதலிய தேவர்களும், பித்ருக்கள், யக்ஷர்கள், ஸித்தர்கள், கந்தர்வர்கள், கின்னரர்கள் யாவரும் ஏகாதசி விரதத்தைச் செய்கின்றனர்.*

एकादश्यां यो मनुष्यो भुञ्जीयादन्नमादरात् ।
गोमांसभक्षणाज्जातं पापं तस्य न संशयः ॥२८॥

एकादश्यां नरो मूढः कुर्वन् ताम्बूलचर्वणम् ।
स्त्रीशोणितं पिबत्येव व्यासवाक्यञ्च विद्यते ॥२९॥

एकादश्यां तु यः कुर्वन् मैथुनं पापिनां वरः ।
मातृसङ्गमजं पापं स प्राप्नोति न संशयः ॥३०॥

*28-30.* ஏகாதசியில் அன்னம் சாப்பிடுவது கோமாமிசத்தைச் சாப்பிடுவதற்கு ஸமமான பாபமென்றும், ஏகாதசியில் தாம்பூலம் போட்டுக்கொள்ளுவது சோணித

பானத்திற்கு ஸமமென்றும், ஏகாதசியில் மைதுனம் செய்வது மாத்ரு ஸங்கமம் செய்த பாபத்திற்கு ஸமமென்றும் வியாஸர் கூறுகிறார்.

रूपमारोग्यमर्थांश्च पशून् दारान् सुतानपि ।
प्राप्नोति भक्तिमान्नूनमेकादश्यामुपोषणात् ॥३१॥

क्षयरोगः कुष्ठरोगः कुक्षिरोगस्तथेतरे ।
रोगाः सर्वे विनश्यन्ति ह्येकादश्यामुपोषणात् ॥३२॥

लभते पुत्रभाग्यञ्च लभते सर्वसंपदम् ।
विपद्भ्योपि विमुक्तः स्यात्कुर्वन्नेकादशीव्रतम् ॥३३॥

एकादशीव्रतं कुर्वन्नाम सङ्कीर्तयन् हरेः ।
ज्ञानवैराग्यसंयुक्तो याति विष्णोः परं पदम् ॥३४॥

सत्यं सत्यं पुनः सत्यं करमुद्धृत्य वच्म्यहम् ।
एकादशीव्रताच्छ्रेष्ठं व्रतं नास्ति न संशयः ॥३५॥

31-35. ஏகாதசி விரதத்தால் அழகு, ஆரோக்கியம், பொருள், மனைவி, மக்கள், வீடு யாவையும் பெறலாம். ஏகாதசி விரதத்தால் க்ஷயரோகம், குஷ்டரோகம், குல்மரோகம் முதலிய எல்லா ரோகங்களும் நசிக்கின்றன. ஏகாதசி விரதத்தினால் எல்லா ஸம்பத்தும் வரும். எல்லா விபத்தும் விலகும். ஏகாதசியில் ஹரிநாம கீர்த்தனம் செய்வதால் ஞான வைராக்யமுண்டாகிப் பரமபதமும் கிட்டும். கையைத் தூக்கி சபதம் செய்கிறேன். ஏகாதசி விரதத்தைக் காட்டிலும் சிறந்த விரதமில்லை. இது ஸத்தியம்!

### श्रीसद्गुरुरुवाच

एवं नारदवाक्येन प्रहृष्टो राजसत्तमः ।
एकादशीव्रतं कर्तुं चकार दृढनिश्चयम् ॥३६॥

पत्न्या च सह पुत्रेण परिवारेण संयुतः ।
एकादशीव्रतं राजा चकार श्रद्धया महान् ॥३७॥

कारयामास नगरे सर्वानपि जनान्नृपः ।
निवेद्य भेरीघोषेण पुण्यमेकादशीव्रतम् ॥३८॥

आबालवृद्धाः सर्वेपि चक्रुरेकादशीव्रतम् ।
अभूवन् वैष्णवाः सर्वे विशुद्धमनसस्ततः ॥३९॥

विनष्टोऽभूदधर्मोपि धर्मोपि ववृधे तथा ।
अनुकूलाऽभवद्वृष्टिः पृथिवी सस्यशालिनी ॥४०॥

सर्वे प्रमुदिताश्चासन् सर्वे श्रीवैष्णवास्तथा ।
रुक्माङ्गदे महाराजे पृथ्वीं शासति वैष्णवे ॥४१॥

अवाप परमानन्दं राजा परमधार्मिकः ।
राजभक्तिर्नराणाञ्च ववृधे हि दिने दिने ॥४२॥

### ஸ்ரீஸத்குரு

*36-42. இவ்வாறு நாரதர் சொல்லிக்கேட்ட ருக்மாங்கத மஹாராஜன் ஏகாதசி விரதத்தைச் செய்வதென திடமாய் நிச்சயித்துக் கொண்டான். தனது மனைவியுடனும், மகனுடனும், மற்ற பரிவாரங்களுடனும் விரதத்தை*

சிரத்தையுடன் நடத்தி வந்தான். நாட்டு மக்கள் யாவருக்கும் பேரிமுழக்கத்துடன் தெரிவித்து நகரத்திலும் விரதத்தை நடப்பித்து வந்தான். சிறுவர் முதல் முதியோர்வரை யாவரும் ஏகாதசி விரதம் செய்வதால் சித்த சுத்தியடைந்து விஷ்ணு பக்தர்களாக ஆனார்கள். அதர்மம் அழிந்தது. தர்மம் வளர்ந்தது. அனுகூலமான மழை பொழிந்தது. பயிர்கள் செழிப்பாக இருந்தன. யாவரும் வைஷ்ணவனான ருக்மாங்கத மஹாராஜனின் அரசாட்சியில் மகிழ்ச்சியுடன் வாழ்ந்தனர். நாளுக்கு நாள் மக்களுக்கு ஹரி பக்தியும், ராஜபக்தியும் வளர்ந்து வந்தது.

इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये क्षेत्रकाण्डे रुक्माङ्गदचरित्रे चतुर्थोऽध्यायः॥ ४॥

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமி ஸ்வாமிகள் அருளிச்செய்த ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்ம்யம் க்ஷேத்ரகாண்டத்தில் நான்காவது அத்தியாயம் முற்றும்.**

## अथ पञ्चमोऽध्यायः

## ஐந்தாவது அத்யாயம்

### श्रीसद्गुरुरुवाच

कदाचिन्मृगयां कर्तुमिच्छन् कान्तारमाप सः ।
एकाकी हयमारुह्य पाण्डुरञ्च मनोजवम् ॥१॥

नानावृक्षसमाकीर्णे नानाकुञ्जसमावृते ।
नानापक्षिगणव्याप्ते मलयानिलसेविते ॥२॥

उत्फुल्लमल्लिकागन्धपरिष्वक्ते मनोहरे ।
चारुप्रश्रवणोपेतशैलसानुपरिष्कृते ॥३॥

शृङ्गाररससंपूर्णे दृष्टिशीतलशाद्वले ।
गन्धर्वमिथुनाढ्ये च हरिणीगणसेविते ॥४॥

मधुकृद्बृन्दसङ्गीते मधुधाराढ्यभूरुहे ।
वसन्तसमये राजा चचार ललिते वने ॥५॥

ஸ்ரீஸத்குரு

1-5. ஒருநாள் ருக்மாங்கத மஹாராஜன் வேட்டையாட விரும்பி வெண்குதிரை மேல் ஏறி காட்டிற்குச் சென்றான். பலவிதமான மரங்கள் சூழ்ந்ததும், பல நிகுஞ்ஜங்கள் உடையதும், பல பறவைகள் உள்ளதும், மந்தமாருதம் வீசுகின்றதும், மல்லிகை மணத்தால் மனோஹரமானதும், அழகிய நீர்வீழ்ச்சியுடன்கூடிய மலையடிவாரத்தில் இருப்பதும், சிருங்காரரஸத்திற்கு ஏற்றதும், கண்ணுக்குக் குளிர்ச்சியான பசும்புல்வெளி உடையதும், ஜோடி ஜோடியாக கந்தர்வர்கள் ஸஞ்சரிப்பதும், மான்மந்தைகள் மேய்வதும், வண்டுகள் ரீங்காரம் செய்வதும், மரங்களில் தேன் பெருக்குடன் கூடியதுமான அழகிய வனத்தில் வஸந்தகாலத்தில் அரசன் ஸஞ்சாரம் செய்து கொண்டிருந்தான்.

रुक्माङ्गदपरीक्षार्थं ब्रह्मणा मनसा कृता ।
तत्राजगाम रमणी मोहिनी सर्वमोहिनी ॥६॥

सुन्दरी पीनजघना मदालसविलोचना ।
कुंभस्तनी मन्दहासशोभितेन्दुसमानना ॥७॥

लीलापद्मं करस्थं सा मुहुर्विकसयन्त्यमुम् ।
रुक्माङ्गदमपश्यत् सा चचार च वने तथा ॥८॥

पुष्पं ग्रहीतुकामेव राज्ञो दृष्टिपथं गता ।
मुहुर्मुहुश्चचारैषा पश्यन्ती च हसन्त्यपि ॥९॥

तां दृष्ट्वा मोहिनीं राजा कामबाणवशङ्गतः ।
तस्याः समीपं गत्वा तां पप्रच्छ प्रेमपूर्वकम् ॥१०॥

*6-10.* ருக்மாங்கதனைப் பரீக்ஷை செய்வதற்காக வேண்டி ப்ரும்மதேவனால் மனதாலேயே படைக்கப்பட்டவளும், உலகை மயங்கச் செய்கின்ற அழகியுமான மோஹினி அங்கு வந்தாள். மருண்ட பார்வையுடையவர்களும், மந்தஹாஸம் செய்பவளும், சந்திரனையொத்த முகமுடையவளும், சிறுத்த இடையும், பருத்த மார்பும் உடையவளுமான அந்த அழகி கையிலுள்ள தாமரைப்பூவை மலர்த்திக்கொண்டே கடைக் கண்ணால் ருக்மாங்கதனைக் கண்டாள். பூப்பறிக்கும் வியாஜத்தில் அலையும் அவள் அடிக்கடி அரசனைக் கண்டு சிரித்தாள். அவளைக் கண்டு அரசன் காமபாணத்திற்கு வசமாகி ஸமீபத்தில் சென்று ப்ரேமையுடன் அவளைக் கேட்டான்.

**राजोवाच**

का त्वं हरिणशाबाक्षि कुंभस्तनि मनोहरि ।
किमर्थं सञ्चरस्येवं स्वच्छन्दं वनमण्डले ॥११॥

आनन्दयसि मे चित्तं कटाक्षेण स्मितेन च ।
न त्वां त्यजामि वनिते मम दृष्टिपथङ्गताम् ॥१२॥

गान्धर्वविधिनैवावां परिणीय कृशोदरि ।
विहरावः काननेऽस्मिन् तल्पे पल्लवकल्पिते ॥१३॥

**அரசன்**

*11-13.* மான்போன்ற மருண்ட பார்வையுடைய அழகியான

நீ யார்? சுதந்திரமாகக் காட்டில் ஏன் அலைகிறாய்? கடைக்கண்ணாலும், மந்தஹாஸத்தாலும் என் உள்ளத்தை மகிழ்விக்கிறாய். பெண் மானே! என் எதிரில் வந்த உன்னை விடமாட்டேன். நாம் இருவரும் காந்தர்வ விதிப்படி விவாஹம் செய்து கொண்டு காட்டில் விளையாடுவோம்.

### मोहिन्युवाच

ब्रह्मणो मानसीं कन्यां मां जानीहि महीपते ।
मोहिनीति सुविख्यातां सर्वदेवमनोहरीम् ॥१४॥

मह्यं देहि वरं राजन् यदि मां प्राप्तुमिच्छसि ।
यद्यन्मया प्रार्थितं तत्करिष्यामीति सांप्रतम् ॥१५॥

### மோஹினி

*14-15.* அரசே! என் பெயர் மோஹினி. ப்ரும்மதேவனின் புதல்வி. என்னைக் கண்டு தேவர்களும் மயங்குகின்றனர். நான் வேண்டுவதையெல்லாம் செய்வேன் என்று வரம் தருவீரானால் என்னை நீர் அடைய முடியும்.

### राजोवाच

एवमस्तु प्रिये तुभ्यं दत्तं जानीहि तं वरम् ।
आगच्छ शीघ्रं वामाक्षि मां परिष्वज्य सान्त्वय ॥१६॥

### அரசன்

*16.* பிரியமானவளே! அப்படியே தந்தேன். அழகிய கண்ணுடையவளே! கிட்டே வா. என்னைத் தழுவிக்கொண்டு ஸமாதானம் செய்.

### श्रीसद्गुरुरुवाच

एवं कामवशो भूत्वा मोहिनीहृतमानसः ।

अविचार्य वरं दत्वा तया रेमे वनान्तरे ॥१७॥

नीत्वा बहुदिनं तत्र तया काननमण्डले ।
ततस्तां हयमारोप्य भवनं प्राप भूपतिः ॥१८॥

तां दृष्ट्वा मोहिनीं तस्यां राजानं लग्नमानसम् ।
सन्ध्यावल्यभवद्धृष्टा निःस्वार्थप्रेमसंयुता ॥१९॥

सपत्नीमातरं दृष्ट्वा पुत्रो धर्माङ्गदोपि च ।
तस्यां भक्तिं चकारैव सर्वसद्गुणसंयुतः ॥२०॥

ஶ்ரீஸத்குரு

17-20. இவ்வாறு காமவசப்பட்டு மோஹினியிடம் உள்ளத்தைக் கொடுத்த அரசன் அவள் கேட்டபடி வரத்தைக் கொடுத்து அவளுடன் காட்டில் விளையாடினான். காட்டிலேயே அவளுடன் பல நாட்கள் சென்றதும் அவளையும் குதிரையில் ஏற்றிக்கொண்டு அரண்மனைக்கு வந்தான். மோஹினியையும், அவளிடம் ஈடுபட்டுள்ள அரசனையும் கண்டு சுயநலமற்ற ப்ரேமையுடைய ஸந்தியாவளி ஸந்தோஷமே அடைந்தாள். நற்குணங்கள் நிரம்பியவனான தர்மாங்கதனும் தனது சிற்றன்னையான மோஹினியிடம் பக்தியுடன் நடந்து கொண்டான்.

सा मोहिन्यतिवृत्ताऽऽसीत् सन्ध्यावल्यामसूयया ।
तथापि साध्वी राज्ञी तु तस्यां प्रेम चकार ह ॥२१॥

लालयामास सप्रेम भगिनीमिव मोहिनीम् ।
तथापि सा दोषमेव सन्ध्यावल्यां ददर्श ह ॥२२॥

13

धर्माङ्गदे राज्यभारं विन्यस्य पृथिवीपतिः ।

मोहिन्या रममाणोऽसौ न तृप्तिं प्राप सर्वदा ॥२३॥

पितुश्च कामवृत्तत्वं मातुश्च प्रेम निर्मलम् ।
सपत्नीमातुरप्येवं कौटिल्यं स नृपात्मजः ॥२४॥

विज्ञायापि च तेष्वेव भक्तिं कुर्वन् दिने दिने ।
कैङ्कर्यं बहुधा चक्रे राज्यभारं समुद्वहन् ॥२५॥

कामातुरोऽपि राजाऽयं पुण्यमेकादशीव्रतम् ।
न जहौ तेन पुत्रेण स्मारितो मुहुरादरात् ॥२६॥

21-26. நாளடைவில் அந்த மோஹினியோ ஸந்தியாவளியிடம் பொறாமை கொண்டாள். ஆயினும் அரசியான ஸந்தியாவளி மோஹினியை தனது தங்கைபோல் பாவித்து அன்புடன் கொண்டாடி வந்தாள். அரசனோ தனது புதல்வனான தர்மாங்கதனிடமே ராஜ்யத்தை ஒப்படைத்து விட்டு மோஹினியுடனேயே எப்பொழுதும் காலங்கழித்து வந்தான். தந்தை காமவசப்பட்டிருப்பதையும், தாயார் கள்ளங்கபடமற்றிருப்பதையும், சிற்றன்னை கோணல் புத்தியுடன் இருப்பதையும் அறிந்துங்கூட ராஜகுமாரனான தர்மாங்கதன் அம்மூவருக்கும் பணிவிடை செய்துகொண்டு ராஜ்யபாரத்தை வஹித்துவந்தான். அரசன் காம வசப்பட்டிருந்தும், தனது புதல்வனால் அவ்வப்பொழுது நினைவு மூட்டப்பட்டவனாய் ஏகாதசிவிரதத்தை விடாமல் நடத்திவந்தான்.

इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये क्षेत्रकाण्डे रुक्माङ्गदचरित्रे पञ्चमोऽध्यायः॥५॥

இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமி ஸ்வாமிகள் அருளிச்செய்த ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்ம்யம் க்ஷேத்ரகாண்டத்தில் ஐந்தாவது அத்தியாயம் முற்றும்.

# अथ षष्ठोऽध्यायः

## ஆறாவது அத்யாயம்

### श्रीसद्गुरुरुवाच

कदाचित् पुष्पतल्पे स दिव्यगन्धसमन्विते ।
मोहिन्या मधुरं शिश्ये मन्मथाक्रान्तमानसः ॥१॥

एकादशीव्रतं पुण्यं भेरीघोषनिवेदितम् ।
यदृच्छया नृपः श्रुत्वा सद्यः संप्राप संभ्रमम् ॥२॥

कण्ठलग्नं भुजं तस्या हेमकङ्कणभूषितम् ।
प्रक्षिप्य भूपतिस्तूर्णमुत्थाय बहिराययौ ॥३॥

तं गृहीत्वा करेणैषा मोहिनी कामलालसा ।
क्व यासि राजन् मां हित्वा तिष्ठेति नृपमब्रवीत् ॥४॥

तद्गृहीतपरीधानो राजा रुक्माङ्गदस्तदा ।
मेघगम्भीरया वाचा मोहिनीमिदमब्रवीत् ॥५॥

### ஸ்ரீஸத்குரு

*1-5.* ஒரு ஸமயம் புஷ்பங்களால் அலங்கரிக்கப்பட்டதும், நறுமணம் வீசுகின்றதுமான படுக்கையில் காமவசப்பட்டவனாய் அரசன் மோஹினியுடன் இனிமையாக இருந்தான். அப்பொழுது வீதியில் பேரீகோஷத்துடன் அறிவிக்கப்பட்ட ஏகாதசிவிரதத்தைக் கேட்டு அரசன் உடனே பரபரப்படைந்தான். தன் கழுத்தில் வளைத்துக் கொண்டிருப்பதும், தங்கத்தினாலான கங்கணங்கள் அணிந்ததுமான மோஹினியின் கையைத் தள்ளிக்கொண்டு அரசன் வெளியேறினான்.

உடனே அவள் தனது கையால் அரசனைப் பிடித்துக்கொண்டு, என்னை விட்டு எங்கு செல்லுகிறீர்? நில்லும்! என்று சொன்னாள். அங்கவஸ்திரத்தைப் பிடித்து இழுக்கும் அவளைக் கண்டு ருக்மாங்கதன் கம்பீரமாய்ச் சொன்னான்.

### राजोवाच

एकादशीव्रतं कर्तुं गमिष्यामि सुरालयम् ।
प्रतीक्षन्ते च मां तत्र निखिला नागरा नराः ॥६॥

### அரசன்

6. ஏகாதசி விரதத்தைச் செய்வதற்காகக் கோயிலுக்குச் செல்கிறேன். அங்கு நகரமக்கள் என்னை எதிர்பார்ப்பார்கள்.

### मोहिन्युवाच

अतृप्तां मामिह त्यक्त्वा गमनं नोचितं तव ।
एहि मे शयनं वीर विहरावो निशान्तरे ॥७॥

### மோஹினி

7. வீர! நள்ளிரவில் என்னை விட்டுப்போவது உசிதமில்லை. உள்ளே வந்து படுத்துக்கொள்ளுவீராக.

### राजोवाच

अलमिन्द्रियलौल्येन भज त्वं पुरुषोत्तमम् ।
व्रतमेतत्त्वयाप्येवं कर्तव्यं मोहिनि प्रिये ॥८॥

### அரசன்

8. மோஹினி! சிற்றின்பநாட்டம் வேண்டாம். நீயும் விரதம் செய்யவேண்டும். புருஷோத்தமனை பஜிப்பாயாக.

मोहिन्युवाच

व्रतं नाहं करिष्यामि न काङ्क्षे मोक्षमप्यहम् ।
तवालिङ्गनमेवाहं कामये प्राणवल्लभ ।।९।।

மோஹினி

9. ப்ராணநாதா! எனக்கு விரதமும் வேண்டாம். வைகுண்டமும் வேண்டாம். உமது ஆலிங்கனந்தான் வேண்டும்.

राजोवाच

एकादश्यां दशम्याञ्च द्वादश्यामपि मोहिनि ।
मैथुनं कुर्वतां पापं शास्त्रेषु परिदृश्यते ।।१०।।

அரசன்

10. ஏகாதசி, தசமி, துவாதசி இவைகளில் ஸ்த்ரீ புருஷர்களின் சேர்க்கை சாஸ்திரங்களில் பாபமென்று கருதப்படுகிறது.

मोहिन्युवाच

न मे पापभयं राजन् शास्त्रञ्च न शृणोम्यहम् ।
एकादशीव्रतं त्यक्त्वा विहर त्वं मया सह ।।११।।

மோஹினி

11. எனக்குப் பாபமென்கிற பயமில்லை. சாஸ்திரத்தையும் நான் கேட்கவில்லை. ஏகாதசிவிரதத்தை விட்டு என்னுடன் வீளையாடுவீராக.

राजोवाच

सन्ध्यावलीं मोहिनीं वा त्यजेयमपि वा सुतम् ।

सत्यं सत्यं न त्यजेयं पुण्यमेकादशीव्रतम् ॥१२॥

त्यजेयमपि मे प्राणान् राज्यं सर्वं सुखं तथा ।
सत्यं सत्यं न त्यजेयं पुण्यमेकादशीव्रतम् ॥१३॥

**அரசன்**

*12-13. ஸந்தியாவளியையோ, மோஹினியையோ, தர்மாங்கதனையோ, ராஜ்யத்தையோ, என் உயிரையோகூட விட்டாலும் விடுவேன். ஆனால் புண்ணியமான ஏகாதசி விரதத்தை விடமாட்டேன். இது ஸத்தியம்.*

**मोहिन्युवाच**

मद्वाञ्छितं करोमीति कृत्वैव शपथं नृप ।
पाणिस्त्वया गृहीतो मे तत्सत्यं पालय प्रभो ॥१४॥

न हि सत्यात्परो धर्मो न हि सत्यात्परं व्रतम् ।
त्यक्त्वा सर्वं व्रतं तस्मात्सत्यं रक्ष महीपते ॥१५॥

**மோஹினி**

*14-15. அரசே! எனது விருப்பப்படியே நடந்து கொள்ளுவேன் என்று சபதம் செய்துவிட்டுக் கை பிடித்தீரல்லவா? அந்த ஸத்தியத்தைக் காட்டிலும் சிறந்த தர்மமோ, விரதமோ இல்லை. எனவே எல்லா விரதங்களையும் விட்டு ஸத்தியத்தை ரக்ஷிப்பீராக.*

**राजोवाच**

अन्यं वरं प्रतीच्छ त्वमेवं मा वद मोहिनि ।
एकादशीव्रतं पुण्यं न त्यजामि कदाप्यहम् ॥१६॥

அரசன்

*16. மோஹினி! வேறு வரத்தைக் கேட்டுக்கொள். ஏகாதசி விரதத்தை ஒருக்காலும் நான் விடமாட்டேன்.*

मोहिन्युवाच

एवञ्चेत्तव पुत्रस्य राजन् धर्माङ्गदस्य तु ।
छित्वा शिरो देहि मह्यमेष एव वरो मम ॥१७॥

மோஹினி

*17. அரசே! அப்படியானால் உமது பிள்ளையான தர்மாங்கதனின் தலையைத் துண்டித்து என்னிடம் கொடுப்பீராக.*

राजोवाच

नृशंसे दुष्टचारित्रे किमुक्तं निर्भयं त्वया ।
राक्षस्येव हि नूनं त्वं न करिष्यामि ते वचः ॥१८॥

सन्ध्यावल्यां ज्येष्ठपत्न्यां पुत्रे धर्माङ्गदेपि च ।
ईदृश्यसूया सञ्जाता यत्त्वमेवं वदस्यहो ॥१९॥

न वधिष्यामि मे पुत्रं न त्यक्ष्यामि व्रतं शुभम् ।
त्यक्ष्यामि दुष्टां त्वामेव बहिर्याहि गृहादिह ॥२०॥

அரசன்

*18-20. கொடுமைக்காரி! துஷ்டநடத்தை உடையவளே! கொஞ்சமேனும் பயமின்றி என்ன சொன்னாய்? நீ உண்மையில் ராக்ஷஸியேதான்: உனது சொல்லை நிறைவேற்ற மாட்டேன். எனது மூத்தமனைவியான ஸந்தியாவளியிடமும், புதல்வனான தர்மாங்கதனிடமும் பொறாமைப்பட்டு இவ்வாறு சொல்லு*

கிறாய். எனது புத்திரனை வதம் செய்யவும் மாட்டேன். விரதத்தை விடவும் மாட்டேன். துஷ்டையான உன்னையே விட்டு விட்டேன். வீட்டைவிட்டு வெளியே போ.

### मोहिन्युवाच

पूर्वं दत्वा वरं मह्यं किं वृथा प्रलपस्यलम् ।
सत्यमुल्लङ्घ्य लोकं त्वं कथं रक्षिष्यसि प्रभो ॥२१॥

असत्यनिष्ठं राजानमलर्कोऽपि न पूजयेत् ।
नरके नियतं वासो वदतामनृतं भवेत् ॥२२॥

शैब्यः स्वमांसं प्रददौ श्येनाय हि सतां वरः ।
अलर्कः प्रददौ नेत्रं सत्यनिष्ठो द्विजातये ॥२३॥

हरिश्चन्द्रो महाराजो राज्यं पत्नीं सुतं जहौ ।
रक्षणायैव सत्यस्य किं वृथा त्वं विषीदसि ॥२४॥

सत्याद्भ्रष्टस्य ते राजन्नेकादश्या तु किं फलम् ।
वृथा त्वं डाम्भिको भूत्वाप्यात्मानं बहुमन्यते ॥२५॥

### மோஹினி

*21-25. பிரபுவே! முன்பு எனக்கு வரம் தந்துவிட்டு இப்பொழுது வீணாய் புலம்புகிறீர். ஸத்தியத்தை மீறி உலகை எப்படிக் காப்பாற்றப் போகிறீர்? பொய் பேசுபவர்களுக்கு நரகவாஸம் நிச்சயம். சிபிசக்ரவர்த்தி ஸத்தியத்தை மீறாமல் தனது மாமிசத்தையே கழுகுக்குக் கொடுத்தார். ஸத்திய ஸந்தனாகிய அலர்க்கன் தனது கண்ணையே பிடுங்கி வேதியனுக்குத் தந்தான். ஹரிச்சந்திரன் ஸத்தியத்திற்காகத் தனது மனைவி மக்களைக்கூட விற்று விட்டான். நீர் வீணாக*

வருந்துகிறீர். ஸத்தியத்தை மீறிய உமக்கு ஏகாதசிவிரதத்தால் என்ன பயன்? உமது விரதம் வீண் டம்பமே. வீணாய் கர்வப்படுகிறீர்.

राजोवाच

सत्यपाशेन बद्धोस्मि मूढोऽहं मोहिनि त्वया ।
प्रसीद मयि सुप्रीते पुत्रभिक्षां प्रयच्छ मे ॥२६॥

स्पृशामि चरणौ सुभ्रूः करोम्यञ्जलिमेव ते ।
धर्माङ्गदस्य पुत्रस्य शरणं भव सुन्दरि ॥२७॥

वर्तते समभावेन सन्ध्यावल्यां तथा त्वयि ।
उत्तमो ज्येष्ठपुत्रो मे सर्वधर्मविदां वरः ॥२८॥

निर्दोषं तनयं हत्वा भवेयं निन्दितो जनैः ।
अभयं देहि मे देवि भीतोस्म्यनृतभाषणे ॥२९॥

धर्माङ्गदो महाभागस्तव पुत्रो हि मोहिनि ।
तवेष्टं निखिलं सोयं करिष्यति न संशयः ॥३०॥

निहत्य पुत्रं धर्मज्ञं साक्षाद्धर्ममिवापरम् ।
कथं द्रक्ष्यामि साध्वीं तां पत्नीं सन्ध्यावलीमहम् ॥३१॥

அரசன்

*26-31.* மோஹினி! ஸத்தியத்தினால் என்னைக் கட்டிவிட்டாய். நான் மூடன். எனக்கு அருள் செய். புத்திரப் பிச்சைபோடு. உன் காலில் விழுகிறேன். கைகூப்புகிறேன். தர்மாங்கதனுக்கு அபயம் கொடு. எல்லா தர்மங்களையும் அறிந்த மூத்தபுதல்வனான தர்மாங்கதன் மிகவும் உத்தமன் ஸந்தியாவளியிடமும், உன்னிடமும் ஸமமாய் நடந்து

கொள்ளுகிறான். குற்றமற்ற மகனைக் கொன்றால் உலகம் என்னைத் தூற்றும். பொய்யைக் கண்டும் பயப்படுகிறேன். தர்மாங்கதன் உனது புதல்வனல்லவா? அவன் உனது விருப்பத்தை நிறைவேற்றுவான். தர்மமே உருவமாகிய அவனைக் கொன்று விட்டு ஸந்தியாவளி முகத்தில் எப்படி விழிப்பேன்?

**श्रीसद्गुरुरुवाच**

इत्युक्त्वा मूर्च्छितो राजा निपपात महीतले ।
पुनः संज्ञामवाप्याथ प्रललाप पुनः पुनः ॥३२॥

**ஸ்ரீஸத்குரு**

32. இவ்வாறு சொல்லி அரசன் மூர்ச்சையாகி பூமியில் விழுந்தான். மறுபடியும் நினைவு பெற்றுப் பலவாறு புலம்பினான்.

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये क्षेत्रकाण्डे रुक्माङ्गदचरित्रे षष्ठोऽध्यायः॥६॥*

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமி ஸ்வாமிகள் அருளிச்செய்த ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்ம்யத்தில் க்ஷேத்ரகாண்டத்தில் ஆறாவது அத்யாயம் முற்றும்.**

# अथ सप्तमोऽध्यायः

## ஏழாவது அத்தியாயம்

**श्रीसद्गुरुरुवाच**

सर्वं वृत्तान्तमाकर्ण्य राज्ञी सन्ध्यावली तथा ।
धर्माङ्गदेन पुत्रेण सह तत्राययौ सती ॥१॥

भूमौ निपत्य राजानं प्रलपन्तं विलोक्य सः ।
उत्थाप्य सान्त्वयामास कृपयाऽश्राकुलेक्षणा ॥२॥

ஸ்ரீஸத்குரு

1-2. எல்லா விஷயங்களையும் கேட்டு ராணியான ஸந்தியாவளி புத்திரனான தர்மாங்கதனுடன் அங்கு வந்தாள். பூமியில் விழுந்து புலம்பும் அரசனைக் கண்ட அவள் கண் கலங்கி, கருணையுடன் ஸமாதானம் செய்தாள்.

सन्ध्यावल्युवाच

अलं शोकेन मे नाथ ससुता त्वद्वशास्म्यहम् ।
त्वद्गुणान् राजराजेन्द्र नेयं जानाति मोहिनी ॥३॥

चिरकालानुष्ठितं तन्मा त्यजैकादशीव्रतम् ।
सत्यञ्च मा त्यज स्वामिन् सर्वमङ्गलकारणम् ॥४॥

धर्माङ्गदस्य पुत्रस्य शिरश्छिन्धि महामते ।
सत्यं व्रतञ्च राजेन्द्र पुत्राच्छतगुणं भवेत् ॥५॥

ஸந்தியாவளி

3-5. நாத! துக்கப்படவேண்டாம். நான் உமக்கு அடங்கியவள். உமது குணங்களை நான் அறிவேனேயன்றி, இந்த மோஹினி அறியமாட்டாள். வெகுகாலமாய் அனுஷ்டித்து வந்த ஏகாதசிவிரதத்தை விடவேண்டாம். ஸர்வமங்களங்களுக்கும் காரணமான ஸத்தியத்தையும் விடவேண்டாம். தர்மாங்கதனுடைய தலையையே வெட்டி விடுங்கள். ஸத்தியமும், விரதமும் புத்திரனைக் காட்டிலும் நூறு மடங்கு சிறந்ததாகும்.

धर्माङ्गद उवाच

सत्यार्थञ्च व्रतार्थञ्च त्वदर्थञ्च महीपते ।
ददाम्यात्मशिरोप्येतत्सत्यमेव वदाम्यहम् ॥६॥

पिता त्वं मम राजेन्द्र त्वं मे प्रत्यक्षदैवतम् ।
सत्यस्थं त्वां करिष्यामि स्वयमुत्कृत्य मे शिरः ॥७॥

**தர்மாங்கதன்**

*6-7. தந்தையே! ஸத்தியத்திற்காகவும், விரதத்திற்காகவும், உமக்காகவும் எனது தலையையுங்கூடத் தருவேன். இது ஸத்தியம். நீர் எனது தந்தை. எனக்கு ப்ரத்யக்ஷதெய்வம். எனது தலையை நானே அறுத்துத் தருவேன்.*

**रुक्माङ्गद उवाच**

ईदृशं त्वां महात्मानं पुत्रं धर्मविदां वरम् ।
अहं कथं हनिष्यामि मोहिन्याः प्रीतिहेतवे ॥८॥

नूनमेषा राक्षसी त्वां हन्तुमिच्छति पुत्रक ।
अविज्ञाय करस्तस्या गृहीतो विपिने मया ॥९॥

तां च मां च निहत्य त्वं राज्यं प्राप्नुहि पुत्रक ।
न त्वामहं हनिष्यामि वैष्णवं कुलवर्धनम् ॥१०॥

**ருக்மாங்கன்**

*8-10. தர்மமறிந்த மஹாத்மாவான இத்தகைய புத்திரனை மோஹினியின் ஸந்தோஷத்திற்காக வேண்டி நான் எப்படிக் கொல்லுவேன்? குழந்தாய்! உண்மையில் இவள் ராக்ஷஸி. உன்னைக் கொல்ல விரும்புகிறாள். அறியாமல் அவளைக் கை பிடித்தேன். என்னையும் அவளையும் கொன்றுவிட்டு நீ ராஜ்யத்தை அடைவாயாக. வைஷ்ணவனும் குலக்கொழுந்து மான உன்னை நான் கொல்லமாட்டேன்.*

**धर्माङ्गद उवाच**

मा विषीद महाबुद्धे तवैव हि वशोस्म्यहम् ।

सत्यायैव हि वधं कृत्वा ते पापं न हि संभवेत्।।११।।
ममापि लोके कीर्तिश्च भविष्यति न संशयः ।
सत्यमुल्लङ्घ्य ते पापं संभवेन्न हि संशयः ।।१२।।

**தர்மாங்கதன்**

*11-12. தந்தையே! துயரப்பட வேண்டாம். நான் உமக்கு அடங்கியவன். ஸத்தியத்திற்காக என்னைக் கொல்லுவதில் பாபமில்லை. எனக்கும் உலகில் புகழ் உண்டு. ஸத்தியத்தை மீறுவது ஸந்தேஹமில்லாமல் பாபமே.*

**रुक्माङ्गद उवाच**

पापिष्ठे मोहिनि त्वं मे पुत्रस्य वचनं शृणु ।
सन्ध्यावल्यां च राज्ये च पुत्रे मयि दयां कुरु ।।१३।।
अन्यं वरं प्रतीच्छ त्वमाग्रहं सर्वथा त्यज ।
सुखं जीवाम राज्येऽस्मिन् पुत्रेण सहिता वयम्।।१४।।

**அரசன்**

*13-14. பாபியான மோஹினி! என் புதல்வனின் வார்த்தையைக் கேள். ஸந்தியாவளியிடமும், பிள்ளையிடமும், ராஜ்யத்திடமும் கருணையைக் காட்டு. வேறு வரம் கேட்டுக் கொள். பிடிவாதம் வேண்டாம். ராஜ்யத்தில் பிள்ளையுடன்கூடி நாம் ஸுகமாய் வாழ்வோம்.*

**मोहिन्युवाच**

पूर्वं त्वं शपथं कृत्वा गृहीत्वा मे करं नृप ।
अद्य मे वाक्यमुल्लङ्घ्य पत्न्या त्वं रन्तुमिच्छसि।।१५।।
न कामये वरं त्वन्यं निन्दिता बहुधा त्वया ।
पुत्रस्य वा शिरश्छिन्धि त्यज वैकादशीव्रतम् ।।१६।।

## மோஹினி

*15-16.* அரசே! சபதம் செய்து என்னைக் கைபிடித்துவிட்டு இப்பொழுது சொன்னசொல்லை மீறி மூத்த மனைவியுடன் ஸுகமாயிருக்க விரும்புகிறீர். என்னைப் பலவிதமாய்த் திட்டுகின்றீர். எனக்கு வேறு வரம் வேண்டாம். புத்திரனின் தலையைச் சீவவேண்டும். அல்லது ஏகாதசிவிரதத்தை விடவேண்டும்.

## रुक्माङ्गद उवाच

का वदेदीदृशं वाक्यं त्वां विना कुलनाशिनीम् ।
भर्तारमप्यतिक्रम्य मोहिनि त्वं न लज्जसे ॥१७॥

यस्ते पाणिगृहीतोऽयं कानने दुर्गुणे मया ।
तं त्यजामि न मे पत्नी त्वं यथेष्टं बहिर्व्रज ॥१८॥

इतःपरमहं न त्वां स्प्रक्ष्यामि कुलनाशिनि ।
इह वा दिवि वा मूढे सत्यमेव वदाम्यहम् ॥१९॥
लोकमुत्तमपुत्राणां पितरौ सर्वथार्चताम् ।
अपरावर्तिनां युद्धे वीराणाञ्च महात्मनाम् ॥२०॥

राज्ञाञ्च यज्ञशीलानां विष्णुभक्तिमतां सताम् ।
प्राप्नुहि त्वं महाबुद्धे निहतः सांप्रतं मया ॥२१॥

सत्यसंरक्षणार्थञ्च व्रतसंरक्षणाय च ।
हरामि ते शिरः पुत्र स्मर नारायणं प्रभुम् ॥२२॥

सन्ध्यावलि प्रिये त्वञ्च मा विषीद मनस्विनि ।
मद्वाक्यसत्यकर्तारं धीरं पश्य सुतं तव ॥२३॥

### அரசன்

*17-23.* மோஹினி! குலத்தை கெடுக்க வந்த உன்னைத் தவிர வேறு எவள்தான் இப்படிப் பேசுவாள்? பர்த்தாவை மீறி நடக்கும் உனக்கு வெட்கமில்லையா? துர்குணமுடையவளே! காட்டில் பிடித்த கையை விட்டுவிட்டேன். நீ என் மனைவி அல்ல. வெளியே போ. மூட புத்தி உடையவளே! இஹத்திலோ பரத்திலோ இனி உன்னைத் தொடமாட்டேன் ஸத்தியமாய்ச் சொன்னேன். என் அருமைப் புதல்வனான தர்மாங்கதா! ஸத்தியத்திற்காகவும், விரதத்திற்காகவும் உன் தலையை வெட்டுகிறேன். நாராயணனைத் தியானம் செய். பெற்றோர் களைப் பூஜிக்கும் உத்தமபுத்திரர்களும், யுத்தத்தில் புறமுது கிட்டு ஓடாத வீரர்களும், யாகம் செய்யும் பெரியோர்களும், விஷ்ணுபக்தி உடைய ஸாதுக்களும் எந்த நற்கதியைப் பெறுவார்களோ, அதை நீயும் பெறுவாயாக. பெரிய மனது படைத்த பிரியமான ஸந்தியாவளி! நீயும் வருந்தாதே. எனது ஸத்தியத்தைக் காப்பாற்றும் தீரனான பிள்ளையைப் பார்.

### श्रीसद्गुरुरुवाच

इत्युक्त्वा प्ररुदन् राजा खड्गमुद्यम्य दुर्मनाः ।
चिक्षेप कण्ठे पुत्रस्य बद्धाञ्जलिपुटस्य सः ॥२४॥

धर्माङ्गदस्य पुत्रस्य धार्मिकस्य महात्मनः ।
पुष्पमालाऽभवत्कण्ठे क्षिप्तो राज्ञा महानसिः ॥२५॥

तत्रासन् विस्मिताः सर्वे परमाद्भुतदर्शनात् ।
प्रहर्षमतुलं सर्वे लेभिरे नागरा जनाः ॥२६॥

### ஸ்ரீஸத்குரு

*24-26.* இவ்வாறு சொல்லி அரசன் மனக்கஷ்டத்தினால் அழுதுகொண்டே கத்தியை ஓங்கி கைகுவித்த வண்ணம்

உட்கார்ந்திருக்கும் தர்மம்மீறாத மஹாத்மாவும், புத்திரனுமான தர்மாங்கதனின் கழுத்தில் போட்டான். மறுகணம் அந்தக் கத்தி பூமாலையாக மாறிவிட்டது. இதைக் கண்டு யாவரும் ஆச்சரியமும் மனமகிழ்ச்சியுமடைந்தனர்.

इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये क्षेत्रकाण्डे रुक्माङ्गदचरित्रे सप्तमोऽध्यायः॥७॥

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிஸ்வாமிகள் அருளிச்செய்த ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்ம்யம் க்ஷேத்திரகாண்டத்தில் ஏழாவது அத்யாயம் முற்றும்.**

## अथ अष्टमोऽध्यायः

## எட்டாவது அத்தியாயம்

### श्रीसद्गुरुरुवाच

तत्राविरासीद्भगवान् भक्तदर्शनकाङ्क्षया ।
आरुह्य गरुडं विष्णुः सर्वदेवस्वरूपिणम् ॥१॥

छत्रचामरहस्तैश्च सेवितो निजपार्षदैः ।
पूजितः पुष्पवर्षेण देवगन्धर्वदानवैः ॥२॥

श्रिया भूम्या च सहितो विकसत्पद्महस्तया ।
पार्श्वयोरुभयोर्दृष्ट्या पश्यन्त्या प्रेमपूर्णया ॥३॥

### ஸ்ரீஸத்குரு

1-3. அப்பொழுது அங்கு பகவான் பக்தர்களை தரிசனம் பண்ணும் ஆசையினால் ஸகலவேதஸ்வரூபனாகிய கருடன் மேல் ஏறிக்கொண்டு, வெண்குடை சாமரம் இவைகளைத் தாங்கி நிற்கும் தனது பார்ஷதர்களால் ஸேவிக்கப்பட்டவனாய், தேவர்கள், கந்தர்வர்கள், அஸுரர்கள் முதலியயாவரும்

மலர்மாரிபொழிய, இரண்டு பக்கத்திலும் நின்றுகொண்டு அன்புடன் பார்க்கும் கையில் தாமரையேந்திய ஸ்ரீதேவி பூதேவிகளுடன் கூடியவனாய் தோன்றினான்.

तं विलोक्याम्बरे देवं राजा रुक्माङ्गदो महान् ।
कुङ्कुमारुणपादाब्जं क्वणत्किङ्किणिनूपुरम् ॥४॥

काञ्चीकलापपर्यस्तं कनकाम्बरधारिणम् ।
कमलोपमनाभिञ्च कटिसूत्रविराजितम् ॥५॥

वटपत्रोदरं वक्षःस्थलवासितचन्दनम् ।
वनमालाधरं कण्ठविराजत्कौस्तुभं हरिम् ॥६॥

आवापकालङ्कृतञ्च रत्नकङ्कणभूषणम् ।
चतुर्भुजं परं शान्तं शङ्खचक्रगदाधरम् ॥७॥

हस्तेनाभयदं प्रेम्णा पश्यन्तं भक्तमण्डलम् ।
कुटिलालकसंयुक्तं कर्णज्वलितकुण्डलम् ॥८॥

कमलायतनेत्रञ्च कपोलजितदर्पणम् ।
कोमलाधरमध्यस्थदन्तमुक्तासराञ्चितम् ॥९॥

दीर्घनासं ललाटे च कस्तूरीतिलकाङ्कितम् ।
आदित्यकोटिसच्छायकिरीटं भुवनेश्वरम् ॥१०॥

नारायणं वासुदेवं ब्रह्मरुद्रादिसेवितम् ।
तुष्टाव प्रणतो भक्त्या प्रेमगद्गदया गिरा ॥११॥

4-11. சிலம்பு ஒலிக்கும் சிவந்த திருவடி உடையவனும், இடுப்பில் ஒட்டியாணமும், தங்க அரைஞாணும் பீதாம்பரமும் அணிந்தவனும், பத்மநாபனும் ஆலிலைபோன்ற வயிறு உடையவனும், சந்தனம் பூசிய மார்புடையவனும், கழுத்தில் கௌஸ்துபமும் வனமாலையுமணிந்தவனும், தோள்வளைகளும், ரத்தின கங்கணங்களும் அணிந்த நான்கு கைகளிலும் சங்கு, சக்கரம், கதை இவைகளை தரிப்பவனும், சாந்த மூர்த்தியும், கையினால் அபயந்தருபவனும், பக்தர்களின் கூட்டத்தைப் ப்ரேமையுடன் பார்ப்பவனும், சுருண்ட கேசங்கள் உடையவனும், காதுகளில் ஜொலிக்கின்ற குண்டலங்கள் உடையவனும், தாமரைக்கண்ணனும், கண்ணாடியைப் பழிக்கும் கன்னங்கள் உடையவனும், பவழப்பேழையில் முத்துஸரம் வைத்ததுபோல் அழகிய சிவந்த உதடுகளின் நடுவில் தெரியும் பல்வரிசை உடையவனும், நீண்ட மூக்குடையவனும், விசாலமான நெற்றியில் கஸ்தூரிதிலகம் அணிந்தவனும், கோடிஸூர்யப்ரகாசமான க்ரீடத்தை தரிப்பவனும், ப்ரும்மா, ருத்ரன் முதலிய தேவர்களால் ஸேவிக்கப்பட்டவனும், எங்கும் நிறைந்தவனுமாகிய ஸ்ரீமந்நாராயணனை தரிசனம் செய்து ருக்மாங்கத மஹாராஜன் பக்தியுடன் வணங்கித் தழுதழுத்த குரலில் துதிக்கலானான்.

राजोवाच

नमो नमः केशवाय माधवाय नमो नमः ।<br>
नमो नमो मुकुन्दाय गोविन्दाय नमो नमः ॥१२॥

नमो नमो वराहाय नृसिंह्माय नमो नमः ।<br>
नमो नमः श्रीधराय वामनाय नमो नमः ॥१३॥

नमो नमो भार्गवाय राघवाय नमो नमः ।<br>
नमो नमो यादवाय गोपालाय नमो नमः ॥१४॥

नमोस्तु ते देवदेव वासुदेव नमोस्तु ते ।
नमोस्तु ते हृषीकेश पद्मनाभ नमोस्तु ते ॥१५॥

नमोस्तु ते रमाकान्त धराकान्त नमोस्तु ते ।
नमोस्तु ते लोकनाथ मम नाथ नमोस्तु ते ॥१६॥

அரசன்

*12-16. கேசவ! மாதவ! முகுந்த! கோவிந்த! உமக்கு நமோநம: வராஹப்பெருமானே! நரசிங்கமூர்த்தியே! ஸ்ரீதர! வாமன! உமக்கு நமோநம:! பரசுராம! ஸ்ரீராம! யதுகுலத்தில் தோன்றிய கோபால! உமக்கு நமோநம: தேவதேவ! வாஸுதேவ! ஹ்ருஷீகேச! பத்மநாப! உமக்கு நமோநம: லக்ஷ்மீநாத! பூமிநாத! லோகநாத! என்நாத! உமக்கு நமோநம:*

*सन्ध्यावल्युवाच*

जय पद्मपलाशाक्ष जय भक्तकुतूहल ।
जय ब्रह्मादिदेवेश जय प्रह्लादरक्षक ॥१७॥

जय सर्वजगन्नाथ जय श्रीवत्सलाञ्छन ।
जय योगीन्द्रसंसेव्य जय पक्षीन्द्रवाहन ॥१८॥

ஸந்தியாவளி

*17-18. தாமரைக்கண்ணா! பக்தகோலாஹல! ப்ரும்மாதி தேவர்களுக்கும் தேவனே! ப்ரஹ்லாதனை ரக்ஷித்தவனே! ஜகன்னாத! ஸ்ரீவத்ஸம் உடையவனே! யோகிகளுக்கும் ஸேவிக்கத் தக்கவனே! கருடவாஹன! ஜயஜய!*

*धर्माङ्गद उवाच*

प्रसीद पुण्डरीकाक्ष प्रसीद कमलापते ।
प्रसीद परमेशान प्रसीद पुरुषोत्तम ॥१९॥

प्रसीद नीरदश्याम प्रसीद नलिनानन ।
प्रसीद पद्मचरण प्रसीद त्वं जनार्दन ॥२०॥

**தர்மாங்கதன்**

*19-20. தாமரைக்கண்ணா! லக்ஷ்மீநாத! பரமேச்வர! புருஷோத்தம! நீலமேகசியாமள! தாமரைபோன்ற முகமுடையவனே! தாமரை போன்ற திருவடியுடையவனே! ஜனார்த்தன! அருள் செய்வீராக!*

**श्रीभगवानुवाच**

युष्माकं प्रेमभक्त्यैव प्रसन्नोऽस्मि न संशयः ।
प्रतीच्छत वरञ्चेष्टं वरदोऽहमुपस्थितः ॥२१॥

**ஸ்ரீபகவான்**

*21. பக்தர்களே! உங்கள் பக்தியினால் ப்ரஸன்னமாக இருக்கிறேன். வேண்டிய வரனைக் கேட்டுக்கொள்ளுங்கள்.*

**राजोवाच**

तवैव चरणाम्भोजे सर्वतापनिवारणे ।
अस्माकं भक्तिरेवास्तु सुदृढा जन्मजन्मनि ॥२२॥

**அரசன்**

*22. ப்ரபுவே! எல்லா தாபங்களையும் நீக்கும் தங்களுடைய பாதகமலங்களில் எங்களுக்கு ஒவ்வொரு பிறவியிலும் பக்தியே வேண்டும்.*

**श्रीभगवानुवाच**

एवमस्तु महाराज ममैव चरणाम्बुजे ।
युष्माकं जितकामानां भक्तिरेवाभिवर्धताम् ॥२३॥

दीर्घमायुश्च लोकेऽस्मिन्नारोग्यञ्च धनं गृहम् ।
औदार्यं सौमनस्यञ्च बन्धूनाञ्च सदा सुखम् ॥२४॥

सङ्गमञ्च सदा शश्वत् मत्कथाश्रवणे रुचिम् ।
मन्नामकीर्तने श्रद्धां ज्ञानं वैराग्यमेव च ॥२५॥

मत्स्मृतिञ्चान्तिमे काले मत्पदप्राप्तिमेव च ।
स्वयमेव ददाम्येवं भक्तेभ्यो भक्तवत्सलः ॥२६॥

ஸ்ரீபகவான்

*23-26. மஹாராஜ! அப்படியே ஆகுக. ஆசையை வென்றவர்களான உங்களுக்கு என் பாதாரவிந்தத்தில் பக்தியே வளரட்டும். பக்தவத்ஸலனாகிய நான் தானாகவே எனது பக்தர்களுக்கு நீண்ட ஆயுளையும் ஆரோக்கியத்தையும், வீட்டையும், தனதான்ய அபிவ்ருத்தியையும், உதார குணத்தையும் பந்துக்களுக்குள் நல்ல மனஸையும் எப்பொழுதும் ஸுகத்தையும், ஸாது ஸங்கத்தையும், எனது கதாசிரவனத்தில் ருசியையும், எனது நாம கீர்த்தனத்தில் ச்ரத்தையையும் ஞானவைராக்யங்களையும், அந்திம காலத்தில் எனது நினைவையும், முடிவில் பரமபதத்தையும் தருகிறேன்.*

श्रीसद्गुरुरुवाच

इत्युक्त्वा भगवान् कृष्णो वनमाली चतुर्भुजः ।
अन्तर्दधे सद्य एव रमया धरया सह ॥२७॥

ततः सा मोहिनीदेवी राज्ञा शपथपूर्वकम् ।
तिरस्कृता ब्रह्मसभां गत्वा दुःखं न्यवेदयत् ॥ २८॥

ஸ்ரீஸத்குரு

*27-28. இவ்வாறு சொல்லி வனமாலியும் சதுர்புஜனுமாகிய பகவானான க்ருஷ்ணன் ஸ்ரீதேவிபூதேவி*

களுடன் அப்பொழுதே மறைந்து போனான். பிறகு அரசனால் சபதம் செய்தபடி கைவிடப்பட்ட மோஹினி ப்ரும்ம ஸபைக்குச் சென்று தனது துக்கத்தைத் தெரிவித்துக் கொண்டாள்.

मोहिन्युवाच

रुक्माङ्गदपरीक्षार्थं भगवन् प्रेषिता त्वया ।
अपराधमहं कृत्वा महाभागवतस्य तु ॥२९॥

तिरस्कृता विषीदामि पतिना वैष्णवेन तु ।
इतः परं विमोक्षाय गतिं मे दर्शय प्रभो ॥३०॥

மோஹினி

29-30. பகவானே! ருக்மாங்கதனைப் பரீக்ஷை செய்யவேண்டி என்னை அனுப்பினீர். அதன்படி மஹாபாகவதரும், பர்த்தாவுமான அவருக்கு அபராதம் செய்து, அவரால் கைவிடப்பட்டு வருந்துகிறேன். இதற்குப் பிறகு நானும் பரமபதத்தை அடைய வழிகாட்டவேண்டும்.

ब्रह्मोवाच

मोहिनि त्वं मा विषीद सावधानं वचः शृणु ।
पूर्वं दशमिविद्धायामेकादश्यामिदं व्रतम् ॥३१॥

कुर्वतामक्षयं पुण्यं ददामि दुहितुस्तव ।
तेन त्वं परमं लोकं भज सत्यं वदाम्यहम् ॥३२॥

ப்ரும்மா

31-32. மோஹினி! வருந்தாதே. எனது வசனத்தை கவனித்துக்கேள். தசமிதிதியின் மிச்சத்துடன் ஸம்பந்தப் பட்டிருக்கும் ஏகாதசியில் எவர்கள் விரதம் செய்வார்களோ,

அவர்களுடைய அக்ஷயமான புண்ணியத்தை உனக்குத் தந்தேன். அதன் மூலம் நீ பரமபதத்தை அடைவாய். இது ஸத்தியம்.

**श्रीसद्गुरुरुवाच**

इत्युक्त्वा मोहिनीं ब्रह्मा सान्त्वयामास सादरम् ।
तस्माद्धि दशमीविद्धां त्यजेदेकादशीं बुधः ॥ ३३॥

कुर्वन् दशमिविद्धायामेकादश्यामुपोषणम् ।
न फलं प्राप्नुयान्नूनं मोहिन्या एव तत्फलम् ॥३४॥

यः पठेत् परमं पुण्यं सर्वपापविनाशनम् ।
रुक्माङ्गदस्य चरितं स प्राप्नोति परं पदम् ॥३५॥

पठेद्रुमाङ्गदकथामेकादश्यां विशेषतः ।
प्रीत्यर्थं वासुदेवस्य पावने विष्णुमन्दिरे ॥३६॥

श्रावयेद्वैष्णवान् भक्तान् भक्त्या च श्रद्धया द्विजाः ।
धर्ममर्थञ्च कामञ्च मोक्षञ्च प्राप्नुयाद्ध्रुवम् ॥३७॥

धन्यं यशस्यमायुष्यं माङ्गल्यं वंशवर्धनम् ।
रुक्माङ्गदस्य चरितं श्रोतव्यं निखिलैर्जनैः ॥३८॥

यथाशक्त्युपवासेन कुर्यादेकादशीव्रतम् ।
हरिमाराधयेद्भक्त्या कीर्तयेच्छृणुयादपि ॥३९॥

यो न कुर्यान्नरो मूढः पुण्यमेकादशीव्रतम् ।
सद्य एव भवेन्नीचो ब्राह्मणोपि न संशयः ॥४०॥

ஸ்ரீஸத்குரு

*33-40.* இவ்வாறு சொல்லி ப்ருஹ்மதேவன் மோஹினியை ஸமாதானம் செய்தார். எனவே தசமி மிச்சத்தில் வரும் ஏகாதசியில் உபவாஸமிருந்தால் அதன் பலன் மோஹினிக்குத் தான். எல்லா பாபங்களையும் நாசம் செய்யக்கூடிய புண்ணியமான ருக்மாங்கத சரித்திரத்தைப் படிப்பவன் பரமபதத்தைப் பெருவான். முக்கியமாக ஏகாதசி தோறும் விஷ்ணு ஆலயத்தில் வாஸுதேவனின் ப்ரீதிக்காக ருக்மாங்கத சரித்திரத்தைப் படிக்கவேண்டும். வைஷ்ணவர்களுக்கும், பக்தர்களுக்கும், இந்தக்கதையை பக்தியுடனும் ச்ரத்தையுடனும் சொல்லுபவன் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் இந்நான்கையும் பெறுவான். ருக்மாங்க சரித்திரத்தைக் கேட்கும் யாவருக்கும் தனம், புகழ், ஆயுள், வம்சவ்ருத்தி முதலிய மங்களங்கள் உண்டாகும். சக்திக்குத் தக்கபடி ஏகாதசியில் உபவாஸம் இருந்து கொண்டு ஹரிகீர்த்தனமும் கதாச்ரவணமும் செய்ய வேண்டும். எந்த மூடன் ஏகாதசி வ்ரதம் செய்யவில்லையோ அவன் ப்ராம்மணனாக இருந்தபோதிலும் சண்டாளனாகிறான்.

इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये क्षेत्रकाण्डे
रुक्माङ्गदचरित्रं नामाष्टमोऽध्यायः॥ ८॥

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமி ஸ்வாமிகள் அருளிச்செய்த ஸ்ரீப்ருந்தாவனமாஹாத்ம்யம் க்ஷேத்ரகாண்டத்தில் எட்டாவது அத்யாயம் முற்றும்.**

## अथ नवमोऽध्यायः

**ஒன்பதாவது அத்யாயம்**

***भागवता ऊचुः***

कथं बृन्दावनं ह्येतदभून्मधुवनाभिधम् ।
सर्वज्ञेन त्वया देव तत्र कारणमुच्यताम् ॥१॥

### பாகவதர்கள்

1. ப்ருந்தாவனம், மதுவனமென்று பெயர் பெற்றதற்கு என்ன காரணம்? தாங்கள் எல்லாம் அறிவீர். இதைச் சொல்லவேண்டும்.

### श्रीसद्गुरुरुवाच

आसीद्दैत्यो मधुर्नाम मधुरा येन निर्मिता ।
सभाचत्वररथ्याढ्या क्रीडोद्यानसमन्विता ॥२॥

तपश्चक्रे महाघोरमसुरो यमुनावने ।
आशुतोषं तोषयितुं तस्मान्मधुवनं स्मृतम् ॥३॥

स दैत्यः शूलमुद्यम्य दत्तं साक्षाच्छिवेन वै ।
अमरैः समरं चक्रे निहतश्चक्रपाणिना ॥४॥

तस्य पुत्रस्तु लवणः सर्वलोकभयङ्करः ।
ब्रह्महिंसां हितं मेने चरन् मधुवनेऽसुरः ॥५॥

ब्राह्मणास्तु तपोनिष्ठा यमुनातीरवासिनः ।
धर्षितास्तेन दैत्येन साकेतनगरीं ययुः ॥६॥

### ஸ்ரீஸத்குரு

2-6. ஆதிகாலத்தில் மது என்கிற ஒரு அஸுரன் இருந்தான். அவன் மதுரை என்கிற நகரத்தை நிர்மாணம் செய்து, அதில் வஸித்துவந்தான். அவன் சிவபெருமானைக் குறித்து யமுனைக் கரையில் கடுந்தவமியற்றினான். மது தவம் செய்த இடம் மதுவனமாயிற்று. அவனெதிரில் சிவபெருமான் தோன்றி அவனுக்கு ஒரு சூலத்தைத் தந்தார். மது தேவர்களுடன் யுத்தம் செய்தான். முடிவில் பகவானின்

சக்கரத்தினால் அடிபட்டு மாண்டுபோனான். அவனுடைய மகன் லவணாஸுரன் என்பவன் மிகவும் பயங்கரமானவன். மதுவனத்தில் வஸித்துக்கொண்டு முனிவர்களைப் பலவிதத்தி லும் துன்புறுத்தினான். அவனால் விரட்டப்பட்ட முனிவர்கள் அயோத்திக்கு வந்தனர்.

तत्र गत्वा जगन्नाथं शरणागतवत्सलम् ।
ब्रह्मण्यदेवं राजेन्द्रमयोध्यापुरनायकम् ॥७॥

रमणीयमुखाम्भोजं रत्नसिंहासनस्थितम् ।
पुण्डरीकविशालाक्षमतसीपुष्पसन्निभम् ॥८॥

हरिचन्दनलिप्ताङ्गं कस्तूरीतिलकोज्ज्वलम् ।
पद्ममालाधरं वीरं कनकाम्बरवेष्टितम् ॥९॥

सर्वलोकेश्वरं रामं सर्वाभरणभूषितम् ।
सत्यसन्धं महाप्राज्ञं सर्वसद्गुणसम्युतम् ॥१०॥

वीरासने सुखासीनं देवं दाशरथिं प्रभुम् ।
ददृशुर्मुनयः सर्वे दर्शनानन्दवर्धनम् ॥११॥

मुनीनभ्यगतान् वीक्ष्य समुत्थाय ससंभ्रमम् ।
चकार सत्क्रियां देवो नित्यं ब्राह्मणसेवकः ॥१२॥

7-12. அங்கு அயோத்திநகருக்கு நாயகனும், ஜகன்நாதனும், சரணாகதவத்ஸலனும், முனிவர்களிடம் பக்தி உடையவனும், அழகிய முகமுடையவனும், ரத்ன ஸிம்மாஸனத் தில் இருப்பவனும், தாமரைக் கண்ணனும், காயாம்பூ வண்ணனும், ஹரிசந்தனம், கஸ்தூரிதிலகம், பீதாம்பரம், தாமரைப்பூமாலை இவைகளை அணிந்தவனும்,

பரமேச்வரனும், எல்லா ஆபரணங்களும் அணிந்தவனும், ஸத்தியஸந்தனும்,. ஸர்வக்ஞனும், எல்லா நற்குணங்களும் பொருந்தியவனும், கால்மேல்கால் போட்டுக்கொண்டு உட்கார்ந்திருப்பவனும், தசரதராஜகுமாரனும், தரிசனம் செய்பவர்களுக்கு ஆனந்தத்தைக் கொடுப்பவனும், தேவனுமாகிய ராமபிரானை எல்லா முனிவர்களும் தரிசனம் செய்தார்கள். முனிவர்கள் வந்திருப்பதைக் கண்ட ராமர் பரபரப்புடன் எழுந்திருந்து பூஜை செய்தார்.

श्रीभगवानुवाच

स्वागतं वो महाभागा भूदेवास्तत्त्वदर्शिनः ।
दासोस्मि नित्यं युष्माकमद्य किं करवाणि वः ॥१३॥

पश्यामि युष्मान् वैदीकान् वेदान् मूर्तिधरानिव ।
प्रसन्नोस्मि प्रहृष्टोस्मि युष्माकं दर्शनादहम् ॥१४॥

ஸ்ரீபகவான்

*13-14.* இவ்வுலகத்தின் தெய்வங்களாகிய ஞானிகளே! உங்களுக்கு நல்வரவு. நான் உங்களுக்கு தாஸன். உங்களுக்கு என்ன செய்யவேண்டும்? வேதியர்களான உங்களைக் கண்டு வேதமே வடிவெடுத்து வந்திருப்பதாய் நினைக்கிறேன். உங்களுடைய தரிசனத்தினால் மட்டற்ற மகிழ்ச்சி யடைந்திருக்கிறேன்.

मुनय ऊचुः

वयं तु ब्राह्मणा राजन् रक्षितव्यास्त्वया प्रभो ।
यथा पूर्वं तपोनिष्ठा दण्डकारण्यवासिनः ॥१५॥

मनोरमे महापुण्ये यमुनातटकानने ।
दृढनिष्ठास्तपः कुर्मः साक्षात्कर्तुं श्रियःपतिम् ॥१६॥

त्वामेव जगतां नाथ जानीमस्तपसो बलात् ।
अत एव शरण्यं त्वां भजामः शरणं प्रभो ॥१७॥

लवणो नाम दैत्येन्द्रः सर्वब्रह्मण्यनाशनः ।
नराहारो महाघोरो भक्षयत्यनिशं मुनीन् ॥१८॥

विज्ञाय वनमाहात्म्यमम्बरीषध्रुवादिभिः ।
अन्यत्र गन्तुं नेच्छामस्तस्माद्बृन्दावनात् प्रभो ॥१९॥

बृन्दावनस्थितानेतान् ब्राह्मणान् संशितव्रतान् ।
प्रपन्नान् सर्वलोकेश परिपालय राघव ॥२०॥

முனிவர்கள்

15-20. ப்ரபுவே! நாங்கள் அந்தணர்கள்.. முன்பு தண்டகாரண்யத்தில் வஸித்த முனிவர்களைக் காப்பாற்றியது போல் எங்களையும் காப்பாற்றவேண்டும். புண்ணியமான யமுனைக்கரையில் வஸிக்கிறோம். அங்கு லக்ஷ்மீநாதனைக் காண வேண்டித் தவம் செய்கிறோம். எங்கள் தவ வலிமையால் உம்மையே ஜகன்னாதன் என்று அறிந்திருக்கிறோம். ஆகையால்தான் உம்மை சரணமடைகிறோம். லவணாஸுரன் என்பவன் நரமாமிசத்தைச் சாப்பிடக்கூடிய மிகவும்கோரமான துஷ்டன். அவன் முனிவர்களை நாசம் செய்கிறான். அம்பரீஷன் துருவன் முதலியவர்கள் தவம் செய்து ஸித்தி பெற்றதால் ப்ருந்தாவனத்தை விட்டு வேறு இடம் செல்ல எங்களுக்கு விருப்பமில்லை. ஆகையால் ராமா! சரணாகதியடைந்த எங்களைக் காப்பாற்றவேண்டும்.

श्रीसद्गुरुरुवाच

इत्युक्तो राघवेन्द्रश्च विनीतो विहिताञ्जलिः ।
जगाद मधुरं वाक्यं मत्तहंसस्वरस्तदा ॥२१॥

### ஸ்ரீஸத்குரு

21. இவ்வாறு சொல்லப்பட்ட ராமர் கை குவித்து, கணீரென்ற குரலில் இனிமையாகப் பேசினார்.

### श्रीभगवानुवाच

आज्ञाप्योहं महाभागा युष्माभिर्लोकपूजितैः ।
ध्रियते धनुरेतद्वो योगक्षेमाय केवलम् ॥२२॥

ऋणवानस्म्यहं विप्रा भवतां विषये सदा।
रामेति नाम्ना यदहमाहूतः प्रेमपूर्वकम्। ॥२३॥

आश्रयेहं पादधूलिं त्वादृशानां महात्मनाम् ।
अत एव हि मां लक्ष्मीर्नित्यमाश्रित्य तिष्ठति ॥२४॥

### ஸ்ரீபகவான்

22-24. பெரியவர்களே! பூஜிக்கத்தக்க உங்களுக்கு நான் அடிமை. உங்களைக் காப்பாற்றவேண்டியே க்ஷத்திரியர்கள் கையில் வில்லைப்பிடிக்கவேண்டும். ராமா என்று அன்புடன் கூப்பிட்டு வந்ததற்கு நான் உங்கள் பாததூளியை அண்டியிருப்பதால் தான் என்னிடம் லக்ஷ்மிதேவி நிலைத்திருக்கிறாள்.

### श्रीसद्गुरुरुवाच

कौसल्यानन्दनश्चैवं सान्त्वयन् मुनिपुङ्गवान् ।
समानिनाय शत्रुघ्नं प्रेमपूर्वं कृपानिधिः ॥२५॥

### ஸ்ரீஸத்குரு

25. கோஸலையின் செல்வன் முனிவர்களை இவ்வாறு ஸமாதானம் செய்து சத்ருக்னனை அன்புடன் அழைத்துச் சொன்னான்.

### श्रीभगवानुवाच

गच्छ तात मम भ्रातर्मुनिभिर्यमुनावनम् ।
चतुरङ्गबलैर्युक्तस्त्वरया समराय च ॥२६॥

स्वयमेवासि शत्रुघ्नो मुनिभिश्च प्रचोदितः ।
भूदेवानां रक्षणाय रणे त्वं लवणं जहि ॥२७॥

निहत्य लवणं युद्धे निवसन् मधुरापुरे ।
भूमिं पालय शत्रुघ्न यमुनाजलपाविताम् ॥२८॥

### ஸ்ரீபகவான்

*26-28.* தம்பி! முனிவர்களுடன் மதுவனத்திற்குச் செல். யுத்தம் செய்யவேண்டியிருப்பதால் நால்வகைச் சேனையுடன் செல்லுவாயாக. நீ சுயமாகவே சத்ருக்களைக் கொல்லுபவன். முனிவர்களும் வேண்டிக்கொண்டால் கேட்கவும் வேண்டுமா? முனிவர்களைக் காப்பாற்றவேண்டி லவணாஸுரனை வதம் செய்து மதுரையிலேயே அரசாட்சி நடத்தி வருவாயாக.

### शत्रुघ्न उवाच

न राज्यं कामये देव न स्वर्गं नापुनर्भवम् ।
पार्श्वे तिष्ठन् कामयेऽहं तव चामरवीजनम् ॥२९॥

अनालोक्य कथं स्वामिन् सुन्दरं वदनं तव ।
सुखजीवी भविष्यामि त्वमेव सुखकारणम् ॥३०॥

### சத்ருக்னன்

*29-30.* தேவ! நான் ராஜ்யத்தையோ, ஸ்வர்கத்தையோ, மோக்ஷத்தையோ கூட விரும்பவில்லை. உமது பக்கத்தில் நின்று ஸாமரம் வீசுவதையே விரும்புகிறேன். உமது அழகான முகத்தைக் காணாமல் எப்படி இருப்பேன்? தாங்கள்தானே சுகத்திற்குக் காரணம்.

तवापि भक्तिं जानामि ममाज्ञां पालय प्रभो ।
ब्राह्मणानां रक्षणाय ध्रियते क्षत्रियैर्धनुः ॥३१॥

अद्यैव मधुरां गच्छ चतुरङ्गबलान्वितः ।
तवेष्टं धनमादाय निखिलं शत्रुसूदन ॥३२॥

**ஸ்ரீபகவான்**

*31-32. சத்ருக்னா! உனது பக்தியை நானறிவேன். எனது சொல்லைத் தட்டாதே. முனிவர்களை ரக்ஷிப்பதே நமது லக்ஷியம். இப்பொழுதே வேண்டிய செல்வத்தையும் நால்வகைச் சேனையையும் எடுத்துக்கொண்டு மதுரைக்குச் செல்.*

**श्रीसद्गुरुरुवाच**

इत्युक्त्वा कृपया रामो बाष्पपूर्णविलोचनः ।
अङ्के निधाय शत्रुघ्नं मूर्ध्न्युपाघ्राय राघवः ॥३३॥

पस्पर्श पाणिना पाणिं शत्रुघ्नस्य महात्मनः ।
मुनिभ्यः प्रददौ भक्तमात्मानं स्वपिता यथा ॥३४॥

आज्ञामवाप्य शत्रुघ्नो ज्येष्ठभ्रातुर्महात्मनः ।
मधुरां प्रययौ शीघ्रं महितो मुनिपुङ्गवैः ॥३५॥

निहत्य लवणं युद्धे शत्रुघ्नः शत्रुसूदनः ।
अवसन्मधुरायाञ्च पृथिवीं परिपालयन् ॥३६॥

अभिषिक्तो राघवेण मधुरामण्डले प्रभुः ।
अयोध्यानगरे दिव्ये साक्षाद्राम इवाबभौ ॥३७॥

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये क्षेत्रकाण्डे श्रीरामचरितं नाम नवमोऽध्यायः॥ ९॥*

### ஸ்ரீஸத்குரு

*33-37.* இவ்வாறு சொல்லி ராமர் சத்ருக்னனைத் தனது மடியில் அமர்த்தி, உச்சிமுகர்ந்து, கண்ணீர்விட்டுக்கொண்டே, தன்னைத் தனது தந்தையான தசரதர் விசுவாமித்ரரிடம் தந்ததுபோல் முனிவர்களிடம் ஒப்படைத்தார். சத்ருக்னனும் அண்ணனின் ஆணையை மீறாமல் முனிவர்களுடன் மதுரைக்குச் சென்றான். லவணாஸுரனை யுத்தத்தில் வதம் செய்து மதுரையில் வஸித்து வந்தான். ராமபிரானால் மதுரையில் பட்டாபிஷேகம் செய்விக்கப்பட்டான். அயோத்தியில் ராமன் ஆளுவதுபோல் மதுரையில் சத்ருக்னன் ஆண்டுவந்தான்.

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமி ஸ்வாமிகள் அருளிச்செய்த ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்ம்யம் க்ஷேத்ரகாண்டத்தில் ஒன்பதாவது அத்தியாயம் முற்றும்.**

## अथ दशमोऽध्यायः

## பத்தாவது அத்தியாயம்

### भागवता ऊचुः

देवोद्यानान्यनन्तानि तथा हैमवतं वनम् ।
त्यक्त्वा बृन्दावने कृष्णः किं क्रीडति गुरूत्तम ॥१॥

**பாகவதர்கள்**

*1.* தேவர்களுக்குரிய பல நந்தவனங்களையும், இமயமலைச் சாரலிலுள்ள வனத்தையும் விட்டு க்ருஷ்ணன் ப்ருந்தாவனத்தில் ஏன் விளையாட வேண்டும்?

### श्रीसद्गुरुरुवाच

बृन्दावनञ्च यमुना तथा गोवर्धनो गिरिः ।
अप्राकृता नित्यरूपाः सन्ति गोलोकमण्डले ॥२॥

ஸ்ரீஸத்குரு

2. ப்ருந்தாவனம் யமுனை கோவர்த்தனம் இவையாவுமே மாயைக்கு அப்பாற்பட்ட லோகத்திலுள்ள நித்யமான பொருள்களாகும்.

कृष्णप्रेमपरा बृन्दा गोलोके वनदेवता ।
नित्यसिद्धा कृष्णदासी शुद्धसत्त्वस्वरूपिणी ॥३॥

3. க்ருஷ்ணப்ரேமையையே லக்ஷியமாகக்கொண்ட ப்ருந்தா கோலோகத்திலுள்ள வனதேவதையாவாள். அவள் சுத்தஸத்வ மானரூபமுடைய நித்யஸித்தமான க்ருஷ்ணதாஸி.

तां केचिदल्पशास्त्रज्ञाः प्रक्षिप्ताध्यायवाक्यतः ।
जलन्धरस्य दयितां वदन्ति हरिवञ्चिताम् ॥४॥

4. முதிர்ந்த ஞானமில்லாத சிலர் இடைச்செறுகலான வாக்கியங்களைக்கொண்டு ப்ருந்தாதேவியை ஜலந்தரனென்ற அசுரனின் மனைவியென்றும், மஹாவிஷ்ணுவினால் ஏமாற்றப் பட்டவளென்றும் சொல்லுகின்றனர்.

परदारान् लोकनाथो धर्मात्मा वञ्चयेत्कथम् ।
पुराणोक्तमपि ह्येतदसारं वर्जयेद्बुधः ॥५॥

5.தர்மாத்மாவான லோகநாதனான பகவான் பரதாரங்களை வஞ்சிக்க மாட்டான். புராணத்தில் சொல்லியிருந்தாலும் இது ஸாரமற்றதென்று விட்டுவிடவேண்டியது.

तुलस्यमृतजन्मेति सत्यवाक्यप्रमाणतः ।
बृन्दाया दिव्यरूपत्वं विशदं प्रतिपादितम् ॥६॥

6. துளஸி அம்ருதஜன்மாஸி என்ற வாக்யப்ரமாணத்தால் ப்ருந்தாதேவியின் ரூபம் திவ்யமானதென்று தெரிகிறது.

अप्राकृते तु गोलोके परमार्थे स्वरूपतः ।
शापादिव्यवहारस्तु कदापि न हि संभवेत् ॥७॥

7. மாயாஸம்பந்தமற்ற கோலோகத்தில் கோபம் சாபம்முதலிய வ்யவஹாரம் ஒருக்காலும் ஸம்பவிக்காது.

राधायाः प्रेमरूपिण्याः कोपः शापः कदापि च ।
नानुरूपः पुराणोक्तं तमसारञ्च वर्जयेत् ॥८॥

8. ப்ரேமரூபிணியான ராதைக்கு கோபமும் சாபமும் ஒருக்காலும் பொருத்தமில்லை.

कदाचिद्गोपिकानाथो गोविन्दो गोकुलेश्वरः ।
गोलोके यमुनातीरे दिव्ये बृन्दावने प्रभुः ॥९॥

मन्दारवृक्षच्छायायां मन्दमारुतसेविते ।
माधवीमण्टपे रेजे राधयालिङ्गितो हरिः ॥१०॥

9-10. ஒருஸமயம் கோலோகத்தில் யமுனாதீரத்தில் திவ்யமான ப்ருந்தாவனத்தில் கோபீநாதனான கோவிந்தன் மந்த மாருதத்தில் மாதவீமண்டபத்தில் மந்தாரமரத்தின் நிழலில் ராதையினால் ஆலிங்கனம் செய்யப்பட்டு வீற்றிருந்தான்.

तदा तं परितः सख्यो वल्लव्यो ललितादयः ।
सिषेविरे प्रेमपूर्वं ताम्बूलकुसुमादिभिः ॥११॥

11. அப்பொழுது லலிதாமுதலிய ஸகிகள் சுற்றியிருந்து தாம்பூலம் புஷ்பம் முதலியவைகளால் ப்ரேமையுடன் ஸேவித்துக் கொண்டிருந்தனர்.

कुर्वन् प्रणयसल्लापं भगवान्नन्दनन्दनः ।
तोषयामास ता गोपीर्मन्दहासमुखाम्बुजः ॥१२॥

12. பகவானாகிய கண்ணன் மந்தஹாஸம் தவழும் முககமல முடையவனாய், ப்ரேமஸல்லாபம்செய்து அவர்களை ஸந்தோஷப்படுத்திக் கொண்டிருந்தான்.

एतस्मिन्नन्तरे राधा सुधानिधिसमानना ।
पप्रच्छ प्रेमपूर्वं तं गोपालं प्राणवल्लभम् ॥१३॥

13. இந்தஸமயத்தில் சந்திரன்போன்ற முகமுள்ள ராதை ப்ராணகாந்தனான கோபாலனை ப்ரேமையுடன் கேட்டாள்.

### श्रीदेव्युवाच

मम नाथ जगन्नाथ गोपीनाथ नमोस्तु ते ।
उत्तरं देहि मे देव प्रश्नस्य मम माधव ॥१४॥

### ஸ்ரீதேவி

14. ஜகந்நாத! கோபீநாத! என் நாத! உனக்கு வந்தனம். மாதவ! என் கேள்விக்கு விடை தரவேண்டும்.

त्वयि प्रेमपरिष्कारः कस्मिन् लोके विशेषतः ।
प्रकाशते कृपासिन्धो ज्ञातुमिच्छामि तद्वद ॥१५॥

15. க்ருபாஸிந்தோ! உம்மிடம் ப்ரேமையின் ப்ரகாசம் எந்த லோகத்தில் அதிகமாக விளங்குகிறது? அதை அறிய விரும்புகிறேன்.

### श्रीभगवानुवाच

वैकुण्ठे न च गोलोके ब्रह्मलोकेपि राधिके ।
प्रेमप्रकाशो नास्त्येव यथा भूलोकमण्डले ॥१६॥

### ஸ்ரீபகவான்

16. ராதிகே! ப்ரம்மலோகத்திலோ, வைகுண்டத்திலோ, கோலோகத்திலோகூட அவ்வளவு ப்ரேமப்ரகாசமில்லை. பூலோகத்தில்தான் ப்ரேமையின் ப்ரகாசம் விளங்குகிறது.

### श्रीदेव्युवाच

हन्त गोलोकसाम्राज्यमपि त्यक्त्वा जगत्पते ।

एवं किं श्लाघसे नाथ भूलोकं प्राकृतं प्रभो ।।१७।।

ஸ்ரீதேவி

17. ஜகந்நாத! என் நாத! கோலோகஸாம்ராஜ்யத்தைக்கூட விட்டுவிட்டு ப்ராக்ருதமான பூலோகத்தை ஏன் புகழ்கின்றீர்?

श्रीभगवानुवाच

क्षुधैवान्नस्य माधुर्यं तृष्णया सलिलस्य च ।
छाययाश्चातपेनैव विद्यते राधिके तथा ।।१८।।

ஸ்ரீபகவான்

18. பசியினாலேயே விருந்தின் அருமை தெரியும். தாகத்தினாலேயே தண்ணீரின் அருமையும், வெய்யிலினாலேயே நிழலின் அருமையும் தெரியும்.

मिलनस्य परं सौख्यं विरहेणैव विद्यते ।
विरहो न हि गोलोके सदा पश्यन्ति मामिह ।।१९।।

19. அதுபோல் பிரிவினாலேயே சேர்த்தியில் இன்பம் தெரியும். கோலோகத்தில் நமக்குத்தான் பிரிவே இல்லையே.

भूलोके विरहेणायं प्रेमभावः प्रकाशते ।
तस्माद्वदामि भूलोकं श्रेष्ठं भक्तिरसोज्ज्वलम् ।।२०।।

20. பூலோகத்தில் பிரிவு இருப்பதால் ப்ரேமப்ரகாசம் அதிகமாகிறது. அதனால் பூலோகம் சிறந்தது என்றேன்.

श्रीदेव्युवाच

अर्थं न वेद्मि गोविन्द विरहस्य श्रुतस्य तु ।
शब्दमात्रं हि जानामि वद मे विस्तरात्प्रभो ।।२१।।

**ஸ்ரீதேவி**

*21. கோவிந்த! எனக்கு விரஹம் என்ற சொல்லின் பொருள் புரியவில்லை. அதைப்பற்றி விளக்குவீராக!*

***श्रीभगवानुवाच***

नित्यसंसर्गयुक्तायास्तव गोलोकमण्डले ।
स्वप्नेपि विरहो नास्ति तद्वक्तुं शक्नुयां कथम् ॥२२॥

**ஸ்ரீபகவான்**

*22. எப்பொழுதும் பிரிவில்லாத இந்த கோலோகத்தில் கனவில்கூட விரஹமில்லை. எப்படி அதை நிரூபிக்கமுடியும்?*

अनुभूतिं विना शब्दज्ञानं लोके न शोभते ।
काङ्क्षन्ती विरहं राधे गच्छ भूलोकमुत्तमम् ॥२३॥

*23. அனுபவமில்லாது வெறும் பேச்சுக்கு மதிப்பில்லை. ராதே! நீ விரஹத்தை விரும்பி பூலோகம் செல்வாயாக!*

जानासि किल शृङ्गारं रसानां श्रेष्ठमुत्तमम् ।
स द्वेधा प्रोच्यते देवि परमानन्ददायकः ॥२४॥

*24. ராதே! ரஸங்களில் சிறந்தது ச்ருங்காரரஸமென்று உனக்கே தெரியும். அந்த ரஸம் இரண்டுவிதப்படும்.*

विप्रलम्भश्च संयोग इति तत्त्वविशारदैः ।
संयोगाद्विप्रलम्भस्तु परमो नात्र संशयः ॥२५॥

*25. விப்ரலம்பம், ஸம்யோகமென்ற இரண்டுவிதமான அந்த ச்ருங்காரத்தில் ஸம்யோகத்தைக்காட்டிலும் விப்ரலம்பமே சிறந்தது.*

विप्रलम्भे महांस्तापो हृदयं दहति प्रिये ।

अखण्डस्मरणं दत्वा प्रियस्यानन्ददायकम् ॥२६॥

26. விப்ரலம்பத்தில் விரஹதாபம் அதிகமாகி தனது ப்ரியனின் அகண்டமான நினைவைத் தருகிறது.

आतपे जतुवच्छुद्धं चित्तं द्रवति राधिके ।
एषा हि परमा भक्तिर्मयि प्रेमस्वरूपिणी ॥२७॥

27. ராதிகே! வெய்யிலில் மெழுகு உருகுவதுபோல் சித்தம் என்னிடத்தில் உருகுகிறது. அதுவே ப்ரேமரூபமான பக்தி.

चिन्ताजागरणोद्वेगौ मालिन्यं कार्श्यमेव च ।
प्रलापो व्याधिरुन्मादो मूर्च्छा प्रलय एव च ॥२८॥

एवं दशमहाभावाः शोभन्ते विरहेण हि ।
तमेव भक्तितत्त्वज्ञाः काङ्क्षन्ते भुवि साधवः ॥२९॥

28,29. சிந்தை, தூக்கமின்மை, உத்வேகம், மேனியில் புழுதி, சரீரஇளைப்பு, புலம்பல், வியாதி, உன்மத்தம், மூர்ச்சை, ப்ரளயம் என்று பத்துவிதமான நிலைமைகள் விரஹத்தில் தோன்றுகின்றன. எனவே ஸாதுக்கள் விரஹத்தையே விரும்புகின்றனர்.

अवतीर्य त्वमेवाद्य प्रकाशय रसं परम् ।
मामकं विरहं लब्ध्वा राधे प्रेमस्वरूपिणि ॥ ३०॥

30. ப்ரேமஸ்வரூபிணியான ராதே! நீ உலகில் அவதரித்து ப்ரேமபக்தியை ப்ரகாசப்படுத்து.

ममैव दर्शनार्थं यः प्रेम्णा रोदिति सन्ततम् ।
स एव धन्यो लोकेषु सर्वेषु प्रियदर्शिनि ॥३१॥

31. ப்ரியதர்சினி! என்னை தரிசனம் செய்யவேண்டி ப்ரேமையுடன் எவன் அழுகிறானோ அவனே மூவுலகிலும் பாக்யவான்.

## श्रीसद्गुरुरुवाच

एवं गोलोकनाथस्य वचनामृतमादरात् ।
आपीय राधिकादेवी कौतूहलमवाप सा ॥३२॥

## ஸ்ரீஸத்குரு

32. இவ்வாறு கோலோகநாதனின் வசனாம்ருதத்தைப் பருகிய ராதை குதூஹலமடைந்தாள்.

इयेष गन्तुं भूलोकं कृष्णतृष्णारसोज्ज्वलम् ।
गोलोकमपि सन्त्यज्य देवी विरहकाङ्क्षया ॥३३॥

33. க்ருஷ்ணவிரஹமாகிய தாபத்தினால் ப்ரகாசிக்கும் பூலோகத்தை விரஹத்தை விரும்பி, கோலோகத்தையும் விட்டு அடைந்தாள்.

तामेवानुययुर्देवीं बृन्दा च यमुना तथा ।
गोवर्धनो गोपिकाश्च लीलोपकरणानि च ॥३४॥

34. ப்ருந்தை, யமுனை, கோவர்த்தனம், கோபிகைகள் மற்ற உபகரணங்கள் யாவும் தேவியைப் பின்தொடர்ந்து வந்தன,

वृषभानोः कलावत्यामाविर्भूय रसेश्वरी ।
गोपीभिस्तोषयामास गोविन्दं रासमण्डले ॥३५॥

35. வ்ருஷபானுகோபருக்கும், கலாவதிக்கும் பெண்ணாகப் பிறந்து கோபிகைகளுடன் ராஸமண்டலத்தில் கோவிந்தனை ஸந்தோஷப்படுத்தினாள்.

नीते तु गान्दिनेयेन गोविन्दं मधुराङ्गते ।
शतं संवत्सरं देवी निनाय विरहेण सा ॥३६॥

36. அக்ரூரரால் அழைக்கப்பட்டு கண்ணன் மதுரை சென்றபிறகு நூறு ஆண்டுகள் ராதை க்ருஷ்ணவிரஹத்தை

அனுபவித்தாள்.

प्राणान् सन्धारयन्ती सा पुनः सङ्गमकाङ्क्षया ।
उवास श्रीवने राधा सखीभिः परिसान्त्विता ॥३७॥

37. மீண்டும் கண்ணனுடன் சேரும் ஆசையால் ராதை உயிரை வைத்துக்கொண்டிருந்தாள். ஸகிகளால் தேற்றப்பட்டு ப்ருந்தாவனத்தில் வசித்தாள்.

सर्वं बृन्दावनं कृष्णविरहेणैव पीडितम् ।
बभूव सन्ततं कृष्णध्यानकीर्तनतन्मयम् ॥३८॥

38. அப்பொழுது ப்ருந்தாவனம் முழுவதுமே க்ருஷ்ண விரஹத்தினால் பீடிக்கப்பட்டு க்ருஷ்ணகீர்த்தனத்திலும், தியானத்திலும் தன்மயமாகி இருந்தது.

यदा यदा राधिका सा विरहान्मृत्युमाप्नुयात् ।
तदा तदा तदग्रे तु गोविन्दो दर्शनं ददौ ॥३९॥

39. எவ்வப்பொழுது ராதை விரஹத்தினால் மூர்ச்சையை அடைவாளோ அவ்வப்பொழுது அவளெதிரில் கோவிந்தன் தரிசனம் தருவான்.

पार्श्वे तिष्ठन्नपि हरिर्नाभवन्नेत्रगोचरः ।
तस्या विरहतापस्य नित्यं संवर्धनेच्छया ॥४०॥

40. கண்ணன் பக்கத்திலிருந்தபோதிலும் கண்ணிற்குப் புலப்படான். அவளுடைய விரஹவேதனையையே வளர்த்தான்.

ततश्चरमलीलायां भगवान् श्रीवनं पुनः ।
आगत्य सान्त्वयामास राधिकां प्रेमरूपिणीम् ॥४१॥

41. பகவான் க்ருஷ்ணன் அவதாரலீலையை முடித்து கோலோகம் செல்லும் ஸமயம் வந்ததும், ப்ருந்தாவனம் வந்து

ராதையைத் தேற்றினான்.

प्रेषयामास तां देवीं गोलोकं सपरिच्छदम् ।
सशरीरं यथापूर्व रामः साकेतवासिनः ॥४२॥

42. ராமாவதாரத்தில் அயோத்திமக்களை சரீரத்துடனேயே ஸந்தானலோகம் அனுப்பியதுபோல் ராதைமுதலிய வ்ரஜவாஸிகள் யாவரையும் கோலோகம் அனுப்பினான்.

एवं गोलोकयात्रापि कृष्णस्य व्यावहारिकी ।
नूनमत्रापि तत्रापि क्रीडति व्यापको हरिः ॥४३॥

43. இவ்வாறு க்ருஷ்ணனின் கோலோகயாத்திரையின் ஒரு வ்யவஹாரலீலையில் இங்கும், அங்கும் எங்கும் கண்ணன் இருக்கிறான்.

बृन्दावनं दिव्यमेतद्भूलोके न हि संशयः ।
अद्यापि रमते कृष्णो राधया यमुनातटे ॥४४॥

44. பூலோகத்திலுள்ள இந்த ப்ருந்தாவனமும் திவ்யமானதே. ஸம்சயமில்லை. இப்பொழுது ராதையுடன் கண்ணன் யமுனாதீரத்தில் விளையாடுகிறான்.

अद्यापि प्रेमभक्तस्य दर्शनं याति कस्यचित् ।
राधिकावल्लभो देवो यमुनातटवासिनः ॥४५॥

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये क्षेत्रकाण्डे*

*श्रीबृन्दावनमाहात्म्यं नाम दशमोऽध्यायः॥ १०॥*

45ராதாவல்லபனான க்ருஷ்ணன் இப்பொழுதும்கூட யமுனா தீரத்தில் வசிக்கும் ஒரு சில பக்தர்களுக்கு தரிசனம் தருகிறான்.

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமி ஸ்வாமிகள் அருளிச்செய்த ஸ்ரீப்ருந்தாவனமாஹாத்ம்யம் க்ஷேத்ரகாண்டத்தில் பத்தாவது அத்யாயம் முற்றும்**

6

# अथैकादशोऽध्यायः

## பதினோராவது அத்யாயம்

### भागवता ऊचुः

गोप्यः कतिविधाः सन्ति कथं कृष्णं भजन्ति ताः ।
रहस्यमेतदस्माकं ब्रूहि सद्गुरुपुङ्गव ॥१॥

### பாகவதர்கள்

1. ஸத்குருவே! எவ்வளவு விதமான கோபிகைகள் இருக்கிறார் கள்? அவர்கள் கிருஷ்ணனை எப்படி பஜிக்கிறார்கள்? இந்த ரஹஸியத்தைச் சொல்ல வேண்டும்.

### श्रीसद्गुरुरुवाच

यानि वेदान्तवाक्यानि तानि सर्वाणि गोकुले ।
जनित्वा नायिकाभावाद्भजन्ति श्यामसुन्दरम् ॥२॥

सर्ववेदान्तवेद्यं तं कृष्णमेव सनातनम् ।
सेवन्ते गोपिका भूत्वा श्रुतिवाक्यानि सन्ततम् ॥३॥

पुरा गोलोकभुवने निकुञ्जे रहसि क्वचित् ।
परिरेभे हरिः कृष्णः प्रेयसीं वृषभानुजाम् ॥४॥

तदालिङ्गनसञ्जातपुलकायाः श्रियस्तदा ।
सञ्जाता रोमकूपेभ्यः कोटिशो गोपकन्यकाः ॥५॥

ता राधिकांशसंभूताः सख्यः श्रीललितादयः ।
भजन्ति प्रेमभावेन सन्ततं नन्दनन्दनम् ॥६॥

या वैकुण्ठविलासिन्यो विष्णुसेवापरायणाः ।
ताश्च श्रीकृष्णसौन्दर्यदर्शनेन विमोहिताः ॥७॥

गोकुले गोपिका भूत्वा भजन्ति श्यामसुन्दरम् ।
वैकुण्ठे या परा लक्ष्मीर्गोलोके सैव राधिका ॥८॥

आत्मारामाश्च मुनयः श्वेतद्वीपनिवासिनः ।
व्रजेपि वल्लवीभूता नन्दबालं भजन्ति ते ॥९॥

सख्यः श्रीभूमिनीलानां स्त्रीणां क्षीराब्धिशायिनः ।
क्षीरचोरं पतिं लब्धुं गोपीभूता वसन्ति ताः ॥१०॥

तथैव स्वर्गसुन्दर्यो भजन्ते नन्दनन्दनम् ।
उपेन्द्रपूजापुण्येन गोपीभूता वसन्ति ताः ॥११॥

पूर्वं रामावतारे च मिथिलापुरयोषितः ।
मुमुहुर्मन्मथास्त्रेण दृष्ट्वा तं रघुपुङ्गवम् ॥१२॥

आगतं दण्डकारण्यं जटामण्डलधारिणम् ।
जानकीवल्लभं पुंसामपि चित्तापहारिणम् ॥१३॥

विलोक्य रघुवीरं तं मुनयः संशितव्रताः ।
मुमुहुर्जितकामास्ते रूपसौन्दर्यवञ्चिताः ॥१४॥

तथैव वनवासिन्यः किरातमुनिकन्यकाः ।
विलोक्य मुमुहुः सर्वाः प्रभुं सीतामनोहरम् ॥१५॥

तेषां विशुद्धकामानामेकदारव्रतो हरिः ।
न शशाक वरं दातुं तस्मात्खेदमवाप्य सः ॥१६॥

तेषामनुग्रहायैव स्वच्छन्दगतिरच्युतः ।
अवतारं परं चक्रे श्रीमद्गोकुलमण्डले ॥१७॥

सर्वे ते मुनयश्चापि सर्वास्ता योषितस्तथा ।
गोकुले वल्लवीभूताः सन्ति पूर्णमनोरथाः ॥१८॥

ஸ்ரீஸத்குரு

2-18. வேதாந்தத்தில் எவ்வளவு வாக்கியங்கள் இருக்கின்றனவோ, அவைகள் யாவும் கோபிகைகளாக ஆகி எல்லா வேதாந்த வாக்கியங்களாலும் அறியத்தக்க பரமாத்மாவான க்ருஷ்ணனை பஜிக்கின்றன. முன்பு கோலோகத்தில் ராதையைக் கண்ணன் ஆலிங்கனம் செய்துகொள்ளவே, ராதை மேனி சிலிர்த்தாள். அப்பொழுது அவளுடைய திருமேனியிலிருந்தே ராதையின் அவதாரமாகத் தோன்றிய லலிதைமுதலிய கோடிக்கணக்கான கோபிகைகள் கிருஷ்ணனை பஜிக்கின்றனர். வைகுண்டத்தில் விஷ்ணுவிற்கு ஸேவை செய்யும் பல பெண்மணிகள் கிருஷ்ணா வதாரத்தில் மயங்கிக் கண்ணனை பஜிக்கின்றனர். ஏனெனில் கண்ணன் வேறு; நாராயணன் வேறு அல்ல. ராதை வேறு; லக்ஷ்மி வேறல்ல. ச்வேதத்வீபத்தில் வஸிக்கும் பல ஞானிகள் கோகுலத்தில் கோபிகைகளாக ஆகி க்ருஷ்ணபக்தி செய்கின்றனர். க்ஷீராப்தியில் சயனம் செய்யும் பகவானின் தேவிகளான ஸ்ரீதேவி, பூதேவி, நீளாதேவி என்கிற மூவரின் தோழிகள் கோபிகைகளாக ஆகி க்ஷீரசோரனான கிருஷ்ணனை பதியாக அடைந்தனர். அவ்வாறே தேவதாஸ்த்ரீகள் உபேந்திர மூர்த்தியை வழிபட்ட புண்ணியத்தினால் கோபிகைகளாகி கிருஷ்ணபக்தி செய்கின்றனர். முன்பு ராமாவதாரத்தில் மிதிலையில் ராமனைக் கண்டு மோஹங்கொண்ட பெண்மணி களும், தண்டகாரண்யத்தில் ராமனின் அழகில் ஈடுபட்ட

முனிவர்களும், முனிகன்னிகைகளும் அப்பொழுது அந்த அவதாரத்தில் பகவான் ஒரே தாரம் உடையவனாயிருந்ததால் ஆசை நிறைவேறாமல், இப்பொழுது கிருஷ்ணாவதாரத்தில் கோகுலத்தில் கோபிகைகளாக ஆகி கண்ணனை பஜிக்கின்றனர்.

काले फलति कामश्च कृतः शुद्धात्मभिर्नरैः ।
कोटिमन्मथलावण्ये गोविन्दे पुरुषोत्तमे ॥१९॥

किन्तु शूर्पणखादीनां कामः प्रेमविवर्जितः ।
तमेवाश्रित्य गोविन्दं विफलो दुःखदोऽभवत् ॥२०॥

जानन्ति रसिका भक्ता भेदञ्च प्रेमकामयोः ।
स्वार्थलाभपरः कामः प्रेम निःस्वार्थमुच्यते ॥२१॥

तस्माद्धि त्यक्तकामानामेव भक्तिः प्रजायते ।
कामो विषयदुर्गन्धो यस्माद्दूरतरो हरिः ॥२२॥

19-22. பகவானிடத்தில் வைத்த ப்ரேமை வீண்போகாது. காலாந்தரத்திலாவது பலித்துவிடும். ஆனால் சூர்ப்பணகை முதலியவர்கள் உள்ளத்தில் காமமே கொண்டிருந்தார்கள். பிரேமை இல்லை. எனவே துக்கத்தையே உண்டாக்கியது. பிரேமை-காமம் இவைகளின் பேதத்தை ரஸிகர்களே அறிவார்கள். சுயநலத்தைக்கோரும் அன்பு காமமாகும். காமமாகிய துர்கந்தத்திற்கு பயந்து ஹரி வெகுதூரம் செல்லு கிறான். காமத்தை வென்றவர்களுக்கே பிரேமை உண்டாகும்.

नागलोके समासीनं सङ्कर्षणमहीश्वरम् ।
या भजन्ति वरारोहाः सुन्दर्यो नागकन्यकाः ॥२३॥

ताः सर्वा गोकुले जाता गोपानामिह वेश्मसु ।

रमन्ते बलभद्रेण यमुनापुलिने निशि ॥२४॥

कदाचिद्भगवान् रामो गोपीमण्डलमध्यगः ।
समाजुहाव यमुनां जलक्रीडार्थमन्तिके ॥२५॥

किन्तु सा यमुनादेवी कृष्णप्रेमपरायणा ।
नाययौ बलभद्रस्य समीपं तु पतिव्रता ॥२६॥

कुपितो बलभद्रश्च हलाग्रेण कलिन्दजाम् ।
चकर्षात्मसमीपञ्च वेपमानां भयेन ताम् ॥२७॥

साप्युवाच तदा देवी यमुना कृष्णमानसा ।
बद्धाञ्जलिपुटा दीना बलभद्रं महाबलम् ॥२८॥

*23-28. நாகலோகத்தில் ஸங்கர்ஷணமூர்த்தியை வழிபட்ட நாககன்னிகைகள் யாவரும் கோகுலத்தில் கோபிகைகளாகப் பிறந்து பலராமனுடன் விளையாடினார்கள். ஸங்கர்ஷண மூர்த்தியின் அவதாரமாகிய பலராமன் தனது கோபிகை களுடன் ஜலக்ரீடை செய்யவேண்டி யமுனையைக் கிட்டே அழைத்தான். கிருஷ்ணனிடம் பிரேமை கொண்டிருந்த யமுனை பலராமனிடம் வரவில்லை. அப்பொழுது பலராமன் தனது கலப்பையால் யமுனையை மாட்டி இழுத்தான். யமுனை பயந்துபோய் கைகுவித்துச் சொன்னாள்.*

### यमुनोवाच

नमस्ते बलभद्राय कृष्णसोदर ते नमः ।
जानामि तव माहात्म्यमपराधं क्षमस्व मे ॥२९॥

भवान् सङ्कर्षणो देवस्त्वदंशो रुद्र उच्यते ।

महाप्रलयकाले त्वं शेषरूपेण शिष्यसे ॥३०॥

अहं श्रीकृष्णदास्यस्मि कृष्णध्यानपरायणा ।
कृष्णं विनान्यं पुरुषं न स्पृशामि पदापि हि ॥३१॥

तस्मै विमुञ्च मां राम विहर त्वं प्रियैर्जनैः ।
पूर्वजोसि च मे भर्तुः प्रणमामि पुनः पुनः ॥३२॥

**யமுனை**

*29-32. கிருஷ்ணஸஹோதர! பலராம! உமக்கு வந்தனம். உமது மஹிமையை நான் அறிவேன். அபராதத்தை மன்னிக்க வேண்டும். தாங்கள் ஸங்கர்ஷணமூர்த்தியல்லவா! தாங்களே ஆதிசேஷன். ருத்திரனும் தங்களுடைய அம்சமே. நான் கிருஷ்ணனையே தியானம் செய்யும் கிருஷ்ணதாஸி அல்லவா. கிருஷ்ணனைத்தவிர வேறுபுருஷனைப் பாதத்தாலும் தொடமாட்டேன். நீர் உமது கோபிகைகளுடன் விளையாடும். கண்ணனின் அண்ணனாகிய உமக்கு வந்தனம்.*

**श्रीसद्गुरुरुवाच**

पातिव्रत्यं महानद्या विलोक्य भगवान् बलः ।
आश्चर्येण समाविष्टो मधुरं वाक्यमब्रवीत् ॥३३॥

**ஸ்ரீஸத்குரு**

*33. பகவானாகிய பலராமன் யமுனாநதியின் கற்பைக் கண்டு ஆச்சர்யமடைந்து மதுரமாய்ப் பேசினான்.*

**बलभद्र उवाच**

एवमस्तु वरारोहे तुष्यामि चरितेन ते ।
यथेच्छसि तथा गच्छ गोविन्दपदपङ्कजम् ॥३४॥

कलिन्दजे क्षमस्वेममपराधं मया कृतम् ।
अजानता त्वच्चरितं शुद्धप्रेमपरिष्कृतम् ॥३५॥

**பலராமன்**

*34-35. யமுனே! உனது நன்னடத்தையால் ஸந்தோஷப்படுகிறேன். சுத்தமான ப்ரேமையுடன் கூடிய உனது சரிதத்தை அறியாமல் தவறு செய்துவிட்டேன். மன்னித்துவிடு. உனது விருப்பப்படி கோவிந்தனின் திருவடிக்கே செல்லுவாயாக.*

**श्रीसद्गुरुरुवाच**

एवमुक्ता तदा देवी यमुना सूर्यनन्दिनी ।
लेभे कृष्णपदाम्भोजं बलभद्रेण पूजिता ॥३६॥

अन्याः पुलिन्दनार्यश्च कृष्णदर्शनमोहिताः ।
राधादेव्याः प्रसादेन तं प्रापुः प्राणवल्लभम् ॥३७॥

एवं श्रीकृष्णभावज्ञा गोप्यः सन्ति सहस्रशः ।
यासां पदरजो नित्यं वाञ्छन्त्यजमुखाः सुराः ॥३८॥

कृष्णतत्त्वं कृष्णभावं कृष्णभक्तिरसं तथा ।
गोपिका एव जानन्ति मुनीनामपि दुर्लभम् ॥३९॥

गोपिकायास्तु कस्याश्चिद्भावमाश्रित्य भक्तिमान् ।
कृष्णसौख्यपरो भूत्वा बृन्दारण्ये वसेत् सदा ॥४०॥

**ஸ்ரீஸத்குரு**

*36-40. இவ்வாறு சொல்லி பலராமனால் பூஜிக்கப்பட்ட யமுனை க்ருஷ்ணபாதாரவிந்தத்தை அடைந்தாள். மற்றும் குறவர்குடியில் பிறந்த பல பெண்மணிகளும், ராதாதேவியின்*

பிரஸாதத்தினால் கண்ணனையே அடைந்தனர். இவ்வாறு அளவுகடந்த கோபிகைகள் இருக்கின்றனர். அவர்களின் பாத தூளியை பிரும்மாதிதேவர்களும் விரும்புகின்றனர். கிருஷ்ணனின் தத்துவம், கிருஷ்ணனின் மனோபாவம், கிருஷ்ணபக்தியின் ரஸம் இவைகள் முனிவர்களுக்கும் துர்லபமானது. இவைகளை கோபிகைகளே அறிவார்கள். எனவே கோபிகையின் பிரேமையைப் பெற்று, கிருஷ்ணனின் ஸௌக்கியமே லக்ஷியமாகக்கொண்ட பக்திமானாக ஆகி, பிருந்தாவனத்திலேயே வஸிக்க வேண்டும்.

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये क्षेत्रकाण्डे यमुनामाहात्म्यं नामैकादशोऽध्यायः॥११॥*

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமி ஸ்வாமிகள் அருளிச்செய்த ஸ்ரீப்ருந்தாவனமாஹாத்ம்யம் க்ஷேத்ரகாண்டத்தில் பதினோராவது அத்யாயம் முற்றும்.**

# अथ द्वादशोऽध्यायः

# பன்னிரெண்டாவது அத்யாயம்

### *भागवता ऊचुः*

माहात्म्यं यमुनादेव्याः सर्वपापविनाशनम् ।
अस्माकं श्रोतुकामानां शिष्याणां वद सद्गुरो ॥१॥

**பாகவதர்கள்**

1. ஸத்குருவே! எல்லா பாபங்களையும் நாசஞ்செய்யும் யமுனா தேவியின் மஹிமையைக் கேட்க விரும்பும் சிஷ்யர்களாகிய எங்களுக்குச் சொல்லவேண்டும்.

### *श्रीसद्गुरुरुवाच*

वैकुण्ठे विरजा या सा गोलोके यमुना स्मृता ।

वदामि चरितं तस्या महापातकनाशनम् ॥२॥

कलिन्दपर्वताज्जाता कालिन्दीति प्रकीर्तिता ।
तथैव यमुना नाम्ना देवी यमसहोदरी ॥३॥

कृष्णमेव पतिं प्राप्तुमिच्छन्ती पुरुषोत्तमम् ।
तपश्चकार कठिनं कलिन्दशिखरोपरि ॥४॥

दिने दिने कृशमभूद्घोरेण तपसा तदा ।
शरीरं यमुनादेव्याः श्रीकृष्णविरहेण च ॥५॥

ஸ்ரீஸத்குரு

*2-5. வைகுண்டத்திலுள்ள விரஜாநதியே கோகுலத்தில் யமுனை என்று சொல்லப்படுகிறாள். மஹாபாதகங்களை நீக்கும் அந்த சரிதத்தைச் சொல்லுவேன். களிந்தபர்வதத்தில் பிறந்ததால் காளிந்தி என்றும் யமனின் ஸஹோதரியாக இருப்பதால் யமுனை என்றும் அழைக்கப்படுகிறாள். கண்ணனையே கணவனாக அடைய விரும்பிக் கடினமான தவம் செய்தாள். கிருஷ்ணவிரஹத்தினாலும், கோரமான தவத்தினாலும் அவள் மேனி நாளுக்குநாள் இளைத்தது.*

घोरेण तपसा तस्याः प्रसन्नो भगवान् हरिः ।
अप्राप्यमपि देवानां कृपया दर्शनं ददौ ॥६॥

कोटिमन्मथसौन्दर्यं कोमलाधरपल्लवम् ।
केकिबर्हकिरीटञ्च कमलायतलोचनम् ॥७॥

पीताम्बरपरीधानं प्रसन्नकमलाननम् ।
वनमालाविभूषञ्च वंशीवादनतत्परम् ॥८॥

दिव्यचन्दनलिप्ताङ्गं सर्वाभरणभूषितम् ।
कुटिलालकसंयुक्तं कृष्णं भुवनमोहनम् ॥९॥

विलोक्य यमुनादेवी लज्जिताऽऽसीदवाङ्मुखी ।
पदाङ्गुष्ठविनिर्भिन्नभूतला हर्षसंयुता ॥१०॥

आलिङ्गनं कर्तुकामो यमुनामात्मवल्लभाम् ।
गोपीजनप्रियो मन्दं तदन्तिकमुपागमत् ॥११॥

सहसा सूर्यतनया प्रणम्य मधुसूदनम् ।
बद्धाञ्जलिपुटा देवो मधुरं वाक्यमब्रवीत् ॥१२॥

*6.12* அவளுடைய தவத்தினால் பகவான் பிரஸன்னமாகி தரிசனம் தந்தான். கோடிமன்மதர்களுக்கு நிகரான அழகுடைய வனும், கொழுந்துபோன்ற மிருதுவான உதடுடையவனும், கமலம்போன்ற கண்களுடையவனும், மயிலிறகணிந்தவனும், பீதாம்பரமணிந்தவனும், வனமாலியும், குழலூதுபவனும், சந்தனம் பூசிக்கொண்டிருப்பவனும், எல்லா ஆபரணங்களும் அணிந்தவனும், சுருண்ட கேசங்களுடையவனுமாகிய ஜகன்மோஹனகிருஷ்ணனைக் கண்டு யமுனாதேவி வெட்கத்தினால் தலைகுனிந்து மனமகிழ்ச்சியுடன் நின்று கொண்டிருந்தாள். அப்பொழுது அவளை ஆலிங்கனம் செய்துகொள்ள விரும்பிக் கண்ணன் கிட்டே அணுகினான். கண்ணனைக் கைகுவித்து வணங்கி யமுனை சொல்லுகிறாள்.

### यमुनोवाच

नमस्तेस्तु जगन्नाथ नमस्ते पुरुषोत्तम
त्वत्पादभक्तिर्भवतु मम. जन्मनि जन्मनि ॥१३॥

अहं तव पदाम्भोजसंस्पर्शाय कृपानिधे ।

तपश्चकार कठिनं मुनीनामपि दुःसहम् ॥१४॥

अहं निःस्वार्थचरिता नाहं कामपरायणा ।
तृप्तास्मि कृपया कृष्ण दर्शनादपि ते प्रभो ॥१५॥

तपोबलेन गोविन्द भवामि च महानदी ।
तत्र गोपीजनैर्नित्यं वारिक्रीडां कुरु प्रभो ॥१६॥

याऽहं तु तव सौख्याय भविष्यामि महानदी ।
इदमेव परं सौख्यं मम गोपीजनप्रिय ॥१७॥

तव लीलोपकरणं किमपि प्राप्य जन्म च ।
अतःपरञ्च भोक्तव्यं किमन्यदवशिष्यते ॥१८॥

**யமுனை**

*13:18.ஜகன்னாத! புருஷோத்தம! உமக்கு வந்தனம். உம்முடைய பாதாரவிந்தத்தில் பக்தியே வேண்டும். கருணைக்கடலே! உமது திருவடிக்கு ஆசைப்பட்டுத்தான் தவம் செய்தேன். நான் சுய நலத்தைக் கோரவில்லை. ப்ரபோ! கிருஷ்ணா! உமது கருணையாலும் தரிசனத்தாலும் திருப்தியடைகிறேன். கோவிந்த! எனது தவ வலிமையால் ஒரு நதியாகப்பெருகி ஓடுவேன். நீர் அதில் கோபிகைகளுடன் ஜலக்ரீடை செய்ய வேண்டும். உமது ஸௌக்யமே எனது ஸௌக்யம். உமது லீலைக்கு எதோவொரு ஸாதனமாக ஆகவேண்டும். இதைத்தவிர வேறு என்னதான் வேண்டும்!*

**श्रीसद्गुरुरुवाच**

इत्युक्त्वा सूर्यपुत्री सा गोविन्दस्यैव पश्यतः ।
क्षणादन्तर्दधे देवी योगशक्त्या तथात्मनः ॥१९॥

कलिन्दशिखरात्सद्यो नदीरूपेण सूर्यजा ।
स्रवन्ती पुण्यसलिला बृन्दावनमुपागमत् ॥२०॥

बृन्दादेव्याः सखीभूत्वा कृष्णसौख्यपरायणा ।
यमुना रमते नित्यं गोपीमण्डलसेविता ॥२१॥

सहस्रपत्रनयना चलत्कल्लोलमेखला ।
प्रवालमुक्ताभरणा कर्णानन्दप्रदस्वना ॥२२॥

आवर्तनाभिर्ललिता सरोजमुकुलस्तनी ।
गोपीजनकुचद्वन्द्वकुङ्कुमाङ्कविलेपना ॥२३॥

कलहंससखीबृन्दा यादोगणसमाश्रिता ।
तटद्वयावरोधा च स्नेहभावसमन्विता ॥२४॥

क्वचिल्लङ्घितसोपाना कृष्णसङ्गमतत्परा ।
एवं प्रभाकरसुता चरत्यच्युतकानने ॥२५॥

ஸ்ரீஸத்குரு

19-25. இவ்வாறு சொல்லி யமுனை மறுக்ணம் மறைந்தாள். தெளிந்த தண்ணீருடைய ஒரு நதியாக மாறி பிருந்தாவனத்தை அடைந்தாள். பிருந்தாதேவியின் தோழியாகஆகிக் கண்ணனின் ஸுகமே லக்ஷியமாகக்கொண்டு, கோபிகைகளால் ஸேவிக்கப் படுகிறவளாய் விளையாடுகிறாள். தாமரையே கண்களாகவும், அலைகளே மேலாக்காகவும், முத்தும் பவழமும் ஆபரணமாக வும், அலைஓசையே பேச்சாகவும், நீர்க்குமிழியே நாபியாகவும், தாமரைமொக்குகளே ஸ்தனங்களாகவும், கோபிகைகளின் குங்குமமே அவள் தரித்த அனுலேபனமாகவும், அன்ன பக்ஷிகளும் மற்ற ஜலஜந்துக்களுமே தோழிகளாகவும், இரண்டு

கரைகளுமே அந்தப்புரமாகவும் விளங்கக் கண்ணனை அடையத் துடிக்கும் பிரேமப் பிரவாஹத்தினால் தனது கரைமீறிப் புரண்டு ஓடுகின்றவளாய் யமுனை பிருந்தாவனத்தில் விளையாடுகிறாள்.

तस्यामेव महानद्यां कालिन्द्यां नन्दनन्दनः ।
करोति सलिलक्रीडां गोपिकाभिर्दिने दिने ॥२६॥

कदाचिन्मीनरूपश्च कदाचित्कूर्मरूपधृत् ।
एवं नानास्वरूपेण तया क्रीडति माधवः ॥२७॥

यमुनासलिलात्कृष्णो नैवोत्थाय प्रगच्छति ।
करोति सततं लीलां तत्प्रेमविवशो हरिः ॥२८॥

नदीरूपा च कालिन्दी तदालिङ्गनमोहिता ।
मदालसगतिस्तत्र रमते बृन्दया सह ॥२९॥

चरितं यमुनादेव्या यः पठेच्छ्रुणुयादपि ।
सर्वपापविशुद्धात्मा गोलोकं याति मानवः ॥३०॥

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये क्षेत्रकाण्डे यमुनामाहात्म्यं नाम द्वादशोऽध्यायः॥१२॥*

*26-30.* அந்த யமுனாநதியில் தினந்தோறும் நந்தகுமாரன் கோபிகைகளுடன் விளையாடுகிறான். ஒருகால் மீன்போலவும், ஒருகால் ஆமைபோலவும் இவ்வாறு பல வடிவங்கொண்டு கண்ணன் யமுனையில் விளையாடுகிறான். யமுனாஜலத்தி லிருந்து எழுந்துசெல்ல கண்ணன் விரும்புவதே இல்லை. கண்ணனின் ஆலிங்கனத்தைப் பெற்ற யமுனை மதம் பிடித்தவள்போல் ஓடி பிருந்தையுடன் விளையாடுகிறாள். இந்த

யமுனாமாஹாத்ம்யத்தைப் படிப்பவன் எல்லா பாபங்களும் நீங்கப்பெற்று கோலோகத்தை அடைவான்.

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமி ஸ்வாமிகள் அருளிச்செய்த ப்ருந்தாவன மாஹாத்ம்யம் க்ஷேத்ரகாண்டத்தில் பன்னிரெண்டாவது அத்யாயம் முற்றும்**

# अथ त्रयोदशोऽध्यायः

## பதிமூன்றாவது அத்யாயம்

### भागवता ऊचुः

गोवर्धनस्य माहात्म्यं कृपया वद सद्गुरो ।
सुलभो भगवान् कृष्णः कुर्वतां यत्प्रदक्षिणम् ॥१॥

**பாகவதர்கள்**

1. குருவே! எதை வலம் வருவதால் கிருஷ்ணபரமாத்மா சுலபமாகக் கிடைப்பானோ அந்த கோவர்த்தனமலையின் மஹிமையைக் கருணையுடன் சொல்லுவீராக.

### श्रीसद्गुरुरुवाच

पुरा गोलोकभुवने रासलीलान्तरे हरिम् ।
आश्लिष्य राधिका प्रेम्णा बभाषे मधुरं वचः ॥२॥

**ஸ்ரீஸத்குரு**

2. முன்பொருநாள் கோலோகத்தில் ராஸலீலையில் ராதாதேவி கிருஷ்ணனை அன்புடன் ஆலிங்கனம் செய்துகொண்டு மதுரமாய் சொன்னாள்.

### श्रीदेव्युवाच

प्राणवल्लभ गोविन्द चित्तचोर नमोस्तु ते ।
लीलार्थमावयोः कृष्ण रहस्यस्थलमुत्तमम् ॥३॥

नानापक्षिगणोद्घुष्टं नानापुष्पसुगन्धितम् ।
नानावृक्षसमाकीर्णं नानातीर्थसमावृतम् ॥४॥

कृपयाशु जगन्नाथ तत्र गत्वा वयं मुदा ।
स्वच्छन्दं बहुधा लीलाः करवाम दिने दिने ॥५॥

ஸ்ரீதேவி

*3-5. பிராணநாத! கோவிந்த! உள்ளங்கவர்கள்வனே! கண்ணா!* பலவிதமான செடிகொடிகளும் பலவிதமான புண்ணிய தீர்த்தங்களும் பலவிதமான பசுபக்ஷிகளும், பலவிதமான புஷ்பங்களும் நிறைந்த நமக்கு விளையாடுவதற்கேற்ற ஒரு ரஹஸியமான ஸ்தலத்தை ஏற்படுத்துவீராக. ஜகன்னாத! நாம் அதில் தினந்தோறும் ஆனந்தமாக விளையாடுவோம்.

श्रीसद्गुरुरुवाच

इत्युक्तो भगवान् कृष्णः प्रियया राधया हरिः ।
चकार हृदयेनैव गोवर्धनमहागिरिम् ॥६॥

कृष्णसङ्कल्पमात्रेण प्रादुरासीन्महागिरिः ।
नानाधातुविचित्राङ्गो मृगपक्षिसमाकुलः ॥७॥

तृणजालसुनीलश्च दिव्यपुष्पसुगन्धितः ।
स्रवत्प्रस्रवणोपेतो गुहालयसमन्वितः ॥८॥

नानातीर्थास्पदः शैलः स्मरणात्पापनाशनः ।
यमुत्थाप्य हरिः सर्वं पालयामास गोकुलम् ॥९॥

ஸ்ரீஸத்குரு

*6-9. இவ்வாறு தனது காதலியான ராதையால் சொல்லப்பட்ட*

கண்ணன் தனது ஹிருதயத்திலிருந்து கோவர்த்தனமலையை வெளிப்படுத்தினான். எந்த மலையைத் தூக்கிக் குடையாகப் பிடித்துக் கண்ணன் கோகுலத்தைக் காப்பாற்றினானோ, அந்த கோவர்த்தனமலை பலவிதமான தாதுப்பொடிகளால் சித்தரிக்கப்பட்டதாகவும், பசுபக்ஷிகள் நிறைந்ததாகவும், புல்வெளிகளால் பசுமையானதாகவும், திவ்யமான புஷ்பங்களால் சுகந்தமானதாகவும், பெருகி ஓடும் அருவிகளை உடையதாகவும் குகைகளை உடையதாகவும், பல புண்ணிய தீர்த்தங்களுக்கு இருப்பிடமானதாகவும், நினைத்த மாத்திரத்தில் பாபங்களை நீக்குவதாகவும், கிருஷ்ணனுடைய ஸங்கல்ப மாத்திரத்தினால் ஆவிர்பவித்தது.

गुहायां तस्य गोविन्दः सङ्केतस्थलमागतः ।
राधया रमते नित्यं सखीजनसमेतया ॥१०॥

तस्यैव शैलखण्डे तां विनिवेश्य प्रियां हरिः ।
अलङ्करोति सानन्दं नानागैरिकधातुभिः ॥११॥

सानौ तस्य गिरीन्द्रस्य चारयन् गोकुलं मुदा ।
करोति बालकैः साकं बहुधा बालकेलिकाम् ॥१२॥

10-12. அந்த மலைக்குகையில் கோவிந்தன், ராதையுடன் தோழிகளுடனும் குறிப்பிட்ட இடத்திற்கு வந்து தினமும் விளையாடுகிறான். அந்த மலைப்பாறையில் ராதையை அமர்த்திக் கண்ணன் பலவிதமான தாதுப்பொடிகளால் மகிழ்ச்சியுடன் அலங்காரம் செய்கிறான். அந்த மலையடிவாரத்தில் கண்ணன் தினமும் ஆயர்சிறுவர்களுடன் மாடு மேய்த்து விளையாடுகிறான்.

वर्षातपसमो भूत्वा हरिदास इव स्वयम् ।
तपः करोति शैलेन्द्रः कृष्णध्यानपरः सदा ॥१३॥

साधूनां हृदयाकाशे यथा वसति माधवः ।
तथा तस्य गुहायाञ्च नित्यं क्रीडति राधया ॥१४॥

पत्रं पुष्पं फलं तोयं यथाऽर्पयति वैष्णवः ।
तथाऽयं गिरिराजोपि नित्यं पूजयति प्रियम् ॥१५॥

अर्चनं हरिदासानां यथा कुर्वन्ति साधवः ।
गोवत्सेभ्यस्तथा शैलः प्रददाति तृणानि च ॥१६॥

ऊर्ध्वपुण्ड्राङ्किततो नित्यं यथा राजति वैष्णवः ।
विचित्राभिर्धातुभिश्च रक्ताङ्गो भाति भूधरः ॥१७॥

यथा पुनन्ति मनुजान् दर्शनादेव साधवः ।
तथा पुनाति भुवनं गोवर्धनगिरिः स्वयम् ॥१८॥

कृष्णध्यानपरो भक्तो यथास्ति पुलकाञ्चितः ।
तथा तृणाङ्कुरैः शैलः प्रहृष्टोऽयं प्रकाशते ॥१९॥

बाष्पं यथा विमुञ्चन्ति साधवो हरिचिन्तनात् ।
विमुञ्चन् सलिलं नित्यं तथा भाति महीधरः ॥२०॥

गङ्गादिपुण्यतीर्थानि यथा सन्ति सतां गणे ।
तथा लोकपवित्रोऽयं सर्वतीर्थमयो गिरिः ॥२१॥

*13-21. இந்த கோவர்த்தனமலை வெயிலையும் மழையையும் ஸமமாய் பாவித்து கிருஷ்ணத்ஃயானம் செய்கிற ஒரு ஹரிதாஸரைப்போல் காணப்படுகிறது. ஸாதுக்களின் ஹிருதயத்தில் மாதவன் வஸிப்பதுபோல் இந்த மலையின்*

குகையில் கண்ணன் ராதையுடன் விளையாடுகிறான். பத்ரம், புஷ்பம், பழம், தீர்த்தம் இவைகளால் ஒரு வைஷ்ணவன் பகவானைப் பூஜிப்பதுபோல் இந்த மலையும் தன்னிடத்தில் உண்டான பத்ரம் புஷ்பம் பழம் தீர்த்தம் இவைகளால் கண்ணனைப் பூஜிக்கிறது. ஸாதுக்கள் ஹரிதாஸர்களைப் பூஜிப்பதுபோல் இந்த மலை கன்றுகளுக்கும் புல்லைத்தந்து பூஜிக்கிறது. ஒரு வைஷ்ணவன் திருமண் அணிந்திருப்பதுபோல் இந்த மலையும் தாதுப்பொடிகளால் சிவந்திருக்கிறது. ஸாதுக்கள் தரிசனமாத்திரத்தினால் பாபங்களைப் போக்குவது போல் கோவர்த்தனமலையும் தர்சனமாத்திரத்தினால் பாபங்களைப் போக்குகிறது. ஒரு பக்தன் கிருஷ்ண தியானத்தினால் மேனி சிலிர்த்திருப்பதுபோல் இந்தமலை புல் மண்டியிருக்கிறது. ஸாதுக்கள் கிருஷ்ணசிந்தனத்தினால் ஆனந்தக்கண்ணீர் விடுவதுபோல் இந்த மலையும் அருவியைக் கொட்டுகிறது. ஸாதுக்கள்கூட்டத்தில் கங்கைமுதலிய புண்ணிய தீர்த்தங்கள் இருப்பதுபோல் இந்த மலையிலும் இருக்கின்றன.

न क्रोधो न च मात्सर्यं न लोभो वैष्णवे जने ।
त्यक्तवैरा मृगास्तत्र क्रीडन्ति प्रेमतत्पराः ॥२२॥

स्मरणाद्दर्शनाच्चैवमर्चनाच्च प्रदक्षिणात् ।
विनाशयति पापानि शैलेन्द्रो वैष्णवोत्तमः ॥२३॥

यः करोति प्रतिदिनं गिरिराजप्रदक्षिणम् ।
स नरो भाग्यवान्नूनं कृष्णभक्तिमवाप्नुयात् ॥२४॥

भक्तस्य कुर्वतो नित्यं गोवर्धनपरिक्रमम् ।
ददाति दर्शनं कृष्णः क्वचिन्मार्गान्तरे हरिः ॥२५॥

22-25. வைஷ்ணவர்களிடம் கோபத்திற்கோ, பொறாமைக்கோ, லோபித்தனத்திற்கோ இடமில்லை. அதுபோல் இந்த

மலையிலும் மிருகங்கள் குற்றமற்ற பிரேமையுடன் விளையாடுகின்றன. வைஷ்ணவோத்தமனான இந்த கோவர்த்தனமலை, நினைத்தாலும், பார்த்தாலும், பூஜித்தாலும், வலம் வந்தாலும் நமது பாபங்களைப் போக்குகிறது. தினந்தோறும் கிரிபிரதக்ஷிணம் செய்கிற பாக்கியவான் கிருஷ்ணபக்தியை அடைவான். தினந்தோறும் கோவர்த்தன மலையை வலம் வருபவன் என்றோ ஒருநாள் நடுவழியில் கிருஷ்ண தரிசனத்தைப்பெறுவான்.

गायन्ति कोकिलास्तत्र नृत्यन्त्यपि च बर्हिणः ।
धावन्ति हरिणाश्चैव गोवर्धनसमीपतः ॥२६॥

मन्दं वाति समीरश्च नानापुष्पसुगन्धितः ।
वर्धते दर्शनानन्दः प्रदक्षिणपदे पदे ॥२७॥

गोविन्दं कीर्तयन्नृत्यन् पश्यन् प्रकृतिसौष्ठवम् ।
भावयन् कृष्णलीलाञ्च भक्तः कुर्यात्प्रदक्षिणम् ॥२८॥

न पारमेष्ठ्ये न स्वर्गे न वैकुण्ठे स्पृहा भवेत् ।
गोवर्धनसमीपे तु साधूनां वासमिच्छताम् ॥२९॥

स्वयं नारायणः कृष्णस्त्यक्त्वा वैकुण्ठमुत्तमम् ।
अवाप किल शैलेन्द्रं किं पुनस्तस्य वैभवे ॥३०॥

26-30. இந்த மலையின் ஸமீபத்தில் குயில்கள் கூவுகின்றன. மயில்கள் ஆடுகின்றன. மான்கள் ஓடுகின்றன. நறுமணத்துடன் கூடிய மந்தமாருதம் வீசுகிறது. பிரதக்ஷிணத்தின் ஒவ்வொரு அடியிலும் பரமானந்தம் வளருகிறது. கோவிந்தனைப் பாடிக்கொண்டும் ஆடிக்கொண்டும் இயற்கையழகைப் பார்த்துக்கொண்டும் கிருஷ்ணலீலையைச் சிந்தித்துக் கொண்டும் பிரதக்ஷிணம் செய்யவேண்டும். இந்த மலையின்

ஸமீபத்தில் வஸிப்பவர்களுக்கு பிரும்மலோகத்திலோ, தேவலோகத்திலோ, வைகுண்டத்திலோகூட ஆசை உண்டாகாது. வைகுண்டத்தைவிட்டு நாராயணனே இந்த மலைக்கு வந்திருக்கும்பொழுது இதன் மஹிமையைக் கேட்கவும் வேண்டுமா!

वसन्ति तत्र भक्ताश्च कृष्णध्यानपरायणाः ।
जितेन्द्रिया जितक्रोधा जितसंसारवासनाः ॥३१॥

सेवन्ते च सुराः सर्वे गोवर्धनगिरिं सदा ।
पुण्यतीर्थानि सर्वाणि तत्रैव निवसन्ति च ॥३२॥

सिद्धविद्याधरगणा गन्धर्वाः किन्नरास्तथा ।
गायन्ति तत्र गोविन्दमप्सरोभिः समन्विताः ॥३३॥

31-33. இந்த மலையில் காமகோபங்களை அடக்கி கிருஷ்ண தியானம் செய்துகொண்டு பல ஸாதுக்கள் வஸிக்கின்றனர். இந்த மலையை எல்லா தேவர்களும் வணங்குகின்றனர். இந்த மலையில் எல்லா புண்ணிய தீர்த்தங்களும் இருக்கின்றன. இந்த மலையில் ஸித்தர்கள், வித்யாதரர்கள், கந்தர்வர்கள், கின்னரர்கள், அப்ஸரஸுகள் யாவரும்கூடி கோவிந்தனைப் பாடுகின்றனர்.

तस्माद्वैराग्यसंपूर्णो गोविन्दध्यानतत्परः ।
गिरिराजगुहायां तु निवसेद्भक्तिमान्नरः ॥३४॥

न स्पृशन्ति पदा भक्ताः केचित् कृष्णपरायणाः ।
दूरतो दर्शनं कृत्वा तुष्यन्ति च रमन्ति च ॥३५॥

पठन् भागवतं नित्यं पर्णमूलफलाशनः ।

गोवर्धने वसेद्यो वै स हि भागवतोत्तमः ॥३६॥

*34-36.* ஆகையால் பக்திமானாகிய மனிதன் வைராக்கியம் நிரம்பியவனாய், கிருஷ்ணத்தியானம் செய்துகொண்டு கோவர்த்தனமலையின் குகையில் வஸிக்கவேண்டும். சில கிருஷ்ணபக்தர்கள் இந்த மலையைக் காலால் மிதிக்க அஞ்சி வெகுதூரத்திலிருந்தே தரிசனம் செய்து மகிழ்ச்சி அடைகின்றனர். தினமும் பாகவதத்தைப் படித்துக்கொண்டு, சரகுகளையும் காய்கிழங்குகளையும் ஆகாரமாகக்கொண்டு, எவன் கோவர்த்தனமலையில் வஸிப்பானோ, அவனே பாகவதோத்தமன்.

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये क्षेत्रकाण्डे गोवर्धनमाहात्म्यं नाम त्रयोदशोऽध्यायः॥१३॥*

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமி ஸ்வாமிகள் அருளிச்செய்த ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்ம்யம் க்ஷேத்திரகாண்டத்தில் பதிமூன்றாவது அத்தியாயம் முற்றும்.**

# अथ चतुर्दशोऽध्यायः

## பதினான்காவது அத்தியாயம்

### भागवता ऊचुः

अन्येषामपि तीर्थानां स्थितानां यमुनावने ।
माहात्म्यं परमं पुण्यं कृपया वद सद्गुरो ॥१॥

**பாகவதர்கள்**

*1.* குருவே! பிருந்தாவனத்திலுள்ள மற்ற புண்ணிய தீர்த்தங்களின் மஹிமையையும் கருணையுடன் சொல்லவேண்டும்.

### श्रीसद्गुरुरुवाच

समानिनाय गोविन्दो गङ्गां बृन्दावनाय च ।
मनसैव महाबुद्धिः सत्यसङ्कल्प ईश्वरः ॥२॥

ततः सा मानसीगङ्गा गोपीजननिषेविता ।
अद्यापि वर्तते देवी गोवर्धनसमीपतः ॥३॥

ஸ்ரீஸத்குரு

2-3. நினைத்ததை நடத்தக்கூடிய ஈச்வரனான கோவிந்தன் கங்காதேவியை பிருந்தாவனத்திற்குத் தனது ஸங்கல்ப மாத்திரத்தினால் அழைத்து விட்டான். கோபிகைகளால் ஸேவிக்கப்படும் இந்த மானஸகங்கை கோவர்த்தனத்தின் ஸமீபத்தில் இருக்கிறது.

गोविन्देन कृतः कुण्डः प्रसन्नसलिलाशयः ।
यस्मिंल्लीलान्तरे कृष्णः पयः पिबति राधया ॥४॥

4. கோவிந்தகுண்டம் என்கிற புண்ணியதீர்த்தம் மிகவும் தெளிவானது. பல லீலைகள் செய்துவிட்டுக் கண்ணனும் ராதையும் இதில் தாஹசாந்தி செய்து கொள்ளுவார்கள்.

दर्शयामास राधायै चन्द्रं दर्शदिने हरिः ।
तदेव भुवि विख्यातं पुण्यं चन्द्रसरोवरम् ॥५॥

5. சந்த்ரஸரோவரம் என்கிற மற்றொரு புண்ணிய தீர்த்தம் உலகில் புகழ் பெற்றது. இதில் அமாவாஸையன்று ராதைக்குக் கண்ணன் சந்திரனைக் காண்பித்தான்.

राधाकृष्णौ च ललिता चक्रुर्लीलान्तरे पृथक् ।
कुण्डान् सलिलपूर्णांश्च हंसकारण्डवावृतान् ॥६॥

6. ராதாகுண்டம் சியாமகுண்டம் லலிதாகுண்டம் என்கிற மூன்று புண்ணிய தீர்த்தங்களை இந்த மூவரும் தனித்தனியே ஏற்படுத்தினார்கள். இவை ஹம்ஸம் நீர்க்கோழி இவைகளால் சூழப்பட்டுத் தண்ணீர் நிறைந்ததாகக் காணப்படுகின்றன.

प्रियाया दाहशान्त्यर्थं सद्य एव वनान्तरे ।

गोपालेन कृतः कुण्डः संसारश्रमनाशनः ॥७॥

7. கோபாலகுண்டம் என்கிற மற்றொரு தீர்த்தம் உண்டு. இந்த தீர்த்தத்தை பிருந்தாவனத்தில் ஸஞ்சாரம் செய்து களைத்துப் போன ராதையின் தாஹசாந்திக்காக கோபாலன் ஏற்படுத்தினான். இது ஸம்ஸார சிரமத்தை நீக்கவல்லது.

वृषरूपमरिष्टञ्च निहत्य श्रान्तमच्युतम् ।
विलोक्य कृपया राधा कुण्डञ्चक्रे जलाकरम् ॥८॥

8. காளைமாடு வடிவத்தில் வந்த அரிஷ்டாசுரனை வதம் செய்து கண்ணன் களைத்துப் போயிருந்தான். அவனது களைப்பை நீக்குவதற்காக ராதையால் ஏற்படுத்தப்பட்ட தீர்த்தம் அரிஷ்டகுண்டம் ஆகும்.

गोपीनां दधिकुंभांश्च नवनीतघटांस्तथा ।
आदाय स्फोटयामास यस्य तीरे जनार्दनः ॥९॥

युवराजो गोकुलस्य करदानाख्यलीलया ।
यत्र क्रीडति गोपीभिस्तं कुण्डमभिपूजयेत् ॥१०॥

9-10. தானபரிவர்த்தனகுண்டம் என்கிற தீர்த்தத்தின் கரையில் கண்ணன் வழியில் செல்லும் கோபிகைகளை தடுத்து நிறுத்தி, வெண்ணெய்க் குடங்களைப் பிடுங்கிக்கொண்டு தனது காட்டில் சென்றதால் சுங்கான் வசூலித்துக்கொள்ளுவதாக விளையாடு வான். இந்த குண்டத்தையும் பூஜிக்கவேண்டும்.

कृष्णेन लिखितं चित्रमद्यापि ननु दृश्यते ।
सैव चित्रशिला प्रोक्ता गोवर्धनमहागिरौ ॥११॥

11. கோவர்த்தனமலையில் சித்ரசிலா என்கிற ஒரு இடம் இருக்கிறது. இதில் கண்ணனால் எழுதப்பட்ட சித்திரம் இன்றும் காணக்கிடைக்கிறது.

यां शिलां स्वकरेणैव कृष्णो वादयते मुदा ।
वादिनीति शिला ख्याता गोवर्धनधराधरे ॥१२॥

12. கோவர்த்தனமலையில் வாதினி என்கிற சிலை இருக்கிறது. கண்ணன் இதை தினமும் தனது கையால் வாசித்துக்கொண்டு பாடுவான்.

तत्रैव कन्दुकं क्षेत्रं सर्वपापविनाशनम् ।
यत्र क्रीडति गोविन्दो बालैः कन्दुकलीलया ॥१३॥

13. அங்கேயே கந்துகம் என்கிற க்ஷேத்திரம் உள்ளது. இதில் கோவிந்தன் சிறுவர்களுடன் பந்து விளையாடுவான். இது எல்லா பாபங்களையும் நீக்கவல்லது.

हृत्वा गोपालबालानामुष्णीषं विजहार सः ।
औष्णीषं नाम तत्क्षेत्रं दर्शनानन्दवर्धनम् ॥१४॥

14. உஷ்ணீஷம் என்கிற மற்றொரு இடம் பார்க்கத்தக்கது. இங்கு கோபாலன் சிறுவர்களின் குல்லாயைத் திருடி ஒளித்து விளையாடுவது வழக்கம்.

द्रोणं नाम महाक्षेत्रं पश्येद्गोवर्धने गिरौ ।
यत्र कृष्णेन गोपीभिः कलिता दानकेलिका ॥१५॥

15. கோவர்த்தனமலையில் த்ரோணம் என்கிற இடத்தைப் பார்க்கவேண்டும். இங்கும் கண்ணன் கோபிகைகளை வழிமறித்துக்கொண்டு வரிவசூலிப்பது வழக்கம்.

अलङ्कारः कृतो यत्र राधाया नन्दसूनुना ।
शृङ्गारमण्डलं नाम क्षेत्रं तत्प्रेमवर्धनम् ॥१६॥

16. சிருங்காரமண்டலம் என்கிற இடம் ப்ரேமையை வளர்க்க கூடியது. இங்குதான் கண்ணன் ராதைக்கு அலங்காரம் செய்வான்.

ऐरावतस्य सुरभेः कृष्णस्यापि महागिरौ ।
पादचिह्नानि यः पश्येत् स याति परमां गतिम् ॥१७॥

17. கோவர்த்தனமலையில் ஐராவதம், காமதேனு, கிருஷ்ணன் இவர்களின் பாதஅடையாளங்களைப் பார்ப்பவன் பரமகதியை அடைவான்.

विख्यातं बाहुलवनं यत्र रासप्रियो हरिः ।
चकार विविधा लीलाः स्वच्छन्दं गोपिकागणैः ॥१८॥

गोपिकानां मुखं दृष्ट्वा श्रान्तं श्रमजलेन च ।
मेघमल्लाररागेण तत्क्षणं मेघमाह्वयत् ॥१९॥

आतपक्लिन्नवदना वल्लव्यो मेघमेदुरे ।
लीलां चक्रुश्च कृष्णेन बाहुले काननान्तरे ॥२०॥

18-20. பாஹுளவனம் என்கிற இடத்தில் கண்ணன் கோபிகைகளுடன் பல லீலைகளைச் செய்தான். வெயிலில் கோபிகைகளின் முகம் வியர்த்து விட்டதைக் கண்டு மேகமல்லாரம் என்கிற ராகத்தைக் குழலில் ஊதினான். அப்பொழுது மேகம் சூழ்ந்து குளிர்ச்சி உண்டாயிற்று. கண்ணனுடன் கோபிகைகள் விளையாடினார்கள்.

वेत्रगङ्गेति विख्याता दर्शनात्पापनाशिनी ।
गोपीनां दाहशान्त्यर्थं वेत्रेण हरिणा कृता ॥२१॥

21. அவ்விடத்தில் வேத்ரகங்கை என்கிற தீர்த்தத்தைக் கண்ணன் தனது கைப்பிரம்பினால் கோபிகைகளின் தாஹசாந்திக்காக ஏற்படுத்தினான். அதை தரிசனம் செய்தால் பாபங்கள் நீங்கும்.

कुमुद्वनं महापुण्यं रम्यपुष्पसुगन्धितम् ।
चकार यत्र कृष्णस्य राधा शृङ्गारमुत्तमम् ॥२२॥

22. குமுதவனம் என்பது நறுமணம் வீசும் புஷ்பங்களுடன்கூடிய மஹாபுண்ணியமான இடம். இங்கு ராதை கிருஷ்ணனுக்கு அலங்காரம் செய்தாள்.

तथा मधुवनं पुण्यं मकरन्दसुगन्धितम् ।
तत्र पीतो मुकुन्देन गोपीभिर्वारुणीरसः ॥२३॥

23. மதுவனம் என்பது தேன் மணக்கும் புண்ணியமான இடம். இங்கு கண்ணன் கோபிகைகளுடன் தேன் குடித்தான்.

रेमे कुन्दवने कृष्णः प्रेयसीगणसेवितः ।
भुक्त्वा यथेष्टं स्वादूनि फलानि विविधानि च॥२४॥

24. குந்தவனம் என்ற இடத்தில் கண்ணன் தனது காதலிகளுடன் பலவிதமான இனிய பழங்களைச் சாப்பிட்டு விளையாடினான்.

पुण्ये कामवने कृष्णो गोपीमण्डलमध्यगः ।
वादयन् मधुरं वेणुं रासलीलां चकार च ॥२५॥

25. காமவனம் என்கிற புண்ணியமான இடத்தில் கண்ணன் கோபிகைகளின் நடுவில் குழலூதிக்கொண்டு ராஸலீலை செய்தான்.

श्रीभाण्डीरं नाम वनं यत्र श्रीनन्दनन्दनः ।
चक्रे पत्रावलिं प्रेम्णा राधिकास्तनमण्डले ॥२६॥

26. பாண்டீரவனம் என்கிற இடத்தில் நந்தகுமாரன் ராதைக்கு நலங்கிட்டு அழகுபடுத்தினான்.

लोहजङ्घं नाम वनं ललितं नन्दसूनुना ।
रासलीलान्तरे तत्र शङ्खचूडवधः कृतः ॥२७॥

27. லோஹஜங்கம் என்கிற அழகான வனத்தில் நந்தகுமாரன் ராஸலீலைக்கு விரோதமாய்வந்த சங்கசூடனை வதம் செய்தான்.

बहुयोजनविस्तीर्णे बृन्दायास्तु महावने ।
बहूनि बहुरम्याणि सन्त्येवोपवनानि च ॥२८॥

तेषु नित्यमरण्येषु भगवान्नन्दनन्दनः ।
मधुरं वादयन् वंशं चरति प्रेयसीगणैः ॥२९॥

*28-29. இவ்வாறு பலயோஜனை விஸ்தாரமுடைய பிருந்தா வனத்தில் மிகவும் ரம்யமான பல உபவனங்கள் இருக்கின்றன. அந்த வனங்களில் கண்ணன் குழலூதிக் கொண்டே தனது காதலிகளுடன் ஸஞ்சரிக்கிறான்.*

तथा वंशीवटो नाम न्यग्रोधः पापनाशनः ।
कृष्णो यत्र समासीनो वादयामास वंशिकाम् ॥३०॥

*30. வம்சீவடம் என்கிற ஒரு பெரிய ஆலமரம் இருக்கிறது. இதில் ஏறி அமர்ந்து கண்ணன் குழலூதுவான். இது பாபங்களை நீக்க வல்லது.*

गोकुलं यत्र नन्दस्य भवनञ्च प्रकाशते ।
नानालीलास्पदं दिव्यं ब्रह्मणो बालरूपिणः ॥३१॥

*31. கோகுலத்தில் நந்தகோபனின் வீடு இருக்கிறது. இதில் குழந்தை வடிவத்தில் பரமாத்மா பல லீலைகளைச் செய்தானல்லவா!*

वृषभानुपुरं नाम कृष्णप्रेमप्रदायकम् ।
यत्राविरासीत् सा देवी गोविन्दमहिषी प्रिया ॥३२॥

*32. விருஷபானுபுரம் என்கிற ஊர் கிருஷ்ணபக்தியைத் தரக்கூடியது. இங்குதான் கோவிந்தனின் பட்டமஹிஷியான ராதாதேவி அவதரித்தாள்.*

केशिघट्टं महापुण्यं कालीयह्रदमुत्तमम् ।
पश्येत्प्रतिदिनं भक्तस्तथा पुष्पसरोवरम् ॥३३॥

एवं बृन्दावनं नित्यं पर्यटन् भक्तिसंयुतः ।
लीलास्थलानि कृष्णस्य पश्येद्भागवतोत्तमः ॥३४॥

इदमेव परं पुण्यमिदमेव परं सुखम् ।
गोविन्दस्मरणानन्दप्रदं बृन्दावनाटनम् ॥३५॥

*33-35. அவ்வாறே கேசிகட்டம் காளீயன்மடு புஷ்பஸரோவரம் முதலிய இடங்களையும் தரிசனம் செய்யவேண்டும். இவ்வாறு பாகவதோத்தமன் ப்ருந்தாவனத்தில் ஸஞ்சாரம்செய்து கிருஷ்ணன் லீலை செய்த பல ஸ்தலங்களை தரிசனம் செய்ய வேண்டும். இதுவே சிறந்த புண்ணியம். இதுவே பேரின்பம். பிருந்தாவனயாத்திரையே கோவிந்தனை நினைப்பதாலுண் டான ஆனந்தத்தைத் தரக்கூடியது.*

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये क्षेत्रकाण्डे तीर्थमाहात्म्यं नाम चतुर्दशोऽध्यायः॥१४॥*

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமி ஸ்வாமிகள் அருளிச்செய்த ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்ம்யம் க்ஷேத்ரகாண்டத்தில் பதினான்காம் அத்யாயம் முற்றும்.**

# अथ पञ्चदशोऽध्यायः

## பதினைந்தாவது அத்யாயம்

*भागवता ऊचुः*

श्रीमूर्तीनाञ्च माहात्म्यं कृष्णस्य परमात्मनः ।
वद नो देशिकश्रेष्ठ स्थितानां यमुनावने ॥१॥

### பாகவதர்கள்

1. குருநாதா! பிருந்தாவனத்திலுள்ள க்ருஷ்ணபரமாத்மாவின் பல ஸ்ரீமூர்த்திகளின் மஹிமையைச் சொல்லவேண்டும்.

### श्रीसद्गुरुरुवाच

अनन्तकोटिब्रह्माण्डव्यापकस्य परात्मनः ।
ब्रह्मणो निर्गुणस्यैवं निराकारस्य साक्षिणः ॥२॥

परं रूपं तु विज्ञेयं शङ्खचक्रगदाधरम् ।
दिव्यमप्राकृतं नित्यं यदस्ति परमे पदे ॥३॥

निराकारञ्च साकारं निर्गुणं सगुणञ्च तत् ।
अक्षरं शाश्वतं नित्यं पूर्णं ब्रह्म सनातनम् ॥४॥

अस्ति लोकान्तरेष्वीशः क्षीराब्धिप्रमुखेष्वपि ।
व्यूहमूर्तिरियं प्रोक्ता विष्णोस्तु परमात्मनः ॥५॥

जगतां रक्षणायैव गृहीता विष्णुना हि सा ।
यां समाश्रित्य भक्त्यैव प्राप्नुवन्ति परं सुखम् ॥६॥

संरक्षणाय साधूनां दुष्टानां निधनाय च ।
धर्मसंरक्षणायैवमवतीर्णो हरिः स्वयम् ॥७॥

विष्णोस्तु वैभवं रूपं सर्वलोकसुखावहम् ।
वाल्मीकिव्यासमुख्यैस्तु मुनिभिर्वर्णितं मुदा ॥८॥

### ஸ்ரீஸத்குரு

2-8. எங்கும் நிறைந்த பரமாத்மா உருவமற்றவர், குணமற்றவர்,

எல்லாவற்றிற்கும் ஸாக்ஷியானவர். அபப்டியிருந்தபோதிலும் பக்தர்களின் உபாஸனைக்காக, குணமுடையவராகவும் ரூபமுடையவராகவும் காணப்படுகிறார். பரமபதத்தில் சங்கு சக்ரம் கதை இவைகளைத் தாங்கிய நான்கு கைகளை உடைய ரூபம் இருக்கிறது. அது பரம் எனப்படும். க்ஷீராப்திமுதலிய வெவ்வேறு லோகங்களில் இருக்கும் பகவானுடைய ரூபம் வ்யூஹம் எனப்படும். ஸாதுக்களை ரக்ஷிப்பதற்காகவும் துஷ்டர்களை அழிப்பதற்காகவும், தர்மத்தை ஸ்தாபிப்பதற்காகவும் பகவான் உலகில் அவதாரம் செய்கிறான். இந்த அவதாரங்களுக்கு விபவரூபம் என்று பெயர். வால்மீகி வியாஸர்முதலிய முனிவர்கள் இந்த ரூபங்களில்தான் ஈடுபட்டனர்.

परमं सुलभं नृणामर्चारूपं परात्मनः ।
पारतन्त्र्यञ्च भक्तेषु येनैव प्रकटीकृतम् ॥९॥

स्वेच्छागृहीतरूपस्य कृष्णस्य परमात्मनः ।
दिव्यमप्राकृतं नित्यमेतद्रूपचतुष्टयम् ॥१०॥

यथैव विभवे कृष्णो मायामानुषरूपधृक् ।
पामरैर्नरबुद्ध्यैवमज्ञानादवमन्यते ॥११॥

तथैव भगवान् विष्णुरर्चारूपमुपेयिवान् ।
पामरैः शिल्पबुद्ध्यैवमज्ञानादवलोक्यते ॥१२॥

ज्ञानिनां भगवान् विष्णुर्मूर्खाणां नर एव हि ।
एवं कपटवेषेण विभवे चरति प्रभुः ॥१३॥

तथैवार्चावतारश्च लोहमूर्तिर्दुरात्मनाम् ।

दिव्यज्ञानोपपन्नानां नानालीलालयो हरिः ॥१४॥

9-15. கோவில்களில் எழுந்தருளியிருக்கும் பரமாத்மாவின் ரூபம் அர்ச்சாவதாரம் எனப்படும். இது மிகவும் சுலபமானது. பக்தர்களுக்கு கட்டுப்பட்டது. பகவானின் இந்த நான்குவிதமான ரூபங்களும் சின்மயமானதேயன்றி, மாயாமயமானது அல்ல. ராமக்ருஷ்ண அவதாரங்களைப் பாமரஜனங்கள் மனிதன் என்றே நினைத்திருந்தனர். அதுபோல் அர்ச்சாவதாரங்களையும் மூடஜனங்கள் சில்பம் என்று நினைக்கின்றனர். பகவான் முன்அவதாரங்களில், மூடர்கள் மனிதர்கள் என்று நினைக்கும் படியும் ஞானிகளே விஷ்ணு என்று புரிந்துகொள்ளும்படியும் கபடமாய் நடந்துகொண்டதுபோல், அர்ச்சாவதாரத்திலும் பாபிகளுக்கு சிலாமூர்த்தியாகவும், ஞானிகளுக்கு ப்ரத்யக்ஷ தெய்வமாயும் காணப்படுகிறான். அக்ஞானஇருளில் மூழ்கியவர்களுக்குத் தனது மஹிமையைக் காட்டாதபடி பகவான் உலகில் ஸஞ்சரிக்கிறார்.

मोहान्धकारमग्नानामदृश्यगुणवैभवः ।
आत्ममायानुसारेण भुवने चरति प्रभुः ॥१५॥

रङ्गनाथजगन्नाथपाण्डुरङ्गादिमूर्तयः ।
सेव्यन्ते सज्जनश्रेष्ठैः केशवस्य महात्मनः ॥१६॥

गृहे गृहे वैष्णवानां नानामूर्तिधरो हरिः ।
त्रिजगद्व्यापको भूत्वा तिष्ठति प्रेमतत्परः ॥१७॥

यो यो यां यां हरेर्मूर्तिं श्रद्धयार्चितुमिच्छति ।
तां तां मूर्तिं जगद्व्यापी कृपया व्याप्य तिष्ठति।॥१८॥

अर्चावतारे कलिता सुलभा भक्तिरेव हि ।

अज्ञानामपि बालानां ज्ञानिनाञ्च महात्मनाम् ॥१९॥

यथा निन्दन्ति विभवं शिशुपालादयः खलाः ।
तथैव बहवो मूर्खा विग्रहाराधनं कलौ ॥२०॥

अर्चावतारे सुलभः परमात्मा सुदुर्लभः ।
एतत्तत्वं न जानन्ति नराः पण्डितमानिनः ॥२१॥

*16-21. ரங்கனாதன், ஜகன்னாதன், பாண்டுரங்கன்முதலிய மூர்த்திகள் ஸாதுக்களால் ஸேவிக்கப்படுகின்றன. எங்கும் நிறைந்த ஹரி வைஷ்ணவர்களுடைய ஒவ்வொரு வீடுகளிலும் பல மூர்த்திகளை தரித்து நிற்கிறான். பக்தர்கள் எந்தெந்த மூர்த்தியை திடநம்பிக்கையுடன் பூஜிக்கின்றனரோ, அந்தந்த மூர்த்திகளில் பகவான் அந்தர்யாமியாக வியாபித்து நிற்கிறான். அறியாச் சிறுவர்களுக்கும் ஞானிகளான பெரியோர்களுக்கும் கூட அர்ச்சாவதாரத்தில் பக்தி செய்வதுதான் சுலபமானது. முன் அவதாரங்களில் சிசுபாலன்முதலியவர்கள் நிந்தை செய்தது போலவே, கலியில் பல மூடர்கள் விக்ரஹாராதனத்தை நிந்தை செய்கின்றனர். காணக்கிடைக்காத பரமாத்மா அர்ச்சாவ தாரத்தில்தான் சுலபமானவன். இந்த உண்மையை கர்வம் பிடித்த மூடர்கள் அறிவதில்லை.*

बृन्दावनस्थितानाञ्च श्रीमूर्तीनां परात्मनः ।
प्राधान्यतोऽपि सङ्गृह्य वक्ष्ये माहात्म्यमुत्तमम् ॥२२॥

गोविन्ददेवो भगवान् वज्रनाभप्रतिष्ठितः ।
अद्यापि श्रीवने नित्यं भक्तैरेवाभिसेव्यते ॥२३॥

गोवर्धनगिरौ देवः श्रीनाथो भक्तवत्सलः ।
प्रतिष्ठितो वल्लभेन भक्तैः साकं प्रकाशते ॥२४॥

नवनीतप्रियः कृष्णो बालगोपालरूपधृत् ।
प्रकाशते गोकुलेपि भक्तानुग्रहतत्परः ॥२५॥

सेवाकुञ्जे भगवान् हरिवंशप्रतिष्ठितः ।
राधिकावल्लभो देवो राजते रसिकैः सह ॥२६॥

हरिदेव इति ख्यातो विष्णुरातप्रतिष्ठितः ।
सर्वसौन्दर्यनिलयो भक्तवात्सल्यतत्परः ॥२७॥

श्रीविहारीति विख्यातो भगवान् व्रजभूषणः ।
जयति प्रेमभावज्ञो हरिदाससमर्चितः ॥२८॥

गोपीनाथ इति ख्यातो रूपदेवप्रतिष्ठितः ।
राजते यमुनातीरे भक्तमानसरञ्जनः ॥२९॥

श्रीसनातनदेवेन श्रीवने सुप्रतिष्ठितः ।
सेव्यते वैष्णवैर्नित्यं प्रभुर्मदनमोहनः ॥३०॥

शालग्रामशिलाचक्रादाविर्भूतः स्वयं प्रभुः ।
गोपालभट्टसेव्यस्तु श्रीराधारमणो हरिः ॥३१॥

गिरिधारीति विख्यातो मीरादेवीसमर्चितः ।
दृश्यते रसिकैर्नित्यं दर्शनानन्दवर्धनः ॥३२॥

*22-32. பிருந்தாவனத்திலுள்ள கிருஷ்ணபரமாத்மாவின் முக்கியமான மூர்த்திகளின் மஹிமையைச் சொல்லுகிறேன். வஜ்ரநாபனால் பிரதிஷ்டை செய்யப்பட்ட கோவிந்ததேவன் இப்பொழுதும் ஸ்ரீப்ருந்தாவனத்தில் பக்தர்களால் ஸேவிக்கப்*

படுகிறான். ஸ்ரீவல்லபாச்சார்யரால் பிரதிஷ்டை செய்யப்பட்ட ஸ்ரீநாதன் கோவர்த்தனமலையில் பிரகாசிக்கிறான். நவநீத ப்ரியன் என்கிற பாலகோபாலகிருஷ்ணன் கோகுலத்தில் காக்ஷி யளிக்கிறான்.ஹிதஹரிவம்சரால் பிரதிஷ்டை செய்ப்பட்ட ராதாவல்லபன் ஸேவாகுஞ்ஜத்தில் தரிசனம் தருகிறான். பரீக்ஷித்து ராஜனால் பிரதிஷ்டை செய்யப்பட்ட ஹரிதேவன் அழகுக்கு இருப்பிடமாய் பிருந்தாவனத்திற்கே பூஷணமாய் பாங்கேவிஹாரி என்கிற பெயருடன் ஹரிதாஸரால் பூஜிக்கப்பட்டு விளங்குகிறான். ரூபதேவரால் பிரதிஷ்டை செய்யப்பட்ட கோவிந்தன் யமுனைக்கரையில் ப்ரகாசிக்கிறான். ஸனாதனதேவரால் பிரதிஷ்டை செய்யப்பட்ட ராதாரமணன் பிருந்தாவனத்தில் ஸேவிக்கப்படுகிறான். மீராவின் கிரிதாரியும் ரஸிகர்களுக்கு ஆனந்தமாய் தரிசனந்தருகிறான்.

लीलास्थलेषु भवनं भवनेषु च डोलिकाः ।
डोलासु युगलं रूपमेतच्छ्रीवनलक्षणम् ॥३३॥

गृहे गृहे च तुलसी नामगानं जने जने ।
हृदये हृदये प्रेम ह्येतच्छ्रीवनलक्षणम् ॥३४॥

लीलास्थलेषु वृक्षाश्च वृक्षमूलेषु साधवः ।
सज्जनेषु प्रियालापश्चैतच्छ्रीवनलक्षणम् ॥३५॥

वीथ्यां वीथ्यां बालबृन्दं बालबृन्देषु केलिकाः ।
केलिकासु हरिः साक्षादेतच्छ्रीवनलक्षणम् ॥३६॥

तत्र तत्र च गोबृन्दं गोबृन्देषु च गोपिकाः ।
गोपीषु मधुरं गानमेतच्छ्रीवनलक्षणम् ॥३७॥

33-37. லீலாஸ்தலங்கள்தோறும் வீடுகள்;
வீடுகள்தோறும் ஊஞ்சல்; ஊஞ்சல்தோறும்
ராதாகிருஷ்ணன். இதுவே பிருந்தாவனம்.

வீடுகள்தோறும் துளசி;
ஜனங்கள்தோறும் நாமகீர்த்தனம்; ஹிருதயந்தோறும்
பிரேமை. இதுவே பிருந்தாவனம்.

லீலாஸ்தலங்கள்தோறும் மரங்கள்;
மரத்தடிகளில் ஸாதுக்கள்; ஸாதுக்களிடம் பிரியமான
ஸம்பாஷணை. இதுவே பிருந்தாவனம்.

வீதிகள்தோறும் குழந்தைகளின் கூட்டம்;
குழந்தைகள் கூட்டம்தோறும் விளையாட்டுகள்;
விளையாட்டுகள்தோறும் கண்ணன். இதுவே பிருந்தாவனம்.

ஆங்காங்கு பசுக்களின் மந்தை;
பசுக்களின் மந்தைகளில் கோபிகைகள்;
கோபிகைகளிடம் மதுரமான கிருஷ்ணஸங்கீர்த்தனம்.
இதுவே பிருந்தாவனம்.

इति श्रीमत्परमहंसपरिव्राजकाचार्यवर्यसर्वप्राणिसंरक्षकजगद्गुरु-
श्रीभगवन्नामबोधेन्द्रचरणारविन्दमकरन्दरसिकेन श्रीकृष्णप्रेमिमहाप्रभुणा
विरचिते श्रीबृन्दावनमाहात्म्ये क्षेत्रकाण्डे मूर्तिमाहात्म्यं नाम
पञ्चदशोऽध्यायः ॥१५॥

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமி ஸ்வாமிகள் அருளிச்செய்த ஸ்ரீப்ருந்தாவனமாஹாத்ம்யம் க்ஷேத்திரகாண்டத்தில் பதினைந்தாவது அத்யாயம் முற்றும்.**

## க்ஷேத்ரகாண்டம் முற்றும்.

॥श्रीभक्तकोलाहलार्पणमस्तु॥

श्रीहरिः

ஸ்ரீ ஹரி:

श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचितं

# श्रीबृन्दावनमाहात्म्यम्

## ஸ்ரீப்ருந்தாவனமாஹாத்மியம்

## श्रीगोविन्दकाण्डम्

## கோவிந்தகாண்டம்

## अथ प्रथमोऽध्यायः

## முதல் அத்தியாயம்

**भागवता ऊचुः**

कृष्णस्य श्रोतुमिच्छामश्चरितं सर्वमङ्गलम् ।
रसिकानां वैष्णवानां परमानन्ददायकम् ॥१॥

अपारकरुणासिन्धुर्भगवान् भक्तवत्सलः ।
किमर्थं त्यक्तगोलोकः प्राकृतं लोकमाप सः ॥२॥

लीला हि देववदेवस्य कर्णानन्दप्रदायिनी ।
श्रुत्वा पुनः पुनरपि तृप्तिर्नैवोपजायते ॥३॥

**பாகவதர்கள்**

*1-3.* குருநாதரே! பரமானந்தத்தைக் தரக்கூடியதும் ஸர்வ மங்களமானதும், பக்தர்கள் விரும்பக்கூடியதுமான க்ருஷ்ண சரித்திரத்தைச் சொல்லுவீராக. கருணைக்கடலும், பக்த வத்ஸலனுமான பகவான் எதற்காக கோலோகத்தைவிட்டு பூலோகத்தில் அவதரித்தான்? காதிற்கினிய கண்ணனின் லீலைகளை எவ்வளவு கேட்டாலும் போதும் என்று தோன்ற வில்லை.

## श्रीसद्गुरुरुवाच

नूनं कृष्णकथा लोके परमानन्ददायिनी ।
भाग्यवन्तो वयं सर्वे कथास्वादनतत्पराः ॥४॥

केचिद्योगेन सांख्येन केचिद्वेदोक्तकर्मभिः ।
व्रतेन तपसा केचित् केचिद्वेदान्तचर्चया ॥५॥

कालक्षेपं प्रकुर्वन्ति पुरुषार्थफलार्थिनः ।
वयं तु वासुदेवस्य लीलारसपरायणाः ॥६॥

पुण्यश्लोकस्य चरितं प्रवक्ष्यामि सुखावहम् ।
शृणुध्वं साधवः सर्वे सावधानं समास्थिताः ॥७॥

*4-7. ஸாதுக்கனே! உண்மையாகவே க்ருஷ்ணகதை இவ்வுலகில் பரமானந்தத்தைத் தருகிறது. அந்தக் கதையை அனுபவிக்கும் நாம் பாக்யசாலிகளே. சிலர் கர்மயோகத்தினாலும், சிலர் வேதாந்தசர்ச்சையாலும், சிலர் தவத்தினாலும், சிலர் வ்ரதங்களை செய்வதினாலும் பயனை விரும்புகிறவர்களாய் பொழுதுபோக்குகின்றனர். நாமோ க்ருஷ்ணலீலையின் ரஸத்தை அனுபவிப்பதையே லக்ஷியமாகக் கொண்டிருக்கிறோம். ஹே ஸாதுக்கனே! சுகத்தைத் தரக்கூடிய அந்த பகவானின் கதையைச் சொல்லுவேன். கவனித்துக் கேளுங்கள்.*

एकदा दैत्यभारेण समाक्रान्ता धरा भृशम् ।
गोरूपधारिणी देवं ब्रह्माणं शरणं ययौ ॥८॥

शङ्करप्रमुखैर्देवैः साकं सरसिजासनः ।
पुरस्कृत्य धरित्रीं तां प्राप क्षीराम्बुधेस्तटम् ॥९॥

समाहितमना ब्रह्मा ध्यायन् गोविन्दमच्युतम् ।

गोलोकं प्राप सानन्दं सुराणामपि दुर्लभम् ॥१०॥

8-10. ஒரு ஸமயம் பூமிதேவி பாரம் தாளாமல் பசுவின் வடிவம் தாங்கி ப்ரும்மதேவனை சரணமடைந்தாள். ப்ரும்மதேவனும் சிவன்முதலிய தேவர்களுடன் பூமி தேவியை முன்னிட்டுக் கொண்டு திருப்பாற்கடலை அடைந்தார். அங்கு தியானம் செய்து ஸமாதிநிலையில் தேவர்களுக்கும் துர்லபமான கோலோகத்தையடைந்தார்.

तत्र बृन्दावने दिव्ये सहस्रस्तम्भमण्टपे ।
मूले कल्पकवृक्षस्य रत्नसिह्मासने परे ॥११॥

समासीनं कृपासिन्धुं परमात्मानमव्ययम् ।
नवनीरदसङ्काशं नलिनायतलोचनम् ॥१२॥

दिव्यपीताम्बरधरं दिव्यरत्नविभूषणम् ।
मन्दहासमुखाम्भोजं माधुर्यरसपूरितम् ॥१३॥

नवयौवनसंयुक्तं नवमन्मथविग्रहम् ।
राधामनोहरं देवं रसिकेन्द्रं रसात्मकम् ॥१४॥

गोपीसहस्रसंसेव्यं गोविन्दं कोमलाधरम् ।
विलोक्य परमाश्चर्यस्तिमितायतलोचनः ॥१५॥

तुष्टाव प्रेमसंपूर्णो ब्रह्मा लोकपितामहः ।
मूर्ध्नि बद्धाञ्जलिपुटः पुलकाङ्कितविग्रहः ॥१६॥

11-16. அந்த கோலோகத்தில் கல்பகவ்ருக்ஷத்தினடியில் ஆயிரம்கால்மண்டபத்தில், ரத்னஸிம்மாஸனத்தில் வீற்றிருப்ப வனும், கருணைக்கடலும், நீருண்டமேகம்போல் நீலவர்ண மானவனும், தாமரைக்கண்ணனும், பீதாம்பரமணிந்தவனும், பல பூஷணங்களணிந்தவனும், மந்தஹாஸமுகனும், மன்மத

மன்மதனும், நவயௌவன மூர்த்தியும், ராதாரமணனும். கோபிகைகளால் சூழப்பட்டவனும், அழிவற்ற பரமாத்மா வுமான கோவிந்தனைக் கண்டு ஆச்சர்யம்கொண்டு மேனி சிலிர்த்து கைகுவித்து துதித்தார்.

**ब्रह्मोवाच**

नमो गोलोकनाथाय गोविन्दाय महात्मने ।
राधारससुधाम्भोधिपूर्णचन्द्राय ते नमः ॥१७॥

इदं हि परमं धाम प्रेमभक्तिविवर्जितैः ।
प्राप्तुं न शक्यते देव संसारश्रमवर्जितम् ॥१८॥

तस्मात् करुणया देव संप्राप्य पृथिवीमिमाम् ।
भक्तानामिष्टसिद्ध्यर्थं दिव्यलीलां प्रदर्शय ॥१९॥

शृण्वन्तः कीर्तयन्तश्च तव लीलां जनार्दन ।
आस्वाद्य प्रेममाधुर्यं कृतार्थाः सन्तु मानवाः ॥२०॥

इयञ्च धरणिर्देवी दैत्यभारनिपीडिता ।
प्राप्नोति शरणं कृष्णं त्वामेव शरणार्थिनी ॥२१॥

सिद्धचारणगन्धर्वा वयं सर्वे महर्षयः ।
ते लीलां द्रष्टुमिच्छामो नरलोके मनः कुरु ॥२२॥

अपराधं क्षमस्वेमं ननु स्वार्थपरा वयम् ।
अतस्त्वां दिव्यलोकस्थमेवञ्च प्रार्थयामहे ॥२३॥

नमस्ते करुणासिन्धो नमस्ते कमलालय ।
नमस्ते गोपिकालोल गोकुलानन्दवर्धन ॥२४॥

### ப்ரும்மதேவன்

*17-24.* கோலோகநாதனே! கோவிந்தா! உமக்கு வந்தனம். ராதையாகிய அம்ருதக்கடலுக்கு பூர்ணசந்திரன் போன்றவனே! உமக்கு வந்தனம். ஸம்ஸார துக்கங்களைப் போக்கும் இந்த கோலோகம் ப்ரேமபக்தி இல்லாதவர்களுக்கு கிடைக்காது. எனவே கருணையால் பூலோகத்தில் அவதரித்து பக்தர் விரும்பும் லீலைகளைச் செய்வீராக. ஜனார்தன! உமது லீலைகளை ச்ரவணம் செய்தும், கீர்த்தனம் செய்தும் ப்ரேம பக்தியை அடைந்து மனிதர்கள் பிறவிப்பயனை பெறுவார்கள். இந்த பூமிதேவியும் அஸுரபாரத்தினால் பீடிக்கப்பட்டு உம்மை சரண மடைகிறாள். க்ருஷ்ணா! உமது லீலையைப் பார்க்க தேவர்களாகிய நாங்களும், சித்தர்கள், சாரணர்கள், கந்தர்வர் கள், முனிவர்கள் யாவரும் விரும்புகிறோம் நாங்கள் சுயநல முடையவர்கள். ஏனெனில் உம்மை கோலோகத்தை விட்டு பூலோகம் போகும்படி வேண்டுகிறோமே. இந்த அபராதத்தை மன்னிப்பீராக. கருணைக்கடலே! கமலாநாத! கோபிகாலோலா! கோகுலபால! உமக்கு வந்தனம்.

### श्रीसद्गुरुरुवाच

गिरं समाधौ गगने कृष्णस्य परमात्मनः ।
श्रुत्वाऽऽह त्रिदशान् वेधाः सानन्दं कमलासनः ।।२५।।

### ஸ்ரீஸத்குரு

25. ப்ரும்மதேவன் இவ்வாறு துதித்து கோலோகத்தில் பகவான் சொன்ன வாக்யத்தை தேவர்களிடம் தெரிவிக்கிறார்.

### श्रीभगवानुवाच

स्वागतं वो महाभागाः सर्वलोकहितैषिणः ।
अङ्गीकृतमिदं सर्वं स्तोत्रं प्रार्थनया सह ।।२६।।

एवमेव हि सङ्कल्प्य सुप्रसन्नो भवाम्यहम् ।
अद्य यूयमपि प्राप्ताः शरण्यं मां भुवा सह ।।२७।।

अवतारं करिष्यामि क्षिप्रमेव सुरोत्तमाः ।
क्षेमाय सर्वलोकानां वैष्णवानां सुखाय च ॥२८॥

பகவான்

*26-28.* தேவர்களே! உங்களுக்கு நல்வரவு. உங்களுடைய வேண்டுகோளை அங்கீகரித்தேன். நானும் உலகில் அவதரிக்க ஸங்கல்பம் செய்துகொண்டிருந்தேன். அதற்குள் நீங்களும் வந்து விண்ணப்பித்துக் கொண்டீர்கள். எனவே யாவருக்கும் க்ஷேமம் உண்டாவதற்கும், என் அடியார்களை ஸுகப்படுத்துவதற்காகவும் விரைவில் அவதரிப்பேன்.

श्रीसद्गुरुरुवाच

इत्युक्ता निर्जराः सर्वे परमानन्दनिर्भराः ।
विजयी भव देवेति तुष्टुवुः पुरुषोत्तमम् ॥२९॥

अवतीर्णास्तदा लोके कृष्णकैङ्कर्यकाङ्क्षिणः ।
स्त्रीभिः साकं सुराः सर्वे सिद्धविद्याधरादयः ॥३०॥

बृन्दा च यमुना चैव गोपा गोलोकवासिनः ।
अवतारं तदा चक्रुः पूर्वमेव यथाक्रमम् ॥३१॥

सङ्कर्षणश्च भगवान् देवकीगर्भवर्धितः ।
प्रादुर्बभूव रोहिण्यां योगमायां समाश्रितः ॥३२॥

साधवो वैष्णवाः सर्वे कंसाद्यसुरपीडिताः ।
प्रतीक्षन्ते प्रतिदिनं कृष्णस्य जननं भुवि ॥३३॥

देवकीवसुदेवौ च भोजराजेन पीडितौ ।
बद्धौ कारागृहेप्येवं गोविन्दं शरणङ्गतौ ॥३४॥

### ஸ்ரீஸத்குரு

*29-34.* இவ்வாறு சொல்லப்பட்ட தேவர்கள் பெரும் மகிழ்ச்சி யடைந்து, தேவ! விஜயீ பவ! என்று துதித்தார்கள். அப்பொழுது க்ருஷ்ணகைங்கர்யத்தை விரும்பி தேவர்கள் யாவரும் சித்தர்களும், வித்யாதரர்களும் தங்களது ஸ்த்ரீகளுடன் உலகில் அவதரித்த னர். கோலோகத்தில் வாழும் கோபர்களும், கோபிகைகளும், ப்ருந்தையும், யமுனையும் இதற்கு முன்பாகவே அவதரித்து விட்டனர். ஆதிசேஷனோ தேவகியின் கர்பத்தில் வளர்ந்து யோகமாயையினால் ரோஹிணியிடம் பிறந்தான். கம்ஸனால் தினந்தோறும் துன்புறுத்தப்பட்ட ஸாதுஜனங்கள் பகவானின் அவதாரத்தை எதிர்பார்த்திருந்தனர். தேவகி யும், வஸுதேவரும் கம்ஸனால் சிறையில் வைக்கப்பட்டவர்களாய் கோவிந்தனை சரணமடைந்தனர்.

इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये श्रीगोविन्दकाण्डे प्रथमोऽध्यायः ॥१॥

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிஸ்வாமிகள் அருளிச்செய்த ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்ம்யத்தில் கோவிந்தகாண்டத்தில் முதல் அத்யாயம் முற்றும்.**

## अथ द्वितीयोऽध्यायः

## இரண்டாவது அத்யாயம்

### भागवता ऊचुः

देवकीवसुदेवौ तौ सर्वसद्गुणसंयुतौ ।
किमर्थं भोजराजेन बद्धौ कारागृहे प्रभो ॥१॥

अहो विचित्रलीलेयं कृष्णस्य जगतीपतेः ।
तस्यैव सर्वशक्तस्य पितरौ दुःखमापतुः ॥२॥

### பாகவதர்கள்

*1-2.* ப்ரபோ! தேவகியும் வஸுதேவரும் எல்லா நற்குணங்களும் பொருந்தியவர்களாக இருந்தபோதிலும் கம்ஸன் ஏன் அவர்களை சிறையில் வைத்தான்? க்ருஷ்ணலீலையே விசித்ர மாயிருக்கிறது. ஸர்வவல்லமைஉடைய லோகநாதனான க்ருஷ்ணனின் பெற்றோர்களும்கூட துக்கமடைந்தார்களே.

### श्रीसद्गुरुरुवाच

वसुदेवः कृतोद्वाहो देवक्या सूर्यया सह ।
हैमं स्यन्दनमारुह्य जगाम स्वगृहं प्रति ॥३॥

तदा कंसोपि भोजेन्द्रो भगिन्या प्रियमावहन् ।
स्वयमेव हि सारथ्यं चकार कुतुकेन सः ॥४॥

पारिबर्हमुपादाय बान्धवा हृष्टमानसाः ।
नानावाद्यनिनादेन तमेवानुययुस्तदा ॥५॥

आरार्तिकं तदा चक्रुर्नागराश्च गृहे गृहे ।
आचारलाजान् वर्षन्तः सहर्षं कुसुमानि च ॥६॥

### ஸ்ரீஸத்குரு

*3-6.* வஸுதேவர் விவாஹமானதும் மணமகளான தேவகியுடன் தங்கமயமான ரதத்தில் ஏறி தன் அரண்மனைக்குச் சென்றார். அப்பொழுது கம்ஸனும்கூட தங்கையான தேவகியினிடம் அன்புகொண்டு தானே ரதத்தை ஓட்டிச்சென்றான். பல ஸ்ரீதனங்களை எடுத்துக்கொண்டு பல வாத்யங்கள் முழங்க பந்துக்கள் மகிழ்ச்சியுடன் பின்தொடர்ந்தனர். அப்பொழுது வீடுதோறும் நகரமக்கள் மலர்மாரிப்பொழிந்து ஹாரதி எடுத்தனர்.

तदा व्योमनि संभूता दिव्यवाणी महास्वना ।
देवक्यास्त्वष्टमो गर्भः कंसमृत्युरिति स्फुटम् ॥७॥

कंसोपि सपदि क्रुद्धः स्वसुर्जग्राह वेणिकाम् ।
छेत्तुकामः शिरस्तस्याः खड्गमादाय सत्वरम् ॥८॥

सान्त्वयामास तं सद्यो भीतस्त्वानकदुन्दुभिः ।
अवरुन्धन् करं तस्य करवालसमन्वितम् ॥९॥

7-9. அப்பொழுது ஆகாயத்தில் தேவகியின் எட்டாவது கர்பம் கம்ஸனுக்கு காலன் என்று அசரீர வாக்கு கேட்டது. உடனே கம்ஸன் கோபம் அடைந்து தேவகியின் பின்னலைப் பற்றிக் கொண்டு அவள் தலையை வெட்ட வாளை ஓங்கினான். வஸுதேவரோ பயமடைந்து அவன் கையை பிடித்து தடுத்து ஸமாதானம் செய்தார்.

### वसुदेव उवाच

अयशस्यमिदं कार्यं कर्तुमिच्छसि भूपते ।
अल्पायुषोपि लोकेस्मिन् यशः कामा हि पण्डिताः ॥१०॥

**வஸுதேவர்**

10. அரசே! இகழத்தக்க இந்த காரியத்தைச் செய்ய விரும்புகிறீர். அறிவாளிகள் அல்பகாலம் உலகில் வாழ்ந்தாலும் புகழோடு வாழ விரும்புவார்கள்.

### कंस उवाच

संप्राप्ते दुस्तरे काले यशसा किं महामते ।
संप्राप्य घोरां विपदं न पश्यन्ति यशो नराः ॥११॥

**கம்ஸன்**

11. புத்திமானே! காலனே கிட்டி விட்டபோது புகழால் என்ன பயன்? கோரமான விபத்தை அடைந்த மனிதர்கள் புகழை லக்ஷியம் செய்ய மாட்டார்கள்.

### वसुदेव उवाच

आत्मा नित्योऽव्ययः सूक्ष्मस्तमवेहि नरेश्वर ।
वैराग्येण सुखं सत्यं देहेस्मिन् बुद्बुदोपमे ॥१२॥

**வஸுதேவர்**

12. அரசே! ஆத்மா அழிவற்றது. சரீரம் நீர்க்குமிழிபோல் அழியக்கூடியது. எனவே வைராக்யத்தினால்தான் உண்மையான சுகம் கிடைக்கிறது.

### कंस उवाच

एवमव्यक्तमात्मानं नरः कोपि न पश्यति ।

व्यक्तमेतच्छरीरं हि सर्वदा सुखसाधनम् ॥१३॥

**கம்ஸன்**

13. ஆத்மா கண்எதிரில் தெரிவதில்லை. எனவே யாரும் பார்த்ததில்லை. சரீரமோ இருப்பது தெரிகிறது. எனவே அதுதான் எப்பொழுதும் சுகத்திற்கு சாதனம்.

### वसुदेव उवाच

मा हिंस्यात् सर्वभूतानि श्रुतिरेषा परा स्मृता ।
अहिंसा परमो धर्मस्तं पालय दृढव्रतः ॥१४॥

**வஸுதேவர்**

14.எந்த ஜீவனையும் துன்புறுத்தக்கூடாது. அஹிம்ஸையே சிறந்த தர்மம் என்பது முதியோர்களின் மொழி. எனவே திடமாய் அதையே கடைபிடிக்க வேண்டும்.

### कंस उवाच

क्षात्रं धर्ममवेहि त्वं दारुणं शूरनन्दन ।
सर्वोपायेन हन्तव्यः शत्रुर्मृत्युविधायकः ॥१५॥

**கம்ஸன்**

15. ஓ. வஸுதேவரே! எந்தவிதத்திலாவது தன்னைக் கொல்ல வந்த சத்ருவை தான் கொல்லவேண்டும் என்று க்ஷத்ரியதர்மம். இது உனக்கு தெரியாதா?

### वसुदेव उवाच

पापेन नरकञ्चैव स्वर्गं पुण्येन कर्मणा ।
प्राप्नोति मानवो नूनमेतत्तत्त्वं विचिन्तय ॥१६॥

**வஸுதேவர்**

16. பாபத்தினால் நரகமும், புண்யத்தினால் ஸ்வர்க்கமும் கிட்டும். இதைச் சிந்தித்துப் பார்.

### कंस उवाच

पापेन स्वर्गलोकञ्च पुण्येन नरकं तथा ।

स्थापयिष्यामि लोकेस्मिन् पौरुषेण ममैव हि ॥१७॥

**கம்ஸன்**

*17. பாபத்தினால் ஸ்வர்கமும், புண்யத்தினால் நரகமும் அடையும்படி செய்ய போகிறேன். என்னுடைய பராக்ரமத்தைப் பார்ப்பீராக.*

## वसुदेव उवाच

उपायमन्यं राजेन्द्र सावधानतया शृणु ।
दास्यामि तुभ्यं सहसा जातं जातं शिशुं प्रभो ॥१८॥

देवकीं त्यज मे पत्नीं स्वसारञ्च तवैव हि ।
करुणां कुरु भोजेन्द्र बालैषा हन्त रोदिति ॥१९॥

**வஸுதேவர்**

*18-19. அரசே! வேறு வழி சொல்லுகிறேன். கவனித்துக் கேள். பிறக்கப்பிறக்க தேவகியின் குழந்தைகளை உன்னிடம் கொடுத்து விடுகிறேன். எனது மனைவியும், உன் தங்கையுமான தேவகியை விட்டுவிடு. கருணை செய். ஒன்றுமறியாத இவள் அழுகிறாள்.*

## कंस उवाच

एवमस्तु महाबुद्धे मारयिष्यामि ते सुतान् ।
मया त्यक्तामिमां पत्नीं देवीं सान्त्वय संप्रति ॥२०॥

**கம்ஸன்**

*20. புத்திமானே! அப்படியே ஆகட்டும். உன் பிள்ளைகளைக் கொல்லுவேன். இவளை விட்டுவிட்டேன். ஸமாதானம் செய்து கொள்.*

## श्रीसद्गुरुरुवाच

एवमुक्त्वा तदा कंसः कोपारुणविलोचनः ।
घोरात्स्वसुर्वधात्सद्यो विरराम भयावहः ॥२१॥

कारागृहे तौ न्यरुणद्देवकीशूरनन्दनौ ।

चकार क्रूरहृदयो विविधां यातनामपि ॥२२॥

जातं जातं शिशुं दिव्यं जघानापि च दुर्मतिः ।
देवकी पुत्रशोकार्ता सन्ततं प्ररुरोद ह ॥२३॥

वैदिकान् ब्राह्मणान् धेनूर्देवतायतनानि च ।
वैष्णवान् यादवांश्चापि जघान स्वार्थतत्परः ॥२४॥

कंसेन हिंसिताः सर्वे यादवा दुद्रुवुस्तथा ।
कोसलान् कुरुपाञ्चालान् देशान् धर्मपरानपि ॥२६॥

**ஸ்ரீஸத்குரு**

*21-26.* இவ்வாறு சொல்லி கோபமடைந்திருந்த கம்ஸன் ஸமாதானமடைந்து சும்மாயிருந்தான். தேவகியையும், வஸுதேவரையும் சிறையிலடைத்து பலவிதத்திலும் துன்பம் தந்தான். பிறக்க பிறக்கக் குழந்தைகளையும் கொன்றான். தேவகி புத்ரசோகத்தினால் புலம்பினாள். அந்தணர்களையும், பசுக்களையும், வைஷ்ணவர்களையும், யாதவர்களையும் கொலை செய்தான். தேவாலயங்களை இடித்தான். குழந்தைகளுக்கு விஷம் கொடுத்தான். பதிவ்ரதைகளைக் கெடுத்தான். வேதியர்களின் வீடுகளுக்கு தீ வைத்தான். இவ்வாறு கம்ஸனால் துன்பப்படுத்தப்பட்ட மக்கள் வெளிநாடுகளுக்கு ஓட்டம் பிடித்தார்கள்.

सप्तमं गर्भमाकृष्य दिव्यं सङ्कर्षणात्मकम् ।
योगमायाऽऽज्ञया विष्णोः प्रापयामास रोहिणीम् ॥२७॥

अहो विस्रंसितो गर्भ इति प्राहुः पुरे जनाः ।
अजानन्तो रहस्यं तद्विष्णुमायाविचेष्टितम् ॥२८॥

देवकीवसुदेवौ च नन्दो गोकुलवासिनः ।
गर्गस्य वचनादेनं विदुः सङ्कर्षणं शिशुम् ॥२९॥

27-29. தேவகி ஆதிசேஷனின் அம்சமான ஏழாவது கர்பத்தை தரித்தாள். அதை விஷ்ணுவின் ஆக்ஞையால் துர்காதேவி ரோகிணியின் வயிற்றில் சேர்ந்து விட்டாள். தேவியின் செயலை அறியாத மக்கள் தேவகியின் கர்பம் நழுவிவிட்டது. அந்தோ! என்று வருந்தினர். ஆதிசேஷன் ரோகிணியின் குழந்தையாக அவதரித்தான். தேவகியும் வஸுதேவரும் நந்தனும் மற்ற ஆயர்பாடிமக்களும் கர்கமுனிவரின் வசனத்தால் இதை அறிந்தனர்.

अथाचिरेण कालेन परमात्मा हरिः स्वयम् ।
प्राविशद्देवकीगर्भं भक्तरक्षणदीक्षितः ॥३०॥

कदाचिद्देवकीं दृष्ट्वा कंसः परमकोपनः ।
अष्टमं गर्भमासाद्य विलसन्तीमिव श्रियम् ॥३१॥

हन्तुकामोपि दुष्टात्मा हिरण्यकशिपुं स्मरन् ।
प्रादुर्भावभयेनैव विष्णोरमिततेजसः ॥३२॥

जगाम स्वगृहं भीतः सचिवैरपि सान्त्वितः ।
सन्ततं संस्मरन् कृष्णं न लेभे शान्तिमप्ययम् ॥३३॥

30-33. பிறகு கொஞ்சநாளில் பக்தர்களை ரக்ஷிக்கவேண்டி பரமாத்மாவான ஹரி தேவகியின் கர்பத்தில் ப்ரவேசித்தான். கர்பவதியான தேவகியைக் கண்டு கோபமடைந்த கம்ஸன் அவளைக் கொலை செய்ய விரும்பினான்.ஆயினும் ஹிரண்ய கசிபுவைப்போல் விஷ்ணுவிடம் அபராதம் செய்தால் தனக்கே நாசம் வருமோ என பயந்து திரும்பி விட்டான். பயத்தினால் எப்பொழுதும், எங்கும் கண்ணபிரானையே நினைத்திருந்தான்.

इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये श्रीगोविन्दकाण्डे देवकीविवाहो नाम द्वितीयोऽध्यायः॥२॥

இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிஸ்வாமிகள் அருளிச்செய்த ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்ம்யத்தின் கோவிந்தகாண்டத்தில் இரண்டாவது அத்யாயம் முற்றும்.

# अथ तृतीयोऽध्यायः

## மூன்றாவது அத்யாயம்

### श्रीसद्गुरुरुवाच

ववौ वायुः सुखस्पर्शस्तुलसीगन्धसंयुतः ।
विरेजे गगनञ्चापि निर्मलोडुगणावृतम् ॥१॥

जज्वाल हव्यवाहश्च ब्राह्मणानां गृहेष्वपि ।
चुकूजुः पक्षिणश्चापि सुस्वरं मधुरं मृदु ॥२॥

पुष्पवर्षो महानासीद्देवबृन्दप्रकल्पितः ।
देवदेवं जगन्नाथं तुष्टुवुश्च दिवौकसः ॥३॥

श्रावणे कृष्णपक्षे च रोहिण्यामष्टमी तिथौ ।
आविरासीज्जगन्नाथो देवक्यां देवसत्तमः ॥४॥

ஸ்ரீஸத்குரு

1-4. துளசிமணத்துடன் காற்று சுகமாய் வீசுகிறது. நக்ஷத்திரங்களுடன் ஆகாயம் நிர்மலமாய் விளங்குகிறது. வேதியர்களின் வீடுகளில் ஔபாஸனாக்னி ஜ்வலிக்கிறது. பக்ஷிகள் இனிமையாய்க் கூவுகின்றன. தேவர்கள் தேவதேவனான ஜகன்நாதனைத் துதித்து மலர்மாரிப் பொழிகின்றனர். ஆவணிமாதம் க்ருஷ்ண பக்ஷம் ரோகிணிநக்ஷத்திரம் அஷ்டமிதிதியில் தேவதேவனான ஜகந்நாதன் தேவகியின் மைந்தனாய் அவதரித்தார்.

बालकोऽद्भुतरूपश्च दर्शनानन्दविग्रहः ।
पुण्डरीकविशालाक्षः शङ्खचक्रगदाधरः ॥५॥

अतसीपुष्पसङ्काशो दिव्यपीताम्बरावृतः ।
श्रीवत्साङ्को घनश्यामः सर्वाभरणभूषितः ॥६॥

मन्दस्मितमुखाम्भोजो मणिनूपुरभूषितः ।

कोटिसूर्यप्रकाशश्च कोमलाधरपल्लवः ॥७॥

देवकीवसुदेवौ च विलोक्य स्वसुतं हरिम् ।
परमाश्चर्यसंमुग्धौ चक्रतुः स्तोत्रमुत्तमम् ॥८॥

5 -8. காயாம்பூ வண்ணனும், கமலக்கண்ணனும், சங்க சக்ர கதாதரனும், பீதாம்பரதாரியும், பரமானந்தரூபனும், மந்தஹாஸ முகனும், கோடிஸூர்யப்ரகாசனும், ஸர்வ ஆபரணங்களும் அணிந்தவனுமான அதிசயக் குழந்தை தோன்றினான். குழந்தையாய்த் தோன்றிய ஸ்ரீஹரியைக் கண்டு தேவகியும், வஸுதேவரும் ஆச்சரியம்கொண்டு துதித்தனர்.

## वसुदेव उवाच

वेदाहमाद्यं पुरुषं सर्वलोकैककारणम् ।
अस्मिंल्लोकेऽवतीर्णं त्वां केवलं कृपयैव हि ॥९॥

गुणत्रयमुपादाय मूर्तित्रयसमन्वितः ।
करोषि सर्वलोकानां सृष्टिस्थितिलयान् विभो ॥१०॥

त्वमेव वेदगर्भोसि विष्णुस्त्वं मधुसूदनः ।
एवं त्वमेव रुद्रश्च नमस्ते पुरुषोत्तम ॥११॥

यदा यदा हि धर्मस्य ग्लानिर्भवति भूतले ।
तदा तदाऽवतीर्णोऽसि कृपया भक्तवत्सल ॥१२॥

तवावतारलीलासु मग्नचित्तास्तु साधवः ।
उपेक्षन्ते मोक्षमपि तृणीकृतजगत्त्रयः ॥१३॥

न तेषां भक्तवर्याणां संसारेस्मिन् भयं क्वचित् ।
तस्मादेव हि ते नित्यं सन्ति प्रेमकुतूहलाः ॥१४॥

अद्यापि लोकक्षेमार्थं स्वयमेव श्रियःपते ।
अवतीर्णोऽसि कृपया मम कारागृहे प्रभो ॥१५॥

अशक्तोऽहं दयासिन्धो कर्तुं ते जननोत्सवम् ।
इति संस्मृत्य संस्मृत्य खेदं प्राप्नोमि माधव ॥१६॥

9 -16. ப்ரபுவே! உலகத்திற்கு காரணமான ஆதிபுருஷனாகிய நீர் கருணையாலேயே இங்கு அவதாரம் செய்திருக்கிறீர் என்று அறிந்தேன். மூன்று குணங்களைக் கொண்டு மும்மூர்த்தியாகி படைத்தல், காத்தல் அழித்தல் என்னும் மூன்று விளையாட்டு களைச் செய்கின்றீர். நீரே ப்ரும்மா, நீரே விஷ்ணு, நீரே ருத்திரன். புருஷோத்தமா! உமக்கு வணக்கம். எவ்வெப்பொழுது உலகில் தர்மம் குறைந்துபோகிறதோ அவ்வப்பொழுது நீர் அவதரிக்கிறீர். உமது அவதார லீலைகளில் மூழ்கிய ஸாதுக்கள் மூவுலகையும், முக்தியையும்கூட மதிப்பதில்லை. அந்த பக்தர்களுக்கு இந்த ஸம்ஸாரத்தில் எங்கும் பயமில்லை. ஆகையாலேயே அவர்கள் கோலாஹலமாய் பக்தி செய்கின்ற னர். ஓ லக்ஷ்மிநாதா! இப்பொழுதும் லோகக்ஷேமத்திற்காக கருணையால் எனது சிறையில் தோன்றியிருக்கிறீர். கருணைக் கடலே! உனக்கு ஜனனோத்ஸவத்தை செய்யக்கூட சக்தியற்றவ னாக இருக்கிறேன்.

### देवक्युवाच

अव्यक्तं व्यक्तिमापन्नं कृपया जगतीतले ।
जानामि त्वां जगन्नाथ तवैव कृपयाप्यहम् ॥१७॥

सर्वांल्लोकान् सुसंहृत्य त्वमेकः किल शिष्यसे ।
वटपत्रपुटे दिव्ये शयानः क्रीडसि प्रभो ॥१८॥

यावत्कंसो महाघोरस्त्वागमिष्यति दुर्मतिः ।
उपसंहर विष्णो त्वं तावद्रूपमलौकिकम् ॥१९॥

### தேவகி

*17-19.* ஜகன்னாதா! உருவமற்ற பரமாத்மாவாகிய நீர் கருணையால் இவ்வுலகில் உருவந்தாங்கி வந்திருப்பதை அறிந்து கொண்டேன். முடிவில் எல்லா உலகங்களையும் ஸம்ஹாரம் செய்து நீர்மட்டிலும் மிச்சப்பட்டவராய் ஆலிலைமேல் விளையாடுகிறீர். ஓ விஷ்ணுவே! கெட்ட புத்தியுடைய கம்ஸன் வருவதற்குள் இந்த ரூபத்தை மறைந்துக்கொண்டு ஸாதாரண குழந்தை வடிவத்தில் காக்ஷி தருவீராக.

### श्रीभगवानुवाच

युवां मां पुत्रभावेन तपसा लब्धुमीषथुः ।
पूर्वजन्मसु पुण्येन दृढया भक्तिनिष्ठया ॥२०॥

तस्मादेवावतीर्णोऽस्मि कृपयाऽहं सनातनः ।
युवयोर्वरदानाय साधूनां कुशलाय च ॥२१॥

मामद्य गोकुले त्यक्त्वा नन्दगोपगृहे पितः ।
यशोदायाः सुतं देवीं योगमायामिहानय ॥२२॥

### ஸ்ரீபகவான்

*20-22.* பெற்றோர்களே! நீங்கள் இருவரும் முன்ஜன்மத்தில் என்னைக் குழந்தையாய் அடையவேண்டி தவம் செய்தீர்கள். ஆகையாலேயே பரம்பொருளாகிய நான் உங்களுக்கு வரன் கொடுத்தபடி அவதாரம் செய்திருக்கிறேன். தந்தையே! இப்பொழுது என்னை கோகுலத்தில் நந்தகோபன் வீட்டில் கொண்டுவிட்டு யசோதையின் பெண்ணாகப் பிறந்திருக்கும் தேவியை இங்கு அழைத்து வருவீராக.

### श्रीसद्गुरुरुवाच

इत्युक्त्वा भगवान् कृष्णः शिशुरूपं प्रदर्शयन् ।
चिक्रीड मातुः पुरतः परमानन्दवर्धनः ॥२३॥

पूर्णेन्दुवदनं बालं पक्वबिम्बफलाधरम् ।

कुटिलालकसंयुक्तं कमलायतलोचनम् ॥२४॥

विशालफालफलकं सुनासं सुन्दरभ्रुवम् ।
वटपत्रोदरं कृष्णं कम्बुग्रीवं दिगम्बरम् ॥२५॥

घनश्यामं सुन्दराङ्गं कोमलाङ्गुलिपङ्क्तिकम् ।
शङ्खचक्रादिचिह्नाढ्यचरणाम्बुजमद्भुतम् ॥२६॥

विलोक्य देवकी माता परमानन्दसंयुता ।
आदाय निजहस्ताभ्यां परिरेभे पुनः पुनः ॥२७॥

मूर्ध्न्युपाघ्राय गोविन्दं मुखं दृष्ट्वा मुहुर्मुहुः ।
लालयामास वात्सल्यात् कंसं स्मृत्वा रुरोद च ॥२८॥

ஸ்ரீஸத்குரு

*23-28. இவ்வாறு சொல்லி க்ருஷ்ணபரமாத்மா ஒரு குழந்தை யாகி தாயாரின் எதிரில் விளையாடினார். பூர்ண சந்திரனைப் போன்ற முகமுடையவனும், கொவ்வைப் பழம் போன்ற சிவந்த உதடு உடையவனும், சுருண்ட கேசம் உடையவனும், கமலம் போன்ற கண்களும், விசாலமான நெற்றியும், நீண்ட மூக்கும், அழகான புருவமும், சங்கு போன்ற கழுத்தும், ஆலிலை போன்ற வயிறும் உடையவனும், இடுப்பில் துணி இல்லாதவனும், முகில் வண்ணனும், அழகிய சிறிய விரல்கள் உடையவனும், சங்கு சக்ர ரேகைகள் உடைய திருவடி உடையவனுமான கண்ணனைக் கண்டு அன்னையான தேவகி பரமாநந்தமடைந்து கையில் எடுத்துக்கொண்டு கட்டி முத்தம் தந்து பார்த்துப் பார்த்து மகிழ்ந்தாள். கம்ஸனை நினைத்து அழுதாள்.*

देवक्युवाच

कारागृहे वसन्त्यत्र हन्त किं करवाण्यहम् ।
ईदृशं पुत्रमासाद्य कृपणा कंसपीडिता ॥२९॥

नास्त्यत्र डोलिका कापि न हि क्रीडनकानि च ।
स्तन्यञ्च न हि मे बाल दुःखिताया भृशं प्रभो ॥३०॥

मादृशी दुर्भगा लोके नूनं नास्ति पतिव्रता ।
त्वामेव पुत्रं लब्ध्वापि न कुर्यां जननोत्सवम् ॥३१॥

यत्रकुत्रापि गत्वा त्वं चिरञ्जीव ममात्मज ।
तव स्मरणमात्रेण सुखं प्राप्नोमि बालक ॥३२॥

नूनं भाग्यवती सैव या त्वां संवर्धयिष्यति ।
पुत्रवत्यै नमस्तस्यै वारं वारं नमो नमः ॥३३॥

தேவகி

*29 -33. கண்ணா! சிறையில் வசிக்கும் நான் இத்தகைய உன்னை குழந்தையாய்ப் பெற்றும் ஏதும் செய்வதற்கில்லையே. இங்கு உனக்குத் தொட்டிலோ, விளையாட்டுப்பொருள்களோகூட இல்லை. குழந்தையான ப்ரபுவே! துன்பப்படும் என்னிடத்தில் தாய்ப்பாலும் வரவில்லை. என்னைப்போன்ற துர்பாக்யவதி உலகில் எவளும் இருக்கமாட்டாள். ஏனெனில் உன்னையே மகனாய்ப் பெற்றும் ஜனனோத்ஸவம் கொண்டாடுவதற்கில்லை. என் குழந்தாய்! எங்கேயாவது சென்று பிழைத்துக் கொள். உன்னை நினைத்து நினைத்து ஸுகப்படுவேன். உன்னை வளர்ப்பவள் எவளோ அவளே பாக்யவதி. புத்ரவதியான அவளுக்கு கோடி நமஸ்காரம்.*

**श्रीसद्गुरुरुवाच**

इत्युक्त्वा पुत्रशोकेन पीडिता सा सगद्गदम् ।
जननी लोकनाथस्य नितरां प्ररुरोद ह ॥३४॥

वसुदेवो महाभागः सान्त्वयामास तां प्रियाम् ।
अवताररहस्यं तद्विष्णोरुक्त्वा पुनः पुनः ॥३५॥

**ஸ்ரீஸத்குரு**

34 - 35. இவ்வாறு சொல்லி புத்திரசோகத்துடன் தழுதழுத்த குரலுடன் லோகநாதனான பகவானின் தாயார் அழுதாள். மஹாபாக்யவானான வஸுதேவர் விஷ்ணுவின் அவதார ரஹஸியத்தைச்சொல்லி அவளை ஸமாதானம் செய்தார்.

इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये श्रीगोविन्दकाण्डे

श्रीकृष्णजननं नाम तृतीयोऽध्यायः ॥३॥

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிஸ்வாமிகள் அருளிச்செய்த ப்ருந்தாவன மாஹாத்ம்யத்தின் கோவிந்தகாண்டத்தில் மூன்றாவது அத்யாயம் முற்றும்.**

# अथ चतुर्थोऽध्यायः

## நான்காவது அத்யாயம்

**श्रीसद्गुरुरुवाच**

अथ बालं समादाय श्रीमानानकदुन्दुभिः ।
प्रतस्थे गोकुलायैव सान्त्वयन् देवकीं प्रभुः ॥१॥

स्वर्गादवतरन्तीव देवाः कृष्णदिदृक्षया ।
ववृषुर्नितरां मेघा विद्युन्मालाविराजिताः ॥२॥

द्वारपालास्तदा सुप्ता योगमायावशङ्गताः ।
कपाटबन्धो निर्मुक्तः स्वयमेव सुहृत्तमाः ॥३॥

मार्गेपि तमसापूर्णे वर्षधारातिपङ्किले ।
मेघनादेन संयुक्ते गगने जलदावृते ॥४॥

जगाम त्वरया गोष्ठं शिशुमादाय पाणिना ।
ध्यायन् शूरसुतो देवं प्रणतार्तिहरं हरिम् ॥५॥

सहस्रवदनो देवः सर्पराजो बृहद्वपुः ।

वासुदेवस्य कृष्णस्य वर्षत्रमभवत्तदा ॥६॥

### ஶ்ரீஸத்குரு

*1-6.* வஸுதேவர் குழந்தையை எடுத்துக்கொண்டு தேவகியை ஸமாதானம் செய்துவிட்டு கோகுலத்திற்குப் புறப்பட்டார். கண்ணனைக் காண விரும்பி வானத்திலிருந்து தேவர்கள் கீழே இறங்குவதுபோல் மழைதூற்றல்கள் விழலாயின. மின்னல் மின்னிக் கொண்டிருந்தது. வாசல்காப்பாளர்கள் தூங்கி விட்டனர். கதவு தானே திறந்து கொண்டது. ஹே ஸாதுக்களே! வழிஎங்கும் மழையால் சேறாக இருந்தது. எங்கும் இருள் சூழ்ந்திருந்தது. வானத்தில் இடியும், மப்பும் தோன்றின. அண்டியவர்களின் துன்பத்தைப் போக்கும் கண்ணனைக் கையில் ஏந்தி வஸுதேவர் கோகுலம் போய்க் கொண்டிருந்தார். அப்பொழுது ஆயிரம் தலையுடைய ஆதிசேஷன் குடையாகி பின்னே வந்தான்.

महाप्रवाहसंयुक्तां फेनमण्डलभूषिताम् ।
तरङ्गनिनदाकीर्णां विच्छिन्नतटभूरुहाम् ॥७॥

दृष्ट्वापि यमुनां शौरिः कैवर्तप्लववर्जिताम् ।
कृष्णस्याज्ञां स्मरंस्तत्र न लेभे भयमण्वपि ॥८॥

वसुदेवेऽवतीर्णे सा कृष्णमादाय निर्भयम् ।
सभयं प्रददौ मार्गं राघवस्येव सागरः ॥९॥

गोकुलं प्राप्य सानन्दं वसुदेवो महामनाः ।
यशोदायाः प्रसुप्तायाः पार्श्वे शिशुमशीशयत् ॥१०॥

तदैव जातां सपदि योगमायां तु वैष्णवीम् ।
आदाय त्वरया शौरिर्यथापूर्वमुपागमत् ॥११॥

*7-11.* பெரிய பெரிய அலைகளுடன் கூடிய கரை புரண்டு ஓடும் யமுனை வெள்ளத்தைக் கண்டார். ஓடமும் கிடைக்கவில்லை.

பகவானின் ஆக்ஞையை நினைத்து பயமில்லாமல் இறங்கி விட்டார். ராமபிரானுக்கு ஸமுத்திரம் வழிவிட்டதுபோல் யமுனை தானே பயந்து வழிவிட்டாள். உதாரகுணமுடைய வஸுதேவர் கோகுலத்தையடைந்து தூங்கிக்கொண்டிருக்கும் யசோதையின் பக்கத்தில் குழந்தையை விட்டுவிட்டார். அங்கு அவதரித்த பெண் குழந்தையான விஷ்ணுமாயையை எடுத்துக் கொண்டு வந்தவழியே மதுரைக்கு வந்து விட்டார்.

श्रुत्वा कंसोऽपि भोजेन्द्रः कन्याया जननं स्वसुः ।
करवालं प्रगृह्याशु कारागृहमुपाययौ ॥१२॥

तं दृष्ट्वा भ्रातरं देवी कन्यामालिङ्ग्य वैष्णवीम् ।
प्रारुदन्नितरां दीना काङ्क्षन्ती शिशुरक्षणम् ॥१३॥

बलादादाय तां कन्यां स्वार्थोन्मूलितसौहृदः ।
छेत्तुकामस्तदा कंसश्चिक्षेप गगने खलः ॥१४॥

*12-14. இதைக் கேள்விப்பட்ட கம்ஸன் கையில் வாளை ஏந்தி சிறைச்சாலைக்கு வந்தான். தேவகியோ அந்தப் பெண் குழந்தையை மார்புடன் அணைத்துக்கொண்டு குழந்தையை விட்டு விடும்படி கதறியழுதாள். சுய நலத்தினால் அன்பை மறந்த கம்ஸன் குழந்தையை பிடுங்கி வெட்டுவதற்கு எண்ணி ஆகாயத்தில் எறிந்தான்.*

अन्तरिक्षङ्गता देवी दिव्यरूपप्रदर्शिनी ।
शङ्खचक्रगदाशूलतोमराद्यायुध न्विता ॥१५॥

अरुणाम्बरसंवीता सर्वाभरणभूषिता ।
सहस्रादित्यसङ्काशा सरोजसदृशानना ॥१६॥

तनुमध्या विशालाक्षी दामोदरसहोदरी ।
मेघगम्भीरया वाचा भोजराजमुवाच सा ॥१७॥

15-17. ஆகாயத்தையடைந்த தேவி எட்டுக்கைகளிலும் சங்கு, சக்கரம், கதை, சூலம், தோமரம் முதலிய ஆயுதமுடையவ ளாயும், சிவந்த ஆடை உடுத்தியவளாயும், எல்லா ஆபரணங் களும் அணிந்தவளாயும், சூரியனுக்கு ஸமமான காந்தியுடைய வளாயும், தாமரைபோன்ற முகமுடையவளாயும், விசாலமான கண்களுடையவளாயும் காக்ஷி கொடுத்து இடிமுழக்கம் போன்ற குரலால் கம்ஸனைப் பார்த்துச் சொன்னாள்.

किं मां प्रकृतिमव्यक्तां हन्तुमिच्छसि दुर्मते ।
स एव ते पूर्वशत्रुर्जातः किल समीपतः ॥१८॥

मा हिंसीः सज्जनान् व्यर्थं कालो हि दुरतिक्रमः ।
इत्युक्त्वाऽन्तर्दधे देवी कंसस्यैव हि पश्यतः ॥१९॥

18 19. துர்புத்தியுடைவனே! விஷ்ணுமாயையான என்னை ஏன் கொல்ல விரும்புகிறாய்? உனது சத்ருவான விஷ்ணு ஸமீபத்தில் பிறந்திருக்கிறார். ஸாதுக்களை வீணாய் துன்புறுத்தாதே. காலத்தை வெல்ல முடியாது. இவ்வாறு சொல்லி விட்டு தேவி கம்ஸன் பார்த்துக்கொண்டிருக்கும்போதே மறைந்துபோனாள்.

सान्त्वयामास कंसोपि देवक्यानकदुन्दुभी ।
अशरीरवचो दिव्यमसत्यमिति संस्मरन् ॥२०॥

कारागृहान्मुमोचापि पश्चात्तापेन संयुतः ।
एतौ कंसभयेनैव न पुत्रं द्रष्टुमिच्छतः ॥२१॥

प्रलम्बबकचाणूरप्रमुखैर्मन्त्रिभिः खलैः ।
सह संमन्त्र्य कंसोपि साधुहिंसां चकार सः ॥२२॥

20 - 22. உடனே கம்ஸன் அந்த அசரீரிவாக்கை பொய்யென்று நினைத்தான். தேவகியையும், வஸுதேவரையும் விடுதலை செய்து பச்சாதாபத்துடன் ஸமாதானம் செய்தான். ப்ரலம்பன், பகன், சாணூரன் முதலிய துஷ்டமந்திரிகளுடன் ஆலோசனை செய்து ஸாதுக்களை துன்பப்படுத்தினான்.

आयुरारोग्यमैश्वर्यं धनं धान्यं कुलं यशः ।
विनाशयति दुष्टानां वैष्णवातिक्रमो नृणाम् ॥२३॥

कायेन मनसा वाचा भक्तान्नातिचरेत् क्वचित् ।
यदीच्छत्यात्मनो मर्त्यः कल्याणमकुतोभयम् ॥२४॥

दुःसङ्गः सर्वथा त्याज्यः सत्यधर्मविनाशकः ।
यदयं राजपुत्रोपि दानवत्वमुपागतः ॥२५॥

*23-25.* பாகவதர்களுக்கு அபசாரம்செய்வது துஷ்ட மனிதர்களின் ஆயுள், ஆரோக்யம், ஐச்வர்யம், தனம், தான்யம், குலம், புகழ் இவையாவையும் நாசம் செய்துவிடும் எனவே தனக்கு க்ஷேமத்தை விரும்பும் மனிதன் மனது, வாக்கு, காயம் இவைகளால் பாகவதர்களுக்கு அபசாரம் செய்யக் கூடாது. துஷ்டஸங்கம் ஸத்யத்தையும், தர்மத்தையும் நாசம் செய்து விடும். எனவே அதை நீக்க வேண்டும். ராஜகுமாரனான கம்ஸன் துஷ்டஸங்கத்தினாலேயே அசுரனாகி விட்டான் அன்றோ!

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये श्रीगोविन्दकाण्डे दुर्गाजननं नाम चतुर्थोऽध्यायः॥४॥*

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிஸ்வாமிகள் அருளிச்செய்த ப்ருந்தாவன மாஹாத்ம்யத்தின் கோவிந்தகாண்டத்தில் நான்காவது அத்யாயம் முற்றும்.**

## अथ पञ्चमोऽध्यायः

### *ஐந்தாவது அத்யாயம்*

***श्रीसद्गुरुरुवाच***

भगवान् भास्करो देवः प्राप प्राचीं दिशं प्रभुः ।
त्वरयन्नरुणं सूतं नन्दोत्सवदिदृक्षया ॥१॥

उत्फुल्लपद्मपत्रेभ्यो विनिष्क्रान्तास्तु षट्पदाः ।
बभ्रमुस्तत्र सोत्साहं झङ्कारध्वनिसंयुताः ॥२॥

सुस्वरं कीर्तयंस्तत्र क्लीं कृष्णाय नमोस्त्विति ।
शकुन्तनिकरो व्योम्नि सानन्दं परिगच्छति ॥३॥

जयघोषं करोतीव तरङ्गनिनदैस्तदा ।
कलिन्दनन्दिनी देवी नानटीति ससंभ्रमम् ॥४॥

हरिः सर्वोत्तम इति ताम्रचूडश्चुकूज च ।
तदा गोपकुटीराग्रमारुह्याविद्धपक्षकः ॥५॥

ஸ்ரீஸத்குரு

*1-5. தனது ஸாரதியான அருணனை சீக்கிரப்படுத்திக் கொண்டு நந்தோத்ஸவம் பார்க்கவேண்டும் என்கிற ஆசையினால் ஸூர்யபகவான் கீழ்த்திசையை அடைந்தான். மலர்ந்த தாமரைகளிலிருந்து கிளம்பிய வண்டுகள் ஜங்காரம் செய்துகொண்டு இங்குமங்கும் அலைந்தன. ஆகாயத்தில் பறவைகள் க்ருஷ்ணநாமத்தைச் சொல்லிக் கொண்டு ஆனந்தமாகப் பறந்து கொண்டிருந்தன. யமுனாநதி அலைஓசையினால் ஜயகோஷம் செய்வது போலும், நடனமாடுவதுபோலும் அலைந்து கொண்டிருந்தது. கோழிகள் கூரையின் மேல் ஏறி ஹரி:ஸர்வோத்தம: என்று கூவிக்கொண்டிருந்தன.*

पयः पिपासया वत्सा हंभारावेण संयुताः ।
सौरभेयीश्च कुण्डोध्नीः प्रेमपूर्वं समाह्वयन् ॥६॥

हरिर्हरिर्हरिरिति स्मरन्तो भक्तिपूर्वकम् ।
स्नानार्थं यमुनां वृद्धाः सह पौत्रैः प्रतस्थिरे ॥७॥

आभीरवनिताः सर्वा गृहद्वारेषु संस्थिताः ।
अलङ्कारविधिं चक्रुस्तथा गोदोहनं मुदा ॥८॥

आकर्ण्य पुत्रजननं नन्दगोपो महामनाः ।
अवाप परमानन्दं समवाप्तमनोरथः ॥९॥

जातकर्म तदा चक्रे स्नानं कृत्वा यथाविधि ।
ब्राह्मणैर्वेदविद्भिश्च सप्रेम कृतमङ्गलः ॥१०॥

*6-10.* கன்றுகள் பால்குடிக்கும் ஆசையினால் அம்பா என்று மடிபருத்த பசுக்களை அன்புடன் அழைத்தன. முதியோர்கள் 'ஹரி ஹரி' என்று கீர்த்தனம் செய்து கொண்டே தங்கள் பேரப்பிள்ளைகளுடன் யமுனையில் நீராடுவதற்கு புறப்பட்டனர். கோபிகைகள் வீட்டுவாசல்களில் கோலமிட்டனர். சிலர் மாடு கறந்தனர். பெரிய மனதுடைய நந்தகோபன் தனக்குப் புத்ரன் பிறந்திருப்பதை அறிந்து பெருமகிழ்ச்சியடைந்தான். யமுனையில் நீராடிவிட்டு பெரியோர்களுடன் குழந்தைக்கு ஜாதகர்மத்தை நடத்தினான்.

भूषणानि च वस्त्राणि धनधान्यानि सादरम् ।
प्रददौ ब्राह्मणेभ्यश्च दीनेभ्यश्च व्रजेश्वरः ॥११॥

वाद्यानि वादयामासुर्नानावाद्यविदो जनाः ।
स्वयमागत्य नन्दस्य श्रुत्वा पुत्रमहोत्सवम् ॥१२॥

गृहे गृहे बालकाश्च परिरभ्य परस्परम् ।
नृत्यन्तो नीलबालस्य सौन्दर्यं जगुरद्भुतम् ॥१३॥

चित्रध्वजैः पताकाभिः पूर्णकुंभैश्च पल्लवैः ।
विरराज स्वर्ग इव श्रीगोकुलमलङ्कृतम् ॥१४॥

सर्वा वल्लवसुन्दर्यः प्रविश्य भवनं मुदा ।
तत्र दृष्ट्वा नन्दशिशुं लेभिरे विस्मयं परम् ॥१५॥

11-15. நந்தகோபன் ஏழைகளுக்கும், அந்தணர்களுக்கும் பல தானதர்மங்கள் செய்தான். நந்தன் வீட்டிற்குத் தானே வந்து பல இசைவல்லுனர்கள் பலவிதமான வாத்யங்களை வாசித்தனர். ஒவ்வொரு வீட்டிலும் குழந்தைகள் ஒருவருக்கொருவர் ஆலிங்கனம் செய்துகொண்டு கண்ணனின் அழகை வர்ணித்துப் பாடி ஆடினர். கொடி, தோரணம், பூர்ணகும்பம் இவைகளால் கோகுலமெங்கும் அலங்கரிக்கப்பட்டது. கோபிமார்யாவரும் நந்தன் வீட்டிற்கு வந்து கண்ணனைக் கண்டு ஆச்சர்யமடைந்தனர்.

श्रुत्वा ससंभ्रमं गोप्यः परमानन्दमोहिताः ।<br>
श्रीनन्दभवनं जग्मुः क्वणत्कनककङ्कणाः ॥१६॥

उपहारान् समादाय नन्दसूनोर्दिदृक्षया ।<br>
अन्योन्यमनुधावन्त्यः श्रीनन्दभवनं ययुः ॥१७॥

आन्दोलिकायां दिव्यायां शयानं नन्दनन्दनम् ।<br>
सौन्दर्यसारसर्वस्वं ददृशुः परया मुदा ॥१८॥

शङ्खचक्रादिकं चिह्नं विलोक्य पदपद्मयोः ।<br>
लक्षणज्ञा वयोवृद्धा लोकनाथममुं विदुः ॥१९॥

रक्षां चक्रुर्नन्दसूनोः पामरा गोपिकास्तथा ।<br>
नारायणं प्रार्थयन्त्यः क्षेमायैव शिशोरपि ॥२०॥

16-20. பெருமகிழ்ச்சியடைந்த கோபிகைகள் கையில் வளைகுலுங்க பரபரப்புடன் நந்தன் வீட்டிற்கு வந்து கண்ணனைக் காண ஆசைகொண்டு கையில் பல மங்கள திரவ்யங்களை எடுத்துக்கொண்டு ஒருவருக்கொருவர் கூப்பிட்டுக்கொண்டு நந்தன் வீட்டிற்கு வந்தனர். தொட்டிலில் படுத்திருக்கும் அழகிற்கு இருப்பிடமான கண்ணனைக் கண்டு ஆனந்தம் கொண்டனர். அவனது திருவடிகளில் சங்குசக்ர ரேகைகளைக் கண்டு இவன் லோகநாதன் என்று பெரியோர்கள்

அறிந்து கொண்டனர். ஒன்றுமறியாத கோபிமார்கள் குழந்தை க்ஷேமமாக இருக்கவேண்டுமென்று நாராயணனை வேண்டி ரக்ஷை கட்டினர்.

उच्चैर्जगुर्विष्णुभक्ता हरिनामानि सुस्वरम् ।
मङ्गलाय च पुत्रस्य तथैवात्मसुखाय च ॥२१॥

ग्रहाणां गतिमालोच्य दैवज्ञो द्विजसत्तमः ।
अप्रमेयप्रभावोऽयमिति नन्दमुवाच ह ॥२२॥

पण्डितेभ्यश्च सर्वेभ्यः साधुभ्यश्च महामनाः ।
गोपराजो ददौ तेभ्यो धनमिष्टमयाचितम् ॥२३॥

गोपाला गोपिकाश्चापि परमानन्दसंयुताः ।
वीथ्यां वीथ्यां मदोन्मत्ता नृत्यञ्चक्रुः कुतूहलात् ॥२४॥

हरिद्राचूर्णसंयुक्तं जलमादाय सत्वरम् ।
धावन्तमनुधावन्तः सिञ्चन्ति प्रेमपूर्वकम् ॥२५॥

21-25. விஷ்ணுபக்தர்கள் ஹரிகீர்த்தனம் செய்தனர். ஜோதிடர்கள் ஜாதகம் எழுதிப் பார்த்து 'நந்தகோப! உன் மகன் அளவுகடந்த மஹிமை உடையவன்.' என்று சொன்னார்கள். உதாரகுணமுடைய நந்தன் ஸாதுக்களுக்கும், பண்டிதர்களுக்கும் அளவுகடந்த ஸம்மானம் வழங்கினான். ஆயர்கள், ஆய்ச்சிமார்களுடன் வீதிகள்தோறும் ஆடிப்பாடிக்களித்தனர். மஞ்சள்நீர் விளையாட்டு நடத்தினர்.

नवनीतं दधिक्षीरमादाय च परस्परम् ।
आसिञ्चन्तो विलिम्पन्तो ननृतुर्व्रजवासिनः ॥२६॥

केचिद्धावन्ति सानन्दं निपतन्ति हसन्ति च ।

विलुठन्ति च नृत्यन्ति गर्जन्ति प्रलपन्ति च ॥२७॥

आस्फोटयन्ति हृष्यन्ति ताडयन्ति निपीड्य च ।
श्लिष्यन्ति प्रवदन्त्येव प्रणमन्ति परस्परम् ॥२८॥

एवं सर्वेपि गोपालाः प्रमोदपरमाकुलाः ।
उन्मत्ता इव दृश्यन्ते श्रीकृष्णजननोत्सवे ॥२९॥

अवतीर्णे जगन्नाथे सज्जनावनकाङ्क्षया ।
किं चित्रमत्र गोपानामेवं प्रेमकुतूहले ॥३०॥

*26-30.* கோகுலவாசிகள்யாவரும் ஒருவர்மேல் ஒருவர் தயிர், பால், வெண்ணையைக் கொட்டிக்கொண்டு ஆடினர். சிலர் ஓடினார்கள், சிலர் விழுந்தார்கள், சிலர் சிரித்தார்கள், சிலர் புரண்டார்கள், சிலர் ஆடினார்கள், சிலர் கர்ஜனை செய்தார்கள், சிலர் புலம்பினார்கள், சிலர் தோள்தட்டிக் கொண்டார்கள். சிலர் சிலரைப்பிடித்து அடித்தனர். சிலர் சிலரைக் கட்டிக்கொண்டு பேசினர். ஒருவருக்கொருவர் வணங்கினர். இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ண ஜனனோத்ஸவத்தில் ஆயர்யாவரும் பித்தர்போல் காணப்பட்டனர். ஸாதுக்களை ரக்ஷிக்கவேண்டி ஜகந்நாதன் அவதரித்திருக்கையில் ஆயர்களுக்கு இத்தகைய குதூஹலம் ஏற்பட்டதில் ஆச்சர்ய மென்ன!

अहो धन्यं गोकुलञ्च धन्यं श्रीनन्दमन्दिरम् ।
धन्या गोपालकाः सर्वे धन्यं श्रीयमुनावनम् ॥३१॥

आगते गोकुलं धाम श्रीनाथे भक्तवत्सले ।
सर्वमङ्गलसंयुक्ता बभूवुर्व्रजवासिनः ॥३२॥

*31-32.* கோகுலம் பாக்யம் செய்தது. நந்தகோபன் வீடு பாக்யம் செய்தது. ப்ருந்தாவனமும் பாக்யம் செய்தது. ஆயர்கள்யாவரும் பாக்யவான்களே. பக்தவத்ஸலனான ஸ்ரீநாதன் கோகுலத்திற்கு

20.

வரவே கோகுலவாஸிகள் யாவரும் ஸர்வமங்களத்தையும் அடைந்தனர்.

इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये श्रीगोविन्दकाण्डे नन्दोत्सवो नाम पञ्चमोऽध्यायः॥५॥

**இவ்வாறு ஸ்ரீப்ருந்தாவனமாஹாத்மியத்தில் கோவிந்தகாண்டத்தில் ஐந்தாம் அத்யாயம் முற்றும்.**

## अथ षष्ठोऽध्यायः

## ஆறாவது அத்யாயம்.

**भागवता ऊचुः**

कृष्णस्य श्रोतुमिच्छामो मधुरं बालचेष्टितम् ।
व्यर्थप्रलापैर्लोकेऽस्मिन् किमन्यैर्देशिकोत्तम ॥१॥

न कामयामहे स्वर्गं पारमेष्ठ्यं परं पदम् ।
श्रीकृष्णलीलाश्रवणं भवेज्जन्मनि जन्मनि ॥२॥

**பாகவதர்கள்**

*1-2. குருநாதரே! மதுரமான கண்ணனுடைய பாலலீலைகளைக் கேட்க விரும்புகிறோம். இவ்வுலகில் மற்ற வீண் பேச்சுக்களால் என்ன பயன்? ஸ்வர்கத்தையோ, ப்ரும்மபட்டத்தையோ வைகுண்டத்தையோகூட நாங்கள் விரும்பமாட்டோம். ஒவ்வொரு பிறவியிலும் க்ருஷ்ணலீலையைக் கேட்கும் பாக்யமே கிடைக்கட்டும்.*

**श्रीसद्गुरुरुवाच**

श्यामसुन्दरमालोक्य सर्वे गोकुलवासिनः ।
परमानन्दसंमुग्धास्तस्मिन् प्रेमैव चक्रिरे ॥३॥

सन्ततं लालयन्तस्तं बालगोपालमच्युतम् ।
कृतकृत्या बभूवुस्ते गृहकृत्यं न सस्मरुः ॥४॥

मूर्ध्न्युपाघ्राय तं बालं समालिङ्ग्य पुनः पुनः ।
न प्राप तृप्तिलेशञ्च महाभागो व्रजाधिपः ॥५॥

यशोदा रोहिणी चैवमलङ्कृत्य मुहुर्मुहुः ।
लालयन्त्यौ सवात्सल्यं प्रापतुः परमां मुदम् ॥६॥

क्षीरगन्धेन संयुक्तमाघ्राय वदनं हरेः ।
परिरभ्य प्रचुम्बन्ती हृष्टाऽऽसीन्नन्दभामिनी ॥७॥

क्वचिद्रुदन् क्वचित्क्रीडन् स्वपन्नेव क्वचिद्धसन् ।
विविधैर्बालचापल्यैः कृष्णः पित्रोः सुखं ददौ ॥८॥

दीपं वा दर्पणं वापि रत्नं वा भूषणानि वा ।
विलोक्य नन्दबालोऽयमभवद्विस्मितेक्षणः ॥९॥

मातुरङ्के शयानश्च पिबन् स्तन्यं मुहुर्मुहुः ।
क्षीराब्धिं नैव सस्मार शेषतल्पं तथा हरिः ॥१०॥

ஸ்ரீஸத்குரு

*3-10. கண்ணனைக் கண்டு கோகுலவாஸிகள் யாவரும் பரமானந்தம் கொண்டு அவனிடம் அன்பு காட்டினர். பாலகோபாலனான பகவானை எப்பொழுதும் லாலனை செய்து அவர்கள் பிறவிப்பயனைப் பெற்றனர். வீட்டு வேலைகளை மறந்தனர். கண்ணனைக் கட்டிக்கொண்டு பல தடவைகள் உச்சி முகர்ந்தும் பாக்யசாலியான நந்த கோபனுக்கு அலுக்கவே இல்லை. யசோதையும் ரோஹிணியும் வாத்ஸல்யத்துடன் குழந்தையை அடிக்கடி அழகுபடுத்துவதும் லாலனை செய்வதுமாக பேரானந்தம் பெற்றனர். யசோதை பால்மணம் வீசும் கண்ணனின் முகத்தை முகர்ந்து முத்தம் தந்து மகிழ்ந்திருந்தாள். ஒருகால் அழுதுகொண்டும், ஒருகால் விளையாடிக் கொண்டும், ஒருகால் தூங்கும்பொழுதே சிரித்துக்*

கொண்டும் பலவிதமான குறும்புகளால் கண்ணன் பெற்றோர்களுக்கு இன்பம் தந்தான். தீபத்தையோ, கண்ணாடியையோ, ரத்னத்தையோ, பூஷணங்களையோ கண்டு கண்ணன் ஆச்சர்யமாகப் பார்ப்பான். பால் குடித்துக் கொண்டே அன்னை யசோதையின் மடியில் படுத்திருக்கும் கண்ணன் பாற்கடலையும் சேஷசயனத்தையும் மறந்துவிட்டான்.

नन्दपत्नी यशोदा सा महाभाग्यवती बत ।
या हरिं सर्वलोकेशं पुत्रभावेन पश्यति ॥११॥

एकदा सर्वबालघ्नी पूतना नाम राक्षसी ।
कंसेन प्रेरिता गोष्ठं मन्दमन्दमवाप ह ॥१२॥

अपोह्यात्मानमेषापि सर्वलोकभयानकम् ।
अगमद्गोकुलं हन्त दारुणा कामरूपिणी ॥१३॥

तां दृष्ट्वा व्रजसुन्दर्यः परमाश्चर्यसंयुताः ।
मेनिरे भार्गवीं साक्षाद्द्रष्टुं पतिमिहागताम् ॥१४॥

राक्षसी निर्घृणा सापि लब्ध्वा नन्दस्य मन्दिरम् ।
तत्रावलोकयामास नन्दनन्दनमीश्वरम् ॥१५॥

*11-15.* பாக்யவதியான யசோதை, லோகநாதனான பகவானையே புத்ரனாகப் பெற்றாள். ஆஹா! ஒருநாள் குழந்தைகளைக் கொல்லும் அரக்கியான பூதனை, கம்ஸனால் தூண்டப்பட்டு மெள்ள மெள்ள கோகுலம் வந்தாள். பயங்கரமான தனது உருவத்தை மறைத்துக் கொண்டு அழகான உருவம் தாங்கி கோகுலம் வந்தாள். அவளைக்கண்டு ஆச்சர்யமடைந்த கோபிமார்கள், தனது கணவனைப் பார்க்க வந்த மஹாலக்ஷ்மியாகவே அவளை நினைத்தனர். ஈவிரக்கமில்லாத அந்த அரக்கி நந்தன்மனையில் புகுந்து கண்ணனைக் கண்டாள்.

सुन्दरं हैमहिन्दोले नानारत्नविभूषिते ।
मृदुलास्तरणे दिव्ये सोपधाने सुखावहे ॥१६॥

सुखसुप्तं जगन्नाथं सुन्दरं नन्दबालकम् ।
लोकानां रक्षणायैव जागरूकं सदैव हि ॥१७॥

नीलाम्बुजश्यामलाङ्गं कोमलाङ्घ्रिसरोरुहम् ।
कुटिलालकसङ्कीर्णनिटिलालिप्तकुङ्कुमम् ॥१८॥

मञ्जीरमण्डितपदं किङ्किणीकङ्कणान्वितम् ।
क्षुद्रघण्टावलिव्याप्तकटिं देवं दिगम्बरम् ॥१९॥

पुण्डरीकेक्षणं कृष्णं पुण्डरीकनखाञ्चितम् ।
रमणीयमुखाम्भोजं रत्नमालाविभूषितम् ॥२०॥

विलोक्य पूतना सद्यो हस्तेनादाय माधवम् ।
लालायन्तीव सप्रेम विषलिप्तं स्तनं ददौ ॥२१॥

16-21. தங்கத்தொட்டிலில் தலையணையுடன்கூடிய, ம்ருதுவான மெத்தையில் படுத்திருப்பவனும், அழகானவனும், உலகங்களை ரக்ஷிக்கவேண்டி தூங்காமல் தூங்குபவனும், நந்தகுமாரனும், நீலோத்பலம்போல் நீலமான திருமேனிஉடையவனும், தாமரைபோன்ற அழகிய திருவடிகள் உடையவனும், சுருண்ட கேசங்கள் சூழ்ந்த நெற்றியில் திலகம் அணிந்தவனும், சலங்கை, கிங்கிணி, கங்கணம், சிறுமணிகள் இவைகள் அணிந்தவனும், இடுப்பில் துணிஇல்லாதவனும், தாமரைக்கண்ணனும், புலிநகம் அணிந்தவனும், ரத்னமாலை அணிந்தவனும், அழகிய முகமுடையவனுமாகிய கண்ணனைக் கண்டு பூதனை கையில் எடுத்துக்கொண்டு லாலனை செய்வதுபோல் நடித்து விஷம் தடவிய முலைப்பாலைத் தந்தாள்.

मोहिता नन्दपत्नी च सौम्यरूपप्रदर्शनात् ।
न वेद पूतनामेतां पुत्रनाशार्थमागताम् ॥२२॥

सर्वज्ञो भगवान् कृष्णो विज्ञाय शिशुनाशिनीम् ।
पपौ कोपेन संयुक्तस्तस्याः प्राणान् स्मिताननः ॥२३॥

अजानन्ती तत्प्रभावं दत्वा स्तन्यं विषान्वितम् ।
स्वयमेव हि सा प्राप दुःसहं प्राणसङ्कटम् ॥२४॥

मुञ्च मुञ्चेति सा कृष्णं निपीड्य च पुनः पुनः ।
प्राणान् मुमोच सहसा निपपात तथा भुवि ॥२५॥

त्यक्तप्राणां महाघोरां स्वीयरूपेण संस्थिताम् ।
विलोक्य कृष्णमाता च भीता चुक्रोश संभ्रमात् ॥२६॥

*22-26. பூதனையின் அழகிய உருவத்தைக் கண்டு மயங்கிய யசோதை அவளைக் கொலைகாரி என்று புரிந்து கொள்ளவில்லை. எல்லாம் அறிந்தகொண்ட கண்ணனோ அவளைப் புரிந்துகொண்டு, கோபமடைந்து, அவளுடைய உயிரைக் குடித்து விட்டான். கண்ணனின் மஹிமையை அறியாத பூதனா அவனைக் கொல்லவேண்டி வந்து, தானே ஆபத்து அடைந்தாள். என்னை விட்டு விடு, விட்டுவிடு என்று சொல்லிக் கொண்டே தானே உயிரை விட்டுவிட்டாள். உயிர்போனதும் கோரமான சுயரூபத்துடன் இருக்கும் பூதனையைக் கண்டு யசோதை பயம் அடைந்து கூச்சலிட்டாள்.*

श्रुत्वा गोपालकाः सर्वे गत्वा नन्दगृहं महत् ।
अपश्यन् बालकञ्चापि निहतां पूतनामपि ॥२७॥

तावन्महात्मा नन्दोपि त्वरया गृहमाययौ ।
निहतां पूतनां दृष्ट्वा परमं प्राप विस्मयम् ॥२८॥

विधाय प्रेतसंस्कारं स्नात्वा च यमुनाजले ।
आजग्मुर्भवनं सर्वे निर्भया व्रजवासिनः ॥२९॥

रक्षां चक्रुर्गोपिकाश्च गोमलेन शिशोस्तथा ।
हरिनामानि गायन्त्यो वात्सल्यरसमोहिताः ॥३०॥

निर्व्याजकृपया विष्णोर्वैकुण्ठं प्राप पूतना ।
तीक्ष्णभावेन युक्तापि मातृवेषेण संस्थिता ॥३१॥

को नु प्रयासो लोकेऽस्मिन्नन्दनन्दनपूजने ।
तथापि न भजन्ते तं दुर्भगा ह्यात्मवञ्चकाः ॥३२॥

*27-32. ஆயர்கள் யாவரும் கூச்சலைக் கேட்டு நந்தன் வீட்டிற்கு வந்து செத்துக்கிடக்கும் பூதனையையும் குழந்தையான கண்ணனையும் கண்டனர். நந்தனும் இதைக்கண்டு ஆச்சர்யமடைந்தான். பூதனையை அடக்கம் செய்துவிட்டு, யமுனையில் மூழ்கிவிட்டு, ஆயர்கள் யாவரும் நிம்மதியாக வீடு வந்து சேர்ந்தனர். கோபிகைகள் ஹரிநாம கீர்த்தனம் செய்துகொண்டு கோமயத்தினால் கண்ணனுக்கு ரக்ஷை செய்தனர். தாய் வேஷம்கொண்ட கொடிய பூதனையும் கண்ணனுடைய காரணமற்ற கருணையால் முக்தி பெற்றாள் என்றால், அத்தகைய கண்ணனை பூஜிப்பதில் ப்ரயாஸை என்ன? ஆனால் துர்பாக்யவான்கள் க்ருஷ்ணபக்தி செய்யாமல் ஏமாந்து போகிறார்கள்.*

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये श्रीगोविन्दकाण्डे पूतनामोक्षदानं नाम षष्ठोऽध्यायः॥६॥*

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிமஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவனமாஹாத்மியத்தில் கோவிந்தகாண்டத்தில் ஆறாம் அத்யாயம் முற்றும்.**

# अथ सप्तमोऽध्यायः

## ஏழாவது அத்யாயம்

### श्रीसद्गुरुरुवाच

एवं सनातनो विष्णुर्गूढः कपटमानुषः ।
गोकुले निवसन्नित्यं बाललीलां चकार सः ॥१॥

आगते जन्मनक्षत्रे मास्यस्यैवात्मनः शिशोः ।
आयुष्यहोमं कृतवान्नन्दो विप्रोत्तमैः सह ॥२॥

औत्थानिकं कर्म कृत्वा पुत्रस्याभीरनायकः ।
लालयन् प्रेमसंयुक्तः पूर्णकामो बभूव सः ॥३॥

ஸ்ரீஸத்குரு

*1-3. இவ்வாறு அழிவற்ற பரமாத்மாவான விஷ்ணு கபடமாய் மனிதவடிவம் தாங்கி கோகுலத்தில் இருந்துகொண்டு பாலலீலைகளைச் செய்து வந்தார். மாதந்தோறும் வரும் ஜன்மநக்ஷத்திரத்தில் நந்தகோபன், வேதியர்களை வரவழைத்து ஆயுஷ்யஹோமம் நடத்திவந்தான். 'ஔத்தானிகம்' என்கிற க்ரியையும் நடத்தி மகிழ்ந்தான். (ஔத்தானிகம் என்றால் ஒரு நல்லநாளில் குழந்தையை வீட்டிலிருந்து வெளியே எடுத்துச் செல்லுதல்).*

यशोदा च महाभागा स्वसखीभिः समन्विता ।
स्नापयामास गोविन्दं परमानन्दपूरिता ॥४॥

जान्वोरुपरि संस्थाप्य जगदीश्वरमर्भकम् ।
अभ्यञ्जनञ्चकारैषा सह गोपीजनैस्तदा ॥५॥

यत्पादसलिलं पुण्यं रुद्रेण शिरसा धृतम् ।
यत्पादकमलं नित्यं ब्रह्मा पूजयति प्रभुः ॥६॥

यत्पादरेणुरद्यापि श्रुतिवाक्यैर्विमृग्यते ।
यत्पादं शरणं लब्ध्वा सन्तो जीवन्ति निर्भयाः ॥७॥

स एव भगवान् कृष्णः प्रभावं विस्मरन् स्वयम् ।
यशोदायाः पदाम्भोजे विन्यस्तो नन्दतीश्वरः ॥८॥

एवं सङ्कीर्तयन्तस्ते देवगन्धर्वचारणाः ।
आनन्दबाष्पं मुमुचुर्हरिं दृष्ट्वा पुनः पुनः ॥९॥

*4-9. பாக்யவதியான யசோதை தனது தோழிகளுடன்கூடி கண்ணனை நீராட்டினாள். லோகநாதனான குழந்தையை முழங்காலில் உட்காரவைத்துக்கொண்டு எண்ணைய் தேய்த்து விட்டாள். எந்த பகவானின் பாததீர்த்தமான கங்கை ப்ரும்மா, ருத்ரன் முதலியவர்களால் பூஜிக்கப் படுகிறதோ, எந்த பகவானின் பாததூளி வேதங்களால் தேடப்படுகிறதோ, எந்த பகவானின் பாதத்தை சரணமடைந்து ஸாதுக்கள் பயமின்றி ஜீவிக்கின்றனரோ அதே பகவானாகிய க்ருஷ்ணன் தனது மஹிமையை மறந்து யசோதையின் முழங்காலில் உட்கார்ந்து ஆனந்தப்படுகிறானே! ஆஹா! என்று தேவர்களும், கந்தர்வர்களும், சாரணர்களும் பாடிக்கொண்டே கண்ணனைப் பார்த்து ஆனந்தக் கண்ணீர் விட்டனர்.*

उष्णोदकेन सा माता चूर्णैश्च विविधैरपि ।
गायन्ती लालयन्ती तमभ्यषिञ्चन्निजात्मजम् ॥१०॥

संमृज्य शुभ्रवस्त्रेण मूर्ध्न्युपाघ्राय केशवम् ।
धूपमाघ्रापयामास जलदोषनिवृत्तये ॥११॥

विलिलेख ललाटेपि कस्तूरीतिलकं मुदा ।
अङ्गरागानुलेपाभ्यां चक्रेऽलङ्कारमद्भुतम् ॥१२॥

सञ्जातनिद्रं तं बालं कर्तव्ये विप्रभोजने ।
अधस्ताच्छकटस्यैव मन्दमन्दमशीशयत् ॥१३॥

गृहकृत्यानि चक्रे सा भोजयामास वै द्विजान् ।
कृष्णोपि सर्वलोकेशो मिथ्यास्वापो बभूव ह ॥१४॥

तदाऽऽजगाम तत्रापि शकटो नाम दानवः ।
प्राविशच्छकटञ्चापि कृष्णप्राणजिहीर्षया ॥१५॥

विज्ञाय भगवान् कृष्णः शकटासुरमागतम् ।
स्तनार्थी प्ररुदन्नुच्चैः पादपद्ममुदक्षिपत् ॥१६॥

*10-16.* அன்னை யசோதை பாடிக்கொண்டே, கொஞ்சிக் கொண்டே ஸ்னான சூர்ணங்களால் தேய்த்து விட்டு வென்னீரால் குழந்தையைக் குளிப்பாட்டினாள். உலர்ந்த வஸ்திரத்தினால் உடம்பு துடைத்துவிட்டு உச்சி முகர்ந்து, ஜலதோஷம் நீங்குவதற்காக தூபம் போட்டாள். நெற்றியில் திலகம் இட்டாள். பௌடர் பூசி, மை தீட்டி அழகு செய்தாள். அதற்குள் கண்ணனுக்கு தூக்கம் வந்து விட்டது. வந்திருக்கும் ப்ராம்மணர்களுக்கு விருந்து செய்விக்க வேண்டியிருந்ததால் கண்ணனை ஒரு வண்டியின் அடியில் தூங்கச்செய்தாள். அந்தணர்களைப் பூஜித்துவிட்டு வேலைகளை செய்து கொண்டிருந்தாள். எல்லா உலகங்களுக்கும் இறைவனான கண்ணனும் தூங்குவதுபோல் பாசாங்கு செய்து கொண்டிருந்தான்.

प्रवालमृदुलेनैव चरणेन प्रताडितः ।
पपात भिन्नः शकटः सद्य एव जगत्पतेः ॥१७॥

भक्तानां मृदुचित्तानां मृदुर्यत्पादपल्लवः ।
स एव तीक्ष्णचित्तानां दुष्टानां वज्रसन्निभः ॥१८॥

पतिते शकटे तत्र प्रारुदन्मुग्धवद्धरिः ।
तच्छ्रुत्वा त्वरया सर्वे कृष्णस्यान्तिकमाययुः ॥१९॥

भग्नञ्च शकटं दृष्ट्वा रुदन्तञ्चापि माधवम् ।
परमं विस्मयं प्रापुः सान्त्वयामासुरच्युतम् ॥२०॥

17-20. அப்பொழுது சகடாசுரன் என்கிற துஷ்டன் கண்ணனைக் கொல்லவேண்டி வண்டி வடிவத்தில் தோன்றினான்.அதையறிந்த கண்ணன் பால் குடிப்பதற்காக அழுவதுபோல் பாசாங்குசெய்துகொண்டே தனது திருவடிகளால் உதைத்தான். கொழுந்துபோன்ற குஞ்சு பாதத்தால் உதைக்கப்பட்ட சகடாசுரன் விழுந்து நொறுங்கிப் போனான். எந்தத் திருவடி பக்தர்களுக்கு ம்ருதுவானதோ அதுவே துஷ்டர்களுக்கு வஜ்ரம் போன்றது. இவ்வாறு வண்டி நொறுங்கிப்போனதும் ஒன்றும் அறியாதவன்போல் கண்ணன் அழுதான். அதைக்கேட்டு யாவரும் ஓடி வந்தனர். அழுகின்ற குழந்தையையும், வண்டி உடைந்து கிடப்பதையும் கண்டு ஆச்சர்யம் கொண்டனர். கண்ணனை எடுத்து ஸமாதானம் செய்தனர்.

अहो बालस्य ते नन्द विपदः सन्ति कोटिशः ।
तथापि शुभमाप्नोति महद्भिः कृतमङ्गलः ॥२१॥

इति ब्रुवाणान् गोपालान् विलोक्य प्रीतिपूर्वकम् ।
प्रोवाच सत्यमेवेति धार्मिको गोकुलेश्वरः ॥२२॥

बालमादाय सानन्दं यशोदा पुत्रवत्सला ।
पाययामास च स्तन्यं प्रेमपूर्वं व्रजेश्वरी ॥२३॥

निम्बपत्रं धारयन्ती शिरस्यैवात्मनः शिशोः ।
अञ्जनेनापि सा माता रक्षाञ्चक्रे हितैषिणी ॥२४॥

यस्यैव नामस्मरणं सर्वमङ्गलदायकम् ।
शिशुबुद्ध्या हि तस्यैषा रक्षाञ्चक्रे श्रियःपतेः ॥२५॥

21-25. 'ஓ நந்தா! உனது மகனுக்கு விபத்துகள் வருகின்றன. ஆயினும் மஹான்களுடைய ஆசியால் ஸுகமாயிருக்கிறான்' என்று ஆயர்கள் சொன்னார்கள். நந்தகோபனும் அது உண்மையே என்று ஒப்புக்கொண்டான். யசோதை குழந்தையை எடுத்து, பால் கொடுத்து லாலனை செய்தாள். தலையில் வேப்பிலையைச் சொறுகி, நெற்றியில் கரியையிட்டு ரக்ஷைசெய்தாள்.எந்த ஸ்ரீநாதனுடைய நாமமே ஸர்வ மங்களத்தையும் தரக்கூடியதோ அவனை குழந்தையாக நினைத்து யசோதை ரக்ஷை கட்டினாள்.

भूषणैर्भूषयामास बालं गोकुलभूषणम् ।
सखीभिः प्रेमरूपाभिः सहिता नन्दभामिनी ॥२६॥

केशप्रसाधनञ्चक्रे मल्लिकामुकुलैः सह ।
इतस्ततः सञ्चरन्तं सान्त्वयन्ती पुनः पुनः ॥२७॥

भोजयामास गोविन्दं वदन्तीं विविधां कथाम् ।
अतीव चपलं बालं दर्शयन्त्यपि वायसान् ॥२८॥

26-28. கோகுலத்திற்கு பூஷணம்போன்ற கண்ணனை பூஷணங்களால் அலங்கரித்தாள். தலைவாரி கொண்டை போட்டுவிட்டு, மல்லிகைப்பூ சூட்டிவிட்டாள். அதற்குள் இங்குமங்கும் ஓடுகின்ற கண்ணனை ஸமாதானமும் செய்து கொண்டாள். மிகவும் விஷமக்காரனான கண்ணனுக்குப் பல கதைகள் சொல்லி காக்கா காட்டிக்கொண்டு, மம்மம் ஊட்டினாள்.

रामेण साकं रिङ्गन्तमङ्गणेषु प्रियं सुतम् ।
विलोक्य मातरौ कृष्णं गृहकर्म न चक्रतुः ॥२९॥

एवं हि गोपिकाः सर्वा विलोक्य श्यामसुन्दरम् ।
गृहं न जग्मुर्वृद्धाभिः श्वश्रूभिस्तर्जिता अपि ॥३०॥

एवं विमोहयन् विश्वं गोकुलं गोकुलेश्वरः ।
चिक्रीड सह रामेण यशोदानन्दनो हरिः ॥३१॥

कृष्णस्य बालचापल्यं सन्ततं कीर्तयन्त्यपि ।
जिह्वा नेच्छति विश्रान्तिं महाभागवतोत्तमाः ॥३२॥

*29-32.* பலராமனுடன் இங்குமங்கும் தவழ்ந்தோடும் கண்ணனைக் கண்டு ரோகிணியும் யசோதையும் வீட்டு வேலைகளை மறந்தனர். இவ்வாறே கோபிமார்யாவரும் கண்ணனைக் கண்டு வீட்டை மறந்தனர். மாமியார் மிரட்டியும், சொன்னதைக் கேட்பதில்லை. இவ்வாறு உலகையே மயக்கும் கண்ணன் கோகுலத்தை மயக்கிக்கொண்டு விளையாடினான். ஓ பாகவதோத்தமர்களே! கண்ணனின் பாலலீலைகளை ஓயாமல் சொன்னாலும் அலுக்கவில்லை.

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये श्रीगोविन्दकाण्डे शकटासुरभञ्जनं नाम सप्तमोऽध्यायः॥७॥*

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிமஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவனமாஹாத்மியத்தில் கோவிந்தகாண்டத்தில் ஏழாவது அத்யாயம் முற்றும்.**

## अथाष्टमोऽध्यायः

## எட்டாவது அத்யாயம்.

### भागवता ऊचुः

स्वानुभूत्यैव संवेद्ये माधुर्ये देवकीशिशोः ।
अन्यैः प्रमाणैः किं नाथ नैयायिकनिषेवितैः ॥१॥

भवान् वक्ता स्वयं कृष्णः श्रोतारो वयमेव हि ।
श्रोतव्यं कृष्णचरितं किमन्यत्सुखमुत्तमम् ॥२॥

एवमेव भवेत्सौख्यमस्माकं जन्मजन्मनि ।
तवैव चरणच्छायामाश्रित्य सुखजीविनाम् ॥३॥

स्वामिन् सद्गुरुराजेन्द्र श्रुत्वा कृष्णकथामिमाम् ।
भाग्यवन्तो वयं नूनं भवामः पूजिताः सुरैः ॥४॥

**பாகவதர்கள்**

*1-4.க்ருஷ்ணலீலையின் இனிமையை அனுபவத்தினாலேயே அறிந்துகொள்ள வேண்டியது. வேறு ப்ரமாணம் எதற்கு? க்ருஷ்ணகதையைச் சொல்லும் தாங்கள் ஸாக்ஷாத் க்ருஷ்ண ஸ்வரூபமே. நாங்கள் கதை கேட்பவர்கள். க்ருஷ்ணசரித்ரம் கேட்கத் தக்கது. இதைவிட சிறந்த ஸுகம் வேறு என்ன வேண்டும்? தங்கள் திருவடிநிழலை அண்டி ஸுகமாய் வாழும் எங்களுக்கு ஒவ்வொரு பிறவியிலும் இதுவே வேண்டும். ஸ்வாமி! ஸத்குருநாதரே! பாக்யவான்களாகிய நாங்கள் க்ருஷ்ண கதையைக் கேட்டு தேவர்களாலும் பூஜிக்கப்பட்டவர்களாய் ஆகிறோம்.*

**श्रीसद्गुरुरुवाच**

शुक्लपक्षे चन्द्र इव ववृधे श्यामसुन्दरः ।
कुर्वन्नानाविधां लीलां नयनानन्दवर्धनः ॥५॥

आरोप्य तं कटिप्रान्ते गोपकन्याः सकौतुकम् ।
गृहे गृहे सञ्चरन्ति सन्ततं केलितत्पराः ॥६॥

क्व वक्त्रं क्व च नेत्रं ते क्व नासेति व्रजार्भकैः ।
पृष्टो नन्दात्मजश्चक्रे करन्यासं यथाक्रमम् ॥७॥

सर्वज्ञस्यैव कृष्णस्य सानन्दं गोपबालकाः ।
एवं बहुविधान् पाठान् शिक्षयन्ति पुनः पुनः ॥८॥

क्वचित्किरति धान्यानि क्वचित्स्पृशति पावकम् ।
क्वचिद्भिनत्ति भाण्डञ्च क्वचिद्धसति रोदिति ॥९॥

क्वचिज्जले विहरति क्वचिद्वत्सान् प्रकर्षति ।
क्वचिद्रिङ्गति वीथीषु मृदं भक्षयति क्वचित् ॥१०॥

ஸ்ரீஸத்குரு

*5-10. பலவிதமான லீலைகளைச் செய்துகொண்டு கண்ணுக்கினிய நம் கண்ணன் வளர்பிறைச் சந்த்ரன்போல் வளர்ந்து வந்தான். ஆயர்சிறுமிகள் அவனை இடுப்பில் தூக்கி வைத்துக்கொண்டு விளையாட்டு காட்டிக்கொண்டே வீடு வீடாக அலைவார்கள். கண்ணா! வாய் எங்கே? மூக்கு எது? என்று குழந்தைகளால் கேட்கப்பட்ட கண்ணன் முறைப்படி ஆங்காங்கு கைவைத்துக் காட்டுவான். எல்லாம் அறிந்த இறைவனுக்கு ஆயர்சிறுமிகள் இவ்வாறு பாடம் கற்பிப்பார் கள். தான்யங்களை இறைப்பான். நெருப்பைத் தொடச் செல்வான். பாண்டங்களை உடைப்பான். ஒருகால் அழுவான். உடனே சிரிப்பான். தண்ணீரில் விளையாடுவான். கன்றுகளை இழுப்பான். வீதிகளில் தவழுவான். மண்ணைத் தின்பான்.*

एवं बहुविधं रम्यं गोकुलानन्दवर्धनम् ।
कुर्वन्तं बालचापल्यं यशोदा तमलालयत् ॥११॥

अङ्के निधाय स्वसुतमाघ्राय च शिरो हरेः ।
आनन्दं प्राप सा माता परिरभ्य पुनः पुनः ॥१२॥

तदा विज्ञाय भगवान् तृणावर्तकमागतम् ।
तदङ्कादवरुह्याशु चिक्रीडैवाविदूरतः ॥१३॥

चक्रवातस्वरूपेण तृणावर्तो महासुरः ।
सद्यो जहार गोपालं तत्र क्रीडन्तमर्भकम् ॥१४॥

अपश्यन्ती प्रियं पुत्रं यशोदा पुत्रवत्सला ।
इतस्ततोऽनुधावन्ती चुक्रोश कुररीव सा ॥१५॥

*11-15.* இவ்வாறு குறும்புகள் செய்யும் கண்ணனை யசோதை லாலனை செய்வாள். பிள்ளையை மடியில் வைத்து, கட்டி முத்தம் தந்து, உச்சிமுகர்ந்து ஆனந்தப்பட்டாள்.அப்பொழுது பகவான் த்ருணாவர்த்தன் என்கிற அசுரன் வந்திருப்பதை அறிந்து அன்னையின் மடியிலிருந்து இறங்கி கொஞ்ச தூரத்தில் விளையாடிக் கொண்டிருந்தான்.சுழல்காற்று வடிவத்தில் வந்த அசுரனோ விளையாடும் சின்னக் கண்ணனைக் கொண்டுபோனான். யசோதை பிள்ளையைக் காணாமல் இங்குமங்கும் ஓடித்தேடி க்ரௌஞ்சபக்ஷிபோல் கூச்சலிட்டு அழுதாள்.

मृगयन्तो मुकुन्दं तं सर्वे गोकुलवासिनः ।
अप्राप्तनन्दबालास्ते प्रापुर्दुःखञ्च संभ्रमम् ॥१६॥

तावद्दैत्यहृतो बालः स्वप्रभावमनुस्मरन् ।
पीडयामास तं कृष्णः कोपेनापि च लीलया ॥१७॥

अन्तरिक्षगतो दैत्यो नाशकद्वोढुमच्युतम् ।
ब्रह्माण्डकोटयः सन्ति रोमकूपेषु यस्य वै ॥१८॥

तमश्मानं मन्यमानः कृष्णमद्भुतचेष्टितम् ।
भूमौ पातयितुं मेने नैव तत्याज तं हरिः ॥१९॥

कण्ठं गृहीत्वा दैत्यस्य पातयित्वा च भूतले ।
मारयामास तं देवः केवलं बाललीलया ॥२०॥

*16-20. ஆயர்கள் யாவரும் கண்ணனைத் தேடிக்காணாமல் வருந்தினர். அதற்குள் கண்ணன் தனது மஹிமையை நினைத்துக்கொண்டு விளையாட்டாக அந்த அசுரனைத் துன்பப்படுத்தினான். கோடிக்கணக்கான ப்ரும்மாண்டங்கள் எந்த பகவானின் மயிர்கால்களில் இருக்கின்றனவோ அந்த க்ருஷ்ணனை அசுரன் தூக்கிச்செல்ல முடியாமல் கல்என்று நினைத்து பூமியில் போட்டுவிட எண்ணினான். கண்ணனோ அவனை விடவில்லை. அசுரனின் கழுத்தைப் பிடித்து பூமியில் தள்ளி பகவான் அவனைக் கொன்றுவிட்டான்.*

अन्यबालकदुःसाध्यमीदृशं कर्म दुष्करम् ।
कृत्वापि प्रारुदत्कृष्णस्तत्र प्राकृतबालवत् ॥२१॥

श्रुत्वा बालध्वनिं गोप्यस्तत्रागत्य ससंभ्रमम् ।
आदाय नन्दसूनुं तं यशोदायै ददुर्मुदा ॥२२॥

विलोक्य भूमौ पतितं निहतञ्चापि दानवम् ।
परमाश्चर्यसंयुक्ता प्रावोचन् विविधाः कथाः ॥२३॥

विपदं विविधामेवं लब्ध्वापि कुलवर्धनः ।
चिरं जीवति विप्राणामाशीर्वादेन केवलम् ॥२४॥

इति मत्वा नन्दगोपः श्रद्धयाहूय वैदिकान् ।
दानं बहुविधञ्चक्रे नित्यं धर्मपरायणः ॥२५॥

*21-25. வேறு குழந்தைகளால் செய்ய முடியாத இத்தகைய லீலையைச் செய்துவிட்டு கண்ணன் ஒன்றுமறியாதவன் போல் அழுதுகொண்டிருந்தான். குழந்தையின் அழுகையைக் கேட்டு அங்கு வந்த கோபிமார்கள் கண்ணனை எடுத்து யசோதை யிடம் தந்தார்கள். பூமியில் விழுந்து செத்துக்கிடக்கும் அசுரனைக் கண்டு ஆச்சர்யமடைந்து பலவிதமாய்ப் பேசிக்கொண்டனர். நம் குலக்கொழுந்தான கண்ணன் பல விபத்துக்களை அடைந்தபோதிலும் அந்தணர்களின் ஆசியால்*

சிரஞ்ஜீவியாய் இருக்கிறான் என்று நினைத்து நந்தகோபர் வைதீகர்களுக்கு தானதர்மம் செய்தார்.

सन्ततं लालयन् पुत्रं ब्रह्मादिसुरदुर्लभम् ।
पुत्रस्पर्शसुखं लब्ध्वा पूर्णकामो बभूव सः ॥२६॥

तात तातेति मधुरञ्चाव्यक्तकलभाषणः ।
भगवान् वक्तुमारेभे जनन्या जनयन् मुदम् ॥२७॥

अव्यक्तं मधुरं वाक्यमाकर्ण्य व्रजबालिकाः ।
लेभिरे परमानन्दं वाचयन्त्यः पुनः पुनः ॥२८॥

त्रिविक्रमोपि भगवान् प्रगृह्णन् मातुरङ्गुलिम् ।
इतस्ततः सञ्चरति क्वणन्नूपुरभूषितः ॥२९॥

अघृष्टजानुगमनं कृष्णमानन्दविग्रहम् ।
विलोक्य गोकुलाधीशः परमानन्दमाप सः ॥३०॥

शङ्खचक्रयवाम्भोजवज्रादिपरिचिन्हितैः ।
चरणैश्चित्रितं ह्येतदबभौ नन्दगृहं परम् ॥३१॥

*26-31.* ப்ரம்மாமுதலிய தேவர்கட்கும் துர்லபமான பகவானையே பிள்ளை எனக்கருதி லாலனை செய்யும் நந்தகோபன் பேரின்பம் பெற்றான். பகவான் மழலை முற்றாத இளஞ்சொல்லால் 'அப்பா! அப்பா!!' என்று கூப்பிடுவதைக் கேட்டு அன்னை யசோதை ஆனந்தம் கொண்டாள். கண்ணனின் மழலைச்சொல்லில் மயங்கிய ஆயர் சிறுமிகள் மேன்மேலும் அவனைப் பேசச்செய்து ஆனந்தப்பட்டனர். ஒருகாலத்தில் உலகைஎல்லாம் அளந்த பகவான் அன்னையின் கையைப் பிடித்துக் கொண்டு காற்சலங்கை கொஞ்ச, இங்குமங்கும் தளர் நடை போடுவான். தத்தித்தத்தி நடக்கும் கண்ணனைக் கண்டு நந்தகோபர் பரமானந்தம் அடைவார்.

அந்த நந்தனின் வீடு சங்கு சக்ரரேகையை உடைய கண்ணனின் அடிச்சுவடுகளால் சித்திரம் எழுதப்பட்டதுபோல் விளங்கிற்று.

इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये श्रीगोविन्दकाण्डे तृण्वर्तमोक्षो नामाष्टमोऽध्यायः॥८॥

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிமஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில் கோவிந்தகாண்டத்தில் எட்டாவது அத்யாயம் முற்றும்.**

# अथ नवमोऽध्यायः

## ஒன்பதாவது அத்யாயம்

*श्रीसद्गुरुरुवाच*

पूर्णे संवत्सरे नन्दः स्वपुत्रस्य व्रजाधिपः ।
इयेष कर्तुं सानन्दं नामकर्म शुभङ्करम् ॥१॥

अकस्मादाजगामापि गर्गाचार्यो महामुनिः ।
पुरोहितो यादवानां सर्वशास्त्रविशारदः ॥२॥

तं दृष्ट्वा गोपराजश्च परमाह्लादसम्युतः ।
बद्धाञ्जलिपुटो नत्वा स्वागतं प्राह सादरम् ॥३॥

ஸ்ரீஸத்குரு

1-3. ஆண்டுநிறைவு வந்ததும் நந்தகோபன் தனது குழந்தைக்கு நாமகரணம் செய்ய விரும்பினான். அன்று எல்லா சாஸ்திரங்களும் அறிந்தவரும் யாதவர்களுக்குப் புரோஹிதருமான கர்கமுனிவர் எதிர்பாராமல் வந்து சேர்ந்தார். அவரைக் கண்ட நந்தகோபர் பெருமகிழ்ச்சியடைந்து கைகுவித்து நல்வரவு சொன்னார்.

*नन्द उवाच*

स्वागतं ते महाभाग नमस्तुभ्यं तपोधन ।
महात्मनां त्वादृशानामिदं तु स्वगृहं किल ॥४॥

यद्गृहं वैष्णवानां तु पादोदकपवित्रितम् ।
तद्गृहं तीर्थरूपं हि वसतां पापनाशनम् ॥५॥

नूनं गृहस्था धन्या हि मादृशा मुनिपुङ्गव ।
यत्स्वधर्ममुपाश्रित्य पूजयामो महात्मनः ॥६॥

यस्मिन् गृहे गृहस्थेन नार्चिता वैष्णवोत्तमाः ।
तद्गृहं नष्टकल्याणं स्मशानवदमङ्गलम् ॥७॥

भाग्योदयेन नूनं हि पुत्रस्यैव ममापि च ।
अकस्मादिह संप्राप्तं तव दर्शनमुत्तमम् ॥८॥

अस्यैव मम पुत्रस्य रौहिणेयस्य च प्रभो ।
नामधेयं विधेहि त्वं सर्वेषां ब्राह्मणो गुरुः। ॥९॥

**நந்தன்**

*4-9. முனிவரே! வணக்கம். உமக்கு நல்வரவு. தங்களைப்போன்ற பெரியோர்களுக்கு இது சொந்த வீடாகும். எந்த வீடு வைஷ்ணவர்களின் பாததீர்த்தத்தால் பாவனம் செய்யப் பட்டிருக்கிறதோ அதில் வசிப்பவர்களுக்கு எல்லா பாபங்களும் விலகும். முனிவரே! உலகத்தில் இருக்கும் நாங்கள் பாக்யசாலிகள். ஏனெனில் ஸாதுக்களை பூஜிக்கின்றோமல்லவா! எந்த வீட்டில் ஸாதுக்கள் பூஜிக்கப்படவில்லையோ அது மயானத்தைப் போல் அசுபமானது. என்னுடையவும், என் குழந்தையினுடையவும் பாக்யத்தினாலேயே தங்கள் தர்சனம் கிடைத்தது. எனது மகனுக்கும் ரோஹிணியின் பிள்ளைக்கும் நாமகரணம் செய்வீராக. அந்தணராகிய தாங்கள் யாவருக்கும் குரு.*

**गर्ग उवाच**

अहं यदूनामाचार्य इति प्रख्यातिमाप्तवान् ।
यदि कुर्यां नामकर्म कंसः संशयमाप्नुयात् ॥१०॥

तस्माद्रहसि संस्कारं करिष्ये गोकुलेश्वर ।
पुत्रस्य ते यशोदाया रोहिण्याश्च महामते ॥११॥

**கர்கமுனிவர்**

*10-11.* நந்தா! நான் யாதவர்களுக்கு ஆசார்யன். உனது மகனுக்கு நாமகரணம் செய்வேனானால் கம்ஸன் ஸந்தேஹமடைவான். எனவே யசோதைபிள்ளைக்கும், ரோஹிணிபிள்ளைக்கும் ரஹஸ்யமாக பெயர் வைப்பேன்.

**श्रीसद्गुरुरुवाच**

इत्युक्तो गोकुलेन्द्रश्च पुत्रमानीय माधवम् ।
विविक्तदेशमासाद्य गर्गाचार्यं ननाम च ॥१२॥

दिव्यज्ञानोपपन्नश्च यादवानां पुरोहितः ।
विज्ञाय परमात्मानमपश्यन्नन्दबालकम् ॥१३॥

तत्त्वार्थेनैव वाक्येन प्रोवाच मुनिपुङ्गवः ।
तत्प्रभावमनन्तञ्च श्रुतिवाचामगोचरम् ॥१४॥

**ஸ்ரீஸத்குரு**

*12-14.* இவ்வாறு கர்கமுனிவர் சொன்னதும் நந்தகோபர் பிள்ளையை எடுத்துக்கொண்டு வந்து தனித்த இடத்தில் கர்கமுனிவரை வணங்கினார். திவ்யஞானமுடைய கர்க முனிவர் நந்தனின் மகனை பரமாத்மா என்றறிந்து வேதத்திற்கும் எட்டாத அவன் மஹிமையைச் சொல்லலானார்.

**गर्ग उवाच**

वेदाहमेनं ते पुत्रं दिव्यज्ञानेन गोपते ।
अयं सर्वजनानन्दो नारायणसमो गुणैः ॥१५॥

निरस्तसाम्यातिशयो भगवान् हरिरव्ययः ।
एक एवेति गायन्ति ब्राह्मणाः श्रुतिपारगाः ॥१६॥

सौन्दर्यसारसंपूर्णरूपेण च गुणैरपि ।
सुमुखान् विमुखानेवं सर्वानात्मनि कर्षति ॥१७॥

तस्मादयं कृष्ण इति प्रेमपूर्वं प्रकीर्त्यते ।
पूर्णं ब्रह्म परं तत्त्वं कृष्णनाम्ना निरुच्यते ॥१८॥

अयञ्च रोहिणीपुत्रः सर्वसद्गुणसम्युतः ।
बलाधिक्याद्बल इति रम्यत्वाद्राम इत्यपि ॥१९॥

कीर्तनीयो जनैर्नित्यं नन्दगोप महायशः ।
पालयिष्यत्ययं नूनं साधून् कंसेन पीडितान् ॥२०॥

**கர்கமுனிவர்**

*15-20. நந்தகோப! எனது மெய்ஞானத்தினால் உனது மகனை அறிந்துகொண்டேன். ஸர்வஜனங்களையும் ஆனந்தப்படுத்தும் இவனை நாராயணனுக்குச் சமமான குணமுடையவன் என்று அறிந்துகொள்.நாராயணனோ தனக்கு நிகர் வேறு யாருமில்லா தனித்த ஒருவன் என்று வேதமறிந்த பெரியோர்கள் சொல்கின்ற னர். அழகு நிரம்பிய தனது வடிவத்தாலும் குணங்களாலும் வேண்டியவர்கள், வேண்டாதவர்கள் யாவரையும் தன்னிடம் இவன் இழுத்துக்கொள்வான். எனவே இவனுக்கு க்ருஷ்ணன் என்ற பெயர் தகும். பூர்ணமான பரப்ரும்மமும் க்ருஷ்ணன் என்று சொல்லப்படுகிறது . இந்த ரோஹிணியின் பிள்ளை எல்லா நற்குணங்களும் நிரம்பியவன். அழகானவனாய் இருப்பதால் ராமன் என்றும், பலசாலியாய் இருப்பதால் பலராமன் என்றும் இவனுக்குப் பெயர். நந்தகோபா! இந்த உன் மகன் கம்ஸனால் துன்பப்படும் எல்லா ஸாதுக்களையும் காப்பாற்றுவான்.*

**श्रीसद्गुरुरुवाच**

एवं वदति गर्गोपि प्रहृष्टहृदयस्तथा ।
नाम संश्रावयामास नन्दो रामजनार्दनौ ॥२१॥

पूजयामास गर्गञ्च भक्तिपूर्वं व्रजाधिपः ।
यशोदा रोहिणी चापि परमानन्दमापतुः ॥२२॥

राम रामेति कृष्णेति श्रूयते मधुरध्वनिः ।
नन्दगोपगृहे तस्मिन् जननीभ्यां प्रकीर्तितः ॥२३॥

कृष्णेति मधुरं नाम कीर्तयन् गोकुलेश्वरः ।
पुत्रञ्चालोक्य सप्रेम परमानन्दमाप सः ॥२४॥

इतस्ततः सञ्चरन्तौ क्वणत्कनकनूपुरौ ।
स्वनामधेयमाकर्ण्य प्रत्यायातौ स्वमातरम् ॥२५॥

ஸ்ரீஸத்குரு

*21-25.* இவ்வாறு இந்த கர்கமுனிவர் சொன்னதும் உள்ளம் மகிழ்ந்து நந்தகோபன் குழந்தைகளுக்கு பலராமன், க்ருஷ்ணன் என்று பெயர் சூட்டினார். யசோதையும் ரோஹிணியும் பரமானந்தத்தை அடைந்தனர். நந்தன் கர்கமுனிவரைப் பூஜித்தான். நந்தகோபன் வீட்டில் எப்பொழுதும் ராமா! கண்ணா! என்று ரோஹிணியும் யசோதையும் அழைக்கும் மதுரமான நாமஸங்கீர்த்தனம் ஒலித்துக்கொண்டேயிருக்கும். கண்ணா! என்று கூப்பிட்டதும் ஓடிவரும் பிள்ளையைக் கண்டு நந்தகோபன் பரமானந்தம் அடைவான். காற்சலங்கை குலுங்கக் குலுங்க இங்குமங்கும் அலையும் இரு குழந்தைகளும் தன் பெயர் கேட்டதும் தாயாரிடம் ஓடிவருவார்கள்.

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये श्रीगोविन्दकाण्डे नामकरणं नाम नवमोऽध्यायः॥ ९॥*

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிமஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில் கோவிந்தகாண்டத்தில் ஒன்பதாவது அத்யாயம் முற்றும்.**

# अथ दशमोऽध्यायः

## பத்தாவது அத்யாயம்

### श्रीसद्गुरुरुवाच

एकदा प्रातरुत्थाय वयस्यैः सह माधवः ।
रेमे गोकुलवीथीषु स्वच्छन्दं केलितत्परः ॥१॥

भ्रमन्तीनां बालिकानां वस्त्राण्याकृष्य लीलया ।
विलिम्पत्यञ्जनेनापि कर्दमेनापि माधवः ॥२॥

परागानञ्जलौ कृष्णः प्रेमलीलाकुतूहलः ।
आदाय तासां नेत्रेषु किरति श्यामसुन्दरः ॥३॥

वेणीं प्रगृह्य कन्यानां करोति ग्रन्थिमच्युतः ।
आगत्य तासां पुरतस्ततो हस्तविघट्टनम् ॥४॥

तासां क्रीडनकान्येवं हृत्वा धावति सत्वरम् ।
रुदतीं सान्त्वयत्येष प्रेमपूर्वं वदन् हसन् ॥५॥

यशोदासन्निधिं प्राप्य कृष्णलीलां वदन्ति ताः ।
रुदन्त्यश्च हसन्त्यश्च मिथ्याकोपेन सम्युताः ॥६॥

### ஸ்ரீஸத்குரு

*1-6.* ஒருநாள் காலையில் எழுந்திருந்து கண்ணன் தனது நண்பர்களுடன் கோகுலவீதியில் விளையாடிக் கொண்டிருந் தான். ஆயர்சிறுமிகளின் பாவாடைகளை இழுத்து மசியைத் துடைப்பான். சேற்றால் அடிப்பான். தட்டாமாலை சுற்றும் அவர்கள் கண்களில் மணலைத் தூவுவான். பின்னாடியே சென்று பின்னலை முடி போட்டுவிட்டு முன்னாடி வந்து கைதட்டிச் சிரிப்பான். அவர்களுடைய விளையாட்டுச்

சாமான்களை பிடுங்கிக் கொண்டு ஓடுவான். அவர்கள் அழுதால் அன்புடன் ஸமாதானம் செய்வான் அந்த சிறுமிகள் அழுது கொண்டும், சிரித்துக்கொண்டும், பொய்க் கோபத்துடன் யசோதையிடம் வந்து க்ருஷ்ணலீலைகளைச் சொல்வர் .

तदा रामोपि बलवान् गोपबालैः समन्वितः ।
उवाच मातरं कृष्णो मृदं भक्षितवानिति ॥७॥

वेत्रमादाय सा माता त्वरया समुपागता ।
ददर्श स्वसुतं कृष्णं वीथ्यां तिष्ठन्तमच्युतम् ॥८॥

क्वणत्कनकमञ्जीरं कटिसूत्रविराजितम् ।
दिगम्बरं पद्मनाभं दामोदरमजं शिशुम् ॥९॥

नीलोत्पलदलश्यामं सुन्दरं कमलेक्षणम् ।
कुटिलालकसम्युक्तं कर्णलम्बितकुण्डलम् ॥१०॥

सर्वाभरणसम्युक्तं शार्दूलनखभूषितम् ।
धूलिधूसरिताङ्गञ्च देवं मृद्भक्षणप्रियम् ॥ ११॥

विलोक्य कपटस्मेरवदनं स्वसुतं हरिम् ।
तर्जयन्त्याह कोपेन संयुक्ता प्रेमपूर्वकम् ॥१२॥

7-12. அப்பொழுது பலராமனும்கூட வந்து கண்ணன் மண்ணைத் தின்கிறான் என்றான். கையில் ஒரு தடியை எடுத்துக்கொண்டு வந்து யசோதை வீதியில் நிற்கும் கண்ணனைக் கண்டாள். காலில் சலங்கையும், இடுப்பில் அரைஞாணும், கழுத்தில் புலி நகமும், காதுகளில் குண்டலம் அணிந்தவனும், தாமரைக் கண்ணனும் நீலவர்ணனும், சுருண்டகேசம் உடையவனும், அம்மணமாய் நிற்பவனும், கபடமாய் சிரிப்பவனுமான தனது குழந்தையைக் கண்டு

ப்ரேமையுடன் அதட்டி கோபத்துடன் சொன்னாள்.

**यशोदोवाच**

नवनीतं दधि क्षीरं भक्ष्याणि विविधान्यपि ।
त्यक्त्वा मृदं भक्षितवानसि किं वद बालक ॥१३॥

सन्ततं गोपकन्याभिः केलिकां कृतवानसि ।
वीथ्यां दिगम्बरो भूत्वा निर्लज्जो निर्भयस्तथा ॥१४॥

**யசோதை**

*13-14. குழந்தாய்! வீட்டில் உள்ள தயிர், பால், வெண்ணெய், பலவித பக்ஷணங்கள் எல்லாவற்றையும் விட்டு ஏன் மண்ணைத் தின்கிறாய்? எப்பொழுதும் சிறுமிகளுடன் கேலி செய்துகொண்டு வீதியில் அம்மணமாய் நிற்கிறாயே! உனக்கு வெட்கமோ பயமோ இல்லையா?*

**श्रीकृष्ण उवाच**

नाहं भक्षितवानम्ब रामो मिथ्याभिभाषते ।
पश्य मे मुखपद्मञ्च मातस्ते संशयो यदि ॥१५॥

**கண்ணன்**

*15. அம்மா! நான் மண் தின்னவில்லை. பலராமன் பொய் சொல்கிறான். உனக்கு நம்பிக்கையில்லாவிடில் என் வாயை வேண்டுமானாலும் பார்த்துக்கொள்.*

**यशोदोवाच**

एवञ्चेत्तर्हि गोविन्द मुखपद्मं प्रदर्शय ।
त्वमेव मिथ्या वदसि रामः सत्यव्रतो ननु ॥१६॥

**யசோதை**

*16. கோவிந்தா! அப்படியானால் வாயைத் திறந்து காட்டு பார்க்கலாம். ராமன் உண்மையே பேசுவான். நீதான் பொய் சொல்லுவாய்.*

श्रीसद्गुरुरुवाच

एवं वदन्त्यां सक्रोधं यशोदायां जनार्दनः ।
लोकान् प्रदर्शयामास प्रसन्ने मुखपङ्कजे ॥१७॥

ब्रह्माण्डमेतन्निखिलं द्विसप्तभुवनात्मकम् ।
सप्तद्वीपवती भूमिं चतुःसागरवेष्टिताम् ॥१८॥

तत्रापि भारतं वर्षं भोजदेशञ्च गोकुलम् ।
तत्र श्रीनन्दभवनञ्चात्मानं जननीमपि ॥१९॥

दर्शयामास भगवान् यशोदायै मुखाम्बुजे ।
आधेयत्वं त्रिजगतामाधारत्वं तथाऽऽत्मनः ॥२०॥

ஸ்ரீஸத்குரு

*17-20. இவ்வாறு யசோதை சொன்னதும் கண்ணன் தனது திருவாயைத் திறந்து காட்டினான். அதில் பதினான்கு உலகங்கள் நிரம்பிய ப்ரும்மாண்டத்தையும், நான்கு கடல் சூழ்ந்த ஏழு தீவுகளுடைய பூமியையும், பாரதநாட்டையும், அதற்குள் போஜதேசத்தையும், கோகுலத்தையும், நந்தன் மனையையும், அதில் தாயாரையும் தன்னையும் காட்டி எல்லா உலகங்களுக்கும் தானே ஆதாரம் என்று நிரூபித்து விட்டான்.*

एवं विदारिते वक्त्रे सर्वाल्लोकान् समीक्ष्य सा ।
आश्चर्यचकिता माता तर्कयामास तत्त्वतः ॥२१॥

स्वप्ने पश्यामि किं लोकान् बालस्य वदनाम्बुजे ।
अथवा बुद्धिमोहः किं ममैवं स्वसुतं प्रति ॥२२॥

अयं ममार्भकः कृष्णो योगसिद्धिं करोति वा ।
जानामि नाहं बालस्य प्रभावं परमात्मनः ॥२३॥

नूनमेष हरिः साक्षाद्गर्गस्य वचनं यथा ।
परं तत्त्वमविज्ञाय मोहितास्म्यविवेकतः ॥२४॥

एवं विचार्य सा देवी सुतं नारायणं प्रभुम् ।
विज्ञाय सहसोत्थाय नमस्कर्तुमियेष च ॥२५॥

तदैव भगवान् कृष्णो मन्दहासं चकार च ।
दुस्तरामात्मनो मायां पुत्रस्नेहमयीं ददत् ॥२६॥

21-26. குழந்தையின் முகத்தில் எல்லா உலகங்களையும் கண்ட யசோதை ஆச்சர்யமடைந்து ஆலோசித்தாள். இது என்ன கனவா! அல்லது மதிமயக்கமா! குழந்தையின் யோகசித்தியா! இவன் மஹிமையை அறியேனே. கர்கமுனிவர் சொன்னபடி இவன் உண்மையில் நாராயணனே. இவனுடைய மாயையினால் இவனைப் பிள்ளை என்று நினைத்து மயங்கியிருந்தேன் என்று நினைத்து யசோதை கண்ணனை வந்தனம் செய்ய விரும்பினாள். அதற்குள் பகவான் மந்தஹாஸம் செய்து யசோதைக்கு புத்ரபாசமாகிய அக்ஞானத்தை உண்டாக்கி விட்டான்.

ब्रह्मरुद्रादयो देवा यस्य मायावशङ्गताः ।
कियती गोपनारी च तस्मिन् पुत्रत्वमागते ॥२७॥

अत्यद्भुतमिदं दिव्यमतिमानुषचेष्टितम् ।
प्रदर्श्यापि स्वयं कृष्णः पूजां नेच्छति बालकः ॥२८॥

प्रतीक्षमाणो भगवान् वात्सल्यं प्रेम दुर्लभम् ।
वैकुण्ठमपि सन्त्यज्य तस्याः पुत्रत्वमागतः ॥२९॥

विस्मृत्य वैभवं तस्य गोपी नन्दकुटुम्बिनी ।
वात्सल्यात्पोषयामास प्रेमपूर्वं दिन दिने ॥३०॥

एवमेव जनैः सर्वैर्नन्देन च महात्मना ।
लालितो रमते गोष्ठे स्वच्छन्दगतिरच्युतः ॥३१॥

*27-31.* ப்ரும்மா, ருத்ரன்முதலிய தேவர்களும் எவனுடைய மாயைக்கு வசப்பட்டவர்களோ அந்த கண்ணனிடம் இந்த ஆய்ச்சி புத்ரபாசத்தால் மயங்கியதில் என்ன ஆச்சர்யம்? அதிசயமான செயலைக் காட்டியும் கண்ணன் பிறர் பூஜை செய்வதை விரும்புவதில்லை. ஏனெனில் பகவான் வாத்ஸல்யத்தை விரும்பியே வைகுண்டத்தைவிட்டு கோகுலம் வந்தான். யசோதையும் அவனது மஹிமையை மறந்து குழந்தையாகவே நினைத்து தினந்தோறும் அன்புடன் வளர்த்துவந்தாள். இவ்வாறு எல்லா ஜனங்களாலும் நந்தகோபராலும் லாலனை செய்யப்பட்டு கண்ணன் கோகுலத்தில் ஸ்வதந்திரமாய் விளையாடிக் கொண்டிருந்தான்.

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये श्रीगोविन्दकाण्डे विश्वरूपप्रदर्शनं नाम दशमोऽध्यायः॥ १०॥*

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிமஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில் கோவிந்தகாண்டத்தில் பத்தாவது அத்யாயம் முற்றும்.**

# अथैकादशोऽध्यायः

## பதினொன்றாவது அத்யாயம்

### *श्रीसद्गुरुरुवाच*

एकदा गृहदासीषु नानाकर्मरतास्वपि ।
यशोदा प्रातरुत्थाय निर्ममन्थ दधि स्वयम् ॥१॥

पुत्रस्मरणसञ्जातपरमानन्दनिर्भरा ।
केशबन्धननिर्मुक्तसुगन्धनवमल्लिका ॥२॥

कपोलतलसंस्पर्शिकर्णपत्रविभूषिता ।
कौशेयाम्बरसम्युक्तकटिशोभितमेखला ॥३॥

क्वणत्कनकमञ्जीरहेमकङ्कणभूषिता ।
वात्सल्यपूर्णहृदया पुत्रस्नेहस्नुतस्तनी ॥४॥

स्वेदबिन्दुपरिव्याप्तकपोलदलदर्पणा ।
श्रीकृष्णस्मरणानन्दस्मितशोभिवरानना ॥५॥

विचित्रकृष्णचारित्रकीर्तनानन्दमोहिता ।
देवी नन्दस्य गृहीणी निर्ममन्थ स्वयं दधि ॥६॥

ஸ்ரீஸத்குரு

*1-6. ஒருஸமயம் வீட்டு வேலைக்காரிகள் வெவ்வேறு வேலைகளில் ஈடுபட்டிருந்ததால் யசோதை தானே தயிர் கடைந்தாள். கண்ணனின் நினைவில் ஆனந்தமடைந்தவளாய், கூந்தலில் மல்லிகைப்பூ அணிந்துகொண்டு, காதுகளில் குண்டலமும், கைகளில் கங்கணமும், கால்களில் தண்டையும் அணிந்துகொண்டு, இடுப்பில் பட்டுப்புடவை உடுத்திக் கொண்டு கண்ணனை நினைத்து நினைத்து மந்தஹாஸம் செய்பவளாய் நந்தகோபரின் மனைவியான யசோதை தானே தயிர் கடைந்தாள்.*

दधिनिर्मन्थनाज्जातं शब्दमाकर्ण्य माधवः ।
उत्थाय शयनात्सद्यो मातरं प्राप बालकः ॥७॥

आलिङ्ग्य पृष्ठतो बालो मातरं नन्दभामिनीम् ।
स्तन्यपानाय मन्थानं न्यरुणत्प्रीतिमावहन् ॥८॥

अङ्के संस्थाप्य तं बालं मन्दस्मितमुखाम्बुजम् ।
स्तन्यञ्च पाययामास निर्ममन्थ च दध्यपि ॥९॥

उत्सिच्यमाने पयसि चुल्लिकायामधिश्रिते ।
कृष्णं विसृज्य सा तूर्णं पाकशालां जगाम ह ॥१०॥

7-10. தயிர் கடையும் ஓசையைக்கேட்டு குழந்தையான கண்ணன் எழுந்திருந்து மெள்ளவந்து பின்புறமாய் அம்மாவைக் கட்டிக்கொண்டு கையால் மத்தைப் பிடித்து நிறுத்தி பால் குடிக்க அடம் செய்தான். உடனே யசோதை முறுவல் செய்யும் முகுந்தனை மடியில் போட்டுக்கொண்டு தயிர் கடைந்தாள். அதற்குள் அடுப்பில் வைத்திருந்த பால் பொங்கிவிடவே அதை இறக்கவேண்டி சமையலறைக்கு ஓடினாள்.

सञ्जातकोपो भगवान् प्रारुदत् स्फुरिताधरः ।
नित्यतृप्तोऽप्यतृप्तःसन् स्तन्यपाने बलानुजः ॥११॥

मन्थानं स्फोटयामास योक्त्रं चिच्छेद लीलया ।
भाण्डस्थं नवनीतञ्च हरन् सद्यो दधाव सः ॥१२॥

गृहद्वारमुपागत्य दृष्ट्वोलूखलमच्युतः ।
तस्मिन्निषण्णो भगवनान्नवनीतमभक्षयत् ॥१३॥

भक्षयन्नवनीतञ्च प्ररुदंश्च मुहुर्मुहुः ।
कज्जालिप्तवदनस्तत्रैव निषसाद सः ॥१४॥

11-14. கண்ணன் பால் குடித்தது போதாததால் கோபமடைந்து உதட்டைப் பிதுக்கிக்கொண்டு அழுதான். மத்தை முறித்தான். கயிற்றை அறுத்தான். வெண்ணெய்க் கலயத்தை எடுத்துக் கொண்டு ஓடிவிட்டான். வாசற்புறமிருந்த ஓர் உரலின் மேல் உட்கார்ந்து வெண்ணெயைத் தின்றான். அடிக்கடி அழுது கொண்டும் முகத்தில் கண்மையைக் கரைத்துவிட்டுக்கொண்டும் வெண்ணெயைத் தின்றுகொண்டும் உட்கார்ந்திருந்தான்.

पुत्रस्य चेष्टितं सर्वमवलोक्य व्रजेश्वरी ।
युक्ता प्रणयकोपेन वेत्रमादाय चाययौ ॥१५॥

विलोक्य जननीं कृष्णो दधाव त्वरया हरिः ।

तं ग्रहीतुं नाशकत्सा योगिनामपि दुर्लभम् ॥१६॥
मातुः परिश्रमं दृष्ट्वा स्वयमेवाजगाम सः ।
भीतवत् परितः पश्यन् चञ्चलापाङ्गवीक्षणः ॥१७॥

*15-17. தனது மகனின் குறும்புகளைக் கண்ட யசோதை அவனிடம் பொய்க்கோபம் காட்டி, கையில் கழியை எடுத்துக்கொண்டு வந்தாள். அவளைக் கண்டதும் கண்ணன் ஓடிவிட்டான். யோகிகளுக்கும் துர்லபனான அவனைப் பிடிக்க அவளால் முடியவில்லை. களைத்துப் போன தாயைக் கண்டு கண்ணன் பயந்தவனைப்போல் மருண்ட பார்வையுடன் அவளிடம் வந்து தானே அகப்பட்டுக் கொண்டான்.*

तं बालं प्राकृतं मत्वा भवबन्धविमोचनम् ।
बबन्धोलूखले माता मुकुन्दं मुनिदुर्लभम् ॥१८॥

ज्ञानिनामात्मनिष्ठानां योगिनामपि दुर्लभः ।
एवं हि प्रेमपूर्णानां भक्तानां सुलभो भवेत् ॥१९॥

*18-19. ஸம்ஸாரபந்தத்தை நீக்கக்கூடியவனும், முனிவர்களுக்கும் துர்லபமானவனுமான முகுந்தனை மனிதக் குழந்தையாக நினைத்து யசோதை உரலில் கட்டினாள். ஞானிகளுக்கும் யோகிகளுக்கும்கூட கிடைக்காத பகவான் ப்ரேமைநிரம்பிய பக்தர்களுக்கு கட்டுப்பட்டவன்.*

उलूखलं तदाकृष्य भगवान् केलितत्परः ।
गृहद्वारस्थितं प्राप युग्ममर्जुनवृक्षयोः ॥२०॥

पुरा नारदशापेन कुबेरतनयावुभौ ।
प्रापतुर्वृक्षतां तत्र कृष्णसङ्गमकाङ्क्षिणौ ॥२१॥

कृष्णाच्छापविमोक्षञ्च लब्ध्वा नारदवाक्यतः ।
प्रतीक्षमाणौ तौ नित्यं गोकुले तत्र तस्थतुः ॥२२॥

सर्वं विज्ञाय भगवान् कृपया भक्तवत्सलः ।
नारदस्य वचः सत्यं कर्तुं तत्राजगाम सः ॥२३॥

प्रविश्य वृक्षयुगलं बाले गच्छति लीलया ।
उलूखलं बृहत्तत्र मध्यस्थमभवत्तदा ॥२४॥

उलूखलं तदाकृष्य बलेनैव बलानुजः ।
चकार लीलया कृष्णो यमलार्जुनभञ्जनम् ॥२५॥

तदा शापविनिर्मुक्तौ स्वीयरूपेण संस्थितौ ।
प्रणम्य चक्रतुः स्तोत्रं बालरूपं जनार्दनम् ॥२६॥

*20-26. விளையாட்டுப் பிள்ளையான கண்ணன் அந்த உரலை உருட்டிக்கொண்டே வீட்டுவாசலில் இருந்த இரண்டு மருதமரங்களினிடையே சென்றான். முன்பொருகாலத்தில் குபேரனின் புதல்வர்களான நளகூபரன், மணிக்ரீவன் என்கிற இருவரும் நாரதரின் சாபத்தினால் கோகுலத்தில் மரமாய் முளைத்திருந்தனர். 'கண்ணபிரான் உங்களை சாபத்திலிருந்து விடுவிப்பான்' என்றும் நாரதர் சொல்லியிருந்தார். நாரதரின் சொல்லை நிறைவேற்ற வேண்டி பக்தவத்ஸலனான கண்ணன் அங்கு வந்தான். மரங்களின் இடையில் சென்றதும் உரல் சிக்கிக்கொள்ளவே, கண்ணனும் இழுக்கவே மரங்கள் முறிந்துவிட்டன. உடனே சாபத்திலிருந்து விடுபட்டு சுயரூபத்துடன்வந்த குபேரனின் பிள்ளைகள் கண்ணனைத் துதித்தனர்.*

**नलकूबरमणिग्रीवावूचतुः**

नमः परमकल्याण नमस्ते विश्वमङ्गल ।
वासुदेवाय शान्ताय यदूनां पतये नमः ॥२७॥

आवामैश्वर्यमत्तौ च मधुपानपरायणौ ।
अकस्मात् प्राप्य सत्सङ्गं त्वदन्तिकमुपागतौ ॥२८॥

देवर्षिर्भगवान्नूनमावयोः परमो गुरुः ।
यस्यैव शापव्याजेन संप्राप्तोऽयमनुग्रहः ॥२९॥

इतःपरं जगन्नाथ त्वयि भक्तिं प्रयच्छ नौ ।
एवं त्वदीयसङ्गश्च भवेज्जन्मनि जन्मनि ॥३०॥

**குபேரனின் பிள்ளைகள்**

*27-30. பரமகல்யாண! விச்வமங்களா! வாஸுதேவ! சாந்தஸ்வரூப! யாதவ! உமக்கு வந்தனம். பணத்திமிர் பிடித்து மதுமயக்கத்திலிருந்த நாங்கள் எதிர்பாராமல் ஸாதுஸங்கத்தைப் பெற்றுத் தங்களிடம் வந்தோம். தேவரிஷியான நாரதரே எங்கள் குரு. அவருடைய சாபமே எங்களுக்கு அனுக்ரஹமாயிற்று. இனிமேலாவது எங்களுக்குப் பிறவிதோறும் உம்மடியார்கள் ஸங்கமும், உம்மிடத்தில் பக்தியும் உண்டாகட்டும்.*

**श्रीसद्गुरुरुवाच**

एवं स्तुवन्तौ तौ यक्षौ गोविन्दं गोकुलेश्वरम् ।
विहायसा जग्मतुश्च पुण्यं कैलासपर्वतम् ॥३१॥

नन्दोपि कृष्णमालोक्य मात्रा बद्धमुलूखले ।
प्रहसंस्तूर्णमागत्य मुमोच प्रेमपूर्वकम् ॥३२॥

मात्रा बद्धेन दाम्नैवमङ्कितो भगवान् हरिः ।
सौलभ्यगुणपूर्णत्वादयं दामोदरः स्मृतः ॥३३॥

भग्नावर्जुनवृक्षौ च बालं बद्धमुलूखले ।
विलोक्य गोपा गोप्यश्च प्रापुः परमविस्मयम् ॥३४॥

यशोदा तूर्णमागत्य कृष्णमादाय सादरम् ।
मूर्ध्न्युपाघ्राय सप्रेम रक्षाञ्चक्रे सखीजनैः ॥३५॥

बद्धोपि भगवानेवं प्रददौ मोक्षमेतयोः ।
विचित्रकेलिलोलोऽयं यशोदानन्दनो हरिः ॥३६॥

ஸ்ரீஸத்குரு

*31-36.* கோகுலநாதனான கோவிந்தனை இவ்வாறு துதித்து அவர்கள் விடைபெற்று ஆகாயமார்க்கமாக இருப்பிடம் சென்றனர். நந்தகோபரும் கண்ணனை அவிழ்த்து விட்டார். **தாமம்** என்றால் கயிறாகும். **உதரம்** என்றால் வயிறாகும். தாமத்தினால் கண்ணனின் உதரம் கட்டப் பட்டதால் 'தாமோதரன்' எனப்படுகிறான். இவ்வாறு சிறு குழந்தை பெரிய மரத்தையே முறித்து விட்டதைக் கண்டு ஆயர்கள் ஆச்சர்யமடைந்தனர். யசோதையும் உடனே ஓடிவந்து, கண்ணனை எடுத்துக் கொண்டு, குழந்தைக்கு ரக்ஷை செய்தாள். இவ்வாறு பகவான் உரலில் கட்டப்பட்டிருந்தபோதிலும் பிறருக்கு விடுதலை தந்தான். கண்ணனின் லீலையே விசித்திரந்தான்.

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये श्रीगोविन्दकाण्डे*

*यमलार्जुनभञ्जनं नामैकादशोऽध्यायः॥ ११॥*

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிமஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில் கோவிந்தகாண்டத்தில் பதினொன்றாவது அத்யாயம் முற்றும்.**

# अथ द्वादशोऽध्यायः

## பன்னிரெண்டாவது அத்யாயம்

### *श्रीसद्गुरुरुवाच*

विचित्राभिः केलिकाभिरेवमेव दिने दिने ।
रञ्जयन् गोकुलं सर्वं चिक्रीड भगवान् हरिः ॥१॥

गृहान् प्रविश्य गोपीनां नवनीतं हरन्नपि ।
भुङ्क्ते रहसि गोपालैर्वयस्यैः सह माधवः ॥२॥

नवनीतं दधि क्षीरं नानोपायकृदीश्वरः ।
हृत्वा भक्षयति प्रेम्णा योषिद्भिस्तर्जितोपि सः ॥३॥

यथेष्टं पिबति क्षीरं नवनीतं भुनक्ति च ।
दारकान् क्रोशयत्यन्ते दधिभाण्डं भिनत्ति च ॥४॥

कृष्णस्य चौर्यचातुर्यं द्रष्टुकामाश्च योषितः ।
अन्तर्गृहे क्वचिद्भाण्डं विन्यस्य प्रहसन्ति च ॥५॥

सर्वज्ञो भगवान् कृष्णो मुग्धभावेन सम्युतः ।
स्वसामर्थ्यं प्रकटयन्नवनीतं हरत्ययम् ॥६॥

मात्रे निवेदयामासुः सर्वं कृष्णस्य चेष्टितम् ।
सानन्दं व्रजसुन्दर्यः कृष्णलीलाविमोहिताः ॥७॥

ஸ்ரீஸத்குரு

*1-7. இவ்வாறு பகவானான க்ருஷ்ணன் தினந்தோறும் விசித்ரமான தனது லீலைகளால் கோகுலத்தை மகிழ்வித்தான். மாதவன் தனது தோழர்களுடன் ஆய்ச்சியர்களின் வீடுகளில் ரஹஸ்யமாய்ப் புகுந்து வெண்ணெயைத் திருடித் தின்பான். கோபிமார்கள் திட்டினாலும் கேட்காமல் பலவிதமான தந்திரங்கள் செய்து தயிர் பால் வெண்ணைய் முதலியவைகளை திருடித் தின்பான். தன் இஷ்டப்படி பாலைக் குடிப்பான். வெண்ணையைத் தின்பான். பானையை உடைப்பான். குழந்தைகளை அழவிடுவான். கண்ணனின் சாமர்த்தியத்தை பார்க்கவேண்டி கோபிமார்கள் வெண்ணெய்க் கலயத்தை ஒளித்து வைப்பார்கள். அறியாப் பிள்ளையான கண்ணன் எல்லாமறிந்த இறைவனல்லவா! எப்படியோ வெண்ணெய்க் கலயத்தை கண்டுபிடித்து எடுத்து விடுவான். கண்ணனின் லீலையைக் கண்டு மயங்கிய கோபிமார்கள் யசோதையிடம் முறையிட்டனர்.*

### चन्द्रिकोवाच

मातर्यशोदे ते पुत्रमाह्वय क्षिप्रमेव तम् ।
पीत्वा क्षीरं सुमधुरं वृथा निन्दति मामिह ॥८॥

**சந்த்ரிகா**

8. அம்மா யசோதே! உன் மகனைச் சீக்கிரமாகக் கூப்பிட்டுக்கொள். தித்திப்பான பாலைக் குடித்துவிட்டு வீணாக என்னைப் பழிக்கிறான்.

### मालत्युवाच

शिलायां स्फोटयामास पञ्चत्रिंशद्घटान् हरिः ।
निशायां बालकैः साकमादायादाय मद्गृहात् ॥९॥

**மாலதி**

9. கண்ணன் சிறுவர்களுடன்கூடி நேற்றிரவு என் வீட்டிலிருந்து முப்பத்தைந்து குடங்களை எடுத்துக் கொல்லையில் இருந்த கல்லில் போட்டு உடைத்துவிட்டான்.

### माधव्युवाच

भर्तुः स्वरूपमादाय वञ्चयन् मां तवात्मजः ।
भक्ष्याणि भक्षयामास प्रेमभाषणपूर्वकम् ॥१०॥

**மாதவி**

10. யசோதே! உன் மகனான கண்ணன் என் கணவனைப்போல் மாறுவேஷத்தில் வந்து கொஞ்சிப்பேசி அவ்வளவு பக்ஷணங்களையும் தின்றுவிட்டான்.

### मङ्गलदेव्युवाच

नवनीतं दधि क्षीरं पीत्वा बालैः समन्वितः ।
तत्रागताया मे वक्त्रे गण्डूषीकृत्य धावति ॥११॥

मम श्वश्रूर्ननान्दा च मय्येव प्राप्य संशयम् ।
रुदत्यां मयि भीतायां व्यर्थं कोपं प्रकुर्वतः ॥१२॥

**மங்களதேவி**

*11-12.* அம்மா! சிறுவர்களுடன்கூடிக் கண்ணன் தயிர் பால் வெண்ணெயை என் வீட்டிலேயேத் திருடித்தின்று விட்டு அங்கு வந்த என் முகத்திலேயே துப்பிவிட்டு ஓடிவிட்டான். என் மாமியும், நாத்தியும் என்னிடமே ஸந்தேஹப்பட்டுத் திட்டுகின்றனர். நான் அஞ்சி அழுதும்கூட நம்பவில்லை.

**स्मितमुख्युवाच**

मम बालां समाहूय वञ्चयन् प्रेमभाषितैः ।
कङ्कणान्यपहृत्यैव क्रीत्वा फलमभक्षयत् ॥१३॥

**ஸ்மிதமுகி**

*13.* யசோதே! உன் மகன் என் மகளைக் கூட்டிச்சென்று, கொஞ்சிப் பேசி வஞ்சனை செய்து, கை வளைகளைக் கழற்றிக்கொண்டு, அதை விற்றுப் பழம் வாங்கிச் சாப்பிட்டு விட்டான்.

**सुन्दर्युवाच**

मम गोष्ठं प्रविश्यैष वत्सान् धेनूश्च मोहयन् ।
स्वयमेव पपौ कृष्णः क्षीरमम्ब तवात्मजः ॥१४॥

**ஸுந்தரி**

*14.* அம்மா! உன் பிள்ளை எங்கள் கொட்டிலில் புகுந்து, மாடுகளை மயக்கித் தானே பாலை ஊட்டிவிட்டான்.

**मदनमञ्जर्युवाच**

उलूखलं पीठकञ्च समारुह्य सुतस्तव ।
शिक्यस्थं दधिभाण्डञ्च जहार श्यामसुन्दरः ॥१५॥

**மதனமஞ்ஜரி**

*15.* யசோதே! உன் பிள்ளையான நீலவர்ணக் கண்ணன் எட்டாத உறியில் வைத்திருந்த தயிர்ச்சட்டியை உரலையும் முக்காலியையும் கவிழ்த்து அதன்மேல் ஏறி எடுத்துத் தின்றான்.

### मन्दारमालिन्युवाच

जलपात्रे पयः कृत्वा पयः पात्रे तथा जलम् ।
वञ्चयन् मामर्धरात्रे समायातस्त्वदन्तिकम् ॥१६॥

**மந்தாரமாலினி**

16. அம்மா! நள்ளிரவில் வந்து உன் மகன் பால்பாத்திரத்தில் தண்ணீரையும், தண்ணீர் பாத்திரத்தில் பாலையும் மாற்றி வைத்து என்னை ஏமாற்றிவிட்டு, உன்னிடம் ஓடிவந்து விட்டான்.

### मल्लिकोवाच

गुडान्नमाज्यसंसिक्तं केसरादिसुगन्धितम् ।
बुभुजे स्वयमेवायं वञ्चयन् मां ममात्मजम् ॥१७॥

**மல்லிகா**

17. இந்த உன் மகன் நெய் மணக்கும் சர்க்கரைப் பொங்கல் முழுவதையும், என்னையும் என் பிள்ளையையும் ஏமாற்றிவிட்டு, தானே தின்றுவிட்டான்.

### मञ्जुलोवाच

मम पुत्रीं समानीय रहो गत्वा लतागृहम् ।
कृतवान् विविधां लीलां प्रवक्तुं लज्जितास्म्यहम् ॥१८॥

**மஞ்ஜுளா**

18. கண்ணன் என் மகளை ரஹஸ்யமாக அழைத்துக் கொண்டுபோய் முல்லைப் பந்தலின் அடியில் பலவிதமான லீலைகளைச் செய்தான். சொல்ல வெட்கமாக இருக்கிறது.

### मालिन्युवाच

बालं मत्वापि ते पुत्रं परिरेभे प्रियादहम् ।
प्राणवल्लभवत्सद्यः प्रत्याश्लिष्य चुचुम्ब माम् ॥१९॥

மாலினி

19. உன் மகனைக் குழந்தை என்று நினைத்து அன்புடன் அணைத்துக் கொண்டேன். ஆனால் பொல்லாத அவன் மாலையிட்டவனைப்போல் கன்னத்தில் முத்தமிட்டான்.

हंसगामिन्युवाच

यमुनायां मयि स्नानं कुर्वन्त्यामागतो रहः ।
अपहृत्य च वस्त्राणि प्रहसन् परिधावति ॥२०॥

ஹம்ஸகாமினி

20. யமுனையில் நான் நீராடும்போது கண்ணன் யாருமறியாமல் அங்கு வந்து எனது துணிமணிகளைக் கொண்டு ஓடிவிட்டான்.

चन्द्रवदनोवाच

गतायां जलमानेतुं मयि श्वश्रूनिदेशतः ।
जहार पृष्ठतः कुंभं स्वयमागत्य ते सुतः ॥२१॥

சந்த்ரவதனை

21. மாமியார் சொற்படி நடக்கும் நான் தண்ணீர் கொண்டுவர சென்றபோது உன் மகன் பின்னாடியே வந்து குடத்தைப் பிடுங்கிக்கொண்டு ஓடிப்போனான்.

श्रीसद्गुरुरुवाच

एवं विविधमाकर्ण्य मधुरं कृष्णचेष्टितम् ।
समाजुहाव तं बालं वीथ्यां धावन्तमच्युतम् ॥२२॥

दिगम्बरं दिव्यरूपं धूलिधूसरितालकम् ।
रत्नकङ्कणकेयूरनूपुरादिविभूषितम् ॥२३॥

इन्द्रनीलमणिच्छायं पूर्णचन्द्रसमाननम् ।
कज्जलालिप्तनयनं कस्तूरीतिलकाङ्कितम् ॥२४॥

कपटस्मेरवदनं चञ्चलापाङ्गवीक्षणम् ।
आजुहाव च तं पुत्रं नन्दपत्नी पुनः पुनः ॥२५॥

ஸ்ரீஸத்குரு

22-25. இவ்வாறு மதுரமான க்ருஷ்ணலீலைகளை கோபிமார்கள் சொல்லக்கேட்டு யசோதை வீதியில் ஓடும் பிள்ளையைக் கூவியழைத்தாள். புழுதியளைந்த திருமேனி உடையவனும், அம்மணமாய் நிற்பவனும், கங்கணம், காற்சலங்கை, தோள்வளை முதலிய அணிகலன்களை அணிந்தவனும், இந்திரநீலமணிபோல் நீலவர்ணமானவனும், பூர்ணசந்த்ரனையொத்த முகமுடையவனும், மைதீட்டிய கண்கள் உடையவனும், கஸ்தூரிதிலகம் அணிந்தவனும், கபடமாய்ச் சிரிப்பவனும், கடைக்கண்ணால் பார்ப்பவனுமான கண்ணனை யசோதை அழைத்தாள்.

गोपिकागणमालोक्य मातरं कुपितामपि ।
जानन्निवेदितं सर्वं धावत्ययमितस्ततः ॥२६॥

यशोदया सवात्सल्यमाहूतोपि न चागतः ।
भीतवत्तत्र तत्रैव दधाव श्यमासुन्दरः ॥२७॥

बलादानीय तं बालमाश्लिष्य च पुनः पुनः ।
अवाप परमानन्दं विस्मृत्याखिलचेष्टितम् ॥२८॥

एवं वल्लवसुन्दर्यः परिरम्य प्रियं हरिम् ।
कोपाभिनयसम्युक्तास्तर्जयामासुरादरात् ॥२९॥

निगूढः पृष्ठतो मातुस्तिष्ठन्नन्दकुमारकः ।
मन्दं जहास गोविन्दश्चञ्चलायतलोचनः ॥३०॥

26-30. கோபிமார்களின் கூட்டத்தையும், கோபங்கொண்ட அன்னையையும் கண்ட கண்ணன் தனது குறும்புகளை

கோபிமார்கள் யசோதையிடம் சொல்லிவிட்டார்கள் என்று அறிந்துகொண்டு, பயந்தவனைப்போல் நடித்து, அங்குமிங்கும் ஓடினான். யசோதையோ கண்ணனைப் பின்தொடர்ந்து ஓடிக் கட்டிப்பிடித்துத் தூக்கிக் கொண்டாள். கோபிமார்களும் கண்ணனை அணைத்துக்கொண்டு பொய்க்கோபங்காட்டி அதட்டுவதுபோல் கொஞ்சினார்கள். நந்தகுமாரன் யசோதையின் பின்புறமாய் ஒளிந்து நின்றுகொண்டு, திருட்டு முழியுடன் கோபிகைகளைப் பார்த்து மந்தஹாஸம் செய்தான்.

इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये श्रीगोविन्दकाण्डे नवनीतहरणं नाम द्वादशोऽध्यायः।। १२।।

இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிமஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவனமாஹாத்மியத்தில் கோவிந்தகாண்டத்தில் பன்னிரண்டாவது அத்யாயம் முற்றும்.

## अथ त्रयोदशोऽध्यायः

## பதிமூன்றாவது அத்யாயம்

### भागवता ऊचुः

चित्तं हरति गोविन्दो नवनीतं हरन्निव ।
श्रोतॄणां किं पुनस्तेषां साक्षादेव हि पश्यताम् ।।१।।

वात्सल्यभावसंपूर्णं कृष्णलीलारसोज्ज्वलम् ।
विलोक्य ते मुखाम्भोजं प्रहृष्टाः स्मो गुरूत्तम ।।२।।

क्वचिद्यशोदां पश्यामः क्वचिद्गोपालमेव च ।
कथारसे प्रवृत्तेऽस्मिन् त्वय्येव गुरुपुङ्गव ।।३।।

चिरवृत्तमिदं सर्वं प्रत्यक्षमिव दर्शितम् ।
कथाप्रसङ्गसामर्थ्यात् करुणालय सद्गुरो ।।४।।

श्रीकृष्णचरितं सर्वं श्रोतुमिच्छास्ति नः प्रभो ।

सङ्कीर्तय महाभाग श्रवणानन्ददायकम् ॥५॥

பாகவதர்கள்

*1-5 கண்ணன் வெண்ணெய் திருடுவதுபோல் நம் உள்ளத்தையும் திருடுகிறான். கதை கேட்பவருக்கே உள்ளம் பறிபோனால், நேரே பார்த்தவரைக் கேட்பானேன்! க்ருஷ்ணலீலா ரஸத்தினால் ஜொலிக்கின்றதும், வாத்ஸல்யத்துடன் கூடியதுமான உமது முகத்தைக் கண்டு மகிழ்ச்சியடைகிறோம். குருநாத! ஒருக்கால் யசோதைபோலவும், ஒருக்கால் கண்ணனைப் போலவும் காக்ஷியளிக்கிறீர். கதை சொல்லும் திறமையால் க்ருஷ்ணலீலைகளை நேருக்கு நேரே காட்டிவிடுகின்றீர்கள். ப்ரபுவே! காதுகளுக்கு இனிய கண்ணன் கதையைச் சொல்வீராக.*

श्रीसद्गुरुरुवाच

एवमद्भुतचारित्रो भगवान् पञ्चहायनः ।
गोवत्सचारणञ्चक्रे बृन्दावनमुपागतः ॥६॥

सुदिने प्रातरुत्थाय यशोदा पुत्रवत्सला ।
प्रबोधयामास हरिं सुप्रसन्नो भवेति सा ॥७॥

कारयामास सप्रेम सानन्दं दन्तधावनम् ।
पुत्रस्य कमलाक्षस्य नानाकेलिपरस्य सा ॥८॥

स्नापयामास गोविन्दं मितोष्णेनोदकेन सा ।
स्नानीयचूर्णैर्विविधैस्तैलेन च सुगन्धिना ॥९॥

धारयामास कृष्णस्य जघने मणिभूषिते ।
कौशेयचित्रकौपीनं यशोदा प्रेमपूर्वकम् ॥१०॥

ஸ்ரீஸத்குரு

*6-10. இந்துவயது கண்ணன் ப்ருந்தாவனம் வந்து கன்றுகள்*

மேய்க்கலானான். காலையில் எழுந்து யசோதா கண்ணனை எழுப்புவாள். பல விளையாட்டுகள் செய்யும் கண்ணனுக்கு பல் தேய்த்து விடுவாள். ஸுகந்தமான தைலத்தாலும் ஸ்னான சூர்ணங்களாலும் தேய்த்துவிட்டு வென்னீரால் கோவிந்தனை நீராட்டுவாள். கிங்கிணி அணிந்த இடுப்பில் பட்டுக்கோமணம் கட்டிவிடுவாள்.

हिरण्मयैश्च विविधैर्नानारत्नविराजितैः ।
भूषणैर्भूषयामास गोविन्दं नन्दभामिनी ॥११॥

वेणीं चकार कृष्णस्य समूह्य कुटिलालकान् ।
बर्हञ्च धारयामास शिरोभूषणमेव सा ॥१२॥

नेत्रयोः कज्जलञ्चापि ललाटे तिलकञ्च सा ।
चित्रं कपोलयोश्चापि लिलेख वनमालिनः ॥१३॥

मोदकं लड्डुकञ्चापि मुद्गान्नमपि पायसम् ।
प्रददौ नन्दपत्नी सा पुत्राय प्रेमपूर्वकम् ॥१४॥

अथ संप्रेषयामास मूर्ध्न्युपाघ्राय बालकम् ।
वदन्ती मधुरं प्रेम्णा हितं वाक्यं सुखावहम् ॥१५॥

11-15. யசோதை கண்ணனுக்கு பலவிதமான பூஷணங்களைப் பூட்டிவிடுவாள். சுருண்ட கேசங்களைப் பின்னி கொண்டையில் சூடாமணியும் மயிலிறகும் சூட்டி விடுவாள். கண்களில் மையும், கன்னத்தில் மகரபத்ரமும், நெற்றியில் திலகமும் தீட்டுவாள். இட்லியும் கொழுக்கட்டையும், பொங்கலும், பாயஸமும் ஊட்டுவாள். பிறகு கண்ணனை உச்சிமுகர்ந்து அணைத்துக் கொஞ்சி மாடுமேய்க்க அனுப்புவாள்.

श्रीदामा स्तोककृष्णश्च देवप्रस्थो वरूथपः ।
सुभद्रभद्रौ सुबलो बलश्चार्जुन एव च ॥१६॥

एभिर्गोपालतनयैः सह रामेण माधवः ।
गोवत्सचारणं कर्तुं प्रतस्थे श्रीवनं प्रति ॥१७॥

चित्रवर्णाः पत्रवर्णाः कृष्णवर्णाश्च पाण्डुराः ।
ताम्रवर्णाः पद्मवर्णाः नानावर्णाश्च वत्सकाः ॥१८॥

वालाग्राणि विधून्वन्तो हंभारावेण संयुताः ।
नृत्यन्तश्च भ्रमन्तश्च गोपालस्याग्रतो ययुः ॥१९॥

तेषामपि च वत्सानां कण्ठबद्धाश्च घण्टिकाः ।
कृष्णनूपुरशब्देन रुरुवुः सह सुस्वरम् ॥२०॥

हैहैघोषेण बालानां किङ्किणीनां रवेण च ।
हंभारावेण वत्सानां तुमुलं गोकुलं तदा ॥२१॥

*16-21. ஸ்ரீதாமா ஸ்தோகக்ருஷ்ணன் தேவப்ரஸ்த்தன் அர்ஜுனன் இவர்கள் கண்ணனின் நண்பர்கள். இவர்களுடனும் பலராமனுடனும் கண்ணன் கன்று மேய்க்கச் செல்வான். வெண்மையானதும் கருமையானதும் சிவப்பானதும் பச்சையானதும் பல வர்ணங்களை உடையதுமான கன்றுகள் வால்களை தூக்கிக்கொண்டு அம்மே என்று கத்திக்கொண்டு எதிரில் துள்ளியோடும். கன்றுகளின் மணியோசையும், கண்ணனின் காற்சலங்கையின் ஓசையும், சிறுவர்களின் ஹை ஹை என்று கன்றுகளை விரட்டும் ஓசையும், அம்மே என்று கன்றுகள் கத்தும் ஓசையும் காதிற்கினியதாக கோகுலம் எங்கும் எதிரொலிக்கும்.*

सुरेन्द्रमणिसङ्काशं पूर्णेन्दुसदृशाननम् ।
कुटिलालकसम्युक्तललाटतिलकाङ्कितम् ॥२२॥

हरिचन्दनलिप्ताङ्गं हारशोभितवक्षसम् ।
शार्दूलनखसंशोभिकण्ठं सरसभाषणम् ॥२३॥

बिम्बारुणाधरद्वन्द्वं गण्डबिम्बितकुण्डलम् ।
मन्दहासं प्रकुर्वन्तं लीलयैव मुहुर्मुहुः ॥२४॥

उत्तमाङ्गधृतोष्णीषमुत्तरीयविराजितम् ।
कौपीनाबद्धजघनं कटिशोभितकिङ्किणिम् ॥२५॥

शृङ्गवेत्रधरं बालं श्रीदामपरिसेवितम् ।
अंसे वहन्तं शिक्यञ्च श्रीमन्तं नन्दबालकम् ॥२६॥

विलोक्य पथिकाः सर्वे त्यक्तसर्वक्रियास्तदा ।
तमेवानुययुः कृष्णं जगन्मोहनविग्रहम् ॥२७॥

22-27. இந்த்ரநீலமணியைப்போல் காந்தி உடையவனும், பூர்ணசந்திரனையொத்த முகமுடையவனும், சுருண்ட கேசங்கள் உடையவனும், கஸ்துரிதிலகம் அணிந்தவனும், ஹரிசந்தனம் பூசியவனும், ஹாரம் சோபிக்கின்ற மார்புடையவனும், கழுத்தில் புலிநகம் அணிந்தவனும், கோவைப்பழம்போன்ற சிவந்த உதடுடையவனும், மகரகுண்டலமணிந்தவனும், மந்தஹாஸ வதனனும், இடுப்பில் கிங்கிணியும் கோமணமும், தோளில் உத்தரீயமும், தலையில் குல்லாயும் அணிந்தவனும், கொம்பும், பிரம்பும், தோளில் சோற்றுமூட்டையைத் தாங்குபவனும், ஸ்ரீதாமாவுடன் கூடியவனும் ஜகன்மோஹன ஸுந்தரனும், நந்தகுமாரனுமான ஸ்ரீக்ருஷ்ணனைக் கண்டு வழிப்போக்கர் யாவரும் வேலைகளை மறந்து கண்ணனுடனேயே சென்று விடுவர்.

भगवानपि गोपालो वादयन् मुरलीं हरिः ।
मोहयामास सकलं गोकुलं गोपनन्दनः ॥२८॥

गृहद्वारस्थिता गोपीः कटाक्षेण विमोहयन् ।
गजराजगतिः श्रीमान् प्रययौ श्रीवनं हरिः ॥२९॥

अक्षण्वतां फलमिदं श्रीकृष्णमुखदर्शनम् ।
एवं वदन्त्यो गोप्यश्च गृहद्वारेषु संस्थिताः ॥३०॥

नृत्यन्नृत्यंश्च मार्गेषु वादयन् मुरलीमपि ।
चारयन्नपि गोवत्सान् प्राविशच्छ्रीवनं हरिः ॥३१॥

*28-31.* கோபாலன் குழலூதி கோகுலத்தில் யாவரையும் மயக்கிவிடுவான். வீட்டு வாசலில் வந்து நிற்கும் கோபியர்களை கடைக்கண்ணால் பார்த்துக்கொண்டே யானையைப்போல் கம்பீரமாக நடந்து ப்ருந்தாவனம் செல்வான். கண் படைத்த பயன் கண்ணனைக் காண்பதே என்று கோபிகைகள் பேசிக் கொள்வார்கள். கண்ணன் வழியெல்லாம் வேணுகானம் செய்துகொண்டும், நாட்டியமாடிக்கொண்டும், கன்றுகளை ஓட்டிக்கொண்டும் ப்ருந்தாவனத்தில் ப்ரவேசித்தான்.

इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये श्रीगोविन्दकाण्डे बृन्दावनगमनं नाम त्रयोदशोऽध्यायः॥ १३॥

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிமஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவனமாஹாத்மியத்தில் கோவிந்த காண்டத்தில் பதிமூன்றாவது அத்யாயம் முற்றும்.**

# अथ चतुर्दशोऽध्यायः

## பதினான்காவது அத்யாயம்

### श्रीसद्गुरुरुवाच

बृन्दावनं संप्रविष्टे गोविन्दे नन्दनन्दने ।
विजयी भव कृष्णेति जगुर्गोपालबालकाः ॥१॥

शृङ्गशङ्खादिवाद्यानि वादयामासुरर्भकाः ।
सानन्दं ननृतुः कृष्णं परिवृत्य वनान्तरे ॥२॥

माधवीमल्लिकादीनि कुसुमानि हसन्ति च ।

तेषां सुगन्धमादाय मन्दं वाति च मारुतः ॥३॥

कदलीचूतपनसाः प्रयच्छन्तः फलानि च ।
कृष्णं निरीक्ष्य गोपालमभवत् पुलकाङ्किताः ॥४॥

केकानादेन संयुक्तास्तत्र तत्र च बर्हिणः ।
नृत्यन्ति कृष्णमालोक्य दर्शनानन्दसंभ्रमाः ॥५॥

ஸ்ரீஸத்குரு

1-5. கண்ணன் ப்ருந்தாவனம் வந்ததும் ஆயர்சிறுவர்கள் ஜெயகோஷம் செய்தனர். கண்ணனைச் சூழ்ந்துகொண்டு ஆடினார்கள். கொம்பு சங்கம்முதலிய வாத்யங்களை ஊதினார்கள். மல்லிகை மாதவிமுதலிய பூக்கள் மலர்ந்தன. அவைகளின் ஸுகந்தத்துடன் மந்தமாருதம் வீசியது. மா, பலா, வாழை முதலிய மரங்கள் கண்ணனைக் கண்டு மேனி சிலிர்த்துப் பழங்களைத் தந்தன. மயில்கள் தோகை விரித்து ஆடின.

कमलेभ्यो विनिर्गत्य मकरन्दमदाकुलाः ।
भृङ्गाः कुर्वन्ति झङ्कारं तत्र तत्र भ्रमन्ति च ॥६॥

कृष्णसाराश्च सानन्दं तृणखादनवर्जिताः ।
दृष्ट्वा कृष्णं प्रियतमं चित्रवत्तस्थुरद्भुतम् ॥७॥

गावो वत्साश्च गोपालं परिवृत्य पुनः पुनः ।
व्यत्यस्तचरणाम्भोजं लिहन्ति प्रेमपूर्वकम् ॥८॥

उदकानयनव्याजात्कृष्णदर्शनकाङ्क्षया ।
कालिन्दीतीरमाजग्मुर्गोपकन्याः सकौतुकम् ॥९॥

इतस्ततः सञ्चरंश्च मुरलीं वादयन्नपि ।

चकार विविधां लीलां गोपालैः सह माधवः ॥१०॥

*6-10. தாமரையிலிருந்து மது உண்டு மயங்கிய வண்டுகள் ரீங்காரம் செய்தன. கவ்விய புல்லுடன் மான்கள் கண்ணனைக் கண்டு எழுதிய சித்ரம்போல் நின்றன. பசுக்களும் கன்றுகளும் கண்ணனைச் சூழ்ந்துகொண்டு நின்றன. அவை புல்லை மேயாமல் கண்ணனின் திருவடியையே நக்குகின்றன. தண்ணீர் கொண்டுவரும் வ்யாஜத்தினால் கண்ணனைக் காண வேண்டி ஆயர்சிறுமிகள் யமுனைக் கரைக்கு வந்தனர். குழலூதிக் கொண்டே கண்ணன் தனது நண்பர்களுடன் இங்குமங்கும் ஓடி விளையாடினான்.*

चूतप्रवालैर्विविधैः कुसुमैरपि बालकाः ।
काचगुञ्जाप्रवालैश्च तथा गैरिकधातुभिः ॥११॥

अलङ्कारविधिं चक्रू रसिका गोपबालकाः ।
रामकेशवयोस्तत्र प्रेमकौतूहलान्विताः ॥१२॥

क्वचिन्नाट्यं प्रकुर्वन्तौ गायन्तौ सुस्वरं क्वचित् ।
काकपक्षधरौ बालौ विपिने चेरतुर्मुदा ॥१३॥

क्वचिद्दूरङ्गते कृष्णे वनदर्शनकाङ्क्षया ।
अहं पूर्वमहं पूर्वमिति तं स्प्रष्टुमाययुः ॥१४॥

केचिद्वेणुञ्च शृङ्गञ्च वादयन्ति यथा रुचि ।
केचिन्नृत्यन्ति परितः कृत्वा हस्तविघट्टनम् ॥१५॥

*11-15. மாந்தளிர், குந்துமணி, பவழம், முத்து, தாதுப்பொடிகள், புஷ்பம் இவைகளால் சிறுவர்கள் பலராமனுக்கும் கண்ணனுக்கும் அன்புடன் அலங்காரம் செய்தனர். ஆடிக் கொண்டும், பாடிக்கொண்டும் ராமனும் கண்ணனும் ப்ருந்தாவனத்தில் ஸஞ்சரித்தார்கள். கண்ணன் வெகுதூரம் சென்றுவிட்டால் சிறுவர்கள் போட்டி போட்டுக்கொண்டு*

ஓடிவந்து பிடிப்பார்கள். சிலர் குழலூதுவார்கள். சிலர் கொம்பூதுவார்கள். சிலர் ஆடுவார்கள். சிலர் தாளம் போடுவார்கள்.

पादपान् केचिदारुह्य निपतन्ति च भूतले ।
विकर्षन्ति च वालांश्च वानराणाञ्च बालकाः ॥१६॥

गर्जन्ति सिह्मवत्केचित् क्रन्दन्ति वृषवत्तथा ।
कूजन्ति पिकवत्केचिद्भाषन्ते शुकवद्वने ॥१७॥

परस्परञ्च युद्ध्यन्ते श्लिष्यन्ति प्रेमपूर्वकम् ।
धावन्ति यमुनातीरे क्रीडन्ति व्रजबालकाः ॥१८॥

16-18. சிலர் மரத்தில் ஏறிக்குதிப்பார்கள். சிலர் குரங்குகளின் வாலைப் பிடித்திழுப்பார்கள். சிலர் சிங்கத்தைப்போல் கர்ஜிப்பார்கள். சிலர் மாடுபோல் கத்துவார்கள். சிலர் குயில்போல் கூவுவார்கள். கிளிபோல் கொஞ்சுவார்கள். ஒருவருக்கொருவர் சண்டை போடுவார்கள். உடனே கட்டிக்கொண்டு கொஞ்சுவார்கள். இவ்வாறு ஆயர்சிறுவர்கள் யமுனைக்கரையில் ஓடி விளையாடுவார்கள்.

व्योममध्यङ्गते सूर्ये बालकाश्च क्षुधान्विताः ।
यमुनापुलिनं जग्मुर्गोविन्देन बुभुक्षया ॥१९॥

अन्नमादाय शिक्येभ्यो विविधं व्यञ्जनान्वितम् ।
सानन्दं बुभुजुस्तत्र परिवृत्य बलानुजम् ॥२०॥

निधाय नानापत्रेषु पक्वमन्नं यथामति ।
स्वस्वभोज्यरुचिं बाला वदन्तो बुभुजुर्मुदा ॥२१॥

19-21. உச்சிப்பொழுதானதும், பசியால் வாடிய சிறுவர்கள், சாப்பிடவேண்டிக் கண்ணனுடன் யமுனைக்கரைக்கு வருவார்கள். சோற்றுமூட்டையை அவிழ்த்து, ஊறுகாயுடன் கூடிய அன்னத்தைப் பலவிதமான இலைகளில் வைத்துக்

கொண்டு, கண்ணனைச் சூழ்ந்து நின்றுகொண்டு, தங்கள் தங்கள் அன்னத்தின் சுவையைப் பற்றிப் பேசிக் கொண்டே சாப்பிட்டார்கள்.

तेषां मध्ये नन्दसूनुर्मन्दस्मितमुखाम्बुजः ।
चन्दनाङ्कितफालश्च चलन्मकरकुण्डलः ॥२२॥

नीलोत्पलदलश्यामो नीरजायतलोचनः ।
कुटिलालकसंयुक्तः कोमलाधरसंपुटः ॥२३॥

शार्दूलनखसंयुक्तग्रैवेयकविभूषितः ।
सरसप्रेममाधुर्यसंपूर्णस्मितभाषणः ॥२४॥

परार्घ्यचन्दनालिप्तबाहुशोभितकङ्कणः ।
कनकाम्बरसंशोभिकटिभूषितशृङ्खलः ॥२५॥

दध्यन्नं करपद्मे च तत्फलान्यङ्गुलीषु च ।
वहंस्तिष्ठति सानन्दं यमुनासलिले शुभे ॥२६॥

22-26. அவர்களின் நடுவில் மந்தஹாஸமுகமுடையவனும், மகரகுண்டலம் அணிந்தவனும், சந்தனம் அணிந்த நெற்றியுடையவனும், நீலோத்பலம்போல் ச்யாமளமான மேனியுடையவனும், தாமரைக்கண்ணனும், சுருண்ட கேசமுடையவனும், சிவந்த உதடுடையவனும், புலிநகம் பூட்டிய கண்டிகை அணிந்தவனும், அன்புடன் ஸரஸமாகப் பேசுபவனும், கைகளில் கங்கணம் அணிந்தவனும், இடுப்பில் பீதாம்பரமும், ஒட்டியாணமும் அணிந்தவனுமான கண்ணபிரான் கையில் தயிர்சாதமும், விரல்களின் இடையில் ஊறுகாயும் வைத்துக்கொண்டு இருக்கிறான்.

तं विलोक्य घनश्यामं श्रीमन्तं नन्दनन्दनम् ।
योगीन्द्राणां दुराराध्यं बालकोच्छिष्टभोजिनम् ॥२७॥

यज्ञेश्वरं यज्ञरूपं यज्ञाराध्यं श्रियःपतिम् ।
गोपालसुलभं देवाः प्रापुः परमविस्मयम् ॥२८॥

भुक्त्वैवं विविधञ्चान्नं पीत्वा च यमुनाजलम् ।
लतागृहमुपागत्य सुखं शेते सुखप्रदः ॥२९॥

पादसंवाहनं चक्रे रामस्य प्रेमपूर्वकम् ।
ज्येष्ठानुवर्ती भगवान् राघवे लक्ष्मणो यथा ॥३०॥

*27-30. யோகிகளுக்கும் எட்டாதவனும், யக்ஞேச்வரனும், யக்ஞரூபனும், லக்ஷ்மீநாதனுமாகிய பகவான் ஆயர் சிறுவர்களின் எச்சில் ப்ரஸாதத்தைப் பிடுங்கிச் சாப்பிடுவதைக் கண்ட தேவர்கள் ஆச்சர்யமடைந்தனர். இவ்வாறு சாப்பிட்டு, யமுனை ஜலத்தைக் குடித்துவிட்டு, ஒரு முல்லைப் பந்தலின் அடியில், கண்ணன் ஓய்வெடுத்துக் கொண்டான். முன்பு லக்ஷ்மணர் ராமருக்குக் காட்டில் பாதஸேவை செய்ததுபோல், கண்ணன் பலராமனுக்குப் பாதஸேவை செய்தான்.*

क्वचिच्छयानयोर्बालाः पर्यङ्के तृणकल्पिते ।
पादसंवाहनञ्चक्रू रामगोविन्दयोर्मुदा ॥३१॥

यत्पादकमलं नित्यं साक्षाच्छीरभिसेवते ।
तमेवं लालयन्ति स्म गोपाला भाग्यशालिनः ॥३२॥

तेषां गोकुलबालानां भाग्यं तद्वर्ण्यते कथम् ।
येषां हस्तगतं ब्रह्म स्वयमेव सनातनम् ॥३३॥

*31-33. சிலசமயம் புல்லால் செய்யப்பட்ட படுக்கையில் இளைப்பாறும் பலராமனுக்கும், கண்ணனுக்கும் ஆயர் சிறுவர்கள் கால் பிடித்துவிடுவார்கள். எந்த பகவானுடைய பாதாரவிந்தத்தை எப்பொழுதும் லக்ஷ்மிதேவி ஸேவிப்பாளோ அந்ததிருவடிகளை பாக்யசாலிகளான ஆயர்சிறுவர்கள் வருடிவிடுவார்கள். அழிவற்ற பரப்ரும்மம் எவர்களின் கையில்*

சிக்கியதோ, அந்த ஆயர்சிறுவர்களின் பாக்யம் சொல்லி மாளுமோ!

इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये श्रीगोविन्दकाण्डे चतुर्दशोऽध्यायः ॥१४॥

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிமஹாப்ரபு அருளிய ஸ்ரீபிருந்தாவனமாஹாத்மியத்தில் கோவிந்த காண்டத்தில் பதிநான்காவது அத்யாயம் முற்றும்.**

# अथ पञ्चदशोऽध्यायः

## பதினைந்தாவது அத்யாயம்

*श्रीसद्गुरुरुवाच*

विश्रान्तो भगवान् कृष्णः क्षणं तत्र लतागृहे ।
कर्तुमेवेच्छया लीलां चचार च वने पुनः ॥१॥

केतकीगन्धसंयुक्तगन्धवाहनिषेविते ।
केकिबृन्दसमुद्गीर्णकेकानादसमन्विते ॥२॥

नानापक्षिगणोद्गीतकोलाहलकलस्वने ।
नलिनीजलसंक्रीडत्कलहंसनिकूजिते ॥३॥

विकसत्कमलोड्डीनषट्पदध्वनिपूरिते ।
विक्रीडद्धरिणीबृन्दप्रेमपूर्णावलोकिते ॥४॥

यमुनापुलिनक्रीडद्गोपबालगणावृते ।
लतागृहनिगूढाभिर्गोपीभिः परिसेविते ॥५॥

बृन्दावने नन्दसूनुर्गोपबालसमन्वितः ।
इतस्ततो भ्रमन् प्रेम्णा चारयामास गोकुलम् ॥६॥

ஸ்ரீஸத்குரு

*1-6.* கண்ணன் சற்றுநேரம் நிகுஞ்ஜத்தில் ஓய்வு எடுத்துக் கொண்டு மறுபடியும் விளையாட வந்துவிட்டான். தாழம்பூ மணக்கும் தென்றல் வீசுவதும், மயில்களின் 'கேகா' என்ற சப்தத்துடன் கூடியதும், பற்பல பறவைகளின் கலகலப்புடன் கூடியதும், தாமரை ஓடைகளில் விளையாடும் அன்னப் பறவைகளின் கூவுதலுடன் கூடியதும், தாமரையிலிருந்து கிளம்பிய வண்டுகளின் ரீங்காரம் உடையதும், அன்புடன் பார்க்கும் மான்மந்தைகளுடன் கூடியதும், யமுனைமணலில் விளையாடும் சிறுவர்களுடன் கூடியதும், நிகுஞ்ஜங்களில் ஒளிந்து நிற்கும் கோபிகைகளுடன் கூடியதுமான பிருந்தாவனத்தில் நந்தகுமாரன் இங்குமங்கும் மாடுமேய்த்துக் கொண்டு அலைந்தான்.

स्पन्दोलिकां मल्ललीलां नृपचेष्टां तथा हरिः ।
क्वचित्कन्दुकलीलाञ्च पदैकेनानुधावनम् ॥७॥

अस्पृश्यनेत्रबन्धादिलीलाञ्च व्रजबालकैः ।
कुर्वन् ब्रह्मादिसेव्योपि विरेजे भक्तवत्सलः ॥८॥

पराजितः क्वचिद्बालैर्लीलायामपराजितः ।
वहत्यंसेपि तं बालं तथा धावति माधवः ॥९॥

एवं हि लोकसिद्धाभिर्लीलाभिर्विहरन् वने ।
सायं गोकुलमायाति गोवत्सपरिसेवितः ॥१०॥

*7-10.* ஊஞ்சலாடுவது, குத்துச்சண்டை, பந்தாட்டம், ராஜவிளையாட்டு, நொண்டிப்பிள்ளை, கண்ணாமூச்சிமுதலிய உலகப் ப்ரஸித்தமான விளையாட்டுக்களை பக்தவத்ஸலனான பகவான் ஆயர்சிறுவர்களுடன் செய்தான். ப்ரம்மாமுதலிய தேவர்கள் ஆகாயத்திலிருந்து பார்ப்பார்கள். கண்ணன் தோற்றுப்போய் ஜயித்த சிறுவனை தோளில் தூக்கிக்கொண்டு ஓடுவதும் உண்டு. இவ்வாறு விளையாடிவிட்டு மாலைப் பொழுதானதும் வீடு திரும்புவான்.

तं विलोक्य घनश्यामं गोधूलिमलिनालकम् ।
वनमालाधरं कृष्णं कर्णिकारविभूषणम् ॥११॥

बालं श्रमजलव्याप्तकपोलं बर्हशेखरम् ।
कज्जलालिप्तनयनं कोमलाधरमच्युतम् ॥१२॥

मध्ये गोवत्सयूथानां नृत्यन्तं नन्दनन्दनम् ।
उच्चैः सङ्कीर्त्यमानञ्च गोपबालैः समागतैः ॥१३॥

दिव्यपीताम्बरधरमुत्तरीयविराजितम् ।
उत्तमाङ्गधृतोष्णीषं मुरलीगानतत्परम् ॥१४॥

राधे विशाखे ललिते सुदेवीति पुनः पुनः ।
वंशीगानेन मधुरमाह्वयन्तं निजप्रियाः ॥१५॥

द्वारस्थिता गोपकन्या विकसत्पद्मलोचनाः ।
विलोक्यापि च कुर्वन्तं सङ्केतं स्मितपूर्वकम् ॥१६॥

पूर्णचन्द्राननं कृष्णं पुण्डरीकायतेक्षणम् ।
उपाजगाम सानन्दं यशोदा पुत्रवत्सला ॥१७॥

11-17. கார்மேகவண்ணனும், கமலக்கண்ணனும், வனமாலை அணிந்தவனும், புழுதிபடிந்த கேசமுடையவனும், வியர்வை யரும்பிய கன்னமுடையவனும், மயிலிறகை மகுடமாய்ச் சூடியவனும், மைதீட்டிய கண்கள் உடையவனும், அழகிய உதடுடையவனும், கர்ணிகாரப்பூவை குண்டலமாய் அணிந்தவனும், சிறுவர்களின் கூச்சல் கொம்மாளத்துடன் ஆநிரைகளின் மத்தியில் ஆடிப்பாடி வருபவனும், தலையில் குல்லாய் அணிந்தவனும், வேணுகானத்தினால் 'ராதே! விசாகா! லலிதே! ஸுதேவி!' என்று தனது தோழிகளை அழைப்பவனுமான கண்ணனைக் கண்டு, கோபிகைகள்

*வீட்டுவாசலில் நிற்கவே, அவர்களை கடைக்கண்ணால் பார்த்து மந்தஹாஸம் செய்பவனும், ஜாடைகள் காட்டுபவனும், பூர்ணசந்த்ரனைப்போன்ற முகமுடையவனுமான புதல்வனைக் கண்டு யசோதை ஓடி வந்தாள்.*

अङ्कमारोप्य तं बालं परिष्वज्य पुनः पुनः ।
आनीय स्वगृहं माता चक्रे विश्रमणं परम् ॥१८॥

फलान्यपि च भक्ष्याणि स्वपुत्राय न्यवेदयत् ।
पाययामास च क्षीरं शङ्खेन प्रेमपूर्वकम् ॥१९॥

शुश्राव मधुरं प्रोक्तं बालकैः कृष्णचेष्टितम् ।
कृष्णलीलाप्रवचनप्रोत्साहकृतसंभ्रमैः ॥२०॥

तत्सर्वं नन्दपत्नी सा श्रुत्वा गोविन्दचेष्टितम् ।
अवाप परमानन्दं प्रणयाश्रुभरानना ॥२१॥

*18-21. அன்னையசோதை கண்ணனை வீட்டிற்கு அழைத்து வந்து, கட்டி, முத்தம் தந்து, மடியில் வைத்துக்கொண்டு இளைப்பாறச் செய்தாள். பக்ஷணமும் பழமும் தந்து, சங்கினால் பால் புகட்டினாள். கண்ணனின் லீலைகளைச் சொல்வதில் உற்சாகமுடைய சிறுவர்கள் சொல்லிய க்ருஷ்ணலீலைகளைக் கேட்டு யசோதை ஆனந்தக்கண்ணீர் வடித்தாள்.*

अन्यानपि च तान् बालान् कृष्णप्रेमपरायणान् ।
यशोदा लालयामास भेदभावविवर्जिता ॥२२॥

न गच्छन्ति गृहं तेपि लालिताश्च यशोदया ।
मेनिरे कृष्णसुहृदस्तामेव निजमातरम् ॥२३॥

अन्याश्च मातरः कृष्णं लालयन्त्यो हरिं सदा ।
कृष्णवात्सल्यसंमुग्धाः स्वपुत्रान्नैव सस्मरुः ॥२४॥

एवं प्रणयभावेन भगवान्नन्दनन्दनः ।
जनयन् परमान्दं चिक्रीड व्रजबालकैः ॥२५॥

*22-25. கண்ணனிடம் அன்புகொண்ட சிறுவர்கள் யாவரையுமே யசோதை தன் குழந்தையைப்போல் லாலனை செய்வாள். அவளுக்கு பேதமனப்பான்மை கிடையாது. யசோதையினால் கொண்டாடப்படும் சிறுவர்களும் தங்கள் வீட்டிற்குப் போகமாட்டார்கள். யசோதையையே தங்கள் தாயாராக எண்ணி இருப்பார்கள். மற்ற தாய்மார்களும் கண்ணனைக் கொஞ்சுவதில் மயங்கி தங்கள் பிள்ளைகளை மறந்து விடுவார்கள். இவ்வாறு ப்ரேமையினால் நந்தகுமாரன் பரமானந்தத்தை வளர்த்துக்கொண்டு சிறுவர்களுடன் விளையாடினான்.*

वीथ्यां वीथ्यां सञ्चरन्तं सन्ततं केलितत्परम् ।
यशोदा पुत्रमाहूय स्वशय्यायामशीशयत् ॥२६॥

कीर्तयन्ती कथां पुण्यां लालयन्ती पुनः पुनः ।
स्वयमेव हि सा निद्रां प्राप नन्दकुटुम्बिनी ॥२७॥

सुप्तां स्वमातरं वीक्ष्य शनैरुत्थाय माधवः ।
निकुञ्जं गच्छति प्रेम्णा सङ्केतज्ञां सखीं स्मरन् ॥२८॥

ललितां वा विशाखां वा राधिकां वा तथा पराम् ।
परिरभ्य रहः कृष्णो रमयन् रमते हरिः ॥२९॥

जानीयाद्यदि सा माता स्वकं शृङ्गारचेष्टितम् ।
सान्त्वयत्येव भगवान् समयोचितवार्तया ॥३०॥

23 गोपीनां प्रेमभावञ्च हरेः स्वच्छन्दचेष्टितम् ।
जानन्तोपि जनाः सर्वे चक्रिरे प्रीतिमेव हि ॥३१॥

26-31. மாலைப்பொழுதில் வீதிகள்தோறும் துள்ளி விளையாடும் கண்ணனை யசோதை கூவியழைத்துப் படுக்கையில் படுக்க வைப்பாள். பாடிக்கொண்டும், கதை சொல்லிக் கொண்டும் யசோதை தான் தூங்கிப்போய்விடுவாள். கண்ணன் மெள்ள எழுந்துசென்று ராதை, லலிதை, விசாகை முதலிய தோழிகளுடன் விளையாடி வருவான். தெரிந்துகொண்டு யசோதை கேட்டால், ஸந்தர்ப்பத்திற்கு ஏற்றவாறு பதில் சொல்வான். யசோதை கண்ணனின் லீலைகளை அறிந்து கொண்டும் கோபிக்கமாட்டாள். கண்டிக்கவும் மாட்டாள்.

इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये श्रीगोविन्दकाण्डे श्रीकृष्णलीलावर्णनं नाम पञ्चदशोऽध्यायः॥ १५॥

இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிமஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவனமாஹாத்ம்யத்தில் கோவிந்தகாண்டத்தில் பதினைந்தாவது அத்யாயம் முற்றும்.

## अथ षोडशोऽध्यायः

## பதினாறாவது அத்யாயம்

### भागवता ऊचुः

कर्णामृतमिदं सर्वं मधुरं कृष्णचेष्टितम् ।
वयमास्वाद्य हृष्टाः स्म तवैव कृपया गुरो ॥१॥

रहस्यञ्च प्रकाशञ्च यच्चरित्रं शुभं हरेः ।
तत्सर्वं वद शिष्याणां श्रोतृणामपि सद्गुरो ॥२॥

**பாகவதர்கள்**

1-2. க்ருஷ்ணலீலை யாவும் எங்கள் காதுக்கு அமுதமாய் இருக்கிறது. குருவே! உமது கருணையால் அதைப் பெற்று ஆனந்தமடைகிறோம். க்ருஷ்ணலீலைகளில் எது ரஹஸ்ய மானதோ எது ப்ரகாசமானதோ அவையாவையும் சிஷ்யர்களான எங்களுக்குச் சொல்லவேண்டும்.

श्रीसद्गुरुरुवाच

विना सङ्कर्षणेनैव कदाचित् श्यामसुन्दरः ।
गोपालबालकैः साकं जगाम यमुनावनम् ॥३॥

इतस्ततः सञ्चरन्तो नानाकेलिविशारदाः ।
तृषार्ता गोपबालाश्च यमुनाह्रदमाययुः ॥४॥

पाययित्वा तदा वत्सान् पीत्वा च यमुनाजलम् ।
तीरे निपेतुस्ते सर्वे विषतापविमूर्च्छिताः ॥५॥

कटाक्षेणैव दिव्येन भगवान्नन्दनन्दनः ।
सर्वानुत्थापयामास प्रणतार्तिहरो हरिः ॥६॥

हेतुं विचिन्तयंस्तत्र सर्वज्ञो नन्दनन्दनः ।
कालीयविषसंव्याप्तं वेद तद्यमुनाजलम् ॥७॥

कालीयो नागराजस्तु वैनतेयेन ताडितः ।
विहाय रमणद्वीपं वासमत्र करोति च ॥८॥

ஸ்ரீஸத்குரு

*3-8. ஒருநாள் கண்ணன் ராமனை விட்டுவிட்டு சிறுவர்களுடன் ப்ருந்தாவனத்திற்குச் சென்றான். சிறுவர்கள் யாவரும் இங்குமங்கும் ஓடி விளையாடிக்கொண்டே தாகத்துடன் யமுனை மடுவிற்கு வந்தனர். கன்றுகளைத் தண்ணீர் குடிக்கச் செய்து, தாங்களும் குடித்தனர். ஆனால், அந்த தண்ணீரில் விஷம் இருந்ததால், கன்றுகளும் சிறுவர்களும் விஷத்தினால் மயக்கமடைந்து விழுந்து விட்டனர். கண்ணபிரான் தனது கடாக்ஷத்தினால் அவர்களை எழுப்பிவிட்டான். யமுனாஜலத்தில் 'காளியன்' என்கிற கொடிய நாகம் இருப்பதே காரணம் என்று உணர்ந்தான்.*

ரமணத்வீபத்தில் இருந்த காளியன் கருடனுக்குப் பயந்து கொண்டு இங்கு குடியேறியிருந்தான்.

तस्यैव निग्रहं कर्तुं विनिश्चित्य हरिः स्वयम् ।
कदम्बशाखामारुह्य ददर्श भुजगाधिपम् ॥९॥

समुज्ज्वलद्रत्नपङ्क्तिविलसच्छतशीर्षकम् ।
समुच्छ्वसन्तं क्रुद्धञ्च ददर्शोरगमच्युतः ॥१०॥

वर्धयन् गोपबालानां प्रहर्षञ्च बलानुजः ।
आस्फोट्य न्यपतत्तस्य नागस्य शिरसि प्रभुः ॥११॥

निपतन्तं निर्भयं तं बालकं भुजगेश्वरः ।
अपश्यत्कोपसंयुक्तो दग्धुकामो विषेण च ॥१२॥

*9-12. அந்தக் காளியனை அடக்க வேண்டிக் கண்ணன் கதம்பமரத்தில் ஏறிக் காளியனைப் பார்த்துக் கொண்டிருந்தான். தனது நூறு தலைகளிலும் நாகரத்னங்கள் ஜொலிக்க, 'புஸ்' என்று சீறிக்கொண்டு வரும் காளியனைக் கண்ட கண்ணன் தோளைத் தட்டி ஆர்பாட்டம் செய்துகொண்டு அந்த பாம்பின் தலையில் குதித்தான். கொஞ்சமேனும் பயமில்லாமல் தன் தலையில் குதித்த குழந்தையை விஷத்தினால் பொசுக்கிவிட எண்ணி காளியன் பார்த்தான்.*

तं दृष्ट्वा सुन्दराकारं सर्वभूतमनोहरम् ।
इन्दीवरसमच्छायमिन्दिराप्राणवल्लभम् ॥१३॥

पीताम्बरधरं देवं पद्ममालाविभूषितम् ।
पुण्यश्लोकं जगन्नाथं पूर्णचन्द्रसमाननम् ॥१४॥

भर्तारं सर्वलोकानामत्यन्तकरुणाकरम् ।
आश्रिताभयदातारं भक्तवत्सलमच्युतम् ॥१५॥

सर्पराजोपि वात्सल्याद्बबन्ध प्रेमपूर्वकम् ।
सर्वशक्तोपि भगवान् सहसा विवशोऽभवत् ॥१६॥

13-16. உள்ளத்தைக்கவரும் அழகுடையவனும், நீலோத்பலம் போல் நீலவர்ணமானவனும், லக்ஷ்மிதேவிக்கு ப்ராணநாதனும், ஜகன்னாதனும், பீதாம்பரதாரியும், தாமரைப்பூமாலை அணிந்தவனும், புண்ணியமான சரித்ரம் உடையவனும், பூர்ணசந்த்ரனையொத்த முகமுடையவனும், அளவுகடந்த கருணை உடையவனும், அண்டியவர்களுக்கு அபயந் தருபவனும், பக்தவத்ஸலனுமான அச்சுதனைக் கண்ட காளியன் ப்ரேமையுடன் வாத்ஸல்யத்தினால் கட்டிக் கொண்டான். ஸர்வவல்லமை உடையவனான பகவானும் அவனுக்கு வசமாகிவிட்டான்.

तं दृष्ट्वा नागभोगेन निबद्धं नन्दनन्दनम् ।
चुक्रुशुर्बालकाः सर्वे कृष्ण कृष्णेति सुस्वरम् ॥१७॥

बालानां क्रन्दनञ्चैतच्छ्रुत्वा गोकुलवासिनः ।
आजग्मुस्त्वरया तत्र भीताः सञ्जातसंभ्रमाः ॥१८॥

महाभुजगसन्दष्टं विलोक्य मधुसूदनम् ।
किं कर्तव्यमिति स्मृत्वा रुरुदुर्व्रजवासिनः ॥१९॥

मातरो बालकाश्चैव गावो वत्साश्च सुस्वरम् ।
रुरुदुर्यमुनातीरे श्रीकृष्णनिहितेक्षणाः ॥२०॥

तावन्नन्दोपि धैर्येण कृष्णं मोक्तुमियेष सः ।
न्यरुणद्बलभद्रस्तमुक्त्वा कृष्णबलं महत् ॥२१॥

प्रताडयन्ती शिरसि वक्षस्यापि तथोदरे ।
रुरोद नितरां माता दृष्ट्वा दृष्ट्वा प्रियं सुतम् ॥२२॥

सान्त्वयामास तां देवीं रौहिणेयो हलायुधः ।
कृष्णप्रभावं निखिलं प्रवदंश्च पुनः पुनः ॥२३॥

17-23. பாம்பினால் கட்டுப்பட்ட கண்ணனைக் கண்ட சிறுவர்கள் பயந்து, 'கண்ணா!கண்ணா!' என்று கதறி அழத்தொடங்கினார்கள். குழந்தைகளின் கூச்சலைக் கேட்டு, ஆயர்கள் யாவரும் ஓடிவந்தனர். காளியனிடம் அகப்பட்ட கண்ணனைக் கண்டு என்ன செய்வதென்று தெரியாமல் யாவரும் அழுதனர். தாய்மார்களும், சிறுவர்களும், பசுக்களும், கன்றுகளும் கண்ணனைப் பார்த்துப்பார்த்து யமுனைக் கரையில் நின்று அழுதார்கள். நந்தகோபரும், கண்ணனை விடுவிக்க விரும்பி யமுனையில் இறங்கச் சென்றார். பலராமனோ கண்ணனின் பெருமையைச் சொல்லி நந்தகோபரைத் தடுத்து ஸமாதானம் செய்தான். யசோதை தலையிலும் வயிற்றிலும் அடித்துக்கொண்டு அலறினாள். பலராமன் கண்ணனின் பெருமையைச் சொல்லிச் சொல்லி ஸமாதானம் செய்துகொண்டிருந்தான்.

आत्मानं मोचयामास कृपया गोकुलेश्वरः ।
आरुरोह शिरस्तस्य लीलया रत्नशोभितम् ॥२४॥

ननर्त नन्दबालश्च नानाभूषणभूषितः ।
कालीयफणरङ्गेऽस्मिन् क्वणत्कनकनूपुरः ॥२५॥

तदा देवर्षिगन्धर्वाः सिद्धविद्याधरादयः ।
नृत्यन्तः कीर्तयन्तश्च पुष्पवृष्टिञ्च चक्रिरे ॥२६॥

ववौ वायुः सुखस्पर्शो नानापुष्पसुगन्धितः ।
विरेजे भगवान् सूर्यो मेघावरणनिर्गतः ॥२७॥

सर्वे गोविन्दनाट्यं तद्ददृशुः परमाद्भुतम् ।
शिञ्जानमञ्जुमञ्जीरनिनदाविद्धदिङ्मुखम् ॥२८॥

उच्चैः सञ्जहसुर्बालाः कृत्वा हस्तविघट्टनम् ।
ननृतुश्च स्वयं हृष्टा दृष्ट्वा कृष्णस्य नर्तनम् ॥२९॥

24-29. அதற்குள் கண்ணன் காளியனிடமிருந்து தன்னை விடுவித்துக்கொண்டு, விளையாட்டாகப் படமெடுத்து ஆடும் காளியனின் உச்சியில் ஏறிவிட்டான். பற்பல பூஷணங்கள் அணிந்த நந்தகுமாரன் கால்களில் சலங்கை கொஞ்ச காளியனின் உச்சியில் நாட்டியமாடினான். தேவர்கள், கந்தர்வர்கள், ஸித்தர்கள், வித்யாதரர்கள், யாவரும் ஆடினர். பாடினர். மலர் மாரிப்பொழிந்தனர். நறுமணத்துடன் காற்று நன்றாக வீசியது. சூர்யபகவானும் ப்ரகாசித்தான். நாற்புறமும் எதிரொலிக்கும் சலங்கை சத்தத்துடன் கண்ணன் செய்யும் அதிசய நாட்யத்தை யாவரும் கையைத் தட்டிக்கொண்டு கூச்சலிட்டு சிரித்தனர். கண்ணனின் ஆட்டத்தைக் கண்டு தாங்களும் ஆடினர்.

विश्वंभरस्य भारेण नष्टदर्पो महाबलः ।
वमन् मुखेभ्यो रक्तञ्च परं क्लेशमवाप सः ॥३०॥

नागपत्न्यस्तु तं देवं विज्ञाय पुरुषोत्तमम् ।
पतिभिक्षां प्रयच्छेति कृष्णं शरणमाययुः ॥३१॥

शरण्यः सर्वलोकानां देवो दामोदरो हरिः ।
अभयं प्रददौ ताभ्यो विमुमोचोरगाधिपम् ॥३२॥

ज्ञात्वा नारायणं देवं नररूपेण संस्थितम् ।
तुष्टाव प्रणतश्चापि कालीयो भुजगेश्वरः ॥३३॥

नागपत्न्यश्च ताः सर्वा नानारत्नविभूषणैः ।
गोविन्दं भूषयामासुः सुराणामपि दुर्लभैः ॥३४॥

आज्ञया देवदेवस्य सुपर्णभयवर्जितः ।

जगाम रमणद्वीपं कालीयः सकुटुम्बकः ॥३५॥

30-35. உலகத்தையெல்லாம் தனது திருவயிற்றில் தாங்கும் கண்ணனின் பாரத்தை தாங்கமுடியாமல் காளியன் களைத்துப் போய் ரத்தத்தைக் கக்கினான். நாகபத்னிகள் கண்ணனைக் கடவுள் என்று அறிந்துகொண்டு காளியனைக் காப்பாற்றும் படி வேண்டி சரணமடைந்தனர். தாமோதரனும் அவர்களுக்கு அபயந்தந்து காளியனையும் விட்டுவிட்டான். குழந்தைக் கண்ணன் நாராயணன் என்று அறிந்து காளியனும் போற்றிப் பணிந்தான். நாகபத்னிகளும், நாகரத்னங்களால் கண்ணனை அலங்கரித்தனர். கண்ணனின் ஆணையால் கருடபயம் நீங்கப்பெற்று காளியன் தனது குடும்பத்துடன் ரமணத்வீபமே சென்றான்.

भगवानपि सानन्दं प्रसन्नवदनाम्बुजः ।
आगत्य यमुनातीरं मातरं परिषस्वजे ॥३६॥

तं विलोक्य घनश्यामं मृतं पुनरिवागतम् ।
प्रणयादङ्कमारोप्य लालयामास रोहिणी ॥३७॥

मूर्ध्न्युपाघ्राय तं बालं परिष्वज्य पुनः पुनः ।
प्रहृष्टा पुनराजग्मुर्गोकुलं गोपिकास्तदा ॥३८॥

मङ्गलायैव पुत्रस्य नन्दगोपो महामनाः ।
विप्रेभ्यः प्रददौ धेनूः सवत्सा हेमभूषिताः ॥३९॥

इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये श्रीगोविन्दकाण्डे कालीयनर्तनं नाम षोडशोऽध्यायः॥ १६॥

36-39. உடனே பகவானும் ப்ரஸன்னமான முகத்துடன் கரையேறி வந்து யசோதையைக் கட்டிக் கொண்டான். செத்துப் பிழைத்தவன்போல் வந்த கண்ணனை ரோஹிணியும் மடியில் வைத்துக்கொண்டு லாலனை செய்தாள். கோபிமார் யாவரும்

கண்ணனைக் கட்டிக்கொண்டு உச்சி முகர்ந்தனர். கொஞ்சினர். பிறகு யாவரும் கோகுலத்திற்கு வந்தனர். உதாரகுணமுடைய நந்தகோபன் குழந்தையின் க்ஷேமத்திற்காக வேண்டி அந்தணர்களுக்கு அளவுகடந்த தான தர்மம் செய்தான்.

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிமஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவனமாஹாத்மியத்தில் கோவிந்தகாண்டத்தில் பதினாறாவது அத்யாயம் முற்றும்.**

# अथ सप्तदशोऽध्यायः

## பதினேழாவது அத்யாயம்.

**श्रीसद्गुरुरुवाच**

अनुग्रहाय साधूनां दुष्टानां निग्रहाय च ।
संस्थापनाय धर्मस्य लोकेऽवतरति प्रभुः ॥१॥

किन्तु बृन्दावनेशस्य स्वभावः प्रेमपूरितः ।
तत्तद्भावप्रकारेण करोति प्रणयं प्रभुः ॥२॥

अनुग्रहं निग्रहं वा न करोति स्वयं हरिः ।
न द्वेषो नैव रागश्च सर्वत्र समदर्शनः ॥३॥

कृतोपि निग्रहस्तेन क्षेमायैव हि कल्पते ।
यथैव जननीकोपो बाले स्वच्छन्दवर्तिनि ॥४॥

एवं बृन्दावनेशोपि सञ्चरन् यमुनातटे ।
जघान लीलया दैत्यान् वधार्थं स्वयमागतान् ॥५॥

**ஸ்ரீஸத்குரு**

*1-5. ஸாதுக்களை காப்பதற்கும், துஷ்டர்களை ஒழிப்பதற்கும், தர்மத்தை நிலைநாட்டுவதற்கும், பகவான் உலகில் அவதரிக்கிறான். உண்மையில் ப்ருந்தாவனவிஹாரியின்*

ஸ்வபாவம் ப்ரேமை நிரம்பியதே. ஆனால் அவரவர்கள் மனோபாவத்திற்குத் தக்கபடி ப்ரேமையை வெளியிடுகிறான். கண்ணன் நிக்ரஹமோ, அனுக்ரஹமோ தானாகவே செய்வதில்லை. ஏனெனில் அவனுக்கு யாரிடமும் விருப்போ வெறுப்போ கிடையாது. கண்ணன் ஸமதர்மம் உடையவன். குழந்தையைத் தாயார் கண்டிப்பதைப்போல் அவன் செய்யும் நிக்ரஹமும் க்ஷேமத்திற்காகவேதான். இவ்வாறுதான் ப்ருந்தாவனத்தில் ஸஞ்சரிக்கும் கண்ணன் வதத்தை விரும்பி தானே தேடிவந்த பல அஸுரர்களை வதம் செய்தான்.

आदाय लीलया दैत्यं वत्सरूपेण संस्थितम् ।
प्रक्षिप्यैव कपित्थाग्रे जघान भगवान् हरिः ॥६॥

दत्वा फलानि बालेभ्यः प्रहसन्नन्दबालकः ।
पूजितो गोपबालैश्च चचार यमुनातटे ॥७॥

एवं ग्रसन्तमात्मानं बकरूपञ्च दानवम् ।
तीक्ष्णतुण्डं महाभीमं विददार च लीलया ॥८॥

प्रविष्टानां बालकानां पालनायैव तन्मुखम् ।
प्रविश्य मारयामास सर्पाकारमघासुरम् ॥९॥

प्रक्षिप्य तालवृक्षेषु खररूपञ्च धेनुकम् ।
फलानि पातयामास बालानां परितुष्टये ॥१०॥

6-10. கன்றுவடிவில் வந்த வத்ஸாஸுரனைக் கண்ணன் விளாமரத்தில் வீசியெறிந்து வதம் செய்தான். சிறுவர்களுடன் விளாங்கனிகளை உண்டு மகிழ்ந்தான். அவ்வாறே கொக்குவடிவில் வந்த பகாஸுரன் கண்ணனை விழுங்கவே, கண்ணன் அவனுடைய அலகைப்பற்றிக் கிழித்து எறிந்தான். மலைப்பாம்பு வடிவத்தில் வந்த அகாஸுரன் சிறுவர்களை விழுங்கிவிடவே, கண்ணனும் அவன் வாய்க்குள் சென்று சிறுவர்களைக் காப்பாற்றினான். கழுதைவடிவத்தில் வந்த

தேனுகாஸுரனைப் பனைமரத்தில் வீசிக்கொன்று போட்டுப் பனம்பழங்களை உதிர்த்து, பாலகர்களுடன் சாப்பிட்டான்.

एवं बहुविधां लीलां दुष्टनिग्रहरूपिणीम् ।
कुर्वन् प्रतिदिनं कृष्णश्चचार यमुनावने ॥११॥

संप्राप्य गोकुलं सायं बालका जातकौतुकाः ।
मातृभ्यः कथयामासुः कृष्णस्याद्भुतचेष्टितम् ॥१२॥

बालभाषितमित्येता विश्वासं नैव चक्रिरे ।
माहात्म्यं कल्पनातीतं हरेः संशयदं ननु ॥१३॥

*11-13.* இவ்வாறு தினந்தோறும் ப்ருந்தாவனத்தில் கண்ணன் பல துஷ்டர்களை ஒழிப்பான். கண்ணனின் அதிசயச் செயல்களைச் சிறுவர்கள் தங்கள் தாய்மார்களிடம் சொல்லிக் கொள்வார்கள். ஆனால் பெரியோர்கள் குழந்தைகளின் பேச்சை நம்புவதில்லை. கற்பனைக்கெட்டாத கண்ணனின் பெருமையை யார்தான் நம்ப முடியும்?

एकदा गोपबालाश्च गोपाला गोकुलस्त्रियः ।
स्वच्छन्दं गाश्चारयन्तश्चेरुः सूर्यसुतातटे ॥१४॥

तदाऽर्धरात्रे तत्रैव प्रसुप्ते गोकुले वने ।
दावाग्निर्ददृशे घोरः परितः प्रज्वलन्महान् ॥१५॥

तं दृष्ट्वा भीतिमापन्ना हरिं शरणमाययुः ।
भगवान्नन्दसूनुश्च पपौ तं योगमायया ॥१६॥

न तत्र भाति सूर्यश्च न चन्द्रो नैव तारकाः ।
कुतोऽयमग्निरित्याद्या श्रुतिर्गायति तत्परा ॥१७॥

किमत्र चित्रं गोविन्दे श्रितरक्षणतत्परे ।

यस्य सन्ति वशे लोका महाभूतानि पञ्च च ॥१८॥

14-18. ஒருநாள் ஆயர்கள்யாவரும் கோபிமார்களுடனும், சிறுவர்களுடனும், யமுனைக்கரையில் மாடுமேய்த்துக் கொண்டிருந்தனர். நள்ளிரவாகியும் அவர்கள் வீடு திரும்ப வில்லை. ப்ருந்தாவனத்திலேயே தூங்கிவிட்டனர். அப்பொழுது கோரமான காட்டுத்தீ நாற்புறமும் சூழ்ந்து கொண்டது. அதைக் கண்டு பயந்து அவர்கள் பகவானை சரணமடைந்தனர். கண்ணபிரானும் அந்தத் தீயை அள்ளிக் குடித்தான். சூர்யன், சந்திரன், நக்ஷத்ரங்கள் இவைகளுக்குங்கூட ஒளியைத் தந்த க்ருஷ்ணபரமாத்மாவிடம் தீ என்ன செய்ய முடியும்? மங்கிப் போய்விட்டது. ஐம்பெரும்பூதங்களையும் தன் வசத்தில் வைத்திருக்கும் கோவிந்தன் அண்டியவர்களைக் காக்க என்னதான் செய்யமாட்டான்!

ऊषुः समीपे वैदीका ब्राह्मणा यज्ञदीक्षिताः ।
तेषां पत्न्यो महासाध्व्यः कृष्णप्रेमपरायणाः ॥१९॥

अवरुद्धा गृहे भर्त्रा श्रीकृष्णविरहाकुलाः ।
कृष्णदर्शनमप्राप्य दुःखं प्रापुर्दिने दिने ॥२०॥

अग्रहारं स्वयं गत्वा भगवान् भक्तवत्सलः ।
वेणुनादेन दिव्येन यज्ञपत्नीः समाह्वयत् ॥२१॥

गोपीभावेन सम्युक्ता वेणुगानवशीकृताः ।
विस्मृत्य स्वकुलाचारं कृष्णमेव पतिं ययुः ॥२२॥

ताः समानीय गोविन्दः सान्त्वयन् प्रेमपूर्वकम् ।
प्रददौ दर्शनं ताभ्यो ब्रह्मादिसुरदुर्लभम् ॥२३॥

जातिगर्वेण सम्युक्ता विद्यागर्वेण च द्विजाः ।
श्रीकृष्णं ददृशुर्नैव विष्णुमायाविमोहिताः ॥२४॥

नूनं भगवतो माया योगिनामपि मोहिनी ।
वैदिका नैव जानन्ति वेदवेद्यं हरिं परम् ॥२५॥

19-25. ப்ருந்தாவனத்தின் ஸமீபத்தில் யாகம் செய்யும் சில அந்தணர்கள் குடியிருந்தனர். அவர்களின் மனைவிகள் கண்ணனிடம் பக்தி உடையவர்கள். நற்குணமுடைய அவர்கள் தங்கள் தங்கள் கணவனை மீறாமல் வீட்டில் கட்டுப் பட்டிருந்தனர். ஆனால் கண்ணனைக் காண தினந்தோறும் துடிதுடித்துக் கொண்டிருந்தனர். பக்தவத்ஸலனான கண்ணன் அந்த ஊரின் ஸமீபத்திற்கு சென்று வேணுகானம் செய்தான். அதைக்கேட்டு மயங்கிய அந்தப் பெண்மணிகள் தங்கள் குலத்தையும் ஆசாரத்தையும் மறந்து, கோபிகைகளைப்போல் கண்ணனிடம் ஓடி வந்தனர். பகவான் தேவர்களுக்கும் துர்லபமான தனது தர்சனத்தைத் தந்து அவர்களை ஸமாதானம் செய்தான். பகவானின் மாயையில் மோஹித்த அந்தணர்களோ கல்விச் செருக்காலும், ஜாதிகர்வத்தினாலும் க்ருஷ்ணதரிசனத்தைப் பெறவில்லை. உண்மையில் பகவானின் மாயை யோகிகளையும் மயக்கக்கூடியது. ஏனெனில் வேதமறிந்தும் இவர்கள் வேதத்தில் சொல்லிய கண்ணனை அறியவில்லை.

पितरं वरुणग्रस्तमानिनाय हरिः प्रभुः ।
वारुणं लोकमासाद्य वरुणेनापि पूजितः ॥२६॥

जघान केशिनं दैत्यमश्वरूपं महाबलम् ।
कंसेन प्रेरितं कृष्णो गोपेभ्यो दर्शयन् बलम् ॥२७॥

प्रलम्बं घातयामास बलभद्रेण माधवः ।
वञ्चयन्तं गोपबालान्नररूपेण दानवम् ॥२८॥

जघान लीलया दैत्यमरिष्टं वृषरूपिणम् ।
वृषहत्या प्रकुपितां सान्त्वयामास राधिकाम् ॥२९॥

26-29. மேலும் வருணலோகம் சென்ற நந்தகோபரைக் கண்ணன் மீட்டு வந்தான். கண்ணன் வருணனாலும் பூஜிக்கப்பட்டான். குதிரைவடிவத்தில் வந்த கேசி என்ற அஸுரனையும் கண்ணன் கொன்றுவிட்டான். ஒரு சிறுவனைப்போல் வந்த ப்ரலம்பாஸுரனையும் பலராமன் கொன்று விட்டான். காளைமாட்டு வடிவத்தில் வந்த அரிஷ்டாஸுரனை கண்ணன் கொன்றான். 'நீ ஒரு ஆயனாக இருந்துகொண்டு மாட்டை ஏன் ,கொன்றாய்?' என்று கோபங்கொண்ட ராதையையும் ஸமாதானம் செய்தான்.

पवित्रमेव वृत्तान्तं कृष्णमाहात्म्यसूचकम् ।
बहुधा वर्णितं व्यक्तं श्रीशुकेन महात्मना ॥३०॥

श्रीकृष्णलीलामाधुर्यरसिकेन मयाऽत्र तु ।
सविस्तारं न कथितं गोपीप्रणयमिच्छता ॥३१॥

30-31. இத்தகைய க்ருஷ்ணசரித்ரம் யாவும் பவித்ரமானது. மஹாத்மாவான சுகமுனிவரால் ஸ்ரீபாகவதத்தில் விஸ்தாரமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. கோபிகைகளுடன் கண்ணன் செய்த மதுரமான லீலைகளிலேயே விருப்பமுடைய நான் இவைகளை சுருக்கமாகச் சொல்லிவிட்டேன்.

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये श्रीगोविन्दकाण्डे वत्सासुरादिवधो नाम सप्तदशोऽध्यायः॥ १७॥*

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிமஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவனமாஹாத்மியத்தில் கோவிந்தகாண்டத்தில் பதினேழாவது அத்யாயம் முற்றும்.**

# अथाष्टादशोऽध्यायः

## பதினெட்டாவது அத்யாயம்

### *भागवता ऊचुः*

कथं प्रणयभावेन भावातीतं हरिं परम् ।
वशीकुर्वन्ति वल्लव्यो वद सद्गुरुपुङ्गव ॥१॥

### பாகவதர்கள்

1. குருதேவரே! எண்ணங்களுக்கு எட்டாதவனான கண்ணனை கோபிகைகள் ப்ரேமையினால் எப்படி வசம் செய்து கொண்டனர்? சொல்லவேண்டும்.

### श्रीसद्गुरुरुवाच

परमात्मनि गोविन्दे यदा लीनं मनो भवेत् ।
तदैव लभ्यते सोपि भावातीतेन चेतसा ॥२॥

यथा प्रणयभावेन तस्मिंश्चित्तं विलीयते ।
तथा योगेन साङ्ख्येन तपसापि न लीयते ॥ ३॥

शृङ्गारभावैर्विविधैर्गोविन्देन वशीकृताः ।
तमेवाश्रित्य तिष्ठन्ति गोपिकाः स्त्रीस्वभावतः ॥४॥

येन केन प्रकारेण श्रीकृष्णस्मरणं भवेत् ।
धर्माधर्मविचारस्तु तदीयानां वृथा वृथा ॥५॥

न प्राप्नुवन्ति यं देवं यतयश्चापि योगिनः ।
स एव गोपनारीभिः प्रणयेन वशीकृतः ॥६॥

### ஸ்ரீஸத்குரு

2-6. எப்பொழுது க்ருஷ்ணபரமாத்மாவிடம் மனது லயிக்குமோ, அப்பொழுதே அவன் கிடைக்கிறான். ப்ரேமையினால் எளிதில் மனம் அவனிடம் லயமடைகிறது. யோகத்தினாலோ, ஆன்மவிசாரத்தாலோ, தவத்தினாலோகூட அப்படி லயிப்பதில்லை. கோபிகைகள் தங்களுடைய பெண்மைக்குத் தக்கபடி காதல்முறையால் கண்ணனிடம் பக்திகொண்டு அவனையே ஆச்ரயித்தனர். எந்த முறையிலாவது ஒருவனுக்கு க்ருஷ்ணத்யானம் கைகூட வேண்டும். அதையே லக்ஷியமாகக் கொண்டவர்களுக்கு தர்மம், அதர்மம் என்கிற விசாரம் வீணே.

யோகிகளுக்கும், துறவிகளுக்கும்கூட எந்த பரமாத்மாவை எளிதில் அடையமுடியாதோ, அவனே கோபிகைகளின் அன்புக்கு வசமானவன்.

आभीरकन्यकाः सर्वा नन्दगोपसुतं पतिम् ।
लब्धुकामा व्रतञ्चक्रुः पवित्रे यमुनातटे ॥७॥

प्रातरुत्थाय सप्रेम समाहूय परस्परम् ।
यमुनातीरमाजग्मुः सरोरुहसुगन्धितम् ॥८॥

तीरे निधाय वस्त्राणि कन्यकाः प्रेमपूर्वकम् ।
अन्योन्यमभिषिञ्चन्त्यः स्नानञ्चक्रुः सकौतुकम् ॥९॥

परिहासयुतेनापि प्रेमसंभाषणेन च ।
कङ्कणानाञ्च शब्देन सङ्कीर्णं यमुनावनम् ॥१०॥

जलक्रीडासमासक्तमानसा गोपकन्यकाः ।
कात्यायनीव्रतञ्चापि कर्तव्यं नैव सस्मरुः ॥११॥

7-11. ஆயர்சிறுமிகள் யாவரும் நந்தகுமாரனையே கணவனாக அடையவிரும்பி, விரதம் செய்தார்கள் காலையில் எழுந்திருந்து, ஒருவரையொருவர் அன்புடன் கூவி அழைத்துக்கொண்டு தாமரையின் நறுமணம் வீசும் யமுனைக்கரைக்கு வந்தார்கள். தங்கள் ஆடைகளைக் கரையில் வைத்துவிட்டு, ஒருவர்மேல் ஒருவர் தண்ணீர் அடித்துக்கொண்டு கோலாஹலமாய் நீராடினார்கள். அவர்களுடைய பரிஹாஸப் பேச்சும், கூச்சலும், கங்கணங்களின் ஒலியும் ப்ருந்தாவனத்தில் பரவியது. ஜலக்ரீடையில் தன்னை மறந்த கோபிகைகள் காத்யாயனி விரதத்தையும் மறந்துவிட்டனர்.

तदा तत्रागतः कृष्णो गोपबालैः समन्वितः ।
तासां वस्त्राण्युपादाय चारुरोह कदम्बकम् ॥१२॥

तत्र वासांस्यपश्यन्त्यः स्नानं कृत्वा कुमारिकाः ।
इतस्ततो विचिन्वन्ति यमुनासलिले शुभे ॥१३॥

उच्चैर्जहास गोविन्दः कदम्बतरुमाश्रितः ।
व्रीडयाऽवनतास्तस्थुस्तं दृष्ट्वा श्यामसुन्दरम् ॥१४॥

आकण्ठमग्नाः सलिले प्रफुल्लकमलाननाः ।
बद्धाञ्जलिपुटाश्चापि प्रार्थयामासुरच्युतम् ॥१५॥

12-15. அப்பொழுது அங்குவந்த கண்ணன் ஆயர்சிறுவர்களுடன் சிறுமிகளின் ஆடைகளை அள்ளிக்கொண்டு கதம்பமரத்தில் ஏறி ஒளிந்துகொண்டான். கன்னிகைகள் நீராடிவிட்டு ஆடைகளைக் காணாமல் யமுனைவெள்ளத்தில் தேடினார்கள். கதம்பமரத்தில் அமர்ந்திருந்த கண்ணன் 'களுக்' எனச் சிரித்தான். வெட்கமடைந்த கோபிகைகள் கழுத்துவரை யமுனைஜலத்தில் நின்றுகொண்டு கண்ணனிடம் கெஞ்சிக் கேட்டுக் கொண்டனர்.

### गोप्य ऊचुः

वासांसि देहि गोविन्द परिहासञ्च मा कुरु ।
कर्तव्यस्य व्रतस्यास्य कालोऽयमतिवर्तते ॥१६॥

### கோபிகைகள்

16. கோவிந்தா! ஆடைகளைக் கொடுத்துவிடு. கேலி செய்யாதே. எங்களுக்கு வெகுநேரமாகிவிட்டது. விரதம் செய்யவேண்டும்.

### श्रीभगवानुवाच

किं फलं प्राप्तुमिच्छन्त्यः कुरुथैतद्व्रतं शुभम् ।
श्रोतुमिच्छामि तद्व्यक्तं वदत व्रजकन्यकाः ॥१७॥

### கண்ணன்

17. கன்னிகைகளே! என்ன வரத்தை நாடி நீங்கள் விரதம் செய்கிறீர்கள்? நான் கேட்க விரும்பிகிறேன். ஒளிக்காமல் சொல்லுங்கள்.

**गोप्य ऊचुः**

क्षेमाय गोकुलस्यास्य भुवनस्यापि माधव ।
वयं कुर्मो व्रतमिदं गर्गाचार्योपदेशतः ॥१८॥

**கோபிகைகள்**

*18. மாதவா! உலகமும், கோகுலமும் மங்களமாக இருக்க வேண்டுமென்று, கர்கமுனிவர் சொன்னபடி நாங்கள் விரதம் செய்கிறோம்.*

**श्रीभगवानुवाच**

व्रतस्य हेतुं जानामि सत्यं वदत कन्यकाः ।
युष्माकमेव हृदये वसामि यदहं प्रभुः ॥१९॥

**கண்ணன்**

*19. சிறுமிகளே! நீங்கள் விரதத்தைச் செய்யும் காரணத்தை நான் அறிவேன். நான் உங்கள் உள்ளத்திலேயே இருக்கும ஈசனல்லவா? உண்மையைச் சொல்லுங்கள்.*

**गोप्य ऊचुः**

यदि त्वं हृदयेशोसि श्यामसुन्दर केशव ।
जानासि भावमस्माकं विज्ञापनमिदं वृथा ॥२०॥

**கோபிகைகள்**

*20. நீலவர்ணக் கண்ணா! நீ உள்ளத்தில் இருக்கும் ஈசன் என்பது உண்மையானால் உனக்கே எல்லாம் தெரியும் என்றால் நாங்கள் விண்ணப்பித்துக் கொள்ளவேண்டியது வீணே.*

**श्रीभगवानुवाच**

फलं प्रदातुकामोऽहं यूयं तु व्रतकर्शिताः ।
तस्मात्तीरमुपागत्य वासांस्यादाय गच्छत ॥२१॥

**கண்ணன்**

*21. சிறுமிகளே! நீங்கள் விரதம் செய்து இளைத்துப்*

போயிருக்கிறீர்கள், நான் வரம் தர விரும்புகிறேன். எனவே கரையேறிவந்து என்னிடம் ஆடைகளைப் பெற்றுக் கொள்ளுங்கள்.

**गोप्य ऊचुः**

तिलमात्र्यपि लज्जा ते नैव नैव हि नैव हि ।
द्रष्टुमिच्छसि यन्नस्त्वं विवस्त्रा गोपकन्यकाः ॥२२॥

**கோபிகைகள்**

22. கண்ணா! உனக்கு வெட்கம் என்பது எள்ளளவாகிலும் இல்லவேயில்லை. எங்களை இந்த நிலைமையில் காண விரும்புகிறாயே.

**श्रीभगवानुवाच**

यदि मां लोकभर्तारं भर्तारं प्राप्तुमिच्छथ ।
यूयमागत्य मां शीघ्रं वस्त्राणि प्राप्तुमर्हथ ॥२३॥

**கண்ணன்**

23. எல்லா உலகங்களுக்கெல்லாம் ஈசனான என்னையே கணவனாக அடைய விரும்புவீர்களானால் விரைவில் வந்து ஆடைகளைப் பெற்றுக் கொள்ளுங்கள்.

**गोप्य ऊचुः**

श्यामसुन्दर गोविन्द न कुर्याम वयं तथा ।
न ददासि यदि त्वञ्च नन्दं गत्वा वदेम हि ॥२४॥

**கோபிகைகள்**

24. கோவிந்தா! ச்யாமஸுந்தரா! நாங்கள் அப்படிச் செய்யமாட்டோம். நீ ஆடைகளைத் தராவிடில் நந்தகோபரிடம் சென்று சொல்லுவோம்.

**श्रीभगवानुवाच**

एवमस्तु न दास्यामि गृहं गच्छत सांप्रतम् ।

पिता प्रणयसम्युक्तो वृद्धः किं मां करिष्यति ॥२५॥

**கண்ணன்**

25. நல்லது. நான் தரவே மாட்டேன். இப்பொழுதே வீட்டிற்குச் செல்லுங்கள். எனது தந்தையான நந்தகோபர் என்னிடம் அன்புடையவர், மேலும் அவர் கிழவர். என்னை என்ன செய்யமுடியும்?

**गोप्य ऊचुः**

गृहं शीघ्रं गमिष्यामो देहि वस्त्राणि माधव ।
कर्तव्यं गृहकर्मास्ति कालोयमतिवर्तते ॥२६॥

**கோபிகைகள்**

26. மாதவா! வீட்டு வேலை அதிகமாக இருக்கிறது. வெகு நேரமாகிவிட்டது.வீட்டிற்குச் செல்லவேண்டும். ஆடைகளைக் கொடுத்துவிடு.

**श्रीभगवानुवाच**

मयापि श्रीवनं शीघ्रं गन्तव्यं धेनुभिः सह ।
तस्मात्समीपमागत्य वन्दनं कुरुत प्रियाः ॥२७॥

**கண்ணன்**

27. எனக்கும் நேரமாகிவிட்டது. மாடு மேய்க்க ப்ருந்தாவனம் போகவேண்டும். ப்ரியமான தோழிகளே! என் ஸமீபம் வந்து வந்தனம் செய்யுங்கள்.

**गोप्य ऊचुः**

अधर्मोऽयं न जानासि लोकनिन्दाञ्च माधव ।
अस्माकं बान्धवा नूनं त्वां निन्देयुरितःपरम् ॥ २८॥

**கோபிகைகள்**

28. மாதவா! இது அதர்மம் என்று அறியாயோ? உலகம் பழிக்குமே! எங்கள் பந்துக்கள் உன்னைத் திட்டுவார்கள்.

### श्रीभगवानुवाच

विवस्त्राप्लवनं ह्येतत्पवित्रे यमुनाजले ।
अशास्त्रीयमिति स्मृत्वा प्रायश्चित्तं वदाम्यहम् ॥२९॥

प्रायश्चित्तं हि सर्वेषां पापानां मम वन्दनम् ।
ततो मे सन्निधिं प्राप्य नमत प्रेमपूर्वकम् ॥३०॥

**கண்ணன்**

*29-30.* பவித்ரமான யமுனைஜலத்தில் ஆடையின்றிக் குளிப்பது பாபமாகும். இந்தப் பாபத்திற்கு என்னை வணங்குவதே ப்ராயச்சித்தமாகும். எனவே சீக்கிரம் வந்து வணங்குங்கள்.

### श्रीसद्गुरुरुवाच

इत्युक्ता गोपिकाः सर्वा लज्जयाऽवनतास्तदा ।
नेमुः समीपमागत्य नन्दसूनोर्महात्मनः ॥३१॥

भगवानपि ताः सर्वाः कृपया वीक्ष्य केशवः ।
स्कन्धे निधाय वासांसि प्रददौ प्रेमपूर्वकम् ॥३२॥

परिधाय स्ववासांसि प्रेमकोपेन सम्युताः ।
कटाक्षेणैव ताः सर्वा जघ्नुर्गोपालबालकम् ॥३३॥

विचित्राभिः केलिकाभिरेवमेव दिने दिने ।
आह्लादयन् गोपकन्याभिश्चिक्रीड यमुनावने ॥३४॥

एवं प्रणयभावेन वशीकृत्य जनार्दनम् ।
तमेव सस्मरुर्गोप्यो जाग्रत्स्वप्नसुषुप्तिषु ॥३५॥

**ஸ்ரீஸத்குரு**

*31-35.* இவ்வாறு சொல்லப்பட்ட கோபிகைகள் யாவரும்,

வெட்கத்தினால் தலை குனிந்தவாறு, கரையேறி வந்து கண்ணனை வணங்கினார்கள். கண்ணனும் தனது கழுத்தில் போட்டுக்கொண்டிருந்த ஆடைகளை ஒவ்வொன்றாகத் தந்தான். அதை உடுத்திக்கொண்டு கோபிகைகள் யாவரும் ப்ரணயகோபத்துடன் கடைக்கண்ணால் கண்ணனை அடித்தார்கள். இவ்வாறு தினந்தோறும் கோபகன்னிகைகளுடன் ப்ருந்தாவனத்தில் கண்ணன் விசித்திரமாய் விளையாடினான். ஆயர் சிறுமிகளும் கண்ணனை அன்பினால் தனக்கு வசமாக்கிக்கொண்டு கனவிலும் நனவிலும் அவனையே நினைத்திருந்தனர்.

इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमांहात्म्ये श्रीगोविन्दकाण्डे गोपीवस्त्रापहरणं नामाष्टादशोऽध्यायः।। १८।।

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிமஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவனமாஹாத்மியத்தில் கோவிந்த காண்டத்தில் பதினெட்டாவது அத்யாயம் முற்றும்.**

## अथैकोनविंशोऽध्यायः

## பத்தொன்பதாவது அத்யாயம்

### भागवता ऊचुः

भगवन् रसिकेन्द्रस्य व्रजराजशिखामणेः ।
प्रणयं वल्लवस्त्रीषु विस्तराद्वर्णय प्रभो ।। १।।

निबिडे यमुनातीरे स्वच्छन्दगतिरच्युतः ।
कृतवान् गोपनारीभिः कां कां लीलां वद प्रभो ।।२।।

गोपकन्याश्च ताः सर्वाः कृष्णप्रेमवशीकृताः ।
बृन्दारण्यमुपागत्य किं चक्रुः प्रेमपूर्वकम् ।।३।।

**பாகவதர்கள்**

1-3. ஸத்குரு பகவானே! ரஸிக சிகாமணியான கோபாலனுக்கும், கோபிகைகளுக்கும் நடந்த ப்ரேமலீலைகளை விஸ்தாரமாக

வர்ணிப்பீராக. சுதந்திரமாய் விளையாடும் கண்ணன் செடிகொடிகளால் நெருக்கமான யமுனைக்கரையில் கோபிகைகளிடம் என்ன என்ன லீலைகளைச் செய்தான்? கண்ணனின் அன்புக்கு வசமான சிறுமிகள் ப்ருந்தாவனத்திற்கு வந்து என்ன செய்தார்கள்?

### श्रीसद्गुरुरुवाच

अहो परममाधुर्यं कृष्णचेष्टितमद्भुतम् ।
दुरूहमप्यभक्तानां वक्ष्यामि प्रेमपूर्वकम् ॥४॥

विशाखा ललिता पद्मा चित्रा चम्पकवल्लरी ।
तुङ्गविद्या चन्द्रलेखा श्यामला विजया रमा ॥५॥

हरिप्रिया चन्द्रमुखी राधा चन्द्रावली शुभा ।
एकादशी च वासन्ती रङ्गदेवी सुदेविका ॥६॥

एवमन्याश्च सानन्दं गोपालकुलकन्यकाः ।
शिरोधृतदधिक्षीरकुंभाश्चेरुर्महावने ॥७॥

तं दृष्ट्वा गोपकन्यानां निकरं वनमालिने ।
कृष्णप्रीतिकरः शीघ्रं दधिभाण्डो न्यवेदयत् ॥८॥

सहसा नन्दबालश्च सह गोपकुमारकैः ।
वृक्षे वृक्षे निलीनश्च कन्यानां पृष्ठतो ययौ ॥९॥

### ஸ்ரீஸத்குரு

4-9. ஸாதுக்களே! க்ருஷ்ணசரித்திரம் மிகவும் மதுரமானது. அற்புதமானது. பக்தியில்லாதவர்களுக்குப் புரியாதது. சொல்லுவேன். கேளுங்கள். விசாகா, லலிதா, பத்மா, சித்ரா, சம்பகவல்லி, துங்கவித்யா, வித்யா, சந்த்ரலேகா, ச்யாமளா, விஜயா, ரமா, ஹரிப்ரியா, சந்த்ரமுகி, ராதா, சந்த்ராவளி, சுபா,

ஏகாதசி, வாஸந்தி, ரங்கதேவி, ஸுதேவி, மற்றும் பல கோபகன்னிகைகள் யாவரும்கூடி தயிர்க்குடம் பால்குடம், வெண்ணெய்க் கலயம், இவைகளைத் தலையில் தாங்கி ப்ருந்தாவனத்தில் போய்க்கொண்டிருந்தார்கள். அதைக் கண்ட ததிபாண்டன் என்கிற தோழன் கண்ணனிடம் போய்ச் சொல்லிவிட்டான்.

अन्योन्यं वल्लवीबृन्दे प्रेमसल्लापमोहिते ।
तिष्ठति श्रीवने कृष्णस्त्वाविरासीत्तदग्रतः ॥१०॥

शिरो निबद्धवस्त्रैश्च कञ्चुकोष्णीषभूषितैः ।
मण्डलीकृत्य तिष्ठद्भिर्बालकैर्दण्डपाणिभिः ॥११॥

अवरुद्धास्तदा कन्याः पलायनपरास्तदा ।
कृष्णेन रसिकेन्द्रेण गृहीताश्चुक्रुशुर्वने ॥१२॥

काश्चिन्निन्दन्ति गोविन्दं रुदन्त्यपि च काश्चन ।
तर्जयन्ति हरिं काश्चित् सान्त्वयन्ति च काश्चन ॥१३॥

छलयन्त्यो हरिं काश्चिद्धावन्ति यमुनावने ।
अवरुध्य ताः सर्वाः शोचयन्ति कुमारकाः ॥१४॥

अहो भ्रातर्मातुलेति तातेति जननीति च ।
आह्वयन्ति च वल्लव्यः स्वबन्धून् दूरगामिनः ॥१५॥

एवमुच्चैर्वदन्तीनां मुखपद्मानि माधवः ।
पिधाय करपद्मेन नवनीतं प्रयाचते ॥१६॥

10-26. உடனே கண்ணன் தனது நண்பர்களுடன் மரங்களில் ஒளிந்து ஒளிந்து கன்னிகைகளைப் பின்தொடர்ந்தான். கோபிகைகள் யாவரும் ப்ருந்தாவனத்தில் ஸல்லாபம்

செய்துகொண்டு நிற்கும்பொழுது கண்ணன் திடீரென எதிரில் தோன்றினான். சட்டையும், குல்லாயும், தலையில் முண்டாசும் அணிந்த சிறுவர்கள் கையில் தடியுடன் கன்னிகைகளை வளைத்துக்கொண்டனர். அப்பொழுது அவர்கள் ஓடப் பார்த்தார்கள். கண்ணன் அவர்களைப் பிடித்துக்கொள்ளவே கூச்சலிட்டார்கள். சிலர் கோவிந்தனைத் திட்டினார்கள். சிலர் அழுதார்கள். சிலர் அதட்டினார்கள். சிலர் ஸமாதானமாகப் பேசினார்கள். கண்ணனை ஏமாற்றி ஓடினர் சிலர். அவர்களை தடுத்து நிறித்தினார்கள் சிறுவர்கள். 'ஐயோ! அப்பா! அம்மா! அண்ணா! மாமா!' என்று கூவினார்கள். கண்ணன் அவர்களின் வாயைப் பொத்தினான். 'வெண்ணெய் தா' என்று கெஞ்சினான்.

**श्रीभगवानुवाच**

इदं बृन्दावनं सर्वं मदीयं किल गोपिकाः ।
अत्र यूयं न गच्छेत स्वामिनञ्चातिगत्य माम् ॥१७॥

नवनीतं दधि क्षीरं दत्वा गच्छत निर्भयाः ।
न चेन्मार्गं न त्यजेयुरिमे मम हि किङ्कराः ॥१८॥

**கண்ணன்**

17-18. கோபிகைகளே! இந்த ப்ருந்தாவனம் எனக்கு சொந்தமான இடம். எனவே இந்த வழியாகச் சென்றால் எனக்கு சுங்கான் வரியாகத் தயிர், பால், வெண்ணெய் தந்துவிட்டுத்தான் போகவேண்டும். இல்லாவிடில் என் நண்பர்கள் உங்களைப் போகவிடமாட்டார்கள்.

**गोप्य ऊचुः**

नन्दबाल न दास्यामो नवनीतं पयो दधि ।
यत्किञ्चिदन्यद्दत्वैव गच्छेम श्यामसुन्दर ॥१९॥

**கோபிகைகள்**

19. நந்தபாலா! தயிரோ, பாலோ, வெண்ணையோ தரவே மாட்டோம். வேறுஏதாவது பெற்றுக்கொண்டு வழி விடுவாயாக.

**श्रीभगवानुवाच**

एवं चेत्तर्हि वल्लव्यो दत्वा रहसि चुम्बनम् ।
मदाग्रहविनिर्मुक्ता यूयं गच्छत निर्भयम् ॥२०॥

**கண்ணன்**

*20. அப்படியானால் தலைக்கொரு முத்தம் தந்துவிட்டு நிர்பயமாய்ச் செல்லுங்கள்.*

**गोप्य ऊचुः**

धिगिदं वचनं कृष्ण कथं वदसि निर्भयम् ।
लज्जां न वेत्सि गोविन्द केवलं केलितत्परः ॥२१॥

**கோபிகைகள்**

*21. சீச்சீ! என்ன சொல்லுகிறாய்? பயமில்லையா? கோவிந்த! எப்பொழுதும் விளையாட்டுதானா?*

**श्रीभगवानुवाच**

एकैकशः समागत्य समाश्लिष्यापि मां प्रियम् ।
मधुरं चुम्बनं दत्वा वल्लव्यो गन्तुमर्हथ ॥२२॥

अथवा मधुरं क्षीरं नवनीतं दधि प्रियाः ।
दत्वा गच्छत सप्रेम मह्यं श्रीवनचारिणे ॥२३॥

करदानं विना गन्तुं न त्यजेयुर्ध्रुवं हि वः ।
इमे शूराश्च विक्रान्ताः सुहृदो मम किङ्कराः ॥२४॥

**கண்ணன்**

*22-24. முத்தம் தரவேண்டும் அல்லது தயிரோ, பாலோ, வெண்ணையோ தரவேண்டும். ஒன்றுந்தராமல் செல்ல முடியாது. சூரர்களான என் நண்பர்கள் உங்களைப் போக விடமாட்டார்கள்.*

श्रीसद्गुरुरुवाच

एवं वदति गोविन्दे दुद्रुवुर्गोपकन्यकाः ।
अन्योन्यनेत्रचाञ्चल्यकृतसङ्केतकास्तदा ॥२५॥

सर्वेपि गोपबालाश्च कृष्णसङ्केतसोत्सुकाः ।
कन्यकास्तर्जयामासुः परिहासेन संभ्रमात् ॥२६॥

भाजनानि च सर्वाणि क्षितौ विन्यस्य कन्यकाः ।
मुखं पिधाय हस्तेन रुरुदुर्लीलया तदा ॥२७॥

तावद्गोपालकाः सर्वे पीत्वा हैयङ्गवं दधि ।
पात्राणि स्फोटयामासुः शिलायां केलितत्पराः ॥२८॥

ஸ்ரீஸத்குரு

25-28. இப்படிக் கண்ணன் சொல்லும்போதே ஆயர்சிறுமிகள் ஒருவருக்கொருவர் கண்ஜாடை செய்துகொண்டு ஓடத் தொடங்கினர். கண்ணனின் குறிப்பறிந்த தோழர்கள் கன்னிகை களைப் பரிஹாஸமாய் அதட்டினார்கள். கன்னிகைகள் பாண்டங்களைக் கீழே வைத்துவிட்டு முகத்தை மூடிக்கொண்டு அழுதனர். அதற்குள் சிறுவர்கள் தயிர் பால் வெண்ணெயை சாப்பிட்டுவிட்டு பாண்டங்களை உடைத்தனர்.

सान्त्वयामास गोविन्दो रुदतीर्गोपसुन्दरीः ।
परिरभ्य प्रेमपूर्वं दत्वा चुम्बनमच्युतः ॥२९॥

तर्जयन्निव गोपालान् सान्त्वयन्निव गोपिकाः ।
तासां कपोलदेशेषु चुचुम्ब श्यामसुन्दरः ॥३०॥

29-30. அழுகின்ற கோபிகைகளைக் கண்ணன் ஆலிங்கனம் செய்துகொண்டு ஸமாதானம் செய்தான். மற்ற சிறுவர்களிடம் பொய்க்கோபங்காட்டி அவர்களை அதட்டி நிறுத்தினான்.

ताः सर्वास्त्वरयाऽऽगत्य यशोदां कृष्णमातरम् ।
प्रेमकोपेन सम्युक्ताः प्रावोचन् कृष्णचेष्टितम् ॥३१॥

ताः सर्वा नन्दपत्न्यापि पृष्टाश्चापि पुनः पुनः ।
न प्राहुर्लज्जया गोप्यो दत्तं कृष्णेन चुम्बनम् ॥३२॥

तस्मिन् पुरुषशार्दूले युष्माकमपि योषिताम् ।
स्वच्छन्दप्रेमभावोऽयं नार्हतीति च साऽब्रवीत् ॥३३॥

यादृशस्तनयः कृष्णस्तादृशी जननी किल ।
इत्यन्योन्यं वदन्त्यश्च गृहान् जग्मुः कुमारिकाः ॥३४॥

*31-34.* சிறுமிகள்யாவரும் யசோதையிடம் வந்து முறையிட்டார்கள். யசோதை பரிந்து கேட்டுங்கூட வெட்கத்தினால் அவர்கள் கண்ணனின் லீலை முழுவதையும் சொல்லவில்லை. 'ஆண்பிள்ளையான அவனுடன் உங்களுக்கு என்ன வம்பு?' என்று யசோதை அதட்டினாள். 'பிள்ளைக்கு ஏற்ற அம்மாதான். அம்மாவுக்கேற்ற பிள்ளைதான்.' என்று சொல்லிக்கொண்டு சிறுமிகள் வீட்டிற்குத் திரும்பினர்.

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये श्रीगोविन्दकाण्डे दानलीलावर्णनं नामैकोनविंशोऽध्यायः॥१९॥*

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிமஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில் கோவிந்தகாண்டத்தில் பத்தொன்பதாவது அத்யாயம் முற்றும்.**

# अथ विंशोऽध्यायः

## இருபதாவது அத்யாயம்

### *श्रीसद्गुरुरुवाच*

चन्द्रावलीति विख्याता काचिद्गोपकुमारिका ।
आसीदाभीरनगरे कृष्णप्रेमपरायणा ॥१॥

सुन्दरी च महासाध्वी पूर्णचन्द्रसमानना ।
शुभलक्षणसंपन्ना सर्वसद्गुणसम्युता ॥२॥

माधवीमण्टपे सापि पूर्णचन्द्रविराजिते ।
कैलिन्दजासमीपस्थे मन्दमारुतसेविते ॥३॥

मधुरं मधुरं वीणां वादयामास सुस्वरम् ।
मुहुर्मुहुः कटाक्षेण हरेर्मार्गं व्यलोकयत् ॥४॥

ஸ்ரீஸத்குரு

*1-4. கோகுலத்தில் சந்த்ராவளி என்கிற ஒரு கோபகுமாரி இருந்தாள். அவள் அழகு, குணம், சீலம் எல்லாம் பொருந்தியவள். கண்ணனிடம் மிகவும் அன்புடையவள். ஒரு நாள் மாதவிமண்டபத்தில் அவள் வீணை வாசித்துக் கொண்டிருந்தாள். யமுனைக் கரையோரம் நல்ல நிலவு வீசியது. தென்றலும் கூட வீசியது. அடிக்கடி கடைக்கண்ணால் கண்ணன் வரும்வழியைப் பார்த்துக் கொண்டிருந்தாள்.*

तदा जलधरश्यामः पदशिञ्जितनूपुरः ।
कनकाम्बरधारी च करभूषितकङ्कणः ॥५॥

हरिचन्दनलिप्ताङ्गो वनमालाविराजितः ।
रत्नकेयूरसंराजद्दीर्घबाहुर्दयानिधिः ॥६॥

मल्लीसुगन्धधम्मिल्लो मातङ्गगमनो हरिः ।
मकुटायितबर्हश्च मन्दस्मेरमुखाम्बुजः ॥७॥

मुरलीवादनपरो मुनीनामपि मोहनः ।
आजगाम हरिः साक्षाद्रसिकेन्द्रशिरोमणिः ॥८॥

*5-8. அப்பொழுது கால்களில் சலங்கைகொஞ்ச, கைகளில்*

கங்கணம் ஒலிப்ப இடுப்பில் பீதாம்பரம் அணிந்து, கழுத்தில் வனமாலையும், மார்பில் ஹரிசந்தனமும் அணிந்தவனாய் முடியில் மல்லிகை மாலையும், மயிலிறகும் சூட்டிக்கொண்டு, தோள்களில் தோள்வளை ஜொலிக்க, மந்தஹாஸம் தவழும் முகமுடையவனாய், முனிவர்களின் உள்ளத்தையும் மயங்கச் செய்யும் ரஸிகசிரோமணியான நீலவர்ணக் கண்ணன் குழலூதிக்கொண்டே மதயானையைப்போல் நடந்து வந்தான்.

तं विलोक्य घनश्यामं लज्जारुणशुभानना ।
बद्धाञ्जलिपुटा तस्थौ वीणां विन्यस्य गोपिका ॥९॥

चन्द्रज्योत्स्नाद्विगुणितं तत्सौन्दर्यं विलोक्य सः ।
प्रीतिं प्रकटयामास प्रेमपूरितभाषणैः ॥१०॥

चन्द्रावलीगिरिधरौ माधवीमण्टपे शुभे ।
अक्षकेलिकया तत्र रेमाते प्रेमपूर्वकम् ॥११॥

निजसौन्दर्यलेशेन भ्रूभङ्गेन स्मितेन च ।
मञ्जुलेनापि वाक्येन कटाक्षेणापि विभ्रमैः ॥१२॥

चन्द्रावली कृष्णचन्द्रं मोहयन्ती मुहुर्मुहुः ।
जहार तस्य सर्वस्वं लीलयैव शनैः शनैः ॥१३॥

मकुटं मणिमालाञ्च कर्णभूषणमेव च ।
उत्तरीयं शिखण्डञ्च नूपुरं कङ्कणं तथा ॥१४॥

केयूरं कौस्तुभञ्चैवमङ्गुलीयकमच्युतः ।
एकैकशो निधायापि चन्द्रावल्या जितोऽभवत् ॥१५॥

9-15. அவனைக் கண்ட சந்த்ராவளி வெட்கமடைந்து வீணையைக் கீழே வைத்துவிட்டு கைகுவித்து நின்றாள்.

அவளுடைய திருமேனிப் பொலிவு நிலவு வெளிச்சத்தில் இரண்டு மடங்காக சோபித்தது. கண்ணன் அவளிடம் அன்பு காட்டினான். சந்த்ராவளியும் கண்ணனும் பகடை ஆடினார்கள். கண்ணன் அவள் அழகில் சொக்கிப்போய் பணயமாய் வைத்த தனது மகுடம், மணிமாலை, குண்டலம், உத்தரீயம், சிலம்பு, மயிலிறகு, கங்கணம், தோள்வளை, கௌஸ்துபம், மோதிரம் எல்லாவற்றையும் இழந்துவிட்டான். சந்த்ராவளி ஜெயித்து விட்டாள். கண்ணன் தோற்றுவிட்டான்.

दुद्राव भगवान् कृष्णस्त्वेकपीताम्बरान्वितः ।
वंशीमादाय गोविन्दस्त्वरया गोकुलं प्रति ॥१६॥

आह्वयामास तं देवी परिहासविचक्षणा ।
आयाहि प्राणकान्तेति मधुरस्वरसंयुता ॥१७॥

कर्तव्यमस्ति सदने पित्रोः कैङ्कर्यमद्य हि ।
तस्माद्गृहं गमिष्यामीत्यब्रवीन्नन्दनन्दनः ॥१८॥

पितृभक्तमहं जाने भवन्तं नन्दनन्दन ।
निधाय वंशीं विहरन् जयं लब्ध्वा गृहं व्रज ॥१९॥

इत्युक्त्वा सुन्दरी सापि जग्राह मुरलीं हरेः ।
तत्प्रेमविवशः कृष्णः पुनश्चिक्रीड माधवः ॥२०॥

16-20.தோற்றுப்போன கண்ணன் இடுப்பு வேஷ்டியுடன் கையில் குழலைமட்டும் எடுத்துக்கொண்டு ஓட்டம் பிடித்தான். சந்த்ராவளி பின்தொடர்ந்து சென்று 'மறுபடியும் விளையாட வா' என்று இனிமையாக அழைத்தாள். நந்தகுமாரனோ தகப்பனாருக்கு கைங்கர்யம் செய்ய வேண்டியிருப்பதாக சாக்கு சொன்னான்.'கண்ணா! உன்னை தந்தை சொல் மீறாதவன் என்று நானறிவேன். ஆயினும் நீ ஒரு பெண்மணியிடம் தோற்றுப்போவது அழகல்ல. இந்தக் குழலை பணயமாக வைத்து இழந்த பொருள் யாவையும் மீட்டுக்கொண்டு

செல்வாயாக' என்றாள் சந்த்ராவளி. கண்ணனும் ஒப்புக் கொண்டான். இருவரும் விளையாடினார்கள்.

चन्द्रावलीमाधवयोः क्रीडतोस्तत्र मण्टपे ।
मन्दारगन्धमादाय सिषेवे मलयानिलः ॥२१॥

उत्तरीयं तदा तस्या मन्दमारुतचालिते ।
स्तनतालफलद्वन्द्वं ददर्श श्यामसुन्दरः ॥२२॥

तस्याः कुङ्कुमपाटीरसुगन्धेन वशीकृतः ।
मुरलीं नैव सस्मार चन्द्रावल्या हृतां हरिः ॥२३॥

क्षणान्मनः समाधाय जितां वंशीं विलोक्य सः ।
तूष्णीं जगाम गोविन्दः स्वगृहं प्रति निर्जितः ॥२४॥

पीताम्बरं निधाय त्वं विहरन् श्यामसुन्दर ।
लभस्व माञ्च सर्वस्वमित्याह व्रजसुन्दरी ॥२५॥

पुनरागत्य गोविन्दः सावधानं विहृत्य च ।
मध्ये वंशीं हरन् कृष्णो दधाव स्वगृहं प्रति ॥२६॥

21-26. சந்த்ராவளியும் மாதவனும் மாதவிமண்டபத்தில் மறுபடியும் விளையாடினார்கள். மந்தாரமலரின் நறுமணத்துடன் மலயமாருதம் வீசிற்று. சந்த்ராவளியின் குங்குமத்தின் மணம் அதில் கலந்தது. மாதவன் மயங்கினான். தோற்றுப்போய் குழலை இழந்தான். குழலை மீட்பதற்காக பீதாம்பரத்தை வைத்து ஆடினான். விளையாட்டின் நடுவிலேயே குழலைப் பிடுங்கிக்கொண்டு கண்ணன் ஓடினான்.

तमाश्लिष्य प्रियं कान्तं बलात्कारेण वल्लवी ।
जग्राह मुरलीं प्रेम्णा हर्तुकामा हरेः करात् ॥२७॥

संपूर्णकामो भगवांल्लब्ध्वा तत्परिरम्भणम् ।
तस्यै वल्लवसुन्दर्यै ददावात्मानमेव च ॥२८॥

गत्वा निकुञ्जं तत्रत्यं चन्द्रावल्या सह प्रभुः ।
चकार विविधां लीलां सुरतज्ञः सुखप्रदः ॥२९॥

एवं गान्धर्वविधिना भगवान्नन्दनन्दनः ।
चन्द्रावलीं चन्द्रमुखीमुपयेमे लतागृहे ॥३०॥

*27-30.* பின்தொடர்ந்து வந்த சந்த்ராவளி கண்ணனின் கையிலிருந்து குழலைப் பிடுங்கிக்கொண்டாள். சந்த்ராவளி யின் ஆலிங்கனத்தைப் பெற்ற கண்ணன் உள்ளம் குளிர்ந்தான். எல்லாவற்றையும் இழந்த கண்ணனுக்கு சந்த்ராவளி தன்னையே தந்துவிட்டாள்.காந்தர்வவிதிப்படி சந்த்ராவளிக்கும் நந்தகுமாரனுக்கும் திருக்கல்யாணம் ஆயிற்று.

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये श्रीगोविन्दकाण्डे अक्षकेलिवर्णनं नाम विंशोऽध्यायः॥२०॥*

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிமஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவனமாஹாத்மியத்தில் கோவிந்த காண்டத்தில் இருபதாவது அத்யாயம் முற்றும்.**

# अथैकविंशोऽध्यायः

# இருபத்தோராவது அத்யாயம்

### श्रीसद्गुरुरुवाच

कदाचिद्यमुनातीरे कुमार्यो ललितादयः ।
इतस्ततश्चरन्ति स्म प्रियसङ्गमकाङ्क्षया ॥१॥

हंसकारण्डवाकीर्णा बकभेकनिनादिताम् ।
मणिसोपानसम्युक्तां मत्स्यकच्छपसेविताम् ॥२॥

सौगन्धिकसरोजातकल्हारकुमुदोत्पलैः ।
एवं जलरुहैरन्यैः सुतरां परिशोभिताम् ॥३॥

तीरस्थितैर्भूरुहैश्च पतत्प्रसवसम्युतैः ।
केतकीपाटलैश्चापि भूषितां पुलिनैरपि ॥४॥

प्रवालमौक्तिकाकीर्णा कल्लोलनिनदान्विताम् ।
आभीरसुन्दरीबृन्दकबरीगन्धसम्युताम् ॥५॥

रम्यां कलिन्दजां देवीमाजग्मुर्व्रजकन्यकाः ।
मृदुलास्तरणोपेतं तत्रत्यं ददृशुः प्लवम् ॥६॥

ஸ்ரீஸத்குரு

*1-6. ஒருநாள் லலிதா முதலிய கன்னிகைகள் யமுனைக்கரையில் உள்ள கண்ணனைத் தேடி அலைந்தார்கள் . மணிமயமான படிக்கட்டுகள் உடையதும், நீந்திச் செல்லுகின்ற அன்னப் பறவைகளும், துள்ளிவிளையாடும் மீன்களும், கத்துகின்ற கொக்குகளும் நிறைந்ததும், அல்லி, ஆம்பல், தாமரை, நீலோத்பலம், செங்கழுநீர் முதலியவை பூத்ததும், தாழைப் புதர்களால் சூழ்ந்ததும், கரைகளிலுள்ள மரங்களிலிருந்து சிந்திய பூக்கள்உடையதும், முத்தும் பவளமும் கொழிக்கின்ற தும், மணல் திட்டுக்கள் உடையதும், அலையோசையுடன் கூடியதும், நீராடும் கோபிமார்களின் கூந்தல்மணம் வீசுவதுமான யமுனையை அடைந்து சிறுமிகள் அங்கு ஓர் ஓடத்தைக் கண்டனர்.*

आरोढुकामास्ताः सर्वाः कैवर्तकमुपाह्वयन् ।
अत्रान्तरे नन्दसूनुराजगाम स्मिताननः ॥७॥

नीलोत्पलदलश्यामं कनकाम्बरधारिणम् ।
सुगन्धचन्दनालिप्तं वनमालाविराजितम् ॥८॥

मञ्जीरहारकेयूरकङ्कणादिविभूषितम् ।
ताम्बूलारुणवक्त्राब्जं शिखण्डमुकुटोज्ज्वलम् ॥९॥

कोटिकन्दर्पधिक्कारकरसौन्दर्यविग्रहम् ।
कम्बुग्रीवं महाबाहुं कमलाक्षं कृपानिधिम् ॥१०॥

विलोक्य गोपिकाः सर्वाः सञ्जातप्रेमभावनाः ।
मौनेन तस्थुस्तत्रैव लज्जयाऽवनताननाः ॥११॥

*7-11. அதில் ஏறி உல்லாஸமாய்ச் செல்ல விரும்பிய அவர்கள் ஓடக்காரனைக் கூவி அழைத்தனர். ஆனால் கண்ணன்தான் வந்தான். முகில் வண்ணனும், பீதாம்பரமணிந்தவனும், செஞ்சந்தனம் பூசிக்கொண்டிருப்பவனும், வனமாலை அணிந்தவனும்., சிலம்பு, ஹாரம், தோள்வளை, கங்கணம், மகுடம், மயிலிறகு இவைகளை அணிந்தவனும், வாயில் மணக்கும் தாம்பூலம் உடையவனும், கோடி மன்மதனைப் பழிக்கும் அழகுடையவனுமான தாமரைக் கண்ணனைக் கண்ட கன்னிகைகள் வெட்கத்துடன் ப்ரேமையுடன் பேசாதிருந்தனர்.*

तदा नन्दात्मजः कृष्णः प्लवमारोप्य बालिकाः ।
नानाविधां कथां रम्यां कथयन् काष्ठमग्रहीत् ॥१२॥

यमुनासलिले पुण्ये सरसं पुप्लुवे प्लवः ।
यथा शशाङ्को गगने तारामण्डलशोभिते ॥१३॥

मन्दं सिषेवे वायुश्च यमुनाजलशीतलः ।
तथा कल्लोलनादश्च कर्णानन्दप्रदोऽभवत् ॥१४॥

ताः सर्वा गोपकन्याश्च नन्दनन्दनचोदिताः ।
कङ्कणध्वनितालेन मधुरं सुस्वरं जगुः ॥१५॥

12-15. அப்பொழுது நந்தகுமாரன் அவர்களை ஓடத்தில் ஏற்றிக்கொண்டு, பலவிதமாய் கதை பேசிக்கொண்டே, துடுப்பைக் கையில் பிடித்து ஓடத்தை நடாத்தினான். ஆகாயத்தில் சந்திரன் மிதப்பதுபோல் யமுனையில் ஓடம் மிதந்தது. யமுனை அலைகளில் தவழ்ந்து வரும் குளிர்காற்று வீசிற்று. அலையோசை காதுக்கு இனிமையாக இருந்தது. கண்ணனும் தூண்டவே, கன்னிகைகள் கங்கணம் ஒலிப்பக் கரதாளம் போட்டுக் கொண்டு பாடினார்கள்.

मायया देवदेवस्य हरेर्मायाविनां प्रभोः ।
असितैरम्बुवाहैश्च व्याप्तं गगनमण्डलम् ॥१६॥

जीमूतनादसम्युक्तः प्रवातो वाति दारुणः ।
चकम्पे तत्र नौका च गृहीता हरिणापि सा ॥१७॥

भीताः कुमार्यो रुरुदुस्तीराद्दूरमुपागताः ।
सर्वास्ताः सान्त्वयामास परिहासयुतो हरिः ॥१८॥

16-18. மாயாவியான கண்ணனின் மாயையினால் ஒரு கணத்தில் ஆகாயத்தில் மேகம் சூழ்ந்தது. இடி மின்னலுடன் தூற்றலும் தொடங்கியது. பெருங்காற்றில் ஓடம் தாறுமாறாயிற்று. கன்னிகைகள் கூச்சலிட்டு அழத்தொடங்கினார்கள். கண்ணன் அவர்களைப் பரிகாசம் செய்து, சமாதானம் செய்தான்.

तत्रापि ददृशे रन्ध्रो जलधारासमन्वितः ।
तं दृष्ट्वा गोपकन्याश्च भयेनैवाभिचुक्रुशुः ॥१९॥

ययाचे निर्भयं कृष्णस्तासां वस्त्राणि माधवः ।
रन्ध्रावरोधनं कर्तुं जनयन् भयमच्युतः ॥२०॥

लज्जया गोपकन्याश्च भयेनैवापि पीडिताः ।
वस्त्राणि तस्मै प्रददुर्दुस्तरां विपदङ्गताः ॥२१॥

तावत्प्लवोऽपि पूर्णोऽभूत् यमुनासलिलेन च ।
चुक्रुशुर्गोपकन्याश्च पाहि कृष्णेति सुस्वरम् ॥२२॥

ताः समालिङ्ग्य भगवान् कृष्णः स्वच्छन्दचेष्टितः ।
सान्त्वयामास सप्रेम विविधैः प्रेमचेष्टितैः ॥२३॥

यमुनासलिले मग्ने प्लवे रन्ध्रयुते तदा ।
जानुपर्यन्तसलिला जहसुर्व्रजयोषितः ॥२४॥

ताभिः समन्वितः कृष्णो यामुनेये जले शुभे ।
चकार सलिलक्रीडां शृङ्गाररसवर्धनः ॥२५॥

*19-25.* திடீரென ஓடத்தில் ஒரு ஓட்டையும் உண்டாயிற்று. தண்ணீர் உள்ளே வரவே ஆயர்சிறுமிகள் பயந்து போனார்கள். அந்த ஓட்டையை அடைப்பதற்காகக் கண்ணன் அவர்களின் ஆடையைக் கேட்டான். அவர்கள் வெட்கமடைந்து தர மறுத்தனர். முடிவில் வேறுவழியின்றி தந்துவிட்டனர் அதற்குள் ஓடத்திற்குள் தண்ணீர் நிரம்பி ஓடம் கவிழ்ந்துவிட்டது. கோபிகைள் பயத்தினால் கண்ணனைக் கட்டிக்கொண்டனர். யமுனையில் விழுந்தனர். நல்லவேளையாக யமுனையில் அதிக ஆழமில்லை. முழங்கால் அளவுதான் ஜலம் இருந்தது.

ताः समालिङ्ग्य सानन्दं कुचकुङ्कुमलाञ्छितः ।
शृङ्गारभावैर्विविधैश्चिक्रीड यमुनाजले ॥२६॥

प्रणयक्रोधसम्युक्ता दष्टाधरपुटास्तदा ।
माधवं ताडयामासुः पद्मनालैर्व्रजाबलाः ॥२७॥

कैवर्तके न विश्वासं कुर्यादिति परा श्रुतिः ।
ज्ञात्वापि वयमेतेन वञ्चिता नन्दसूनुना ॥२८॥

एवं वदन्त्यो वल्लव्यः प्रेमकोपसमन्विताः ।
यशोदासन्निधिं प्रापुर्वक्तुं कृष्णस्य चेष्टितम् ॥२९॥

तूष्णीमेव हि तास्तस्थुर्लज्जासङ्कुचिताननाः ।
नोचुर्यशोदया पृष्टाः कृष्णलीलां यथा तथा ॥३०॥

एवं बहुविधै रम्यैर्विलासैर्नन्दनन्दनः ।
आभीरकन्यकाबृन्दमानन्दयति सन्ततम् ॥३१॥

26-31. கண்ணன் யமுனையில் ஜலக்ரீடை செய்தான். கோபிகைகள் கண்ணனிடம் பொய்க் கோபம் காட்டி ஓடக்காரனை நம்பக் கூடாது, என்று பெரியோர்கள் சொல்வார்கள். அது உண்மையாயிற்று. இந்த கண்ணன் சேதி தெரிந்தும் இவனை நம்பி இன்று ஏமாந்தோம் என்று சொல்லிக்கொண்டே யசோதையிடம் வந்தனர். இன்று என்ன நடந்தது என்று யசோதை கேட்டும், அவர்கள் உள்ளது உள்ளபடி சொல்லவில்லை. இவ்வாறு நந்தகுமாரன் பலவிதமான லீலைகளால் ஆயர்சிறுமிகளை ஆனந்தப்படுத்தினான்.

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये श्रीगोविन्दकाण्डे*

*प्लवोत्सववर्णनं नामैकविंशोऽध्यायः॥२१॥*

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிமஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவனமாஹாத்மியத்தின் கோவிந்தகாண்டத்தில் இருபத்தியோராவது அத்யாயம் முற்றும்.**

## अथ द्वाविंशोऽध्यायः

## இருபத்திரெண்டாவது அத்யாயம்.

*श्रीसद्गुरुरुवाच*

नूनं भाग्यवती वंशी श्यामसुन्दरचुम्बिता ।
स्वयमेव पिबत्येषा श्रीपतेरधरामृतम् ॥१॥

क्वचिद्वादयते वेणुं सुस्वरं मधुरं लघु ।

समाह्वयति गीतेन प्रेयसीर्व्रजसुन्दरीः ॥२॥

क्वचिद्गोवत्सकान् प्रेम्णा मन्दमन्दं हि वेणुना ।
आस्फालयंश्चारयति श्रीवने नन्दनन्दनः ॥३॥

धृत्वा शिरोवेष्टनेपि शिखण्डेन सह प्रभुः ।
सादरं स्नापयत्येष धेनूः सूर्यसुताह्रदे ॥४॥

नवनीतक्षीरकुंभं गोपनारीशिरःस्थितम् ।
क्वचित्पातयति प्रेम्णा शनैर्गत्वापि वेणुना ॥५॥

ஸ்ரீஸத்குரு

*1-5. உண்மையில் புல்லாங்குழல் பெரிய பாக்யசாலிதான். கண்ணனின் உதடுகளை எப்பொழுதும் சுவைத்துக்கொண்டே இருக்கிறதல்லவா! கண்ணன் ஒருகால் அந்தக் குழலை ஊதிதான் கோபிகைகளை அழைப்பான். மற்றொருகால் கன்றுக்குட்டிகளைக் குழலால்தான் தட்டி ஓட்டுவான். ஒருகால் தன் தலையில் முண்டாசு கட்டிக்கொண்டு அதில் குழலைச் சொறுகிக் கொண்டு யமுனை மடுவில் மாடு குளிப்பாட்டுவான். கோபிகைகள் தலையில் எடுத்துச் செல்லும் தயிர்க் குடத்தைக் குழலால் தட்டித் தள்ளுவான்.*

विन्यस्य जठरप्रान्ते तिष्ठन् सूर्यसुताजले ।
क्वचिद्दध्यन्नमश्नाति सह गोपालबालकैः ॥६॥

एवञ्च द्यूतलीलायां पणार्थं विनिधाय च ।
लभते गोपकन्यानां चुम्बनं प्रेमिको हरिः ॥७॥

एवं सर्वस्वभूतोऽसौ वेणुः कृष्णस्य सन्ततम् ।
हस्तभूषणमाभाति तद्भाग्यं वर्ण्यते कथम् ॥८॥

सर्वा वल्लवसुन्दर्यो वेणुगानवशीकृताः ।
बन्धुभिर्निन्दिताश्चापि गृहकृत्यं न सस्मरुः ॥९॥

कदाचिद्गोपसुन्दर्यः कृष्णं प्राप्य वनान्तरे ।
सादरं प्रार्थयामासुः प्रेमपूर्वं पुनः पुनः ॥१०॥

6-10. தினமும் யமுனைஜலத்தில் நின்றுகொண்டு சிறுவர்களுடன் சாப்பிடும்பொழுது குழலை இடுப்பில் சொறுகிக் கொண்டிருப்பான். கோபிகைகளுடன் பகடை ஆடும்பொழுது பந்தயத்திற்கு குழலைத்தான் வைப்பான். கண்ணனுக்கு ஸர்வ சொத்தும் குழல்தான். கண்ணனுடைய கைக்குழல் ஒரு பூஷணம். வேணு கானத்தினால் வஸம் செய்யப்பட்ட கோபிகைகள் வீட்டுவேலைகளையே செய்வதில்லை. யார் திட்டினாலும் கேட்பதில்லை. ஒருநாள் ப்ருந்தாவனத்தில் கண்ணனைக் கண்டு அவர்கள் கெஞ்சிக் கேட்டுக் கொண்டனர்.

**गोप्य ऊचुः**

वेणुगानमिदं कृष्ण गृहकृत्यनिरोधकम् ।
सायं सायं विधेहि त्वं सन्ततं मा कुरु प्रभो ॥११॥

**கோபிகைகள்**

11. கண்ணா! நீயோ குழலூதுகிறாய். எங்களுக்கோ வீட்டுவேலை ஓடவில்லை. தினந்தோறும் மாலைப் பொழுதில் மட்டும் குழல் ஊது. இப்படி ஓயாமல் ஊதாதே.

**श्रीभगवानुवाच**

एवमेव हि सङ्कल्पो ममापि व्रजकन्यकाः ।
स्वयमारोहति प्रेम्णा किन्तु वंशी ममाधरम् ॥१२॥

**கண்ணன்**

12. கன்னிகைகளே! நானும் அப்படித்தான் நினைக்கிறேன். ஆனால் இந்தக் குழல் தானாகவே என் வாய்க்கு வந்து பாட ஆரம்பித்து விடுகிறது.

## गोप्य ऊचुः

एवञ्चेत्तर्हि गोविन्द मुरलीं देहि नः प्रभो ।
सायं सायं प्रदास्यामस्तया गानं ततः कुरु ॥१३॥

**கோபிகைகள்**

13. கோவிந்தா! அப்படியானால் குழலை எங்களிடம் கொடுத்து வை. தினமும் மாலைப்பொழுது தந்து விடுகிறோம். நீ ஊதலாம்.

## श्रीभगवानुवाच

मम सर्वस्वभूतेयं प्रेयसी मुरली किल ।
तां विहाय क्षणमपि व्यर्थं मे जीवनं ननु ॥१४॥

**கண்ணன்**

14. தோழிகளே! எனக்கு ஸர்வஸொத்தும் இந்தக் குழல்தான். அதைக் கணமேனும் விட்டுப் பிரியேன். குழலில்லாத ஜீவனம் வீணே.

## श्रीराधोवाच

मुरलीवादनं कर्तुमहमिच्छामि माधव ।
त्वमेव गुरुरस्माकमुपशिक्षय मां प्रति ॥१५॥

**ஸ்ரீராதை**

15. மாதவா! எனக்கும் குழல் ஊதவேணும் போல் ஆசையாயிருக்கிறது. எங்களுக்கு நீதானே குரு. சொல்லிக் கொடுப்பாயா.

## श्रीभगवानुवाच

एवमस्तु प्रिये राधे त्वमायाहि ममान्तिकम् ।
विन्यस्य वेणुमधुरे मन्दं वादय सुन्दरि ॥१६॥

**கண்ணன்**

16. ப்ரிய ராதே! என் கிட்டே வா வாயில் குழலை வைத்து மெள்ள ஊதவேண்டும்.

### श्रीराधोवाच

अलं ते शिक्षया कृष्ण शिक्षितास्मि यथाविधि ।
वादयामि शृणु त्वञ्च मुरलीगानमच्युत ॥१७॥

### ஸ்ரீராதை

17. கண்ணா! எனக்கு ஊதவந்துவிட்டது. நீ சொல்லிக் கொடுத்தது போதும். அச்சுதா! நான் ஊதுகிறேன். நீ கேள்.

### श्रीसद्गुरुरुवाच

एवमुक्त्वा तदा राधा गृहीत्वा पाणिना च ताम् ।
वादयन्तीव मधुरं दधाव सहसा वने ॥१८॥

वेणुं देहीति गोविन्दः प्रसारितकराम्बुजः ।
पुनः पुनर्याचमानस्तामेवानुदधाव च ॥१९॥

वृक्षे वृक्षेऽनुधावन्ती वञ्चयन्ती पुनः पुनः ।
मृगीव ददृशे राधा मृगाक्षी मञ्जुभाषिणी ॥२०॥

### ஸ்ரீஸத்குரு

8-20. இவ்வாறு சொல்லி ராதை குழல் ஊதுவதுபோல் பாசாங்கு செய்துகொண்டு மெள்ள அந்தக் குழலைப் பிடுங்கிக்கொண்டு ஓடிவிட்டாள் கண்ணனோ அந்தக் குழலைக் கொடுத்துவிடு என்று கைவிரித்துக் கெஞ்சிக் கொண்டே பின்தொடர்ந்து ஓடினான். ராதையோ கண்ணனுக்கு டேக்கா கொடுத்துவிட்டு மரத்திற்கு மரம் பாச்சா காட்டிக்கொண்டே மான்குட்டிபோல் துள்ளித்துள்ளி ஓடினாள்.

गलितं वसनं तस्य मकुटं पतितं भुवि ।
विच्छिन्ना वनमालापि स्वेदस्निग्धोऽभवद्धरिः ॥२१॥

उच्चैर्हसन्ति गोप्यश्च कृत्वा हस्तविघट्टनम् ।

स्वस्वामिन्या जयं दृष्ट्वा कृष्णस्य च पराजयम् ॥२२॥

स्वयमाहूय सा देवी प्रेमभावविचक्षणा ।
कृष्णाय प्रददौ वंशीं सानन्दं नन्दसूनवे ॥२३॥

ततस्तं पूजयामासुर्गोविन्दं गोपकन्यकाः ।
गाननर्तनसल्लापपरिरम्भणचुम्बनैः ॥२४॥

एवं बृन्दावने रम्ये निकुञ्जे यमुनाह्रदे ।
पुलिनेपि गिरीन्द्रेपि स्त्रीभिश्चिक्रीड माधवः ॥२५॥

*21-25.* ஓடி ஓடிக் கண்ணன் களைத்துவிட்டான் பீதாம்பரம் அவிழ்ந்துவிட்டது. மயிலிறகு விழுந்து விட்டது. வனமாலை அறுந்துவிட்டது. திருமேனி வாடிவிட்டது. ராதைக்கு ஜெய்! கண்ணன் தோற்றான் என்று சொல்லி கோபிகைகள் கைத்தட்டி சிரித்தனர். ராதையோ கண்ணனிடம் இரக்கம் கொண்டு தானே கூப்பிட்டு குழலைக்கொடுத்துவிட்டாள். அதற்குப்பிறகு கோபிகைகள் கண்ணனைப் பூஜித்தனர். ஆடல் பாடல் களாலும், கொஞ்சிப் பேசுவதாலும் கண்ணனை மகிழ்வித்தனர். இவ்வாறு மாதவன் ப்ருந்தாவனத்திலும் அழகிய நிகுஞ்ஜத்திலும் யமுனைக்கரையிலும் கோபிகைகளுடன் விளையாடினான்

गोवत्सचारणव्याजाद्वनमेत्य दिने दिने ।
प्रियाभिर्गोपकन्याभिः स्वच्छन्दं विजहार सः ॥२६॥

गोपकन्याश्च यमुनाजलानयनहेतुना ।
बृन्दावनमुपागत्य विजह्रुर्वनमालिना ॥२७॥

अहो श्रवणमाधुर्यमिदं श्रीकृष्णचेष्टितम् ।
भवद्भ्यः श्रोतुकामेभ्यः सुगोप्यमपि कीर्तितम् ॥२८॥

गोपीनां प्रेमभावोऽयं बहुधा वर्णितः किल ।
कृष्णस्य चरितं पुण्यं किं भूयः श्रोतुमिच्छथ ॥२९॥

नूनं भाग्यवशादेव कृष्णस्य कृपयापि च ।
युष्माकं हरिदासानामग्रे वक्ष्यामि तत्कथाम् ॥३०॥

26-30. இவ்வாறு மாடு மேய்க்கும் சாக்கில் ப்ருந்தாவனம் வந்து தினந்தோறும் கண்ணன் ஆயர்சிறுமிகளுடன் கொட்ட மடிப்பான் அந்தசிறுமிகளோ யமுனையில் தண்ணீர் கொண்டு வரும் சாக்கில் ப்ருந்தாவனம் வந்து கண்ணனுடன் லூட்டி அடிப்பார்கள். இந்த க்ருஷ்ணலீலைகள் உங்களுக்குக் கேட்கக்கேட்க எப்படி இருக்கிறது. காதுகளுக்கு அமிர்தம் அல்லவா. ரஹஸ்யமானாலும் சொன்னேன். கோபிகைகளின் ப்ரேமபக்தியைப் பலவிதமாய் வர்ணித்தேன். உங்களுக்கு இன்னும் என்ன கேட்க வேண்டும் .ஹரிதாஸர்களான உங்கள் எதிரில் கதை சொல்ல நான் பாக்யம் செய்திருக்கிறேன்.

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये श्रीगोविन्दकाण्डे मुरलीहरणं नाम द्वाविंशोऽध्यायः॥२२॥*

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிமஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவனமாஹாத்மியத்தில் கோவிந்த காண்டத்தில் இருபத்திரெண்டாவது அத்யாயம் முற்றும்.**

## अथ त्रयोविंशोऽध्यायः

## இருபத்திமூன்றாவது அத்யாயம்

**भागवता ऊचुः**

पुनः पुनः कृष्णकथां श्रोतुमिच्छास्ति सद्गुरो ।
अहो भाग्यवशादेव भवान् वक्ता स्वयं हरिः ॥१॥

वयं हि गोपकन्याः स्मस्त्वं साक्षात् कृष्ण एव हि ।
गोविन्दकीर्तनञ्चेदं वेणुगानमिवास्ति नः ॥२॥

गृहकृत्यं न जानीमो लोकवेदभयं तथा ।
आस्वाद्यास्वाद्य सततं प्रहृष्टाः स्मो हरेः कथाम् ॥३॥

பாகவதர்கள்

1-3. ஸத்குருவே! மேலும்மேலும் க்ருஷ்ணகதையைக் கேட்க விருப்பம் உண்டாகிறது. எங்கள் பாக்யத்தினால் ஸாக்ஷாத் க்ருஷ்ணஸ்வரூபமாகவே இருக்கும் தாங்கள் கிடைத்திருக்கிறீர் கள். நாங்கள் கோபிகைகள்போலும்; தேவரீர் கண்ணன் போலும்; க்ருஷ்ணகதையைச் சொல்லுவதே வேணுகானம் போலும் அமைந்திருக்கிறது. ஏனெனில் தாங்கள் சொல்லும் ஹரிகதையைக் கேட்டு நாங்கள் தன்னை மறந்துவிடுகிறோம். உலகையும் மறந்துவிடுகிறோம்

श्रीसद्गुरुरुवाच

सर्वे गोपालवृद्धाश्च पूजां कर्तुं शचीपतेः ।
आज्ञया नन्दगोपस्य यत्नञ्चक्रुः ससंभ्रमम् ॥४॥

अभ्युपेत्य स्वपितरमभिवाद्य विनीतवत् ।
भगवान् वक्तुमारेभे शक्रदर्पजिघांसया ॥५॥

ஸ்ரீஸத்குரு

4-5 எல்லா ஆயர்களும் நந்தகோபரின் தலைமையில் இந்த்ரபூஜை செய்யத் திட்டமிட்டு சுறுசுறுப்பாக ஏற்பாடுகள் செய்தனர். அங்கு வந்த கண்ணன் தந்தையை வணங்கி இந்த்ரனின் கர்வத்தை அடக்க எண்ணம்கொண்டு பணிவுடன் பேசலானான்.

श्रीभगवानुवाच

स्वभावे वर्तते लोकस्तत्र दैवेन किं फलम् ।
अस्ति चेदीश्वरः कश्चित् स हि सर्वफलप्रदः ॥६॥

नाकर्मणः प्रभुः सोपि तस्मात्कर्मैव दैवतम् ।

श्रेयो विधायकं नूनं तत्तद्धर्मानुपालनम् ॥७॥

वयं गोपा महाराज गोरक्षणपरायणाः ।
गोवर्धनगिरेः पूजां करिष्यामो यथाविधि ॥८॥

**கண்ணன்**

*6-8.* பெரியோர்களே! இயற்கையாகவே உலகம் நடைபெறுகிறது. தெய்வத்தால் பயனென்ன? அப்படி தெய்வம் இருக்குமேயானால் நாம் செய்யும் கர்மங்களுக்கு அது பலனைத் தரும். கர்மங்களைச் செய்யாதவர்களுக்கு அது ப்லனைத்தர முடியாது. எனவே கர்மமே தெய்வம். அவரவர்களின் கர்மத்தைச் செய்வதே நன்மையளிக்கும். நாமோ ஆயர்கள். ஆநிரை மேய்ப்பதே நமது தர்மம். எனவே நாம் முறைப்படி கோவர்த்தனமலையைப் பூஜை செய்வோம்.

**श्रीसद्गुरुरुवाच**

इत्युक्ता नन्दपुत्रेण बाढमित्यब्रुवन् जनाः ।
सर्वोपकरणैः साकं गोवर्धनमुपागताः ॥९॥

पूजां कृत्वा यथाकल्पमन्नकूटोत्सवं तथा ।
भक्तिपूर्वं परिक्रम्य प्रययुः स्वनिकेतनम् ॥१०॥

**ஸ்ரீஸத்குரு**

*9-10* கண்ணன் இப்படிச் சொன்னதும் யாவரும் ஒப்புக் கொண்டனர். எல்லா உபகரணங்களையும் எடுத்துக்கொண்டு கோவர்த்தனமலைக்கு வந்து பூஜைசெய்து, அன்னகூடோத் ஸவம் நடத்தி வலம் வந்து வீட்டிற்குச் சென்றனர்.

तदा शतक्रतुः क्रुद्धः सांवर्तकमहाघनान् ।
प्रेषयामास सासूयं गोष्ठनाशाय कौशिकः ॥११॥

स्थूणाः स्थूला वर्षधाराः पेतुर्गोकुलमण्डले ।
महावातसमाकृष्टजीमूतरवसम्युताः ॥१२॥

झञ्झावातेन तटिता मेघनादेन वेपिताः ।
नितरां दुःखमापन्नाः कृष्णं शरणमाययुः ॥१३॥

मन्दस्मितमुखाम्भोजो भगवान् श्रितवत्सलः ।
करमुत्थाप्य कृपयाप्यभयं प्रददौ प्रभुः ॥१४॥

सद्यो गोवर्धनं शैलमुद्धृत्य भगवान् हरिः ।
तस्थौ व्यत्यस्तपादश्च गोपान् सर्वानुपाह्वयन् ॥१५॥

*11-15.* அப்பொழுது இந்த்ரன் கோபம் கொண்டு ப்ரளய காலத்தில் பொழியும் மேகங்களை கோகுலத்தை அழித்துவிடும்படி மழை பொழியும்படித் தூண்டினான். தூண் அளவிற்கு பெரிய தூற்றல்கள் விழுந்தன. காற்று மின்னல் இடியுடன் பெரும் மழை கொட்டிற்று. நடுங்கிப்போன ஆயர்கள் துன்பப்பட்டு கண்ணனைச் சரணமடைந்தனர். சரணாகதவத்ஸலனான பகவான் மந்தஹாஸம்செய்து அபயம் தந்தான். கோவர்த்தனமலையைக் குடையாகப் பிடித்து நின்றான்.

तदा पर्वतराजेन्द्रः श्रीकृष्णेन समुद्धृतः ।
चकम्पे भूरुहैः साकं हेमशृङ्गसमन्वितः ॥१६॥

उद्धृते तु महाशैले सलीलं नन्दसूनुना ।
मृगेन्द्रगजशार्दूला भीताः पेतुर्महीतले ॥२७॥

बद्धा मौक्तिकमालेव विरेजुः शैलमूलतः ।
गिरिशृङ्गान्निपतिता वर्षधाराः सहस्रशः ॥१८॥

गोपवृद्धाश्च सानन्दं संप्राप्य गिरिगह्वरम् ।
वदन्तः कृष्णमाहात्म्यमासन्नन्दाभिनन्दिताः ॥१९॥

यशोदा पुत्रवात्सल्यात् कृष्णस्य वदनाम्बुजे ।
प्रेम्णा समर्पयामास नवनीतञ्च मोदकम् ॥२०॥

16-20. பொன்மயமான கொடுமுடிகள் உடையதும், மரங்களால் சூழப்பட்டதுமான கோவர்த்தனமலை, கண்ணனால் தூக்கப்பட்டதும் ஆடி அசைந்தது. விளையாட்டாகக் கண்ணன் மலையைத் தூக்கவே மலையிலிருந்து யானை, சிங்கம், புலி முதலிய மிருகங்களும் பயந்து கீழே குதித்தன. மலையில் நாற்புறமும் கொட்டும் ஆயிரக் கணக்கான மழைதாரைகள் முத்து வடம் தொங்குவதுபோல் தோன்றின. முதியோர்கள் யாவரும் மலையின் அடிவரையில் உட்கார்ந்து நந்தகோப னுடன் கண்ணனின் மஹிமையைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தனர். புத்ரவாத்ஸல்யமுடைய யசோதையோ கண்ணனின் வாயில் வெண்ணெய் ஊட்டினாள்.

गोप्यश्च कृष्णमालोक्य भारपीडनशङ्किताः ।
चिन्तामवाप्य खेदञ्च चुचुम्बुः पाणिपल्लवम् ॥२१॥

आभीरबालकाः सर्वे मुसलैरपि पर्वतम् ।
उद्धृत्य प्रार्थयामासुर्विश्रान्त्यै माधवस्य च ॥२२॥

इमे सर्वेपि गोपाला बालकस्य करे मम ।
वृथा कुर्वन्ति सल्लापं गिरिं संस्थाप्य निर्घृणाः ॥२३॥

इति माता यशोदा च रोहिण्या सह सादरम् ।
गोविन्दं सान्त्वयामास पर्वतं पातयेति च ॥२४॥

एवं गोकुलवास्तव्यैर्नानाभावसमन्वितैः ।
संपूजितो जनैः सर्वैरुद्दधार गिरिं हरिः ॥२५॥

21-25. கோபிகைகள் யாவரும் கண்ணனின் கை வலிக்குமோ. என்று கவலைப்பட்டு அவன் கையைத் தடவி முத்தம் தந்தனர்.

சிறுவர்கள் யாவரும் உலக்கையால் மலைக்கு முட்டுக் கொடுத்துவிட்டுக் கண்ணனை ஓய்வெடுத்துக் கொள்ளும்படி வேண்டினர். யசோதையும் ரோஹிணியும் மனம் வருந்தி, இரக்கமில்லாத ஆயர்கள் என் பிள்ளையின் கையில் மலையைக் கொடுத்துவிட்டு வீணாக வம்பு பேசுகின்றனர். கண்ணா! மலையைக் கீழே போட்டுவிடு என்றனர். இவ்வாறு கோகுலஜனங்களால் பலவிதமாகக் கொண்டாடப்பட்டு பகவான் மலையைத் தூக்கிக் கொண்டு நின்றான்.

सप्ताहमेकहस्तेन गिरिमुद्धृत्य माधवः ।
गोकुलं पालयामास गोपिकाजनवल्लभः ॥२६॥

अम्भोधराश्च सर्वेपि व्योममार्गाद्विनिर्गताः ।
भगवांश्चित्रभानुश्च बभासे विशदेऽम्बरे ॥२७॥

बहिः संप्रेष्य गोपालान् संस्थाप्य भुवि पर्वतम् ।
बभासे भगंवान् कृष्णस्त्वसमानपराक्रमः ॥२८॥

गाम्भीर्यं वीक्ष्य कृष्णस्य गोपवृद्धास्तु शङ्किताः ।
नोपाजग्मुर्यथापूर्वं परमाश्चर्यदर्शनात् ॥२९॥

स्वसौलभ्यं प्रकटयन् भगवान्नन्दनन्दनः ।
सान्त्वयामास गोपालांस्त्रिजगन्मोहनस्मितः ॥३०॥

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये श्रीगोविन्दकाण्डे गोवर्धनोद्धारणं नाम त्रयोविंशोऽध्यायः ॥२३॥*

*26-30 கோபீநாதனான கண்ணன் இவ்வாறு ஏழு நாட்கள் மலையைத் தூக்கி கோகுலத்தைக் காப்பாற்றி விட்டான். மேகங்கள் நீங்கிவிட்டன. ஆகாயம் தெளிந்துவிட்டது. சூரியனும் ப்ரகாசித்தான். ஆயர்கள் யாவரையும் வெளியேஅனுப்பிவிட்டுக் கண்ணன் மலையை முன்பிருந்தபடியே வைத்தான். கண்ணனின்*

அருஞ்செயலைக் கண் கூடாகக் கண்ட ஆயர்கள் ஆச்சரியப் பட்டு எட்டி நின்றனர். பகவானும் சுலபமாய்ப் பழகி அவர்களின் அச்சத்தை நீக்கி ஸமாதானம் செய்தான்.

இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிமஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவனமாஹாத்மியத்தில் கோவிந்தகாண்டத்தில் இருபத்தி மூன்றாம் அத்யாயம் முற்றும்.

# अथ चतुर्विंशोऽध्यायः

# இருபத்திநான்காவது அத்யாயம்

### श्रीसद्गुरुरुवाच

आश्चर्यचकिताः सर्वे गोपाला जातसंभ्रमाः ।
पप्रच्छुर्नन्दगोपालं श्रीकृष्णविषयं परम् ॥१॥

### ஸ்ரீஸத்குரு

1. ஆச்சரியமும் பரபரப்புமடைந்த ஆயர்கள் யாவரும் நந்தகோபரிடம் கண்ணனின் விஷயத்தைக் கேட்டனர்.

### गोपा ऊचुः

गोवर्धनोद्धारणं क्व क्व बालः सप्तहायनः ।
अस्माकं जायते शङ्का नन्दगोप तवात्मजे ॥२॥

एवं नो बुद्धिमोहो वा स्वप्ने दृष्टमिदं हि वा ।
साक्षाद्दृष्ट्वा गिरिधरं विश्वासो नैव जायते ॥३॥

न हि मानुषमात्रोऽसौ स्वच्छन्दगतिरर्भकः ।
गोकुलं रञ्जयन्त्येवं गूढः कपटचेष्टितः ॥४॥

विष्णुं मन्यामहे कृष्णमवतीर्णं धरातले ।
यथा राक्षसनाशाय पूर्वं रघुकुले यथा ॥५॥

नूनं जानासि नन्द त्वं पुत्रस्यैश्वर्यमद्भुतम् ।
व्यक्तं कथय तत्सर्वं परं गुह्यमपि प्रभो ॥६॥

### ஆயர்கள்

2-6. நந்தகோபரே! உமது பையனிடம் எங்களுக்கு ஸந்தேஹம் உண்டாகிறது. ஏழு வயது குழந்தையாவது மலையைக் குடைபிடிக்கவாவது! இது எங்கள் புத்தி மயக்கமா? அல்லது கனவா? நேரில் கண்டும் நம்பிக்கை வரவில்லையே. இவன் மனிதனல்ல. கபடமாய்க் குழந்தைபோல் விளையாடுகிறான். கோகுலத்தில் யாவரையும் மயக்கிவிட்டான். முன்பு ராமனாக அவதாரம் செய்த விஷ்ணுவேதான் இப்பொழுது கண்ணனாகப் பிறந்திருக்கிறான் என்று உணருகிறோம். உமக்கு நன்றாகத் தெரியும். உண்மையைச் சொல்லுவீராக.

### नन्द उवाच

यथा यूयं तथाऽहञ्च केवलं गोप एव हि ।
कृष्णस्य मम बालस्य न जानामि च वैभवम् ॥७॥

अस्य बालस्य चेष्टायां न मे स्वल्पोपि विस्मयः ।
केवलं बाललीलेयं वृद्धैः कर्तुं न शक्यते ॥८॥

### நந்தகோபர்

7-8 உங்களைப்போல் நானும் ஒரு ஆயன்தானே. குழந்தைக் கண்ணனின் மஹிமை ஏதும் அறியேன். அவன் குழந்தையாக இருப்பதால் விளையாட்டாக மலையைத் துக்கிவிட்டான். நமக்கு வயதாகிவிட்டதால் முடியவில்லை. இதில் ஆச்சரியமென்ன.

### गोपा ऊचुः

अत्यद्भुतमिदं वाक्यं भूधरोद्धारणादपि ।
यस्त्वं कापट्यरहितो भवस्यद्यापि बालकः ॥९॥

शैलेन्द्रोद्धारणञ्चैतदन्यबालकदुष्करम् ।
नन्द ते तनयः कृष्णो लीलया कृतवान् कथम् ॥१०॥

**ஆயர்கள்**

*9-10. நந்தா! இது விந்தையிலும் விந்தை! உன் சிறுவன் மலையைத் தூக்கியதைக் காட்டிலும் நீ பேசுவது விந்தையாயிருக்கிறது. நீ கவடுசூதற்றவன். மலையைத் தூக்கியது விளையாட்டுத்தனமென்றால் மற்ற குழந்தைகளால் முடியுமா?*

**नन्द उवाच**

पुरा गर्गमुनिः प्राह कृष्णमुद्दिश्य तत्त्वतः ।
नामधारणकाले तु श्रीकृष्णबलभद्रयोः ॥११॥

एष नारायणः श्रीमान् क्षीरार्णवनिकेतनः ।
शेषपर्यङ्कमुत्सृज्य ह्यागतो गोकुलं प्रति ॥१२॥

वेदाहमद्य माहात्म्यं ये चान्ये तापसा जनाः ।
लौकिका नैव जानन्ति नरा देहात्मबुद्धयः ॥१३॥

भूभारभूतान्निखिलानसुरान्निहनिष्यति ।
मङ्गलं सर्वलोकानां ब्राह्मणानां करिष्यति ॥१४॥

एवमस्याग्रजो बालः शेषांशो राम उच्यते ।
एतौ हि सर्वलोकेशाववतीर्णौ धरातले ॥१५॥

एवं गर्गमुनेर्वाक्याद्दृष्ट्वा वैभवमेनयोः ।
न हि मे विस्मयः कोपि दैवभावात्स्मराम्यहम् ॥१६॥

**நந்தன்**

*11-16. பெரியோர்களே! முன்பு கண்ணனுக்கும் பலராமனுக்கும் பெயர்சூட்ட வந்த கர்கமுனிவர் சொன்னதைச் சொல்லுகிறேன்.*

இந்தக் கண்ணன் உண்மையில் ஸ்ரீமந்நாராயணனே. பாற்கடலையும் பாம்பணையையும் விட்டுவிட்டு கோகுலம் வந்துவிட்டான். இவன் பெருமையை நானும் மற்ற முனிவர்களுமே அறிவோம். உலக மக்கள் அறியார்கள். அஸுரர்களை வதம்செய்து, பூபாரத்தை நீக்கி, உலகிற்கு நன்மையைச் செய்வான். மூத்தவனான பலராமன் ஆதிசேஷனின் அவதாரம். இவ்வாறு கர்கமுனிவர் சொன்னதால் இவர்கள் செய்யும் லீலையைக் கண்டு நான் வியப்படையவில்லை குழந்தைகளையே தெய்வமென்று எண்ணியிருக்கிறேன்.

### गोपा ऊचुः

एतावत्कालपर्यन्तमीदृशं कृष्णवैभवम् ।
नोक्तवानसि किं नन्द सुहृद्भ्यो व्यक्तमेव नः ॥१७॥

### ஆயர்கள்

17. நந்தா! அப்படியானால் கண்ணனின் பெருமையை உண்மை அன்பர்களான எங்களிடம் இதுவரை நீ ஏன் சொல்லவில்லை?

### नन्द उवाच

अवताररहस्यत्वाल्लज्जया विनयेन च ।
नावोचमेतद्युष्मभ्यो दोषं मे क्षन्तुमर्हथ ॥१८॥

### நந்தன்

18. அவதாரரஹஸ்யம் என்பதாலும், தற்பெருமை அடித்துக் கொள்ளக்கூடாது என்கிற வணக்கத்தினாலும் சொல்லவில்லை. மன்னித்து விடுங்கள்.

### श्रीसद्गुरुरुवाच

इति नन्दवचः श्रुत्वा विस्मिते सर्वगोकुले ।
आजगाम शुनासीरो भीतभीतः सुरैः सह ॥१९॥

गोवर्धने समासीनं गोपालं गोकुलेश्वरम् ।

सुरेन्द्रः शरणं प्राप सुरभ्या च सुरैः सह ॥२०॥

**ஸ்ரீஸத்குரு**

1920 இவ்வாறு நந்தன் சொல்லக் கேட்ட ஆயர்கள்யாவரும் ஆச்சரியம் அடைந்தனர்.இந்திரனும் தேவர்கள் சூழவந்து சேர்ந்தான். கோவர்த்தனமலையில் வீற்றிருக்கும் கோபாலனை சரணமடைந்தான்.

**इन्द्र उवाच**

ईश्वरोहमिति स्मृत्वा गर्वेणैवाविवेकतः ।
त्वत्प्रभावं न जानेऽहमवज्ञां कृतवानहम् ॥२१॥

भवान् ब्रह्मा च विष्णुश्च रुद्रश्च जगदीश्वर ।
सृष्टिस्थितिलयानस्य करोषि जगतः प्रभो ॥२२॥

तथापि बालवद्गोष्ठे क्रीडसि व्रजबालकैः ।
त्वां न जानामि सर्वेशं त्वया सौलभ्यवञ्चितः ॥२३॥

ईशोऽहमिति भावोऽयं बुद्धिमोहविधायकः ।
दासोऽहमिति भावं मे देहि भक्तिप्रवर्धनम् ॥२४॥

**இந்திரன்**

21-24. ப்ரபோ! நானே ஈச்வரன் என்கிற கர்வத்தினால் உமது மஹிமையை அறியாமல் அபசாரம் செய்துவிட்டேன். ஜகன்னாத! நீரே ப்ரும்மா, விஷ்ணுவும் நீரே, சிவனும் நீரே. படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் முத்தொழிலையும் நடத்துகின்றீர். ஆயினும் ஒரு சிறுவனைப்போல் இந்த கோகுலத்தில் விளையாடுகின்றீர். உமது எளிமையைக் கண்டு ஏமாந்த நான் பெருமையை அறியாது போனேன். விபரீத புத்தியைத் தரும் ஸோஹம் என்கிற மனோபாவத்தை நீக்கி , பக்தியைத் தரும் தாஸோஹம் என்னும் மனோபாவத்தைத் தருவீராக.

### सुरभिरुवाच

भजामि शरणं कृष्ण त्वामेव जगतां पतिम् ।
परिपालय नो देव पीडिता स्वार्थतत्परैः ॥२५॥

इन्द्रस्त्वमेव नः कृष्ण गोविन्द इति कथ्यसे ।
पुनर्गोलोकमागच्छ स्वाराज्यं स्वीकुरु प्रभो ॥२६॥

### காமதேனு

*25-26.* கண்ணா! ஜகன்னாத! உன்னையே சரணமடைகிறேன். சுயநலமுடைய மக்களால் துன்பப்படும் எங்களைக் காப்பாற்றுவீராக. கோக்களுக்கு இந்திரன் நீயே. கோகுல ஸாம்ராஜ்யத்தை மறுபடியும் ஏற்றுக் கொள்.

### श्रीभगवानुवाच

एवमस्तु महाभागे गच्छ गोलोकमुत्तमम् ।
आगमिष्याम्यहं शीघ्रं कृत्वा श्वः श्रेयसं नृणाम् ॥२७॥

परित्राणाय साधूनां ब्राह्मणानां गवामपि ।
अवतीर्णोऽस्मि लोकेऽस्मिन् धर्मसंस्थापनाय च ॥२८॥

### ஸ்ரீபகவான்

*27-28.* காமதேனுவே! அப்படியே ஆகட்டும் . மக்களுக்கு நன்மையைச் செய்துவிட்டு விரைவில் கோலோகம் வருவேன். இவ்வுலகில் தர்மத்தை நிலைநாட்டவும், பசுக்களையும் ஸாதுக்களையும் ரக்ஷிப்பதற்கும் அவதாரம் செய்திருக்கிறேன்.

### श्रीसद्गुरुरुवाच

इत्युक्तवन्तं गोपालं शक्रः सुरभिचोदितः ।
ब्रह्मादिभिः सुरैः साकं नारदाद्यैः सुरर्षिभिः ॥२९॥

गोक्षीरेणापि दिव्येन व्योमगङ्गाजलेन च ।

अभ्यषिञ्चत्प्रभुं कृष्णं देवं गोलोकनायकम् ॥३०॥

दिवि दुन्दुभयो नेदुर्जगुर्गन्धर्वकिन्नराः ।
तुष्टुवुश्च सुराः सर्वे बद्धाञ्जलिपुटास्तदा ॥३१॥

पुष्पवृष्टिमहत्यासीद्गोविन्देति जगुः सुराः ।
विरेजे भगवान् कृष्णो गिरीन्द्रशिखरस्थितः ॥३२॥

गोपाश्च विस्मयं प्रापुः कृष्णं दृष्ट्वा सुरार्चितम् ।
सर्वलोकेश्वरं देवं विदुर्गोकुलमागतम् ॥३३॥

प्रणयाद्बहुमानाच्च भक्त्या च व्रजवासिनः ।
बाष्पस्निग्धा बभूवुस्ते बद्धाञ्जलिपुटास्तदा ॥३४॥

सान्त्वयामास तान् सर्वान् प्रेमभाषणपूर्वकम् ।
मन्दहासमुखः कृष्णो मोहयन्निजमायया ॥३५॥

अभिषेकमिमं शौरेर्यः पठेद्भक्तिपूर्वकम् ।
सर्वमङ्गलमाप्नोति गोविन्दे भक्तिमेव सः ॥३६॥

ஸ்ரீஸத்குரு

*29-36.* இவ்வாறு சொன்ன கோபாலனை தேவேந்திரன் காமதேனுவால் தூண்டப்பட்டு, பிரும்மாமுதலிய தேவர் களுடனும், நாரதர்முதலிய முனிவர்களுடனும், ஆகாசகங்கை யாலும், பசும்பாலாலும் அபிஷேகம் செய்து வழிபட்டான். கோவிந்தன் என்று பெயர் சூட்டினான். தேவதுந்துபி முழங்கிற்று. கந்தர்வர்கள் பாடினார்கள். தேவர்கள் மலர்மாரி பொழிந்து துதித்தனர். கண்ணனைக் கண்டு ஆயர்கள் யாவரும் ஆச்சரியமடைந்தனர். அன்பினாலும், பக்தியாலும், வெகுமதிப் பாலும் கைகுவித்து கண்ணீர் வடித்து நின்றனர். கண்ணனோ அவர்களை தனது அன்புமொழிகளால் ஸமாதானம் செய்து

மகிழ்வித்தான். கோவிந்தபட்டாபிஷேகத்தைப் படிப்பவர்கள் ஸர்வமங்களத்தையும் பெறுவார்கள்.

इति श्रीमत्परमहंसपरिव्राजकाचार्यवर्यसर्वप्राणिसंरक्षकजगद्गुरु-
श्रीभगवन्नामबोधेन्द्रचरणारविन्दमकरन्दरसिकेन
श्रीकृष्णप्रेमिमहाप्रभुणा विरचिते श्रीबृन्दावनमाहात्म्ये श्रीगोविन्दकाण्डे
गोविन्दपट्टाभिषेको नाम चतुर्विंशोऽध्यायः।। २४।।

இவ்வாறு பரமஹம்ஸபரிவ்ராஜகாசார்யஸர்வப்ராணிஸம்ரக்ஷகஜகத்குரு ஸ்ரீபகவன்னாமபோதேந்த்ரஸரஸ்வதிசரணாரவிந்தங்களை ஆச்ரயித்த ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிமஹாப்ரபுவால் அருளிச்செய்யப்பட்ட ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில் கோவிந்தகாண்டத்தில் இருபத்திநான்காவது அத்தியாயம் முற்றும்.

।। इति श्रीगोविन्दकाण्डः समाप्तः।।

கோவிந்தகாண்டம் முற்றும்.

।। श्रीभक्तकोलाहलार्पणमस्तु।।

श्रीहरिः

**श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचितं**

# श्रीबृन्दावनमाहात्म्यम्

## ஸ்ரீப்ருந்தாவனமாஹாத்மியம்

# देवीकाण्डम्

## தேவீகாண்டம்

## अथ प्रथमोऽध्यायः

## முதல் அத்யாயம்

*भागवता ऊचुः*

केचिद्वदन्ति श्रीराधां परकीयेति सद्गुरो ।
अन्ये वदन्ति तामेव स्वकीयेति च वैष्णवाः ॥१॥

अनयोर्भावयोर्गुह्यं वद सद्गुरुपुङ्गव ।
त्वमेव सर्वतत्त्वज्ञः सर्वसंशयवर्जितः ॥२॥

**பாகவதர்கள்**

*1,2. குருதேவ! தாங்கள் எல்லா தத்துவத்தையும் அறிந்தவர். ஸந்தேஹமற்றவர். சிலர் ராதையைக் கண்ணனின் காதலி என்கின்றனர். சிலர் மனைவி என்கின்றனர். இந்த உண்மையை விளக்க வேண்டும்.*

*श्रीसद्गुरुरुवाच*

हन्त वक्ष्यामि राधायाश्चरितं सुविनिर्मलम् ।
यस्याः कारुण्यलेशेन भगवांल्लभ्यते हरिः ॥३॥

गोलोके नित्यलीलायामाद्यस्य मिथुनस्य तु ।

स्वतः सिद्धे तु दाम्पत्ये परकीयारतिः कथम् ॥४॥

केचिद्वदन्ति विद्वांसो रसोत्कर्षाय केवलम् ।
साक्षाद्रासेश्वरीं देवीं परकीयेति वैष्णवाः ॥५॥

भावे तु परकीयाया नात्मतृप्तिः प्रजायते ।
क्लिश्यते हृदयं नूनं साध्वीनां जारसङ्गमात् ॥६॥

अशान्तिरपि बीभत्सा भीतिः स्वार्थपरा मतिः ।
एवञ्च बहवो दोषाः सन्ति जारस्य सङ्गमे ॥७॥

तस्मात्सर्वोत्तमो भावः स्वकीया भाव एव हि ।
यत्र निष्कण्ठकं प्रेम निःस्वार्थमभिशोभते ॥८॥

अनयोर्दिव्यदम्पत्योर्नित्यनूतनभावयोः ।
लीलारसं विनिर्णेतुमन्यः कोपि न शक्नुयात् ॥९॥

गोपिका एव जानन्ति राधाकृष्णरतिं पराम् ।
व्यर्थ एव हि सिद्धान्तः स्वकीयापरकीययोः ॥१०॥

ஸ்ரீஸத்குரு

*3-10. ஸாதுக்களே! ராதையின் சரிதம் புனிதமானது. அவளுடைய கருணையால்தான் பகவான் சுலபமாகக் கிடைப்பான். ராதையும் கண்ணனும் நித்யதம்பதிகள். என்றும் பிரியாதவர்கள். ஆயினும் வைஷ்ணவர்கள் ச்ருங்காரரஸத்தின் சிறப்புக்காகவேண்டி ராதையைக் காதலியாக மட்டிலும் வர்ணிக்கின்றனர். கள்ளத்தனமான காதலில் மனநிம்மதி இராது. வெறுப்பும், பயமும், சுயநலமும் மற்றும் பல தோஷங்களும் உண்டாகும். நேர்மையான காதலில் முள் இல்லை. அது நல்ல பாதையாகும். ஆகையால் காதலின்பத்தைப் பெற தாம்பத்யம் முக்கியமானது. ராதையும்*

கண்ணனுமோ நித்யதம்பதிகள். அவர்களுடைய காதல் புனிதமானது. அதன் ரஸத்தை கோபிகைகளே அறிவார்கள். ராதையைப்பற்றிக் காதலியா, மனைவியா என்ற வீண் வாதம் வேண்டாம்.

भावे तु प्राकृतः कामः स्वकीयापरकीययोः ।
राधिकाकृष्णयोः किन्तु दिव्यं प्रेम प्रदृश्यते ॥११॥

अनयोः सङ्गमे प्रेम नित्यं नूतनमेव हि ।
स्मर्तव्यमनयोः प्रेम किं वृथा भावचर्चया ॥१२॥

चन्द्रावली च श्रीराधा सख्यश्च ललितादयः ।
कन्यका एव ताः सर्वा व्रजे सन्त्यविवाहिताः ॥१३॥

इमा गोविन्ददेवस्य स्वतन्त्रस्य कृपानिधेः ।
नित्यदास्यः किशोर्यश्च प्रेमनिष्ठापरायणाः ॥१४॥

गोलोकादागते कृष्णे माधवे नन्दगोकुलम् ।
आजगाम च सा देवी सखीजनसमन्विता ॥१५॥

वृषभानुगृहे जाता तमेवाभिजगाम च ।
निरङ्कुशप्रेमभावलीलारसयुता हरिम् ॥१६॥

कुलाचारमतिक्रम्य गान्धर्वविधिनैव सा ।
मोहयन्ती स्वपितरौ लेभे नन्दसुतं पतिम् ॥१७॥

तथैवान्याः कृष्णमेव सख्यश्च ललितादयः ।
गान्धर्वविधिना प्रापुः प्रेमभावविचक्षणाः ॥१८॥

अन्याश्च बह्व्यो वनिता जारभावेन सङ्गताः ।

किं चित्रं माधवे पुंसां दृष्टिचित्तापहारके ॥१९॥

11-19. ராதைக்கும் கண்ணனுக்கும் உள்ள ப்ரேமை திவ்யமானது. என்றும் புத்தம்புதியது. சிந்தனைக்கு இனியது. ராதை, சந்த்ராவளி, லலிதைமுதலிய எட்டு தோழிகள். இவர்கள் யாவரும் விவாஹமாகாத சிறுமிகள். கண்ணனிடம் ப்ரேமை கொண்டவர்கள். கோலோகத்திலிருந்தே அவதாரம் செய்தவர்கள். இவர்களைக் கண்ணன் காந்தர்வவிதியினால் விவாஹம் செய்து கொண்டான். மேலும் விவாஹமான பல கோபிகைகளும் கண்ணனிடம் காதல் கொண்டிருந்தனர். இது ஒரு ஆச்சர்யமல்ல. கண்ணன் ஜகன்மோஹனன்.

देवतान्तरभक्तानां मुमुक्षूणाञ्च योगिनाम् ।
श्रीकृष्णविमुखानां तु धर्मानुष्ठानकारिणाम् ॥२०॥

मोहनेनैव कृष्णस्य जारत्वमुपचर्यते ।
रसिकैर्वैष्णवैर्नूनं प्रेमभावप्रकाशकैः ॥२१॥

एतद्गुह्यं परं लोके नैव जानन्ति पामराः ।
कृष्णप्रेमरसास्वादो मुनीनामपि दुर्लभः ॥२२॥

20-22. கண்ணனைக் கள்ளபுருஷன் என்பது உண்மையில் ஒரு தத்துவமே. வேறு தெய்வத்திடம் பக்தி செய்பவர்களைக் கண்ணன் தன் அழகினால் மயக்கித் தன் பக்தனாகச் செய்துகொள்ளுவதைத்தான் கண்ணனின் கள்ளத்தனமாகச் சொல்கின்றனர். வைஷ்ணவர்கள் ரஸிகர்கள். அவர்கள் எதையும் ரஸமாய்ப் பேசுவார்கள். அந்தப் பரிபாஷையை புரிந்துகொள்ள பாமரமக்களால் முடியாது. க்ருஷ்ண பக்திரஸமோ முனிவர்களுக்கும் அரிது.

एकादशसमास्तत्र व्यवहारे तु गोकुले ।
ववृधे भगवान् कृष्णो नन्दगोपेन लालितः ॥२३॥

अङ्गीकृतं यौवनं तु बाल्ये नन्दसुतेन तु ।

कृष्णेन कामरूपत्वात् सुखाय व्रजयोषिताम् ॥२४॥

विहितो बाललीलायां विवाहो राधया सह ।
रमणीये निकुञ्जे तु यमुनातीरकानने ॥२५॥

*23-25. கண்ணன் கோகுலத்தில் பதினோரு வயதுதான் வளர்ந்தான். குழந்தைக் கண்ணனிடம் கோபிகைகள் காதல் கொண்டது என்பது பாலலீலையே ஆகும். ராதைக்கும் கண்ணனுக்கும் நடந்த கல்யாணம் குழந்தை விளையாட்டு.*

न कोपि शक्नुयाद्वेत्तुमद्भुतं कृष्णचेष्टितम् ।
प्रेमभक्तिं विना नूनं गोपीभावपरिष्कृताम् ॥२६॥

दुर्लभं मानुषं जन्म सत्सङ्गस्तु सुदुर्लभः ।
तत्रापि मूढचित्तानां मुमुक्षुत्वं सुदुर्लभम् ॥२७॥

मुमुक्षूणां योगिनाञ्च हरिभक्तिः सुदुर्लभा ।
अहैतुकी परा भक्तिर्योगिनामपि दुर्लभा ॥२८॥

फलाभिसन्धिरहितं प्रेमभावपरिष्कृतम् ।
नैव जानन्ति मुनयः कृष्णभक्तिरसं परम् ॥२९॥

*26-29. கண்ணனின் லீலாரஸத்தை ப்ரேமபக்தி இல்லாதவர்கள் அறிய முடியாது. மனிதப்பிறவி அரிது. அதிலும் ஸாதுஸங்கம் அரிது. அதனிலும் மோக்ஷத்தை விரும்புவது அரிது. மோக்ஷத்தை விரும்பினாலும் ஹரிபக்தி அரிது. மோக்ஷத்தையும் விரும்பாத ப்ரேமபக்தியோ அரிதிலும் அரிது. இந்த ரஸத்தை முனிவர்களும் அறியார்கள்.*

उत्तमा व्रजलीलैव लीलासु जगतीपतेः ।
तत्रापि रासलीलायां कुञ्जलीला परा स्मृता ॥३०॥

सन्त्यज्य रसिको भक्तो लीलाञ्च व्यावहारिकीम् ।
कृष्णस्य नित्यलीलायां स्थापयेद्विमलं मनः ॥३१॥

इदमेव परं गुह्यमिदमेव परं सुखम् ।
बृन्दावनेश्वरस्यैव नित्यलीलानुचिन्तनम् ॥३२॥

*30-32.* பகவானின் லீலைகளுக்குள் ப்ருந்தாவனலீலை சிறந்தது. அதிலும் ராஸலீலை சிறந்தது. அதைக்காட்டிலும் நிகுஞ்ஜ லீலை சிறந்தது. எனவே ரஸிகனான பக்தன் வ்யவஹாரமான க்ருஷ்ணலீலைகளை மறந்து கண்ணனின் நித்யலீலையிலேயே மனதை நிறுத்தவேண்டும். இது மிகரஹஸ்யம். இதுவே பேரின்பம்.

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये देवीकाण्डे प्रथमोऽध्यायः॥१॥*

**இவ்வாறு ஶ்ரீக்ருஷ்ணப்ரேமிமஹாப்ரபு அருளிய ஶ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில் தேவீகாண்டத்தில் முதல் அத்யாயம் முற்றும்.**

# अथ द्वितीयोऽध्यायः

# இரண்டாவது அத்யாயம்

## भागवता ऊचुः

जननं राधिकादेव्या बालक्रीडाञ्च सद्गुरो ।
अस्माकं श्रोतुकामानां कृपया वर्णय प्रभो ॥१॥

**பாகவதர்கள்**

*1.* ஸத்குரோ! ராதாதேவியின் ஜனனத்தையும், பாலலீலையையும் கேட்க விரும்புகின்றோம். கருணை செய்து சொல்வீராக.

## श्रीसद्गुरुरुवाच

वृषभानुरिति ख्यातो गोपो ज्ञानवयोधिकः ।
आसीदाभीरनगरे गोपकार्यधुरन्धरः ॥२॥

तस्यासन् धेनवो बह्व्यो गोपाश्चायुतसंख्यया ।
तेषामध्यक्षकः श्रीमान् धनधान्यसमृद्धिमान् ॥३॥

सखा श्रीनन्दगोपस्य सर्वसद्गुणसम्युतः ।
स्वधर्मनिरतो नित्यं सर्वशास्त्रविशारदः ॥४॥

कलावतीति विख्याता तस्य पत्नी पतिव्रता ।
भावज्ञा शीलसंपन्ना विनीता दोषवर्जिता ॥५॥

श्रुत्वा कलावती सापि यशोदायाः सुतोद्भवम् ।
परमानन्दसम्युक्ता भर्तारमिदमब्रवीत् ॥६॥

ஸ்ரீஸத்குரு

*2-6 கோகுலத்தில் வ்ருஷபானுகோபர் என்ற பெரியவர் ஒருவர் இருந்தார். அவர் கோகுலமக்களின் பொறுப்பை ஏற்றுக் கொண்டு நன்றாக கவனித்து வருவார். பல்லாயிரக்கணக்கான பசுக்களுக்கும் ஆயர்களுக்கும் அவர் தலைவர். தனம், தான்யம் படைத்த ஸ்ரீமான். சாஸ்திரங்கள் படித்தவர். தர்மத்தில் சிறந்தவர். நற்குணங்கள் நிரம்பியவர். நந்தகோபரின் நண்பர். அவருடைய மனைவியின் பெயர் கலாவதி. கணவனின் மனமறிந்து நடக்கும் உத்தமி, குற்றமற்றவள், வணக்க முடையவள். யசோதைக்கு கண்ணன் பிறந்திருப்பதை அறிந்து மகிழ்ச்சியடைந்த கலாவதி கணவனிடம் சொன்னாள்.*

**कलावत्युवाच**

नन्दगोपस्य भार्या सा यशोदा तु सखी मम ।
सुषुवे पुत्ररत्नं हि सर्वगोकुलरञ्जनम् ॥७॥

कामयेऽहं कुमारीञ्च मम सद्गुणसम्युताम् ।
दातुं श्रीनन्दपुत्राय यशोदापरितुष्टये ॥८॥

वरं देहि महाभाग स्त्रीरत्नजननाय मे ।
यया जामातरं कृष्णं प्राप्तुमिच्छामि सौहृदात् ॥९॥

கலாவதி

*7-9. நாதா! நந்தகோபரின் மனைவியும் என் தோழியுமான யசோதை கோகுலம் முழுவதும் கொண்டாடும் ஒரு பிள்ளையைப் பெற்றிருக்கிறாள். அந்தப் பிள்ளைக்குக் கொடுப்பதற்கு ஒரு பெண்ணைப் பெற நானும் விரும்புகிறேன். கண்ணன் எனக்கு மாப்பிள்ளையாக வரவேண்டுமென்று விரும்புகிறேன்.*

**श्रीवृषभानुरुवाच**

प्रेमपूर्वमिदं वाक्यं श्रुत्वा ते वरवर्णिनि ।
अभिनन्दामि सुतरां दत्त एव मया वरः ॥१०॥

कामं ते सफलं विद्धि देवीमाराधय प्रिये ।
नूनं तस्याः प्रसादेन लभ्यते वाञ्छितो वरः ॥११॥

வ்ருஷபானுகோபர்

*10-11. ப்ரியமானவளே! அன்பு ததும்பும் உன் மொழியைக் கேட்டு மகிழ்ச்சியடைகிறேன். ஸ்ரீதேவியை ஆராதிப்பாயாக. அவள் திருவருளால் உன் விருப்பம் நிறைவேறும்.*

**श्रीसद्गुरुरुवाच**

इत्युक्ता भर्तृभावज्ञा तपश्चक्रे कलावती ।
शाण्डिल्योक्तप्रकारेण पूजयन्ती श्रियं पराम् ॥१२॥

दीपं प्रज्वाल्य विधिवच्छुक्रवारे कलावती ।
कुङ्कुमाद्यैरलङ्कृत्य विविधैः कुसुमैरपि ॥१३॥

आवाह्य तत्र श्रीदेवीं साक्षान्मङ्गलदेवताम् ।
सर्वकामप्रदां लक्ष्मीं पूजयामास श्रद्धया ॥१४॥

12-14. இவ்வாறு கணவனிடம் அனுமதிபெற்று கலாவதிராணி, சாண்டில்யமுனிவர் சொன்ன விதிப்படி ஸ்ரீதேவியை பூஜை செய்தாள். வெள்ளிக்கிழமைதோறும் குத்துவிளக்கேற்றி குங்குமம், புஷ்பம், சந்தனம் இவைகளால் அலங்கரித்து லக்ஷ்மி தேவியைப் பூஜைசெய்து துதித்தாள்.

### कलावत्युवाच

नमस्ते लोकजननि नमस्ते विष्णुवल्लभे ।
क्षीराब्धिकन्यके देवि देहि मे सर्वमङ्गलम् ॥१५॥

भृगुपुत्रीं नमामि त्वां सर्वसौन्दर्यविग्रहाम् ।
शरणं भव मे देवि देहि मे सर्वमङ्गलम् ॥१६॥

विष्णुवक्षःस्थले नित्यं क्रीडसि त्वं कृपालये ।
कृपया पाहि मां देवि देहि मे सर्वमङ्गलम् ॥१७॥

तपसा विष्णुपत्नीत्वं संप्राप्य भुवनेश्वरि ।
रक्षसि त्वं जगत्सर्वं देहि मे सर्वमङ्गलम् ॥१८॥

केचिद्वदन्ति त्वां देवि मूलप्रकृतिमीश्वरीम् ।
शक्तिस्त्वं परमेशस्य देहि मे सर्वमङ्गलम् ॥१९॥

लक्ष्मीस्त्वं पार्वती त्वञ्च वाणी त्वं परमेश्वरि ।
त्वमेव राधा गोलोके देहि मे सर्वमङ्गलम् ॥२०॥

अवैधव्यञ्च सौभाग्यं धनं धान्यं गृहं यशः ।
पुत्रभाग्यञ्च गोभाग्यं देहि मे सर्वमङ्गलम् ॥२१॥

इह लोके तथा स्वर्गे तथा जन्मान्तरेष्वपि ।
मम भर्त्रा वियोगस्तु संभवेन्नहि सर्वदा ॥२२॥

15-22. திருப்பாற்கடலில் தோன்றியவளே! திருமாலுக்குப் பிரியமானவளே! உலக மாதாவே! உனக்கு வந்தனம். ப்ருகு முனிவரின் புத்ரியாய்ப் பிறந்தவளே! அழகு நிரம்பியவளே! தேவி! நீயே சரணம். விஷ்ணுவின் மார்பில் விளையாடுபவளே! கருணைக்கடலே! என்னைக் காப்பாற்று. புவனேச்வரி! நீ தவம் செய்து விஷ்ணுவைக் கணவனாய் அடைந்து உலகத்தை ரக்ஷிக்கிறாய். பராசக்தியே! உன்னையே மூலப்ரக்ருதி என்று சொல்கின்றனர். பரமேச்வரி! நீயே லக்ஷ்மி; நீயே பார்வதி; நீயே சரஸ்வதி; நீயே கோலோகத்தில் ராதை. தேவீ! தனம், தான்யம், வீடு, புகழ், பிள்ளை, பசு, ஸௌபாக்யம், ஸௌமாங்கல்யம் முதலிய எல்லா நன்மைகளையும் தருவாயாக. இவ்வுலகிலும், பரலோகத்திலும், மறு பிறவியிலும்கூட என் பர்த்தாவைவிட்டு நான் பிரியாமல் இருக்கவேண்டும்.

### श्रीसद्गुरुरुवाच

इमं स्तवं पठन्ती सा भक्तिपूर्णा कलावती ।
देवीमाराधयामास श्रद्धया भर्तृसम्मता ॥२३॥

अथाचिरेण कालेन वृषभानुकुटुम्बिनी ।
महालक्ष्मीप्रसादेन दधौ गर्भं शुभप्रदम् ॥२४॥

पुण्ये भाद्रपदे मासे शुक्लाष्टम्यां तिथौ तथा ।
शुक्रवारे सुलग्ने सा सुषुवे सुन्दरीं सुताम् ॥२५॥

आविरासीत्तदा देवी श्रीमद्गोलोकनायिका ।
सर्वाभरणसम्युक्ता कोटिविद्युत्समुज्ज्वला ॥२६॥

नवचम्पकवर्णाभा राकाचन्द्रसमानना ।
दिव्यनीलाम्बरधरा नित्यं षोडशवार्षिकी ॥२७॥

तनुमध्या विशालाक्षी हेमकुंभपयोधरा ।
कुटिलालकधम्मिल्ला ललिता कोमलाधरा ॥२८॥

करुणापूर्णहृदया हस्ताभ्यामभयप्रदा ।
कलावतीमुखाम्भोजहर्षदादित्यसन्निभा ॥२९॥

तां विलोक्य श्रियं देवीं सर्वलोकैकमातरम् ।
तुष्टाव प्रणता राधामवतीर्णा कलावती ॥३०॥

ஸ்ரீஸத்குரு

*23-30. இந்த ஸ்தோத்திரத்தை பக்தியுடன் படித்து கலாவதி தேவியைப் பூஜித்து வந்தாள். கொஞ்சநாளில் அவள் ஸ்ரீதேவியின் அனுக்ரஹத்தினால் கர்ப்பவதியாக ஆனாள். புண்ணியமான புரட்டாசி மாதத்தில், சுக்லபக்ஷத்தில், அஷ்டமி திதியில், சுக்ரவாரத்தில், சுபலக்னத்தில் ராதாதேவி அவதரித்தாள். கோலோகநாயகியும், கோடிமின்னலுக்கு நிகரான காந்தி உடையவளும், சம்பகபுஷ்பம்போன்றவளும், நீலப் பட்டாடை உடுத்தியவளும், பூர்ணசந்த்ரனையொத்த முகமுடையவளும், சுருண்ட கேசங்கள் உடையவளும், என்றும் பதினாறுவயதுடன் இருப்பவளும், அழகான உதடுடையவளும், ஆபரணங்கள் அணிந்தவளும், கருணை நிரம்பியவளும், கைகளால் அபயந்தருபவளும், கலாவதியின் முகத்தாமரையை மலரச்செய்யும் ஸூர்யன்போன்றவளுமான ராதாதேவி அவதரித்தாள். அவளைக்கண்ட கலாவதி வணங்கித் துதி செய்தாள்.*

**कलावत्युवाच**

जानामि तव माहात्म्यं तवैव कृपया रमे ।
जातासि पुत्रीभावेन केवलं कृपया मयि ॥३१॥

ह्लादिनी त्वं परा शक्तिः कृष्णस्य परमात्मनः ।
अवतीर्णासि भुवने त्वनुग्रहपरायणा ॥३२॥

नैव जानन्ति ते तत्त्वं मुनयः संशितव्रताः ।
तथापि कृपया मह्यं दत्तं मातृपदं त्वया ॥३३॥

ब्रह्मादिस्तम्बपर्यन्ता विविधा जीवकोटयः ।
तवैव कृपया देवि प्रवर्तन्ते जगत्त्रये ॥३४॥

अङ्गीकृतमिदं रूपमप्राकृतसमुद्भवम् ।
अपोह्य कृपया देवि शिशुभावं प्रदर्शय ॥३५॥

கலாவதி

*31-35.* ஸ்ரீதேவி! உன் மஹிமையை அறிந்தேன். கருணையாலேயே என் புத்ரியாக அவதரித்திருக்கிறாய். நீ க்ருஷ்ண பரமாத்மாவின் சக்தியல்லவா! முனிவர்கள்கூட உன் ரஹஸ்யத்தை அறியார்கள். அத்தகைய நீ எனக்கு தாய் என்கிற பதவியை தந்திருக்கிறாய். பிரம்மாமுதல் புழுவரை எல்லா ஜீவ கோடிகளும் உனது கருணையாலேயே செயல்படுகின்றனர். அப்ராக்ருதமான இந்த ரூபத்தை மறைத்து ஒரு குழந்தையாக காக்ஷி கொடுப்பாயாக.

**श्रीसद्गुरुरुवाच**

इत्युक्ता राधिकादेवी तत्रैवान्तर्हिता पुनः ।
शिशुरूपेण सम्युक्ता रुरोद निजमायया ॥३६॥

विलोक्य स्वसुतां देवीं प्रेमवात्सल्यसम्युता ।
लालयामास सरसं स्तनं दत्वा कलावती ॥३७॥

वृषभानुः सुतां दृष्ट्वा समवाप्तमनोरथः ।
चकार सह गोपालैः राधिकाजननोत्सवम् ॥३८॥

उत्सवश्च महानासीद्वृषभानुपुरे तदा ।
आभीरजनसन्तोषजातकोलाहलाकुलः ॥३९॥

क्रीडन्तीं रत्नडोलायां विलोक्य वृषनन्दिनीम् ।
जगुराभीरसुन्दर्यः प्रेमपूर्वं परस्परम् ॥४०॥

नानाविधानि वाद्यानि वादयन्तो मुदान्विताः ।
ननृतुर्गोपबालाश्च कुतूहलसमन्विताः ॥४१॥

धनं धान्यं तथा वासो धेनुर्वत्ससमन्विताः ।
वृषभानुर्ददौ प्रेम्णा सज्जनेभ्यः सकौतुकम् ॥४२॥

एवं त्रिलोकजननी गोलोकभुवनेश्वरी ।
कलावत्यामाविरासीत् कृपया हरिवल्लभा ॥४३॥

ஸ்ரீஸத்குரு

*36-43. இவ்வாறு துதிக்கப்பட்ட ராதாதேவி மறைந்தாள். ஒரு குழந்தையாக ஆகி காக்ஷி கொடுத்தாள். தன் கன்னிகையை அன்புடன் எடுத்து பால் கொடுத்துத் தாலாட்டினாள். வ்ருஷபானுகோபரும் ஆயர்களுடன்கூடி ராதையின் ஜனனோத்ஸவத்தை மிக விமரிசையாக நடத்தினார். வ்ருஷபானுபுரம் முழுவதும் ஒரே கோலாஹலமாக நடந்தது. தங்கத்தொட்டிலில் குழந்தையைப்போட்டு கோபிகைகள் தாலாட்டுப் பாடினார்கள். பலவிதமான வாத்யங்களை முழக்கிக்கொண்டு ஆயர்கள் ஆடினார்கள். வ்ருஷபானுகோபர் மகிழ்ச்சியடைந்து ஸாதுக்களுக்கு தனம், தான்யம், வஸ்த்திரம், பசுமுதலியவைகளை தானம் செய்தார். இவ்வாறு லோகமாதாவும், கோலோகவாஸினியும், க்ருஷ்ணபத்னியுமான ராதாதேவி கலாவதியின் புத்ரியாக அவதரித்தாள்.*

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये देवीकाण्डे श्रीराधाजननं नाम द्वितीयोऽध्यायः॥२॥*

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிமஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில் தேவீகாண்டத்தில் இரண்டாம் அத்யாயம் முற்றும்.**

# अथ तृतीयोऽध्यायः

## மூன்றாமத்யாயம்

### श्रीसद्गुरुरुवाच

अयोनिजा हि सा देवी शुद्धसत्त्वगुणान्विता ।
शिशुभावमुपेत्यापि श्रीकृष्णविरहातुरा ॥१॥

निगूढवैभवा राधा वृषभानुगृहेऽवसत् ।
मातृभिर्बन्धुभिश्चैव लालिता समलङ्कृता ॥२॥

क्वचिद्रोदिति गोविन्दं स्मृत्वा प्रलपति क्वचित् ।
क्वचिद्ध्यायति कृष्णञ्च क्वचिदुत्कम्पते मुहुः ॥३॥

क्वचिन्नृत्यति सानन्दं क्वचिद्गायति सुस्वरम् ।
क्वचिदुन्मादसम्युक्ता मूर्च्छिता पतति क्वचित् ॥४॥

भक्तिप्रेमरसाक्रान्तां लोकवेदपरां सुताम् ।
अविज्ञाय परं शोकमवाप जननी च सा ॥५॥

ஸ்ரீஸத்குரு

சுத்தமான ஸத்வகுணத்துடன் ஆவிர்பவித்த ராதாதேவி குழந்தைத் தன்மையிலேயே க்ருஷ்ணவிரஹத்தில் துடித்தாள். தன் மஹிமையைக் காட்டாமல் வ்ருஷபானுகோபரின் வீட்டில் வளர்ந்து வந்தாள். தாய்மார்களும் பந்துக்களும் அவளை விதவிதமாய் அலங்கரித்து கொஞ்சுவார்கள். ராதை ஒருகால் கோவிந்தனை நினைத்து அழுவாள் . புலம்புவாள். ஒருகால் க்ருஷ்ணனை த்யானம் செய்வாள். ஆனந்தமாய் ஆடுவாள். இனிமையாய்ப் பாடுவாள் மூர்ச்சையடைந்து விழுவாள் உலகில் துர்லபமான இத்தகைய பக்தியைக் கண்டு அதன் உண்மை புரியாமல் கலாவதி வருந்துவாள்.

पुलकाङ्कितसर्वाङ्गीं निमीलितविलोचनाम् ।
मूर्च्छिता पतितां भूमौ निश्चेष्टां राधिकां तदा ॥६॥

विलोक्य भानुगोपश्च चिन्तां प्राप दुरत्ययाम् ।
बालग्रहस्य चेष्टेति स्मृत्वा स्मृत्वा पुनः पुनः ॥७॥

मान्त्रिकैर्मन्त्रिताप्येवं वैद्यैरप्यवलोकिता ।
न राधा प्रकृतिं प्राप विरहाकुलमानसा ॥८॥

एतस्मिनन्तरे साक्षान्नारदो ब्रह्मनन्दनः ।
आजगाम महाभागो वीणया कीर्तयन् हरिम् ॥९॥

वृषभानुः प्रसन्नात्मा नारदं मुनिसत्तमम् ।
अभ्येत्य स्वागतं तस्मै सुविनीतो न्यवेदयत् ॥१०॥

*6-10. அங்க அசைவுகள் எதுவும் இல்லாமல் மேனி சிலிர்த்து கண்களை மூடி மயக்கமடைந்து தரையில் விழுந்திருக்கும் ராதையைக் கண்டு தந்தை பானுகோபனும் கவலையடைந்தார். இது ஏதோ க்ரஹசேஷ்டை என்று நினைத்தார். மந்திரவாதிகள் மந்திரித்தும், வைத்தியர்கள் சிகிச்சை செய்தும் பயனில்லை. இப்படியிருக்க ஒரு நாள் நாரதர் வீணையை மீட்டிக்கொண்டு ஹரிகீர்த்தனம் செய்தவாறு வந்து சேர்ந்தார். விருஷபானு கோபர் மகிழ்ச்சியடைந்து அவரை வரவேற்றுப் பூஜித்து நல்வரவு சொன்னார்.*

**वृषभानुरुवाच**

स्वागतं वैष्णवश्रेष्ठ सर्वसद्गुणसंयुत ।
मादृशानां पामराणां सत्सङ्गः शेवधिर्नृणाम् ॥११॥

जन्मान्तरकृतानां तु सुकृतानां फलोदये ।

मङ्गलावसरे नूनं लभ्यते साधुसङ्गमः ॥१२॥

वदन्ति धर्मतत्त्वज्ञा गार्हस्थ्यं श्रेष्ठमाश्रमम् ।
यस्मिन्नाराध्यते भक्त्या साधूनां निकरो मुहुः ॥१३॥

விருஷபானுகோபர்

11-13. சிறந்த வைஷ்ணவரே! நற்குணங்கள் பொருந்தியவரே! தங்களுக்கு நல்வரவு. எங்களைப் போன்ற பாமரமனிதர்களுக்கு ஸாதுஸங்கம்தான் க்ஷேமத்திற்கு ஸாதனம். பல ஜன்மங்களில் செய்த புண்ணியங்களின் பயனாகவே ஸாதுஸங்கம் கிடைக்கின்றது. இல்லறமே நல்லறம் என்று பெரியோர்கள் சொல்லுகின்றனர். ஏனெனில் ஸாதுக்களை அழைத்து பூஜிக்கும் பாக்யம் இல்லறத்திலேயே கிட்டுகின்றது.

नारद उवाच

उपपन्नमिदं सर्वं त्वयि भागवतोत्तमे ।
यन्मां ब्रवीषि सप्रेम गार्हस्थ्यं धर्ममाचरन् ॥१४॥

अहं नन्दस्य तनयं साक्षाद्विष्णुमिव स्थितम् ।
आगतोस्मि विलोक्याद्य नन्दगोपनिवेशनात् ॥१५॥

पुत्रीं ते द्रष्टुमिच्छामि दिव्यलक्षणसम्युताम् ।
वृषभानो महाभाग तां प्रदर्शय सुन्दरीम् ॥१६॥

நாரதர்

14-16. வ்ருஷபானுகோபரே! நீரும் சிறந்த பாகவதர். நீர் சொல்வது உண்மையே. இல்லறதர்மத்தை நன்றாக நடத்தி வருகின்றீர். நான் பகவானைப் போலிருக்கும் நந்தனின் பிள்ளையைப் பார்த்துவிட்டு வருகிறேன். திவ்யமான லக்ஷணமுடைய உனது கன்னிகையையும் பார்க்க விரும்புகின்றேன்.

### श्रीसद्गुरुरुवाच

एवं वदति देवर्षौ सद्य एव कलावती ।
जगाद मधुरं वाक्यमस्राकुलविलोचना ॥१७॥

### ஸ்ரீஸத்குரு

17. இவ்வாறு நாரதர் சொல்லக்கேட்ட கலாவதி உடனே கண்ணீர் விட்டுக்கொண்டே பேசலானாள்.

### कलावत्युवाच

भगवन् भवतो यात्रा मङ्गलायैव केवलम् ।
पश्य मे तनयां शीघ्रं बालग्रहनिपीडिताम् ॥१८॥

सन्ततं मूर्च्छितामेनामन्नपानादिवर्जिताम् ।
ऊर्ध्वदृष्टिञ्च निश्चेष्टां कृपया पाहि मे सुताम् ॥१९॥

### கலாவதி

18-19 பகவானே! தங்களுடைய வருகை உலகின் நன்மைக்காகவே. க்ரஹசேஷ்டையால் துன்பப்படும் என் கன்னிகையைப் பாருங்கள். இந்தக் குழந்தை பால் குடிக்காமல், சாப்பிடாமல் கண்களை உயரே விழித்துக்கொண்டு ஒரு சேஷ்டையும் இல்லாமல் மூர்ச்சையடைந்து கிடக்கிறது. நீர்தான் காப்பாற்ற வேண்டும்.

### नारद उवाच

शोकं मा कुरु मातस्त्वं धन्यासि भुवनत्रये ।
धन्यं कुलमिदं नूनं धन्यं हि चरितं तव ॥२०॥

बालग्रहोऽयं दुर्धर्षः प्रह्लादादीन्निपीड्य च ।
अप्राप्तपूर्णकामत्वात्ते सुतामप्यपीडयत् ॥२१॥

शान्तिं करोमि तस्याहं हरिनामानुकीर्तनात् ।

त्वञ्च शीघ्रमितो गच्छ सहैव वृषभानुना ॥२२॥

நாரதர்

*20-22. அம்மா! நீ வருந்தவேண்டாம். மூவுலகிலும் நீயே பாக்யவதி. உன் குலமும் சரித்திரமும் புனிதமாயிற்று. இது ஸாதாரணமான க்ருஹமில்லை. ப்ரஹ்லாதன் முதலியவர் களைப் பிடித்து ஆட்டிவைத்த (பகவானாகிய) பெரிய க்ரஹமே ஆசையடங்காமல் உன் பெண்ணையும் பிடித்திருக்கிறது. நீயும் பானுகோபரும் சற்று வெளியே செல்லுங்கள். நான் ஹரிநாமமந்திரத்தினால் இதற்கு சாந்தி செய்கிறேன்.*

**श्रीसद्गुरुरुवाच**

देशे विविक्ते देवर्षिर्देवीमभ्येत्य भक्तिमान् ।
श्रीकृष्ण कृष्ण कृष्णेति कीर्तयामास सुस्वरम् ॥२३॥

तन्नामश्रवणानन्दसञ्जातपरमोत्सवा ।
अपश्यन्नारदं देवी कृपया पद्मलोचना ॥२४॥

कृष्णकीर्तनमात्रेण प्रशान्तविरहज्वरा ।
दिव्यकैशोररूपेण सुप्रसन्नाऽभवत्तदा ॥२५॥

ஸ்ரீஸத்குரு

*23-25. தனிமையில் நாரதர் ராதையிடம் வந்து க்ருஷ்ண, க்ருஷ்ண, க்ருஷ்ண என்று ஜபம் செய்தார். க்ருஷ்ணநாமத்தைக் கேட்ட மறுகணம் க்ருஷ்ணவிரஹம் தணிந்து பரமானந்த மடைந்து ராதாதேவி பதினாறு வயது சிறுமியாக நாரதருக்குக் காக்ஷியளித்தாள்.*

कुटिलालकसम्युक्तां राकाचन्द्रसमाननाम् ।
चञ्चलापाङ्गदीर्घाक्षीं चलन्मकरकुण्डलाम् ॥२६॥

नवाम्भोजमुखीं देवीं नासालम्बितमौक्तिकाम् ।
कोमलाधरसन्दीप्तदन्तमुक्तावलिप्रभाम् ॥२७॥

हारकङ्कणकेयूरकाञ्चीमञ्जीरभूषिताम् ।
हेमकुंभस्तनीं राधां कृशाङ्गीं तनुमध्यमाम् ॥२८॥

लीलांशुकेन मधुरं भाषमाणां मुहुर्मुहुः ।
त्रिलोकजननीं देवीं त्रिभङ्गिललिताकृतिम् ॥२९॥

*26-29.* சுருண்ட கேசமுடையவளும், பூர்ணசந்திரனைஒத்த முகமுடையவளும், அலைகின்ற விழிகள் உடை.யவளும், குண்டலம், மூக்குத்தி, ஹாரம், கங்கணம், கடகம், ஒட்டியாணம், சலங்கை இவைகள் அணிந்தவளும், நடுத்தரமான தோற்ற முடையவளும், கையில் ஏந்திய கிளியுடன் கொஞ்சுபவளும், ஒய்யாரமாய் வளைந்து நிற்பவளுமான தேவியை நாரதர் தர்சனம் செய்தார்.

नित्ययौवनसंपन्नां ददर्श मुनिपुङ्गवः ।
करमुत्थाप्य सा देवी पद्मकेसरसन्निभम् ।
अभयं प्रददौ तस्मै नारदाय महात्मने ॥३०॥

तद्दर्शनपरानन्दबाष्पपूरितलोचनः ।
तुष्टाव प्रणतश्चापि नारदो गद्गदान्वितः ॥३१॥

*30-31.* ராதாதேவி தாமரைபோன்ற தனது கையைத் தூக்கி நாரதருக்கு அபயம் தந்தாள். நாரதர் இவ்வாறு தேவியின் தர்சனத்தைப் பெற்று ஆனந்தமடைந்து கைகுவித்து வணங்கி தழுதழுத்த குரலுடன் துதித்தார்.

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये देवीकाण्डे बाललीलावर्णनं नाम तृतीयोऽध्यायः॥३॥*

**இவ்வாறு ஶ்ரீக்ருஷ்ணப்ரேமிமஹாப்ரபு அருளிய ஶ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில் தேவீகாண்டத்தில் மூன்றாம் அத்யாயம் முற்றும்.**

# अथ चतुर्थोऽध्यायः

## நான்காவது அத்யாயம்

### नारद उवाच

ह्लादिनीं सर्वजगतां परमानन्ददायिनीम् ।
इच्छाशक्तिं मुकुन्दस्य राधिकां शरणं भजे ॥१॥

संविदं सर्वजगतां ज्ञानमोक्षप्रदायिनीम् ।
चिच्छक्तिं लोकनाथस्य राधिकां शरणं भजे ॥२॥

सन्धिनीं सर्वजगतां सृष्टिसंहारकारिणीम् ।
क्रियाशक्तिमच्युतस्य राधिकां शरणं भजे ॥३॥

इच्छाशक्तिक्रियाशक्तिज्ञानशक्तिस्वरूपिणीम् ।
त्वामेव मूलप्रकृतिं राधिकां शरणं भजे ॥४॥

நாரதர்

1-4. எல்லா மக்களுக்கும் ஆனந்தத்தைத் தரும் பகவானின் இச்சாசக்தி வடிவமாய் இருப்பவளும், ஞானத்தையும், மோக்ஷத்தையும் தரக்கூடிய ஞானசக்தி வடிவாய் இருப்பவளும், உலகத்தின் படைத்தல், காத்தல், அழித்தல் என்கிற மூன்று தொழிலுக்கும் காரணமான க்ரியாசக்தி வடிவமாய் இருப்பவளும், இவ்வாறு மூன்று சக்திவடிவமான மூலப்ரக்ருதியான ராதாதேவியை சரணமடைகிறேன்.

कृष्णस्य देवदेवस्य मायां मोहनकारिणीम् ।
गुणत्रयेण सम्युक्तां राधिकां शरणं भजे ॥५॥

गुणत्रयविनिर्मुक्तां सच्चिदानन्दरूपिणीम् ।
शुद्धसत्त्वगुणां देवीं राधिकां शरणं भजे ॥६॥

5-6. ஸத்வகுணம், ரஜோகுணம், தமோகுணம் எனப்படும் முக்குண வடிவமான விஷ்ணு மாயையாகவும், மாயைக்கு அப்பாற்பட்ட ஸச்சிதானந்த ரூபிணியாகவும் உள்ள ராதாதேவியை சரணமடைகிறேன்.

गोलोके परमे धाम्नि चिदाकाशस्थिते शिवे ।
क्रीडन्तीं निजकान्तेन राधिकां शरणं भजे ॥७॥

वैकुण्ठेपि महालक्ष्मीं कैलासे पार्वतीं सतीम् ।
सरस्वतीं सत्यलोके राधिकां शरणं भजे ॥८॥

7-8. சிதாகாசத்திலுள்ள கோலோகமென்னும் பரமபதத்தில் கண்ணனோடு விளையாடுபவளும், வைகுண்டத்தில் மஹாலக்ஷ்மி ரூபத்திலும், கைலாஸத்தில் பார்வதி ரூபத்திலும், ஸத்யலோகத்தில் ஸரஸ்வதிரூபத்திலும் ப்ரகாசிக்கும் ராதாதேவியை சரணமடைகிறேன்.

आब्रह्मकीटजननीं कृष्णभक्तिप्रदायिनीम् ।
कारुण्यपूर्णहृदयां राधिकां शरणं भजे ॥९॥

प्रेमवात्सल्यनिलयां प्रेमभक्तिस्वरूपिणीम् ।
कृष्णप्राणप्रियां देवीं राधिकां शरणं भजे ॥१०॥

9-10. ப்ரும்மாமுதல் புழுவரை உள்ள அனைத்து ஜீவன்களுக்கும் மாதாவும், க்ருஷ்ண பக்தியைத் தருபவளும், க்ருஷ்ணபக்தியே வடிவமாய் இருப்பவளும், கருணை நிரம்பிய உள்ளம் படைத்தவளும், ப்ரேமைக்கும் வாத்ஸல்யத்திற்கும் இருப்பிடமானவளும், கண்ணனுக்கு உயிரானவளுமான ராதாதேவியைச் சரணடைகிறேன்.

तटित्कोटिसमानाङ्गीं दरान्दोलितलोचनाम् ।
दीर्घवेणीं मञ्जुवाणीं राधिकां शरणं भजे ॥११॥

कुटिलालकसम्युक्तां कस्तूरीतिलकाङ्किताम् ।

कज्जलालिप्तनयनां राधिकां शरणं भजे ॥१२॥

मन्दोन्नतभ्रूविलासां मन्दस्मितमुखाम्बुजाम् ।
मधुरालापसंयुक्तां राधिकां शरणं भजे ॥१३॥

नवचम्पकवर्णाभां नासालम्बितमौक्तिकाम् ।
नन्दात्मजप्रियां देवीं राधिकां शरणं भजे ॥१४॥

करुणापूर्णहृदयां ग्रैवेयकविभूषिताम् ।
कुङ्कुमारुणदिव्याङ्गीं राधिकां शरणं भजे ॥१५॥

*11-15. மின்னல்கொடி போன்றவளும், அலைகின்ற விழியுடையவளும், கொஞ்சிப் பேசுகின்றவளும், சுருண்ட நீண்ட கூந்தல் உடையவளும், கண்களில் மை, நெற்றியில் கஸ்தூரி திலகம் அணிந்தவளும், வளைந்த புருவமுடையவளும், சிரித்தமுகமுடையவளும், சம்பகபுஷ்பம்போல்வர்ண முள்ளவளும், மூக்கில் முத்து அணிந்தவளும், கழுத்தில் பதக்கமணிந்தவளும், சிவந்தகுங்குமத்தால் சோபிக்கின்றவளு மான ராதாதேவியைச் சரணமடைகிறேன்.*

नीलाम्बरपरीधानां नानाभूषणभूषिताम् ।
निर्मलप्रेमनिलयां राधिकां शरणं भजे ॥१६॥

श्रेयोविधायिनीं देवीं श्रीसखीं श्रीफलस्तनीम् ।
श्रितचिन्तामणिं राधां राधिकां शरणं भजे ॥१७॥

कृशोदरीं कृष्णपत्नीं क्रीडारसविलासिनीम् ।
कामाक्षीं कमनीयाञ्च राधिकां शरणं भजे ॥१८॥

रंभोरुं रम्यहृदयां राकाचन्द्रसमाननाम् ।
रासमण्डलमध्यस्थां राधिकां शरणं भजे ॥१९॥

वरदाभयहस्ताञ्च वन्दारुजनवल्लभाम् ।
बृन्दारकगणाराध्यां राधिकां शरणं भजे ॥२०॥

16-20. நீலப்பட்டாடை அணிந்தவளும், பற்பல பூஷணங்கள் அணிந்தவளும், சுத்தமான ப்ரேமைஉடையவளும், அண்டியவர்களை ஆதரிப்பவளும், நன்மையைச் செய்பவளும், குறுகிய இடையுடையவளும், விளையாட்டில் விருப்பமுடைய வளும், க்ருஷ்ணனின் பட்டமஹிஷியும், இனிய உள்ளம் படைத்தவளும், பூர்ணசந்திரன்போன்ற முகமுடையவளும், ராஸமண்டலத்தில் நிற்பவளும், அபயம் கொடுப்பவளும், வேண்டிய வரத்தைக் கொடுப்பவளும், பக்தஜனங்களிடம் ப்ரியமுள்ளவளும், தேவர்களால் பூஜிக்கப்படுபவளுமான ராதாதேவியைச் சரணமடைகின்றேன்.

निकुञ्जनिलयां देवीं बृन्दावनविहारिणीम् ।
मञ्जीरशोभितपदां राधिकां शरणं भजे ॥२१॥

वृषभानुसुतां देवीं यमुनातीरचारिणीम् ।
पद्महस्तां प्रसन्नाञ्च राधिकां शरणं भजे ॥२२॥

लीलाशुकेन सरसं कुर्वतीं मृदुभाषणम् ।
लीलारसपरां देवीं राधिकां शरणं भजे ॥२३॥

आकर्ण्य मुरलीगानं नन्दसूनोर्मुहुर्मुहुः ।
मूर्च्छितां प्रेमभावेन राधिकां शरणं भजे ॥२४॥

अधिरूढमहाभावां श्रीकृष्णविरहाकुलाम् ।
प्रेमभक्तिं मूर्तिमतीं राधिकां शरणं भजे ॥२५॥

प्रेमभक्तिप्रदां देवीं प्रेमभक्तिपरायणाम् ।
प्रेमभक्तसमाराध्यां राधिकां शरणं भजे ॥२६॥

*21-26.* கால்களில் சலங்கையணிந்தவளும், யமுனைக்கரையிலும், ப்ருந்தாவனத்திலும், நிகுஞ்ஜத்திலும் விளையாடுபவளும், வ்ருஷபானுகோபகுமாரியும், ப்ரஸன்னமானவளும், தாமரைப் பூவைக் கையில் ஏந்தியவளும், கிளியுடன் கொஞ்சிப் பேசுபவளும், கண்ணனின் குழலோசையைக் கேட்டதும் மயக்கமடைபவளும், க்ருஷ்ண விரஹத்தால் துடிப்பவளும், ப்ரேமபக்தியே வடிவமானவளும், ப்ரேமபக்தியைத் தருபவளும், ப்ரேமபக்தியே லக்ஷியமானவளும், ப்ரேமபக்தர்களால் ஆராதிக்கப்படுபவளுமான ராதாதேவியை சரணமடைகிறேன்.

### श्रीसद्गुरुरुवाच

एवं ब्रह्मकुमारेण महाभागवतेन सा ।
संस्तुता वरदा देवी बभाषे मधुरं वचः ॥२७॥

### ஸ்ரீஸத்குரு

*27.* இவ்வாறு மஹாபாகவதரான நாரதரால் ஆராதிக்கப்பட்ட தேவி மதுரமாய்ச் சொன்னாள்.

### श्रीदेव्युवाच

सुप्रसन्नास्मि ते भक्त स्तोत्रेण प्रणयेन च ।
वरं प्रतीच्छ भद्रं ते महाभागवतोत्तम ॥२८॥

यः पठेच्छ्रद्धया नित्यमिदं स्तोत्रं त्वया कृतम् ।
दास्यामि कामितं सर्वं तथा भक्तिञ्च केशवे ॥२९॥

### ஸ்ரீதேவி

*28-29.* பக்த! உனது பக்தியாலும், ஸ்தோத்திரத்தாலும் ப்ரஸன்னமானேன். வேண்டிய வரனைக் கேட்டுக்கொள். இந்த ஸ்தோத்திரத்தை யார் தினமும் ச்ரத்தையுடன் படிப்பார்களோ, அவர்களுக்கு விரும்பிய வரனையும், க்ருஷ்ணபக்தியையும் தருவேன்.

### नारद उवाच

नमस्तेस्तु जगन्मातर्भूयो भूयो नमोस्तु ते ।

देहि मे परमां भक्तिं तवैव चरणाब्जयोः ॥३०॥

अलौकिकीं परां भक्तिं नैव जानन्ति पामराः ।
निगूढवैभवा लोके मातस्त्वमिह सञ्चर ॥३१॥

நாரதர்

*30-31.* ஜகன்மாதாவே! வந்தனம். உன் திருவடிகளில் எனக்கு திடமான பக்தியைக் கொடு. பாமரமக்கள் உனது ப்ரேம பக்தியை அறியமாட்டார்கள். எனவே உனது மஹிமையை மறைத்துக் கொண்டு குழந்தையைப்போல் விளையாடு.

*श्रीसद्गुरुरुवाच*

इत्युक्ता नारदेनापि देवी गोलोकवासिनी ।
अन्तर्दधे सद्य एव शिशुरूपेण संस्थिता ॥३२॥

नारदोपि महातेजाः संस्मरन् श्रीहरिप्रियाम् ।
परमाश्चर्यसम्युक्तो जगाम निजमाश्रमम् ॥३३॥

ஸ்ரீஸத்குரு

*32-33.* இவ்வாறு நாரதர் சொன்னதும் ராதாதேவி உடனே மறைந்து பழையபடி குழந்தையாகக் காக்ஷியளித்தாள். நாரதரும் ஆச்சர்யமடைந்து ராதையை த்யானம் செய்துகொண்டே தனது ஆச்ரமத்திற்குச் சென்றார்.

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमहात्म्ये देवीकाण्डे*
*श्रीराधास्तोत्रं नाम चतुर्थोऽध्यायः॥४॥*

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிமஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில் தேவீகாண்டத்தில் நான்காவது அத்யாயம் முற்றும்.**

# अथ पञ्चमोऽध्यायः

## ஐந்தாவது அத்யாயம்

### श्रीसद्गुरुरुवाच

अथाचिरेण कालेन समुपस्थितयौवना ।
शुशुभे राधिकादेवी पर्वणीव कलानिधिः ॥१॥

क्वचिद्गायति चोद्याने मधुरं वीणया सह ।
क्वचिन्नृत्यति सानन्दं पदशिञ्जितनूपुरा ॥२॥

क्वचिच्चरति पश्यन्ती वनं प्रकृतिसुन्दरम् ।
क्वचित्क्रीडति सप्रेम सखीभिः सह कानने ॥३॥

क्वचिच्चञ्चति हिन्दोले सखीजनसमन्विता ।
क्वचित्करोति कैङ्कर्यं स्वमातुः प्रेमपूर्वकम् ॥४॥

जनन्या च कलावत्या लालिता जनकेन च ।
राजत्यलं राधिका सा सखीभिः समलङ्कृता ॥५॥

### ஸ்ரீஸத்குரு

*1-5. ராதாதேவி வளர்பிறைச் சந்திரனைப்போல் வளர்ந்து கொஞ்சநாளில் கன்னிப் பருவத்தை அடைந்தாள். தினமும் தோழிகளுடன் அன்புடன்கூடி விளையாடுவாள். அன்னைக்கு பணிவிடை செய்வாள். மாலைப்பொழுதில் ஆடுவாள், பாடுவாள், வீணை வாசிப்பாள், ஊஞ்சலாடுவாள், தோட்டத்தில் உலாவுவாள். தோழிகள் அவளை அலங்காரம் செய்வார்கள். பெற்றோர்கள் அவளிடம் மிகவும் வாத்ஸல்யம் காட்டுவார்கள்.*

मञ्जीरभूषितपदा मञ्जुभाषणतत्परा ।
इतस्ततः सञ्चरन्ती वृषभानुगृहे च सा ॥६॥

प्रेमवात्सल्यभावेन रञ्जयत्यखिलं जनम् ।
जननी सर्वजगतां विरेजे वृषभानुजा ॥७॥

नवचम्पकवर्णाभा नानाभूषणभूषिता ।
नवयौवनसंपन्ना शुशुभे वृषभानुजा ॥८॥

सर्वसौन्दर्यसदना शशाङ्कवदना च सा ।
सरसप्रेमनिलया सखीनां सुखवर्धना ॥९॥

पवित्रे यमुनारण्ये सञ्चरन्ती मनोरमे ।
सुगन्धानि च पुष्पाणि गृह्णाति च मुहुर्मुहुः ॥१०॥

*6-10.* காலகளில் சலங்கை கொஞ்ச ராதை விருஷபானு கோபரின் வீட்டில் இங்குமங்கும் நடப்பாள். இனிமையாகப் பேசுவாள். அவளுடைய அன்பில் உலகமே மயங்கி நிற்கும். புதிய சம்பகபுஷ்பம்போல் வர்ணமுடைய ராதை பல பூ ஷணங்கள் அணிந்து புதிய யௌவனத்துடன் சோபித்தாள். பூ.. ண சந்திரனை ஒத்த முகமுடைய ராதை அழகுக்கும் அன்புக்கும் இருப்பிடம். அவளைக் கண்டாலேயே தோழிகளுக்கு ஆனந்தம். ப்ருந்தாவனத்தில் அடிக்கடி சென்று ஸுகந்தமான பூக்களைப் பறித்து வருவாள்.

ललिता च विशाखा च चित्रा चम्पकवल्लरी ।
इन्दुलेखा तुङ्गविद्या रङ्गदेवी सुदेव्यपि ॥११॥

एवञ्च बह्वयः सख्यश्च सन्ति सद्गुणसंयुताः ।
ताभिः समन्विता देवी प्रेम्णा क्रीडत्यहर्निशम् ॥१२॥

*11-12.* ***லலிதா, விசாகா, சித்ரா, சம்பகவல்லி, இந்துலேகா, துங்கவித்யா, ரங்கதேவி, ஸுதேவி*** என்கிற எட்டு தோழிகளும், மற்றும் பல தோ.ழிகளும் ராதைக்கு இருந்தனர். இவர்கள்யாவரும் நற்குணம் பொருந்தியவர்கள். எப்பொழுதும் ராதை அவர்களுடன் கூடி விளையாடுவாள்.

कदाचिद्यमुनातीरे सञ्चरन्ती सखीगणैः ।
शुश्राव मुरलीनादं परमानन्ददायकम् ॥१३॥

वृषभानुकुमारी सा सद्यो मोहवशङ्गता ।
मञ्जुलेन स्वभावेन पप्रच्छ ललितां सखीम् ॥१४॥

13-14. ஒருநாள் ராதை தோழிகளுடன் யமுனைக்கரையில் உலாவிக் கொண்டிருந்தாள். அப்பொழுது மிகவும் இனிய குழலோசை கேட்டது. மதுரமான ஸ்வபாவமுடைய ராதை மயங்கிப் போனாள். தோழியான லலிதாவைக் கேட்டாள்.

**श्रीदेव्युवाच**

कोयं वादयते वेणुं मधुरं मधुरं सखि ।
उन्मादयत्ययं नादो माधुर्यं जनयन् हृदि ॥१५॥

**ஸ்ரீதேவி**

15. தோழி! இவ்வளவு இனிமையாகக் குழலூதுவது யார்? என் உள்ளத்தில் இன்பத்தை உண்டாக்கி மயக்குகிறதே.

**ललितोवाच**

कोटिमन्मथलावण्यः कश्चित्कृष्ण इति श्रुतः ।
तनयो गोपराजस्य वर्तते यमुनावने ॥१६॥

गोकुलं चारयन्नत्र चरत्येवाविदूरतः ।
स एव मधुरं वेणुं वादयत्यद्य राधिके ॥१७॥

**லலிதா**

16-17. ராதே! க்ருஷ்ணன் என்று ஒருவன் இருக்கிறான். அவன் கோடிமன்மதர்களுக்கு ஸமமான அழகுடையவன். நந்த கோபரின் பிள்ளை. கொஞ்சதூரத்தில் மாடுமேய்த்துக் கொண்டு செல்கின்றான். இவ்வளவு இனிமையாக குழலூதுவது அவன்தான்.

### श्रीसद्गुरुरुवाच

नामश्रवणमात्रेण राधिका प्रेमरूपिणी ।
पपात मूर्च्छिता सद्यः पुलकाङ्कितविग्रहा ॥१८॥

सद्यः सखीजनैर्देवी सदयं परिसान्त्विता ।
उवाच मधुरं वाक्यं बाष्पाकुलविलोचना ॥ १९॥

अहो मधुरनामेदं मधुरं मधुराक्षरम् ।
आसाद्य मे कर्णपुटमानन्दयति मां सखि ॥२०॥

पुनः पुनर्वद सखि कृष्ण कृष्णेति सर्वदा ।
इतःपूर्वमविज्ञातं ददाति परमं सुखम् ॥२१॥

एवं सखीजनैः साकं मञ्जुलालापसंयुता ।
चचार यमुनातीरे गृह्णन्ती कुसुमानि च ॥२२॥

### ஸ்ரீஸத்குரு

*18-22. க்ருஷ்ணன் என்கிற பெயரைக்கேட்டதும், ராதை மூர்ச்சையானாள். அவள் மேனி சிலிர்த்தது. தோழிகள் ஸமாதானம் செய்தார்கள். உடனே கண்ணீர் ததும்ப ராதை சொன்னாள். தோழி! இந்த நாமம் மிகவும் மதுரமாய் இருக்கிறது. என் காதில் பட்டதும் ஆனந்தம் உண்டாகிறது. மறுபடியும் க்ருஷ்ண, க்ருஷ்ண என்று சொல்லு. இதனால் புத்தம்புதிய இன்பம் உண்டாகிறது. இவ்வாறு பேசிக் கொண்டே ராதாதேவி மலர் கொய்துகொண்டு யமுனைக் கரையில் உலாவிக் கொண்டிருந்தாள்.*

क्वचिन्मन्दारवृक्षस्य मूले कृष्णं ददर्श सा ।
अत्यन्तसुन्दारकारमकस्माद्वृषभानुजा ॥२३॥

त्रिजगन्मोहनं देवं त्रिभङ्गिललिताकृतिम् ।

व्यत्यस्तचरणाम्भोजं पदशिञ्जितनूपुरम् ॥२४॥

दिव्यपीताम्बरधरं हरिचन्दनचर्चितम् ।
वनमालाधरं धीरं ललितं ललनाप्रियम् ॥२५॥

हारकङ्कणकेयूरकौस्तुभादिविभूषणम् ।
महोरस्कं महाबाहुं नवयौवनसम्युतम् ॥२६॥

वादयन्तञ्च मुरलीं पश्यन्तं गोकुलं मुहुः ।
कुटिलालकसम्युक्तं कोमलाधरपल्लवम् ॥२७॥

मन्दस्मितमुखाम्भोजं मदनायुतसुन्दरम् ।
कोमलाधरबिम्बञ्च कस्तूरीतिलकोज्ज्वलम् ॥२८॥

*23-28. அங்கு ஒரு மந்தாரமரத்தடியில் ராதை அழகு நிரம்பிய திருமேனியுடைய கண்ணனைக் கண்டாள். ஒய்யாரமாய் வளைந்து நிற்பவனும், மூவுலகையும் மயக்குபவனும், ஒரு காலை ஊன்றி மற்றொரு காலை மாற்றி வைத்துக்கொண்டு நிற்பவனும், காற்சலங்கை அணிந்தவனும், ஹரி சந்தனம் பூசியவனும், பீதாம்பரதாரியும், வனமாலை அணிந்தவனும், தீரலலிதனும், கோபீநாதனும், ஹாரம், கங்கணம் அணிந்தவனும், விசாலமான மார்பும் நீண்ட கைகளும் உடையவனும், வேணுகானம் செய்பவனும், கோபாலனும், சுருண்ட கேசங்கள் உடையவனும், முறுவல் செய்யும் முகமுடையவனும், கஸ்தூரிதிலகம் அணிந்தவனுமான கண்ணனை ராதை கண்டாள்.*

विलोक्य राधिकादेवी चञ्चलापाङ्गविभ्रमा ।
परमाश्चर्यचकिता स्वेदस्निग्धाऽभवत्तदा ॥२९॥

दिव्यसौन्दर्यसम्युक्तां राधिकाञ्च विलोक्य सः ।
परमानन्दसंमुग्धो बभूव पुलकाङ्कितः ॥३०॥

तमेव मनसा ध्यायन् सखीभिः सह राधिका ।
जगाम स्वगृहं शीघ्रं निःश्वसन्ती मुहुर्मुहुः ॥३१॥

भगवानपि गोविन्दः प्रेमस्वारस्यपण्डितः ।
विलोक्य प्रेयसीं राधामस्वस्थहृदयोऽभवत् ॥३२॥

अनयोर्दिव्यदम्पत्योः प्रेमभावं विलोक्य ताः ।
प्रापुः कुतूहलं प्रेम्णा भाषमाणाः परस्परम् ॥३३॥

*29-33.* கண்ணனைக் கண்டதும் ராதை மிகவும் ஆச்சர்ய மடைந்தாள். மயங்கினாள். கடைக்கண்ணால் பல தடவை பார்த்தாள். அவள் உடல் வியர்த்து விட்டது. அழகு நிரம்பிய ராதையைக் கண்ட கண்ணனும் ஆனந்தம் அடைந்தான். கண்ணனின் மேனி சிலிர்த்துவிட்டது. ராதை தனது தோழிகளுடன் கண்ணனையே நினைத்து பெருமூச்சு விட்டுக்கொண்டே வீடு சென்றாள். கண்ணனும் ராதையைக் கண்டதுமுதல் உள்ளம் பறிபோனவனாய்த் தவித்தான். இந்த இருவரின் ப்ரேமையைக் கண்ட தோழிகள் மகிழ்ச்சி யடைந்தனர். ஒருவருக்கொருவர் பேசிக்கொண்டே வீடு சென்றனர்.

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये देवीकाण्डे पञ्चमोऽध्यायः॥५॥*

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிமஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில் தேவீ காண்டத்தில் ஐந்தாம் அத்யாயம் முற்றும்.**

# अथ षष्ठोऽध्यायः

## ஆறாவது அத்யாயம்

### श्रीसद्गुरुरुवाच

निनाय रात्रिं कृच्छ्रेण श्रीकृष्णविरहातुरा ।
प्रलपन्ती सदा देवी सखीभिः परिसान्त्विता ॥१॥

चिन्तयामास गोविन्दं सन्ततं वृषभानुजा ।
निद्राविरहिता देवी निःश्वसन्ती मुहुर्मुहुः ॥२॥

शय्यां न लेभे सा देवी सखीभिः परिकल्पिताम् ।
नक्षत्रवीथीं पश्यन्ती कृतजागरणव्रता ॥३॥

कपोलगलितं तस्या जलं नेत्रविनिर्गतम् ।
आसाद्य स्तनकुंभाग्रं शतधा स्फुटति स्वयम् ॥४॥

वक्षोजयुगलं तस्या मुहुरुत्कम्पितं श्रमात् ।
काकुवाणीं प्रकुर्वन्त्याः करौ विन्यस्य वक्षसि ॥५॥

ஸ்ரீஸத்குரு

1-5. ராதை கண்ணனின் பிரிவினால் கஷ்டப்படுகிறவளாய் தோழிகளால் ஸமாதானம் பண்ணப்பட்டும் ஸதாகாலமும் புலம்புகின்றவளாய் இரவைக் கழித்தாள். தூக்கமில்லாமல் அடிக்கடி பெருமூச்சு விட்டுக்கொண்டே கண்ணனையே நினைத்து உருகினாள். தோழிகளால் போடப்பட்ட படுக்கையில் படுக்கவில்லை. தூங்காமல் ஆகாயத்தையே நோக்கியவாறு உட்கார்ந்திருந்தாள். அவளுடைய கண்ணீர்த் திவிலைகள் முத்துமுத்தாய்க் கன்னத்தில் உதிர்ந்தன. மார்பில் கையை வைத்துக் கொண்டு கேவிக்கேவி அழுதாள்.

मदनज्वरतापेन सन्ततं कोमलं वपुः ।
देव्या न शेकुः संस्प्रष्टुं सुन्दर्यो ललितादयः ॥६॥

प्रललाप भृशं देवी प्राणनाथेति सन्ततम् ।
पतन्ती विलुठन्ती च पांसुगुण्ठितविग्रहा ॥७॥

न चक्रे भोजनं देवी न क्षीरञ्च पपौ तथा ।
अबला कामतापेन बभूव नितरां कृशा ॥८॥

पृथिव्यामेव शेते सा मुहुरुत्थाय धावति ।
क्वचिन्मूर्च्छामवाप्नोति तथा रोदिति सुस्वरम् ॥९॥

अहं किं करवाणीति वद मार्गं सखीति च ।
आनय प्राणाकान्तं मे वद तस्मै च मद्दशाम् ॥१०॥

इत्येवं बहुधा देवी प्रलपन्ती पुनः पुनः ।
सखीनां पादपद्मेषु निपतन्ती प्ररोदिति ॥११॥

सुन्दरं वदनं तस्या विरहेणैव पाण्डुरम् ।
हेमन्ते हिमसंव्याप्तः शुशुभे चन्द्रमा इव ॥१२॥

उवाच करुणं देवी श्रीकृष्णविरहाकुला ।
ललितां प्रेमभावज्ञामस्राकुलविलोचना ॥१३॥

*6-13. ஜ்ுரதாபத்தினால் அவளுடைய மெல்லிய திருமேனி கொதிப்படைந்தது. தோழிகளால் தொட்டுப் பார்க்கக்கூட முடியவில்லை. புழுதியில் விழுந்து புரளுவாள். ஹா ப்ராணநாத! என்று புலம்புவாள். அன்னமும் பாலும் வெறுத்தாள். அவள் திருமேனி மிகவும் இளைத்துவிட்டது. ஒருகால் மூர்ச்சையடைந்து கிடப்பாள் ஒரு கால் எழுந்து ஓடுவாள். ஒரு கால் தீனமாய் அழுவாள். தோழி! நான் என்ன செய்யட்டும் எனக்கு ஒருவழி சொல். என் ப்ராணநாதனை அழைத்து வா என் நிலைமையை அவரிடம் சொல் என்று எப்போதும் புலம்பிக்கொண்டே இருப்பாள். தோழிகளின் காலில் விழுந்து அழுவாள். அவளுடைய முகம் பனிக்காலத்து சந்திரனைப் போல் வெளுத்துவிட்டது, இவ்வாறு க்ருஷ்ணவிரஹத்தில் துடிக்கும் ராதை தனது ப்ரேமையை அறிந்த தோழியான லலிதாவைப் பார்த்துச் சொன்னாள்.*

**श्रीदेव्युवाच**

वक्ष्यामि मम भावं ते सावधानं सखि शृणु ।

त्वमेव परमो बन्धुस्त्वमेव परमा गतिः ॥१४॥

मन्दारमूले गोविन्दं मन्दस्मितमुखाम्बुजम् ।
विलोक्य सरसं सद्यो लज्जिताऽहमवस्थिता ॥१५॥

अवाङ्मुखीं तदा सोपि पश्यन्तीञ्च मुहुर्मुहुः ।
कटाक्षविशिखेनैव विव्याध निशितेन माम् ॥१६॥

तदाप्रभृति मे चित्तं कृष्णमेवानुधावति ।
अहं तु पितृभक्तास्मि कुलाचारसमन्विता ॥१७॥

युक्तः पतिस्तु कन्यानां पिता यस्मै ददाति सः ।
दरिद्रोपि च मूर्खोपि वृद्धोपि कितवोपि च ॥१८॥

एवं सनातनं धर्मं जानामि ललिते सखि ।
तथापि मम चित्तं तु कृष्णमेवानुधावति ॥१९॥

समाधातुं न शक्नोमि प्रच्युतं मम मानसम् ।
हा हन्त हन्त दीनास्मि सखि किं करवाण्यहम् ॥२०॥

ஸ்ரீதேவி

*14-20. தோழி! கவனித்துக் கேள். நீயே எனக்கு பந்து. நீயே எனக்கு கதி. எனவே என் உள்ளத்தில் இருப்பதை ஒளிக்காமல் சொல்லுவேன். மந்தாரமரத்தினடியில் கண்ணனைக் கண்டேன். அவன் என்னைக் கண்டதும் முறுவல் செய்தான். நான் வெட்கமடைந்தேன். தலைகுனிந்தவாறு அவனைப் பல தடவைப் பார்த்தேன். கண்ணனும் கடைக்கண்ணால் என்னை அடித்தான். அன்றுமுதல் என் உள்ளம் கண்ணனையே நாடுகிறது. நானோ தந்தையை மீறாதவள். நற்குலத்திற் பிறந்து நன்னடத்தையுடன் இருப்பவள். தந்தை ஏழையானாலும், மூடனானாலும், கிழவனானாலும், துர்நடத்தை உடையவனா*

னாலும் எவனுக்கு என்னைக் கொடுப்பாரோ அவரையே கணவன் என்று பக்தியுடன் ஏற்க வேண்டுமென்று கன்னிகைகளுக்கு நியமம் என்ற ஸனாதனதர்மத்தை நான் அறிவேன். லலிதே! ஆயினும் என் உள்ளம் எனக்குக் கட்டுப் படாமல் கண்ணனிடமே ஓடுகிறது. அந்தோ! என் செய்வேன்?

कलानिधिर्दहति मां दावानलसमः सखि ।
चन्दनं शीतलमपि हालाहलमिवास्ति मे ॥२१॥

अयं मन्दसमीरश्च दुःखमेव ददाति मे ।
वज्रपातसमञ्चेदं मञ्जुलं शुकभाषणम् ॥२२॥

इदञ्च मधुरं क्षीरं मम न स्वादु वर्तते ।
इयं शय्या सोपधाना भाति कण्ठकवत् सखि ॥२३॥

दुःसहं दुःखमासाद्य न हि मे जीविते स्पृहा ।
पतामि यमुनायां वा पिबामि विषमेव वा ॥२४॥

क्वाहं मन्दमतिर्दीना क्वासौ श्रीनन्दनन्दनः ।
प्राप्तुमिच्छामि हा हन्त पङ्गुः शैलशिरो यथा ॥२५॥

आभीरयुवराजोऽयं नूनं दुर्लभ एव हि ।
तथापि मम कामस्तु वशे मम न वर्तते ॥२६॥

सफलं मम जन्मेदं तद्दास्यं लभ्यते यदि ।
करोमि बहुकृच्छ्रेण तदर्थं प्राणधारणम् ॥२७॥

21-27. தோழி! இந்த நிலவு காட்டுத்தீயைப்போல் என்னைக் கொளுத்துகிறது. குளிர்ந்த சந்தனம் ஹாலாஹலவிஷம்போல் இருக்கிறது. தென்றலும் துன்பமே தருகிறது. கிளியின் கொஞ்சுதலும் இடி முழக்கம்போல் இருக்கிறது. பாலும்

ருசிக்கவில்லை. படுக்கையும் கொள்ளவில்லை. இனி உயிர் வாழ்வதில் எனக்கு விருப்பமில்லை. யமுனையில் விழட்டுமா? விஷத்தைக் குடிக்கட்டுமா? நான் எங்கே? கண்ணன் எங்கே? முடவன் மலையில் ஏற ஆசைப்படுவதைப்போலத்தான். நந்தகுமாரன் எனக்கு அரியவன். என் ஆசை பொல்லாது. ஒருகால் அவனுடைய கைங்கர்யம் கிடைக்குமானால் என் பிறவி பயனுடையது. இந்த ஆசையால்தான் உயிரை வைத்துக் கொண்டிருக்கிறேன்.

**श्रीसद्गुरुरुवाच**

इत्युक्त्वा लोकजननी परिरभ्य प्रियां सखीम् ।
रुरोद नितरां दीना काकुवादेन सुस्वरम् ॥२८॥

विलोक्य स्वामिनीं सख्यः श्रीकृष्णविरहाकुलाम् ।
कर्तव्यं किमिति स्मृत्वा तस्थुर्मौनेन दुःखिताः ॥२९॥

अङ्के तु ललितादेव्याः शयानां वार्षभानवी ।
प्रलपन्ती कृष्णमेव लेभे निद्रां निशान्तरे ॥३०॥

शिरीषमृदुलं देव्याः शरीरं स्वेदसम्युतम् ।
दृष्ट्वा विशाखा सहसा व्यजनेनाभ्यवीजयत् ॥३१॥

अन्याश्च गोपसुन्दर्यो बाष्पपूरितलोचनाः ।
राधिकामेव पश्यन्त्यस्तत्र मौनेन संस्थिताः ॥३२॥

**ஸ்ரீஸத்குரு**

28-32. இவ்வாறு சொல்லி ஜகன்மாதாவான ராதை லலிதாவைக் கட்டிக்கொண்டு கேவிக்கேவி அழுதாள். தங்கள் தலைவி கண்ணனின் பிரிவினால் கஷ்டப்படுவதைக் கண்டு சொல்வதறியாமல் தோழிகள் மௌனமாய் நின்றனர். ராதை லலிதாவின் மடியிலேயே கண்ணயர்ந்தாள். பூவைவிட மெல்லிய அவள் மேனி வாடிவியர்த்தது. இதைக் கண்ட விசாகா

விசிறினாள். மற்ற கோபிகைகள் கண்ணீர் விட்டுக்கொண்டே மௌனமாய் ராதையையே பார்த்துக் கொண்டிருந்தனர்.

इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये देवीकाण्डे षष्ठोऽध्यायः॥६॥

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிமஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில் தேவீகாண்டத்தில் ஆறாவது அத்யாயம் முற்றும்.**

# अथ सप्तमोऽध्यायः

## ஏழாவது அத்யாயம்

### श्रीसद्गुरुरुवाच

तत्रैव कुररी काचित्कामज्वरसमन्विता ।
विललाप भृशं दीना निशि वृक्षाग्रसंस्थिता ॥१॥

निशम्य क्रन्दनं तस्या वीतनिद्रा च राधिका ।
दधावोन्मादसम्युक्ता सपद्युत्थाय संभ्रमात् ॥२॥

क्व यासि प्राणकान्तेति प्रलपन्ती विमूर्च्छिता ।
पपात भुवि मालेव मृदुपुष्पविनिर्मिता ॥३॥

सद्य एव मुखाब्जे तु सिक्ते चन्दनवारिणा ।
प्रज्ञामवाप्य सा देवी प्रललाप भृशं पुनः ॥४॥

**ஸ்ரீஸத்குரு**

*1-4. நள்ளிரவில் அங்கு மரத்திலிருந்த ஒரு க்ரௌஞ்சபக்ஷி தன் காதலனைவிட்டுப் பிரிந்து கத்தியது. அந்தக் கத்தலில் ராதை எழுந்து கொண்டாள். என் ப்ராணநாத! எங்கு செல்கிறீர் என்று சொல்லிக்கொண்டே பரபரப்புடன் பித்துப் பிடித்தவள்போல் எழுந்து ஓடினாள். மூர்ச்சையடைந்து ஒரு பூமாலையைப்போல் பூமியில் விழுந்தாள். அவள் முகத்தில் பன்னீர் தெளித்துத் தோழிகள்தேற்றினார்கள். நல்ல நினைவு அடைந்த ராதை புலம்பத் தொடங்கினாள்.*

श्रीदेव्युवाच

क्व वर्तते कृपासिन्धुः प्राणकान्तो मम प्रिये ।
तं विहाय प्रियं कृष्णं व्यर्थमेव हि जीवितम् ॥५॥

तमेव पुरुषं धीरं स्वप्ने दृष्ट्वा प्रियं पतिम् ।
साक्षादप्राप्य तं दीना क्रन्दामि सखि दुर्भगा ॥६॥

निर्मले यमुनातीरे राकाचन्द्रविराजिते ।
मल्लीमन्दारपुन्नागचम्पकादिसुगन्धिते ॥७॥

मकरन्दमदोन्मत्तभृङ्गझङ्कारसम्युते ।
माधवीमण्टपे देवः कोटिमन्मथसुन्दरः ॥८॥

अवाङ्मुखीं लज्जया मामाश्लिष्य च पुनः पुनः ।
सोऽयमानन्दयामास पिबन्नप्यधरामृतम् ॥९॥

विरहं ते क्षणमपि नाहमिच्छामि सुन्दरि ।
मयैव सह तिष्ठ त्वमित्यूचे श्यामसुन्दरः ॥१०॥

हा हन्त मम दौर्भाग्यान्नेत्रमुन्मीलितं पुनः ।
त्वामेवाग्रेनुपश्यामि न पश्यामि प्रियं हरिम् ॥११॥

ஸ்ரீதேவி

*5-11. தோழி! கருணைக்கடலான என் ப்ராணநாதன் எங்கிருக்கிறான்? என் காதலனை விட்டு ஜீவித்து இருப்பது வீணே. கனவிலும் அவனையே கண்டேன். கண்விழித்ததும் மறைந்து விட்டானே. தோழி! நிர்மலமான யமுனைக்கரை நிலவு வீசுகிறது. மல்லிகை மலர் மணக்கிறது. தேன் உண்டு மதம் கொண்ட வண்டுகள் ஜங்காரம் செய்கின்றன. மாதவி மண்டபத்தில் மன்மதஸுந்தரனான க்ருஷ்ணனைக் கண்டேன்.*

வெட்கத்துடன் தலைகுனிந்து நின்றேன். அவன் என்னைத் தழுவி முத்தாடினான். உன் பிரிவைக் கணமும் தாளமாட்டேன் என்றான். அந்தோ! என் கனவு கலைந்து விட்டது. கண் விழித்தேன். கண்ணனைக் காணவில்லை.

कदा द्रक्ष्यामि गोविन्दं केशवं मुरलीधरम् ।
सफलं भवतु क्षिप्रं सखि मे स्वप्नदर्शनम् ॥१२॥

क्षणं युगशतमिव मम तेन विनाऽभवत् ।
शून्यायितं जगत्सर्वं तं विना श्यामसुन्दरम् ॥१३॥

संप्राप्तुं कृष्णचरणमुपायं वद मे सखि ।
विरहानलदग्धाया देहि मे जीवनं पुनः ॥१४॥

प्रतीक्षमाणा सत्सङ्गं प्राणान् सन्धारयाम्यहम् ।
कदा द्रक्ष्यामि मे नाथं कमलायतलोचनम् ॥१५॥

12-15. தோழி! வேணுகானம் செய்யும் கண்ணனை எப்போது பார்ப்பேன்? என் கனவு பலிக்குமா ஒவ்வொரு கணமும் யுகம்போல் போகிறது. அவனன்றி எனக்கு உலகமே பாழாகத் தோன்றுகிறது. அவன் திருவடியை அடைய வழிசொல்லு. கிருஷ்ண விரஹத்தினால் பொசுங்கிய எனக்கு உயிரைக்கொடு. கண்ணனுடன் சேரும் ஆசையினால் உயிரை சுமக்கிறேன். என் நாதனைக் கமலக்கண்ணனை எப்பொழுது காண்பேன்?

## श्रीसद्गुरुरुवाच

इत्युक्त्वा सा विशालाक्षी बाष्पपूरितलोचना ।
सगद्गदञ्च दैन्येन सुस्वरं प्ररुरोद ह ॥१६॥

सान्त्वयामास तां देवीं ललिता प्रेमतत्परा ।
कलयन्ती मुकुन्दस्य कल्याणगुणवर्णनम् ॥१७॥

ஸ்ரீஸத்குரு

16-17.இவ்வாறு சொல்லி நீண்ட கண்களையுடைய ராதை தழுதழுத்த குரலில் அழுதாள். அன்பேவடிவான லலிதா கண்ணனின் கல்யாணகுணங்களைச் சொல்லி அவளை சமாதானம் செய்தாள்.

ललितोवाच

शोकं मा कुरु देवि त्वं क्षिप्रं द्रक्ष्यसि माधवम् ।
धारयन्तं पुष्पमालां तव कण्ठे सकौतुकम् ॥१८॥

स्वप्नं ते सफलं विद्धि तव कल्याणदायकम् ।
तवैव सुलभः कृष्णः शरणागतवत्सलः ॥१९॥

इमं तव प्रेमभावं नूनं जानाति केशवः ।
नूनं भविष्यति क्षिप्रं त्वत्सौन्दर्यवशीकृतः ॥२०॥

पूर्वसंस्कारसंभूता काले प्रीतिः प्रवर्तते ।
त्वादृशीनां कुलस्त्रीणां न पापे रमते मतिः ॥२१॥

जन्मजन्मनि कृष्णेन सम्बन्धस्तव राधिके ।
तस्मादेव हि तं दृष्ट्वा स्वयं कामयते मनः ॥२२॥

येन सत्येन ते चित्तं कृष्णं कामयते स्वयम् ।
स एव नूनं ते भर्ता तेन सत्येन ते शपे ॥२३॥

गोकुलाधीशपुत्रोऽयं गोपस्त्रीणां मनोहरः ।
त्वामेव यमुनातीरं सन्ततं संप्रतीक्षते ॥२४॥

समानरूपसौन्दर्या त्वमेवासि हरेर्ननु ।

सदृशो धर्मसम्बन्धः कुलसम्बन्ध एव च ॥२५॥

वृषभानुस्तव पिता नूनं दुहितृवत्सलः ।
विज्ञाय तव भावं त्वां कृष्णायैव प्रदास्यति ॥२६॥

गृह्णातु ते पाणिलतां श्रीकृष्णः श्रितवत्सलः ।
इममेव वरं शीघ्रं यच्छन्तु कुलदेवताः ॥२७॥

**லலிதை**

18-27.தேவி! துக்கத்தை விடு. கண்ணன் உன் கழுத்தில் மாலை அணிவிப்பதை சீக்கிரமே காணப்போகிறாய். கனவு பலித்துவிடும். கண்ணனும் வருவான். கல்யாணமும் ஆகிவிடும். உனது ப்ரேமையைக் கண்ணன் அறிவான். அவன் உன் அழகில் மயங்கிவிடுவான். முற்பிறவியில் உண்டான ப்ரேமையே இப்பிறவியிலும் தொடங்குகிறது. உன்னைப்போன்ற குல மகளுக்கு சுதந்திரமான காதல் உண்டாகாது. ராதே! உனக்கும் கண்ணனுக்குமுள்ள தொடர்பு பல பிறவிகளில் வளர்ந்ததாகும். ஆகையினால்தான் அவனைக் கண்டதும் காதல் உண்டாகிறது. உனது புனிதமான க்ருஷ்ணப்ரேமையின்மேல் ஆணையிட்டுச் சொல்லுகிறேன். கண்ணனே உனக்குக் கணவனாவான். கண்ணன் நந்தகோபனின் அருமை மகன். கோபிகைகளின் உள்ளங்கவருபவன். எப்பொழுதும் யமுனைக்கரையில் உன்னையே எதிர்பார்த்து நிற்கிறான். அவனுக்கு நிகரான அழகும் குணமும் குலமும் உடையவள் நீ. உன்னுடைய தந்தைக்கு நீ செல்லப்பெண். எனவே உன் உள்ளமறிந்து அவர் உன்னை கண்ணனுக்கே தருவார். கண்ணன்தான் உன்னைக் கைப்பிடிக்க வேண்டும். நான் நமது குலதெய்வங்களிடம் இந்த வரனையே வேண்டுகிறேன்.

**श्रीसद्गुरुरुवाच**

इत्येवं सान्त्वयामास राधिकां विरहाकुलाम् ।
ललिता प्रेमभावज्ञा मधुरैर्वचनैर्मुहुः ॥२८॥

क्षणार्धमपि कृष्णस्य विरहञ्चातिदुःसहम् ।
अबला राधिका सोढुं न शशाक हरिप्रिया ॥२९॥

समुज्जृम्भितसात्वीकविचित्रप्रणयोज्ज्वला ।
दुरूहलक्षणा देवी शुशुभेऽद्भुतदर्शना ॥३०॥

प्रेमरूपं स्वयं देवी प्रेमभावमवाप्य च ।
प्रेमभावं दर्शयति प्रेमभावप्रकाशिनी ॥३१॥

अलौकिकानां भक्तानां श्रीकृष्णप्रेमिणां सताम् ।
पवित्रं राधिकादेव्याः प्रमाणं चरितं ननु ॥३२॥

ஸ்ரீஸத்குரு

*28-32. க்ருஷ்ணவிரஹத்தால் துடிக்கும் ராதையை லலிதா இனிமையாகப் பேசி ஸமாதானம் செய்தாள். ஆயினும் அபலையான ராதை கணநேரமும் க்ருஷ்ணவிரஹத்தை ஸஹிக்கமுடியாமல் தவித்தாள். பலவிதமான ப்ரேம லக்ஷணங்ககள் அவளுடைய திருமேனியில் தோன்றின. ப்ரேமையே வடிவமான தேவி ப்ரேமையின் லக்ஷணத்தை ப்ரகாசப்படுத்துகிறாள். கண்ணனிடம் ப்ரேமைகொண்ட எல்லா பக்தர்களுக்கும் ராதாதேவியின் சரித்ரமே ப்ரமாணமன்றோ!*

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये देवीकाण्डे सप्तमोऽध्यायः॥७॥*

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிமஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில் தேவீகாண்டத்தில் ஏழாவது அத்யாயம் முற்றும்.**

## अथाष्टमोऽध्यायः

## எட்டாவது அத்யாயம்.

*श्रीसद्गुरुरुवाच*

दिने दिने प्रवृद्धा सा कृष्णतृष्णा सुदुःसहा ।

वृषभानुकुमारी तद्विरहेण कृशाऽभवत् ॥१॥

नान्नमश्नाति सा देवी विरहेण समाकुला ।
सन्ततं प्रलपन्ती च ददृशे रोगिणीव च ॥२॥

नालङ्करोति चात्मानं न बध्नाति च कुन्तलम् ।
न क्रीडति यथापूर्वं सरसं नाभिभाषते ॥३॥

सदा ध्याननिमग्नाऽऽसीत्सदा निःश्वाससंयुता ।
सदा प्रलापसंयुक्ता सदा शोकपरायणा ॥४॥

विरहज्वरतापेन मलिनाञ्च कृशां सुताम् ।
दृष्ट्वा कलावती देवी चिन्तामाप दुरत्ययाम् ॥५॥

अविज्ञाय प्रेमभावं सुताया नन्दनन्दने ।
ज्वरताप इति स्मृत्वा निजभर्त्रे न्यवेदयत् ॥६॥

स चापि वैद्यमाहूय धनं धान्यं प्रदाय च ।
तस्मै प्रदर्शयामास राधिकां विरहाकुलाम् ॥७॥

पाणिं ग्रहीतुकामं तं कर्तुं रोगविचारणम् ।
अत्यन्तं शोकसन्तप्ता प्रुरोद विलोक्य सा ॥८॥

ஸ்ரீஸத்குரு

*1-8. ராதையின் க்ருஷ்ணவிரஹம் நாளுக்குநாள் அதிகமாக வளர்ந்தது. ராதை இளைத்து விட்டாள். சாப்பாடு இறங்க வில்லை. வியாதிவந்தவள்போல் காணப்பட்டாள். முன்பு போல் விளையாடுவதில்லை. ஸரஸமாய் பேசுவதில்லை. தலைபின்னிக் கொள்ளுவதில்லை. அலங்காரம் செய்து கொள்ளுவதில்லை. எப்போதும் சிந்தனையிலேயே மூழ்கி*

யிருந்தாள். அடிக்கடி பெருமூச்சு விடுவாள். புலம்புவாள். இதைக்கண்ட கலாவதி கவலைப்பட்டாள். தன் மகள் கண்ணனிடம் காதல்கொண்டதை அவள் அறியாள். இது ஏதோ ஜ்வரவேகம் என்று நினைத்துத் தன் கணவனிடம் தெரிவித்தாள். பானுகோபரும் ஒரு வைத்தியரை அழைத்து வந்தார். வைத்தியரும் நாடி பார்க்கவேண்டி ராதையின் கையைப் பிடிக்கவந்தார். அதைக் கண்ட ராதை அழத் தொடங்கினாள்.

### श्रीदेव्युवाच

न कोपि शक्नुयाद्वेत्तुं मम रोगं सुदुःसहम् ।
येन मे दह्यते चित्तं शरीरञ्च सुदुर्बलम् ॥९॥

वातं श्लेष्मं कफं पित्तं जानात्येष यथाविधि ।
रोगस्य वैद्यराजस्तु नान्यज्जानाति कारणम् ॥१०॥

न शक्नुयाच्छमयितुं मम रोगमिमं भिषक् ।
औषधेन न मन्त्रेण न यन्त्रेण च रक्षया ॥११॥

वृथा मे नैव गृह्णातु पाणिपद्मं कुलस्त्रियः ।
अन्यसंस्पर्शनेनायं नूनं रोगः प्रवर्धते ॥१२॥

आहूय वैष्णवान् भक्तान् कुरुध्वं नामकीर्तनम् ।
तस्य श्रवणमात्रेण रोगश्चायं प्रशाम्यतु ॥१३॥

### ஸ்ரீதேவி

*9-13.* எனது ரோகத்தை அறிய யாராலும் முடியாது. இந்த வைத்தியர் கபம், வாதம், பித்தம், ச்லேஷ்மம் இவைகளைத்தவிர வேறு ஏதும் அறியார். மணி, மந்த்ரம், ஔஷதம் முதலியவை களால் என் மனநோய் நீக்கத்தக்கதல்ல. குலமகளான என் கையை வீணாக இவர் பிடிக்கவேண்டாம். பிறர் தொடுவதால் என் வியாதி வளரும். வைஷ்ணவர்களைக் கூப்பிட்டு

ஹரிகீர்த்தனம் செய்யுங்கள். அதைக் கேட்டால் என் வியாதி அடங்கும்.

श्रीसद्गुरुरुवाच

एवमुक्त्वा प्ररुदतीं प्रलपन्तीं मुहुर्मुहुः ।
सान्त्वयामास जननी बहुधा प्रेमपूर्वकम् ॥१४॥

भिषजं प्रेषयामास वृषभानुर्महामतिः ।
सुतां संस्मृत्य संस्मृत्य स च चिन्ताकुलोऽभवत् ॥१५॥

एतस्मिन्नन्तरे देव्याः प्रणयं नन्दनन्दने ।
व्यजिज्ञपत् कलावत्यै ललिता चारुभाषिणी ॥१६॥

तच्छ्रुत्वा भानुगोपस्य गृहिणी सा कलावती ।
चिन्तयामास बहुधा वात्सल्यात् स्वसुतां प्रति ॥१७॥

प्रतीक्षमाणा समयं भर्तारमुपगत्य सा ।
अवोचन्मधुरं वाक्यं सरसं वाक्यकोविदा ॥१८॥

ஸ்ரீஸத்குரு

14-18. இவ்வாறு சொல்லி ராதை அழுதாள். அன்னை அவளை அன்புடன் தேற்றினாள். பானுகோபரும் வைத்தியரை அனுப்பி விட்டார். பெண்ணைப் பற்றிப் பலவிதமாக நினைத்து கவலைப்படலானார். இதுதான் சந்தர்ப்பமென்று எண்ணி அழகாய்ப் பேசும் லலிதா கண்ணனிடம் ராதை காதல் கொண்டிருப்பதை கலாவதியிடம் சொன்னாள். கலாவதியும் இதைக்கேட்டுப் பலவிதமாக ஆலோசித்தாள். ஸமயம்பார்த்துக் கணவனிடம் மதுரமாகச் சொன்னாள்.

कलावत्युवाच

अस्माकं प्रेमयुक्तानां राधिका बालिकैव सा ।

किन्तु कालेन युक्तेन समुपस्थितयौवना ॥१९॥

उचितं कालमासाद्य कन्यायै वरमुत्तमम् ।
न पश्यसि महाभाग धेनुरक्षणतत्परः ॥२०॥

सेयमस्मत्सुता राधा मन्मथेन निपीड्यते ।
अकस्मान्नन्दसूनुं तं विलोक्य यमुनातटे ॥२१॥

सदृशः कुलसम्बन्धो नन्दगोपेन ते प्रभो ।
क्षिप्रमेव विवाहाय प्रयत्नं कुरु सादरम् ॥२२॥

**கலாவதி**

*19-22.* நாத! ராதை நமக்கு எவ்வளவு நாளானாலும் குழந்தைதான். ஆனாலும் அவளுக்கு விவாஹத்துக்குரிய வயது வரவில்லையா? தகுந்த வரனைப் பார்த்துக் கொடுக்க வேண்டாமா? நீங்கள் எப்பொழுதும் மாடு மேய்த்துக் கொண்டே இருக்கிறீர்கள். நம் ராதை யமுனைக்கரையில் நந்தகோபரின் பிள்ளையைக் கண்டு ஆசைகொண்டிருக்கிறாள். இது நம் குலத்திற்கேற்ற ஸம்பந்தமாகும். எனவே சீக்கிரமே விவாஹத்திற்கு முயற்சி செய்யுங்கள்.

**भानुगोप उवाच**

सत्यमेव हि तत्सर्वं यन्मां वदसि सुन्दरि ।
कुटुम्बसंप्रदायं मे सावधानं शृणु प्रिये ॥२३॥

स एव वृणुयात्कन्यां पुत्राय तु पिता स्वयम् ।
करोति न तथा नन्दो जानन्नपि सुतां मम ॥२४॥

कन्याश्च बह्व्यः सन्त्यस्मिन् गोकुले कृष्णतत्पराः ।
तस्मै प्रदातुमिच्छन्ति स्वां स्वां कन्यां च धेनुपाः ॥२५॥

कुटुम्बगौरवं रक्षन्नन्दगोपमहं प्रिये ।
न ययाचे सान्त्वय त्वं कुमारीं मृदुभाषणैः ॥२६॥

**வ்ருஷபானுகோபர்**

23-26. ப்ரியமானவளே! நீ சொல்லுவது உண்மையே. நமது குடும்பப் பழக்கம் உனக்குத் தெரியாதா? பிள்ளையைப் பெற்றவன்தான் பெண்ணைப் பெற்றவனிடம் தானே வந்து கன்னிகையை வரிக்க வேண்டும். எனக்கு பெண் இருக்கிறாள் என்று தெரிந்தும் நந்தகோபன் அப்படிச் செய்யவில்லை. கோகுலத்தில் கண்ணனைக் கண்டு ஆசைப்படும் பல கன்னிகைகள் இருக்கின்றனர். தங்கள் தங்கள் பெண்களைக் கண்ணனுக்கே கொடுக்கப் பல ஆயர்களும் போட்டி போடுகின்றனர். நமது குடும்ப கௌரவத்தை மறந்து நானாகவே நந்தகோபனைக் கேட்கமாட்டேன். நீ உன் மகளை ஸமாதானம் செய்துகொள்.

**श्रीसद्गुरुरुवाच**

भानुगोपेन सुदृढमेवमुक्ता कलावती ।
चिन्तामाप परां देवी स्मृत्वा दुहितृवत्सला ॥२७॥

पित्रोः सल्लापमखिलं श्रुत्वा देवी च राधिका ।
संप्राप नितरां शोकं विरहाकुलमानसा ॥२८॥

अनिशं प्ररुदन्ती सा निःश्वसन्ती मुहुर्मुहुः ।
न क्वचित्सुखमाप्नोति भवने नन्दनेपि वा ॥२९॥

शेते क्वचिच्छिलायाञ्च पुनरुत्थाय धावति ।
प्रलपत्यनिशं राधा सान्त्वितापि सखीजनैः ॥३०॥

न शशाक समाधातुं मनो मदनकर्शितम् ।
प्रियसङ्गममिच्छन्ती गोविन्दविरहाकुला ॥३१॥

ஶ்ரீஸத்குரு

27-31. பானுகோபர் இவ்வாறு உறுதியாகக் கூறிவிட்டார். கலாவதியோ பெண்ணை நினைத்துக் கவலைப்பட்டாள். பெற்றோர்களின் ஸம்பாஷணையைக் கேட்ட ராதை மிகவும் துக்கமடைந்தாள். இங்குமங்கும் நிலைகொள்ளாமல் துடித்தாள். புலம்பினாள். தோழிகள் அவளை ஸமாதானம் செய்தார்கள். ஆனால் ராதையோ ஸமாதானமடையவில்லை.

इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये देवीकाण्डे

अष्टमोऽध्यायः ॥८॥

இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிமஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில் தேவீகாண்டத்தில் எட்டாவது அத்யாயம் முற்றும்.

# अथ नवमोऽध्यायः

## ஒன்பதாவது அத்யாயம்

श्रीसद्गुरुरुवाच

पौर्णमासीति विख्याता व्रजे काचित्तपस्विनी ।
ऊर्ध्वपुण्ड्रलसत्फाला जटिला वल्कलाम्बरा ॥१॥

वृद्धा वैराग्यसंयुक्ता दैवज्ञा वैष्णवी च सा ।
सर्वैर्गोपकुटुम्बैश्च पूजितास्त्येव भिक्षुकी ॥२॥

यमुनातटमानीय साङ्केत्येन व्रजाबलाः ।
समर्पयति कृष्णाय निःस्वार्थप्रेमचेष्टिता ॥३॥

कृष्णेन प्रेषिता सापि पुराणकथनप्रिया ।
वृषभानुगृहं प्राप द्रष्टुं राधां दृढव्रता ॥४॥

पूजयामास विधिवत् पौर्णमासीं कलावती ।
आसने च समासीनामवोचद्विनयान्विता ॥५॥

30.

### ஸ்ரீஸத்குரு

1-5. கோகுலத்தில் ஒரு வைஷ்ணவப் பாட்டி இருந்தாள். 'பௌர்ணமாஸி' என்று அவளுக்குப் பெயர். ஜடையும் மரவுரியும் அணிந்திருப்பாள். நெற்றியில் கோபீசந்தனம் அணிவாள். ஞானவைராக்கியம் உடையவள். பிக்ஷை வாங்கிச் சாப்பிடுவாள். ஜோதிடம் சொல்லுவாள். ஆயர்கள்யாவரும் அவளை கௌரவமாக நடத்துவார்கள். அவள் சுயநலமற்றவள். புராணக்கதைகள் சொல்வாள். கன்னிகை களைக் கண்ணனுடன் சேர்ந்து விளையாட விடுவதில் அவளுக்கு விருப்பம் அதிகம். ராதையை அழைத்து வரும்படி கண்ணன் அவளை அனுப்பினான். அவளும் வ்ருஷபானு கோபரின் வீட்டை அடைந்தாள். அவளைக் கண்ட கலாவதி விதிப்படி பூஜித்து வினயத்துடன் தனது குறையை சொல்லிக்கொண்டாள்.

### कलावत्युवाच

सेयं मम सुता देवि राधिका साधुचेष्टिता ।
क्वचिदुन्मादसंयुक्ता प्रलपत्यनिशं निशि ॥६॥

वदन्ति भूतचेष्टेति केचिन्मन्त्रविशारदाः ।
वेत्सि त्वं सकलं देवि वद मे तत्र कारणम् ॥७॥

### கலாவதி

6-7. அம்மா! எனது பெண் ராதை மிகவும் நல்ல குணமுடையவள். ஆனால் பித்துப் பிடித்தவள்போல் இரவு பகலாகப் புலம்பி அழுகிறாள். சில மந்திரவாதிகள் பூத சேஷ்டை என்று சொல்கிறார்கள். இதன் உண்மையை நீங்கள் அறிவீர்கள். என்ன காரணமென்று சொல்லுங்கள்.

### श्रीसद्गुरुरुवाच

एवमुक्ता पौर्णमासी राधामानीय सादरम् ।
गतिञ्च दिव्यरेखानां तत्कराब्जे ददर्श सा ॥८॥

ततः प्रोवाच मधुरं चिन्ताक्रान्ता कलावतीम् ।

राधिकां लालयन्ती सा मातृवद्योगिनी तदा ॥९॥

ஸ்ரீஸத்குரு

*8-9. இவ்வாறு கலாவதி கேட்டதும் பௌர்ணமாஸி ராதையை அழைத்துக் கைரேகையைப் பார்த்தாள். தாயைப்போல் பரிவுடன் ராதையை லாலனை செய்து கொண்டே மதுரமாகச் சொன்னாள்.*

**पौर्णमास्युवाच**

दिव्यलक्षणसंयुक्ता सेयं तव सुता सखी ।
अनुरूपं महात्मानं भर्तारं प्राप्तुमर्हति ॥१०॥

राधा कामयते नूनं कमप्याभीरनन्दनम् ।
अस्या मनोरथः शीघ्रं भविष्यति फलप्रदः ॥११॥

गोपूजां तुलसीपूजां सूर्यपूजाञ्च ते सुता ।
आराधनञ्च विप्राणां व्रतानि च करोत्वियम् ॥१२॥

பௌர்ணமாஸி

*10-12. கலாவதி! உன்னுடைய பெண் உயர்ந்த லக்ஷணம் உடையவளாக இருக்கிறாள். தகுந்த கணவனை அடைவாள். ராதை கோபாலனை விரும்புகிறாள். இவள் ஆசை விரைவில் பயனளிக்கும். கோபூஜை, ஸூர்யபூஜை, ப்ராம்மணபூஜை முதலியவைகளை இவள் செய்யட்டும்.*

**श्रीसद्गुरुरुवाच**

एवं वदन्त्यां योगिन्यां प्रहृष्टा राधिका तदा ।
भक्तिपूर्वं प्रणम्यैनं पप्रच्छ नियमान् बहून् ॥१३॥

उपदेशं कुरु क्षिप्रं गुरुस्त्वं मे तपस्विनि ।
व्रतानि फलदान्यद्य कथं कुर्यादयं जनः ॥१४॥

मयैवागच्छ यमुनां सखीभिश्च समन्विता ।
तत्र वक्ष्यामि नियमान् देवमभ्यर्च्य भास्करम् ॥१५॥

इत्युक्ता पौर्णमास्यापि कलावत्यानुमोदिता ।
संप्राप यमुनातीरं कौतूहलसमन्विता ॥१६॥

ஸ்ரீஸத்குரு

13-16. இவ்வாறு சொன்ன பாட்டியை ராதை வணங்கி, 'பாட்டி! நீங்கள்தான் எனக்கு குரு. அந்த விரதங்களை நான் எப்படிச் செய்யவேண்டுமென்று உபதேசம் செய்யுங்கள்' என்று கேட்டாள். 'உனது தோழிகளுடன் யமுனைக்கு வா. அங்கு ஸூர்யபூஜை செய்து உனக்கு உபதேசம் செய்வேன்' என்றாள் பாட்டி. ராதையும் கலாவதியிடம் அனுமதி பெற்றுப் பாட்டியுடன் யமுனைக்கரை சென்றாள்.

हंसकारण्डवाकीर्णां मणिसोपानसंयुताम् ।
प्रवालरत्नसङ्कीर्णां कल्लोलकुलनादिताम् ॥१७॥

कुमुदोत्पलकल्हारपद्मादिपरिभूषिताम् ।
मीनकच्छपसंसेव्यां सुचारुपुलिनां तथा ॥१८॥

प्रणम्य विधिवद्राधा देवीं भास्करनन्दिनीम् ।
स्नात्वा सखीजनैः साकं तज्जले भक्तिपूर्वकम् ॥१९॥

अलङ्कृता सखीभिश्च वासोभूषणकुङ्कुमैः ।
उपतस्थे पौर्णमासीं नियमेन समन्विता ॥२०॥

17-20. மணிமயமான படிக்கட்டுகள் உடையதும், பவழமும் ரத்னமும் கொழிக்கின்றதும், அலையோசையுடன் கூடியதும், தாமரைக்காட்டின் நடுவே அன்னப்பறவைகள் நீந்துவதும், ஆமையும் மீனும் நிறைந்ததும், அழகிய மணல் திட்டுடன் கூடியதுமான யமுனையைக் கண்டு ராதை வணங்கித்

தோழிகளுடன் நீராடினாள். பிறகு ஆடையலங்காரம் செய்து கொண்டு பௌர்ணமாஸியிடம் வந்து நின்றாள்.

सा च राधां समालिङ्ग्य लालयन्ती पुनः पुनः ।
कुसुमानि समाहर्तुमादिदेश वनान्तरे ॥२१॥

वृषभानुकुमारी सा ललितादिसखीजनैः ।
आहर्तुकामा पुष्पाणि चचार यमुनावने ॥२२॥

मन्दारचम्पकाशोकपुन्नागवकुलासनैः ।
आवृते यमुनातीरे चचार वृषभानुजा ॥२३॥

21-23. அந்தப் பாட்டியும் ராதையைக் கட்டிக்கொண்டு கொஞ்சினாள். மலர்பறித்து வரும்படி ப்ருந்தாவனம் அனுப்பி னாள். ராதையும் தனது தோழிகளுடன் ப்ருந்தாவனத்தில் அலைந்து கொண்டிருந்தாள். மந்தாரம், சம்பகம், அசோகம், புன்னை, மகிழமரம்முதலியவைகளால் ப்ருந்தாவனம் சூழ்ந்திருந்தது.

आजगाम तदा कृष्णः साक्षान्मन्मथमन्मथः ।
मधुरं वादयन् वेणुं पदशिञ्जितनूपुरः ॥२४॥

दिव्यपीताम्बरधरः सर्वाभरणभूषितः ।
वनमाली घनश्यामो व्रजराजसुतो हरिः ॥२५॥

कज्जलालिप्तनयनः कस्तूरीतिलकाञ्चितः ।
रसिको रसमूर्तिश्च कपटस्मितसुन्दरः ॥२६॥

तं विलोक्य घनश्यामं कन्यका ललितादयः ।
ययुरन्यत्र सानन्दं तयोः सङ्गमकाङ्क्षया ॥२७॥

हरी राधामुपागत्य कटिन्यस्तकराम्बुजः ।
निक्षिप्य जठरप्रान्ते वेणुं प्राह स्मिताननः ॥२८॥

24-28. அப்பொழுது கண்ணன் கால்களில் சலங்கை கொஞ்ச, பீதாம்பரதாரியாய், எல்லா ஆபரணங்களும் அணிந்து, கண்களில் மைதீட்டிக் கொண்டவனாய், கஸ்தூரி திலகம் அணிந்தவனாய், வேணுகானம் செய்துகொண்டே அங்கு தோன்றினான். அந்த ரஸிகன் ராதையைக் கண்டதும் கபடமாக மந்தஹாஸம் செய்தான். கார்மேகவண்ணனைக் கண்ட கன்னிகைகள் கண்ஜாடை செய்துகொண்டு ஓடிவிட்டனர். கண்ணன் ராதையின் எதிரில் வந்து குழலை இடுப்பில் செருகிக் கொண்டு இரு கைகளையும் இடுப்பில் ஊன்றியவாறு நின்று கொண்டு, முறுவல் செய்து ராதையைப் பார்த்துக் கேட்டான்.

## श्रीकृष्ण उवाच

का त्वं कञ्जपलाशाक्षि कमनीयमुखाम्बुजा ।
निर्भयं यमुनातीरे किमर्थं चरसि प्रिये ॥२९॥

**கண்ணன்**

29. பெண்ணே! சிறந்த அழகியான நீ யார்? அச்சமில்லாமல் யமுனைக்கரையில் ஏன் அலைகிறாய்?

## श्रीराधोवाच

सुताऽहं गोपमुख्यस्य वृषभानोर्महात्मनः ।
कुसुमानि समाहर्तुं सञ्चरामि वनान्तरे ॥३०॥

**ராதை**

30. நான் வ்ருஷபானுகோபரின் பெண். மலர் கொய்வதற்காக ப்ருந்தாவனத்தில் உலாவுகிறேன்.

## श्रीकृष्ण उवाच

पुष्पाणि सन्ति वृक्षाग्रे फलानि च वरानने ।
त्वामुद्वहामि सरसं तानि त्वं क्षिप्रमाहर ॥३१॥

**கண்ணன்**

31. மலரும் கனியும் மரத்தின் உச்சியில் இருக்கிறது. ஸுமுகி! நான் உன்னைத் தூக்கிக் கொள்கிறேன். பறித்துக்கொள்.

**श्रीराधोवाच**

कन्याहं युवराजेन्द्र साध्वी षोडशवार्षिकी ।
लज्जाविरहितो धीरो वदसि त्वं मया कथम् ॥३२॥

**ராதை**

32. நானோ வயதுவந்த கன்னிகை. வெட்கமில்லாமல் இவ்வாறு சொல்கிறாய். உனக்கு எவ்வளவு தைர்யம்?

**श्रीकृष्ण उवाच**

रसिकोऽहं महाभागे न लज्जां वेद्म्यहं प्रिये ।
त्वामेव कामये नित्यं संस्प्रष्टुं प्रेमपूर्वकम् ॥३३॥

**கண்ணன்**

33. பிரியமானவளே! நானோ ரஸிகன். வெட்கமறியாதவன். உன்னைத் தொட வேண்டுமென்று வெகுநாட்களாக எனக்கு ஆசை.

**श्रीराधोवाच**

तिष्ठ त्वं युवराजेन्द्र बलात्कारेण मा स्पृश ।
भास्करोपासनं कर्तुं नियमस्थास्मि सुन्दर ॥३४॥

**ராதை**

34. ஸுந்தர! என்னை பலாத்காரமாய்த் தொடாதே. நில்! நான் ஸூர்யபூஜை செய்யவேண்டி நியமத்துடன் இருக்கிறேன்.

**श्रीकृष्ण उवाच**

नियमेन कृशा त्वं तु वृक्षाग्रस्तु महोन्नतः ।
मम स्कन्धाधिरूढा त्वं पुष्पाणि हर भामिनि ॥३५॥

**கண்ணன்**

35. நீயோ நியமத்தினால் களைத்திருக்கிறாய். இந்த மரமோ

உயரமாக இருக்கிறது. ஆகையினால்தான் என்மேல் ஏறி பூப்பறித்துக் கொள் என்று சொல்கிறேன்.

### श्रीसद्गुरुरुवाच

इत्युक्त्वा रसिकेन्द्रोऽयं राधालिङ्गनकाङ्क्षया ।
समीपमाजगमाशु दधाव वृषभानुजा ॥३६॥

वासो जग्राह राधाया भगवान् प्रेमचेष्टितः ।
अवाङ्मुखी च सा तस्थौ देवी पीनपयोधरा ॥३७॥

रुरोद लज्जया देवी प्रणयक्रोधसंयुता ।
स्फोटयन्त्यङ्गुलीपङ्क्तिं सन्दश्य स्वाधरं तथा ॥३८॥

आजगाम तदा तत्र पौर्णमासी तपस्विनी ।
अन्तर्दधे सद्य एव भगवान्नन्दनन्दनः ॥३९॥

अवोचन्निखिलं राधा लज्जया हरिचेष्टितम् ।
सगद्गदं निःश्वसन्ती मधुरं वल्गुभाषिणी ॥४०॥

सान्त्वयामास तां राधां योगिनी प्रेमपूर्वकम् ।
गृहं गन्तुमनुज्ञाञ्च ददौ लब्धमनोरथा ॥४१॥

### ஸ்ரீஸத்குரு

36-41. இவ்வாறு சொல்லிக் கண்ணன் ராதையை ஆலிங்கனம் செய்து கொள்ளவேண்டி அணுகினான். ராதையோ ஓடினாள். அவளுடைய மேலாக்கை பிடித்து இழுத்தான் கண்ணன். ராதை வெட்கத்தினால் தலைகுனிந்து நின்றாள். கையை சொடுக்கிக் கொண்டு உதட்டைக் கடித்துக்கொண்டு பொய்க் கோபம் காட்டி அழுதாள். அதற்குள் பௌர்ணமாஸி வந்து விட்டாள். உடனே கண்ணன் மறைந்து விட்டான். ராதை தழுதழுத்த குரலில் பெருமூச்சு விட்டுக்கொண்டே கண்ணனின்

லீலைகளைப் பாட்டியிடம் சொல்லிவிட்டாள். பாட்டிக்குப் பேரானந்தம். ராதையை ஸமாதானம் செய்து வீட்டிற்கு அனுப்பினாள்.

इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये देवीकाण्डे नवमोऽध्यायः॥९॥

இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிமஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில் தேவீகாண்டத்தில் ஒன்பதாவது அத்யாயம் முற்றும்.

## अथ दशमोऽध्यायः

## பத்தாவது அத்யாயம்

### श्रीसद्गुरुरुवाच

तच्च संस्मृत्य संस्मृत्य हरेः शृङ्गारचेष्टितम् ।
तमेव सा कामयते विरहज्वलनातुरा ॥१॥

सुन्दरं वदनं तस्य नन्दसूनोर्महात्मनः ।
मूर्च्छामवाप सा देवी स्मृत्वा स्मृत्वा पुनः पुनः ॥२॥

आश्लिष्य मनसा देवी स्तनाभ्यां चरणौ हरेः ।
प्रेमभक्तिसमाक्रान्ता प्ररुरोद मुहुर्मुहुः ॥३॥

तद्गृहीतं निजं वासः करेणादाय सादरम् ।
प्रेमपूर्वञ्च पश्यन्ती चुचुम्ब च पुनः पुनः ॥४॥

तमेव देशं संप्राप्य यमुनातीरकानने ।
कृष्णस्य पदचिह्नानि दृष्ट्वा शोकमवाप सा ॥५॥

अपश्यन्ती प्रियं कान्तं पश्यन्ती प्रेयसीगणम् ।
प्रललाप भृशं देवी विरहाकुलमानसा ॥६॥

ஸ்ரீஸத்குரு

*1-6.* கண்ணன் செய்த லீலைகளை நினைத்து நினைத்துப்பார்த்து ராதை அவனிடமே காதல் கொண்டாள். கண்ணனின் விரஹத்தினால் துடித்தாள். நந்தகுமாரனின் அழகான முகத்தை நினைத்து நினைத்து அடிக்கடி மூர்ச்சை அடைந்தாள். கண்ணனின் திருவடிகளை மனதினாலேயே மார்புறஅணைத்து ப்ரேமபக்தியினால் அடிக்கடி அழுவாள். அன்று அவன் பிடித்திழுத்த தாவணியை அடிக்கடி கையில் எடுத்து முத்தம் கொடுப்பாள். யமுனைக்கரைக்குச் சென்று கண்ணனின் அடிச்சுவடுகளைக் கண்டு அழுவாள். கண்ணனைக் காணாமல் தவித்துத் தோழிகளைக் கண்டு புலம்புவாள்.

श्रीदेव्युवाच

निरङ्कुशमिदं प्रेम दावानलसमं सखि ।
चित्तं दहति हा हन्त मार्गं वद सुखाय मे ॥७॥

तदेव वदनं तस्य मन्दस्मितविभूषणम् ।
उन्मादयति मे चित्तं मदिरारसवत्सखि ॥८॥

आकर्ण्य प्राणनाथस्य मञ्जुलप्रेमभाषणम् ।
तदेव संस्मरन्नद्य विमुग्धास्मि प्रिये सखि ॥९॥

नूनं भाग्यवती सा तु मुरली मधुरस्वना ।
नित्यं पिबति या शौरेः स्वच्छन्दमधरामृतम् ॥१०॥

ஸ்ரீதேவி

*7-10.* ஸகியே! எனது காதல் .காட்டுத்தீயைப்போல் கொளுத்துகிறது. ஸுகமாய் இருக்க வழிதெரியவில்லை. முறுவல் செய்யும் முகுந்தனின் முகமே என் எண்ணத்தில் புகுந்து கள்வெறி கொள்ளச் செய்கிறது. தோழி! ப்ராண நாதனின் அந்த அன்பு மொழிகளை நினைத்து மயங்குகிறேன்.

உண்மையில் இனிமையாய் கூவும் குழல்தான் பாக்கியம் செய்தது. ஏனெனில் எப்பொழுதும் தடையின்றி கண்ணனின் அதரஇதழ்களில் ஊறும் ரஸத்தை அனுபவிக்கிறது.

कामयेऽहं नूपुरत्वं तस्यैव पदयोर्हरेः ।
न कामये स्वर्गमपि कुलाचारं तु किं पुनः ॥११॥

निशितेन कटाक्षेण नन्दसूनोर्महामतेः ।
विद्धं मे हृदयं शीर्णं न शान्तिमधिगच्छति ॥१२॥

जानासि मम भावं त्वं हृदयेन प्रिये सखि ।
कथं लभ्यं मया नित्यं हरिदास्यं सुदुर्लभम् ॥१३॥

धिगिदं योषितां जन्म धिगिदञ्च कुलव्रतम् ।
यस्मिन् प्रेमविहारेपि स्वातन्त्र्यं नैव विद्यते ॥१४॥

धन्या वत्सयुता गावो धन्या गोपकुमारकाः ।
ये सञ्चरन्ति सततं निर्भयं हरिणा वने ॥१५॥

गुरुभिः कुलधर्मेण वञ्चिता योषितो वयम् ।
अप्राप्य कृष्णपादाब्जं केवलं विरहातुराः ॥१६॥

11-16. தோழி! நான் குலவழக்கத்தையோ ஸ்வர்க்கத்தையோ விரும்பவில்லை. கண்ணனின் திருவடிகளில் பொற்சிலம்பாக இருக்க விரும்புகிறேன். நந்தலாலாவின் கூர்மையான கடைக்கண் பார்வை என் இதயத்தைப் பிளந்துவிட்டது. சாந்தியில்லை ப்ரியஸகி! என் மனோபாவத்தை நீயே அறிவாய். மிகவும் அரிதான க்ருஷ்ண கைங்கர்யம் எனக்கு எப்படிக் கிடைக்கும்? இந்தப் பெண்ஜன்மத்திற்கு சீ சீ! குலப் பழக்கத்திற்கும் சீ சீ! ஏனெனில் சுதந்திரமாய் கண்ணனிடங்கூட ப்ரேமையுடன் விளையாட முடியவில்லை அல்லவா? கண்ணனுடன் கட்டுப்பாடின்றி எப்பொழுதும் ப்ருந்தாவனத்

தில் விளையாடும் ஆயர்சிறுவர்களும், மாடுகன்றுகளுமே பாக்யம் செய்தவை. பெண்களாகிய நாமோ குலதர்மமென்கிற பெயரால் பெரியோர்களால் வஞ்சனை .செய்யப்பட்டு கண்ணனின் பாதத்தை அடைய வழிதெரியாமல் தவிக்கிறோம்.

अयं श्रीकृष्णविरहो दुःसहो मे प्रिये सखि ।
उपायं नैव जानामि विना तस्यैव सङ्गमम् ॥१७॥

तत्पादरेणुभिः शीघ्रमभिषिच्यैव मां सखि ।
तस्यैव विरहे दूनां सान्त्वय प्रेमपूर्वकम् ॥१८॥

वैजयन्तीलतां तस्य क्वचित्क्षिप्तां भुवि प्रिये ।
आनीय धारय क्षिप्रं मम कण्ठे मनस्विनि ॥१९॥

आनीय तस्य देवस्य विमलं कनकाम्बरम् ।
तेनैवाच्छादय क्षिप्रं मम वक्षोजमण्डलम् ॥२०॥

भुक्त्वा तेन भुवि क्षिप्तामन्नमानय मे सखि ।
वियोगतापं तेनैव शमयामि सुदुःसहम् ॥२१॥

येनकेनापि तस्यैव सम्बन्धं प्राप्य मे सखि ।
चकार विरहाक्रान्ता सखीभिः परिसान्त्विता ॥२२॥

*17-22. ப்ரியஸகி! இந்தக் க்ருஷ்ணவிரஹம் ஸஹிக்க முடியாதது. அவனுடன் சேருவதைத்தவிர வேறு உபாயம் இல்லை. தோழி! கண்ணனின் பாததூளிகளால் என்னை அபிஷேகம் செய். அவன் அணிந்துகொண்டு களைந்த வைஜயந்தி மாலையை என் கழுத்தில் அணிவிப்பாயாக. அவனுடைய பீதாம்பரத்தைக் கொண்டுவந்து எனக்குப் போர்த்திவிடு, அவன் சாப்பிட்ட மிச்சத்தை எனக்குக் கொண்டு வந்து கொடு. இதனால் என் விரஹதாபத்தைப் போக்கிக் கொள்ளுவேன். தோழி! எந்தவிதத்திலாவது அவன் சம்பந்தத்தைப் பெற்று அவனுடன் சேரும் ஆசையினால் ஜீவித்திருப்பேன்.*

तदा काचित्सखी शीघ्रं गत्वा श्रीनन्दनन्दनम् ।
समानिनाय सरसं ललितां वनमालिकाम् ॥२४॥

वनमालां विलोक्यैषा सुगन्धकुसुमोज्ज्वलाम् ।
प्रियचन्दनसन्दिग्धतत्सुगन्धसमन्विताम् ॥२५॥

तेनैव दत्तां ललितां सर्वतापविनाशिनीम् ।
कामितां ब्रह्मरुद्राद्यैर्भक्तिपूर्वं दिने दिने ॥२६॥

करेणादाय सा देवी वहन्ती शिरसा पुनः ।
अभिषिच्य च बाष्पेण पश्यन्ती च मुहुर्मुहुः ॥२७॥

आघ्राय तत्सुगन्धञ्च दधार प्रेमपूर्वकम् ।
भर्तारमिव संप्राप्ता राधिका मुदिताऽभवत् ॥२८॥

अतो देवी प्रहृष्टा सा यमुनातीरकाननात् ।
भवनं प्राप सानन्दं सखीजनसमन्विता ॥२९॥

देव्याः कृष्णप्रसादेन परमानन्दसंभवम् ।
विलोक्य मुमुहुः सख्यस्तत्सुखैकपरायणाः ॥३०॥

ஶ்ரீஸத்குரு

*23-30.* இவ்வாறு ப்ருந்தாவனத்தில் ராதாதேவி க்ருஷ்ணவிரஹத்தினால் பீடிக்கப்பட்டுப் பலவிதமாய்ப் புலம்பினாள். தோழிகள் அவளை ஸமாதானம் செய்தார்கள். அப்பொழுது ஒரு தோழி நந்தகுமாரனிடம் சென்று அழகான வனமாலையை வாங்கி வந்தாள். கண்ணனின் சந்தனத்துடன் கூடியதும், நறுமணமுள்ளதும், எல்லா தாபங்களையும் போக்கக்கூடியதும், அழகிய புஷ்பங்களால் கட்டப்பட்டதும், பக்தியுடன் தினந்தோறும் ப்ரும்மாமுதலிய தேவர்களால் விரும்பப்படுகின்றதுமான க்ருஷ்ணப்ரஸாதமான வனமாலை

யைக் கையில் வாங்கிக் கண்களில் ஒத்திக்கொண்டு கண்ணீரால் நனைத்துச் சூட்டிக்கொண்டாள். அந்த மாலையின் ஸுகந்தத்தை முகர்ந்த ராதை கண்ணனையே அடைந்த இன்பத்தைப் பெற்றாள். பிறகு ராதை ப்ருந்தாவனத்திலிருந்து தோழிகளுடன் ஆனந்தமாக வீடு திரும்பினாள். ராதையின் ஸுகத்தையே தன் ஸுகமாகக் கொள்ளும் தோழிகள் க்ருஷ்ணப்ரஸாதத்தினால் ராதை பரமானந்தமடைந்ததைக் கண்டு மகிழ்ந்தார்கள்.

इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये देवीकाण्डे

दशमोऽध्यायः॥१०॥

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிமஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில் தேவீகாண்டத்தில் பத்தாவது அத்யாயம் முற்றும்.**

# अथैकादशोऽध्यायः

## பதினொன்றாவது அத்யாயம்.

### श्रीसद्गुरुरुवाच

व्रतानि कर्तुमारेभे देवी सा वृषभानुजा ।
भर्तारं प्राप्तुमिच्छन्ती शीघ्रमेव दृढव्रता ॥१॥

प्रातरुत्थाय विधिवत् स्नात्वा सूर्यसुताजले ।
तुलसीं पूजयामास सखीभिः सह राधिका ॥२॥

### ஸ்ரீஸத்குரு

*1-2. சீக்கிரமாகவே கண்ணனைப் பதியாக அடைய விரும்பி ராதை விரதங்களைச் செய்ய ஆரம்பித்தாள். காலையில் எழுந்திருந்து யமுனையில் நீராடி தோழிகளுடன் கூடி துளஸி பூஜை செய்வாள்.*

### श्रीदेव्युवाच

नमामि तुलसीं देवीं श्रीकृष्णचरणप्रियाम् ।
दिव्यसौरभसंयुक्तां प्रणमाम्यमृतोद्भवाम् ॥३॥

नमस्ते लोकजननि विष्णुवक्षःस्थलालये ।
नमामि विष्णुपत्नीं त्वां श्रीसखीं त्वां नमाम्यहम् ॥४॥

भोगमोक्षप्रदे देवि हरिभक्तिप्रदायिनि ।
सर्वपापप्रशमने शरणं भव वैष्णवि ॥५॥

शिरसा धारयन्ति त्वां वैष्णवा लोकपूजिताः ।
पूजयन्ति त्वया विष्णुं पुरुषार्थफलप्रदम् ॥६॥

नन्दगोपसुतं देवि कुरु मे प्राणवल्लभम् ।
नमामि विष्णुपत्नीं त्वां व्रतं मे सफलं कुरु ॥७॥

ஸ்ரீதேவி

*3-7.* ஸ்ரீக்ருஷ்ணசரணத்தில் ப்ரியமுள்ளவளும், அம்ருதத்தில் உண்டானவளும், திவ்யமான ஸுகந்தம் உடையவளுமான துளஸிதேவியை வணங்குகிறேன். விஷ்ணுவின் மார்பில் இருப்பவளே! லோகமாதா! விஷ்ணுபத்னி! லக்ஷ்மியின் தோழி! உனக்கு வந்தனம். போகமும் மோக்ஷமும் தருபவளே! ஹரி பக்தியைத் தருபவளே! பாவமெல்லாம் போக்குபவளே! வைஷ்ணவீ! நீயே சரணம். உலகம் போற்றும் வைஷ்ணவர்கள் உன்னைக்கொண்டே முக்தி தரும் முகுந்தனைப் பூஜிக்கின்றனர். அந்த ஸாதுக்கள் உன்னை சிரஸில் தரிக்கின்றனர். தேவீ! விஷ்ணுபத்னீ! உன்னை வணங்குகிறேன். நந்தகுமாரனையே எனக்கு ப்ராணநாதனாகச் செய். என் விரதத்தை ஸபலமாய் ஆக்கு.

श्रीसद्गुरुरुवाच

इमं स्तवं पठन्ती सा भक्तिपूर्वं दिने दिने ।
पूजयामास तुलसीं पुष्पाक्षतजलादिभिः ॥८॥

धेनुञ्च पूजयामास सखीजनसमन्विता ।

कुण्डोध्नीञ्च महासाध्वीं क्षीरदां वत्ससंयुताम् ॥९॥

अभ्यर्च्य शृङ्गयोर्मध्ये हरिद्राकुङ्कुमाक्षतैः ।
धारयामास कण्ठेपि पुष्पमालाञ्च सादरम् ॥१०॥

दत्वापि यवसं देवी भक्त्या साञ्जलिसंपुटम् ।
प्रदक्षिणं प्रकुर्वन्ती प्रणामञ्च चकार सा ॥११॥

ஸ்ரீஸத்குரு

8-11. இந்த ஸ்தோத்திரத்தைப் படித்துக்கொண்டே தினந்தோறும் ராதை புஷ்பம், அக்ஷதை, ஜலம் இவைகளால் பக்தியுடன் துளஸிதேவியைப் பூஜை செய்தாள். மேலும் தோழியுடன்கூடி கன்றுடன் கூடியதும், பால் நிரம்பிய மடியுடையதும், மிகவும் ஸாதுவானதுமான பசுவையும் பூஜை செய்தாள். பசுவின் கொம்புகளின் இடையில் மஞ்சள், குங்குமம், அக்ஷதை இவைகளால் பூஜித்துப் பூமாலையையும் அணிவித்தாள். பசுவிற்குத் தீனியும் வைத்துக் கை குவித்து வலம் வந்து வணங்கித் துதித்தாள்.

श्रीदेव्युवाच

नमामि सुरभिं देवीं कामधेनुं नमाम्यहम् ।
नमामि लोकजननीं श्रियं देवीं नमाम्यहम् ॥१२॥

त्वमेवासि महालक्ष्मीस्त्वमेव गिरिकन्यका ।
त्वमेव सर्वविद्या च प्रसीद परमेश्वरि ॥१३॥

क्षीराम्बुधिसमुद्भूतां साक्षाल्लक्ष्मीसहोदरीम् ।
गोलोकवासिनीं वन्दे सर्वलोकनमस्कृताम् ॥१४॥

यशोदानन्दनं कृष्णं वशीकुरु हरिप्रिये ।
भक्तानां कामदासि त्वं कामधेनुरिति स्मृता ॥१५॥

ஸ்ரீதேவி

12-15. ஸுரபிதேவி! காமதேனு! லோகமாதா! ஸ்ரீதேவி! உனக்கு வந்தனம். நீயே லக்ஷ்மி. நீயே பார்வதி. நீயே ஸரஸ்வதி. பரமேச்வரி! அருள் செய்வாயாக. பாற்கடலில் உண்டான லக்ஷ்மிதேவிக்கு ஸஹோதரியும், எல்லா உலகங்களிலும் வணங்கப்படுபவளும், கோலோகத்தில் வஸிப்பவளுமான உனக்கு வந்தனம். பக்தர்களுக்கு விரும்பியதைத் தருவதால் உன்னைக் காமதேனு என்கின்றனர். ஹரிப்ரியே! யசோதையின் பிள்ளையான கண்ணனை எனக்கு வசமாக்கு.

श्रीसद्गुरुरुवाच

एवमभ्यर्च्य सरसं भक्तियुक्ता शुभव्रता ।
प्रतीक्षमाणा भर्तारं निनाय च दिनानि सा ॥१६॥

वसन्तकाले संप्राप्ते कन्दर्पव्रतमाश्रिता ।
लिलेख भुवि कन्दर्पं ध्यायन्ती कृष्णमेव सा ॥१७॥

लिलेख केकिबर्हं सा मकुटं न लिलेख च ।
लिलेख हस्ते वेणुञ्च पुष्पबाणं न राधिका ॥१८॥

लिलेख धेनुं सानन्दं मकरं न लिलेख सा ।
लिलेख कृष्णमेवेयं कृष्णध्यानपरायणा ॥१९॥

एवं विलिख्य सानन्दमपश्यत्कृष्णमेव सा ।
आश्चर्यचकिता तस्थौ करौ विन्यस्य वक्षसि ॥२०॥

ललिता परिहासेन जगाद मधुरं वचः ।
विलोक्य राधिकां मन्दं मन्दस्मितमुखी सखी ॥२१॥

ஸ்ரீஸத்குரு

16-21. இவ்வாறு பக்தியுடன் கோபூஜை செய்துகொண்டே ராதை கண்ணனை எதிர்பார்த்துக் கொண்டு நாட்களைக்

கழித்தாள். வஸந்தகாலத்தில் மன்மதபூஜை செய்யவேண்டி தரையில் மன்மதனை எழுதினாள். எண்ணத்தில் கண்ணனே இருந்தபடியினால் தலையில் மயிலிறகு எழுதினாள். மகுடம் எழுதவில்லை. கையில் குழல் எழுதினாள். புஷ்பபாணம் எழுத வில்லை. பின்புறம் பசு எழுதினாள். முதலை எழுதவில்லை. இவ்வாறு க்ருஷ்ணத்யானத்திலேயே லயித்துப்போன ராதை க்ருஷ்ணனையே எழுதிவிட்டாள். ஆச்சர்யத்தினால் கைகளை மார்பில் வைத்துக் கொண்டு கண்ணனையே பார்த்தாள். ஆனந்தப்பட்டாள். லலிதாவும் ராதையைப் பார்த்துப் பரிஹாஸம் செய்தாள்.

### ललितोवाच

कोयं विलिखितो देवि सुन्दरो नवमन्मथः ।
इक्षुदण्डं न हस्तेन दधाति मुरलीमयम् ॥२२॥

லலிதா

22. தேவி! உன்னால் எழுதப்பட்ட அழகான இந்த புது மன்மதன் யார்? கையில் கரும்பு வில்லைக் காணவில்லை. குழலை ஏந்தியிருக்கிறான்.

### श्रीराधोवाच

यदस्ति हृदये ध्यानं तदेव लिखितं मया ।
न वेत्ति हृदयं नूनमन्यत्कृष्णाज्जगत्त्रये ॥२३॥

स एव विष्णुर्ब्रह्मा च स एव भगवान् हरः ।
स एव सुरराजेन्द्रः सर्वे देवाः स एव हि ॥२४॥

पतिरेव परं दैवं साध्वीनां ललिते ननु ।
तत्तद्देवस्वरूपेण पतिरेवास्ति पूजितः ॥२५॥

सुप्रीतास्मि प्रहृष्टास्मि ममैवं दृढनिष्ठया ।

कृष्णायैवार्पितं चित्तमेकं हि हृदयं मम ॥२६॥

प्रीणातु भगवान् कृष्णो ममैवं भक्तिनिष्ठया ।
किं वृथा नियमैरन्यैर्देवतान्तरपूजनैः ॥२७॥

भक्तानामेकनिष्ठानां देवतान्तरपूजनम् ।
नूनं सुदुष्करं विद्धि प्रमाणमहमेव हि ॥२८॥

ஸ்ரீராதை

23-28. உள்ளத்தில் என்ன இருக்கிறதோ அதையே எழுதிவிட்டேன். கண்ணனைத் தவிர மூவுலகிலும் என் உள்ளம் வேறு ஏதும் அறியவில்லை. ப்ரும்மா, விஷ்ணு, சிவன், இந்திரன் முதலிய எல்லா தேவர்களும் கண்ணனே. பதிவ்ரதைகளுக்குப் பதியே பரதெய்வம். அந்தந்த தெய்வமாக பதியையே பூஜிக்கவேண்டும். எனது திடநிஷ்டையைக் கண்டு நானே ப்ரீதியடைகிறேன். என்னுடைய ஹ்ருதயம் கண்ணனுக்கே அர்ப்பணமாகி விட்டது. எனது இத்தகைய பக்திநிஷ்டையால் கண்ணன் ப்ரீதி அடையட்டும். அன்யதெய்வங்களைப் பூஜிப்பதாலும், அன்னிய நியமங்களை அனுஷ்டிப்பதாலும் என்ன பயன்? ஏகாந்தபக்தி உடையவர்களுக்கு வேறு தெய்வத்தை வழிபட முடியாது. இதற்கு நானே ப்ரமாணம்.

श्रीसद्गुरुरुवाच

इत्युक्त्वा सुप्रसन्ना सा राधिका वार्षभानवी ।
ध्यायन्ती कृष्णचरणौ तस्थौ रोमाञ्चरञ्जिता ॥२९॥

एतस्मिन्नन्तरे साक्षाद्दुर्वासा मुनिपुङ्गवः ।
आजगाम महायोगी शिष्याणामयुतेन च ॥३०॥

आसाद्य वृषभानुश्च मुनिं परमकोपनम् ।
अभ्यर्च्य स्वागतं चोक्त्वा तस्थौ भीतः कृताञ्जलिः॥३१॥

भोजयामास तं देवी राधिका निजमायया ।
शिष्यैः समन्वितं सद्यो विविधैरन्नपानकैः ॥३२॥

सुप्रसन्नो मुनीन्द्रश्च राधिकायै वरं ददौ ।
त्वत्करस्पर्शमात्रेणेत्यन्नमारोग्यदं भवेत् ॥३३॥

ततो दुर्वाससि गते वृषभानुर्गतज्वरः ।
परिरेभे सुतां गोपः प्रेमवात्सल्यसंयुतः ॥३४॥

ஸ்ரீஸத்குரு

*29-34. இவ்வாறு சொல்லி ராதை தெளிந்த மனதுடன் மேனிசிலிர்த்துக் க்ருஷ்ணசரணத்தையே த்யானம் செய்து கொண்டிருந்தாள். இதற்கிடையில் மஹாயோகியான துர்வாஸ முனிவர் பதினாயிரம் சிஷ்யர்களுடன் வந்து சேர்ந்தார். வ்ருஷபானுகோபரும் மிகவும் கோபமுடைய அந்த முனிவரைக் கண்டு பயந்து எதிர்கொண்டு நல்வரவு சொல்லி பூஜித்து கைகுவித்து நின்றார். ராதை தனது மாயையால் பலவிதமான அன்னமும், பானகமும் செய்வித்து சிஷ்யர்களுடன்கூடிய முனிவரை சாப்பிடச் செய்தாள். ப்ரஸன்னமான முனிவர், 'நீ தொட்டமாத்திரத்தில் அன்னம் ஆரோக்யத்தைத் தரும்' என்று ராதைக்கு வரன் தந்தார். துர்வாஸர் சென்ற பிறகு வ்ருஷபானு கோபர் பயம் நீங்கி ப்ரேமையுடனும் வாத்ஸல்யத்துடனும் ராதையைக் கொண்டாடினார்.*

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये देवीकाण्डे एकादशोऽध्यायः॥११॥*

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிமஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தின் தேவீகாண்டத்தில் பதினோராவது அத்யாயம் முற்றும்.**

# अथ द्वादशोऽध्यायः

## பன்னிரெண்டாவது அத்யாயம்

### श्रीसद्गुरुरुवाच

भगवानपि गोविन्दो राधाविरहकर्शितः ।
क्षोभं लेभे प्रतिदिनं कृष्णपक्षशशाङ्कवत् ॥१॥

नालङ्करोति चात्मानं न चारयति गोकुलम् ।
न क्रीडति यथापूर्वं सानन्दं गोपबालकैः ॥२॥

परिहासं न कुरुते वेणुं वादयते न च ।
सदा ध्याननिमग्नोसौ राधा राधेति जल्पति ॥३॥

नान्नमश्नाति गोविन्दो न क्षीरं पिबति प्रभुः ।
न निद्रां लभते कृष्णो न स्नाति यमुनाजले ॥४॥

निःश्वसन्निःश्वसन् दीर्घमाकाशं पश्यति प्रभुः ।
उन्मत्तवद्बभूवासौ राधिकाविरहेण च ॥५॥

विच्छिन्ना वनमाला च कण्ठान्निपतिता भुवि ।
मुरली गलिता हस्तात् कृष्णमेव प्रतीक्षते ॥६॥

पुत्रं प्राणप्रियं देवी यशोदा पुत्रवत्सला ।
विलोक्य प्राप शङ्काञ्च चिन्तां नन्दकुटुम्बिनी ॥७॥

उवाच मधुरं वाक्यं काचिद्गोपकुटुम्बिनी ।
यशोदां प्रलपन्तीं तां पुत्रशोकेन पीडिताम् ॥८॥

ஸ்ரீஸத்குரு

1-8. ராதையின் விரஹத்தினால் கண்ணன் தேய்பிறைச் சந்திரனைப்போல் நாளுக்கு நாள் இளைத்துப்போனான். தன்னை அலங்காரம் செய்து கொள்ளுவதில்லை. மாடு மேய்க்கப் போவதில்லை. முன்புபோல் சிறுவர்களுடன்கூடி விளையாடுவதில்லை.சிறுமிகளைப் பரிஹாஸம் செய்வதில்லை. குழலூதுவதில்லை. எப்போதும் சிந்தனை யிலேயே ஆழ்ந்திருந்தான். ராதே! ராதே!'என்று சொல்லுவான். சாப்பிடுவதில்லை. பால் குடிப்பதும் இல்லை. தூங்குவதும் இல்லை. யமுனையில் நீராடுவதுமில்லை. ஆகாசத்தையே பார்த்துப் பெருமூச்சு விடுவான். ராதையின் விரஹத்தினால் பித்தனைப்போல் காணப்பட்டான். வைஜயந்திமாலை கழுத்திலிருந்து நழுவியது. தன் அருமை மகனை இந்த நிலையில் கண்ட யசோதை துக்கமடைந்தாள். புலம்பியழும் யசோதையைக் கண்ட ஒரு கோபிகை சொன்னாள்.

गोप्युवाच

किं रोदिषि यशोदे त्वं पुत्रो दीर्घायुरस्तु ते ।
महात्मनां प्रसादेन सर्वमङ्गलमेति सः ॥९॥

आनय क्षिप्रमेवात्र राधिकां वृषभानुजाम् ।
तयैव रचितं दिव्यमन्नमश्नातु केशवः ॥१०॥

दुर्वाससः प्रसादेन लेभे सा वरमुत्तमम् ।
दूतीं प्रेषय शीघ्रं त्वं कलावत्यै सुतां प्रति ॥११॥

*9-11. யசோதே! ஏன் அழுகிறாய்? உன் மகன் நீடூழி வாழ்வான். பெரியோர்களின் ஆசியால் ஸர்வமங்களத்தையும் அடைவான். சீக்கிரமாக ராதையை வரவழை. அவள் சமைத்த அன்னத்தைக் கண்ணன் சாப்பிடட்டும். அவள் துர்வாஸரிடம் வரம் பெற்றிருக்கிறாள். பெண்ணை அனுப்பும்படிக் கலாவதிக்கு தூது அனுப்பு.*

### श्रीसद्गुरुरुवाच

इत्युक्ता कृष्णमाता च परमानन्दसंयुता ।
राधिकामानिनायापि तद्गृहात्प्रेमपूर्वकम् ॥१२॥

लज्जयाऽवाङ्मुखी देवी पदाग्रन्यस्तवीक्षणा ।
कुतूहलेन संयुक्ता प्रविवेश गृहं हरेः ॥१३॥

तां विलोक्य यशोदा च परिरभ्य पुनः पुनः ।
पप्रच्छ कुशलं प्रेम्णा कृत्वा मङ्गलमुत्तमम् ॥१४॥

प्रणम्य सा यशोदाञ्च कृत्वाऽञ्जलिपुटं तथा ।
तस्थौ विनीता पार्श्वे च सरसं लालिता तया ॥१५॥

तत्रैव रहसि श्यामं पश्यन्ती च मुहुर्मुहुः ।
परमानन्दसंयुक्ता देवी पर्यचरच्च सा ॥१६॥

### ஸ்ரீஸத்குரு

*12-16. இவ்வாறு சொல்லப்பட்ட யசோதை ராதையை வரவழைத்தாள். ராதையும் வெட்கத்தினால் தலை குனிந்தவாறு மனதில் குதூஹலத்துடன் கண்ணனின் வீட்டில் ப்ரவேசித்தாள். அவளைக் கண்ட யசோதை கட்டியணைத்துக் கொண்டு ஆசிகள் கூறி அன்புடன் க்ஷேமலாபங்களை விஜாரித்தாள். ராதையும் யசோதையைக் கைகுவித்து வணங்கி விட்டு அவள் பக்கத்தில் நின்றாள். நந்தபவனத்திலேயே தங்கி யசோதைக்குப் பணிவிடை செய்யலானாள். அடிக்கடி ரஹஸ்யமாய் கண்ணனையும் பார்ப்பாள்.*

चकार विविधञ्चान्नं शाकपाकसमन्वितम् ।
चातुर्यं दर्शयन्ती सा यशोदायै स्वकर्मणि ॥१७॥

आहूतो भगवान् कृष्णो नन्देन च बलेन च ।

अन्तर्गृहञ्चाजगाम भोजनाय रसप्रदः ॥१८॥

यशोदया चोदिता सा चक्रे च परिवेषणम् ।
लज्जिता प्रेमसंयुक्ता पश्यन्ती प्राणवल्लभम् ॥१९॥

मातरं परिपप्रच्छ परिहासेन माधवः ।
राधिकां स्वकटाक्षेण विलोक्य प्रेमपूर्वकम् ॥२०॥

17-20. பலவிதமான அன்னங்களைச் சமைத்தாள். சமையற்கலையில் தனக்குள்ள சாதுர்யத்தை யசோதைக்குக் காட்டினாள். சாப்பிட வரும்படி யசோதை அழைக்கவே கண்ணன் நந்தனுடனும் பலராமனுடனும் உள்ளே வந்து உட்கார்ந்தான். யசோதா ராதையையே பரிமாறும்படி சொன்னாள். ராதை வெட்கத்துடன் தனது ப்ராணகாந்தனான கண்ணனை கடைக்கண்ணால் பார்த்துக்கொண்டே பரிமாறினாள். கண்ணன் கடைக்கண்ணால் ராதையைப் பார்த்துப் பரிஹாஸமாக அன்னை யசோதையைக் கேட்டான்.

### श्रीकृष्ण उवाच

सुपक्वं मधुरञ्चान्नमिदं मे सुखवर्धनम् ।
शमयत् ज्वरसन्तापमारोग्यं प्रददाति मे ॥२१॥

**கண்ணன்**

21. அம்மா! இன்று சமையல் நல்ல பக்குவமாக இருக்கிறது. ருசியாகவும் இருக்கிறது. எனக்கு ஜுரதாபத்தை நீக்கி ஆரோக்யத்தைத் தரும்.

### यशोदोवाच

इयं कन्या वरारोहा राधिका वृषभानुजा ।
दुर्वाससः प्रसादेन पचत्येवं ममार्भक ॥२२॥

**யசோதை**

22. இந்தப் பெண் வ்ருஷபானுகோபரின் அருமை மகள். ராதை

என்று பெயர். குழந்தாய்! இவள் துர்வாஸரின் வரப்ரஸாதத்தால் இவ்வாறு சமைக்கிறாள்.

**श्रीकृष्ण उवाच**

भोक्तुमिच्छाम्यहं नित्यं सुपक्वञ्चान्नमीदृशम् ।
आनयैनां प्रतिदिनं जननि प्रेमपूर्वकम् ॥२३॥

**கண்ணன்**

*23. தினமே இவள் சமைத்துச் சாப்பிட விரும்புகிறேன். எனவே இவளைத் தினமும் இங்கு அழைப்பாயா?*

**यशोदोवाच**

एवमस्तु घनश्याम राधिका वार्षभानवी ।
स्नुषा भवतु मे शीघ्रं ते पिताप्यनुमोदताम् ॥२४॥

**யசோதை**

*24. கண்ணா! அப்படியே ஆகட்டும். ராதை எனக்கு நாட்டுப்பெண்ணாகவே ஆகட்டுமே. சீக்கிரமாய் உனது தந்தை அனுமதிக்கவேண்டும்.*

**श्रीसद्गुरुरुवाच**

एवं वदन्त्यां कृष्णेन यशोदायां पुनः पुनः ।
लज्जयाऽवाङ्मुखी देवी परमानन्दमाप सा ॥२५॥

विलोक्य ललितं तस्या लज्जयाऽवनतं मुखम् ।
भगवान्नन्दबालश्च सुप्रीतोऽभवदच्युतः ॥२६॥

उषित्वा तत्र सा देवी नन्दगेहे दिनत्रयम् ।
पुनर्जगाम स्वगृहमानीता वृषभानुना ॥२७॥

शून्यायितं गृहं सर्वं कृष्णस्य परमात्मनः ।

अलङ्कृतं स्वमात्रापि राधया रहितं तदा ॥२८॥

तस्या एव स्मरन्नित्यं पूर्णचन्द्रसमं मुखम् ।
जगन्नाथोपि गोविन्दो न सस्मार जगत्त्रयम् ॥२९॥

तत्र तत्र स्थितां मेने राधामेव गृहे गृहे ।
उन्मत्तवन्नन्दसूनुः प्रेमपाशवशङ्गतः ॥३०॥

ஸ்ரீஸத்குரு

25-30. தாயும் மகனும் இவ்வாறு பேசிக்கொள்வதைக் கேட்டு ராதை வெட்கமும் மகிழ்ச்சியும் அடைந்தாள். வெட்கத்தினால் சிவந்த அவள் முகத்தைக் கண்டு கண்ணனும் ப்ரீதியடைந்தான். மூன்று நாட்கள் நந்தபவனத்திலேயே தங்கியிருந்து ராதை வ்ருஷபானுகோபர் அழைக்கவே திரும்பித் தன்னகத்திற்கு சென்றாள். ராதையில்லாத வீடு கண்ணனுக்கு வெறிச்சென்றிருந்தது. பூர்ணசந்திரனையொத்த ராதையின் முகத்தை நினைத்து நினைத்து கண்ணன் உலகையே மறந்தான். ராதையின் ப்ரேமையில் பித்துப்பிடித்த கண்ணனுக்கு வீட்டில் அங்குமிங்கும் ராதை நிற்பதைப் போலவே தோன்றிற்று.

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये देवीकाण्डे द्वादशोऽध्यायः॥१२॥*

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிமஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில் தேவீகாண்டத்தில் பன்னிரெண்டாவது அத்யாயம் முற்றும்.**

## अथ त्रयोदशोऽध्यायः

## பதிமூன்றாம் அத்யாயம்

### *श्रीसद्गुरुरुवाच*

दर्शनस्पर्शसल्लापलीलाकलहसान्त्वनैः ।
अनयोर्दिव्यदम्पत्योर्विशुद्धं प्रेम वर्धते ॥१॥

यमुनापुलिनं धन्यं धन्यं बृन्दावनं तथा ।

धन्यं लतागृहं यत्र राधया रमते हरिः ॥२॥

धन्या हि व्रजसुन्दर्यः प्रेमलीलारसोन्मदाः ।
या नित्यमपि पश्यन्ति केलिं राधामुकुन्दयोः ॥३॥

ஸ்ரீஸத்குரு

1-3. ஒருவருக்கொருவர் பார்ப்பது, தொடுவது, ஸல்லாபம் செய்வது, விளையாட்டுச் சண்டை, ஸமாதானம் செய்தல் இவைகளால் ராதைக்கும் கண்ணனுக்கும் தூயகாதல் வளர்ந்து கொண்டிருந்தது.ராதை கண்ணன் இவர்களின் விளையாட்டினால் யமுனை, ப்ருந்தாவனம், நிகுஞ்சம் எல்லாம் பாக்கியமுள்ளதாக ஆயிற்று. ராதாக்ருஷ்ணன் லீலையை ரஸிக்கும் கோபிகைகள் பாக்யவதிகள்.

कदाचिद्यमुनातीरे राधिका हंसगामिनी ।
कुर्वन्ती प्रेमसल्लापं चचार प्रेयसीगणैः ॥४॥

कलिन्दतनयां देवीं तस्याश्च पुलिनानि च ।
लतागृहाणि रम्याणि श्रीवनं दृष्टिशीतलम् ॥५॥

पश्यन्ती सरसं देवी प्रेमसंयुक्तभाषणा ।
चचार यमुनातीरे क्रीडन्ती च मुहुर्मुहुः ॥६॥

अतिक्रम्य च सा देवी विपुलं यमुनावनम् ।
चचार प्रेमसंयुक्ता गोवर्धनसमीपतः ॥७॥

4-7. ஒருநாள் யமுனைக்கரையில் ராதை தனது தோழிகளுடன் ஸல்லாபம் செய்துகொண்டு அன்னபக்ஷியைப்போல் நடந்தாள். யமுனை, மணல்திட்டு, நிகுஞ்ஜம், பசுமையான ப்ருந்தாவனம் இவைகளைப் பார்த்துக்கொண்டே ஸம்பாஷணை செய்துகொண்டும், விளையாடிக்கொண்டும் யமுனையில் சஞ்சரித்தாள். இவ்வாறு ராதை பேசிக்

கொண்டே யமுனைக்கரையிலுள்ள காட்டைத் தாண்டி கோவர்த்தன மலையின் ஸமீபம் வந்துவிட்டாள்.

तदा ववर्ष पर्जन्यो बृन्दाया निजमायया ।
झञ्झामारुतसंयुक्तो विद्युन्मालाविभूषितः ॥८॥

नीलाम्भोधरसंव्याप्तं निबिडं यमुनावनम् ।
तमालवृक्षैः सङ्कीर्णमभवत्तमसाऽऽवृतम् ॥९॥

मयूरा नटनञ्चक्रुः केकानादकुतूहलाः ।
विकचय्य शिखण्डञ्च नानावर्णविचित्रितम् ॥१०॥

अधस्तान्मेघबृन्दस्य शक्रचापयुतस्य च ।
उड्डीनाः श्वेतपक्षाश्च राजहंसा विरेजिरे ॥११॥

*8-11. அப்பொழுது ப்ருந்தாதேவியின் மாயையினால் காற்று மின்னலுடன் மப்புக் கிளம்பி மழை தொடங்கிவிட்டது. தமாலமரங்களால் சூழப்பட்ட ப்ருந்தாவனம் மப்பினால் மூடப்பட்டு இருட்டாயிற்று. மயில்கள் 'கேகா கேகா' என்று கத்திக்கொண்டு பலவண்ணமான தோகையை விரித்துக் கொண்டு ஆடின. வானவில்லுடன் கூடிய மேகத்தின் கீழ் வெள்ளைவெளேரென்று அன்னப்பறவைகள் பறந்து போயின.*

वृषभानुसुतां राधामानीय व्रजकन्यकाः ।
वर्षधाराभिषिक्ताश्च विविशुर्गिरिगह्वरम् ॥१२॥

अन्योन्यमनुधावन्त्यः शीतवातेन पीडिताः ।
हसन्त्यः प्रवदन्त्यश्च गोवर्धनगुहां ययुः ॥१३॥

तत्र दृष्ट्वा घनश्यामं गोविन्दञ्च यदृच्छया ।
लज्जया दुद्रुवुः सर्वा हसन्त्योऽन्यत्र गोपिकाः ॥१४॥

*12-14.* கோபகன்னிகைகள் மழையில் நனைந்துவிட்ட ராதையை அழைத்துக்கொண்டு மலைக்குகையை நோக்கிப் பேசிக் கொண்டும், சிரித்துக்கொண்டும் ஓடிவந்து ஒரு குகையில் நுழைந்தனர். அங்கு எதிர்பாராமல் உட்கார்ந்திருக்கும் கண்ணனைக் கண்டு திடுக்கிட்டு வெட்கத்துடன் சிரித்துக் கொண்டே சிறுமிகள் ஓடிவிட்டனர்.

तावन्नन्दकुमारश्च त्वरयोत्थाय माधवः ।
जग्राह पाणिं राधायाः समयोचितचेष्टितः ॥१५॥

लज्जयाऽवनतां देवीमानीय गिरिगह्वरम् ।
सान्त्वयामास गोविन्दः प्रेमसंयुक्तभाषणैः ॥१६॥

तदा तत्राम्बुदः कश्चिदुत्थाय तमसावृतः ।
पिदधे प्रेमसंयुक्तो गोवर्धनगुहान्तरम् ॥१७॥

परिहृत्य तदा वस्त्रं सुस्निग्धं वर्षधारया ।
धारयामास राधायाः स्वयं पीताम्बरं हरिः ॥१८॥

निष्पीड्य करपद्माभ्यां राधाया वसनं हरिः ।
केशप्रसाधनं चक्रे प्रियाया प्रेमपूर्वकम् ॥१९॥

ममार्ज निजवस्त्रेण भगवान्नन्दनन्दनः ।
देव्या दिव्यं शरीरं तत्सर्वसौन्दर्यसङ्ग्रहम् ॥२०॥

आश्लिष्य सुदृढं कृष्णः शीतवातेन वेपिताम् ।
सान्त्वयामास गोविन्दो लालयन् वार्षभानवीम् ॥२१॥

लज्जिता च प्रहृष्टा च कृष्णस्य परिचर्यया ।
किञ्चिन्नोवाच सा देवी प्राणकान्तवशीकृता ॥२२॥

15-22. அதற்குள் ஸமயமறிந்து காரியத்தைச் சாதித்துக்கொள்ளும் கண்ணன் விரைவில் எழுந்திருந்து ராதையைப் பிடித்துக்கொண்டான். குகைக்குள் அழைத்துச் சென்று குனிந்து நிற்கும் ராதையைத் தனது அன்பு மொழிகளால் சமாதானம் செய்தான். அப்பொழுது ஒரு மேகம் திரைபோட்டதுபோல் குகையை மூடிக்கொண்டது கண்ணன் தனது பீதாம்பரத்தை ராதைக்குக் கொடுத்துவிட்டு அவளது ஈரத்துணியை வாங்கிப் பிழிந்து கொடுத்தான். வெட்கம் அடைந்த ராதை தனது காதலனுக்கு வசமாகி ஒன்றும் பதில் சொல்லவில்லை

अम्बुदेऽपगते तावदादित्यः संप्रकाशते ।
सानन्दं राधिकां द्रष्टुमागच्छन्ति व्रजाङ्गनाः ॥२३॥

विलोक्य राधिकां देवीं पूजितां नन्दसूनुना ।
परमानन्दसंयुक्ताः परिहासञ्च चक्रिरे ॥२४॥

आनीय च ततो देवीं ललना ललितादयः ।
प्रतस्थिरे गृहं गन्तुं गायन्त्योऽनुपथं मुदा ॥२५॥

यत्प्रवृत्तं परं गुह्यं गोवर्धनगुहान्तरे ।
राधिकां गोपसुन्दर्यः पप्रच्छुश्च मुहुर्मुहुः ॥२६॥

एवं हि गोपकन्याभिः पृष्टापि वृषभानुजा ।
लज्जारुणमुखाम्भोजा नोवाच हरिचेष्टितम् ॥२७॥

*23-27. மப்புநீங்கியதும் ஸூர்யன் ப்ரகாஸித்தான் கன்னிகைகள் காதலனைத் தேடிக்கொண்டு வந்துவிட்டனர் .கண்ணனால் பூஜிக்கப்பட்ட ராதையைக்கண்டு கேலி செய்தனர். லலிதாமுதலிய தோழிகள் ராதையை அழைத்துக்கொண்டு வீட்டிற்க்குப் புறப்பட்டனர்.'மலைக்குகையில் என்ன நடந்தது?' என்று திருப்பித்திருப்பிக் கேட்டனர். வெட்கத்தினால் ராதை ஒன்றும் சொல்லவில்லை.*

प्रणयं गोपबालस्य कारुण्यञ्च तथाऽऽत्मनि ।
प्राप सा परमानन्दं स्मृत्वा स्मृत्वा मुहुर्मुहुः ॥२८॥

आत्मानं बहुमेने सा लालितं नन्दसूनुना ।
भूषयामास चात्मानं पश्यन्ती मुकुरं मुहुः ॥२९॥

एवं प्रतिदिनं देवी यमुनावनमागता ।
चकार केलिकां रम्यां प्रहृष्टा नन्दसूनुना ॥३०॥

*28-30. கண்ணன் தன்னிடம் காட்டிய பரிவை நினைத்து நினைத்து ராதை ஆனந்தம் அடைந்தாள். கண்ணனால் லாலனை செய்யப்பட்ட தன்னை வெகுவாக மதித்துக் கொண்டாள்அடிக்கடி அழகு செய்துகொண்டு கண்ணாடியில் பார்த்துக் கொண்டாள். இவ்வாறு தினந்தோறும் ப்ருந்தா வனம் வந்து கண்ணனுடன் ஏதாவது லீலைகள் செய்வாள்.*

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये देवीकाण्डे त्रयोदशोऽध्यायः॥१३॥*

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிமஹாப்ரபு அருளிய ஸ்ரீபிருந்தாவன மாஹாத்மியத்தில் தேவீகாண்டத்தில் பதிமூன்றாம் அத்யாயம் முற்றும்.**

# अथ चतुर्दशोऽध्यायः

## பதினான்காவது அத்யாயம்.

### श्रीसद्गुरुरुवाच

आगमच्च शरत्कालः सर्वलोकसुखावहः ।
आनन्दयन् वनं सर्वं रमणीयेन वर्चसा ॥१॥

द्रष्टुमिच्छन्ति सर्वेपि चित्तं मेघसमावृतम् ।
नवीनमिव सानन्दं चन्द्रं पूर्णकलाधरम् ॥२॥

अपगच्छन्ति मेघाश्च मन्दमन्दञ्च पाण्डुराः ।
राजते विमलं व्योम साधूनां हृदयं यथा ॥३॥

पङ्कदिग्धाः पदव्यश्च प्रापुः सैकतसंभवम् ।
सोपानं दर्शयामासुस्तटाकानि तदा वने ॥४॥

स्वच्छन्दं पक्षिणश्चापि मृगाश्च यमुनावने ।
सञ्चरन्ति च गावश्च वत्साश्च व्रजबालकाः ॥५॥

आतपेन च संव्याप्तं पवित्रं यमुनावनम् ।
प्रकाशते किसलयैः प्रतिबिम्बितभास्करैः ॥६॥

ஸ்ரீஸத்குரு

*1-6. அழகிய பொலிவினால் யாவருக்கும் ஆனந்தத்தைத் தரும் சரத்காலம் ப்ருந்தாவனத்தை அழகுபடுத்தியது. மழைக் காலத்தில் வெகுநாட்களாக மப்பில் மறைந்திருந்த சந்திரன் புத்தம்புதியவனைப்போல் காக்ஷியளித்தான், கொஞ்சங் கொஞ்சமாய் வெளுத்த மேகங்கள் நீங்கி ஸாதுக்களின் உள்ளத்தைப்போல் ஆகாயம் நிர்மலமாயிற்று. சேறாகஇருந்த பாதைகள் மணல்வெளியாக ஆயிற்று. குளங்களில் தண்ணீர் குறைந்து படிக்கட்டுகள் தெரியலாயின. பசுபக்ஷிகளும், சிறுவர்களும் சுதந்திரமாய் ப்ருந்தாவனத்தில் நடக்க ஆரம்பித்தனர். இளந்தளிர்களில் சூர்யன் ப்ரதிபிம்பித்தான். வெய்யில்பட்டு ப்ருந்தாவனம் பாவனமாயிற்று.*

चकार कार्तिके मासि राधिका वृषभानुजा ।
सुवासिनीभिः कर्तव्यं कृत्तिकाव्रतमुत्तमम् ॥७॥

दीपं प्रज्वाल्य सन्ध्यायामभ्यर्च्य कुसुमादिभिः ।
दानं चक्रे प्रतिदिनं सर्वमङ्गलदायकम् ॥८॥

एकदा राधिकादेवी कलावत्याऽनुमोदिता ।
यशोदायै दीपदानं कर्तुं गोकुलमागता ॥९॥

यशोदा राधिकां दृष्ट्वा परमानन्दसंयुता ।
आश्लिष्य प्रेमसंयुक्ता चक्रे स्वागतसत्क्रियाम् ॥१०॥

ददौ हिरण्मयं दीपं यशोदायै च राधिका ।
अभ्यर्च्य प्रेमभावेन ताम्बूलकुसुमादिभिः ॥११॥

भर्तारमिष्टं संप्राप्य भव दीर्घसुमङ्गला ।
इत्युक्ता नन्दभामिन्या राधिका लज्जिताऽभवत् ॥१२॥

ततः प्रतस्थे सा देवी स्वगृहाय वरानना ।
प्रेषयामास गोविन्दमनुगन्तुं वनान्तरे ॥१३॥

*7-13. கார்த்திகை மாதத்தில் ராதாதேவி தீபபூஜை செய்தாள். மாலைப்பொழுதில் தினந்தோறும் தீபத்தை பூக்களால் பூஜித்து சுமங்கலிகளுக்கு தானம் செய்வாள். ஒரு நாள் ராதை கலாவதியின் அனுமதி பெற்று யசோதைக்கு தீபதானம் செய்ய கோகுலத்திற்கு வந்தாள். ராதையைக் கண்ட யசோதை பெருமகிழ்ச்சியடைந்து கட்டியணைத்து நல்வரவு சொன்னாள். ராதை யசோதையைத் தாம்பூலம் புஷ்பம் முதலியவைகளால் பூஜித்து தீபதானம் செய்தாள், 'இஷ்டமான பர்தாவை அடைந்து இனிது வாழ்க' என்று யசோதை ஆசி கூறினாள். அதைக்கேட்ட ராதை வெட்கமடைந்தாள். பிறகு ராதை வீட்டிற்குப் புறப்பட்டாள். யசோதை கண்ணனைத் துணைக்கு அனுப்பினாள்.*

**यशोदोवाच**

गृहमेव निजं शीघ्रं राधिका गन्तुमिच्छति ।
नियमेन कृशां कन्यामबलां नय माधव ॥१४॥

निबिडो वनमार्गोऽयं कण्ठकैरपि संवृतः ।
तस्माद्भीरुमिमां कन्यां गृहं प्रापय माधव ॥१५॥

यசோதை

14-15. மாதவா! ராதை சீக்கிரமாய் வீட்டிற்குப் போக விரும்பு கிறாள். விரதம் செய்து களைத்துப் போயிருக்கிறாள். காட்டுப் பாதையோ முள் நிறைந்திருக்கிறது. மாலைப்பொழுது ஆகி விட்டது. எனவே இவளை வீட்டில் கொண்டு விட்டு வா.

श्रीकृष्ण उवाच

एवमस्तु गमिष्यामि सांप्रतं यमुनावनम् ।
आगच्छतु मया सार्धं सहसा वृषभानुजा ॥१५॥

अम्ब बृन्दावनायैव प्रस्थितोऽहं यदृच्छया ।
प्रापयामि गृहञ्चैनां राधिकां क्षिप्रमेव हि ॥१७॥

கண்ணன்

16-17. அப்படியே ஆகட்டும் அம்மா. நான் ப்ருந்தாவனம் போகிறேன். அவளும் என்னுடன் வரட்டும். ராதையை அவள் வீட்டில் கொண்டுவிடுகிறேன்.

यशोदोवाच

कलावतिसुते राधे गच्छ त्वं भद्रमस्तु ते ।
पुत्रेण मम कृष्णेन वनमार्गेषु निर्भया ॥१८॥
शीघ्रं गच्छ गृहं कन्ये वनं हि तमसावृतम् ।
अयं किशोरो मे पुत्रः किशोरी त्वञ्च राधिके ॥१९॥

யசோதை

18-19. கலாவதிபெண்ணே! என் பிள்ளையுடன் சீக்கிரமாகக் கிளம்பு. ஒன்றும் பயமில்லை. உனக்கு மங்களம் உண்டாகும். சீக்கிரமாக வீட்டிற்குப் போய் விடுங்கள். ப்ருந்தாவனம் இருள் சூழ்ந்ததல்லவா. நீங்கள் இருவருமே குழந்தைகள். பயப்படுவீர்கள்.

**श्रीसद्गुरुरुवाच**

इत्युक्तो राधिकाकृष्णौ नेमतुस्तां व्रजेश्वरीम् ।
मूर्ध्न्युपाघ्राय तौ माता प्रेषयामास सत्वरम् ॥२०॥

रम्यं बृन्दावनं प्राप माधवो राधया सह ।
प्रकुर्वन् प्रेमसल्लापं विहरंश्च मुहुर्मुहुः ॥२१॥

शुशुभे पूर्णचन्द्रोपि रञ्जयन् यमुनावनम् ।
चम्पकाशोकमन्दारमल्लिकादिसुगन्धितम् ॥२२॥

दर्शयामास गोविन्दः प्रियायै प्रेमपूर्वकम् ।
सौन्दर्यं श्रीवनस्येदं शरत्कालसमुद्भवम् ॥२३॥

**ஸ்ரீஸத்குரு**

*20-23, இவ்வாறு சொன்னதும் ராதையும் கண்ணனும் யசோதையை வணங்கிவிட்டுப் புறப்பட்டனர். ராதையுடன் கண்ணன் ஸல்லாபம் செய்துகொண்டும் விளையாடிக் கொண்டும் ப்ருந்தாவனம் வந்தான். நல்ல நிலவு அடித்துக் கொண்டிருந்தது. அன்று பௌர்ணமி. ப்ருந்தாவனம் மிகவும் அழகாக சோபித்தது. ப்ருந்தாவனத்தின் அழகை கண்ணன் ராதைக்குக் காட்டிக்கொண்டே சென்றான்.*

**श्रीकृष्ण उवाच**

नृत्यन्ति बर्हिणश्चैव पश्यन्ति हरिणास्तथा ।
गच्छन्ति कलहंसाश्च कूजन्ति च पतत्त्रिणः ॥२४॥

लम्बते लतिका चेयं नवकुट्मलशोभिता ।
तव वेणी यथा राधे नवचम्पकभूषिता ॥२५॥

पश्य प्राणप्रिये रम्यं पुष्पितं यमुनावनम् ।

उन्मादयति मे चित्तं श्रीवनं तव सङ्गमात् ॥२६॥

इमाञ्च पद्मिनीं पश्य भृङ्गझङ्कारसंयुताम् ।
मणिसोपानसम्युक्तां राकाचन्द्रविराजिताम् ॥२७॥

तस्मिन् वानीरकुञ्जेपि विश्रम्य वृषभानुजे ।
क्षिप्रमेव हि गच्छावो वृषभानुपुरं प्रति ॥२८॥

**கண்ணன்**

*24-28. ராதே! மயில்கள் ஆடுகின்றன. குயில்கள் பாடுகின்றன. மான்கள் பார்க்கும் அழகைப்பார். அன்னபக்ஷிகள் நடக்கும் அழகைப் பார். புதிய அரும்புகள் நிறைந்த இந்தக்கொடி உனது பின்னலைப்போல் தொங்குகிறது. எங்கும் மலர்கள் நிறைந்த ப்ருந்தாவனம் உனது சேர்த்தியால் என்னைப் பித்தனாக ஆக்குகிறது. பௌர்ணமி நிலவில் பளபளவென ஜொலிக்கும் மணிமயமான படிக்கட்டுகள் உள்ள தாமரை ஓடையைப் பார். அதன் கரையிலுள்ள அந்த நிகுஞ்ஜத்தில் கொஞ்சநேரம் இளைப்பாறிச் செல்வோமா?*

**श्रीराधोवाच**

नावकाशोस्ति गोविन्द स्थातुं तत्र लतागृहे ।
शीघ्रमेव हि गच्छावः कालोऽयमतिवर्तते ॥२९॥

अन्यस्मिन् सुदिने देव मम स्यात्सङ्गमस्त्वया ।
तदा तत्रैव सानन्दं विहरावो व्रजेश्वर ॥३०॥

**ராதை**

*29-30. கோவிந்தா! வெகுநேரமாகிவிட்டது. இப்போது அவகாசமில்லை. விரைவில் வீட்டிற்குச் செல்வோம். மற்றொரு நன்னாளில் நாமிருவரும் அங்கு விளையாடுவோம்.*

**श्रीसद्गुरुरुवाच**

एवं प्रणयभावेन भाषमाणौ परस्परम् ।

जग्मतुर्भवनं शीघ्रं राधिकागिरिधारिणौ ॥३१॥

अंसे निधाय राधायाः पाणिं पद्मविलोचनः ।
भ्रामयन् शतपत्रञ्च चचार यमुनावने ॥३२॥

गृह्णन् पद्मपलाशाक्ष्या मृदुलं पाणिपल्लवम् ।
इतस्ततो महारण्ये बभ्राम श्यामसुन्दरः ॥३३॥

सञ्चरन् यमुनारण्ये मन्दमन्दं व्रजेश्वरः ।
वृषभानुपुरं प्राप राधया प्रियया हरिः ॥३४॥

तौ दृष्ट्वा प्रेमसम्युक्ता वात्सल्येन कलावती ।
मूर्ध्न्युपाघ्राय सानन्दं परिरेभे पुनः पुनः ॥३५॥

एकासने समासीनौ राधिकागिरिधारिणौ ।
भोजयामास देवी सा प्रेमपूर्वं पतिव्रता ॥३६॥

ततो जगाम भगवान् गोकुलं गोकुलेश्वरः ।
बालवत् प्ररुदन् मार्गे राधिकाविरहेण सः ॥३७॥

ஸ்ரீஸத்குரு

31-37. இவ்வாறு கண்ணனும் ராதையும் ப்ரேமையுடன் ஸல்லாபம் செய்துகொண்டு வீட்டிற்குப் புறப்பட்டனர். ராதையின் தோளில் ஒரு கையைப் போட்டுக்கொண்டு தாமரைப்பூவை சுழற்றிக்கொண்டே கண்ணன் ப்ருந்தாவனத்தில் சஞ்சரித்தான். ராதையின் மெல்லிய விரல்களைப் பற்றியவாறு அவளை அழைத்துக்கொண்டு கண்ணன் வ்ருஷபானுபுரத்திற்கு வந்து சேர்ந்தான்.இந்த இருவரையும் ஜோடியாகக் கண்ட கலாவதி மட்டில்லா மகிழ்ச்சியை அடைந்தாள். கட்டியணைத்து உச்சி முகர்ந்தாள். இருவரையும் ஒரே ஆசனத்தில் அமர்த்தி போஜனம்

செய்வித்தாள். பிறகு கண்ணன் கோகுலம் திரும்பினான். ராதையின் பிரிவால் வழியெல்லாம் ஒரு குழந்தைபோல் அழுது கொண்டே வந்தான்.

इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये देवीकाण्डे चतुर्दशोऽध्यायः॥१४॥

இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிமஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில் தேவீகாண்டத்தில் பதினான்காவது அத்யாயம் முற்றும்.

# अथ पञ्चदशोऽध्यायः

## பதினைந்தாவது அத்யாயம்.

### श्रीसद्गुरुरुवाच

अथ हेमन्तकालश्च बृन्दावनमुपागतः ।
वृक्षाग्राण्यपतन्भूमौ शीतास्तुहिनबिन्दवः ॥१॥

शाद्वलेषु च रम्येषु यमुनातीरकानने ।
पथिका हिमशीतेषु पादन्यासं च कुर्वते ॥२॥

अरुणोदयकालेपि तुषारेण समावृता ।
धूम्रेणैव तदा तत्र ददृशे वनपद्धतिः ॥३॥

आच्छादयन्तो वृद्धाश्च शरीरं कम्बलादिभिः ।
गच्छन्ति यमुनां नित्यं कञ्चुकोष्णीषभूषिताः ॥४॥

केचिच्छीतभयेनैव शय्यायां विलुठन्त्यपि ।
उदितेपि तदाऽऽदित्ये न पश्यन्ति बहिर्नराः ॥५॥

### ஸ்ரீஸத்குரு

1-5. ப்ருந்தாவனத்தில் பனிக்காலம் வந்துவிட்டது. மரங்களின் நுனியிலிருந்து பனித்திவலைகள் சொட்டிக்கொண்டிருந்தன. பனித்திவிலைகளால் ஜில்லென்றிருக்கும் புல்வெளிகளில்

காலை வைக்கக் கூசுகிறது. அருணோதயமாகியும் புகை சூழ்ந்ததுபோல் பனி சூழ்ந்திருப்பதால் பாதை தெரியவில்லை. சட்டை, குல்லாய் அணிந்து கம்பளியைப் போர்த்திக்கொண்டு வயோதிகர்கள் யமுனைக்குச் செல்கின்றனர். குளிருக்குப் பயந்துகொண்டு சிலர் படுக்கையிலேயே புரளுகின்றனர். சூரியன் உதயமாகியும் வெளியே வரவில்லை

दन्तवीणां प्रकुर्वन्तः शीतवातेन वेपिताः ।
आतपे बालसूर्यस्य तिष्ठन्ति व्रजबालकाः ॥६॥

आसीना मण्डलीकृत्य वह्निं प्रज्वाल्य योषितः ।
कथयन्ति विचित्राणि चरित्राणि हरेस्तदा ॥७॥

गत्वापि यमुनां विप्राः प्रातः स्नानपरायणाः ।
संभाषमाणास्तिष्ठन्ति जलं संस्पृश्य वेपिताः ॥८॥

शङ्खनादं प्रकुर्वन्तः कीर्तयन्तश्च केशवम् ।
वीथ्यां वीथ्यां सञ्चरन्ति महाभागवतास्तदा ॥९॥

कात्यायनीव्रतं चक्रुः श्रद्धया गोपकन्यकाः ।
अन्योन्यं प्रेमसंयुक्ता यमुनातीरमागताः ॥१०॥

6-10. சிறுவர்கள் வீணை வாசிப்பதுபோல் உதடும் பல்லும் துடிக்க இளம் வெயிலில் குளிர் காய்கின்றனர். பெண்கள் தீயை மூட்டி அதைச் சுற்றி உட்கார்ந்துகொண்டு கண்ணனைப்பற்றிப் பேசியவாறு குளிர்காய்கின்றனர். நீராடுவதற்காக யமுனைக்கு வந்த அந்தணர்கள் ஜலத்தைத் தொட்டுவிட்டு குளிரில் நடுங்கிப்போய் பேசிக்கொண்டு நிற்கின்றனர். பாகவதர்கள் ஹரிபஜனை செய்துகொண்டும் சங்கு ஊதிக்கொண்டும் வீதிகள்தோறும் செல்கின்றனர். ஆயர்சிறுமிகள் யமுனைக் கரைக்கு வந்து துர்கா பூஜை (பாவைநோன்பு) செய்கின்றனர்.

कृष्णमेव पतिं प्राप्तुमिच्छया वृषभानुजा ।

कात्यायनीव्रतञ्चक्रे सखीभिः सह राधिका ॥११॥

प्रातरुत्थाय गोपीभिरागत्य यमुनातटम् ।
स्नात्वा च विधिवद्देवीं पूजयामास वैष्णवीम् ॥१२॥

विधाय मृण्मयीं देवीं पुष्पैरभ्यर्च्य राधिका ।
प्रार्थयामास भक्त्यैव विहिताञ्जलिसंपुटा ॥१३॥

कात्यायनि महामाये महायोगिन्यधीश्वरि ।
नन्दगोपसुतं देवि पतिं मे कुरु ते नमः ॥१४॥

इति मन्त्रं जपन्ती सा निमील्यापि च लोचने ।
दुर्गायाः पुरतस्तस्थौ राधिका भक्तिसंयुता ॥१५॥

*11-15. ராதாதேவியும் கண்ணனையே கணவனாக அடைய விரும்பித் தோழிகளுடன் கூடி துர்காபூஜையைச் செய்தாள். வைகறையில் எழுந்திருந்து யமுனையில் நீராடி மண்ணால் செய்யப்பட்ட தேவியின் பதுமையை மலர்களால் பூஜித்து கைகுவித்து வணங்கி 'காத்யாயினி! மஹாமாயே! மஹாயோகினி! ஈச்வரி! நந்தகோபரின் மகனையே எனக்குக் கணவனாகச் செய். உனக்கு வணக்கம்' என்ற மந்திரத்தை ஜபம் செய்தவாறு கண்மூடி நின்றாள் ராதை.*

तत्रान्तरे हरिः साक्षादागत्य रसिकोत्तमः ।
हरन् वस्त्राणि राधाया दधाव विपिनान्तरे ॥१६॥

कलावतीसुता सापि तं दृष्ट्वा नन्दनन्दनम् ।
वस्त्राणि देहि कृष्णेति तमेवानुदधाव सा ॥१७॥

सलिलस्निग्धसर्वाङ्गीं निबिडस्तनमण्डलाम् ।
एकवस्त्रधरां देवीं लज्जारुणमुखाम्बुजाम् ॥१८॥

आत्मानमनुगच्छन्तीं सुन्दरीं प्राणवल्लभाम् ।
तृप्तिं न लेभे गोविन्दो विलोक्यापि पुनः पुनः ॥१९॥

कटिदेशान्मुकुन्दस्य वंशी विगलिता भुवि ।
तामादाय दधावाशु राधिका वृषभानुजा ॥२०॥

*16-20. அதற்குள் ரஸிகனான கண்ணன் அங்கு தோன்றி ராதையின் துணிகளை அள்ளிக்கொண்டு ஓடினான். அதைக் கண்ட ராதை, 'கண்ணா! ஆடைகளைக் கொடுத்து விடு' என்று கெஞ்சிக்கொண்டே பின் தொடர்ந்து ஓடி வந்தாள். ஈரமான ஒரே துணியுடன் ஓடிவரும் கட்டழகியான ராதையின் அழகை பார்த்து பார்த்துக் கண்ணனுக்கு அலுக்கவில்லை. அவன் இடுப்பிலிருந்து குழல் நழுவிக் கீழே விழுந்துவிட்டது. உடனே ராதை அதை எடுத்துக்கொண்டு ஓடினாள்.*

सद्य एव जगन्नाथो भगवान्नन्दनन्दनः ।
राधे देहीति मुरलीं तमेवानुदधाव सः ॥२१॥

क्वचिदाह्वयति श्यामं क्वचित्तिष्ठति धावति ।
क्वचिद्धसति सा देवी गोविन्दं वञ्चयन्त्यपि ॥२२॥

वृक्षे वृक्षेऽनुधावन्तीं कुञ्जे कुञ्जेपि राधिकाम् ।
याचन्ननुजगामैव वंशीं देहीति माधवः ॥२३॥

नेत्रानन्दप्रदमभून्मधुरं चेष्टितं तयोः ।
रम्ये कलिन्दजातीरे स्थितानां व्रजयोषिताम् ॥२४॥

*21-24. உடனே கண்ணன்,' ராதே! அந்தக் குழலைக் கொடுத்து விடு' என்று கேட்டுக் கொண்டே ஓடிவந்தான். ராதையோ கொடுப்பதாகச் சொல்லி கிட்டே அழைத்து ஏமாற்றி விடுவாள். ஆடுவாள். பாடுவாள். சிரிப்பாள். பாச்சாகாட்டி ஓடுவாள். மரத்திற்கு மரம் ஓடிஒளிந்து கொள்வாள். கண்ணனும் விடாது துரத்துவான். யமுனையில் குளிக்கும்*

கோபிமார்களுக்கு இந்தக் காக்ஷி கண்ணுக்கு இனியதாக இருந்தது.

कृत्वापि यमुनास्नानं जटिला नाम गोपिका ।
विज्ञातपूर्वा राधाया वृद्धा मातामही सखी ॥२५॥

अकस्मादागता तत्र ददर्श पथि राधिकाम् ।
इतस्ततोऽनुधावन्तीं क्रीडन्तीं नन्दसूनुना ॥२६॥

सहसा कुपिता सापि जगाद वृषभानुजाम् ।
तिष्ठन्तीमञ्जलिं कृत्वा वेपमानां भयेन च ॥२७॥

*25-27. அப்பொழுது யமுனையில் நீராடிவிட்டு ஜடிலா என்கிற ஒரு பாட்டி அங்கு வந்தாள். எதிர்பாராமல் வந்த அவள், ராதை கண்ணனுடன் விளையாடுவதைக் கண்டு கோபமடைந்து ராதையை அதட்டினாள். ராதை பயத்தினால் நடுங்கிப்போய் கைகுவித்து நின்றாள்.*

### जटिलोवाच

अतिक्रम्य कुलाचारं लज्जां त्यक्त्वा च राधिके ।
संप्राप्तयौवनापि त्वं गोविन्दमनुधावसि ॥२८॥

कलावतीसुताभूत्वा स्वैरिणीव प्रवर्तसे ।
अलौकिकीं रतिं कृत्वा राधिके किं न लज्जसे ॥२९॥

सद्य एव गृहं गत्वा पित्रे वक्ष्यामि ते कथाम् ।
हा हन्त धिक् चरित्रं ते कुलधर्मं न पश्यसि ॥३०॥

*28-30. ராதே! உனக்கு மானம் வெட்கம் ஏதுமில்லையா? உன் குலப்பழக்கம் அறியாயோ? உனக்கு வயதாகவில்லையா? கண்ணனுடன் ஓடுகிறாயே. கலாவதியின் பெண்ணாக இருந்து கொண்டு இப்படி ஏன் உனக்கு புத்தி போகிறது? உலகத்தில் எல்லாப் பெண்களும் இப்படித்தான் இருக்கிறார்களா? உன்*

கதையை உன் தந்தையினிடமே சொல்கிறேன் வா. குலதர்மம் தெரியாத உன் நடத்தைக்கு சீ! சீ!.

### श्रीसद्गुरुरुवाच

इत्युक्ता चकिता देवी तदा भीता रुरोद ह ।
जटिला तर्जयन्त्येवं वृषभानुगृहं गता ॥३१॥

तस्यै दत्वापि वस्त्राणि वंशीमादाय माधवः ।
क्वचिद्ययौ महारण्यं सान्त्वयन्नपि राधिकाम् ॥३२॥

### ஸ்ரீஸத்குரு

31-32. இவ்வாறு ஜடிலை ராதையை அதட்டிவிட்டு வ்ருஷபானுகோபரின் வீட்டிற்குச் சென்றாள். ராதை பயந்துபோய் அழத் தொடங்கினாள். கண்ணன் அவள் ஆடையைக் கொடுத்துவிட்டு ஸமாதானம் செய்தான். தன் குழலை வாங்கிக்கொண்டு ப்ருந்தாவனம் சென்றான்.

इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये देवीकाण्डे पञ्चदशोऽध्यायः॥१५॥

இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிமஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில் தேவீகாண்டத்தில் பதினைந்தாவது அத்யாயம் முற்றும்.

# अथ षोडशोऽध्यायः

## பதினாறாவது அத்யாயம்.

### श्रीसद्गुरुरुवाच

जटिला कोपसंयुक्ता वृषभानुगृहं गता ।
मातामहीं राधिकाया मुखरां प्राह सत्वरम् ॥१॥

### ஸ்ரீஸத்குரு

1. கோபத்துடன்கூடிய ஜடிலா வ்ருஷபானுகோபரின் வீட்டிற்கு வந்து ராதையின் பாட்டியான முகராவைப் பார்த்துச் சொன்னாள்.

जटिलोवाच

मुखरे तव दौहित्री स्वच्छन्दं यमुनातटे ।
निर्लज्जा रमते राधा धावन्ती नन्दसूनुना ॥२॥

भर्तृसंयोगसुलभं वयो दृष्ट्वापि ते सुता ।
न करोति विवाहञ्च तस्मादेवं प्रवर्तते ॥३॥

न बाला तव दौहित्री युक्तं यौवनमास्थिता ।
नार्हत्येवं बहिर्गन्तुमेका गेहादितःपरम् ॥४॥

नन्दनन्दनमिच्छन्तीं लोको निन्दति ते सुताम् ।
तस्माज्जागृहि वंशस्य ह्यपवादो भविष्यति ॥५॥

ஜடிலா

*2-5. முகரே! உனது பேத்தியான ராதை யமுனைக்கரையில் வெட்கமில்லாமல் நந்தகோபனின் பிள்ளையுடன் ஓடுகிறாள். கல்யாணத்திற்கான வயது ஆகிவிட்டது. கலாவதியோ சும்மா இருக்கிறாள். ஆகையினால்தான் இப்படி நேர்ந்தது. ராதை குழந்தையல்ல. வயது வந்த பெண். வீட்டைவிட்டு வாசலில் போகக்கூடாது. உலகம் கேலி செய்கிறது. அபவாதம் ஏற்படும். ஜாக்ரதை.*

श्रीसद्गुरुरुवाच

एवं हि मुखरां दृष्ट्वा जटिलायां ससंभ्रमम् ।
वदन्त्यां प्रविवेशापि भीतभीता हि राधिका ॥६॥

कलावती च तां दृष्ट्वा प्रणयक्रोधसंयुता ।
अपृच्छत्तनयां राधां यद्वृत्तं यमुनातटे। ॥७॥

कथयामास तत्सर्वं हरेः स्वच्छन्दचेष्टितम् ।

सगद्गदं प्ररुदती लज्जया च भयेन च ॥८॥

मत्वा कलावतीदेवी तत्सर्वं बालचेष्टितम् ।
अवोचन्मधुरं वाक्यं सान्त्वयन्ती च राधिकाम् ॥९॥

ஸ்ரீஸத்குரு

6-9. இவ்வாறு முகரையினிடம் ஜடிலா பேசிக்கொண்டிருக்கும்போதே ராதை வந்து விட்டாள். பயந்துகொண்டே உள்ளே நுழைந்தாள். அவளைக்கண்ட கலாவதி பொய்க் கோபங்காட்டி 'யமுனைக்கரையில் என்ன நடந்தது?' என்று கேட்டாள். ராதை வெட்கத்துடனும் பயத்துடனும் அழுதுகொண்டே கண்ணன் செய்த குறும்புகள் எல்லாவற்றையும் சொல்லிவிட்டாள். கலாவதியோ இதுவெல்லாம் குழந்தைத்தனம் என்றே நினைத்தாள். ராதையை ஸமாதானம் செய்து மதுரமாகச் சொன்னாள்.

कलावत्युवाच

जानामि तव भावञ्च तस्य भावञ्च राधिके ।
युवयोर्नैव दोषोऽस्ति लोकोऽयं दूषणप्रियः ॥१०॥

यशोदानन्दनः सोयं रसिको हि स्वभावतः ।
विशुद्धप्रेमनिलयः सदा केलिकलाप्रियः ॥११॥

नैव जानात्ययं लोकं परनिन्दापरायणम् ।
तस्मादेवं विहरति स्वच्छन्दं यमुनातटे ॥१२॥

तस्मिन् कल्मषलेशोऽपि नास्त्येव रसिकोत्तमे ।
संप्राप्तयौवनोप्येष बालवत् केलिकाप्रियः ॥१३॥

युवयोः प्रेमसंयुक्तं विशुद्धं हृदयं त्वहम् ।
जानामि राधिके व्यक्तं नैव जानन्ति लौकिकाः ॥१४॥

तस्मान्मा गच्छ तनये बृन्दावनमितःपरम् ।
यत्र क्रीडति गोविन्दः स्वच्छन्दं सहितस्त्वया ॥१५॥

गृहद्वारञ्च मा गच्छ लोको बहुमुखो ह्ययम् ।
अन्तर्गृहे रमस्व त्वं सखीभिः सह राधिके ॥१६॥

वयो विवाहयोग्यञ्च प्राप्तासि वरवर्णिनि ।
तस्मान्न पश्य गोविन्दं गच्छन्तञ्च पथि क्वचित् ॥१७॥

लोकनिन्दाभयाद्राधे वदामि त्वां ममात्मजे ।
कुलधर्ममवेक्षस्व निगूढा सदने वस ॥१८॥

**கலாவதி**

*10-18. ராதே! உன் உள்ளத்தையும் கண்ணனின் உள்ளத்தையும் நான் அறிவேன். உங்கள் இருவர்மேலும் குற்றமில்லை. இருந்தாலும் இந்த உலகத்திற்கு தூஷணை செய்வதில் ப்ரியம். யசோதையின் பிள்ளை விளையாட்டு ஸ்வபாவம் உடையவன். எப்பொழுதும் ஏதாவது கேலி செய்துகொண்டே இருப்பான். ஆனால் அவன் உள்ளத்தில் சுத்தமான அன்பு உடையவன். பிறர் பழிப்பார்களே என்கிற கவலை அவனுக்கு இல்லை. அவன் சித்தத்தில் கல்மஷமில்லை. குழந்தைபோல் விளையாடிக்கொண்டே இருக்கிறான். உங்கள் இருவருக்கும் உள்ள ப்ரேமை சுத்தமானது என்று நானறிவேன். உலகம் அறியாது. பெண்ணே! ஆகையினால் இனி ப்ருந்தாவனம் பக்கம் போகாதே. வீட்டு வாசற் பக்கங்கூட தலை காட்டாதே. வீட்டின் உள்ளேயே தோழிகளுடன் விளையாடு. ராதே! உனக்கு விவாஹ வயது ஆகிவிட்டது. எனவே ஒருக்கால் வாசலில் கண்ணன் சென்றாலுங்கூட வெறித்துப் பார்க்கக் கூடாது. உலகம் பழிக்குமே என்கிற பயத்தினால் சொல்கிறேன். வீட்டிற்குள்ளேயே இருந்து குலதர்மத்தைக் காப்பாற்று.*

श्रीसद्गुरुरुवाच

एवं कलावती कन्यामादिदेश सुभाषितैः ।
देवी च बाढमित्युक्त्वा प्रविवेश निजं पदम् ॥१९॥

कपाटबन्धनं कृत्वा शय्यायां पतिता तथा ।
रुरोद नितरां देवी स्फुरिताधरपल्लवा ॥२०॥

ஸ்ரீஸத்குரு

19-20. இவ்வாறு கலாவதி தன் மகளுக்கு புத்திமதி சொன்னாள். ராதையும் அப்படியே ஆகட்டுமென்று சொல்லிவிட்டு தன் அறைக்குள் சென்று கதவைத் தாளிட்டுக்கொண்டு படுக்கையில் விழுந்து அழத்தொடங்கினாள்.

श्रीराधोवाच

वदनं पूर्णचन्द्राभमनालोक्य प्रियस्य मे ।
हन्त मे मन्दभाग्याया व्यर्थमेव हि जीवितम् ॥२१॥

इयञ्च लोकनिन्दा क्व क्व च मे प्रेमलक्षणम् ।
नैव जानाति मां नूनं मम माता पितापि च ॥२२॥

त्रुटिर्युगायते हन्त श्रीकृष्णविरहेण मे ।
न हि मे जीविते श्रद्धा त्वनालोक्य हरेर्मुखम् ॥२३॥

रम्यं बृन्दावनं नित्यं द्रष्टुमिच्छामि सन्ततम् ।
तस्या मे भवने वासो हन्त कारागृहे यथा ॥२४॥

निबद्धां बन्धुभिर्गेहे निन्दिताञ्च पुनः पुनः ।
नैव जानासि मां दीनां प्राणवल्लभ माधव ॥२५॥

हा हन्त पुण्डरीकाक्ष हा हा रसिकशेखर ।

प्राणकान्त रमाकान्त कदा द्रक्ष्यामि ते मुखम् ॥२६॥

**ஸ்ரீராதை**

*21-26.* என் காதலனின் பூர்ணசந்திரனையொத்த முகத்தைப் பாராமல் உயிரை சுமப்பது வீணே. உலக நிந்தை எங்கே? என் ப்ரேமை எங்கே? என் பெற்றோர்கள்கூட என்னைப் புரிந்து கொள்ளவில்லையே. ஸ்ரீக்ருஷ்ணவிரஹத்தினால் நொடிப் பொழுதும் எனக்கு யுகம்போல் போகிறது. அந்தோ! கண்ணனின் முகத்தைக் காணாமல் பிழைத்திருப்பேனென்று எனக்கு நம்பிக்கையில்லை. அழகிய ப்ருந்தாவனத்தை தினமும் பார்க்க விரும்பும் எனக்கு வீட்டிலேயே சிறைவாஸமா? ப்ராணநாதா! மாதவா! பலராலும் பழிக்கப்பட்டு பந்துக்களிடம் கட்டுப்பட்ட என்னை நீ அறியாயோ? தாமரைக்கண்ணா! ரஸிகசேகரா! ப்ராணகாந்தா! ரமாரமணா! உன் முகத்தை எப்பொழுது பார்ப்பேன்?

**श्रीसद्गुरुरुवाच**

एवं निरपराधा सा राधिका बन्धुभिर्गृहे ।
निबद्धा निन्दिताप्येवं स्मृत्वा कृष्णं रुरोद ह ॥२७॥

तर्जिता बन्धुभिर्देवी श्रीवनं न ययौ पुनः ।
द्रष्टुकामापि गोविन्दं तदीयविरहाकुला ॥२८॥

प्रतीक्षमाणस्तां देवीं गोविन्दोपि दिने दिने ।
आगत्य यमुनातीरं वञ्चितो भगवानभूत् ॥२९॥

अनयोः प्रेमभावस्य विघ्नं दृष्ट्वा समागतम् ।
ललिता च विशाखा च दुःसहं दुःखमापतुः ॥३०॥

**ஸ்ரீஸத்குரு**

*27-30.* இவ்வாறு நிரபராதியான ராதை வீட்டில் பந்து பாசத்தினால் கட்டப்பட்டு கண்ணனை நினைத்து அழுதாள். மறுபடியும் ப்ருந்தாவனத்திற்குப் போகவில்லை. கண்ணனையும்

காணமுடியவில்லை. கண்ணனும் தினந்தோறும் யமுனைக் கரைக்கு வந்து ராதையைக் காணாமல் ஏமாந்து போவான். இவர்களுடைய ப்ரேமைக்குப் பெரிய தடை ஏற்பட்டு விட்டதைப் பார்த்து லலிதாவும் விசாகாவும் வருத்தமடைந்தனர்.

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये देवीकाण्डे षोडशोऽध्यायः ॥१६॥*

**இவ்வாறு ஶ்ரீக்ருஷ்ணப்ரேமிமஹாப்ரபு அருளிய ஶ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில் தேவீகாண்டத்தில் பதினாறாவது அத்யாயம் முற்றும்.**

# अथ सप्तदशोऽध्यायः

# பதினேழாவது அத்யாயம்

***श्रीसद्गुरुरुवाच***

एवं दुःखेन राधाया बहवो वासरा गताः ।
मुखदर्शनमिच्छन्त्याः प्राणकान्तस्य सन्ततम् ॥१॥

वसन्तकालः संप्राप्तः सर्वचित्तानुरञ्जनः ।
पुष्पबाणमहोद्योगकोलाहलविवर्धनः ॥२॥

रम्यसौरभसंयुक्ता विकसन्ति च मल्लिकाः ।
सुगन्धेनैव तासां तु वनं घुमघुमायितम् ॥३॥

केतकीगन्धमादाय मन्दं वाति च मारुतः ।
येन चञ्चति वल्ली च विचित्रकुसुमोज्ज्वला ॥४॥

भ्रमन्ति भ्रमराश्चैव मकरन्दरसोन्मदाः ।
झङ्कारनादं कुर्वन्तः पथिकानन्दवर्धनम् ॥५॥

ஸ்ரீஸத்குரு

1-5. கண்ணனின் முகஸேவை கிடைக்காமலேயே ராதைக்கு துக்கத்துடன் பல நாட்கள் கடந்தன. இனிய வஸந்தகாலம் வந்தது. மன்மதன் குதூகலத்துடன் தனது உத்யோகத்தை ஆரம்பித்தான். ப்ருந்தாவனம்முழுவதும் கமகமவென மல்லிகை மணம் வீசிற்று. தாழம்பூமணத்துடன் கலந்து வீசும் மந்தமாருதத்தின் பூங்கொடிகள் அசைந்தன. மது உண்டுகளித்த வண்டுகள் ஜங்காரம் செய்துகொண்டு அலைந்தன. வழிப்போக்கர்கள் ஆனந்தம் அடைந்தனர்

कुहूकुहूरिति सदा कूजन्त्यपि च कोकिलाः ।
पुष्पितेषु च वृक्षेषु निवसन्तो मुहुर्मुहुः ॥६॥

शुशुभे पूर्णचन्द्रोपि रञ्जयन् यमुनावनम् ।
कृत्वाऽमृतकलावर्षं चकोरानन्दवर्धनः ॥७॥

तिष्ठन्ती सदनोद्याने राधिका वृषभानुजा ।
अपश्यन्मधुमासस्य रम्यं प्रकृतिसौष्ठवम् ॥८॥

अभूद्द्विगुणितं तस्या दुःखं विरहसंभवम् ।
वसन्तकालं पश्यन्त्याः मधुरं चित्तरञ्जनम् ॥९॥

विरहज्वरसन्तप्ता सुकुमारी च राधिका ।
चुक्रोश नितरां देवी कुररीव गतत्रपा ॥१०॥

6-10. மரங்களின் கிளைகளில் உட்கார்ந்து குயில்கள் கூ கூவென்று கூவுகின்றன. பூர்ணசந்திரன் அமுதமழை பொழிகிறான். சகோரபக்ஷிகள் ஆனந்தம் அடைகின்றன. தன் வீட்டு நந்தவனத்தில் நின்றுகொண்டு ராதைவஸந்த காலத்தின் இயற்கை அழகைக் கண்ட।ள். க்ருஷ்ணவிரஹத்தில் அவளுடைய உள்ளம் குமுறியது. க்ரௌஞ்ச பக்ஷிபோல் கூவிஅழுதாள்.

### श्रीराधोवाच

अहो वसन्तकालोऽयं दुःखं जनयतीव मे ।
दग्धायाः कामतापेन श्रीकृष्णविरहेण च ॥११॥

विज्ञाय मां शम्बराररिनाथामबलां तथा ।
निर्घृणो निशितैर्बाणैर्हृदयं मे निकृन्तति ॥१२॥

मिथुनं कोकिलस्येदं रमते वृक्षकोटरे ।
अहं दुनोमि कृष्णस्य विरहेण भृशं सखि ॥१३॥

मल्लिकेयं मुकुन्दस्य परमानन्ददायिनी ।
कुटिले कुन्तले तस्य धारयिष्याम्यहं कथम् ॥१४॥

बन्धुभिश्च निबद्धाऽहमस्मिन् कारागृहे गृहे ।
मार्गो न विद्यते गन्तुं प्राणकान्तस्य सन्निधिम् ॥१५॥

नूनं दहति मामेष मलयानिलसंयुतः ।
दावानल इवोन्मत्तामबलां मां निशाकरः ॥१६॥

अस्मिन् वसन्तकाले तु प्राणकान्तं विना मम ।
दिनानि च बहून्येव गतानि विरहेण हि ॥१७॥

### ஸ்ரீராதை

*11-17. கண்ணனின் விரஹத்தினால் கஷ்டப்படும் எனக்கு வஸந்த காலம் மேலும் துக்கத்தையே தருகிறது. அனாதையென்று அபலையான என்னை இரக்கமில்லாமல் மன்மதன் வாட்டுகின்றான். மரத்தின் பொந்தில் குயில் ஜோடியாக விளையாடுகிறது. நானோ கண்ணனைவிட்டுப் பிரிந்து ஏங்கித் தவிக்கிறேன். இந்த மல்லிகை மலர் கண்ணனுக்கு மிகவும் பிடித்தது. இதை எப்பொழுதுதான் கண்ணனின் கூந்தலில்*

சூட்டுவேனோ. எனக்கு பந்துக்களே சத்ருக்களானார்கள். வீடே சிறைவாஸமாயிற்று. கண்ணனை அடைய வழி தெரியவில்லை. மந்தமாருதத்துடன் கலந்த நிலவு காட்டுத் தீப்போல் கொளுத்துகிறது என் காதலனை விட்டுப்பிரிந்து வஸந்த காலத்தில் பல நாட்கள் வீணாகவே சென்றன.

विरहेणैव मे नूनं मामप्राप्य प्रियो मम ।
पुष्पबाणविनिर्भिन्नस्त्यक्तप्राणो भविष्यति ॥१८॥

पापिष्ठा मादृशी लोके नूनं कोपि न विद्यते ।
यस्या मे विरहेणैव रसिकेन्द्रो विषीदति ॥१९॥

सौन्दर्यं मम कृष्णस्य दुःखमेव प्रयच्छति ।
यौवनं मे वयश्चेदं व्यर्थं भवति तं विना ॥२०॥

18- 20. எனது பிரிவினால் கண்ணன் உயிரையே விட்டுவிடுவான். என்னைப்போல் துர்பாக்யவதி வேறொருவள் இல்லை. எனது பிரிவினால் கண்ணன் கஷ்டப்படுகிறான். எனது அழகு கண்ணனுக்கு கஷ்டத்தையே தருகிறது. எனது இளமை வீணே.

वसन्तकाले मधुरे सर्वप्राणिमनोहरे ।
सुखं क्रीडन्ति सुभगाः प्राणनाथेन योषितः ॥२१॥

अहं तु दुर्भगा नूनं भर्तृसंयोगवञ्चिता ।
क्रन्दामि सदनोद्याने धिगिदं मम जीवितम् ॥२२॥

अहमिच्छामि मरणं न हि मे जीविते स्पृहा ।
प्राणान् हर नमस्तेस्तु मनोभव महाबल ॥२३॥

क्षणमाभीरपुत्रस्य वदनं कमलोपमम् ।
विलोक्य प्राप्तकामैव त्यक्तुमिच्छाम्यसूनहम् ॥२४॥

21-24. இனிய வசந்தகாலத்தில் நல்ல புண்ணியம் செய்த பெண்கள் கணவனுடன் இனிது வாழ்கின்றனர். நானோ துர்பாக்யவதி. கணவனைச் சேரமுடியாமல் இந்த தோட்டத்தில் கதறுகிறேன். ஜீவித்திருக்க எனக்கு விருப்பமில்லை. மரணத்தை விரும்புகிறேன். மன்மத! என் உயிரைக்கொண்டு போய்விடு. ஆனால் ஒரு கணமாவது நந்தகுமாரனின் கமலமுகத்தைக் கண்டுவிட்டு உயிர் துறப்பேன்.

मम नाथस्य कृष्णस्य संस्पृश्य मधुरं वपुः ।
तत्सुगन्धेन संयुक्तो वाह्यत्र मलयानिल ॥२५॥

अबलायाः प्रदग्धायाः श्रीकृष्णविरहाग्निना ।
तस्यैव सन्निधिं गत्वा दशां मे ब्रूहि कोकिल ॥२६॥

आगच्छ सुन्दराकार मञ्जुभाषणपण्डित ।
कृष्णस्य मधुरं नाम सङ्कीर्तय शुकोत्तम ॥२७॥

पिब क्षीरं सुमधुरं राजहंस नमोस्तु ते ।
व्रजराजसुतं गत्वा वद क्षिप्रं हि मद्दशाम् ॥२८॥

झङ्कारश्रुतिसंयुक्तः कथां मे कृष्णकर्णयोः ।
कथय भ्रमर क्षिप्रं दौत्याय त्वां वृणोम्यहम् ॥२९॥

साकं मया चक्रवाक क्रन्दसि त्वं वृथा भृशम् ।
क्षिप्रमानय मे नाथं कथयन् मद्दशामिमाम् ॥३०॥

25-30. மந்தமாருதமே! கண்ணனின் திருமேனியைத் தொட்டு அந்த ஸுகந்தத்துடன் என்மேல் வீசுவாயாக. குயிலே! என் நிலைமையைக் கண்ணனிடம் சென்று சொல்வாய். கொஞ்சிப் பேசும் கிளியே! கிட்டே வந்து க்ருஷ்ணநாம ஸங்கீர்த்தனம் செய். அன்னப்பறவையே! இந்தப் பாலைக்குடி. நந்தபாலனிடம் சென்று என் நிலைமையைச்சொல். வண்டே! கண்ணனின் காதில் என் கதையை ஜங்காரம் செய். சக்ரவாகமே! வீணாக

ஏன் கத்துகின்றாய்? விரைவில் கண்ணனை அழைத்து வா.

श्रीसद्गुरुरुवाच

एवमुन्मादसंयुक्ता पर्यटन्ती च नन्दने ।
प्रार्थयामास दैन्येन पशुपक्षिगणानपि ॥३१॥

पशुपक्षिगणाः सर्वेप्याहूताः प्रेमपूर्वकम् ।
रुरुदुः परिवृत्यैव मातरं जगतामिमाम् ॥३२॥

ஸ்ரீஸத்குரு

31-32. இவ்வாறு நந்தவனத்தில் உலாவிக்கொண்டே ராதை பசுபக்ஷிகளையும்கூட வேண்டிக்கொண்டாள். ஜகன்மாதா வான ராதையை சூழ்ந்துகொண்டு அந்த பக்ஷிகளும் கண்ணீர் வடித்தன.

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये देवीकाण्डे सप्तदशोऽध्यायः ॥१७॥*

இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிமஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில் தேவீகாண்டத்தில் பதினேழாவது அத்யாயம் முற்றும்.

# अथाष्टादशोऽध्यायः

## பதினெட்டாவது அத்யாயம்.

श्रीसद्गुरुरुवाच

श्रीदेव्या विरहोन्मादं सखीनामपि दुःसहम् ।
उवाच ललिता व्यक्तं मधुरं नन्दसूनवे ॥१॥

एकदा भगवान् कृष्णो मेघश्यामलविग्रहः ।
कनकाम्बरधारी च वनमाली जगत्पतिः ॥२॥

मयूरबर्हमकुटो मन्दस्मितमुखाम्बुजः ।
ताम्बूलरससंयुक्तकोमलाधरपल्लवः ॥३॥

शिञ्जानमञ्जुमञ्जीररञ्जिताङ्घ्रिसरोरुहः ।
हारकङ्कणकेयूरकौस्तुभादिविभूषणः ॥४॥

काश्मीरचन्दनालिप्तपृथुवक्षःस्थलो हरिः ।
विशालफालफलकः कस्तूरीतिलकाङ्कितः ॥५॥

विविधप्रणयोल्लासमुखभावसमन्वितः ।
असमानात्मसौन्दर्यविस्मापितजगत्त्रयः ॥६॥

मदोन्मत्तगजगतिर्महनीयपराक्रमः ।
मल्लिकाकुसुमामोदवेणीघुमघुमायितः ॥७॥

वीथ्यां वीथ्यां सुमधुरं वादयन् मुरळीं प्रभुः ।
चचार युवराजेन्द्रो वृषभानुपुरे क्वचित् ॥८॥

ஸ்ரீஸத்குரு

*1-8. ராதையின் விரஹவேதனையைக்காண தோழிகளுக்கு ஸகிக்கவில்லை. எனவே லலிதா கண்ணனிடம் தெரிவித்தாள். நீலமேகவண்ணனும், பீதாம்பரதாரியும், மகுடத்தில் மயிலிறகு அணிந்தவனும், தாம்பூலத்தினால சிவந்த உதட்டில் முறுவல் செய்பவனும், காற்சலங்கை, கங்கணம், தோள்வளை, ஹாரம், கௌஸ்துபம் முதலிய பூஷணங்கள் அணிந்தவனும் சந்தனம் பூசிக்கொண்டிருக்கும் விசாலமான மார்புடையவனும், கஸ்தூரிதிலகம் அணிந்தவனும், ப்ரேமை நிரம்பிய முகபாவ முடையவனும், உலகம் வியக்கும் நிகரற்ற அழகுடையவனும், யானைபோன்ற நடையுடையவனும், மல்லிகை மாலை சூட்டிக் கொண்டிருப்பவனுமான கண்ணபிரான் குழலூதிக்கொண்டே ஒருநாள் வீதியோடு சென்றான்.*

गृहकृत्यं प्रकुर्वन्ती वृषभानुसुता तदा ।
भवनद्वारमागत्य तस्थौ प्रेमविमोहिता ॥९॥

भगवान् रञ्जयन् वीथ्यां मन्दं मन्दं हरिस्तदा ।
अपश्यत्तां कटाक्षेण निशितेनैव राधिकाम् ॥१०॥

विलोक्य वदनं तस्य राधिका चिरकाङ्क्षितम् ।
विमुग्धा परमानन्दमवाप मृदुभाषिणी ॥११॥

विस्मृत्य स्वकुलाचारं गृहकृत्यञ्च राधिका ।
निर्ययौ भवनात्सद्यो धैर्येण वृषभानुजा ॥१२॥

प्रियदर्शनमात्रेण देवी प्रच्युतनीविका ।
तमेवानुययौ राधा सरसं हंसगामिनी ॥१३॥

उपेक्ष्य बान्धवान् सर्वान् त्यक्त्वा लोकभयञ्च सा ।
आकृष्टा प्रेमभावेन तमेवानुजगाम ह ॥१४॥

निर्लज्जा निर्भया देवी प्रियसङ्गमकाङ्क्षिणी ।
तमेवानुजगामैषा वीथ्यां गच्छन्तमच्युतम् ॥१५॥

कृष्णश्चकार सङ्केतं राधां प्रति पुनः पुनः ।
तस्मादेव हि सा देवी प्रेम्णा तमनुगच्छति ॥१६॥

*9-16. குழலோசையைக் கேட்டதும் வீட்டுவேலை செய்து கொண்டிருந்த ராதை வாசலில் ஓடிவந்து பார்த்தாள். வீதியில் செல்லும் கண்ணன் கடைக்கண்ணால் ராதையைப் பார்த்தான். வெகுநாட்களுக்குப் பிறகு கண்ணனின் முகத்தைக் கண்ட ராதை பரமானந்தமடைந்தாள். உடனே வீட்டுவேலையும் குல தர்மத்தையும் மறந்து வெளியே வந்துவிட்டாள். அன்னநடையுடைய ராதை பந்துக்களை அலக்ஷியம் செய்து பயமில்லாமல் ப்ரேமையுடன் கண்ணனையே பின்தொடர்ந்தாள். அச்சுதனுடன் சேரும் ஆசையினால் வெட்கத்தைவிட்டு வீதியில் நடந்தாள். கண்ணனும் தன் பின்னால் வரும்படி ஜாடை செய்து அழைத்தான்.*

बालका बालिकाश्चैवमाकर्ण्य मुरलीरवम् ।
एवञ्च गोपवृद्धास्तमनुजग्मुर्विमोहिताः ॥१७॥

गावश्च वत्ससंयुक्ता वृषभाश्च पतत्त्रिणः ।
अन्ये च पशवः कृष्णमनुजग्मुर्वशीकृताः ॥१८॥

अत्यद्भुतमिदं सर्वं नन्दनन्दनचेष्टितम् ।
विलोक्य बान्धवास्तस्थू राधया विस्मयान्विताः ॥१९॥

तेषां मनांसि भगवानपहृत्यैव लीलया ।
प्रयाति वीथ्यां सरसं राधया श्रीवनं प्रति ॥२०॥

*17-20. குழலோசையைக் கேட்டு மயங்கி சிறுவர்களும் சிறுமிகளும், முதியவர்களும் கண்ணனைச் சூழ்ந்து கொண்டனர். பசுக்களும் கன்றுகளும் பக்ஷிகளும்கூட கண்ணனோடு சென்றன. இது மிகவும் அற்புதமாக இருந்தது. ராதையின் பந்துக்களும் ஆச்சர்யமடைந்தனர். அவர்களின் உள்ளத்தையும் கண்ணன் கவர்ந்தான்.*

अनुगच्छति गोविन्दं करिणी करिणं यथा ।
निर्लज्जा निर्भया राधा तत्कटाक्षविमोहिता ॥२१॥

मन्त्रमुग्धेव सा देवी कृष्णमेवानुगच्छति ।
कटाक्षमोहनास्त्रेण मोहिता वनमालिनः ॥२२॥

आकर्ण्य मुरलीनादमानन्दरसमोहिता ।
अनुधावति गोविन्दं समुद्रं ह्रदिनी यथा ॥२३॥

उपेक्षितकुलाचारामचिन्तितजगद्भयाम् ।
कामोद्वेगातिरभसामानन्दाश्रुविलोचनाम् ॥२४॥

विभिन्नमेखलां देवीं नानाभूषणभूषिताम् ।
मुहुर्मुहुर्निःश्वसन्तीं पश्यन्तीं हरिमेव च ॥२५॥

करेणैव दधानाञ्च नीवीबन्धं स्वयं च्युतम् ।
नवीनरत्नमालाढ्यां निबिडस्तनमण्डलाम् ॥२६॥

मन्दस्मितमुखाम्भोजां मदालसविलोचनाम् ।
अपाङ्गेनैव विध्यन्तीं प्राणकान्तं मुहुर्मुहुः ॥२७॥

तस्मिन् गच्छति गच्छन्तीं तिष्ठन्तीमपि तिष्ठति ।
तस्मिन् पश्यति पश्यन्तीं हृष्यन्तीमपि हृष्यति ॥२८॥

एवं कृष्णेन गच्छन्तीं निर्भयामात्मनः सुताम् ।
समाजुहाव जननी लोकनिन्दाभयाकुला ॥२९॥

बलादानीय दौहित्रीं गच्छन्तीं हरिणा वनम् ।
मुखरा तर्जयामास कुलधर्मं जगाद च ॥३०॥

स्वच्छन्दगमनं तस्याः कृष्णेन वनमालिना ।
पश्यन्तो बान्धवाः सर्वे परिहासञ्च चक्रिरे ॥३१॥

*21-31. கண்ணனின் கடைக்கண் பார்வையில் மயங்கிய ராதை அச்சமும் நாணமுமின்றி ஆண்யானையுடன் பெண்யானை போல் நடந்தாள், மந்திரத்தினால் மயக்கப்பட்டவள் போல் கண்ணனின் கடாக்ஷமாகிய மோஹனாஸ்திரத்தினால் மோஹித்த ராதை அவனையே பின்தொடர்ந்தாள். வேணுகானத்தை கேட்டு மயங்கிய ராதை கடலை நோக்கி நதியானது ஓடுவதைப்போல் கண்ணனை நோக்கி ஓடினாள். குலதர்மத்தை லக்ஷியம் செய்யாதவளும், உலகம் என்ன சொல்லுமோ என்கிற பயமில்லாதவளும், கண்ணனைப்பார்த்து*

பெருமூச்சுவிடுபவளும், கலைந்துபோன ஆடையாபரணங்களை கையால் சரிசெய்துகொள்பவளும், அலைகின்ற விழிகளால் கண்ணனை அடிப்பவளும், அவன் சென்றால் செல்பவளும், நின்றால் நிற்பவளும், பார்த்தால் பார்ப்பவளும், சிரித்தால் சிரிப்பவளும் இவ்வாறு கண்ணனுடன் செல்பவளுமான தன் மகளைக் கண்டு கலாவதி கவலைப்பட்டு வீட்டிற்கு அழைத்துச் சென்றாள். முகராவோ ராதையை அதட்டி ஹிதோபதேசம் செய்தாள். பந்துக்கள் யாவரும் பரிஹாஸம் செய்தனர்.

इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये देवीकाण्डे अष्टादशोऽध्यायः ॥१८॥

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமி மஹாப்ரபுஅருளிய ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில் தேவீகாண்டத்தில் பதினெட்டாவது அத்யாயம் முற்றும்.**

# अथैकोनविंशोऽध्यायः

## பத்தொன்பதாவது அத்யாயம்

### श्रीसद्गुरुरुवाच

कटाक्षमोहनास्त्रेण जगन्मोहनकारिणः ।
आकुलां स्वसुतां दृष्ट्वा प्रललाप कलावती ॥१॥

### ஸ்ரீஸத்குரு

1. ஜகன்மோஹன க்ருஷ்ணனின் கடைக்கண் பார்வையில் மயங்கியிருக்கும் தன் பெண்ணைக் கண்டு கலாவதி புலம்ப ஆரம்பித்தாள்.

### कलावत्युवाच

जनित्वा भानुवंशेऽपि सच्चरित्रे सुनिर्मले ।
स्वच्छन्दवृत्तिरेषा तु राधिकापि ममात्मजा ॥२॥

कलङ्कञ्च करोत्येषा निर्मलस्य कुलस्य नः ।

वदामि हृदयेनैव न भयार्थं न लीलया ।
नूनं मे मरणं सिद्धं तं विना श्यामसुन्दरम् ॥१७॥

ஸ்ரீராதை

*13-17. அம்மா! என்னை நினைத்து வீணாய் துயரப்படாதே. கண்ணனின்பிரிவால் நான் கஷ்டப்படுகிறேன். மனதிற்கினிய கண்ணுக்கினிய புருஷோத்தமனுமான கண்ணனைக் கண்டபிறகும் எவள்தான் வேறு புருஷனை விரும்புவாள்? பந்துக்கள் பழிப்பார்கள் என்கிற பயம் எனக்கில்லை. இப்பொழுதே கண்ணனுடன் செல்ல விரும்புகிறேன். நான் உயிரோடு இருக்கவேண்டுமென்று ஆசையிருந்தால் இப்பொழுதே தோழிகளுடன் என்னை அனுப்பு. உனக்கு வணக்கம். விளையாட்டிற்குச் சொல்லவில்லை. உன்னை பயமுறுத்தவும் சொல்லவில்லை. உண்மையாகவே சொல்கிறேன். கண்ணனை விட்டுப்பிரிந்தால் எனக்கு மரணம் நிச்சயம்.*

वृथा निन्दसि मामम्ब वृद्धा त्वं धर्मचारिणी ।
नैव जानासि कृष्णस्य सौन्दर्यं चित्तमोहनम् ॥१८॥

पश्य मे हृदयेनैव विरहं वनमालिनः ।
तदा जानासि मे दुःखं स्वानुभूत्या कलावति ॥१९॥

कृष्णमेवानुगच्छन्तीं किं करिष्यति मां पिता ।
न भयं न हि मे लज्जा गन्तुमिच्छामि तत्पदम् ॥२०॥

सत्यं सत्यं पुनः सत्यं स्वधर्मेणैव ते शपे ।
द्रक्ष्यसि त्वमिमां कन्यां रममाणां मुरारिणा ॥२१॥

*18-21. அம்மா! என்னை வீணாய் பழிக்கிறாய். உனக்கு வயதாகிவிட்டது. கண்ணனின் அழகை நீ அறியாய். என் உள்ளத்தால் நீ பார். அப்பொழுதுதான் என் அனுபவம் உனக்கு புரியும். எனக்கு அச்சமுமில்லை. நாணமுமில்லை. கண்ணனின் பின்னே செல்வேன். தந்தை என்னை என்ன செய்ய*

முடியும்? ஸத்தியமாய்ச் சொல்கிறேன். கண்ணனுடன் நான் சுகமாயிருக்கப்போவதை நீ ஒருநாள் காணப்போகிறாய்.

**श्रीसद्गुरुरुवाच**

एवं निश्चितसङ्कल्पां गन्तुं गोविन्दसन्निधिम् ।
विलोक्य स्वसुतां देवी दीना चुक्रोश सुस्वरम् ॥२२॥

सान्त्वयामास तां देवीं ललिता मृदुभाषिणी ।
प्रेमभावं वदन्त्येव गान्धर्वागिरिधारिणोः ॥२३॥

**ஸ்ரீஸத்குரு**

*22-23.* கண்ணனிடம் செல்லவே தீர்மானித்துவிட்ட தன் மகளைக்கண்டு கலாவதி செய்வதறியாமல் அழுதாள். கண்ணனுக்கும் ராதைக்கும் உள்ள காதலையறிந்த லலிதா கலாவதியை ஸமாதானம் செய்தாள்.

**ललितोवाच**

किं रोदिषि वृथा मातः सुतामुद्दिश्य राधिकाम् ।
सुतायास्तव बालायाः कामतापः सुदुःसहः ॥२४॥

रोद्धुमेनां न शक्नोषि भिन्नसेतुं यथा नदीम् ।
निर्भयां स्वकुलाचारे निर्लज्जां लोकनिन्दने ॥२५॥

मरणं प्राप्नुयान्नूनमन्यस्य परिकीर्तनात् ।
यैषा कृष्णस्य पदयोः प्रेमभक्तिमवाप सा ॥२६॥

इदमेवोचितं मन्ये न भेदेन वदाम्यहम् ।
इमां समर्पयेत् क्षिप्रं कृष्णायैव महात्मने ॥२७॥

अलौकिकमिदं प्रेम सुतायास्तव माधवे ।
वदामि फलमेतस्य रमणं मरणञ्च वा ॥२८॥

यावन्न मरणं देवी प्राप्नुयाद्विरहेण सा ।
तावद्गच्छतु कृष्णस्य समीपं सुखवर्धनम् ॥२९॥

यदा मन्दारवृक्षस्य मूले मदनमोहनम् ।
अपश्यदेषा दैवेन तदाप्रभृति रोदिति ॥३०॥

शमनं कुरु दुःखस्य राधिकाया मनस्विनि ।
अद्यैव यमुनातीरं गच्छत्वेषा सखी मम ॥३१॥

லலிதா

*24-31.* அம்மா! வீணாய் அழாதே. ராதையின் தாபம் தாளமுடியாதது. உலகம் பழிக்குமே என்று வெட்கமில்லை. அணையை உடைத்துக்கொண்டு ஆறு செல்வதுபோல் கண்ணனிடமே போவாள். இவளை அடக்கமுடியாது. கண்ணனின் திருவடிகளில் ப்ரேமை கொண்டிருக்கும் இவள் வேறு புருஷனைப் பற்றிய பேச்செடுத்தாலே மரணமடைவாள். எனவே இவளை கண்ணனுக்குக் கொடுப்பதே உசிதம். இவள் காதல் தெய்வீகமானது. இதன் பலன் கண்ணனை அடைவது. இல்லாவிடில் உயிரை விடுவது. இவள் உயிர் துறக்காமல் இங்கு க்ருஷ்ணவிரஹத்தினால் துடிக்காமல் க்ருஷ்ணசரணத்தையே அடைந்து சுகமாயிருக்கட்டும். மந்தார மரத்தடியில் இவள் கண்ணனைக் கண்டதுமுதல் இப்படித்தான் அழுகிறாள். இவள் அழுகைக்கு ஒரு முற்றுப்புள்ளி வையுங்கள். இப்பொழுதே இவள் ப்ருந்தாவனம் செல்லட்டும்.

श्रीसद्गुरुरुवाच

आकर्ण्य ललितावाक्यं बाष्पपूरितलोचना ।
कर्तव्यं किमिति ध्यात्वा किञ्चिन्नोवाच विस्मिता ॥३२॥

इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये देवीकाण्डे एकोनविंशोऽध्यायः ॥१९॥

ஸ்ரீஸத்குரு

32. லலிதாவின் மொழியைக்கேட்ட கலாவதி கண்ணீர் வடித்து செய்வதறியாமல் ஆச்சர்யப்பட்டு நின்றுகொண்டிருந்தாள்.

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிமஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில் தேவீகாண்டத்தில் பத்தொன்பதாவது அத்யாயம் முற்றும்.**

# अथ विंशोऽध्यायः

# இருபதாவது அத்யாயம்

*श्रीसद्गुरुरुवाच*

बृन्दावनमभूद्रम्यं चन्द्रज्योतिर्विराजितम् ।
नानापुष्पसमाकीर्णं नानासौरभसंयुतम् ॥१॥

प्रदर्शयन्ति पुष्पाणि प्रफुल्लानि वने लताः ।
विलोक्य राधिकानाथं हसन्त्यो गोपिका यथा ॥२॥

पुष्पेभ्यो मधुपा मन्दमादाय मधुरं मधु ।
झङ्कारमपि कुर्वन्तस्तत्र तत्र भ्रमन्ति च ॥३॥

झङ्कारश्रुतिसंयुक्ताः कोकिलाः पञ्चमस्वराः ।
वृक्षाग्रेषु वसन्तश्च कूजन्ति मधुरं वने ॥४॥

पिकानां गानमाकर्ण्य समुत्पन्नकुतूहलाः ।
नृत्यन्ति केकिनस्तत्र चारुबर्हविभूषिताः ॥५॥

मयूरपिकभृङ्गानां गान्धर्वं चित्तरञ्जनम् ।
श्रुत्वा लतागृहाग्रेषु वदन्ति सरसं शुकाः ॥६॥

## ஸ்ரீஸத்குரு

1-6. நிலவுவெளிச்சத்தில் ப்ருந்தாவனம் மிகவும் ரம்யமாக இருந்தது. பலவிதமான புஷ்பங்கள் பலவிதமான மணம் வீசிக் கொண்டிருந்தன. புஷ்பங்களிலிருந்து தேன் உண்டு களிக்கும் வண்டுகள் ஜங்காரம் செய்தன. வண்டுகளின் ஜங்காரத்தையே ச்ருதியாக வைத்துக்கொண்டு குயில்கள் பாடின. குயில்களின் பாட்டுக்கேற்றபடி மயில்கள்தோகை விரித்து ஆடின. பார்ப்பவர் உள்ளம்கவரும் கானமும் நடனமும் செய்யும் மயில் குயில் வண்டுஇவைகளின் கலாசாதுர்யத்தை கிளிகள் ரஸித்துப் பேசின.

एवं वसन्तकालेन रम्ये श्रीयमुनावने ।
चचार रसिकेन्द्रश्च राधासङ्गमकाङ्क्षया ॥७॥

बर्हापीडाभिरामश्च चलन्मकरकुण्डलः ।
गजमौक्तिकनासाग्रः कस्तूरीतिलकाञ्चितः ॥८॥

मृदुहासमुखाम्भोजो जगन्मोहनवीक्षणः ।
पक्वबिम्बाधरः श्रीमान् सुकपोलः सुनासिकः ॥९॥

कम्बुकण्ठो महाबाहुः पीनवक्षःस्थलो हरिः ।
हरिचन्दनलिप्ताङ्गो वैजयन्तीलताधरः ॥१०॥

कनकाङ्गदधारी च रत्नकङ्कणशोभितः ।
कनकाम्बरधारी च कण्ठशोभितकौस्तुभः ॥११॥

काञ्चीकलापपर्यस्तः कटिसूत्रविराजितः ।
गजसिंहगतिर्धीरः क्वणत्कनकनूपुरः ॥१२॥

विनिवेश्याधरे वंशीं वादयंश्च मुहुर्मुहुः ।
चचार यमुनातीरे भगवान् श्यामसुन्दरः ॥१३॥

7-11. இவ்வாறு வஸந்தகாலத்தில் ரம்யமான ப்ருந்தாவனத்தில் ரஸிகத்தன்லவனான க்ருஷ்ணன் ராதையை சந்திக்க விரும்பி சஞ்சரித்துக் கொண்டிருந்தான். மயிலிறகு பதித்த மகுடம் அணிந்தவனும், மகர குண்டலம் அணிந்தவனும், கஸ்தூரிதிலகம் அணிந்தவனும், முகத்தில் குறுநகையும் உலகை மயக்கும் கடைக்கண் பார்வை உடையவனும், கொவ்வைப் பழம்போன்ற உதடுடையவனும், விசாலமான மார்பில் வைஜயந்திமாலை தரிப்பவனும், பீதாம்பரதாரியும், கழுத்தில் கௌஸ்துபமும் கைகளில் ரத்னகங்கணமும் இடுப்பில் தங்கஅரைஞாண் தரித்தவனும், கால்களில் சலங்கை கொஞ்ச யானைபோல் கம்பீரமாய் நடப்பவனுமான கண்ணன் குழலூதிக்கொண்டே ப்ருந்தாவனத்தில் சஞ்சரித்தான்.

वसन्तरागसंयुक्तं राधानामानुकीर्तनम् ।
निर्गत्य वंशीरन्ध्रेभ्यो मोहयामास वै जगत् ॥१४॥

धन्येयं मुरली नूनं मधुरस्वनसंयुता ।
आस्वादयति या नित्यं गोविन्दस्याधरामृतम् ॥१५॥

तिष्ठन्त्युन्नतकर्णाश्च हरिणा हरिणीयुताः ।
कृष्णमेवाभिपश्यन्तो लिखिता हरिणा इव ॥१६॥

न पिबन्ति पयो वत्साः स्तनन्यस्तमुखा अपि ।
स्तब्धास्तिष्ठन्ति तत्रैव कृष्णगानवशीकृताः ॥१७॥

तृणलग्नाननास्तत्र गावस्तिष्ठन्ति मोहिताः ।
आकर्ण्य मुरलीनादं परमानन्दसंयुताः ॥१८॥

नृत्यन्ति बर्हिणस्तत्र कृष्णदर्शनकौतुकात् ।
विकचय्य शिखण्डञ्च वासुदेवस्य सन्निधौ ॥१९॥

अन्ये विसृज्य वृक्षाग्रं पक्षिणः प्रेमसंयुताः ।
संप्राप्य सन्निधिं शौरेः शृण्वन्ति मुरलीरवम् ॥२०॥

*14-20.* கண்ணனின் குழலிலிருந்து கிளம்பிய வஸந்தராகத்தில் ராதாநாமம் உலகையே மயங்கச் செய்தது. கண்ணனின் உதட்டில் ஸம்பந்தப்பட்டு இனிமையாய்ப் பாடும் குழல் மிகவும் பாக்யம் செய்தது. மான்கள் மேய்கை மறந்து காதுகளைத் தூக்கி கண்ணனின் வேணுகானத்தைப் பருகியவாறு எழுதிய சித்திரம்போல் நின்றன. மாடு கன்றுகள் கானத்தில் மயங்கி கவ்விய புல்லுடன் தன்னைமறந்து நின்றன. மயில்கள் கண்ணனைக் கண்டு குதூகலித்து. தோகை விரித்து ஆடின. பறவைகள் கூடு துறந்து கண்ணனிடம் வந்து வேணுகானம் கேட்கின்றன.

नद्यश्च देवदेवस्य श्रुत्वा वेणुरवं तदा ।
न चलन्ति न गच्छन्ति स्तब्धकल्लोलपूरिताः ॥२१॥

एवं गोकुलनार्यश्च वेणुगानवशीकृताः ।
आजग्मुर्नन्दसूनुं तमभिवञ्चितबान्धवाः ॥२२॥

विमुग्धाः सुरसुन्दर्यश्च्युतवस्त्रविभूषणाः ।
पतीन् विस्मृत्य तिष्ठन्ति व्योम्नि ताराविभूषिते ॥२३॥

अन्याः पुलिन्दकन्याश्च वनचर्यो विमोहिताः ।
विस्मयोत्फुल्लनयनाः पश्यन्ति नटनागरम् ॥२४॥

प्रवर्षन्ति च पुष्पाणि वृक्षाश्च पुलकाङ्किताः ।
तेषां शाखासु लम्बन्ते लतिकाः पुष्पिता वने ॥२५॥

*21-25.* கண்ணனின் வேணுகானத்தைக்கேட்டு ஆறுகள் ஓட்டமின்றி தேங்கி நின்றுவிட்டன. கோபிகைகளும் வேணுகானத்தில் மயங்கி தங்கள் பந்துக்களை விட்டு விட்டு கண்ணனிடம் வந்து விட்டனர். தேவதாஸ்த்ரீகள் கண்ணனைக்

கண்டு மயங்கி ஆகாயத்தில் நிற்கின்றனர். வேடுவப்பெண்கள் நாகரீகம் மிகுந்த கண்ணனைக்கண்டு ஆச்சரியமடைந்து நிற்கின்றனர். மரங்கள் குழலோசையைக் கேட்டு மேனி சிலிர்க்கின்றன. மரங்களில் தொங்கும் பூங்கொடிகள் கண்ணன்மேல் மலர்மாரிப் பொழிகின்றன.

नीलोत्पलानि वापीषु सुन्दरैः कुमुदैः सह ।
विकसन्ति शशाङ्कस्य कलया रञ्जितानि च ॥२६॥

शाद्वलेषु च रम्येषु हरितेषु क्वचित् क्वचित् ।
पाण्डुराः शशवत्साश्च सञ्चरन्ति पुनः पुनः ॥२७॥

पुष्पपल्लवयुक्तेषु चूताग्रेष्वपि शारिकाः ।
कूजन्ति मधुरं तत्र कालिन्दीकूलकानने ॥२८॥

पुलिनेषु च रम्येषु चन्द्रिकाराजितेष्वपि ।
आसीनाः पथिकास्तत्र कुर्वन्ति प्रियभाषणम् ॥२९॥

केतकीगन्धसंयुक्तः सेवते मलयानिलः ।
आदाय मुरलीगानं राधिकायै ददाति च ॥३०॥

एवमत्यद्भुतं दिव्यं मनोवाचामगोचरम् ।
राजते यमुनारण्यं वसन्तसमयोज्ज्वलम् ॥३१॥

26-31. ஓடைகளில் சந்திரனைக் கண்ட குமுதமும் நீலோத்பலமும் மலர்ந்தன. பசும்புல்வெளிகளில் வெள்ளை முயல்குட்டிகள் விளையாடுகின்றன. பூத்துக் குலுங்கும் மாமரங்களில் குருவிகள் கூவுகின்றன. நல்ல நிலவில் மணல்வெளியில் உட்கார்ந்து வழிப்போக்கர்கள் பேசிக்கொண்டிருக்கின்றனர். தாழம்பூவின் நறுமணத்துடன் வரும் மலயமாருதம், முரளீகானத்தை ராதையினிடம் கொண்டு சேர்க்கிறது. இவ்வாறு வசந்தகாலத்தில் ப்ருந்தாவனம்

மனதிற்கும், வாக்கிற்கும் எட்டாத அதிசயமான எழிலுடன் ப்ரகாசிக்கிறது.

इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये देवीकाण्डे विंशोऽध्यायः॥२०॥

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிமஹாப்ரபு அருளிய ப்ருந்தாவன மாஹாத்மியத்தில் தேவீகாண்டத்தில் இருபதாவது அத்யாயம் முற்றும்.**

# अथैकविंशोऽध्यायः

## இருபத்தோராவது அத்யாயம்.

### श्रीसद्गुरुरुवाच

आकर्ण्य मुरलीनादं सर्वप्राणिविमोहनम् ।
प्रललाप भृशं देवी विरहाकुलमानसा ॥१॥

ஸ்ரீஸத்குரு

1. யாவரையும் மயக்கும் வேணு கானத்தைக் கேட்டு ராதை க்ருஷ்ண விரஹத்தினால் கலங்கியவளாய் புலம்பினாள்.

### श्रीराधोवाच

शृणु त्वं ललिते शीघ्रं विशाखे त्वं शृणु प्रिये ।
निशेयं गच्छति व्यर्थं विना श्रीकृष्णसङ्गमम् ॥२॥

निर्घृणो ऋतुराजोऽयं मन्मथेन समन्वितः ।
अनाथामबलां बालां मां पीडयति सुन्दरि ॥३॥

समाधातुं न शक्नोमि मनो मन्मथपीडितम् ।
अद्यैव प्राप्तुमिच्छामि नवमन्मथसङ्गमम् ॥४॥

न चेन्नूनं पञ्चबाणो मम प्राणान् हरिष्यति ।
अतःपरं वृथा शोकं जननी मे करिष्यति ॥५॥

त्वामेव प्रलपन्ती सा त्वद्वियोगसमाकुला ।
पञ्चत्वं प्राप राधेति वक्ष्यति त्वं प्रियाय मे ॥६॥

तावत्प्रापय मां शीघ्रं नन्दनन्दनसन्निधिम् ।
किं वृथा कुलधर्मेण लोकनिन्दाभयेन च ॥७॥

**ஸ்ரீராதை**

*2-7. லலிதே! விசாகே! நீங்கள் இருவரும் என் அன்பான தோழிகள், என் நிலைமையைச் சொல்கிறேன் கேளுங்கள். கண்ணனுடன் சேராமல் இந்த இரவு வீணாய்ப் போகிறது. வஸந்தனும் மன்மதனும் அபலையான என்னை வீணாய்த் தாக்குகின்றனர். என் மனதை அடக்கமுடியவில்லை. இப்பொழுதே கண்ணனுடன் சேர விரும்புகிறேன். அப்படி சேராவிட்டால் என் உயிர் போய்விடும். பிறகு எனது அன்னை மிகவும் துக்கத்தை அடையப்போகிறாள். கண்ணனிடம் போய். உன் பிரிவினால் ராதை இறந்துவிட்டாள் என்று சொல்லும்படி உனக்கும் நேரிடும். அதற்குள் என்னைக் கண்ணனிடம் கொண்டு சேர்த்துவிடு. குலதர்மத்தையோ உலக நிந்தையையோ நினைத்து பயப்படாதே.*

लोकानां विदितं ह्येतन्मम प्रेम निरङ्कुशम् ।
निन्दन्तु बान्धवाः सर्वे न किञ्चित्तत्र मे भयम् ॥८॥

यत्किञ्चित्प्रियमद्यैव यदि मे कर्तुमिच्छसि ।
सखि प्रापय मां शीघ्रं श्यामसुन्दरसन्निधिम् ॥९॥

न चेत्कलेबरादस्मान्मम प्राणो गमिष्यति ।
स्वयमेव मुकुन्दस्य समीपं चरणाब्जयोः ॥१०॥

आवयोः सङ्गमं कृत्वा निभृते तु लतागृहे ।
सानन्दं ललिते त्वञ्च कृतकृत्या भविष्यसि ॥११॥

8-12. நான் அடங்காதவள் என்று உலகம் அறிந்து விட்டது. இனி எனக்கு பயமில்லை. பந்துக்கள் பழிக்கட்டும். எனக்கு ஏதாகிலும் ப்ரியமானதை செய்ய விரும்புவாயானால் என்னைச் சீக்கிரமாக கண்ணனிடம் கொண்டுவிடு. இல்லாவிடில் என் உயிர் தானே பிரிந்து க்ருஷ்ணசரணத்தை அடைந்துவிடும். லலிதே! ரஹசியமான நிகுஞ்ஜத்தில் எங்களிருவரையும் சேர்த்துப் பார்ப்பாயானால் அதைவிட உனக்குத்தான் ஆனந்தம் வேறு என்ன இருக்கிறது! நீ செய்யவேண்டியதை செய்தவளாகிவிடுவாய்.

**श्रीसद्गुरुरुवाच**

एवं विरहतापेन प्रलपन्त्यां निशान्तरे ।
अभिसारयितुं देवीं ललिता प्राप निश्चयम् ॥१२॥

अलञ्चकार सा देवीं ललिता प्रेमपूर्वकम् ।
दिव्यसौरभसंयुक्तैर्विविधैरनुलेपनैः ॥१३॥

भूषणानि विचित्राणि धारयामास सादरम् ।
स्मारयन्ती मुकुन्दस्य सङ्गसौख्यं पुनः पुनः ॥१४॥

बान्धवेषु प्रसुप्तेषु निर्गत्य भवनाद्बहिः ।
तत्र तत्र निलीना सा प्रतस्थे यमुनावनम् ॥१५॥

गच्छति त्वरया देवी प्रियसङ्गमसंभ्रमात् ।
ललिता सान्त्वयामास मन्दं गच्छेति राधिकाम् ॥१६॥

वृक्षे वृक्षे निगूढा सा सखीदर्शितपद्धतिः ।
पथिकान् वञ्चयन्ती सा जगाम यमुनावनम् ॥१७॥

**ஸ்ரீஸத்குரு**

12-17. இவ்வாறு நள்ளிரவில் ராதை க்ருஷ்ணவிரஹத்தினால்

புலம்பினாள். லலிதாவும் அவளைக் கண்ணனிடம் கொண்டு விட நிச்சயித்து விட்டாள் ராதைக்கு அலங்காரம் செய்தாள். பூஷணங்களைப் பூட்டிவிட்டாள். அங்கராகங்களைப் பூசி விட்டாள். கண்ணனிடம் சேரும் சுகத்தை அடிக்கடி நினைவு மூட்டினாள். பந்துக்கள் தூங்கியதும் ரஹஸியமாக ப்ருந்தாவனம் நோக்கி ராதை புறப்பட்டாள். லலிதையும் கூடச் சென்றாள். ஆங்காங்கே மரங்களில் ஒளிந்து ஒளிந்து யாருமறியாமல் ப்ருந்தாவனம் வந்துவிட்டாள்.

मल्लिकामाधवीजातीमालतीपुष्पसङ्गमात् ।
वाति सौरभसंयुक्तो मधुरं मलयानिलः ॥१८॥

रञ्जयन् यमुनातीरं किरणैः शीतलैर्विधुः ।
देवीमानन्दयामास प्रियसङ्गमकाङ्क्षिणीम् ॥१९॥

कूजन्तः कोकिलास्तत्र चक्रुः स्वागतसत्क्रियाम् ।
तस्या बृन्दावनेश्वर्याः पञ्चमस्वरसंयुताः ॥२०॥

एवं माधवमासस्य माधुर्येणैव रञ्जितम् ।
विलोक्य श्रीवनं देवी बभूव पुलकाञ्चिता ॥२१॥

चचार प्रियया देवी प्रियसङ्गमकाङ्क्षिणी ।
विमले यमुनारण्ये राकाचन्द्रविराजिते ॥२२॥

18-22. ப்ருந்தாவனத்தில் மல்லிகை மாதவி, ஜாதி. மாலதிமுதலிய மலர்களின் நறுமணத்துடன் வீசும் மலயமாருதம் ராதையை வரவேற்றது. சந்திரனும் தனது குளிர்ந்த கிரணத்தினால் ராதையை ஆனந்தப்படுத்தினான். குயில்கள் நல்வரவு சொல்லிப் பாடின. வசந்தகாலத்தின் வனப்பைக் கண்ட ராதை மேனி சிலிர்த்தாள் தனது தோழியுடன் கண்ணனைத் தேடி காட்டில் அலைந்தாள்.

येन केन प्रकारेण सङ्केतस्थलमागता ।
दृष्ट्वाऽविदूरतः कृष्णं निकुञ्जे लज्जिताऽभवत्॥२३॥

पटाञ्चलं मर्दयन्ती पदाग्रन्यस्तवीक्षणाम् ।
अपाङ्गेनापि पश्यन्तीमात्मानञ्च मुहुर्मुहुः ॥२४॥

लज्जयाऽवाङ्मुखीं देवीं प्रिययापि प्रचोदिताम् ।
प्रविशन्तीं लताकुञ्जं हंसवन्मन्दगामिनीम् ॥२५॥

विलोक्य प्रेमसंयुक्तः समुत्थाय च माधवः ।
पाणिं जग्राह सानन्दं प्रियाया नन्दनन्दनः ॥२६॥

तस्या वदनसौन्दर्यदर्शनानन्दसंभ्रमः ।
आश्लिष्य भगवान् कृष्णः सान्त्वयामास तां प्रियाम्॥२७॥

*23-27. எப்படியோ சிரமப்பட்டு கண்ணன் குறிப்பிட்டிருந்த நிகுஞ்ஜத்திற்கு வந்து விட்டாள். கண்ணனைக் கண்டதும் வெட்கத்துடன் நின்றாள். தனது தாமினியின் தலைப்பை கையால் திருகிக்கொண்டு, கால்விரலால் தரையைக் கீறிக்கொண்டு, தலை குனிந்து நின்ற ராதை, கடைக்கண்ணால் கண்ணனை அடிக்கடி பார்த்தாள். தோழி உள்ளே செல்லும்படி தூண்டினாள். அன்னநடை நடந்து ராதை உள்ளே ப்ரவேசித்தாள். ராதையைக் கண்ட கண்ணன் எழுந்திருந்து அவள் கையைப் பற்றி அணைத்துக்கொண்டு ஸமாதானம் செய்தான்.*

प्रियबाह्वन्तरं प्राप्य राधिका वृषभानुजा ।
वियोगतापं विस्मृत्य प्राप सा परमं सुखम् ॥२८॥

अङ्कमारोप्य तां देवीं मूर्ध्न्युपाघ्राय माधवः ।
अवाप परमानन्दमाश्लिष्यापि पुनः पुनः ॥२९॥

प्रदाय मधुरं क्षीरं ताम्बूलञ्च मनस्विनी ।
ललिता निर्जगामाशु कुतूहलसमन्विता ॥३०॥

तयोः पल्लवपर्यङ्के प्रवृत्ता रतिकेलिका ।
कृपया प्राप्तयोः पृथ्वीं त्यक्त्वा गोलोकमुत्तमम् ॥३१॥

शयानमात्मनो देवी पीनवक्षोजमण्डले ।
तं प्रियं परिरभ्यासीत्परिपूर्णमनोरथा ॥३२॥

*28-32. கண்ணனின் கையணைப்பில் ராதை பட்ட கஷ்டங்களெல்லாம் மறந்தாள். பரமானந்தமடைந்தாள். லலிதாவும் மதுரமான பாலும், தாம்பூலமும் சமர்ப்பித்துவிட்டு குதூஹலத்துடன் வெளியே சென்றாள். கோலோகத்தை விட்டுப்பிரிந்த திவ்யதம்பதிகள் மறுபடியும் இங்கு ஒன்று சேர்ந்தனர். ராதையின் ஆசையெல்லாம் நிறைவேறிற்று.*

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये देवीकाण्डे एकविंशोऽध्यायः॥२१॥*

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிமஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில் தேவீகாண்டத்தில் இருபத்தோராவது அத்யாயம் முற்றும்.**

## अथ द्वाविंशोऽध्यायः

## இருபத்திரெண்டாவது அத்யாயம்.

### *श्रीसद्गुरुरुवाच*

पवित्रे यमुनातीरे निकुञ्जे तु मनोरमे ।
गान्धर्वविधिना देवीमुपयेमे हरिस्तदा ॥१॥

निर्ममे राधिकादेवी सर्वशक्तिमयी तदा ।
बृन्दावनस्य मध्येपि सहस्रस्तम्भमण्टपम् ॥२॥

विचित्रचित्रसंयुक्तैः प्रगल्भैश्च महोन्नतैः ।
दिव्यस्तम्भसहस्रैश्च परिव्याप्तं हिरण्मयैः ॥३॥

नानाशिल्पसमाकीर्णं नानारत्नविराजितम् ।
विमानञ्च विरेजे तत्प्रवालदलसंयुतम् ॥४॥

नवरत्नमयैर्दिव्यैस्तोरणैश्च ध्वजैरपि ।
विचित्रैश्च वितानैश्च श्रीवनं समलङ्कृतम् ॥५॥

क्रमुकैर्नालिकेरैश्च कदलीचूतपल्लवैः ।
नानाविधैश्च प्रसवैः सर्वत्र समलङ्कृतम् ॥६॥

एवं दीपसहस्रेण नानावर्णयुतेन च ।
प्रकाशितं श्रीवनञ्च परमाद्भुतदर्शनम् ॥७॥

ஸ்ரீஸத்குரு

*1-7. தூயயமுனைக்கரையில் மனதிற்கினிய நிகுஞ்ஜத்தில் கண்ணன் ராதாதேவியை காந்தர்வவிதிப்படி மணம் செய்து கொண்டான். பராசக்தியான ராதாதேவி தனது மாயையினால் ப்ருந்தாவனத்தின் நடுவில் ஒரு மண்டபத்தை நிர்மாணம் செய்தாள். அந்த மண்டபம் தங்கத்தினாலான ஆச்சர்யகரமான சிற்பங்களுள்ள ஆயிரம் தூண் உடையதாகவும், பவழம், ரத்னம் இவைகள் பதிக்கப்பட்டதாகவும் விளங்கிற்று. நவரத்னமய மான தோரணங்களாலும், கொடிகளாலும், விதானங்களாலும், வாழை, கமுகு, தென்னை, மாந்தளிர் முதலியவைகளாலும், பலவிதமான பூக்களாலும் ப்ருந்தாவனம் எங்கும் அலங்கரிக்கப்பட்டது. ஆயிரக்கணக்கான தீபவரிசைகள் ஜொலித்தன.*

बृन्दा च यमुना चैवं सख्यश्च ललितादयः ।
सर्वेषामागतानाञ्च चक्रुः स्वागतसत्क्रियाम् ॥८॥

गोलोकादागतास्तत्र दिव्यरूपसमन्विताः ।
सहस्रशः कोटिशश्च गोपा गोप्यश्च धेनवः ॥९॥

ब्रह्मादयः सुराः सर्वे परिवारेण संयुताः ।
सानन्दं द्रष्टुमाजग्मू राधावैवाहिकोत्सवम् ॥१०॥

वादयन्त्यो विचित्राणि वादित्राणि मुहुर्मुहुः ।
ववृषुः पुष्पवर्षाणि सानन्दं देवतास्त्रियः ॥११॥

देवकिन्नरगन्धर्वाः सिद्धविद्याधरास्तथा ।
तत्र तस्थुः समागत्य पुण्यं श्रीयमुनावनम् ॥१२॥

कामधेनुस्तदा तेषां परमानन्दसम्युता ।
अन्नपानादिकं सर्वं वाञ्छितं प्रददाति च ॥१३॥

सर्वे जनाः प्रहृष्टाश्च वस्त्राभरणभूषिताः ।
परस्परं भाषमाणाः परितिष्ठन्ति कानने ॥१४॥

धेनुभिर्वृषभैर्गोपैर्देवगन्धर्वकिन्नरैः ।
देवर्षीणां समाजैश्च संव्याप्तं यमुनावनम् ॥१५॥

8-15. ப்ருந்தா, யமுனா, லலிதாமுதலிய தோழிகள் வந்தவர்களை உபசரித்தனர். கோலோகத்திலிருந்து கோபர்களும், கோபிகளும் வந்திருந்தனர். ப்ரும்மாமுதலிய தேவர்களும் ராதாகல்யாணத்தைப் பார்க்கவேண்டி பரிவாரத்துடன் வந்தனர். தேவதாஸ்த்ரீகள் பலவிதமாய்ப் பாடிக்கொண்டே மலர்மாரிப் பொழிந்தனர். பலவிதமான வாத்யங்களை முழக்கினர். தேவர்கள், கின்னரர்கள், சித்தர்கள், வித்யாதரர்கள் யாவரும் ப்ருந்தாவனத்தில் கூடியிருந்தனர். காமதேனு யாவருக்கும் விரும்பிய அன்னபானங்களைத் தந்தாள். யாவரும்

உயர்ந்த வஸ்த்ரங்களாலும், ஆபரணங்களாலும் அலங்காரம் செய்துகொண்டு கோலாஹலமாய்க் கூடியிருந்தனர்.

नवरत्नमये पीठे मृदुलास्तरणान्विते ।
उपविष्टो नन्दसूनुर्विरेजे राधया सह ॥१६॥

तदा चतुर्मुखो देवः सह सर्वैर्महर्षिभिः ।
पुण्याहं वाचयामास चकाराभ्युदयं तथा ॥१७॥

अग्निं प्रज्वाल्य विधिवद्दिव्यांल्लाजान् प्रकीर्य च ।
विवाहं कारयामास राधिकाकृष्णयोर्विधिः ॥१८॥

कल्याणवेषं गोविन्दं कामितार्थफलप्रदम् ।
जगुः किन्नरगन्धर्वा राधाया सह संस्थितम् ॥१९॥

*16-19.* நவரத்னம் பதித்த பீடத்தில் ம்ருதுவான விரிப்பில் கண்ணன் ராதையுடன் வீற்றிருந்தான். அப்போது ப்ருஹ்மதேவன் முனிவர்களுடன்கூட புண்யாஹவாசனம், நாந்தி முதலியவைகளை நடத்தி, பின்னர் விதிப்படி அக்னியை ப்ரதிஷ்டை செய்து, லாஜ ஹோமம் நடத்தி, ராதைக்கும் கண்ணனுக்கும் விவாஹத்தைச் செய்வித்தார். கல்யாண வேஷத்திலுள்ள ராதாக்ருஷ்ணனை கந்தர்வர்கள் பாடினர்.

रत्नसिह्मासने दिव्ये रमणीयोपधानके ।
मौक्तिकच्छत्रसंयुक्ते मृदुलास्तरणान्विते ॥२०॥

आसीनं सर्वलोकेशं कृष्णं गोलोकनायकम् ।
कोटिमन्मथलावण्यं घनश्यामं कृपानिधिम् ॥२१॥

कुटिलालकसंयुक्तं किरीटाञ्चितशीर्षकम् ।
प्रसन्नपद्मवदनं प्रदीप्तझषकुण्डलम् ॥२२॥

हरिचन्दनलिप्ताङ्गं वनमालाविभूषणम् ।
दिव्यपीताम्बरधरं दीप्तक्षौमोत्तरीयकम् ॥२३॥

हारकङ्कणकेयूरकटिसूत्रविभूषणम् ।
अभयं करपद्मेन दधतं करुणार्णवम् ॥२४॥

वामभागस्थितां देवीं दिव्यसौन्दर्यसंयुताम् ।
आश्लिष्य वामहस्तेन पश्यन्तञ्च मुहुर्मुहुः ॥२५॥

20-25. அழகிய திண்டும், ம்ருதுவான விரிப்பும், முத்துக்குடையும் உள்ள ரத்னமயமான சிங்காசனத்தில் வீற்றிருப்பவனும், கோலோகநாதனும், கோடிமன்மதஸுந்தரனும், மேகச்யாமளனும், கருணாநிதியும், சுருண்ட கேசங்கள் உடையவனும், மலர்ந்த முகமுடையவனும், மகரகுண்டலமும் க்ரீடமும், வனமாலையும் அணிந்தவனும், செஞ்சந்தனம் பூசிக்கொண்டிருப்பவனும், பக்கத்திலுள்ள ராதையை ஒரு கையினால் அணைத்துக் கொண்டிருப்பவனும், மற்றொரு கையால் அபயம் தருபவனுமான கண்ணனைக்கண்டு ஆனந்தம்கொண்டு, தேவஸுந்தரிகள் கீர்த்தனம் பாடி, மங்களஹாரதி எடுத்தனர்.

विलोक्य सुरसुन्दर्यः सञ्जातप्रेमकौतुकाः ।
सङ्कीर्तयन्त्यः सरसं मङ्गलानि प्रचक्रिरे ॥२६॥

यशोदा नन्दगोपश्च वृषभानुः कलावती ।
अन्येपि गोपमुख्याश्च प्रापुः परमकौतुकम् ॥२७॥

एवमत्यद्भुतं दिव्यं कल्पितं कृष्णमायया ।
राधापरिणयं दृष्ट्वा गोपा विस्मयमाययुः ॥२८॥

मेनिरे प्राकृता गोपाः परमाद्भुतदर्शनाः ।

श्रीकृष्णं देवदेवं तमवतीर्णं स्वमायया ॥२९॥

*26-29.* யசோதையும்-நந்தகோபரும், கலாவதியும் - வ்ருஷபானுவும், மற்ற ஆயர்களும் அற்புதமான ராதாகல்யாணத்தைக் கண்டு ஆச்சரியம் கொண்டனர். சாதாரண கோபர்கள் இந்த ஆச்சர்யத்தைக் கண்டு கண்ணனை தேவதேவன் என்று அறிந்துகொண்டனர்.

यः पठेच्छ्रुणुयाद्वापि राधापरिणयोत्सवम् ।
धन्यं यशस्यमायुष्यं सर्वमङ्गलमाप्नुयात् ॥३०॥

राधिकाचरितं पुण्यं रम्यं कर्णामृतं सताम् ।
यः पठेच्छ्रद्धया नित्यं कृष्णभक्तिमवाप्नुयात् ॥३१॥

कृष्णप्रेमरसे प्राप्ते किमन्यदवशिष्यते ।
यस्यानुभूतिमात्रेण कैवल्यञ्च तिरस्कृतम् ॥३२॥

अस्मिंश्छ्रीवनमाहात्म्ये देवीकाण्डमिमं पठन् ।
कुर्याद्भक्तः प्रेमपूर्वं राधापरिणयोत्सवम् ॥३३॥

भोजयेद्वैष्णवान् विप्रान् परमान्नेन भक्तिमान् ।
कृष्णसङ्कीर्तनं कुर्यान्नानावाद्यसमन्वितः ॥३४॥

अलङ्कृत्य प्रियं कृष्णं राधया च समन्वितम् ।
भक्तः कुर्याद् यथाशक्ति देवीपरिणयोत्सवम् ॥३५॥

*30-35.* தனம், புகழ், ஆயுள் யாவையும் தரக்கூடிய ராதாகல்யாண உத்ஸவத்தைக் கேட்பவர்கள் ஸர்வமங்களத்தையும் அடைவார்கள். ஸாதுக்களின் காதுக்கு அமுதமான ராதாதேவியின் புண்யசரிதத்தை படிப்பவர் க்ருஷ்ணபக்தியை அடைவர். க்ருஷ்ணபக்தி உண்டாகிவிட்டால் மேலும் வேறு என்னதான் வேண்டும்? இந்த ப்ருந்தாவனமாஹாத்மியத்தில்

தேவீகாண்டத்தைப் படித்து, ராதாகல்யாண உத்ஸவத்தை சக்திக்கு தக்கபடி செய்யவேண்டும். ராதையையும், க்ருஷ்ணனையும் அலங்கரித்து உத்ஸவம் நடத்தவேண்டும். பலவித வாத்யங்களுடன் க்ருஷ்ணஸங்கீர்த்தனம் செய்து வைஷ்ணவர்களுக்கு அன்னதானம் செய்யவேண்டும்.

इति श्रीमत्परमहंसपरिव्राजकाचार्यवर्यसर्वप्राणिसंरक्षकजगद्गुरु-श्रीभगवन्नामबोधेन्द्रचरणारविन्दमकरन्दरसिकेन श्रीकृष्णप्रेमिमहाप्रभुणा विरचिते श्रीबृन्दावनमाहात्म्ये देवीकाण्डे द्वाविंशोऽध्यायः॥२२॥

இவ்வாறு பரமஹம்ஸபரிவ்ராஜகாசார்யஸர்வப்ராணிஸம்ரக்ஷகஜகத்குரு ஸ்ரீபகவன்னாமபோதேந்த்ரஸரஸ்வதி சரணாரவிந்தங்களை ஆச்ரயித்த ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிமஹாப்ரபுவால் அருளிச்செய்யப்பட்ட ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில் தேவீகாண்டத்தில் இருபத்திரெண்டாவது அத்யாயம் முற்றும்.

॥ इति देवीकाण्डः समाप्तः॥

தேவீகாண்டம் முற்றும்.

॥श्रीभक्तकोलाहलार्पणमस्तु॥

श्रीहरिः

ஸ்ரீஹரி:

श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचितं

# श्रीबृन्दावनमाहात्म्यम्

ஸ்ரீஸ்ரீக்ருஷ்ணப்ரேமி ஸ்வாமிகள் அருளிய

# ஸ்ரீப்ருந்தாவனமாஹாத்ம்யம்

## लीलाकाण्डः

## லீலாகாண்டம்

### अथ प्रथमोऽध्यायः

### முதல் அத்தியாயம்

भागवता ऊचुः

भगवन् करुणासिन्धो सर्वज्ञ गुरुपुङ्गव ।
मधुरं कृष्णचरितं श्रुतमानन्दवर्धनम् ॥१॥

பாகவதர்கள்

1. பகவானே! கருணாஸிந்துவே! ஸர்வக்ஞரே! ஸத்குருநாத! ஆனந்தத்தை வளர்க்கும் மதுரமான க்ருஷ்ணசரித்ரம் கேட்கப்பட்டது.

राधिकाकृष्णयोर्दिव्यं प्रेम शुद्धं सुनिर्मलम् ।
अलौकिकं विवाहञ्च श्रुत्वा धन्याः स्म सद्गुरो॥२॥

2. நிர்மலமானதும், சுத்தமான ராதாக்ருஷ்ணர்களின் ப்ரேமையும், துர்லபமான விவாஹமும் கேட்டு நாங்கள் தன்யர்களானோம்.

धर्मसंस्थापनार्थाय ह्यवतीर्णो हरिः स्वयम् ।
तथापि गोपकन्याभिः स्वच्छन्दं कुरुते रतिम् ॥३॥

3. ஸாக்ஷாத் ஹரி தர்மஸ்தாபனார்த்தம்தானே அவதரித்தார், அப்படியிருந்தாலும் கோபகன்னிகைகளுடன் சுதந்திரமாய் விளையாடுகின்றாரே.ஏன்?

अभिप्रायं वद स्वामिन् कृष्णस्य त्रिजगत्पतेः ।
धर्मसूक्ष्मं किमप्यस्ति चरितेऽस्मिन् ध्रुवं गुरो ॥४॥

4. குருதேவரே! மூவுலகுக்கும் நாதனான கண்ணபிரானின் இந்த லீலையில் என்ன தர்மஸூக்ஷ்மம் இருக்கிறதோ அதைச் சொல்லவேண்டும்.

श्रीसद्गुरुरुवाच

ब्राह्ममार्षं च दैवञ्च पैशाचं राक्षसं तथा ।
प्राजापत्यं च गान्धर्वमासुरं चेति विश्रुतम् ॥५॥

विधानमष्टधा लोके शास्त्रे मन्वादिभिः कृते ।
विवाहेषु महात्मानः शृणुध्वं सर्वसंमतम् ॥६॥

ஸ்ரீஸத்குரு

5.6. மனுமுதலிய பெரியோர்களால் செய்யப்பட்ட தர்மசாஸ்திரங்களில் ப்ராம்ஹம், ஆர்ஷம். தைவம், ப்ராஜாபத்யம், காந்தர்வம், ஆஸுரம், ராக்ஷஸம், பைசாசம், என்று ஸர்வ ஸம்மதமான எட்டு விவாஹங்கள் சொல்லப்படுகின்றன வன்றோ.

क्षत्रियाणां तु गान्धर्वमुत्तमं शास्त्रसंमतम् ।
तस्मात्तेनैव विधिना राधां प्राप हरिः स्वयम् ॥७॥

7. அவைகளுள் க்ஷத்ரியர்களுக்கு காந்தர்வவிதானமே சிறந்தது, எனவே ஹரி அந்த முறையாலேயே ராதையை அடைந்தார்.

## भागवता ऊचुः

भगवान् सर्वधर्माणां रक्षकोऽपि गुरूत्तम ।
ब्रह्मचर्याश्रमं पूर्वमनवाप्य कथं स्वयम् ॥८॥

गान्धर्वविधिना राधामुवाह वद सद्गुरो ।
समाप्तब्रह्मचर्याणामेवोद्वाहविधिः स्मृतः ॥९॥

பாகவதர்கள்

8,9. குருச்ரேஷ்டரே! பகவான் ஸர்வதர்மங்களையும் ரக்ஷிப்பவராயினும், ப்ரம்மசர்யாச்ரமத்தையடையாமலேயே சுயமாகவே காந்தர்வவிதியால் ராதையை எப்படி மணந்தார்? ப்ரம்மசர்யாச்ரமத்துக்குப் பிறகுதானே விவாஹவிதி ஸ்ம்ருதியில் சொல்லப்படுகிறது.

## श्रीसद्गुरुरुवाच

एकादशसमाः कृष्णो गोकुले नन्दनन्दनः ।
उषित्वा द्वादशे वर्षे संप्राप मधुरां पुरीम् ॥१०॥

ஸ்ரீஸத்குரு

10. கோகுலத்தில் பகவான் நந்தகுமாரனான க்ருஷ்ணன் பதினோரு வருஷங்களே வளர்ந்தான். பன்னிரண்டாவது வயதில் மதுரைக்கு வந்துவிட்டான்.

गोपीवस्त्रापहरणं षष्ठे वर्षे कृतं तथा ।
गोवर्धनोद्धारणञ्च कृतं वयसि सप्तमे ॥११॥

11. கோபீவஸ்த்ராபஹரணம் ஆறாவது வயதில் செய்யப்பட்டது. கோவர்த்தனோத்தாரணம் ஏழாவது வயதில் செய்யப்பட்டது.

कृता हि दशमे वर्षे गोपीभी रासकेलिका ।
एवमुक्तं स्फुटं शास्त्रे शुकव्यासपराशरैः ।।१२।।

12. பத்தாவது வயதில் ராஸக்ரீடை செய்யப்பட்டது. இவ்வாறு பராசரர், வ்யாஸர்,சுகர் தங்கள் சாஸ்திரங்களில் நிர்ணயம் செய்து சொல்லியிருக்கின்றனர்

गोपीवस्त्रापहरणं रासलीला च वैष्णवाः ।
सखीनां राधिकायाश्च विवाहः परमाद्भुतः ।।१३।।

सर्वमेतद्भगवतश्चेष्टितं रसवर्धनम् ।
बालक्रीडैव नास्त्यत्र संशयो रसवित्तमाः ।।१४।।

13.14 ரஸிகர்களான ஸாதுக்கஙே! ராதை அஷ்டஸகிகள் இவர்களின் பரம அத்புதமான விவாஹங்களும், ராஸலீலையும், கோபீ வஸ்த்ராபஹரணமும் ரஸவர்தனமான இந்த எல்லா லீலைகளும் கண்ணபிரானின் பாலக்ரீடைகளே, இதில் ஸம்சயமில்லை.

भागवता ऊचुः

एवञ्चेद्राधिकायाश्च गोपीनाञ्च हरेस्तथा ।
किं वर्ण्यते यौवनं च तत्र तत्र स्फुटं गुरो ।।१५।।

श्रीमद्भागवते चापि श्रीशुकेन महात्मना ।
वर्ण्यते यौवनं व्यक्तं गोपीनाञ्च हरेस्तथा ।।१६।।

பாகவதர்கள்

15.16. குரோ! அப்படியானால் கண்ணன், ராதை, கோபிகைகள்

இவர்களின் யௌவனப்பருவமே ஆங்காங்கு வர்ணிக்கப்படுகிறதே! ஸ்ரீமத்பாகவதத்திலும் ஸ்ரீசுகர் தெளிவாகவே க்ண்ணனுடையவும் ராதையினுடையவும் யௌவனத்தை வர்ணித்துள்ளாரே, ஏன் ?

### श्रीसद्गुरुरुवाच

प्रेमभक्तिरसस्यास्य शृङ्गाररस एव हि ।
अङ्गभूतो महात्मानो रसिकानां सुसंमतः ।।१७।।

ஸ்ரீஸத்குரு

17. பெரியோர்களே! பக்திரஸத்திற்கு ச்ருங்காரரஸம் அங்கமாகிறது. இது ரஸிகர்களுக்கு ஸம்மதம்.

रसपुष्ट्यै यौवनं तु वर्ण्यते मधुरं हरेः ।
किन्तु नन्दकुमारोयं बाल एव न संशयः ।।१८।।

18. ரஸபுஷ்டிக்காக மதுரமான கண்ணனின் யௌவனம் வர்ணிக்கப்படுகிறது. ஆனால் கண்ணன் குழந்தையே ஆவான். இதில் ஸம்சயமில்லை.

प्रौढाश्च कन्यकाश्चेति गोपीनां वैष्णवोत्तमाः ।
वर्गद्वयं वर्तते हि कृष्णप्रेमपरायणम् ।।१९।।

19. வைஷ்ணவோத்தமர்களே! மணமானவர்கள், மணமாகாத கன்னிகைகள் என்று இரண்டு வர்கங்கள் கோபிகைகளில் இருக்கின்றனர். இரண்டுவகையினருக்கும் க்ருஷ்ணப்ரேமையே லக்ஷியம்.

तत्र प्रौढा युवतयो रासे कृष्णं भजन्ति ताः ।
केवलं नृत्यमात्रेण तोषयन्ति प्रभुं हरिम् ।।२०।।

20. அவர்களில் ப்ரௌடமான வயது வந்த கோபிகைகள் கண்ணனுடன் ராஸநாட்டியமாடுகின்றனர். நர்த்தனமாத்ரத்தில்

க்ருஷ்ணனை மகிழ்விக்கின்றனர்.

एवमुद्वाहलीला तु हरिणा केलिमूर्तिना ।
क्रियते तत्र कन्याभी राधिकाद्याभिरेव च ।।२१।।

21. லீலாமூர்த்தியான கண்ணனுடன் ராதைமுதலிய கன்னிகைகளுக்குமட்டும் விவாஹலீலை நடைபெறுகிறது.

अन्यद्रहस्यं वक्ष्यामि शृणुध्वं साधुसत्तमाः ।
गोलोकादागताः सर्वे भुवनं व्रजवासिनः ।।२२।।

22. ஸாதுச்ரேஷ்டர்களே! மேலும் ஒரு ரஹஸ்யம் சொல்வேன், கேளுங்கள். எல்லா வ்ரஜவாஸிகளும் கோலோகத்திலிருந்து கண்ணனுடன் வந்தவர்களே.

दिव्यस्वरूपसम्युक्ता दिव्यलीलाविशारदाः ।
लोके प्राकृतवच्चक्रुर्नाटकं छन्नविग्रहाः ।।२३।।

23. இவர்கள் திவ்யமான விக்ரஹம் தரித்து திவ்யமான லீலைகளை உலகில் ப்ராக்ருதமானவர்கள்போல் மறைமுகமாக செய்கின்றனர்.

किन्तु बृन्दावने रम्ये रजन्यां रहसि क्षणात् ।
आविर्भूतस्वरूपेण लीलां चक्रुर्महाद्भुतम् ।।२४।।

24. ஆனால் ரம்யமான ப்ருந்தாவனத்தில் இரவில் இரகசியமாக ஒரு க்ஷணத்தில் ஆவிர்பூதமான ஸ்வரூபத்துடன் இவர்கள் லீலை செய்தனர். இது ஆச்சர்யம்.

सर्वाश्चर्यमये कृष्णे त्वतिमानुषचेष्टिते ।
असंभाव्यं किमत्रास्ति सर्वलोकेश्वरेश्वरे ।।२५।।

25. ஸர்வலோகேச்வரனும், ஆச்சர்யமான சேஷ்டிதங்கள்

உள்ளவனும், மனிதசக்திக்கு மேலான லீலைகளைச் செய்பவனுமான க்ருஷ்ணபரமாத்மாவின் விஷயத்தில் நடக்காதது என்னதான் இருக்கிறது.

अप्राकृते चेष्टिते तु कृष्णस्य परमात्मनः ।
संशयो मन्दभाग्यानां जायते विरसात्मनाम् ।।२६।।

26. க்ருஷ்ணபரமாத்மாவின் லோகாதீதமான லீலைகளில் ரஸிக்கத் தெரியாத விரஸமான மனதுள்ளவர்களுக்குத்தான் ஸம்சயங்களுண்டாகும். இவர்கள் மந்தபாக்யர்கள்.

**भागवता ऊचुः**

क्षमां कुरु महाभाग करुणां कुरु सद्गुरो ।
प्रश्न एष कृतः स्वामिन् विरसोऽस्माभिरेव हि ।।२७।।

பாகவதர்கள்

27. மஹாபாக்யமுள்ளவரே! ஸத்குரோ! கருணை செய்து மன்னித்து விடும். ஸ்வாமி! விரஸமான இந்தக் கேள்விகள் கேட்கப்பட்டது.

अस्माकं तव पादाब्जच्छायामाश्रित्य तिष्ठताम् ।
न हि संशयलेशोपि कुतः सूर्योदये तमः ।।२८।।

28. உங்கள் பாதகமலத்தின் நிழலில் அண்டியிருக்கும் எங்களுக்கு ஸம்சயம் அல்பமும் இல்லை. ஸூர்யோதயமானதும் இருள் ஏது?

तथापि लौकिकानेवं वैदिकान् संशयान्वितान् ।
समाधातुं कृतः प्रश्नः केवलं नान्यथा प्रभो ।।२९।।

29. ப்ரபோ! ஆயினும் லௌகீகர்களையும் வைதீகர்களையும் ஸமாதானம் செய்யவேண்டி இந்தக் கேள்வி கேட்டோம். வேறொன்றுமில்லை.

श्रीसद्गुरुरुवाच

अलं ह्यतिविवादेन शृणुध्वं कृष्णकेलिकाः ।
लोकवेदपराणां हि कृष्णलीलां सुखप्रदाम् ।।३०।।

ஸ்ரீஸத்குரு

30. அதிகப்பேச்சு போதும், இனி க்ருஷ்ணலீலைகளைக் கேளுங்கள். லோகவேதங்களை மறந்தவர்களையே க்ருஷ்ணலீலை ஸுகப்படுத்தும்.

लौकिकानां वैदिकानां न कदापि वदेत्कथाम् ।
नार्हन्ति श्रोतुमप्येते राधानाम रसावहम् ।।३१।।

31. லௌகீகர்களுக்கும், வைதீகர்களுக்கும் ஒருக்காலும் இந்தக் கதைகளை சொல்லக்கூடாது. இவர்கள் ராதை என்ற பெயரைக்கூட கேட்கத் தகுதியற்றவர்கள்.

इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये
लीलाकाण्डे प्रथमोऽध्यायः ।।१।।

இவ்வாறு ஸ்ரீகிருஷ்ணப்ரேமி மஹாப்ரபு அருளிச்செய்த
ஸ்ரீப்ருந்தாவனமாஹாத்மியத்தில் லீலாகாண்டத்தில்
முதல் அத்தியாயம் முற்றும்

## अथ द्वितीयोध्यायः

## இரண்டாவது அத்தியாயம்

भागवता ऊचुः

सखीनां व्रजदेवीनां सदा कृष्णैकचेतसाम् ।
अवतारं वैभवञ्च वद सद्गुरुपुङ्गव ।।१।।

यासां पादरजो नृणां कृष्णप्रेमप्रदायकम् ।
यद्वाञ्छन्ति सुराः सर्वे विद्वांसश्चोद्धवादयः ।।२।।

பாகவதர்கள்

1-2. ஸத்குரோ! எவர்களின் பாததூளி எல்லோருக்கும் க்ருஷ்ணப்ரேமையைத் தரக்கூடியதோ, எந்த பாததூளியை எல்லா தேவர்களும் உத்தவன்முதலிய ஞானிகளும் விரும்புகின்றனரோ, க்ருஷ்ணனிடமே மனதைக்கொடுத்த ராதையின் அத்தகைய தோழிகளான கோபிகைகளின் அவதாரத்தையும், வைபவத்தையும் கூறுங்கள்.

श्रीसद्गुरुरुवाच

गोलोके परमे धाम्नि दिव्ये राधामुकुन्दयोः ।
वसन्ति नित्यकिङ्कर्यो ललिताद्या न संशयः ।।३।।

ஸ்ரீஸத்குரு

3. பரமபதமான திவ்யகோலோகத்தில் ராதா க்ருஷ்ணர்களுடைய நித்யதாஸிகளான லலிதாமுதலியவர்கள் இருக்கின்றனர்.

अप्राकृतं स्वरूपं हि तासां शाश्वतमेव तत् ।
आविर्भूतास्तत्र तत्र व्रजभूम्या स्वयं हि ताः ।।४।।

4. அவர்களின் ஸ்வருபம் ப்ராக்ருதமானதல்ல, நித்யமானது. அவர்கள் தாங்களாகவே வ்ரஜபூமியில் அவதரித்தார்கள்.

अष्टौ सख्यः प्रधाना हि सख्यः सन्ति सहस्रशः ।
कृपया ललितादीनां कृष्णसेवा हि लभ्यते ।।५।।

5. ஆயிரக்கணக்கான ஸகிகள் இருக்கின்றனர். அதில் எட்டு ஸகிகள் ப்ரதானமானவர்கள், லலிதாமுதலியவர்களுடைய

க்ருபையினாலேயே க்ருஷ்ணஸேவை கிடைக்கிறது.

आसीद्व्रजे महाभागो विशोक इति विश्रुतः ।
शारदा तस्य पत्नी च शारदेन्दुनिभानना ।।६।।

6. கோகுலத்தில் மஹாபாக்யவானான விசோகன் என்று புகழ்பெற்ற கோபன் இருந்தான். சரத்காலசந்திரன் போன்ற முகமுடைய சாரதா என்பவள் அவன் மனைவி.

प्रादुर्भूता तयोः कन्या श्रीमती ललिता सखी ।
मासि भाद्रपदे शुक्लषष्ठ्यां मङ्गलविग्रहा ।।७।।

7. அவர்களுக்கு பாத்ரபதமாதத்தில் சுக்லபக்ஷஷஷ்டியில் மங்களருபிணியான ஸ்ரீமதி.லலிதாஸகி கன்னிகையாக அவதரித்தாள்.

कान्त्या गोरोचनागौरी नित्यं षोडशवार्षिकी ।
केकिपिञ्छसमं वस्त्रं दधाना प्रेमरूपिणी ।।८।।

ताम्बूलसेवां सानन्दं निकुञ्जे स्वसखीवृता ।
राधामुकुन्दयोर्नित्यं करोति प्रीतिपूर्वकम् ।।९।।

8,9.கோரோசனைபோன்ற கௌரவர்ணமான காந்தி உடையவளும், ப்ரேமை வடிவானவளும், பதினாறு வயது நிரம்பியவளுமான அவள் மயில்தோகை வண்ணமுடைய வஸ்த்ரம் தரித்தவளாகத் தோழிகளுடன் நிகுஞ்ஜத்தில் ராதாக்ருஷ்ணர்களுக்கு தினமும் ப்ரீதியுடன் தாம்பூலஸேவை செய்கிறாள்.

आसीद्व्रजे महाभागः पावनो गोपपुङ्गवः ।
सुदक्षिणा तस्य भार्या सुगुणा च सुलक्षणा ।।१०।।

10. கோகுலத்தில் பாவனன் என்கிற மஹாபாக்யவானான

கோபன் இருந்தான். நற்குணங்களும், நல்ல லக்ஷணங்களும் பொருந்திய ஸுதக்ஷிணா என்பவள் அவள் மனைவி.

आविरासीत्तयोः कन्या विशाखा नाम विश्रुता ।
राधाष्टमिदिने ह्येव राधाप्राणसमा सखी ।।११।।

11. அவர்களுக்கு கன்னிகையாக ராதாஷ்டமி ஸுதினத்தில் ராதையின் ப்ராணஸகியான விசாகா அவதரித்தாள்.

विद्युद्वर्णा किशोरी सा जगन्मोहनमोहिनी ।
तारावलीसमं वस्त्रं दधाना प्रियभाषिणी ।।१२।।

गन्धलेपनसेवायां नियुक्ता राधया स्वयम् ।
सखीभिः सह सानन्दं सेवते श्यामसुन्दरम् ।।१३।।

12,13. மின்னலைப்போன்ற வண்ணமுடையவளும், ஜகன்மோஹனனையே மயக்குபவளும், ப்ரியமாகப் பேசக் கூடியவளுமான அவள், நக்ஷத்திரக் கூட்டத்திற்கொப்பான காந்தி உடைய வஸ்த்ரம் தரித்தவளாக, ராதையால் ஸுகந்தத்ரவ்ய அனுலேபன கைங்கர்யத்தில் நியமிக்கப்பட்டுத் தோழிகளுடன் ச்யாமஸுந்தரனுக்கு ஸேவை செய்கிறாள்.

आसीद्व्रजे महाभागश्चतुरो नाम गोपकः ।
श्रीचर्चिका तस्य भार्या श्रीमती श्रीरिवापरा ।।१४।।

14. கோகுலத்தில் மஹாபாக்யவானான சதுரன் என்ற கோபன் இருந்தான். அவனுக்கு மற்றொரு மஹாலக்ஷ்மிபோன்ற ஸ்ரீசர்சிகா என்ற மனைவி இருந்தாள்.

आविरासीत्तयोः कन्या नाम्ना चित्रेति विश्रुता ।
मासि भाद्रपदे शुक्लदशम्यां मञ्जुभाषिणी ।।१५।।

15. அவர்களுக்கு கன்னிகையாக பாத்ரபதமாதம் சுக்லபக்ஷதசமியில் இனிமையாகப் பேசக்கூடிய சித்ரா என்னும் ஸகி அவதரித்தாள்.

कान्त्या कुङ्कुमवर्णा सा वस्त्रं काचमणिप्रभम् ।
दधाना कुरुते वस्त्रसेवां राधामुकुन्दयोः ॥१६॥

16. குங்குமம் போன்ற காந்திஉடைய அவள் காசமணி போன்ற வஸ்த்ரம் அணிந்து ராதாக்ருஷ்ணர்களுக்கு வஸ்த்ரஸேவை செய்கிறாள்.

आसीद्व्रजे महाभागः सागरो गोपनायकः ।
श्रीचेला तस्य भार्या च सुशीला सुगुणा तथा ॥१७॥

17. கோகுலத்தில் ஸாகரன் என்கிற மஹாபாக்யவானான கோபன் இருந்தான். அவனது மனைவி ஸ்ரீசேலா நற்குணங்களும், நன்னடத்தையும் நிரம்பியவள்.

आविरासीत्तयोः कन्या चन्द्रलेखेति विश्रुता ।
मासि भाद्रपदे शुक्लैकादश्यां शुभविग्रहा ॥१८॥

18. அவர்களுக்கு கன்னிகையாக பாத்ரபதமாதம் சுக்லபக்ஷ ஏகாதசியில் சந்த்ரலேகாஸகி அவதரித்தாள்.

हरितालप्रभा देवी दाडिमीपुष्पसन्निभम् ।
दधाना वसनं गाननाट्यसेवां करोति सा ॥१९॥

19. ஹரிதாளம் போன்ற தங்ககாந்தி உடைய அவள் மாதுளம்பூ போன்ற நிறமுடைய வஸ்த்ரமணிந்தவளாக ராதாக்ருஷ்ணர்களுக்கு கானம் நாட்யம் முதலிய ஸேவைகளை செய்கிறாள்.

आसीद्व्रजे महाभागश्चाराम इति विश्रुतः ।
श्रीवाटिका तस्य पत्नी पतिसेवापरायणा ॥२०॥

20. கோகுலத்தில் புகழ்பெற்ற ஆராமன் என்ற கோபன் இருந்தான். பதிஸேவையில் லக்ஷியமுடையவளான ஸ்ரீவாடிகா அவன் மனைவி.

आविरासीत्तयोः कन्या पुण्ये राधाष्टमीदिने ।
नाम्ना चम्पकवल्लीति विख्याता चम्पकप्रभा ।।२१।।

21. அவர்களுக்கு கன்னிகையாக புண்யமான ராதாஷ்டமி நன்னாளில் சம்பகபுஷ்பம் போன்ற காந்தி உடைய சம்பகவல்லி அவதரித்தாள்.

नीलाम्बरपरीधाना समुपस्थितयौवना ।
चामरं वीजयन्त्येव कृष्णसेवां करोति सा ।।२२।।

22. கிசோரியான அவள் நீலவஸ்த்ரமணிந்தவளாக க்ருஷ்ணனுக்கு சாமரம் வீசும் கைங்கர்யம் செய்கிறாள்.

आसीद्व्रजे महाभागः पौष्करो नाम गोपकः ।
मेधादेवी तस्य पत्नी मधुरा मृदुभाषिणी ।।२३।।

23. கோகுலத்தில் மஹாபாக்யவானான பௌஷ்கரன் என்னும் கோபன் இருந்தான். இனிமையானவளும், ம்ருதுவாகப் பேசக் கூடியவளுமான மேதாதேவி அவன் மனைவி.

आवीरासीत्तयोः कन्या तुङ्गविद्येति विश्रुता ।
मासि भाद्रपदे शुक्लतृतीयायां मणिप्रभा ।।२४।।

24. அவர்களுக்கு கன்னிகையாக பாத்ரபதமாதம் சுக்லபக்ஷ த்ருதீயையில் ஸ்படிகம் போன்ற காந்தி உடைய துங்கவித்யா ஸகி அவதரித்தாள்.

दधाना पाण्डुरं वस्त्रं नानावाद्यविवादिनी ।
सेवां करोति सानन्दं राधामधवयोः सदा ।।२५।।

25. வெண்மையான வஸ்த்ரம்தரித்த அவள் பலவிதமான வாத்யங்கள் வாசித்து ராதாமாதவர்களுக்கு ஆனந்தத்துடன் ஸேவை செய்கிறாள்.

आसीद्व्रजे महाभागः श्रीराम इति विश्रुतः ।
करुणा तस्य भार्या च करुणारूपिणी तथा ।।२६।।

26. கோகுலத்தில் ஸ்ரீராமன் என்ற புகழ்பெற்ற ஒரு கோபனிருந்தான். அவன் மனைவியான கருணா கருணை வடிவானவள்.

आविरासीत्तयोः कन्या रङ्गदेवीति विश्रुता ।
पुण्ये भाद्रपदे मासि पूर्णिमायां हरिप्रिया ।।२७।।

27. அவர்களுக்கு பாத்ரபதமாதம் பௌர்ணமியில் ஹரிப்ரியையான ரங்கதேவிஸகி கன்னிகையாக அவதரித்தாள்.

तस्मिन्नेव दिने जाता सुदेवी यमलोद्भवा ।
कन्याद्वयं विलोक्यैतद्दम्पती मुदमापतुः ।।२८।।

28. அதேநாளில் ஸுதேவிஸகி இரண்டாவது குழந்தையாக அவதரித்தாள். இரண்டு கன்னிகைகளையும் பார்த்து அந்த தம்பதிகள் மகிழ்ச்சியடைந்தனர்.

जपापुष्पाम्बरा चैवं पद्मकिञ्जल्कसन्निभा ।
रङ्गदेवी तु राधाया युक्ता भूषणकर्मणि ।।२९।।

29. தாமரையின் கிஞ்ஜல்கம்போன்ற காந்திஉடைய ரங்க தேவி செம்பருத்தி புஷ்பம்போன்ற வண்ணமுடைய வஸ்திரமணிந்தவளாக ராதைக்கு ஆபரணங்கள் அணிவிக்கும் ஸேவையைச் செய்வாள்.

स्वर्णवर्णा सुदेवी सा शोणवस्त्रधरा तथा ।

नियुक्ता जलसेवायां नित्यं राधामुकुन्दयोः ।।३०।।

30. ஸுவர்ணம்போன்ற காந்திஉடைய ஸுதேவி, சிவப்பு வர்ணமுடைய வஸ்த்ரமணிந்தவளாக தினமும் ராதாக்ருஷ்ணர்களுக்கு ஜலஸேவையில் நியமிக்கப்பட்டாள்.

एवमष्टसखीनां वः प्रादुर्भावः प्रकीर्तितः ।
कृष्णसेवा च विविधा किं भूयः श्रोतुमिच्छथ ।।३१।।

31. இவ்வாறு அஷ்டஸகிகளுடைய அவதாரமும், பலவிதமான க்ருஷ்ணஸேவையும் உங்களுக்கு சொல்லப்பட்டது. மேலும் என்ன கேட்க விரும்புகிறீர்கள்?

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये लीलाकाण्डे द्वितीयोऽध्यायः ।।२।।*

*இவ்வாறு ஸ்ரீகிருஷ்ணப்ரேமி ஸ்வாமிகள் அருளிச்செய்த ஸ்ரீப்ருந்தாவனமாஹாத்மியத்தில் லீலாகாண்டத்தில் இரண்டாவது அத்தியாயம் முற்றும்*

# अथ तृतीयोऽध्यायः

## மூன்றாவது அத்தியாயம்

*भागवता ऊचुः*

भगवन् रसिकेन्द्रस्य व्रजराजशिखामणेः ।
प्रणयं वल्लवस्त्रीषु विस्तराद्वर्णय प्रभो ।।१।।

பாகவதர்கள்

1. பகவானே! ப்ரபோ! ரஸிகேந்த்ரனும், வ்ரஜராஜ சிகாமணியுமான கிருஷ்ணன் கோபிகைகளிடம் அன்பு காட்டியதை விஸ்தாரமாக வர்ணிப்பீராக.

निबिडे यमुनातीरे स्वच्छन्दगतिरच्युतः ।
कृतवान् गोपनारीभिः कां कां लीलां वद प्रभो ।।२।।

*2. ப்ரபோ! நெருக்கமான யமுனாதீரத்தில் அச்யுதன் கோபிகைகளுடன் சுதந்திரமாக என்ன என்ன லீலைகள் செய்தான்? சொல்லுவீராக.*

वर्णितं राधिकादेव्याश्चरितं परमाद्भुतम् ।
प्रेमलीलारहस्यं तत्प्रत्यक्षमिव दर्शितम् ।।३।।

*3. ராதாதேவியின் பரமாத்புதமான சரித்ரமும் ரஹஸ்யமான ப்ரேமலீலைகளும் வர்ணிக்கப்பட்டது. இவை யாவும் ப்ரத்யக்ஷமாக காட்டியதுபோல் இருந்தது.*

अन्यासामपि गोपीनां विवाहं वर्णय प्रभो ।
सर्वस्वतन्त्रो भगवान् कथं तासां वशङ्गतः ।।४।।

*4. ப்ரபோ! மற்ற கோபகன்னிகைகளைக் கண்ணன் எப்படி மணம் புரிந்தானோ அதை வர்ணிப்பீராக.*

अलं यज्ञैरलं यौगैरलं वेदान्तचिन्तया ।
श्रीकृष्णलीलाश्रवणं परमानन्दवर्धनम् ।।५।।

*5. யாகம், யோகம், வேதாந்தசர்ச்சை இவை செய்தது எல்லாம் போதும், ஸ்ரீக்ருஷ்ணலீலை ச்ரவணமே பரமானந்தவர்தனமாகும்.*

**श्रीसद्गुरुरुवाच**

सत्यमेव हि तत्सत्यं रसरूपो हि माधवः ।
अव्यक्तोपासनं लोके श्रमसाध्यमहो नृणाम् ।।६।।

ஸ்ரீஸத்குரு

6. நீங்கள் சொல்வது உண்மையே. உலகில் மனிதர்களுக்கு நிர்குணப்ரம்ஹத்தை உபாஸிப்பது கடினம். மாதவனோ ரஸரூபனல்லவா?

किन्तु गोपीविलोलस्य ब्रह्मणः परमात्मनः ।
चरितं श्रोत्ररम्यं हि संसारश्रमनाशनम् ॥७॥

7. ஆனால் கோபீரமணனான க்ருஷ்ணபரமாத்மாவின் லீலையோ காதுக்கினியதாகும். ஸம்ஸாரச்ரமத்தை நீக்கும்.

चन्द्रावल्याश्चरित्रञ्च राधायाश्चरितं तथा ।
मया सङ्कीर्तितं गुह्यं मधुरं वैष्णवोत्तमाः ॥८॥

8. வைஷ்ணவோத்தமர்களே! சந்த்ராவளி, ராதை இருவரின் சரித்ரம் மிகவும் ரஹஸ்யமானதும், மதுரமானதுமாகும். அதை நான் உங்களுக்கு முன்னமேயே சொல்லிவிட்டேன்.

ललितादिसखीनाञ्च प्रेमभावञ्च विस्तरात् ।
कीर्तयामि कृपासिन्धोः कृष्णस्य चरितं तथा ॥९॥

9. லலிதாமுதலிய ஸகிகளின் ப்ரேமபாவங்களையும், க்ருபாளுவான கண்ணன் அவர்களுடன் செய்த லீலைகளையும் விஸ்தாரமாக சொல்லுகிறேன்.

कुंभको नाम गोपालो वृषभानुपुरेऽवसत् ।
तस्य पुत्री महाभागा नीला कृष्णमनोहरी ॥१०॥

10. பர்ஸானாவில் கும்பகன் என்ற ஒரு கோபன் இருந்தார். அவருடைய பெண் நீலா (ச்யாமளா). அந்த பாக்யவதி கண்ணனின் உள்ளத்தைக் கவர்ந்தாள்.

नीलोत्पलदलाक्षी सा नीलकुन्तलशोभिता ।

सुन्दरी सुमुखी सुभ्रूः सुकपोला सुनासिका ।।११।।

कुंभस्तनी कम्बुकण्ठी कृशाङ्गी तनुमध्यमा ।

करभोरूः पृथुश्रोणिर्निम्ननाभिर्दलोदरी ।।१२।।

अलङ्कारप्रिया नित्यं कृष्णसन्दर्शनप्रिया ।

कलहंसगतिर्भीरुः सन्ततं लज्जयान्विता ।।१३।।

*11-13.* நீலோத்பலம் போன்ற கண்களுடையவளும், சுருண்ட கருமையான கூந்தலுடையவளும், அழகான புருவம் கன்னம் மூக்குடையவளும், ஸுந்தரியும், ஸுமுகியும், கும்பஸ்தனியும், சங்கு போன்ற கண்டமுடையவளும், பருமன் இல்லாத நடுத்தரமான ஆக்ருதி உள்ளவளும், யானைதுதிக்கை போன்ற புஷ்டியான துடையுள்ளவளும், விசாலமான இடுப்பும், அமுங்கிய நாபியும் இலைபோன்ற வயிறுமுள்ளவளும், எப்போதும் விதவிதமாய் அலங்காரம் செய்துகொண்டு கண்ணனைப் பார்ப்பதில் விருப்பமுள்ளவளும், அன்னம் போன்ற நடை உள்ளவளும், நாணம், அச்சம், மடம் இவை மூன்றும் சுபாவமானவளுமாக அவள் இருந்தாள்.

तामेवं गुणसम्पन्नां नीलां नीलालकां हरिः ।

अकस्माद्यमुनातीरे दृष्ट्वाऽभूत्पुलकाङ्कितः ।।१४।।

*14.* இத்தகைய குணங்கள் உள்ளவளும், கூந்தலழகானவளுமான ச்யாமளாவைக் கண்ணன் எதிர்பாராமல் யமுனைக்கரையில் கண்டு மேனிசிலிர்த்தவனானான்.

तं विलोक्य घनश्यामं नेत्रानन्दकरं हरिम् ।

नीलापि निर्मलप्रेमविमुग्धहृदयाऽभवत् ।।१५।।

*15.* கண்ணுக்கினிய சியாமஸுந்தரனைக் கண்டு நீலாவும் நிர்மலமான ப்ரேமையால் மயங்கிய உள்ளம் உடையவளானாள்.

विलोक्य तस्याः सौन्दर्यं बहवो गोपपुङ्गवाः ।
तामेव लब्धुमिच्छन्तः कुंभकं तं ययाचिरे ।।१६।।

16. அவளழகைக் கண்டு பலர் தாங்கள் மணம் புரியவேண்டி கும்பகனிடம் வந்துவேண்டினர்.

ज्ञात्वा भावञ्च नीलाया दृष्ट्वा लोककुतूहलम् ।
महोक्षान् कुंभकः सप्त वीर्यशुल्के चकार सः ।।१७।।

17. அந்த கும்பகனோ நீலாவுக்கு கண்ணனிடமுள்ள காதலை அறிவார். உலகத்துப் பிள்ளைகளுக்கு பதில் சொல்ல முடியவில்லை. எனவே ஏழு காளைகளைப் பந்தயமாக வைத்துவிட்டார்.

यो धीरो बलवान् गोपो युगपच्छमयेद्वृषान् ।
तस्मै देया मम सुता नीलेति प्राह कुंभकः ।।१८।।

18. பலமுடைய எந்த ஆண்பிள்ளை, இந்த ஏழு காளை களையும் ஒரேஸமயத்தில் அடக்குவானோ, அவனுக்கே என் மகளைத் தருவேன் என்று சொல்லிவிட்டார்.

अभवन्निर्जिताः सर्वे गोपालाः सप्तभिर्वृषैः ।
आस्फोटयन् मुकुन्दोऽसावाजगाम मृगेन्द्रवत् ।।१९।।

19. பந்தயத்தில் ஏழு காளைகளை அடக்க முடியாமல் எல்லாப் பிள்ளைகளும் தோல்வியடைந்தனர். அப்போது முகுந்தனே முண்டாதட்டிக் கொண்டு சிங்கம் போல் வந்தான்.

सभां संप्राप्य गोविन्दो नन्दगोपं प्रणम्य च ।
जग्राह च बलीवर्दान् श्यामलानन्दवर्धनः ।।२०।।

20. ஸபையில் வந்த கோவிந்தன் நந்தகோபனை வணங்கிவிட்டு, அந்த ஏழு காளைகளையுமடக்கி வெற்றி அடைந்தான். சியாமளாவிற்குப் பரமானந்தமுண்டாயிற்று.

इतस्ततः सञ्चरतः फूत्कारेण च संभ्रमात् ।
तीक्ष्णशृङ्गांश्चालयतोप्याकाशे च समुत्थितान्।।२१।।

वृषभान् युगपत्कृष्णो निगृह्य निजमायया ।
कुम्भकाय समर्प्यापि स्मितपूर्वमुपस्थितः ।।२२।।

21-22. இங்குமங்கும் ஓடுகின்றதும், மிரண்டு பூத்காரம் செய்கிறதும், கூர்மையான கொம்புகளை ஆட்டுவதும், ஆகாயத்தில் துள்ளுவதுமான காளைகளை ஒரேஸமயத்தில் தனது மாயாப்ரபாவத்தினால், கண்ணன் பிடித்து அடக்கி, கும்பகனிடம் கொடுத்துவிட்டு மந்தஹாஸத்துடன் நின்றுகொண்டிருந்தான்.

तं विलोक्य महावीरं गोपवृद्धाश्च तुष्टुवुः ।
सर्वे गोपकुमाराश्च बभूवुर्लज्जितास्तदा ।।२३।।

23. மஹாவீரனான கண்ணனைப் பெரியோர்கள் யாவரும் புகழ்ந்தனர். ஆயர்சிறுவர்கள் வெட்கமடைந்தனர்.

तदा नीला स्मितमुखी कुंभकेन प्रचोदिता ।
राजहंसगतिर्देवी सभां प्राप सुलज्जिता ।।२४।।

24. அப்போது கும்பகன் ப்ரேரணையால் நீலா அன்னநடை நடந்து, சிரித்தமுகத்துடனும், நாணத்துடனும் அங்கு ஸபைக்கு வந்தாள்.

सा नीला महतीं मालां नानापुष्पविनिर्मिताम् ।
धारयामास गोविन्दं समवाप्तमनोरथा ।।२५।।

25. அந்த நீலா பலவண்ணமலர்களால் கட்டிய பெரிய மாலையை மாதவன் கழுத்தில் அணிவித்தாள். அவள் ஆசை நிறைவேறியது.

पाणिञ्जग्राह नीलाया यशोदानन्दवर्धनः ।
शाण्डिल्यस्योपदेशेन कुर्वन् वैवाहिकीं क्रियाम् ॥२६॥

26. சாண்டில்யர் முறைப்படி விவாஹம் செய்வித்தார். சியாமளாவை சியாமஸுந்தரன் பாணிக்ரஹணம் செய்துகொண்டான். யசோதைக்கு மிகவும் ஆனந்தம்.

महता पारिबर्हेण सह नीलां मुदा हरिः ।
आरोप्य स्यन्दनं प्रेम्णा प्रतस्थे नन्दगोकुलम् ॥२७॥

27. ஏராளமான ஸ்ரீதனத்துடன் ச்யாமளாவை ரதத்தில் அழைத்துக்கொண்டு கண்ணன் கோகுலம் வந்து சேர்ந்தான்.

यशोदा पुत्रमालोक्य परमानन्दसम्युता ।
आरार्तिकं तदा चक्रे सखीभिः सहिता हरेः ॥२८॥

28. யசோதை ச்யாமளா ஸமேத ச்யாமஸுந்தரனைக் கண்டு தோழிகளுடன் ஆரத்தி எடுத்து அழைத்து மகிழ்ந்தாள்.

राधिका चन्द्रलेखा च विलोक्य श्यामलां सखीम् ।
प्रापतुः परमानन्दं कृष्णञ्च प्राणवल्लभम् ॥२९॥

29. ராதையும், சந்த்ராவளியும் சியாமளாவைத் தங்களுடன் சேர்த்துகொண்டு ஒற்றுமையாக ப்ராணவல்லபனான கண்ணனுக்கு ஸேவை செய்து வந்தனர்.

एवं दिव्यप्रबन्धेषु नीलायाश्चरितं महत् ।
दिव्यज्ञानोपपन्नैस्तत्कीर्तितं दिव्यसूरिभिः ॥३०॥

30. இவ்வாறு ஆழ்வார்கள் அருளிய திவ்யப்ரபந்தங்களில் திவ்யஞானமுள்ள ஆழ்வார்களால் நீலா என்ற நப்பினையின் சரித்ரம் சொல்லப்பட்டது.

एवञ्च पाञ्चरात्रेपि कीर्तितं नारदेन च ।
नीलायाश्चरितं पुण्यं कृष्णभक्तिविवर्धनम् ।।३१।।

31. இவ்வாறு பாஞ்சராத்ர சாஸ்திரத்திலும் நீலாதேவியின் சரித்ரமும், உபாஸனாபத்ததியும் நாரதரால் சொல்லப்பட்டிருக்கிறது.

तन्मया वर्णितं शौरेर्लीलाचेष्टितमद्भुतम् ।
अन्यत्कृष्णस्य चरितं किं भूयः श्रोतुमिच्छथ।।३२।।

32. இந்த அதிசயமான க்ருஷ்ணலீலை உங்களுக்குச் சொல்லப்பட்டது.மேலும் என்ன கேட்க விரும்புகிறீர்கள்?

इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये लीलाकाण्डे नीलाविवाहो नाम तृतीयोऽध्यायः ।।३।।

இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமி மஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவனமாஹாத்மியத்தில் லீலாகாண்டத்தில் நீலாவிவாஹம் என்ற மூன்றாம் அத்தியாயம் முற்றும்

## अथ चतुर्थोऽध्यायः

### நான்காவது அத்தியாயம்

**भागवता ऊचुः**

चरितं ललितादेव्याः प्रेमभावपरिष्कृतम् ।
वयञ्च श्रोतुमिच्छामः सखीनां किल सा गुरुः।।१।।

**பாகவதர்கள்**

1. ப்ரேமபாவத்தினால் பரிஷ்காரம் செய்யப்பட்ட லலிதாஸகியின் சரித்திரத்தை நாங்கள் கேட்க விரும்புகிறோம். ஏனெனில் எல்லா ஸகிகளுக்கும் அவள் குருவல்லவா?

## श्रीसद्गुरुरुवाच

मन्दारजाजीपुन्नागवकुलासनमण्डिते ।
यमुनाजलकल्लोलकोलाहलनिनादिते ॥२॥

तमालवृक्षवास्तव्यशुककोकिलकूजिते ।
निकुञ्जगृहसंव्याप्तवनराजिविराजिते ॥३॥

विहरद्धरिणीबृन्दतृणाङ्कुरविभूषिते ।
समाश्रितलताबृन्दतमालतरुमण्डिते ॥४॥

सुगन्धपुष्पसङ्कीर्णविचित्रितमहीतले ।
केतकीगन्धसम्युक्तमलयानिलसेविते ॥५॥

श्रीमद्बृन्दावने तस्मिन् ललिता ललितानना ।
इतस्ततः सञ्चचार राधान्वेषणतत्परा ॥६॥

### ஸ்ரீஸத்குரு

**2-6.** மந்தாரம், ஜாதி, புன்னாகம், வகுளாஸனம் என்னும் புஷ்பச்செடிகள் சூழ்ந்ததும், யமுனையின் கலகலவென அலை ஓசையுடன் கூடியதும், தமாலமரத்தில் உடகார்ந்து கொஞ்சுகின்ற குயில், கிளி இவைகளின் கலகலப்புடன் கூடியதும், அழகிய நிகுஞ்ஜங்கள் சூழ்ந்த வனப்புமிக்க சோலைகள் உள்ளதும், மான்கள் மேய்ந்து விளையாடும் புல்வெளிகள் உள்ளதும், கொடிகள் பின்னிக்கொண்டு தொங்குகின்ற தமாலமரங்களின் கூட்டத்துடன் கூடியதும், ஸுகந்தமான புஷ்பங்களால் இரைந்து கிடைக்கும், தராதலம் உள்ளதும், தாழம்பூ மணக்கும் தென்றல் காற்று வீசுவதுமாகிய அந்த சோபையுடன் கூடிய பிருந்தாவனத்தில் அழகிய முகமுள்ள லலிதா ராதையைத் தேடிக்கொண்டு இங்குமங்கும் வந்தாள்.

ताम्बूलसंपुटं हैमं हस्तेनादाय गोपिका ।
चचार यमुनातीरे राधादास्यपरायणा ॥७॥

*7. ராதையின் கைங்கர்யமே லக்ஷியமாகக் கொண்ட கோபிகையான லலிதா தங்கத்தினாலான தாம்பூல ஸம்புடத்தை கையிலேந்தி யமுனாதீரத்தில் ஸஞ்சரித்துக்கொண்டிருந்தாள்.*

रत्नकुण्डलसंराजद्राकाचन्द्रसमानना ।
कुटिलालकसंव्याप्तफालशोभितकुङ्कुमा ॥८॥

रत्नहारावलीदीप्तहेमकुंभपयोधरा ।
दिव्यवस्त्रपरीधाना सर्वाभरणभूषिता ॥९॥

क्वणन्मञ्जीरचरणा चचार यमुनावने ।
विधातुं राधिकादास्यं निकुञ्जे तु मनोरमे ॥१०॥

*8-10. ரத்னகுண்டலமணிந்த பூர்ணசந்திரன்போன்ற முகமுள்ளவளும் சுருள்சுருளான கூந்தல்வருடும் நெற்றியில் குங்குமம் அணிந்தவளும், ரத்னஹாரம் அணிந்த ஸுவர்ணகலசம் போன்ற ஸ்தனங்களுடையவளும், திவ்யமான வஸ்த்ரமணிந்தவளும், ஸர்வஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டவளும், கால்களில் ஒலிக்கும் நூபுரம் அணிந்தவளும், யமுனைக் கரையின் வனத்தில் நிகுஞ்ஜத்தில் ராதைக்கு பணிவிடைசெய்ய வேண்டி ஸஞ்சரித்தாள்.*

तां दृष्ट्वा ललितां कृष्णः कमलायतलोचनः ।
आह्वयामास सानन्दं कृत्वा हस्तविघट्टनम् ॥११॥

*11. அவளைக் கண்ட தாமரைக் கண்ணன் ஆனந்தம் அடைந்து கையை தட்டி கூப்பிட்டான்.*

ललितापि विलोक्यैवमाह्वयन्तं पुनः पुनः ।

गच्छन्ती नापगच्छन्ती तस्थौ सा लज्जयान्विता ।।१२ ।।

12. இவ்வாறு மறுபடியும் மறுபடியும் கூப்பிடும் கண்ணனைக் கண்ட லலிதா வெட்கத்துடன் போகாமலும் நிற்காமலும் சற்றுத் தயங்கினாள்.

## श्रीभगवानुवाच

वर्ततेऽस्मिन्निकुञ्जे हि स्वामिनी तव राधिका ।
ललिते त्वामाह्वयेति प्रेमपूर्वं जगाद माम् ।।१३ ।।

ஸ்ரீபகவான்

13. லலிதே! இந்த நிகுஞ்ஜத்தில் உன் ஸ்வாமினியான ராதிகா இருக்கிறாள். உன்னைக் கூப்பிடு என்று அன்புடன் சொன்னாள்.

किन्तु त्वं मयि विश्वासमप्राप्य त्वरया क्वचित् ।
गच्छसि प्रेमपूर्वं मां दृष्ट्वापि त्रपयान्विता ।।१४ ।।

14. ஆனால் நீயோ என்னை நம்பாமல் வேகமாக எங்கேயோ போகிறாயே! என்னைப் பார்த்தும்கூட வெட்கத்துடன் ஏன் போகிறாய்?

## ललितोवाच

अतिक्रमं क्षमस्वेमं स्वामिन् श्रीव्रजनन्दन ।
देवीमद्य निकुञ्जेषु विचिन्वन्ती चराम्यहम् ।।१५ ।।

லலிதா

15 ஸ்ரீவ்ரஜநந்தன! ஸ்வாமி! என் அபசாரத்தை மன்னிக்க வேண்டும். இப்போது தேவியை நிகுஞ்ஜங்களில் தேடிக்கொண்டு அலைகிறேன்.

वर्तते यदि तत्रैवमागच्छामि त्वया सह ।
तस्यै प्रदेयं ताम्बूलमिदं राधामनोहर ।।१६।।

16. ராதாமனோஹர! அந்த நிகுஞ்ஜத்தில் ஸ்வாமினி இருப்பாளாகில் உம்மோடு வருகிறேன். இந்த தாம்பூலத்தை அவளிடம் தரவேண்டும்.

**श्रीसद्गुरुरुवाच**

इत्युक्त्वा ललितादेवी तमेवानुजगाम सा ।
तत्रत्यं माधवीकुञ्जमवाप च तया हरिः ।।१७।।

ஸ்ரீஸத்குரு

17. இவ்வாறு சொல்லி லலிதா, கண்ணனையே பின் தொடர்ந்தாள். ஹரியும் லலிதாவுடன் அங்குள்ள மாதவி குஞ்ஜத்தை அடைந்தான்.

तत्र राधामपश्यन्ती पश्यन्ती केवलं हरिम् ।
जानन्ती कैतवं तस्य विस्मयं प्राप सा परम् ।।१८।।

18. ஆனால் அங்கு ராதை காணப்படவில்லை. ஹரியே இருந்தான். ஹரியின் போக்கிரித்தனத்தை லலிதா புரிந்து கொண்டாள். எனவே ஆச்சர்யம் அடைந்தாள்.

तत्रैव प्रणयक्रोधं प्रदर्श्य निजवल्लभे ।
इयेष च बहिर्गन्तुं वञ्चिता वनमालिना ।।१९।।

19. வனமாலியால் வஞ்சிக்கப்பட்ட லலிதா தனது ப்ராணவல்லபனிடம் ஒரு பொய்க்கோபத்தைக் காட்டி வெளியில் ஓடிவிட நினைத்தாள்.

जग्राह तस्याः पाणिञ्च हेमकङ्कणभूषितम् ।

लज्जयाऽवाङ्मुखी तस्थौ नवसङ्गमकौतुकात् ।।२०।।

20. உடனே ஸ்வர்ணகங்கணங்கள் அணிந்த லலிதாவின் கையைப்பற்றினான் கண்ணன். லலிதாவோ வெட்கத்துடன் தலை குனிந்து நின்றாள். கண்ணனின் இந்த நவஸங்கமத்தில் அவளுக்கும் குதூஹலமிருந்தது.

तामाश्लिष्य घनश्यामो मुखमुत्थाप्य सुन्दरम् ।
चुचुम्ब प्रेमपूर्वञ्च परमानन्दवर्धनः ।।२१।।

21. பரமானந்தத்தைத் தரும் சியாமஸுந்தரன் அவளது முகத்தைக் கையால் உயர்த்தி அன்புடன் அவளைக்கட்டி அவளது வாயில் முத்தம் தந்தான்.

सापि लज्जारुणमुखी मदालसविलोचना ।
परिरेभे प्रियं कृष्णं प्रसन्नवदनाम्बुजम् ।।२२।।

22. அவள் முகம் வெட்கத்தினால் சிவந்து விட்டது. அவன் கண்கள் மதம்பிடித்ததுபோல் சிவந்தது. ப்ரஸன்னமான முககமலமுள்ள தன் காதலனான கண்ணனை அவள் கட்டிக் கொண்டாள்.

तत्रैव माधवीकुञ्जे गुञ्जद्भ्रमरशोभिते ।
मृदुपल्लवपर्यङ्के रेमे ललितया हरिः ।।२३।।

23. வண்டுகள் ரீங்காரம் செய்யும் அந்த மாதவீகுஞ்ஜத்தில் அழகிய கிஸலய சயனத்தில் லலிதையுடன் ஹரி விளையாடினான்.

एवं रतिरणश्रान्तां ललितां ललिताननाम् ।
अलञ्चकार गोविन्दः पुनर्वस्त्रविभूषणैः ।।२४।।

24. விளையாடி விளையாடி களைத்து விட்ட லலிதாவை ஹரி மறுபடியும் வஸ்த்ரம் கட்டிவிட்டு பூஷணங்கள் அணிவித்து

அழகுபடுத்தி விட்டான்.

स्वच्छन्दगतिना तेन भुक्त्वा त्यक्ता च गोपिका ।
जगाम स्वगृहं देवी निद्राकुलविलोचना ।।२५।।

25. ஸ்வச்சந்தமான நடத்தை உள்ள ஹரியினால் அனுபவிக்கப்பட்ட லலிதா தூக்க கலக்கத்துடன் வீடு திரும்பினாள்.

मध्येमार्गं ददर्शैषा राधिकाञ्च यदृच्छया ।
नोवाच लज्जया किञ्चिन्नतपद्मानना बभौ ।।२६।।

26. நடுவழியில் எதிர்பாராமல் ராதையைக் கண்டும்கூட வெட்கத்தினால் ஏதும் சொல்லாமல் தலை குனிந்து நின்றாள்.

तां विलोक्य तदा राधा कृष्णस्मरणसंभ्रमाम् ।
अपृच्छल्ललितां प्रेम्णा किं प्रवृत्तं लतागृहे ।।२७।।

27. க்ருஷ்ணஸ்மரணத்தினால் ஸம்ப்ரமம் அடைந்துள்ள அவளைக்கண்ட ராதை லதாக்ருஹத்தில் என்ன நடந்தது என்று கேட்டாள்.

सर्वं तद्वर्णयामास हरेः स्वच्छन्दचेष्टितम् ।
संयुक्ता स्मृतिसौख्येन लज्जया च भयेन च।।२८।।

28. வெட்கத்துடனும் பயத்துடனும் அந்த இனிய நினைவுடனும் கண்ணன் சுதந்திரமாய் விளையாடினது எல்லாம் சொல்லிவிட்டாள் லலிதா.

सान्त्वयामास तां राधा मृदुभाषणपूर्वकम् ।
स्वसङ्कल्पितमेवेदं कृतं श्रीपतिनेति सा ।।२९।।

29. ராதை இதைக்கேட்டு லலிதாவை கொஞ்சிப்பேசி ஸமாதானம் செய்தாள். தான் நினைத்ததையே கண்ணன் செய்தான் என்றும் சொன்னாள்.

न्यवेदयद्यशोदायै राधिका लज्जयान्विता ।
गान्धर्वविधिना तस्या विवाहं प्रेमपूर्वकम् ॥३०॥

30. பிறகு வீட்டிற்கு வந்து ராதை யசோதையிடம் கண்ணன் லலிதாவை காந்தர்வவிதியால் விவாஹம் செய்து கொண்டதை வெட்கத்துடன் சொன்னாள்.

आघ्राय तस्या मूर्धानं यशोदा हर्षपूरिता ।
आरार्तिकं तथा कृत्वा स्नुषां तामानिनाय च ॥३१॥

31. மகிழ்ச்சி அடைந்த யசோதை லலிதாவை கட்டி அணைத்து உச்சிமுகந்து ஆரத்தி எடுத்து தனது மருமகளான லலிதாவை அழைத்தாள்.

इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये लीलाकाण्डे ललिताविवाहो नाम चतुर्थोऽध्यायः ॥४॥

இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமி மஹாப்ரபு அருளிய ஸ்ரீபிருந்தாவன மாஹாத்மியத்தில் லீலாகாண்டத்தில் லலிதாவிவாஹம் என்னும் நான்காம் அத்யாயம் முற்றும்.

## अथ पञ्चमोऽध्यायः

## ஐந்தாம் அத்தியாயம்

### भागवता ऊचुः

विशाखाचरितं पुण्यं सङ्कीर्तय गुरूत्तम ।
प्रेम्णा विशुद्धभावेन या पूजयति राधिकाम् ॥१॥

பாகவதர்கள்

1. குருநாதரே! விசாகாவின் புண்யமான சரித்ரத்தைச் சொல்லுவீராக. ப்ரேமையுடன் விசுத்தமான உள்ளத்துடன் அவள்

ராதையை தினமும் பூஜிக்கின்றாள் அன்றோ?

श्रीसद्गुरुरुवाच

बाल्यात्प्रभृति राधायां प्रेमभावेन सम्युता ।
विशाखा नाम विख्याता विरेजे गोपकन्यका ।।२।।

ஸ்ரீஸத்குரு

2. பால்யம்முதற்கொண்டே ராதையினிடம் அன்புள்ள விசாகை என்ற கோபகன்னிகை வ்ரஜத்தில் இருந்துவந்தாள்.

विद्युन्मालानिभाङ्गी सा विधुबिम्बसमानना ।
माधुर्यभावसंपूर्णा मृगाक्षी कोमलाधरा ।।३।।

3. அவள் மின்னல்கொடிபோல் ப்ரகாசிக்கும் மேனி உடையவளும், சிவந்த உதடுள்ளவளும், மான்போன்ற பார்வை உள்ளவளும், மதுரபாவம் நிறைந்த மனமுடையவளுமாக இருந்தாள்.

नियुक्ता राधया नित्यमनुलेपनकर्मणि ।
कर्पूरकेसरयुतं चन्दनञ्च करोति सा ।।४।।

4. தினமும் அனுலேபனம் தயார் செய்யும் கைங்கர்யத்தில் ராதையால் நியமிக்கப்பட்டிருந்தாள். பச்சைக்கற்பூரம், குங்குமப்பூ போட்டு சந்தனம் அரைத்து தயார் செய்வதில் திறமை மிக்கவள்.

कदाचिच्चन्दनं दिव्यमादाय प्रेमपूर्वकम् ।
प्रदातुकामा स्वामिन्यै निकुञ्जं प्राप सा निशि।।५।।

5. ஒருநாள் திவ்யமான சந்தனம் தயார் செய்துகொண்டு அன்புடன் ராதைக்கு அர்ப்பணம் செய்வதற்காக நிகுஞ்ஜத்திற்கு வந்தாள்.

तत्र राधामुकुन्दौ सा प्रेमसल्लापसम्युतौ ।

विलोक्य परमानन्दं प्राप प्रेमपरायणा ॥६॥

6. அங்கு ராதையும் முகுந்தனும் ப்ரேமஸல்லாபம் செய்து கொண்டிருப்பதைக் கண்டாள். ப்ரேமையே லக்ஷியமான அவள் பரமானந்தம் கொண்டிருப்பதைக் கண்டாள்.

कर्पूरकेसरयुतं सुगन्धिहरिचन्दनम् ।
लिलेप वार्षभानव्याः स्तनयोर्भुजयोरपि ॥७॥

7. கற்பூரம், கேஸரம் கூடிய ஹரிசந்தனத்தை ராதையின் மார்பிலும் கைகளிலும் பூசிவிட்டாள்.

सुप्रसन्ना तदा देवी विशाखां प्रीतिपूर्वकम् ।
आज्ञापयामास हरेः कर्तुं चन्दनलेपनम् ॥८॥

8. அப்போது ராதை ப்ரஸன்னமாகி ப்ரீதி அடைந்து ஹரிக்கும் சந்தனம் பூசிவிடும்படி விசாகாவை நியமித்தாள்.

किन्तु सा लज्जया गोपी तस्थाववनतानना ।
पादाङ्गुष्ठविनिर्भिन्नभूतला रुचिरस्मिता ॥९॥

9. ஆனால் விசாகாவோ வெட்கத்தினால் தலைகுனிந்து கால்கட்டை விரலால் பூமியை கீறிக்கொண்டு முறுவல் செய்து நின்றாள்.

बलादानीय तां राधा विशाखां प्रेमपूर्वकम् ।
आज्ञापयामास हरेः कर्तुं चन्दनलेपनम् ॥१०॥

10. ராதை விசாகாவை ப்ரேமையுடன் பலாத்காரம் செய்து ஹரிக்கு சந்தனம் பூசும்படி ஆக்ஞை செய்தாள்.

वेपमानकरा सापि लज्जारुणमुखी हरेः ।
वक्षःस्थले मुकुन्दस्य चक्रे चन्दनलेपनम् ॥११॥

11. விசாகா முகம் சிவக்க லஜ்ஜையினால் நடுங்கும் கரத்துடன் ஹரியின் வக்ஷஸ்தலத்தில் சந்தனம் பூசினாள்.

राधापि नेत्रसङ्केतं कृत्वा कुञ्जाद्बहिर्ययौ ।
प्रतीक्षमाणा सानन्दं तयोः प्रथमसङ्गमम् ।।१२।।

12. முகுந்தனும் விசாகாவும் விளையாடுவதில் விருப்பம் கொண்ட ராதை கண்ணனைப் பார்த்துக் கண்ணடித்துவிட்டு நிகுஞ்ஜத்திலிருந்து வெளியேறி விட்டாள்.

परिरम्य विशाखां तां प्रेमपूर्वं चुचुम्ब सः ।
सापि गोविन्दमालिङ्ग्य पपौ तस्याधरामृतम् ।।१३।।

13. கண்ணன் விசாகாவை கட்டி முத்தமிட்டான். விசாகாவும் கண்ணனை அணைத்து அவனது அதராம்ருதத்தைப் பானம் செய்தாள்.

संभ्रमात् सोपि सानन्दं विमुच्य स्तनपट्टिकाम् ।
लिलेप चन्दनं तस्याः स्तनश्रीफलयोरपि ।।१४।।

14. கோவிந்தனும் பரபரப்புடன் அவளது கஞ்சுகத்தை அவிழ்த்து பில்வப்பழம் போன்ற அழகிய அவளது ஸ்தனங்களில் சந்தனம் பூசினான்.

तत्र पल्लवपर्यङ्के नानापुष्पविराजिते ।
रेमे विशाखया सार्धं रसिकेन्द्रो रमापतिः ।।१५।।

15. அங்கு புஷ்பபந்தலில் கிஸலய சயனத்தில் ராதாரமணனும் ரஸிகேந்த்ரனுமான கண்ணன் விசாகாவுடன் விளையாடினான்.

सौदामिन्या यथा मेघो राजते गगनान्तरे ।
तथा विशाखया भाति भगवांच्छयामसुन्दरः ।।१६।।

16. மின்னல்கொடியுடன் மேகம் விளங்குவதுபோல்

விசாகாவுடன் சியாமசுந்தரன் கலந்து ப்ரகாசித்தான்.

सुवर्णलतया श्लिष्टः कल्पको विपिने यथा ।
तथा विशाखया कृष्णो विरेजे यमुनातटे ।।१७।।

17. பொற்கொடி படர்ந்த கல்பகவ்ருக்ஷம்போல் விசாகையைக் கட்டிக்கொண்டு யமுனைக் கரையில் நீலவர்ணக் கண்ணன் ப்ரகாசித்தான்.

तां कृशाङ्गीं समालिङ्ग्य विशाखां मदिरेक्षणाम् ।
अवाप परमानन्दं पिबंस्तदधरामृतम् ।।१८।।

18. மருண்டபார்வை உடைய க்ருசாங்கியான விசாகாவை கட்டி அணைத்து அவளது அதரத்தைக் குடித்து பரமானந்தம் அடைந்தான்.

अङ्के शयानां हस्तेन लालयन् ललिताननाम् ।
मुखमुन्नीय सप्रेम चुचुम्ब श्यामसुन्दरः ।।१९।।

19. ச்யாமஸுந்தரன் தன் மடியில் படுத்து உருளும் அழகிய முகமுள்ள விசாகாவின் முகத்தைத் தூக்கி அன்புடன் முத்தமிட்டான்.

कृष्णाधरसुधास्वादविमुग्धहृदया तु सा ।
गतां रात्रिं न सस्मार मदालसविलोचना ।।२०।।

20. கண்ணனின் அதராம்ருதத்தைப் பருகி மயங்கிய விசாகை மதத்தினால் அலஸமான கண்கள் உடையவளாய் இரவு பொழுதுபோனதை அறியவேயில்லை.

पुनः पुनर्विलुठतोः परिरभ्य परस्परम् ।
तयोः पल्लवपर्यङ्के वस्त्रयुग्मं क्वचिद्गतम् ।।२१।।

21. பரஸ்பரம் கட்டிக்கொண்டு புரளும் அவர்களின் வஸ்த்ரம்

அவிழ்ந்து எங்கு போயிற்று என்று தெரியவில்லை.

विश्रान्तौ सुरतक्रीडां कृत्वा तौ दिव्यदम्पती ।
आनन्दयन् मन्दमन्दं सिषेवे मलयानिलः ॥२२॥

22. ஸுரதலீலை செய்து களைத்துப்போன அந்த திவ்யதம்பதிகளை மலயமாருதம் வீசி இளைப்பாற்றியது.

तत्रैव पुष्पपर्यङ्के निशि निद्रावशङ्गतौ ।
प्रातः प्रबोधयामासुर्वीचीकूचीति पक्षिणः ॥२३॥

23. அங்கு புஷ்பசயனத்தில் உறங்கிவிட்ட அவர்களை பக்ஷிகள் " வீசிகூசீ " என்று பாடி ப்ரபோதனம் செய்தன.

अथ तां गन्तुमिच्छन्तीं लज्जारुणमुखीं हरिः ।
धारयामास वस्त्रञ्च भूषणानि च माधवः ॥२४॥

24. பிறகு வீட்டிற்குப் போகவேண்டி நிற்பவளும், வெட்கத்தினால் சிவந்த முகமுள்ளவளுமான அவளைப் பார்த்து மாதவன் வஸ்த்ரமணிவித்து பூஷணம் பூட்டி விட்டான்.

सापि कुञ्जाद्बहिर्गत्वा लीलास्मरणमोहिता ।
यदृच्छया स्थितां तत्र ददर्श वृषभानुजाम् ॥२५॥

25. லீலாஸ்மரணத்தினால் மயங்கிய மனமுள்ளவளாய் குஞ்ஜத்தின் வாசலில் வந்த விசாகா எதிர்பாராமல் ராதையை அங்கு பார்த்தாள்.

संप्राप सदनं कृष्णो राधया च विशाखया ।
यशोदा हर्षसम्युक्ता तयोश्चक्रे सुमङ्गलम् ॥२६॥

26. ராதையுடனும் விசாகையுடனும் கண்ணன் வீட்டுக்கு வந்தான். யசோதை சந்தோஷத்துடன் அவர்களுக்கு மங்களஹாரதி எடுத்தாள்.

यशोदा कारयामास गोपीजनसमन्विता ।
विशाखाकृष्णयोस्तत्र मङ्गलस्नानमद्भुतम् ।।२७।।

27. யசோதை கோபிகைகளுடன்கூடி விசாகைக்கும், கண்ணனுக்கும் மங்கள ஸ்னானம் செய்வித்தாள்.

स्वयं च्युतं फलं क्षीरे पतितं हि यदृच्छया ।
इति हर्षमवापैव विशाखायाः पिता तदा ।।२८।।

28. பழம் நழுவி தானே பாலில் விழுந்தது என்று விசாகாவின் தந்தை நினைத்து ஸந்தோஷமடைந்தார்.

विशाखा लोकभर्तारं भर्तारं प्राप्य माधवम् ।
अवाप परमं हर्षं राधादास्यपरायणा ।।२९।।

29. லோகநாதனையே நாதனாக அடைந்த விசாகா ராதைக்கும் கண்ணனுக்கும் தொண்டு செய்வதே லக்ஷியமாக இருந்தாள்.

यः पठेच्छ्रद्धया नित्यं विशाखाचरितं शुभम् ।
तस्यैव सुलभं नूनं कृष्णदास्यं सुदुर्लभम् ।।३०।।

30. சுபமான விசாகாவின் சரிதத்தைப் படிப்பவனுக்கும் ப்ருந்தாவனத்தில் ராதாக்ருஷ்ண கைங்கர்யம் கிடைக்கும்.

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये लीलाकाण्डे विशाखाविवाहो नाम पञ्चमोऽध्यायः।।५।।*

இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமி மஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில் லீலா காண்டத்தில் விசாகாவிவாஹம் என்ற ஐந்தாம் அத்தியாயம் முற்றும்

# अथ षष्ठोऽध्यायः

## ஆறாம் அத்தியாயம்

### भागवता ऊचुः

उपयेमे कथं कृष्णः प्रियां चम्पकवल्लिकाम् ।
सापि केन च दास्येन वशञ्चक्रे श्रियःपतिम् ।।१।।

**பாகவதர்கள்**

*1. கண்ணன் அன்புள்ள சம்பகவல்லியை எப்படி மணம் புரிந்தான்? அவளும் ஸ்ரீநாதனை தனக்கு வசமாக்கிக்கொண்டு என்ன கைங்கர்யம் செய்தாள்?*

### श्रीसद्गुरुरुवाच

कदाचिद्ग्रीष्मकाले तु रसिको नन्दनन्दनः ।
चचार यमुनातीरे नानानोकहमण्डिते ।।२।।

**ஸ்ரீஸத்குரு**

*2. ஒருஸமயம் ரஸிகனான நந்தநந்தனன் கோடைகாலத்தில் பலமரங்கள் சூழ்ந்த யமுனாதீரத்தில் ஸஞ்சரித்துக் கொண்டிருந்தான்.*

तत्र तत्र तदा गावो वनसञ्चारकर्शिताः ।
विश्रान्ता वृक्षमूलेषु ग्रीष्मतापनिपीडिताः ।।३।।

*3. ஆங்காங்கு வனத்தில் அலைந்து களைத்த மாடுகள் கடும் வெய்யிலில் சிரமப்பட்டு மரங்களின் அடியில் ஓய்வு பெற்றுப் படுத்திருந்தன.*

वृक्षाग्रान्निपतन्ति स्म तीक्ष्णवातनिपातिताः ।
पत्राणां निकरा भूमौ शुष्कानामातपेन वै ।।४।।

4. மரங்களிலிருந்து காய்ந்த சரகுகள் காற்றில் உதிர்ந்து தரையில் விழுந்தன.

पल्वलेषु निमज्जन्ति स्वल्पमात्रजले तदा ।
महिषा ग्रीष्मतापेन पीडिता यमुनावने ॥५॥

5. கோடையினாலுண்டான தாபத்தினால் பீடிக்கப்பட்ட எருமைகள் சொல்பஜலம் உள்ள குட்டைகளில் மூழ்கி இருந்தன.

एवं हि गोपबालाश्च यमुनासलिलङ्गताः ।
प्रीत्या दध्यन्नमश्नन्ति नानाकेलिरसाकुलाः ॥६॥

6. இவ்வாறு பலவித லீலைகள் செய்யும் ஆயர் சிறுவர்கள் ப்ரீதியுடன் யமுனை தண்ணீரில் நின்று தயிர் சாதம் சாப்பிடுகின்றனர்.

आश्रमेषु निकुञ्जेषु गोवर्धनगुहासु च ।
सायङ्कालं प्रतीक्षन्ते निवसन्तो व्रजार्भकाः ॥७॥

7. குடிசைகளிலும், நிகுஞ்ஜங்களிலும், கோவர்தன குஹைகளிலும் வெய்யில் ஸமயத்தில் உட்கார்ந்திருந்து ஆயர் சிறுவர்கள் மாலைப் பொழுதை எதிர்பார்த்திருந்தனர்.

सायं बृन्दावने तस्मिन् वनपुष्पसुगन्धिते ।
आगच्छन्ति तथा गोप्यस्त्वानेतुं यमुनाजलम् ॥८॥

8. வனபுஷ்பங்களால் ஸுகந்தமான அந்த பிருந்தாவனத்தில் மாலைப்பொழுதில் கோபிகைகள் யமுனையில் தண்ணீர் கொண்டுபோக வருகின்றனர்.

प्रदोषकाले संप्राप्ते पूर्णचन्द्रस्तथोदितः ।
ग्रीष्मतापं मुकुन्दस्य जहार ज्योत्स्नया वने ॥९॥

9. ப்ரதோஷகாலத்தில் உதயமான பூர்ணசந்திரன் தனது நிலவினால் முகுந்தனின் க்ரீஷ்மதாபத்தை நீக்கினான்.

तदा बृन्दावने श्रीमान् व्रजराजकुमारकः ।
निकुञ्जे राधया सार्धं चिक्रीड श्यामसुन्दरः ।।१०।।

10. அப்போது வ்ரஜராஜகுமாரனான ஸ்ரீச்யாமஸுந்தரன் பிருந்தாவனத்தில் நிகுஞ்ஜத்தில் ராதையுடன் கூடி விளையாடினான்.

चामरं चम्पकलता समुपस्थितमाधवा ।
वीजयामास सरसं हस्तेनादाय सुन्दरी ।।११।।

11. ஸுந்தரியான சம்பகவல்லி மாதவன் பக்கத்தில் நின்றுகொண்டு சாமரத்தை எடுத்து ஸரஸமாக வீசிக்கொண்டிருந்தாள்.

मन्दोन्नतभ्रूविलासां मन्दस्मितमुखाम्बुजाम् ।
कज्जलालिप्तनयनां कपोलजितदर्पणाम् ।।१२।।

अशोकदलरक्तोष्ठीं सुगन्धिकुटिलालकाम् ।
स्फुरन्मुक्तावलीचारुपीनवक्षोजमण्डलाम् ।।१३।।

मेखलालङ्कृतकटिं रंभोरुं मृदुलाङ्गुलिम् ।
विलोक्य चम्पकलतां कृष्णोऽभूत्पुलकाङ्कितः ।।१४।।

12-14. கொஞ்சம் உன்னதமான அழகிய புருவம் உள்ளவளும், முறுவல் செய்யும் முககமலமுள்ளவளும், கண்களில் மைதீட்டிக் கொண்டிருப்பவளும், கண்ணாடியைப் பழிக்கும் கன்னம் உடையவளும் அசோக தளம்போல் சிவந்த உதடுகள் உள்ளவளும், சுடர்விடும் முத்துமாலை அணிந்த உத்துங்கமான ஸ்தனமண்டலம் உள்ளவளும், இடுப்பில் மணிமேகலை அணிந்தவளும், வாழைத்தண்டுபோன்ற துடை உள்ளவளும், மெல்லிய விரல்கள் உள்ளவளுமான சம்பகவல்லியைப் பார்த்து மேனிசிலிர்த்துப் போனான்.

सापि कृष्णस्य वदनं पश्यन्ती च पुनः पुनः ।

निःश्वसन्ती सुदीर्घञ्च स्वेदस्निग्धाऽभवत्तदा ।।१५।।

15. அவளும் மறுபடியும் மறுபடியும் கண்ணனின் முக கமலத்தைப் பார்த்துப் பெருமூச்சு விட்டாள். அவளது மேனி வியர்த்தது.

प्रेमभावं तयोर्वीक्ष्य राधिका हृष्टमानसा ।
चन्दनाहरणव्याजाज्जगामान्यल्लतागृहम् ।।१६।।

16. அவர்களது காதலைப் புரிந்துகொண்ட ராதை ஸந்தோஷம் அடைந்து சந்தனம் எடுத்து வருவதாகச் சொல்லி வேறு நிகுஞ்ஜத்திற்குச் சென்று விட்டாள்.

माधवश्चम्पकलतां नवसङ्गमलज्जिताम् ।
गृहीत्वा करपद्मेन सान्त्वायामास चाटुभिः ।।१७।।

17. மாதவன் நவஸங்கமத்தினால் லஜ்ஜைப்படும் சம்பகவல்லியை கைபிடித்து பல சாடுவார்த்தைகளால் ஸமாதானம் செய்தான்.

कृष्णस्य चाटुवचनैर्मोहिता गोपकन्यका ।
प्रच्युतं नीविबन्धञ्च न सस्मार मदालसा ।।१८।।

18. கண்ணனின் சாடுவார்த்தைகளில் மயங்கி மதம்கொண்டு தன்னை மறந்த சம்பகவல்லி இடுப்பு துணி அவிழ்ந்ததைக்கூட அறியவில்லை.

परिरभ्य कृशाङ्गीं तां चुचुम्ब च पुनः पुनः ।
शृङ्गारभावमखिलं विस्तरेण प्रकाशयन् ।।१९।।

19. க்ருசாங்கியான அவளைக் கட்டி அணைத்து ஸகலமான ச்ருங்கார பாவங்களும் விஸ்தாரமாக ப்ரகாசிக்கும்படி முத்தமிட்டான்.

शृङ्गाररसिकं कृष्णं परिरभ्य पुनः पुनः ।
लोकवेदौ न सस्मार तथा शीघ्रं गतां निशाम् ।।२०।।

20. ச்ருங்காரரஸிகனான கண்ணனைக் கட்டி அணைத்து முத்தமிடும் சம்பகவல்லி உலகையும் சாஸ்த்ரநியமங்களையும் மறந்தாள். இரவு போவது தெரியாமலிருந்தாள்.

एवं पल्लवपर्यङ्के सुरतोत्सवमाचरन् ।
कृष्णो रतिरणश्रान्तः शिश्ये तत्र तया सह ।।२१।।

21. பல்லவசயனத்தில் ஸுரதலீலை செய்து கண்ணன் களைத்துப் போய் அவளுடனேயே படுத்திருந்தான்.

तदा श्रीराधिकादेवी प्रेमपूरितभाषणा ।
कृष्णं विश्रमयामास ताञ्च प्रियसखीं तथा ।।२२।

22. அப்போது ராதை ப்ரேமையுடன் கொஞ்சிப் பேசி கண்ணனையும் ப்ரியஸகியான சம்பகலதாவையும் இளைப்பாற்றினாள்.

किशोरी चम्पकलता राधिकां वीक्ष्य लज्जिता ।
नोवाच किञ्चिच्चरितं प्रियस्य वनमालिनः ।।२३।।

23. கிசோரியான சம்பகவல்லி ராதையைக் கண்டு வெட்கமடைந்து ப்ரியனான வனமாலி செய்த லீலைகளில் ஏதும் சொல்லவில்லை.

राधया चम्पकलता वस्त्रभूषणचन्दनैः ।
अलङ्कृता मुदं लेभे लालिता च पुनः पुनः ।।२४।।

24. ராதையால் சந்தனபுஷ்பங்களால் அலங்கரிக்கப்பட்டு லாலனை செய்யப்பட்ட சம்பகவல்லி சந்தோஷம் அடைந்தாள்.

प्रेमपात्रं तदा भूत्वा राधिकानन्दपुत्रयोः ।
आत्मानं बहुमेने सा गोपी चम्पकवल्लरी ॥२५॥

25. ராதை-நந்தகுமாரன் இருவருடையவும் ப்ரேமபாத்ரமான தன்னை நினைந்து சம்பகவல்லி உகப்பு அடைந்தாள்.

अथानीय सखीं ताञ्च राधिका प्रेमरूपिणी ।
इयञ्च मे सपत्नीति यशोदायै न्यवेदयत् ॥२६॥

26. பிறகு ப்ரேமரூபிணியான ராதை ஸகியான சம்பகவல்லியை அழைத்து வந்து யசோதையிடம் இவளும் உங்கள் நாட்டுப்பெண் என்று ஒப்படைத்தாள்.

यशोदा मङ्गलञ्चक्रे नन्दगोपेन चोदिता ।
सह गोकुलनारीभिश्चम्पवल्लीमुकुन्दयोः ॥२७॥

27. நந்தகோபன் ப்ரேரணை செய்ய எல்லா கோகுல நாரிகளுடனும்கூடி யசோதை சம்பகவல்லிக்கும் முகுந்தனுக்கும் மங்களகாரியங்களை செய்வித்தாள்.

ताभिर्वल्लवकन्याभिरावृतं नन्दमन्दिरम् ।
तारागणपरिव्यप्तं विरेजे गगनं यथा ॥२८॥

28. நக்ஷத்ரகூட்டங்களால் ஆகாயம் சோபிப்பதுபோல் இந்த வல்லவகன்னிகைகளால் நந்தபவனம் சோபித்தது.

एवं कृष्णस्य चरितमानन्दरसकन्दलम् ।
रहस्यमपि संप्रोक्तं किमन्यच्छ्रोतुमिच्छथ ॥२९॥

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये लीलाकाण्डे*

*चम्पकवल्लीविवाहो नाम षष्ठोऽध्यायः ॥६॥*

29. ஆனந்தரஸத்திற்கு மூலகாரணமான இந்த கண்ணனின் லீலையைச் சொன்னேன். மேலும் என்ன கேட்க வேண்டும்?

இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமி மஹாப்ரபு அருளிய
ஸ்ரீப்ருந்தாவனமாஹாத்மியத்தில்
லீலா காண்டத்தில் சம்பகவல்லிவிவாஹம் என்ற
ஆறாம் அத்தியாயம்முற்றும்

# अथ सप्तमोऽध्यायः

## ஏழாம் அத்தியாயம்

### भागवता ऊचुः

वयञ्च श्रोतुमिच्छामः पद्मायाश्चरितं शुभम् ।
यस्याः प्रणयभावेन सुप्रसन्नो हरिः स्वयम् ॥१॥

பாகவதர்கள்

1. பத்மாவின் சுபமான சரிதத்தை நாங்கள் கேட்க விரும்புகிறோம். அவளின் ப்ரணயபாவத்தினால் ஹரி தானாகவே ப்ரஸன்னமானான் அல்லவா?

### श्रीसद्गुरुरुवाच

नवं नवं भगवतः पुण्यश्लोकशिखामणेः ।
चरितं द्रष्टुकामोसावुदेति भगवान् रविः ॥२॥

ஸ்ரீஸத்குரு

2. புண்யச்லோக சிகாமணியான பகவானின் புதிய புதிய லீலைகளைப் பார்க்க ஆர்வத்துடன் காலையில் சூரியன் உதிக்கிறான் போலும்.

सर्वेपि गोपवृद्धाश्च हरिकीर्तनतत्पराः ।

स्नात्वा सन्ध्यामुपासीनास्तिष्ठन्ति यमुनातटे ॥३॥

3. எல்லா பெரியோர்களும் ஹரிநாமகீர்த்தனம் செய்து கொண்டே அதிகாலையில் எழுந்து யமுனாஸ்னானம் செய்து ஸந்த்யாவந்தனம் செய்து கொண்டிருந்தனர்.

इतस्ततः सञ्चरन्त्यो गोप्यश्च परमाद्भुतम् ।
गायन्त्यः कृष्णचरितं प्रसूनानि हरन्ति च ॥४॥

4. கோபிகைகளும் பரமசுத்தமான க்ருஷ்ணலீலையைப் பாடிக்கொண்டே இங்குமங்கும் சென்று பூப்பறித்துக் கொண்டிருந்தனர்.

एवं हि गोपबालाश्च गोवत्सान् लीलया तदा ।
कृष्णातटे चारयन्ति रम्यशाद्वलशीतले ॥५॥

5. ஆயர்சிறுவர்களும் விளையாட்டாக கன்றுகளை யமுனாதீரத்தில் பசும்புல்வெளியில் மேய்த்துக் கொண்டிருந்தனர்.

चारुसोपानसम्युक्ता महामण्टपसम्युता ।
तमालवृक्षसंवीततटशोभितगोकुला ॥६॥

प्रवालमौक्तिकाकीर्णा हंससारससेविता ।
विकसत्पद्मनिकरा मत्स्यकूर्मसमाश्रिता ॥७॥

कालिन्दी शुशुभे तत्र कमनीयगतिर्हरेः ।
संयोगसौख्यलाभेन पवित्रविरजाधिका ॥८॥

6-8. அழகான படிக்கட்டுகளும் மஹாமண்டபங்களும் உடையதும்,தமால விருக்ஷங்களின் நிழலில் படுத்துக்கொண்டிருக்கும் மாடுகளால் அழகியதும், பவழமும் முத்தும் கொழிக்கின்றதும், ஹம்ஸமும் ஸாரஸமும் விளையாடுகிறதும், தாமரை மலர்ந்ததும்,

மீனும் ஆமையும் நீந்துகின்றதும், அழகான நடைஉள்ளதும், கண்ணனின் அங்கஸங்கத்தினால் பவித்ரமாகி விரஜாநதியை விடப்பெருமை வாய்ந்த யமுனை அங்கு சோபித்தாள்.

तदा पद्मानना पद्मा संप्राप्य यमुनातटे ।
विविक्तस्थानमागत्य स्नानञ्चक्रे यथाविधि ॥९॥

9. அப்போது பத்மம் போன்ற முகமுள்ள பத்மா யமுனைக்கு வந்து தனிமையான இடத்தில் விதிப்படி ஸ்னானம் செய்தாள்.

कुंभेनादाय सलिलं गच्छन्तीं स्वगृहं प्रति ।
मध्येमार्गं ददर्शैव भगवान् श्यामसुन्दरः ॥१०॥

10. குடத்தில் தண்ணீர் எடுத்துக்கொண்டு வீட்டுக்குப் போகும்போது நடுவழியில் சியாமஸுந்தரன் அவளைப் பார்த்தான்.

राधया जलसेवार्थं नियुक्ता गोपकन्यका ।
यदृच्छया हरिं वीक्ष्य संप्राप प्रेमकौतुकम् ॥११॥

11. ராதையினால் ஜலஸேவைக்காக நியமிக்கப்பட்ட பத்மா எதிர்பாராமல் ஹரியைப் பார்த்து ப்ரேம குதூஹலமடைந்தாள்.

सुस्निग्धवसनां पद्मां पीनवृत्तपयोधराम् ।
कलहंसगतिश्चापि चञ्चलापाङ्गवीक्षणाम् ॥१२॥

प्रसन्नवदनाम्भोजां पक्वबिम्बफलाधराम् ।
श्यामां सौन्दर्यनिलयां विलोक्य चकमे हरिः ॥१३॥

12-13. ஈரப்புடவையுடன் பருத்த ஸ்தனங்கள் உள்ளவளாய் ஹம்ஸகதியில் நடப்பவளும், சஞ்சலமான கடைக்கண்பார்வை உடையவளும், ப்ரஸன்னமுககமலம் உள்ளவளும், கொவ்வைப் பழம்போல் சிவந்த உதடுகளுள்ளவளும், இளமையும் அழகும் மிக்கவளுமான பத்மாவைக் கண்டு கண்ணன் காதலித்தான்.

सापि तं वीक्ष्य गोविन्दं नानाविभ्रमसम्युता ।
गच्छन्ती नापगच्छन्ती पुनः पुनरुदैक्षत ॥१४॥

*14. அவளும் கண்ணனைக் கண்டு பலவிதமான முகபாவமுள்ளவளாய் போகாமலும் நிற்காமலும் நடந்துகொண்டே அடிக்கடி கண்ணனைப் பார்த்தாள்.*

तस्या भावोदयं वीक्ष्य कृपया गोपबालकः ।
मन्दं मन्दं चरंस्तत्र मोहयामास तन्मनः ॥१५॥

*15. அவள் உள்ளத்தில் ப்ரேமபாவம் உதித்துவிட்டதைக் கண்டு க்ருபாளுவான கோபாலன் மெல்ல மெல்ல கிட்டி வந்து அவள் மனதை மயக்கினான்.*

प्रेम्णा निरङ्कुशेनाथ गजेन्द्रगमनो हरिः ।
स्वच्छन्दं पृष्ठतो गत्वा जहार सजलं घटम् ॥१६॥

*16. கஜேந்திரன்போல் நடந்துவந்து அவளது பின்புறமாக நின்றுகொணடு தண்ணீர் குடத்தைப் பிடிங்கினான்.*

गृहीत्वा सापि हस्तेन धावन्ती तत्र तत्र ह ।
न ददौ चतुरा गोपी वञ्चयन्ती हरिं प्रियम् ॥१७॥

*17. சாதுர்யமுள்ள அவளும் இங்குமங்கும் ஓடுகின்றவளாய் தண்ணீர்குடத்தைத் தராமல் ஏமாற்றினாள்.*

बलादाकृष्य तां कृष्णः परिरभ्य पुनः पुनः ।
कुंभं जग्राह सरसं स्तनकुंभद्वयं तथा ॥१८॥

*18. கண்ணன் பலவிதமாய் அவளைப் பிடித்து இழுத்து அவளது தண்ணீர் குடத்தைப் பிடுங்கியதோடில்லாமல் அவளது ஸ்தனகும்பத்தையும் பிடித்தான்.*

सापि प्रणयकोपेन कुंभं त्यक्त्वा महावने ।
स्फोटयन्त्यङ्गुलीपङ्क्तिं तस्थौ च स्फुरिताधरा ।।१९।।

*19.* அவள் உடனே ப்ரணயகோபம் காட்டி குடத்தைத் தந்துவிட்டு உதட்டைப் பிதுக்கிக்கொண்டு கைகளை சொடுக்கிக்கொண்டு நின்றாள்.

सान्त्वयामास तां कृष्णः पद्मां पद्मविलोचनाम् ।
पुनरादाय यमुनासलिलं स्वयमेव हि ।।२०।।

*20.* மறுபடியும் குடத்தில் யமுனையிலிருந்து தண்ணீர் மொண்டு வந்து அவளிடம் கொடுத்து பத்மம்போன்ற நயனமுள்ள பத்மாவை கண்ணன் ஸமாதானம் செய்தான்.

ततो जगाम पद्मा च वृषभानोर्गृहं महत् ।
निरङ्कुशं प्रेमभावं स्मरन्ती वनमालिनः ।।२१।।

*21.* பத்மா கண்ணனின் சுதந்திரமான ப்ரேமையை நினைத்தவாறே வ்ருஷபானுகோபரின் வீட்டுக்குப் போனாள்.

पप्रच्छ कारणं देवी विलम्बस्य च राधिका ।
सर्वं तद्वर्णयामास सापि कृष्णस्य चेष्टितम् ।।२२।।

*22.* தாமதித்து வரகாரணம் என்ன என்று ராதை கேட்க பத்மா, கண்ணனுடன் நடந்தவிஷயம் எல்லாம் சொல்லிவிட்டாள்.

तयोर्विज्ञाय हृदयं दिने तस्मिन्निशान्तरे ।
कुञ्जे संयोजयामास पद्मापद्मविलोचनौ ।।२३।।

*23.* அவர்களின் உள்ளத்தை அறிந்த ராதை அன்றே நிகுஞ்ஜத்தில் கண்ணனையும் பத்மாவையும் கூட்டி வைத்தாள்.

पद्मामालिङ्ग्य भगवान् प्रसन्नवदनाम्बुजः ।
पप्रच्छ प्रेमभावेन लज्जयाऽवाङ्मुखीं तथा ।।२४।।

24. பத்மாவை ஆலிங்கனம் செய்துகொண்டு ப்ரஸன்னமான முககமலம் உள்ளவனாய் கண்ணன், வெட்கத்தினால் தலைகுனிந்த அவளைப் பார்த்துக் கேட்டான்.

श्रीभगवानुवाच

प्रातः कलिन्दजातीरे चुम्बनं देहि मे प्रिये ।
इति संप्रार्थितापि त्वं मामुपेक्ष्य गृहं गता ।।२५।।

ஸ்ரீபகவான்

25. காலையில் நான் ஒரு முத்தம் தா என்று கேட்டும் கூட திரும்பிப் பாராமல் வீட்டுக்கு போனாயே.

सांप्रतं स्वयमेवास्मिन् पुष्पतल्पे लतागृहे ।
जवादालिङ्ग्य मां पद्मे चुम्बसि प्रेमपूर्वकम् ।।२६।।

26. இப்போது இந்த நிகுஞ்ஜத்தில் புஷ்பசயனத்தில் என்னைக் கட்டிக் கொண்டு வேகமாய் ப்ரேமையுடன் பாய்ந்து பாய்ந்து முத்தம் தருகிறாயே.

स्वभावः स्त्रीजनस्यायं जानामि वरवर्णिनि ।
कुर्वन्ती प्रणयक्रोधं विनीते प्राणवल्लभे ।।२७।।

27. பெண்களுக்கே இதுதான் சுபாவம். அழகியான பத்மா! ப்ராணவல்லபன் கெஞ்சினால் மிஞ்சுவார்கள். மிஞ்சினால் கெஞ்சுவார்கள்.

पद्मोवाच

अतिक्रमं क्षमस्वेमं प्रातः सूर्यसुतातटे ।
स्वच्छन्दचरितोसि त्वमहं सच्चरितान्विता ।।२८।।

பத்மா

28. என்னை மன்னித்து விடுங்கள். காலையில் யமுனா தீரத்தில் நீங்கள் சுதந்திரமாக நடந்து கொண்டீர்களே! நான் குலஸ்த்ரீ அல்லவா? நல்ல நடத்தையுள்ளவள்.

विज्ञाप्य वार्षभानव्यै स्वामिन्यै चरितं तव ।
तयानुमोदिता साहं त्वामद्य समुपस्थिता ॥२९॥

29. ராதையினிடம் சொல்லி அனுமதி பெற்று இப்போது வந்துள்ளேன். ராதைதான் என் ஸ்வாமினி.

श्रीसद्गुरुरुवाच

इत्युक्त्वा लज्जया सद्यः पश्यन्तीं गोपकन्यकाम् ।
परिरेभे कृपासिन्धुः प्रेमपूर्वं पुनः पुनः ॥३०॥

ஸ்ரீஸத்குரு

30. இவ்வாறு சொல்லிவிட்டு ப்ரேமையுடனும் லஜ்ஜையுடனும் பார்க்கும் பத்மாவை க்ருபாளுவான கண்ணன் பல தடவை ஆலிங்கனம் செய்து கொண்டான்.

प्रातरुत्थाय सानन्दं पद्मया परिरम्भितः ।
जगाम नन्दभवनं ववन्दे मातरं तथा ॥३१॥

31. காலையிலெழுந்து பத்மாவுடன் நந்தபவனம் வந்து யசோதையை ஸேவித்தான்.

इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये लीलाकाण्डे पद्मापरिणयो नाम सप्तमोऽध्यायः ॥७॥

ஸ்ரீக்ருஷ்ணப்ரேமி மஹாப்ரபு அருளிய
ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில் லீலாகாண்டத்தில்
பத்மாவிவாஹம் என்ற ஏழாம் அத்தியாயம் முற்றும்.

38

# अथाष्टमोऽध्यायः

## எட்டாம் அத்தியாயம்

### श्रीसद्गुरुरुवाच

चरितं रङ्गदेव्याश्च श्रोतव्यमिह सज्जनैः ।
कीर्तयामि महापुण्यं पवित्रं कल्मषापहम् ।।१।।

ஸ்ரீஸத்குரு

*1. ரங்கதேவியின் சரித்ரமும் ஸாதுக்கள் கேட்க வேண்டியது. கல்மஷத்தைப் போக்குவதும் பவித்ரமானதும் மஹாபுண்யமானதுமான அதைச் சொல்லுவேன்.*

सा कदाचिन्निकुञ्जे तु पुष्पराशिसुगन्धिते ।
अलङ्कारविधिञ्चक्रे राधायाः प्रेमपूर्वकम् ।।२।।

*2. ஒருஸமயம் புஷ்பங்கள் மணம்வீசும் நிகுஞ்ஜத்தில் ரங்கதேவி ராதைக்கு அன்புடன் அலங்காரம் செய்து கொண்டிருந்தாள்.*

एतदेव हि कैङ्कर्यं रङ्गदेव्या दिने दिने ।
अङ्गरागैर्बहुविधैरलङ्कुर्याद्धरिप्रियाम् ।।३।।

*3. இதுதான் அவளது கைங்கர்யம். தினம்தோறும் பலவிதமான அங்கராகங்களால் ஹரிப்ரியாவான ராதையை அலங்கரிக்க வேண்டும்.*

चित्रं कपोलयोश्चैव पत्रञ्च स्तनमण्डले ।
विलिखन्ती मुदं लेभे रङ्गदेवी तदा श्रियः ।।४।।

*4. அப்போது ரங்கதேவி ராதையின் கன்னத்தில் சித்ரமும்*

ஸ்தனங்களில் மகரபத்ரமும் எழுதி மனம் மகிழ்ந்தாள்.

तथापि कृष्णपादाब्जवैचित्र्यं नात्मना कृतम् ।
इति सञ्चिन्त्य खेदञ्च प्राप श्रीरङ्गदेविका ॥५॥

5.எவ்வளவு அழகாக எழுதினாலும் கண்ணன் கையின் லாகவம் தனக்கு இல்லையே என்று வருந்தினாள்

चित्रलेखनशिक्षायै रङ्गदेवीं तु राधिका ।
प्रेषयामास कृष्णस्य सविधं प्रेमरूपिणी ॥६॥

6. அன்பேவடிவான ராதை இந்தக் கலையைக் கற்று வருவதற்காக ரங்கதேவியைக் கண்ணனிடம் அனுப்பினாள்.

तां विलोक्य निकुञ्जे तु लज्जयावनताननाम् ।
प्रेषितां राधया चैव प्रेमपूर्वमुपाह्वयत् ॥७॥

7. நிகுஞ்ஜத்தின் வாசலில் தலைகுனிந்து நிற்பவளும் ராதையால் அனுப்பப்பட்டு வந்திருப்பவளுமான ரங்கதேவியை கண்ணன் உள்ளே அழைத்தான்.

अङ्गरागान् बहुविधान् संपुटेषु निधाय सा ।
प्रदर्श्य हरये प्राह लज्जयाऽव्यक्तभाषणा ॥८॥

8. அவன் பலவிதமான அங்கராகங்களை ஸம்புடங்களில் வைத்துக்கொண்டு கண்ணனிடம் காட்டி வெட்கத்துடன் கொஞ்சிப்பேசினாள்.

चित्रं विलिखसि त्वं तु स्वामिन्याः स्तनमण्डले ।
यथा तथैव मामद्य शिक्षय प्राणवल्लभ ॥९॥

9. ப்ராணவல்லபா! ஸ்வாமினியின் ஸ்தனமண்டலத்தில் மகரபத்ரம் எழுதவேண்டும். அந்த முறையை எனக்கு சொல்லித் தாரும்.

इत्युक्त्वा लज्जया सद्यः सन्दष्टाधरपल्लवाम् ।
अवाङ्मुखीं वेपमानां तथास्त्वित्यब्रवीद्धरिः ।।१०।।

10. இவ்வாறு சொல்லிவிட்டு உடனே வெட்கத்தினால் உதட்டைக் கடித்துக்கொண்டு தலைகுனிந்து நிற்பவளும்; உடலில் நடுக்கமுள்ளவளுமான ரங்கதேவியைப் பார்த்து கண்ணன் அப்படியே ஆகட்டும் என்றான்.

तामेव विनिवेश्याथ मञ्जे किसलयैः कृते ।
अलङ्कारञ्चकारैव रसिकेन्द्रो हरिः स्वयम् ।।११।।

11. அழகிய கிஸலயமஞ்சத்தில் அவளையே உட்கார வைத்து ரஸிகேந்த்ரனான ஹரி தானே அவளுக்கு அலங்காரம் செய்து விடலானான்.

अलक्तकं चरणयोः श्रीचन्द्रं च नखेष्वपि ।
करयोः पद्मरागञ्च ललाटे तिलकं तथा ।।१२।।
हरिचन्दनबिन्दुञ्च भ्रुवोरुपरि सुन्दरान् ।
कज्जलं नेत्रयोश्चापि चारुचित्रं कपोलयोः ।।१३।।
विलिख्य रसिकेन्द्रोपि प्रेमपूरितवीक्षणः ।
अपश्यद्रङ्गदेवीञ्च सानन्दं प्रियदर्शनाम् ।।१४।।

12-14. சரணங்களில் செம்பஞ்சுக் குழம்பு தீட்டினான். நகங்களில் ஸ்ரீசந்த்ரமும் கைகளில் பத்மராகமும் நெற்றியில் திலகமும், புருவங்களின் மேல் சந்தனபிந்துவும், கண்களில் மையும்; கன்னங்களில் சித்ரமும் தீட்டி, ரஸிகேந்த்ரன் ப்ரேமையுடன் ப்ரியதர்சினியான அவளது அழகை ஆனந்தமாகப் பார்த்தான்.

संव्यानञ्च तिरस्कृत्य मुमोच स्तनपट्टिकाम् ।

ब्रुवन्तीं सान्त्वयामास मुञ्च मां मुञ्च मामिति ।।१५।।

15. அவளது மேலாக்கைத் தள்ளிவிட்டு ரவிக்கையையும் அவிழ்த்தான். என்னை விடுங்கள் என்னை விடுங்கள் என்று சொல்லும் அவளை ஸமாதானம் செய்தான்.

स्तनौ विलोक्य गोविन्दः पक्वतालफलोपमौ ।
नितरां मोहमापन्नो मकरं विलिलेख च ।।१६।।

16. கோவிந்தன் பக்வமான பனம்பழம்போன்ற அவளது ஸ்தனங்களைப் பிடித்து அவைகளில் மகரபத்ரம் எழுதி மயங்கிப் போனான்.

तस्याः स्तनं गृहीत्वायमेकहस्तेन माधवः ।
विलिलेख तथान्येन पत्रञ्च विविधं हरिः ।।१७।।

17. மாதவன் ஒரு கையால் அவளது ஸ்தனத்தைப்பற்றி மற்றொரு கையால் மகரபத்ரம் எழுதினான்.

स्पर्शे स्पर्शे विमुग्धा सा कृष्णस्य वनमालिनः ।
निरङ्कुशप्रेमयुक्ता तमेव परिषस्वजे ।।१८।।

18. ஒவ்வொரு ஸ்பரிசத்திலும் மயக்கமடைந்த அவள் அடக்க முடியாத ஆசையுடன் அவனையே தழுவினாள்.

तदा श्रीरङ्गदेव्यास्तु स्तनकाश्मीरलेपनम् ।
कृष्णवक्षःस्थलं प्राप गाढालिङ्गनकारणात् ।।१९।।

19. அப்போது அவளது ஸ்தனமண்டலத்திலிருந்த மகரபத்ரம் காடாலிங்கனத்தால் கண்ணனின் வக்ஷஸ்தலத்திலேயே பதிந்தது.

तयोः प्रवृत्ता सरसं तत्रैव तु लतागृहे ।
दिव्या च सुरतक्रीडा साक्षान्मन्मथमोहिनी ।।२०।।

20. அதே லதாக்ருஹத்தில் மன்மதனும் மயங்கும்படியான அவர்களின் ஸுரதலீலை ஆரம்பமாயிற்று.

प्रातरुत्थाय सा गोपी कृष्णस्मरणमोहिता ।
राधिकासन्निधिं प्राप निद्रालसविलोचना ।।२१।।

21. காலையில் எழுந்து ரங்கதேவி க்ருஷ்ணஸ்மரணத்தினால் மயங்கி தூக்கக்கலக்கத்துடன் ராதையின் ஸன்னிதியை அடைந்தாள்.

कृष्णदष्टाधरपुटां नखाङ्कितपयोधराम् ।
स्रस्तकेशीं निःश्वसन्तीं मदालसविलोचनाम् ।।२२।।

निशि भुक्तां मुकुन्देन निर्मलप्रेमपूरिताम् ।
विलोक्य रङ्गदेवीं तामानन्दं प्राप राधिका ।।२३।।

22-23 கண்ணனால் கடிக்கப்பட்ட உதடுஉள்ளவளும், நகம் பதிந்த ஸ்தனங்கள் உள்ளவளும், தலை கலைந்தவளும், பெருமூச்சு விடுபவளும், மதத்தினால் அலஸமான நயனம் உள்ளவளும், இரவு முகுந்தனால் அனுபவிக்கப்பட்டவளும், நிர்மலமான ப்ரேமை நிரம்பியவளுமான ரங்கதேவியைப் பார்த்து ராதிகா பரமானந்தம் அடைந்தாள்.

किञ्चकार निशायां तु निबिडेऽस्मिंल्लतागृहे ।
अबलां त्वामविज्ञातरतिलीलां हरिः स्वयम् ।।२४।।

24. நெருக்கமான இந்த நிகுஞ்ஜத்தில் இரவு ஹரி அபலையும் ஒன்றும் தெரியாதவளுமான உன்னை என்ன செய்து விட்டான். அலங்காரம் செய்யக் கற்றுக்கொடுத்தானா?

इत्यपृच्छद्विशेषेण रङ्गदेवीं तु राधिका ।
लज्जारुणं मुखं तस्याः द्रष्टुकामा पुनः पुनः ।।२५।।

25. இவ்வாறு ராதை ரங்கதேவியை,அவளது வெட்கத்தினால்

சிவந்த முகத்தைப் பார்க்கும் ஆசையினால் கிண்டி கிண்டி கேட்டாள்.

जगत्त्रये दुर्लभं किं दास्यास्ते हरिवल्लभे ।
या स्वयं स्वसखीभ्यस्त्वं ददासि हरिसङ्गमम् ।।२६।।

26. ஹரிவல்லபே! உன் தாஸிக்கு மூவுலகிலும் கிடைக்காதது என்ன இருக்கிறது! நீ ஸகிகளுக்கு தானே ஹரியின் ஸங்கமத்தைத் தருகின்றாயல்லவா!

इत्युक्त्वा प्रेमभक्त्यैव बाष्पस्निग्धविलोचना ।
जग्राह चरणौ देव्या रङ्गदेवी सुलोहितौ ।।२७।।

27. இவ்வாறு சொல்லி ப்ரேமபக்தியினால் ஆனந்த கண்ணீருடன் ரங்கதேவி சிவந்த ஸ்ரீராதாசரணத்தைப் பிடித்து வணங்கினாள்.

लालयामास तां देवी स्वकीयां करुणानिधिः ।
अङ्कमारोप्य सानन्दं परिहासञ्चकार च ।।२८।।

28. ஸ்ரீராதையும் தன் தோழியான ரங்கதேவியை மடியில் உட்கார வைத்து லாலனை செய்தாள். பரிஹாஸமும் செய்தாள்.

स्वसखीं रङ्गदेवीञ्च गृहमानीय राधिका ।
न्यवेदयद्यशोदायै परमानन्दपूरिता ।।२९।।

29. பெருமகிழ்ச்சியுடன் தன் தோழியான ரங்கதேவியை வீட்டுக்கு அழைத்து வந்து யசோதையினிடம் ஒப்படைத்தாள்.

गान्धर्वेण विवाहञ्च रङ्गदेवीस्वपुत्रयोः ।
विज्ञाय नन्दमहिषी तयोश्चक्रे सुमङ्गलम् ।। ३० ।।

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये लीलाकाण्डे रङ्गदेवीविवाहो नामाष्टमोऽध्यायः ।।८।।*

30. ரங்கதேவிக்கும், தன் புத்ரனுக்கும் காந்தர்வ விவாஹம் நடந்ததை அறிந்து யசோதை, அவர்களுக்கு மங்களகாரியங்களை செய்வித்தாள்.

இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமி மஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில் லீலா காண்டத்தில் ரங்கதேவிவிவாஹம் என்ற எட்டாம் அத்தியாயம் முற்றும்

# अथ नवमोऽध्यायः

## ஒன்பதாம் அத்தியாயம்

### श्रीसद्गुरुरुवाच

इन्दुलेखेति विख्याता काचिद्गोपकुमारिका ।
आसीच्छ्रीवार्षभानव्या बहिः प्राणसमा सखी ।।१।।

1. இந்துலேகா என்ற ஒரு கோபகுமாரி இருந்தாள். அவள் ராதைக்கு உயிருக்கு ஸமமான தோழி.

नानाभावरसज्ञा सा नाट्यशास्त्रविशारदा ।
नृत्येन तोषयामास स्वामिनीं वार्षभानवीम् ।।२।।

2. பலவிதமான ரஸபாவங்களுடனும் நாட்யமாடுவதில் திறமை உள்ளவள். நாட்யத்தில் ராதையை சந்தோஷிக்கச் செய்வாள்.

कृशाङ्गीमिन्दुलेखां तां नानाभावविलासिनीम् ।
इयेष संयोजयितुं कृष्णेन रसिकेन सा ।।३।।

3. க்ருசாங்கியும் பலவிதமான ரஸபாவமுள்ளவளுமான இந்துலேகாவை ரஸிகனான கண்ணனுடன் கூட்டிவைக்க விரும்பினாள் ராதை.

सा नित्यं सङ्गमं शौरेरिच्छति स्म तथापि च ।

लज्जाधिक्यादमुं दृष्ट्वा सन्ततं विमुखी स्थिता ।।४।।

4. இந்துலேகாவும் தினமும் கிருஷ்ணசங்கமத்தை விரும்பினாள். ஆயினும் அதிக வெட்கத்தினால் முகம் காட்டாமலிருந்தாள்.

अमन्दलज्जया युक्तां कृष्णसङ्गकुतूहलाम् ।
उवाच प्रेमभावज्ञा देवी कृष्णमनोहरी ।।५।।

5. க்ருஷ்ணமனோஹரியான ராதை அதிகமான லஜ்ஜை உடையவளும், க்ருஷ்ணஸங்கமத்தில் ஆர்வம் உள்ளவளுமான இந்துலேகாவைப் பார்த்துச் சொன்னாள்.

श्रीदेव्युवाच

अस्मिन् बृन्दावने कृष्णं राकाचन्द्रविराजिते ।
आवां नाट्येन गोविन्दं तोषयाव प्रिये सखि ।।६।।

ஸ்ரீதேவி

6. ப்ரியஸகி! பௌர்ணமிசந்திரனால் அழகிய இந்த ஸ்ரீப்ருந்தாவனத்தில் நாம் இருவரும் நாட்டியமாடி கண்ணனை ஸந்தோஷப்படுத்துவோமா!

यदहं नृत्यवेगेन भवेयं विजिता त्वया ।
ददामि मम सर्वस्वं तुभ्यमेव प्रिये सखि ।।७।।

7. ப்ரியஸகி! நாட்டியத்தில் நான் உன்னிடம் தோற்று விட்டேனாகில் எனது ஸர்வஸ்வமான தனத்தை உனக்கு தந்துவிடுவேன்.

तथा मयापि नृत्येन यदि त्वं विजिता भवेः ।
मदाज्ञामनुवर्तस्व चन्द्रलेखे सकौतुकम् ।।८।।

8. அவ்வாறே நீ என்னிடம் தோற்று விட்டாலும் சந்த்ரலேகே, நீ எனது ஆசையை நிறைவேற்ற வேண்டும்.

## चन्द्रलेखोवाच

सर्वथा तव दास्यस्मि सांप्रतं किं परीक्षया ।
कथं मयूरनृत्यं तु कुक्कुटोऽनुसरत्सखि ॥९॥

9. நான் எவ்விதத்திலும் உங்கள் தாஸிதானே. இப்போது பரீக்ஷை எதற்கு? மயிலின் எதிரில் கோழி ஆடமுடியுமா?

तथापि प्रेमभावेन त्वामेवानुसराम्यहम् ।
त्वद्दत्तः स्वीकृतः सर्वः प्रसादः प्रेमपूर्वकम् ॥१०॥

10. ஆயினும் நான் உங்களையே அனுஸரிக்கிறேன். நீங்கள் கொடுக்கும் ப்ரஸாதத்தையும் ஏற்றுக் கொள்கிறேன்.

## श्रीसद्गुरुरुवाच

इत्युक्ता चन्द्रलेखा च राधयैव ननर्त सा ।
कृष्णोपि हस्ताङ्गुलिभिस्तालं कुर्वन् ददर्श ते ॥११॥

11. இவ்வாறு சொல்லி சந்த்ரலேகா ராதையுடன் நாட்டியமாடினாள். கண்ணனும் தன் கைகளால் தாளம் போட்டுக்கொண்டே பார்த்துக் கொண்டிருந்தான்.

तस्मिन् बृन्दावने रम्ये मलयानिलसेविते ।
श्रीकृष्णसन्निधौ चारुस्फटिकस्तम्भमण्टपे ॥१२॥

इन्दुलेखाराधिके ते नटनञ्चक्रतुर्मुदा ।
शृङ्गाररसवैचित्र्यं दर्शयन्त्यौ नवं नवम् ॥१३॥

12-13 மலயமாருதம் வீசும் அழகிய ரம்யமான பிருந்தாவனத்தில் பளிங்குமண்டபத்தில் ஸ்ரீக்ருஷ்ணஸன்னிதியில் புதுபுது ச்ருங்கார ரஸபாவங்களைக் காட்டி ராதிகாவும்

சந்த்ரலேகாவும் ஸந்தோஷமாக நடனம் ஆடினார்கள்.

कृष्णस्य हृदयञ्चापि तदा डोलायितं बत ।
इन्दुलेखाराधिकयोर्दिव्यसौन्दर्यदर्शनात् ॥१४॥

14. இந்துலேகா, ராதை இருவரின் அழகைக்கண்டு அப்போது கண்ணனின் உள்ளமும் ஊசலாடிற்று.

राधां पश्यति गोविन्दश्चन्द्रलेखां तथा पुनः ।
पुनः पश्यति राधाञ्च तयोः सौन्दर्यमोहितः ॥१५॥

15. அவர்கள் அழகில் மயங்கிய கண்ணன் ராதையைப் பார்த்தான். பிறகு சந்த்ரலேகாவைப் பார்த்தான். பிறகு ராதையைப் பார்த்தான்.

स्वयमेव हि कारुण्याद्राधिका प्रेमसम्युता ।
संप्रापापजयं देवी दातुं सख्यै रतिं हरेः ॥१६॥

16. தனது தோழியைக் கண்ணனிடம் கொடுக்க வேண்டி கருணையால் ராதை தானே தோற்றுப் போனாள்.

जितास्म्यहं चन्द्रलेखे त्वया नाट्येन सुन्दरि ।
तस्मात्सर्वस्वमेव त्वं स्वीकुरु स्वयमेव मे ॥१७॥

17. சந்திரலேகே! நாட்டியத்தில் உன்னிடம் நான் தோற்று விட்டேன். எனவே எனது ஸர்வ சொத்தான கோபால ரத்னத்தை நீயே பெற்றுக்கொள்.

एष सर्वस्वभूतो मे नायको नन्दनन्दनः ।
तस्मात्तेनैव गच्छ त्वं मञ्जुलं कुञ्जमन्दिरम् ॥१८॥

18. எனது ஸர்வமும் என் நாயகனான நந்தநந்தனனே. எனவே அவனுடன் மஞ்சுளமான குஞ்ஜக்ருஹத்திற்கு நீ போ.

इत्युक्त्वा प्रापयामास निकुञ्जं वनमालिना ।
इन्दुलेखा बलादेषा नवसङ्गमलज्जिताम् ॥१९॥

19. ப்ரதமஸமாகமத்தினால் வெட்கப்படும் இந்துலேகாவை ராதை பலவந்தமாக வனமாலியுடன் நிகுஞ்சத்தில் கூட்டி வைத்தாள்.

यदा स्वबाहुना कृष्णस्तस्या जग्राह कुन्तलम् ।
केशबन्धो विमुक्तोऽभूद्वनपुष्पविराजितः ॥२०॥

20. கண்ணன் இந்துலேகாவின் கேசத்தைப் பிடித்தும் கேசம் முடிச்சு அவிழ்ந்து. அதிலுள்ள மலர்கள் சிந்தின.

यदा स्ववक्षसा कृष्णः परिरेभे प्रियां सखीम् ।
स्वयं च्युताऽभवत्तस्यास्तदैव स्तनमपट्टिका ॥२१॥

21.கண்ணன் இந்துலேகாவின் மார்போடு மார்பு வைக்கும் போதே அவளது ரவிக்கை தானாகவே அவிழ்ந்தது.

यदा कराभ्यां गोविन्दस्तामुत्थाप्य चुचुम्ब सः ।
नीवीबन्धस्तदा तस्याः स्वयमेव च्युताऽभवत् ॥२२॥

22. கோவிந்தன் அவளைக் கட்டித்தூக்கி முத்தாடும்போது பாவாடைமுடிச்சு தானே அவிழ்ந்தது.

यदा पल्लवपर्यङ्के शिश्ये श्रीनन्दनन्दनः ।
तस्य वक्षसि सानन्दं तदा सा मोहिताऽपतत् ॥२३॥

23. கிஸலயசயனத்தில் கோவிந்தன் அவள் மார்பில் படுத்ததும் அவள் மோஹித்துப் போனாள்.

लज्जया करयुग्मेन पिधाय वदनं सखी ।
कृष्णं सन्तोषयामास विलुठन्ती पुनः पुनः ॥२४॥

24. லஜ்ஜையால் கைகளால் முகத்தை மூடிக்கொண்டு புறண்டு புறண்டு முறண்டு செய்து கண்ணனை ஸுகப்படுத்தினாள்.

अमन्दलज्जया युक्तां हसन्तीञ्च पुनः पुनः ।
सान्त्वयन् रमयामास मधुरैश्चाटुभाषणैः ।।२५।।

25. அதிகவெட்கத்தினால் முறண்டு செய்பவளும், அடிக்கடி சுகிப்பவளுமான அவளை கண்ணன் சாடுவார்த்தைகளால் ஸமாதானம் செய்தான்.

तथापि लज्जितां देवीं बलादाक्रम्य माधवः ।
स्वच्छन्दं तोषयन्नेनां चकार सुरतं प्रभुः ।।२६।।

26. ஆயினும் வெட்கப்படும் அவளை கண்ணன் சுதந்திரமாக பலவந்தப்படுத்தி ஸுரதலீலை செய்து அவளை ஸந்தோஷப் படுத்தினான்.

एवं रतिरणश्रान्तां पतितां लतिकामिव ।
कराभ्यां लालयन् मन्दं सान्त्वयामास माधवः।।२७।।

27. இவ்வாறு மன்மதயுத்தத்தினால் களைத்துப்போன அவளை கையில் ஏந்தி லாலனை செய்து ஸமாதானம் செய்தான்.

धारयामास वस्त्रञ्च मेखलां स्तनपट्टिकाम् ।
अङ्गरागं विलिख्यापि केशपाशं बबन्ध च।।२८।।

28. வஸ்த்ரத்தையும் கஞ்சுகத்தையும் கட்டிவிட்டு அங்கராகங்களை தீட்டிவிட்டு கேசத்தையும் முடிந்து விட்டான்.

इच्छन्तं तं बहिर्गन्तुं गोविन्दं प्राणवल्लभम् ।
आलिङ्ग्य प्रेमवेगेन चन्द्रलेखा रुरोध ह ।।२९।।

29. கண்ணன் நிகுஞ்சத்தை விட்டு வெளியேறும் போது ப்ரேமையுடன் இந்துலேகா அவனைக் கட்டிப்பிடித்து நிறுத்தினாள்.

तस्मात्तत्रैव गोविन्दस्तल्पे किसलयावृते ।
निनाय रात्रिशेषञ्च तया सल्लापमाचरन् ॥३०॥

30. ஆகையால் அந்த நிகுஞ்ஜத்திலேயே கிஸலய சயனத்தில் படுத்து அவளுடன் ஸல்லாபம் செய்துகொண்டு இரவு பொழுது போக்கினான்.

इन्दुलेखाविवाहञ्च यशोदायै न्यवेदयत् ।
हसन्ती प्रेमभावेन राधिका चारुभाषिणी ॥३१॥

31. சாருபாஷிணியான ராதை இந்துலேகாவின் விவாஹத்தையும் அன்புடன் சிரித்துக் கொண்டே யசோதையினிடம் தெரிவித்தாள்.

इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये लीलाकाण्डे
इन्दुलेखाविवाहो नाम नवमोऽध्यायः ॥९॥

இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிமஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில் லீலாகாண்டத்தில் இந்துலேகாவிவாஹம் என்ற ஒன்பதாம் அத்தியாயம் முற்றும்

# अथ दशमोऽध्यायः

## பத்தாம் அத்தியாயம்

### श्रीसद्गुरुरुवाच

चित्रायाश्चरितं रम्यं श्रवणानन्दवर्धनम् ।
वक्ष्यामि परमं पुण्यं कामकल्मषनाशनम् ॥१॥

ஸ்ரீஸத்குரு

1. ரம்யமானதும், புண்யமானதும் ,காமகல்மஷத்தை நீக்குவதும், பரமானந்தம் தருவதுமான சித்ராவின் சரிதத்தைச் சொல்லுவேன்.

नियुक्ता राधया देव्या चित्रा वसनकर्मणि ।
वस्त्रनिष्पीडनं कर्तुं जगाम यमुनाह्रदम् ॥२॥

2. வஸ்த்ரசோதனம் செய்ய ராதையால் நியமிக்கப்பட்ட சித்ரா துணி தோய்ப்பதற்காக யமுனைக்குச் சென்றாள்.

उत्फुल्लपद्मसङ्कीर्णं हंससारससेवितम् ।
गुञ्जद्भ्रमरसम्युक्तं प्रसन्नजलपूरितम् ॥३॥

मत्स्यकच्छपसम्युक्तं प्रवालमणिशोभितम् ।
चारुवीचीचयान्दोलं तटवर्धितभूरुहम् ॥४॥

शुद्धस्फटिकसोपानं स्नानमण्टपसम्युतम् ।
तमालभूरुहच्छायं संप्राप यमुनाह्रदम् ॥५॥

3 - 5 தாமரை பூத்ததும், ஹம்ஸம் ஸாரஸம் விளையாடுவதும், வண்டுகள் ஜங்காரம் செய்வதும், பவழமும் முத்தும் கொழிப்பதும் , அலைகள் ஊஞ்சல்போல் ஆடுவதும், கரையில் வளர்ந்த மரங்கள் உள்ளதும், பளிங்குபடிக்கட்டுகள் உள்ளதும், ஸ்னானமண்டபங் களுடன் கூடியதும், தமால மரத்தின் நிழலுடன் கூடியதுமான யமுனை மடுவை அடைந்தாள்.

इतस्ततश्च पश्यन्ती श्रीकृष्णागमनोत्सुका ।
वस्त्रनिष्पीडनञ्चक्रे क्वणत्कनककङ्कणा ॥६॥

6. கண்ணன் வாரானோ என்ற ஆர்வத்தினால் இங்கும் அங்கும் பார்த்துக்கொண்டே கனககங்கணங்கள் சப்திக்க துணி தோய்த்துக் கொண்டிருந்தாள்.

तां विलोक्य तदा कृष्णः परमानन्दविग्रहः ।
आनन्दं परमं लेभे सा ददर्शापि तं मुहुः ॥७॥

7. அப்போது அங்கு வந்த பரமானந்த மூர்த்தியான கண்ணன் அவளைக் கண்டு பரமானந்தம் அடைந்தான். அவளை அடிக்கடி பார்த்தான்.

आबद्धकेशपाशञ्च कुटिलभ्रमरालकाम् ।
निष्ककण्ठीं विशालाक्षीं बिम्बोष्ठीं सुस्मिताननाम् ।।८।।

विचित्रवसनां गोपीं तनुमध्याञ्च सुन्दरीम् ।
कृशोदरीं सुजघनां स्तनवारिजकुट्मलाम् ।।९।।

जानुपर्यन्तसलिले तिष्ठन्तीं रुचिराननाम् ।
अपश्यन्नन्दसूनुस्तां कुर्वन्तीं वस्त्रशोधनम् ।।१०।।

8-10. வண்டுபோல் சுருண்ட கேசம் உள்ளவளும், கேசத்தை அள்ளி முடிந்து கொண்டிருப்பவளும், கல்லட்டிகை அணிந்த கழுத்து உள்ளவளும், விசாலமான கண்கள் உள்ளவளும், கொவ்வைப்பழம் போல் சிவந்த உதடு உள்ளவளும், முறுவல் செய்யும் முகமுள்ள வளும், விசித்ரமான வஸ்த்ரமணிந்தவளும், நடுத்தரமான ஆக்ருதி உள்ளவளும், நல்ல அழகியும், க்ருசமான வயிறு உள்ளவளும், அழகிய ஜகனமுள்ளவளும், தாமரைமொட்டுபோன்ற ஸ்தனம் உள்ளவளும், முழங்கால்வரை உள்ள தண்ணீரில் நின்றுகொண்டு துணி தோய்ப்பவளும், அழகிய முகமுள்ளவளுமான அந்த கோபியை நந்தகுமாரன் பார்த்தான்.

शनैस्तदन्तिकं गत्वा रसिकेन्द्रो जनार्दनः ।
जहार वस्त्रं सहसा दधाव च वनान्तरे ।।११।।

11. மெள்ள அவளிடம் வந்து ரஸிகேந்த்ரனான கண்ணன் அவள் வைத்துள்ள துணிகளை எடுத்து கொண்டு வனத்தில் ஓடினான்.

संभ्रमादथ चित्रा सा विविधैः प्रेमभाषणैः ।
गोविन्दमनुगच्छन्ती ययाचे वसनं सखी ।।१२।।

12. ஸகியான சித்ரா பரபரப்படைந்து கோவிந்தனைப் பின் தொடர்து விதவிதமான ப்ரேமஸல்லாபத்துடன் வஸ்த்ரத்தை யாசித்தாள்.

स्वामिन्या मम राधाया वसनं त्विदमच्युत ।
तस्मात्तद्देहि गोविन्द मयि हेलां करोषि किम् ।।१३ ।।

13. கோவிந்தா! இது என் தலைவியான ராதையின் வஸ்த்ரம் ஆதலால் கொடுத்துவிடு. வேடிக்கை செய்யாதே.

इति संप्रार्थयन्ती सा प्रसारितकराम्बुजा ।
तमेवानुदधावैषा चित्रा चित्तहरं प्रभुम् ।।१४ ।।

14. என்று சொல்லிக்கொண்டு கையைவிரித்து சித்ரா சித்தசோரனான ஹரியைப் பின்தொடர்ந்தாள்.

एवञ्चेद्वसनं देव्या ददामि प्राणवल्लभे ।
तवैव वसनं देहि नितम्बपरिशोभितम् ।।१५ ।।

15. ப்ராணவல்லபே! அப்படியானால் இந்த வஸ்திரத்தைக் கொடுத்து விடுகிறேன். ஆனால் உன் இடுப்பு வஸ்திரத்தைக் கொடுத்துவிடு.

एवमुक्ता मुकुन्देन स्वच्छन्दं यमुनावने ।
लज्जयाऽवाङ्मुखी तस्थौ किं कुर्यामिति मोहिता ।।१६ ।।

16. இவ்வாறு துணிவுடன் முகுந்தன் சொன்னதும் சித்ரா வெட்கத்தில் தலைகுனிந்து என்ன செய்வது என்று திகைத்து நின்றாள்.

तदा तामप्युपागत्य स्वयमेव व्रजाधिपः ।
जग्राह नीवीबन्धञ्च बलादेव महाबलः ।।१७ ।।

17. அப்போது வ்ரஜத்தின் ராஜாவான கண்ணன் அவளிடம்

தானே வந்து பலவந்தமாக அவளது இடுப்பு துணியை அவிழ்த்தான்.

गृहीतवस्त्रा तेनैवं लज्जया त्वरयापि सा ।
मुञ्च मुञ्चेति जल्पन्ती रुरोद कृतसाहसा ॥१८॥

18. சித்ரா கைகளால் தனது வஸ்த்ரத்தைப் பற்றியவாறு விட்டு விடும் விட்டு விடும் என்று அழுதுகொண்டே ஸாஹஸம் செய்தாள்.

तस्या वदनसौन्दर्यं विलोक्य भगवानपि ।
न सस्मार तदात्मानं तत्रैव स्तिमितोऽभवत् ॥१९॥

19. அப்போது கண்ணன் பகவானாக இருந்தாலும் அவளது முக அழகைப்பார்த்து மயங்கி நின்றுவிட்டான்.

वञ्चयन्ती हरिं गोपी निकुञ्जं प्रविवेश सा ।
रञ्जयन् भगवांस्तत्र तामेवानुगृहीतवान् ॥२०॥

20. கோபி ஹரியை ஏமாற்றிவிட்டு அங்குள்ள நிகுஞ்ஜத்திற்கு ஓடினாள். ஹரியும் கூடவே ஓடி அவளைப் பிடித்துவிட்டான்.

कृष्णेन पीडिता सापि परमानन्दनिर्भरा ।
अनिच्छन्तीव तिष्ठन्ती कुप्यति स्म प्रियं प्रियात् ॥२१॥

21. கண்ணன் பிடித்ததும் அந்தகோபி விருப்பம் இல்லாதவள் போல் நடித்துக்கொண்டு ப்ரியனை ப்ரியமாக கோபித்துக்கொண்டு பெருமகிழ்ச்சியுடன் நின்றாள்.

परीक्षमाणं चातुर्यमात्मनो नन्दनन्दनः ।
नानाविहारचतुरः परिरेभे पुनः पुनः ॥२२॥

22. தனது சாதுர்யத்தை பரீக்ஷை செய்யும் அவளை நந்தநந்தனன் பலவிதமாக லீலை செய்வதில் சாதுர்யம் உள்ளவனாய்

பலதடவை கட்டி அணைத்தான்.

तदालिङ्गनमुग्धाया वसनं कटिशोभितम् ।
स्वयमेव हि विस्रस्तं पपात पदयोर्हरेः ।।२३।।

23. அவனது ஆலிங்கனத்தில் மயங்கிய சித்ராவின் வஸ்த்ரம் தானே அவிழ்ந்து ஹரியின் பாதத்தில் விழுந்தது.

तया सुरतलीलाञ्च चक्रे सुन्दरविग्रहः ।
लताकुञ्जेन निबिडे निकुञ्जे नन्दनन्दनः ।।२४।।

24. நெருக்கமான கொடிகளாலான நிகுஞ்ஜத்தில் அழகிய நந்தநந்தனன் அவளுடன் ஸுரதலீலையும் செய்தான்.

नानाकेलिविमुग्धां तां नायिकां नायकोत्तमः ।
सान्त्वयामास ललितैर्लालनैः प्रेमपूर्वकम् ।।२५।।

25, நாயகோத்தமனான கண்ணன் நாயகியான அவளை அன்புடன் அழகாக லாலனை செய்து ஸமாதானம் செய்தான்.

बद्ध्वा तस्याः केशपाशमङ्गरागं लिलेख च ।
धारयामास वसनं भूषयामास भूषणैः ।।२६।।

26. அவளது கேசத்தை முடிந்துவிட்டு அங்கராகம் எழுதிவிட்டு வஸ்த்ரத்தையும் பூஷணங்களையும் அணிவித்தான்.

गृहं गन्तुमनिच्छन्तीमिच्छन्तीं केलिकां पुनः ।
आनीय गोकुलेन्द्रश्च चचार यमुनातटे ।।२७।।

27. வீட்டிற்குப்போக விரும்பாதவளும், மீண்டும் விளையாட ஆர்வம் உள்ளவளுமான அவளுடன் கோகுலேந்த்ரன் யமுனைக் கரையிலேயே ஸஞ்சரித்தான்.

भुक्त्वा फलानि दिव्यानि पीत्वा च मधुरं मधु ।
चचार चित्रया रात्र्यां वनशोभां प्रदर्शयन् ।।२८।।

28. இனிய பழங்களை சாப்பிட்டும், இனிய தேன் பருகியும், அவளுக்கு வனசோபையைக் காட்டிக்கொண்டு அலைந்தான்.

वृक्षमूले निकुञ्जेपि माधवीमण्टपे तथा ।
नवमालतिडोलायां चिक्रीड च तया हरिः ।।२९।।

29. மரத்தடியிலும், மாதவிமண்டபத்திலும், நிகுஞ்ஜத்திலும், நவமாலதி சோலையிலும் ஹரி சித்ராவுடன் விளையாடினான்.

समाहृत्य च पुष्पाणि सुगन्धीनि प्रियो हरिः ।
चित्रामाराधयामास कुर्वन् केशप्रसाधनम् ।।३०।।

30. ஹரி பலவிதமான புஷ்பங்களைப் பறித்து சித்ராவின் தலையில் சூட்டிவிட்டு அவளை ஆராதனம் செய்தான்.

एवं रात्रौ निकुञ्जेषु कृत्वा निधुवनं तया ।
प्रातर्निजगृहं प्राप चित्रया नन्दनन्दनः ।।३१।।

31. இவ்வாறு இரவு நிகுஞ்ஜத்தில் சித்ராவுடன் ஸுரதலீலை செய்து விட்டு நந்தநந்தனன் காலையில் அவளுடன்கூட தனது க்ருஹத்திற்கு வந்தான்.

एवं गोपीसहस्राणां भगवानेकवल्लभः ।
चरत्यहर्निशं कृष्णः पवित्रे यमुनातटे ।।३२।।

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये लीलाकाण्डे चित्राविवाहो नाम दशमोऽध्यायः ।।१०।।*

32. இவ்வாறு ஆயிரக்கணக்கான கோபிகைகளுக்கு தான் ஒருவனே ப்ராணவல்லபனாகி கண்ணபிரான் இரவுபகலாக பவித்ரமான யமுனாதீரத்தில் ஸஞ்சரிக்கிறான்.

இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமி மஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில் லீலாகாண்டத்தில் சித்ராவின் விவாஹம் என்ற பத்தாம் அத்தியாயம் முற்றும்

# अथैकादशोऽध्यायः

## பதினொன்றாமத்யாயம்

### श्रीसद्गुरुरुवाच

चरितं तुङ्गविद्याया वक्ष्यामि परमं शुभम् ।
यस्य श्रवणमात्रेण जायते परमं सुखम् ॥१॥

ஸ்ரீஸத்குரு

1. பரமமங்களமான துங்கவித்யாவின் சரிதத்தைச் சொல்லுவேன். அதைக் கேட்டு பரமானந்தம் உண்டாகும்.

कदाचिद्यमुनातीरे नानावृक्षसमन्विते ।
सुगन्धपुष्पसङ्कीर्णे मलयानिलसेविते ॥२॥

गुञ्जद्भ्रमरसम्युक्ते शुककोकिलकूजिते ।
वसन्तकाले मधुरे वनिताजनमण्डले ॥३॥

पूर्णचन्द्रप्रभादीप्ते भगवान् पुरुषोत्तमः ।
शुशुभे राधया सार्धं शुभ्रस्फटिकमण्टपे ॥४॥

रत्नसिह्मासने दिव्ये श्वेतच्छत्रसमन्विते ।

विशाखाललिताभ्याञ्च वीजितश्वेतचामरः ।।५।।
इन्द्रनीलमणिश्यामश्चन्द्रकोटिसमाननः ।
दिव्यपीताम्बरधरो दीप्तनानाविभूषणः ।।६।।

सुगन्धचन्दनालिप्तः कस्तूरीतिलकाञ्चितः ।
वैजयन्तीपरिष्वक्तपृथुवक्षःस्थलो हरिः ।।७।।

***௨-7.*** *ஒருசமயம் பலவ்ருக்ஷங்கள் சூழ்ந்ததும், சுகந்த புஷ்பங்கள் நிறைந்ததும், மந்தமாருதம் வீசுவதும், யமுனாதீரத்தில் வண்டுகள் ஜங்காரம் செய்வதும், கிளி கோகிலங்கள் கூவுவதுமான வஸந்த காலத்தில், இனியவனிதா ஜனங்களின் கூட்டத்தில், பூர்ணசந்திரனின் ஒளிவீசும் வெண்மையான ஸ்படிகமண்டபத்தில், வெண்குடையுடன் கூடிய ரத்னஸிம்ஹாஸனத்தில், இருபக்கங்களிலும் லலிதாவும் விசாகாவும் சாமரம்வீச , இந்த்ரநீலமணிபோல் நீலவண்ணமான திருமேனி உடையவனும், கோடிசந்திரனுக்கு நிகராக முகலாவண்யம் உள்ளவனும், திவ்யபீதாம்பரதாரியும், ப்ரகாசிக்கும் பற்பல பூஷணங்கள் அணிந்தவனும், ஸுகந்த சந்தனம் பூசியவனும், கஸ்தூரி திலகம் அணிந்தவனும், வைஜயந்திமாலை அணிந்த விசால வக்ஷஸ்தலமுள்ளவனும், பகவானும், புருஷோத்தமனுமாகிய கண்ணன் ராதையுடன் சோபித்தான்.*

नानावाद्ये तुङ्गविद्या नियुक्ता राधया सखी ।
प्रणम्य कृष्णचरणं निषसादासने निजे ।।८।।

*8. அப்போது அங்குவந்த துங்கவித்யா என்ற ஸகி கண்ணனை ஸேவித்துவிட்டு தனது ஆஸனத்தில் அமர்ந்தாள். பலவிதமான வாத்யம் வாசிக்க அவள் ராதையால் நியமிக்கப்பட்டிருந்தாள்.*

मालतीपुष्पमृदुलां मालतीपुष्पधारिणीम् ।
मन्दस्मितमुखीं माध्वीं मधुरां मञ्जुभाषिणीम् ।।९।।

मणिमुक्ताभूषणाढ्यां नागरीं नागरप्रियाम् ।
माधवन्यस्तहृदयां मदनाकुलमानसाम् ॥१०॥

विलोक्य महिलाः सर्वा मुमुहुर्मदिरेक्षणाम् ।
तुङ्गविद्यां मुकुन्दञ्च ददृशुस्तां मुहुर्मुहुः ॥११॥

9 -11. மாலதிபுஷ்பம்போல் கோமளமானவளும், மாலதிபுஷ்பம் சூட்டிக்கொண்டிருப்பவளும், முறுவல் செய்யும் முகமுள்ளவளும், தேன்போல் தித்திப்பவளும், மஞ்சுளமாய் பேசுபவளும், மணிமுத்துநகைகள் அணிந்தவளும், நாகரிகமான வளும், நாகரிகமான கண்ணனுக்குப் பிரியமானவளும், மாதவனிடம் உள்ளத்தை வைத்தவளும், மதனதாபத்தினால் கலங்கிய மனமுள்ள வளுமான துங்கவித்யாவைப் பார்த்து மஹிளாமண்டலியே மயங்கியது. முகுந்தனையும் துங்கவித்யாவையும் மாறிமாறி அந்தக்கூட்டம் பார்த்தது.

सर्वविद्यासु निपुणां तुङ्गविद्यां तदा हरिः ।
वाद्यं वादयितुञ्चाग्रे चक्रे नियमनं प्रभुः ॥१२॥

12 ஸகல வித்யைகளிலும் திறமையுள்ள துங்கவித்யாவைத் தன் எதிரில் வாத்யம் வாசிக்கும்படி ப்ரபுவான கண்ணன் நியமனம் செய்தான்.

जगौ स्वयं नन्दसूनुर्मुक्तकण्ठो रसप्रियः ।
वादयामास वीणां सा तुङ्गविद्या च सुस्वरम् ॥१३॥

13. கண்ணன் தானே தொண்டையைவிட்டு கணீர் எனப் பாடினான். துங்கவித்யா அதற்கேற்றபடி ஸுஸ்வரமாய் வீணைவாசித்தாள்.

तुङ्गविद्या जगौ भूयो मधुरं मधुरस्वना ।
वादयामास वीणां च माधवो मधुरं स्वयम् ॥१४॥

*14.* பிறகு மதுரமான குரல்உள்ள துங்கவித்யா தானே பாடினாள்.கண்ணன் மதுரமாய் வீணை வாசித்தான்.

वादयामास वीणां सा वेणुं वादयति प्रभौ ।
वेणुञ्च वादयामास वीणां वादयते प्रिये ॥१५॥

*15.* கண்ணன் குழலூதும்போது துங்கவித்யா வீணை வாசித்தாள். கண்ணன் வீணை வாசிக்கவே துங்கவித்யா குழலூதினாள்.

गायन्त्यां तुङ्गविद्यायां मृदङ्गं वादयन् हरिः ।
तोषयामास तां देवीं नानातालगतिक्रमैः ॥१६॥

*16.* துங்கவித்யா பாடும்பொழுது கண்ணன் பலதாள ஜதிகளைக்காட்டி மிருதங்கம் வாசித்து அவளை சந்தோஷப் படுத்தினான்.

ततो गायति गोविन्दे तुङ्गविद्या सकौतुकम् ।
मृदङ्गं वादयामास कृष्णसन्तोषवर्धिनी ॥१७॥

*17.* கண்ணன் பாடும்பொழுது துங்கவித்யா குதூஹலமாய் ம்ருதங்கம் வாசித்து கண்ணனை ஸந்தோஷப்படுத்தினாள்.

धनुर्वीणां दन्तवीणां किन्नरीं महतीं तथा ।
रुद्रवीणामिन्द्रवीणां वल्लकीञ्च विपञ्चिकाम् ॥१८॥

एकतन्त्रीं त्रितन्त्रीञ्च पञ्चतन्त्रीञ्च गोपिका ।
षट्तन्त्रीं सप्ततन्त्रीञ्च वादयामास सादरम् ॥१९॥

*18-19.* பிறகு வயலின், முகர்சிங்கு,கிந்நரி, மஹதி , ருத்ரவீணை,இந்த்ர வீணை, வல்லகி, விபஞ்சி, ஏக்தாரா, த்ரிதந்த்ரி, பஞ்சதந்த்ரி, ஷட்தந்த்ரி, ஸப்ததந்தரி முதலிய வீணைகளை வாசித்தாள்.

वेणुञ्च वंशीं मुरलीं सुषिरं नागरीं तथा ।
नागस्वरं शङ्खवाद्यं तथा जलतरङ्गिणीम् ।।२०।।

**20. பிறகு வேணு, வம்சி, முரளி, ஸுஷிரம், நாகரி, நாகஸ்வரம், சங்கம், ஜலதரங்கிணி முதலிய வாத்யங்களை வாசித்தாள்.**

करतालं मृदङ्गञ्च मजीरां मड्डुकं ततः ।
घटवाद्यं कङ्कणञ्च किङ्किणी नूपुरं तथा ।।२१।।

वादयामास सानन्दं तुङ्गविद्या सकौतकम् ।
आनन्दं परमं लेभे वल्लवीजनवल्लभः ।।२२।।

**21.22. பிறகு கரதாளம் ம்ருதங்கம் மஜிரம் மட்டுகம் கடவாத்யம் கங்கணம் கிங்கிணி நூபுரம் முதலிய வாத்யங்களை வாசித்தாள். வல்லவீஜன வல்லபனான க்ருஷ்ணன் மிகவும் சந்தோஷம் அடைந்தான்.**

चातुर्यं सर्ववाद्येषु दृष्ट्वा श्रीवार्षभानवी ।
तुङ्गग्विद्यामानयन्ती संमानं दातुमिच्छया ।।२३।।

अङ्के निवेशयामास पङ्कजाक्षस्य सादरम् ।
लज्जितां च लताकुञ्जे तल्पे पल्लवकल्पिते ।।२४।।

**23-24. ஸர்வ வித்யைகளிலும் துங்கவித்யாவின் சாதுர்யத்தைக் கண்டு ஸ்ரீராதை அவளுக்கு ஸம்மானம் தர விரும்பி அவளை அழைத்து லதாகுஞ்ஜத்தில், கிஸலய சயனத்தில் தாமரைக்கண்ணன் மடியில் வெட்கப்படும் அவளை பலாத்காரமாய் உட்காரவைத்தாள்.**

अङ्के निधाय तां विद्यां सर्वविद्याविशारदः ।
कामविद्याञ्च सानन्दं शिक्षयामास माधवः ।।२५।।

25. ஸர்வ வித்யாவிசாரதனான கண்ணனும் துங்கவித்யாவிற்கு காமவித்யை யாவையும் சொல்லிக்கொடுக்கலானான்.

कौशलं कामशास्त्रे च कामाक्षी कमलानना ।
कमलाक्षे दर्शयन्ती निकामं कौतुकं ददौ ।।२६।।

26. காமாக்ஷியும் கமலமுகியுமான அவள் காமசாஸ்திரத்திலும் தன் திறமையைக் காட்டி கண்ணனுக்கு மிகவும் இன்பம் தந்தாள்.

चिक्रीड तुङ्गविद्यायाश्चोत्तुङ्गस्तनमण्डले ।
यथा गिरीन्द्रे कलभः कृष्णो मदनमोहनः ।।२७।।

27. மலை உச்சியில் யானைகுட்டிபோல் துங்கவித்யாவின் உத்துங்க ஸ்தனமண்டலத்தில் கண்ணன் விளையாடினான்.

गृहीत्वा तुङ्गविद्याया पाञ्चजन्यमिव स्तनम् ।
चुचुम्ब भगवान्कृष्णश्चुकूज मधुरं हि सा ।।२८।।

28. துங்கவித்யாவின் சங்குபோன்ற ஸ்தனத்தைப்பற்றி கண்ணன் முத்தமிட்டான், உடனே அவள் பலவிதமாய் கூவினாள்.

तुङ्गविद्या वाद्यमभूच्छ्रीकृष्णाधरचुम्बितम् ।
नवीनवाद्यशब्देन जहर्ष वृषभानुजा ।।२९।।

29.கண்ணனால் முத்தமிடப்பட்ட துங்கவித்யாவே ஒரு வாத்யமாகி விட்டாள்.அந்த நவீனவாத்யசப்தத்தைக் கேட்டு ராதை மகிழ்ந்தாள்.

प्रातरुत्थाय गोविन्दः प्रियया तुङ्गविद्यया ।
अवाप नन्दभवनं सानन्दं राधया सह ।।३०।।

30.காலையில் எழுந்து கோவிந்தன் துங்கவித்யாவுடனும்,ராதையுடனும்கூட நந்தபவனம் வந்தான்.

चकार मङ्गलं तत्र तुङ्गविद्यामुकुन्दयोः ।
नन्दपत्नी च सानन्दं सहिता स्वसखीजनैः ॥३१॥

31.துங்கவித்யாவிற்கும், முகுந்தனுக்கும் யசோதை தனது தோழிகளுடன் மங்களகாரியம் செய்து மகிழ்ந்தாள்.

इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये लीलाकाण्डे तुङ्गविद्याविवाहो नामैकादशोऽध्यायः ॥११॥

இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமி மஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில்லீலாகாண்டத்தில் துங்கவித்யாவின் விவாஹம் என்ற பதினொன்றாமத்யாயம் முற்றும்

# अथ द्वादशोऽध्यायः

## பன்னிரெண்டாமத்தியாயம்

### श्रीसद्गुरुरुवाच

सुदेवी जलसेवायां नियुक्ता सुन्दरी सखी ।
राधामुकुन्दपूजार्थं प्रददौ यमुनाजलम् ॥१॥

ஸ்ரீஸத்குரு

1. ஜலஸேவைக்காக நியமனம் செய்யப்பட்ட ஸுதேவி ராதாகிருஷ்ணபூஜைக்கு யமுனாஜலம் கொண்டு கொடுப்பாள்.

सा कदाचिदुषः काले कुंभमादाय सुन्दरी ।
स्मरन्ती कृष्णनामानि संप्राप यमुनाह्रदम् ॥२॥

2. அவள் ஒருநாள் விடியற்காலை ஜலம் கொண்டுவர வேண்டி குடம் எடுத்துக்கொண்டு யமுனைமடுவிற்கு வந்தாள்.

मणिसोपानसंयुक्तं माधवीकुञ्जरञ्जिताम् ।

मुक्ताप्रवालसङ्कीर्णं मीनकूर्मनिषेवितम् ॥३॥

उत्फुल्लकमलावासं भृङ्गझङ्कारसुस्वरम् ।
उन्मत्तहंसमिथुनं तुरङ्गततिसुन्दरम् ॥४॥

आलोलनीलसलिलं सलीलं ललितानना ।
विलोक्य तस्थौ तत्रैव कटिन्यस्तघटा तदा ॥५॥

*3-5. மணிமயமான படிக்கட்டுகள் உள்ளதும், மாதவி குஞ்ஜத்துடன் கூடியதும், முத்தும் பவழமும் கொழிப்பதும், மீன் ஆமை துள்ளி விளையாடுவதும், தாமரைக்காடு பூத்ததும், வண்டுகள் ஜங்காரம் செய்வதும், ஹம்ஸஜோடிகள் விளையாடுவதும், அலைகளின் வரிசைகளால் அழகியதும், தண்ணீர் உள்ளதுமான மடுவை அடைந்து அழகிய முகமுள்ள ஸுதேவி தண்ணீர்குடத்தை இடுப்பில் வைத்தவாறு அசையாமல் யமுனையின் அழகைப் பார்த்துக்கொண்டு நின்றுகொண்டிருந்தாள்.*

तत्रागतो मुकुन्दं तु सुदेवीं सुन्दराननाम् ।
अपृच्छत्परिहासेन प्रियभाषणपण्डितः ॥६॥

*6. அங்குவந்த முகுந்தன் அழகிய முகமுள்ள ஸுதேவியைப் பார்த்து பரிஹாஸமாகக் கேட்டான். ப்ரியமாகப் பேசுவதில் சமர்த்தன் அல்லவா?*

### श्रीभगवानुवाच

किं पश्यसि प्रिये तत्र वहन्ती त्वं पयोधरम् ।
पयोधरस्य भारेण किञ्चिन्नतकटिस्थला ॥७॥

### ஸ்ரீபகவான்

*7. ப்ரியே! குடத்தை வைத்துக்கொண்டு அங்கு என்ன பார்க்கிறாய்? குடத்தின் பாரத்தினால் உன் இடுப்பு வளைந்து போகிறதே!*

सुदेव्युवाच

पयोधरां हि पश्यामि पयोधरसमप्रभ ।
अजानन्त्येव तिष्ठामि किं पश्यसि पयोधरम् ।।८।।

ஸுதேவி

8. மேகவண்ணா! அந்த யமுனையின் ப்ரவாஹத்தைப் பார்க்கிறேன். நீர் வந்தது தெரியவில்லை.என் குடத்தை ஏன் பார்க்கிறீர்?

श्रीभगवानुवाच

अहं वहामि ते सुभ्रूः पयोधरमिमं सखि ।
त्वं पयोधरभारेण क्लान्ता तिष्ठसि किं चिरात् ।।९।।

கண்ணன்

9. அழகான புருவம் உடையவளே! வெகுநேரமாய் இந்த குடத்தைத் தூக்கிக்கொண்டு நிற்கிறாயே! சற்று நான் இந்தக் குடத்தைத் தூக்கிக்கொள்கிறேன்.

सुदेव्युवाच

पयोधरो महानेष त्वया वोढुं न शक्यते ।
तस्माद्विहाय पन्थानं गच्छ त्वं व्रजनन्दन ।।१०।।

10. இது பெரிய குடம் .உம்மால் தூக்கமுடியாது. வ்ரஜநந்தன ! வழியை விட்டு விலகிப்போ.

श्रीभगवानुवाच

कियानयं महाभारो गोवर्धनधरस्य मे ।
वहामि वक्षसा देवि पीनं तव पयोधरम् ।।११।।

**கண்ணன்**

**11.** கோவர்தனமலையையே தூக்கிய எனக்கு இது பெரிய பாரமா! உன் குடத்தை எனது மார்பினால் தூக்குவேன்.

**श्रीसद्गुरुरुवाच**

इत्युक्त्वा भगवान् कृष्णो वक्षसा तत्पयोधराम् ।
उवाह परमानन्दं वर्धयन् रसवर्धनः ।।१२।।

**ஸ்ரீஸத்குரு**

**12.** இவ்வாறு சொல்லி கண்ணன் ஸுதேவியின் ஸ்தன கும்பங்களை மார்பினால் தூக்கினான். ரஸவர்தனனான அவன் அவளது ச்ருங்கார ரஸத்தை வளர்த்தான்.

सा च हस्तस्थितं तत्र विसृज्य च पयोधरम् ।
पयोधरयुगं कृष्णवक्षस्येव न्यवेशयत् ।।१३।।

**13.** அவளும் கையிலுள்ள குடத்தைக் கீழே வைத்துவிட்டு மார்பிலுள்ள ஸ்தனகும்பங்களை கண்ணனின் மார்பிலேயே வைத்தாள்.

आलिङ्ग्य तां घनश्यामः सुदेवीं सुमुखीं तदा ।
चुचुम्ब वदनं तस्याः पूर्णचन्द्रसमप्रभम् ।।१४।।

**14.** அப்போது கனச்யாமளன் ஸுதேவியை ஆலிங்கனம் செய்துகொண்டு பூர்ணசந்திரனுக்கு ஸமமான அவளது முகத்தில் முத்தாடினான்.

यथाकिञ्चिदात्मानं नीत्वा कृष्णकराग्रहात् ।
राधाया सविधं प्राप सुदेवी सुस्मिता ततः ।।१५।।

**15.** கண்ணனின் கைப்பிடியிலிருந்து எப்படியோ தன்னை மீட்டுக்கொண்டு ஸுதேவி ஸ்ரீராதையின் ஸன்னதியை அடைந்தாள்.

हेतुं कालविलम्बस्य पप्रच्छ वृषभानुजा ।
श्रीकृष्णकृतसल्लापमूचे सा च स्मितानना ॥१६॥

16. தாமதித்து வரகாரணம் என்ன என்று ராதை கேட்டாள். சிரித்துக்கொண்டே கண்ணனுடன் ஸல்லாபம் செய்ததை ஸுதேவி சொன்னாள்.

सुदेवीं प्रेषयामास रात्रौ गोविन्दसन्निधिम् ।
अलङ्कृत्य स्वयं राधा स्वसखीसौख्यदायिनी ॥१७॥

17. தனது ஸகிகளை சௌக்கியப்படுத்தும் ராதை ஸுதேவியைத் தானே அலங்கரித்து இரவு கண்ணனிடம் அனுப்பினாள்.

आगतां निशि गोविन्दः सुदेवीं तां लतागृहे ।
आनीय लालयामास परिष्वज्य च वक्षसा ॥१८॥

18. இரவு வந்த ஸுதேவியை லதாக்ருஹத்தில் கண்ணன் மார்பினால் ஆலிங்கனம் செய்துகொண்டு லாலனை செய்தான்.

### श्रीभगवानुवाच

स्वागतं ते महाभागे प्रियं किं करवाणि ते ।
विना लज्जां मम ब्रूहि तवागमनकारणम् ॥१९॥

#### கண்ணன்

19. மஹாபாக்யவதி! உனக்கு ஸ்வாகதம். உனக்கு நான் ப்ரியமானது என்ன செய்ய வேண்டும்? நீ வந்த காரியத்தை வெட்கப்படாமல் சொல்லு.

### सुदेव्युवाच

स्वामिनी प्रेषयामास स्वयं मां स्वामिनस्तव ।

पादसेवां कर्तुमेव प्रसीद प्राणवल्लभ ।।२०।।

ஸுதேவி

**20. ஸ்வாமினியான ராதை தானே ஸ்வாமியான உமக்குப் பாதஸேவை செய்யவேண்டி என்னை அனுப்பி இருக்கிறாள். ப்ராணவல்லவா! எனக்கு அனுக்ரஹம் செய்யவேண்டும்.**

श्रीसद्गुरुरुवाच

सुदेव्या वचनं श्रुत्वा सुन्दरस्मितभाषणः ।
शयानः पुष्पशय्यायामङ्के पादौ न्यवेशयत् ।।२१।।

ஸ்ரீஸத்குரு

**21. அழகிய முறுவல் செய்து பேசும் கண்ணன் ஸுதேவியின் சொல்லைக்கேட்டு புஷ்பசயனத்தில் அவளது மடியில் தனது சரணங்களை வைத்தான்.**

जग्राह पाणिना मन्दं सुदेवी तत्पदाम्बुजम् ।
आलिङ्ग्य कुचकुंभाग्रे वारं वारं चुचुम्ब च ।।२२।।

**22. கண்ணனின் பாதகமலத்தை ஸுதேவி பிடித்துவிட்டாள். தனது ஸ்தனங்களுடன் அணைத்துக்கொண்டு சரணத்திற்கு முத்தமிட்டாள்.**

वेणीमालम्ब्य कृष्णस्तामाकृष्य निजवक्षसि ।
शाययामास सानन्दं मूर्ध्न्युपाघ्राय माधवः ।।२३।।

**23. மாதவனே அவளது பின்னலைப்பிடித்து எடுத்து தனது மார்பில் படுக்கவைத்துக்கொண்டு உச்சிமுகர்ந்தான்.**

चकार विविधां लीलां प्रियया सुरतोत्सुकः ।
कन्दर्पदर्पशमनः कान्तालिङ्गनतत्परः ।।२४।।

24. காந்தையை ஆலிங்கனம் செய்துகொண்டு ஸுரதலீலை செய்வதில் உத்ஸாகமுள்ள கண்ணன் அவளுடன் விதவிதமான லீலைகள் செய்தான். மன்மதமன்மதன் அல்லவா?

प्रातरुत्थाय सानन्दं सुदेव्या सह सुन्दरः ।
विवेश नन्दभवनं तोषयामास राधिकाम् ।।२५।।

25. காலையில் எழுந்து ஸுதேவியுடன் ஸுந்தரன் நந்தபவனம் வந்து ராதையை மகிழ்வித்தான்.

यशोदा तौ विलोक्याथ सुदेवीश्यामसुन्दरौ ।
चकार मङ्गलं हृष्टा सखीजनसमन्विता ।।२६।।

26. ஸுதேவியையும் ச்யாமஸுந்தரனையும் கண்டு யசோதை மனம் மகிழ்ந்தாள். தனது தோழிகளுடன் அவர்களுக்கு மங்கள காரியங்களைச் செய்தாள்.

अन्तःपुरं मुकुन्दस्य श्रीमद्बृन्दावनं शुभम् ।
स्त्रीरत्नैरन्वितं रेजे ताराभिश्च यथाम्बरम् ।।२७।।

27. ஸ்ரீப்ருந்தாவனம் கண்ணனின் அந்தப்புரம். நக்ஷத்ரங்களால் ஆகாயம்போல் ஸ்ரீவனம் ஸ்த்ரீரத்னங்களால் சோபிக்கிறது.

सर्वोत्तमा नायिका सा राधा प्रेमस्वरूपिणी ।
चन्द्रावली सुन्दरी तु राधायाः प्रतिनायिका ।।२८।।

28. ப்ரேமஸ்வரூபிணியான ராதையே கண்ணனின் ஸர்வோத்தமமான நாயகியாவாள். சந்த்ராவளி மிகவும் அழகுள்ளவள். அவள் ராதைக்கு எதிர்நாயகி.

ललिताद्या राधिकायाः सख्यः प्रियतमाः स्मृताः ।
नीलापद्मादयः सख्यश्चन्द्रावल्याः प्रियाः स्मृताः ।।२९।।

29. லலிதா முதலியவர்கள் ராதையின் ப்ரியஸகிகள். ச்யாமளா பத்மா முதலியவர்கள் சந்த்ராவளியின் ப்ரியஸகிகள்.

विचित्रभावरसिकः श्रीकृष्णो नायकोत्तमः ।
सुखयामास ताः सर्वाः समबुद्ध्या सुसान्त्वयन् ।।३०।।

30. விசித்ரமான ரஸபாவங்களுள்ள நாயகோத்தமன் ஸ்ரீக்ருஷ்ணன். ஸமபுத்தியுடன் நடந்து அவர்களை ஸமாதானப்படுத்தி எல்லா கோபிகைகளையும் ஸுகப்படுத்துபவன்.

इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये लीलाकाण्डे सुदेवीविवाहो नाम द्वादशोऽध्यायः ।।१२।।

இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமி மஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில் லீலாகாண்டத்தில் ஸுதேவிவிவாஹம் என்ற பன்னிரெண்டாமத்தியாயம் முற்றும்

## अथ त्रयोदशोऽध्यायः

## பதிமூன்றாம் அத்தியாயம்

*भागवता ऊचुः*

गोपेश्वरमहादेवचरितं वद सद्गुरो ।
किमर्थं त्यक्तकैलासो गोलोकं प्राप शङ्करः ।।१।।

பாகவதர்கள்

1. கோபேச்வரமஹாதேவரின் சரித்ரத்தை சொல்லுவீராக. ஸத்குரோ! சிவன் எதற்காக கைலாஸத்தை விட்டு கோகுலம் வந்தார்?

*श्रीसद्गुरुरुवाच*

श्रीमतो नन्दबालस्य कृष्णस्य परमात्मनः ।
बाललीलां बहुविधां वर्णयामास नारदः ।।२।।

ஸ்ரீஸத்குரு

2. நந்தபாலனான ஸ்ரீக்ருஷ்ணபரமாத்மாவின் பாலலீலையை நாரதர் வெகுவாக வர்ணித்தார்.

तच्छ्रुत्वा चन्द्रचूडश्च कृष्णदर्शनकाङ्क्षया ।
भिक्षुवेषधरो गोष्ठं प्राप ब्रह्मादिदुर्लभः ॥३॥

3. அதைக்கேட்டு பிரம்மாதிதேவர்களுக்கும் கிடைக்காத சிவன் ஒரு பிக்ஷுவேஷம் அணிந்து கண்ணனைப் பார்க்கவேண்டி கோகுலம் வந்தார்.

तत्र श्रीनन्दभवनं महाप्रासादसम्युतम् ।
कैलासशिखरप्रख्यं ददर्श भगवान् हरः ॥४॥

4. அங்கு கைலாஸசிகரம்போல் உயர்ந்த ஸ்ரீநந்தபவனத்தை சிவபெருமான் கண்டார்.

ययाचे भगवान् रुद्रो भिक्षां देहीति सुस्वरम् ।
वादयन् डमरुं गायञ्छिवनामावलिं तथा ॥५॥

5. அங்கு உடுக்கு வாசித்துக்கொண்டு சிவநாமாவளியைப் பாடியவாறே சிவபெருமான் பிக்ஷை கேட்டார்.

व्याघ्रचर्माम्बरधरं भस्मोद्धूलितविग्रहम् ।
कपालहस्तं गम्भीरं जटामण्डलशोभितम् ॥६॥

तिष्ठन्तं भवनद्वारे भिक्षुमेकं विलोक्य सा ।
तन्माहात्म्यमजानन्ती यशोदा विस्मयङ्गता ॥७॥

6.7. புலித்தோல் திருவோடு கையில் தாங்கியவரும், ஜடாதரனும், கம்பீரமானதோற்றம் உள்ளவரும், வாசலில் நிற்பவருமான சிவபெருமானை ஒரு பைராகியான சிவயோகி என்று

நினைத்தாள் யசோதை. அவரது மஹிமையை அறியவில்லை. ஆச்சர்யப்பட்டாள்.

प्रणम्य तं नन्दपत्नी पादपूजां विधाय च ।
अन्नभिक्षां ददौ हृष्टा तामुवाच महेश्वरः ॥८॥

8. அவரை வணங்கி பாதபூஜை செய்து யசோதை பிக்ஷை இட்டாள். சிவன் அவளைப் பார்த்துச் சொன்னார்.

रुद्र उवाच

दीर्घायुरस्तु ते भर्ता सुपुत्रा सुभगा भव ।
आतिथ्येन प्रहृष्टोस्मि कृतेन श्रद्धया त्वया ॥९॥

சிவபெருமான்

9. உனது பர்த்தா தீர்காயுஸுடன் இருக்கட்டும். பாக்யவதியான நீ நல்லபிள்ளையைப் பெற்றிருக்கிறாய். நீ செய்த பூஜையால் சந்தோஷம் அடைந்தேன்.

विरक्तोहं नन्दभार्ये वाराणस्यां वसाम्यहम् ।
नाम्नाहं शङ्करस्वामी रामनामजपप्रियः ॥१०॥

10. நந்தகோபனின் மனைவியே! நான் காசியில் வசிக்கும் பைராகி. எனக்கு சங்கரஸ்வாமி என்று பெயர். ராமநாமம் ஜபித்துக் கொண்டிருப்பேன்.

बालग्रहोच्चाटनं तु जानामि च यथाविधि ।
पूतनाकोटराद्याश्च देवताः सन्ति मे वशे ॥११॥

11. பாலக்ரஹங்களை விரட்டுவதில் எனக்குத் திறமை உண்டு. பூதனா, கோடரா, ரேவதிமுதலிய பாலக்ரஹங்கள் என் வசந்தானிருக்கின்றன.

तस्मादानय ते बालं यशोदे श्यामसुन्दरम् ।

रक्षाबन्धं करिष्यामि धारयिष्यामि भस्म च ।।१२।।

12. யசோதே! ஆகையால் உன் ச்யாமசுந்தரனான பிள்ளையைக் கொண்டு வா. விபூதி இட்டு ரக்ஷாபந்தனம் செய்கிறேன்.

**श्रीसद्गुरुरुवाच**

इति रुद्रस्य वचनं श्रुत्वा नन्दविलासिनी ।
आनन्दभरिता कृष्णमानिनाय च सत्वरम् ।।१३।।

**ஸ்ரீஸத்குரு**

13. இவ்வாறு ருத்ரனின் வசனத்தைக்கேட்டு நந்தனின் மனைவியான யசோதை மகிழ்ச்சியுடன் விரைவில் கண்ணனை எடுத்து வந்தாள்.

शमय त्वं महायोगिन् ग्रहपीडां शिशोर्मम ।
बहवः शत्रवः सन्ति मम बालस्य सन्ततम् ।।१४।।

14. யோகீச்வரரே! என் குழந்தையின் க்ரஹபீடையை நிவ்ருத்தி செய்வீராக, இவனுக்கு பல சத்ருக்கள் இருக்கின்றனர்.

इत्युक्त्वा नन्दपत्नी सा कृष्णमादाय बालकम् ।
समीपं प्राप भिक्षोश्च तदा चुक्रोश माधवः ।।१५।।

15. இவ்வாறு சொன்ன யசோதை கண்ணனை எடுத்துக் கொண்டு சிவனிடம் வந்தாள். அப்போது கண்ணன் பயந்தவன்போல் அழுதான்.

पिङ्गाक्षं पीनदेहञ्च नागयज्ञोपवीतिनम् ।
उग्रं भीमं भीमरूपं रुद्राक्षपरिभूषितम् ।।१६।।

अजानन्निव तं वीक्ष्य भीतश्चुक्रोश बालकः ।

सान्त्वयामास तं माता प्रदातुं शूलपाणये ।।१७।।

16.17 மஞ்சளான கண்கள் உடையவரும், பருத்த தேகம் உள்ளவரும், விபூதியும் ருத்ராக்ஷமும் அணிந்தவரும், நாகபூஷணரும், பயங்கரமானவரும் உக்ரமானவருமான சிவனைப் பார்த்து தெரியாதவனைப்போல் குழந்தையான கண்ணன் அழலானான். யசோதை அவனை ஸமாதானம் செய்தாள்.

दृष्ट्वा दृष्ट्वा मुखं तस्य ताम्रश्मश्रुपरिष्कृतम् ।
भीतश्चुक्रोश गोविन्दो मायामानुषविग्रहः ।।१८।।

18. மாயாமனுஷ்யனாய் நடிக்கும் கோவிந்தன் தாடி மீசையுடன்கூடிய சிவனின் முகத்தைப்பார்த்துப் பார்த்து பயந்து அழலானான்.

नन्दपत्नी बलात्कृष्णं तस्यैव हितकाङ्क्षिणी ।
इयेष दातुं रुद्राय रुदन्तं सुस्वरं भयात् ।।१९।।

19. யசோதையோ பயந்து அழும் கண்ணனை பலாத்காரமாய் குழந்தையின் நன்மைக்காகவே சிவனிடம் கொடுக்க விரும்பினாள்.

अत्रान्तरे जगन्माता देवी गोविन्दवल्लभा ।
आविरासीत् स्वयं राधा दिव्यज्योतिःस्वरूपिणी ।।२०।।

20. இந்தஸமயத்தில் கோவிந்தனின் மனைவியும் ஜகன்மாதாவுமான ஸாக்ஷாத் ராதாதேவி திவ்யமான ஜோதி ஸ்வரூபத்துடன் அங்கு ஆவிர்பவித்தாள்.

यशोदायाः करतलात् प्रगृह्य श्यामसुन्दरम् ।
अन्तर्दधे तदा देवी रासमण्डलवासिनी ।।२१।।

21. யசோதையின் கையிலிருந்த கண்ணனைப் பிடுங்கிக்கொண்டு ராஸமண்டலவாஸினியான ராதை மறைந்து விட்டாள்.

राधया वञ्चितो रुद्रः किञ्चिद्खेदमवाप्य सः ।
तस्थौ तूष्णीं गृहद्वारे निःश्वसन् बाष्पपूरितः ।।२२।।

22. இவ்வாறு ராதையினால் வஞ்சிக்கப்பட்ட சிவன் கண்ணீருடன் சற்று மௌனமான அங்கு நின்றார்.

तदा हि कृपया कृष्णः प्रोवाच वृषभध्वजम् ।
आश्रित्य मत्प्रियां रुद्र मां वशीकर्तुमर्हसि ।।२३।।

23. அப்போது கருணையுடன் கண்ணன் சிவனைப் பார்த்து என் ப்ரியையான ராதையை ஆச்ரயித்தால்தான் நான் ஸுலபமாகக் கிடைப்பேன் என்று சொன்னான்.

एतच्छ्रुत्वा महादेवो जानन् देव्याश्च वैभवम् ।
बृन्दावने तपश्चक्रे गोपीभावेन सम्युतः ।।२४।।

24. கண்ணனின் வசனத்தைக் கேட்டு ராதையின் மஹிமையை அறிந்த சிவன் ப்ருந்தாவனத்திலேயே கோபீபாவத்துடன் தவம் செய்கிறார்.

सोयं विश्वेश्वरो देवो गोष्ठे गोपेश्वरोऽभवत् ।
गोपेश्वरप्रसादेन गोविन्दे भक्तिमाप्नुयात् ।।२५।।

25. அந்த விச்வேச்வரரே கோகுலத்தில் கோபேச்வரராக ஆனார். கோபேச்வரரின் ப்ரஸாதத்தினால் கோவிந்தனிடம் பக்தி உண்டாகும்.

इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये लीलाकाण्डे
गोपेश्वरचरितं नाम त्रयोदशोऽध्यायः ।।१३।।

இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமி மஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவன
மாஹாத்மியத்தில் லீலாகாண்டத்தில் கோபேச்வர
மஹாதேவரின் சரிதமான பதிமூன்றாம் அத்தியாயம் முற்றும்

# अथ चतुर्दशोऽध्यायः

## பதினான்காம் அத்யாயம்

### भागवता ऊचुः

पार्वतीप्राणनाथेन बृन्दावननिवासिना ।
कथं साक्षात्कृतः कृष्णस्तच्चरित्रं वद प्रभो ॥१॥

பாகவதர்கள்

1. ப்ரபோ! ப்ருந்தாவனத்தில் வசிக்கும் பார்வதி ப்ராணநாதன் எப்படி கண்ணனை தர்சனம் செய்தார்? அந்தக் கதையைச் சொல்லுவீராக.

यन्मुहूर्तं क्षणं वापि क्रियते कृष्णकीर्तनम् ।
तदेव सफलं नूनं वयं मन्यामहे गुरो ॥२॥

2. குரோ! எந்த ஒரு க்ஷணம் க்ருஷ்ணகீர்த்தனம் செய்யப்படுகிறதோ அதையே ஸபலமாக நாங்கள் நினைக்கிறோம்.

चरितं नन्दबालस्य पावनं श्रवणामृतम् ।
आस्वाद्यास्वाद्य सततं न तृप्यामो गुरूत्तम ॥३॥

3. குருச்ரேஷ்டரே! நந்தபாலனின் காதுக்கினிய பாவனமான சரித்ரத்தை ருசிபார்த்து ருசிபார்த்து எங்களுக்கு அலுக்கவே இல்லை.

### श्रीसद्गुरुरुवाच

यमुनाजलकल्लोलपरिशीलितमारुते ।
मन्दारपारिजातादिदिव्यपुष्पसुगन्धिते ॥४॥

मयूरचक्रवाकादिशकुन्तगणशब्दिते ।
दिवाकरकरस्पर्शसमुज्ज्वलितपल्लवे ॥५॥

बृन्दावने सखीबृन्दैः समेता वृषभानुजा ।
गोपेश्वरार्चनं कर्तुं मन्दमन्दं चचार सा ॥६॥

ஸ்ரீஸத்குரு

4-6. யமுனையின் அலைகளில் அளைந்துவரும் குளிர்காற்று வீசுவதும், மந்தாரம் பாரிஜாதம்முதலிய திவ்ய புஷ்பங்கள் பரிமளம் வீசுவதும், மயில் சக்ரவாகம்முதலிய பக்ஷிகள் கூவுவதும், சூரியகிரணம் பட்டு ஜொலிக்கும் இளங்கொழுந்துகள் உள்ள சோலையால் அழகியதுமான ப்ருந்தாவனத்தில் ராதை தோழிகளுடன் கோபேச்வரரை பூஜிக்கவேண்டி மெள்ள மெள்ள ஸஞ்சரித்தாள்.

कज्जलालिप्तनयनां कपोलस्पर्शिकुण्डलाम् ।
दुकूलपरिधानां तां दाडिमीकोमलाधराम् ॥७॥

तप्तहेमप्रभां देवीं नानाभरणभूषिताम् ।
चन्द्रशेखरनामानि गायन्तीमपि सुस्वरम् ॥८॥

पुष्पचन्दनताम्बूलफलवर्गादिपूरिताम् ।
वहन्तीं पेटिकां राधां ददर्श श्यामसुन्दरः ॥९॥

7-9 கண்களில் மைதீட்டிக் கொண்டிருப்பவளும், காதுகளில் குண்டலம் அணிந்தவளும்,பட்டுப்புடவை உடுத்தியவளும்,மாதுளம்பூபோன்ற சிவந்த உதடுள்ளவளும், ஸ்புடம் போட்ட தங்கம்போல் அங்ககாந்தி உள்ளவளும், பல ஆபரணங்கள் அணிந்தவளும், ஸுஸ்வரமாய் சந்த்ரசேகர நாமங்களை கீர்த்தனம் செய்பவளும். புஷ்பம்

சந்தனம் தாம்பூலம் பழங்கள்முதலிய பூஜா ஸாமான்கள் நிறைந்த பெட்டியை வஹிப்பவளுமான ராதையை ச்யாமஸுந்தரன் பார்த்தான்.

प्रेमानन्दरसोन्मत्तस्तद्दर्शनकुतूहलात् ।
पृष्ठतो वार्षभानव्या मन्दमन्दमुपागमत् ।।१०।।

10. அவளைப் பார்த்த குதூஹலத்தினால் ப்ரேமானந்தரஸத்தினால் உன்மத்தனாய் அவளது பின்புறமாக மெள்ள கிட்டே வந்தான்.

गोपेश्वरं महादेवं प्रणम्य च यथाविधि ।
अभिषिच्य तमीशानं यमुनासलिलेन च ।।११।।
नानापुष्पैरलङ्कृत्य बिल्वेनाभ्यर्च्य शङ्करम् ।
तस्थौ तस्याग्रतो राधा बद्धाञ्जलिपुटा तदा ।।१२।।

11,12. ஸ்ரீராதை கோபேச்வர மஹாதேவரை வணங்கி, யமுனாஜலத்தினால் முறைப்படி அபிஷேகம் செய்து, பல புஷ்பங்களால் அலங்கரித்து, சிவனை பில்வதளத்தினால் அர்ச்சனைசெய்து, அவரது எதிரில் கைகுவித்து நின்றாள்.

आजगाम हरिः साक्षाद्गोकुलेन्द्रस्य नन्दनः ।
कटिन्यस्तकरो भूत्वा जगाद मधुरं वचः ।।१३।।

13. அப்போது நந்தகோபன்புதல்வனான கண்ணன் அவள் எதிரில் வந்து தன் இடுப்பில் கைகளை வைத்துக்கொண்டு நின்றவனாய் ராதையைப் பார்த்துக் கேட்டான்.

### श्रीकृष्ण उवाच

किमर्चसि महादेवं कमिच्छसि वरं प्रियम् ।
ददामि वाञ्छितं सर्वं किमस्ति हृदये तव ।।१४।।

ஸ்ரீக்ருஷ்ணன்

14. ராதே! ஏன் சிவபூஜை செய்கிறாய்? ப்ரியமான வரன் என்ன வேண்டும்? உன் உள்ளத்தில் என்ன ஆசை? சொல். எல்லாம் நானே உனக்குத் தருவேன்.

श्रीराधोवाच

प्रसादं प्राप्तुमिच्छामि शङ्करस्य जगद्गुरोः ।
कानने चारयन् धेनूः किमत्रागतवानसि ।।१५।।

ஸ்ரீராதை

15. ஜகத்குருவான சங்கரரின் அருளைப்பெற விரும்புகிறேன். இந்தக் காட்டில் மாடு மேய்த்துக் கொண்டிருந்த நீர் எப்படி இங்கு வந்தீர்?

श्रीकृष्ण उवाच

अलमाराधनेनास्य पश्य मां प्राणवल्लभे ।
त्वामेव द्रष्टुमिच्छामि विविक्तेऽस्मिन् महावने ।।१६।।

ஸ்ரீக்ருஷ்ணன்

16. சிவபூஜை செய்தது போதும், என் உயிரான காதலி! என்னைப் பார். இந்தக் காட்டில் உன்னைத்தான் தேடிவந்தேன்.

श्रीराधोवाच

साक्षात्कर्तुं महादेवं देवदेवं पिनाकिनम् ।
अर्चामि परया भक्त्या किं त्वं साक्षादुपस्थितः ।।१७।।

ஸ்ரீராதை

17. தேவதேவரும், பினாகியும், மஹாதேவருமான சிவனை

ஸாக்ஷாத்காரம் செய்யவேண்டி பக்தியுடன் பூஜை செய்தேன். உமது ஸாக்ஷாத்காரம் கிடைத்ததே! ஏன்?

### श्रीकृष्ण उवाच

अहं ब्रह्मा च शर्वश्च विष्णुश्चाहं सनातनः ।
अहमेव परं ब्रह्म भज मां चित्तरञ्जनि ।।१८।।

### ஸ்ரீக்ருஷ்ணன்

18. சித்தரஞ்ஜனி! நானே ப்ரும்மா, நானே விஷ்ணு, நானே ருத்ரன், நானே பரப்ரும்ஹம். என்னையே பஜனம் செய்.

### श्रीराधोवाच

जानामि त्वां व्रजेन्द्रस्य नन्दगोपस्य नन्दनम् ।
त्वादृशो मनुजश्रेष्ठो मा कुर्याद्देवहेलनम् ।।१९।।

### ஸ்ரீராதை

19. இந்த வ்ரஜபூமிக்கு தலைவரான நந்தகோபரின் புதல்வர் நீர் என்று எனக்குத் தெரியும். உம்மைப் போன்ற நல்ல பிள்ளைகள் தெய்வத்தை ஹேளனம் செய்யக்கூடாது.

### श्रीकृष्ण उवाच

मत्पादकमलोद्भूतं गङ्गासलिलमुत्तमम् ।
दधाति शिरसा रुद्रः किं मां संप्रत्युपेक्षसे ।।२०।।

### ஸ்ரீக்ருஷ்ணன்

20. எனது பாததீர்த்தமான கங்காஜலத்தைத்தான் சிவன் சிரஸில் வஹிக்கிறார். நீ ஏன் என்னை அலக்ஷியம் செய்கிறாய்.

श्रीराधोवाच

चोरोसि नवनीतानां जारोसि व्रजयोषिताम् ।
तथापि लज्जां त्यक्त्वैवमात्मानं बहुमन्यसे ।।२१।।

ஸ்ரீராதை

21. நீர் திருடுவது வெண்ணையை. பெண்களிடமும் கள்ளத்தனம் செய்கிறீர். போதாததற்கு தற்புகழ்ச்சி செய்து கொள்கிறீரே, வெட்கமில்லையா?

श्रीकृष्ण उवाच

अलं राधे विवादेन मामालिङ्गय सत्वरम् ।
दिव्याङ्गसौरभोन्मत्तं तवैव प्रियदर्शने ।।२२।।

ஸ்ரீக்ருஷ்ணன்

22. வீண்வாதம் எதற்கு? ப்ரியதர்சனே! உன் ஸுகந்தத்தினால் மயங்கி வந்துள்ள எனக்கு ஒரு ஆலிங்கனம் கொடு.

श्रीराधोवाच

नियमेनान्वितां मां तु मा स्पृश श्यामसुन्दर ।
अहमाचारशीलास्मि त्वमसि प्रेमतत्परः ।।२३।।

ஸ்ரீராதை

23. ச்யாமஸுந்தர! நான் மடியாய் வந்துள்ளேன். என்னைத் தொடாதே. நான் ஆசாரசீலமுள்ளவள். நீரோ அன்பினால் சுதந்திரமாய் பழகுபவர்.

श्रीसद्गुरुरुवाच

इत्युक्तो नन्दसूनुश्च प्रेमलीलारसोन्मदः ।

धावन्तीमनुधावंस्तां परिरम्भणकौतुकः ।।२४।।

सत्वरं परिजग्राह तस्याः कौशेयमुत्तमम् ।

आलिङ्ग्य तां विशालाक्षीमासीत्पूर्णमनोरथः ।।२५।।

ஸ்ரீஸத்குரு

*24-25.* இவ்வாறு சொல்லி நந்தபாலன் ப்ரேமலீலா ரஸத்தால் உன்மத்தனாய் அவளை ஆலிங்கனம் செய்து கொள்ளும் குதூஹலத்துடன், ஓடிப்பிடித்து அவளது ஆடையைப் பிடித்திழுத்து கட்டிக்கொண்டு ஆசை நிறைவேறியவனாய் நின்றான்.

एतस्मिन्नन्तरे रुद्रो दिव्यरूपसमन्वितः ।

ददर्श भक्तिभावेन गान्धर्वामुरलीधरौ ।।२६।।

*26.* அந்த ஸமயம் சிவன் திவ்யரூபத்துடன் தோன்றி பக்தியுடன் ராதையையும் கண்ணனையும் தரிசனம் செய்தார்.

तस्य प्रेमविमुग्धस्य मिथुनस्य विलोकनात् ।

तुष्टाव प्रणतः शम्भुः परमानन्दनिर्भरः ।।२७।।

*27.* அந்த ப்ரேமிகஜோடியைப் பார்த்து பரமானந்த மடைந்த கோபேச்வரர் வணங்கித் துதிக்கலானார்.

रुद्र उवाच

नमस्ते गोकुलेन्द्राय नमस्ते वार्षभानवि ।

युवयोर्दर्शनायैव मया घोरं तपः कृतम् ।।२८।।

ஸ்ரீருத்ரன்

*28.* கோகுலேந்த்ரனான உனக்கு நமஸ்காரம். வ்ருஷபானு

குமாரியான உனக்கும் நமஸ்காரம். உங்கள் இருவரின் தர்சனத்திற்காகவே நான் தவம் செய்தேன்.

यमुनापुलिनं धन्यं धन्यो गोवर्धनो गिरिः ।
बृन्दावनमिदं धन्यं धन्यं गोकुलमेव च ॥२९॥

29.. இந்த யமுனாதீரம் தன்யமானது, இந்த கோவர்தன மலை தன்யமானது. இந்த ப்ருந்தாவனம் தன்யமானது. இந்த கோகுலம் தன்யமானது.

मम नेत्रत्रयं कृष्ण सफलं तव दर्शनात् ।
स्मृत्वा शक्रं सहस्राक्षमीर्ष्यां प्राप्नोमि सांप्रतम् ॥३०॥

30, க்ருஷ்ண!எனது இந்த மூன்று கண்களும் சபலமாயிற்று. ஆயினும் ஆயிரம் கண்களுள்ள இந்திரனை நினைத்துப் பொறாமைப்படுகிறேன்.

नेत्रानन्दकरं दिव्यं सौन्दर्यं तव माधव ।
दृष्ट्वापि नेत्रयुगलं किमन्यं द्रष्टुमिच्छति ॥३१॥

31. மாதவ! நேத்ரத்திற்கு ஆனந்தத்தைத் தரும் உன் அழகையும் பார்த்துவிட்டு இந்தக் கண்கள் வேறு யாரைப் பார்க்க விரும்பும்?

स्वभावमधुरोसि त्वं राधया च समन्वितः ।
मम दृष्टिपथं गत्वा किं मां मोहयसि प्रभो ॥३२॥

32. ப்ரபோ! நீ ஸ்வபாவத்திலேயே மதுரமானவன். ராதையுடனும் கூடிவிட்டால் கேட்கவும் வேண்டுமா? என் எதிரில் தோன்றி என்னையே மயக்குகிறாயே!

भस्मीकृतो मन्मथस्तु मया सौन्दर्यगर्वितः ।
कोटिमन्मथरूपस्य सोहं तव वशङ्गतः ॥३३॥

33. நான் ஒரு மன்மதனைப் பொசுக்கிவிட்டேன். கோடிமன்மதனுக்கு நிகரான உனக்கு வசமாகிவிட்டேன்.

किं ते वैकुण्ठवासेन कैलासेन च किं मम ।
आवामत्रैव गोविन्द वसावो यमुनावने ।।३४।।

34. உனக்கும் வைகுண்டம் எதற்கு? எனக்கும் கைலாஸம் எதற்கு? நாம் இருவரும் இந்த ப்ருந்தாவனத்திலேயே வசிப்போம்.

नाहमिच्छामि कैलासं नाहमिच्छामि पार्वतीम् ।
अहं गोपीत्वमिच्छामि प्राप्तुं ते परिरम्भणम् ।।३५।।

35. எனக்கு கைலாஸமும் வேண்டாம், பார்வதியையும் விரும்பவில்லை. உன் ஆலிங்கனத்தைப் பெறுவதற்காக நானும் ஒரு கோபிகை ஆக வேண்டுகிறேன்.

**श्रीसद्गुरुरुवाच**

एवमुक्तो हृषीकेशो महादेवेन माधवः ।
राधामुखाब्जं दृष्ट्वापि सस्मितं प्राह शङ्करम् ।।३६।।

**ஸ்ரீஸத்குரு**

36. இவ்வாறு சொல்லப்பட்ட கண்ணன் ராதையின் முகத்தைப் பார்த்து சிரித்துவிட்டு சிவனைப் பார்த்து சொன்னான்.

**श्रीकृष्ण उवाच**

नमस्ते परमेशान किं मां वञ्चयसि प्रभो ।
अपचारं क्षमस्वेश सन्निधौ रचितं मया ।।३७।।

यदहं राधिकामेनां तव पूजार्थमागताम् ।
नियमस्थां बलादेव कृतवान् परिरम्भणम् ।।३८।।

आवयोस्तव पादाब्जे भक्तिं देहि महेश्वर ।
आवयोर्विप्रवासस्तु सर्वदा नैव संभवेत् ।।३९।।

ஸ்ரீக்ருஷ்ணன்

*37-39.* ப்ரபோ! பரமேச்வர! உமக்கு நமஸ்காரம். என்னை ஏன் ஏமாற்றுகிறீர்? உமது பூஜைக்காக மடியுடன் வந்த ராதையை நான் தொட்டுவிட்டேனே. உமது ஸந்நிதியில் நான் செய்த அபசாரத்தை க்ஷமித்துவிடும். மஹேச்வர! உமது பாதத்தில் எங்கள் இருவருக்கும் திடமான பக்தியைக் கொடும். நாங்கள் இருவரும் பிரியாமலேயே இருக்க வேண்டுமென்று வரம் தாரும்.

**श्रीसद्गुरुरुवाच**

इत्युक्त्वा पुण्डरीकाक्षो मायामानुषविग्रहः ।
ननाम राधया सार्धं शङ्करं परमेश्वरम् ।।४०।।

ஸ்ரீஸத்குரு

40. இவ்வாறு சொல்லி மாயாமானுஷ விக்ரஹனான தாமரைக்கண்ணன் ராதையுடன் பரமேச்வரரான சங்கரனை நமஸ்கரித்தான்.

इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये लीलाकाण्डे गोपेश्वरचरितं नाम चतुर्दशोऽध्यायः ।।१४।।

இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமி மஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில் லீலாகாண்டத்தில் பதிநான்காம் அத்யாயம் முற்றும்.

# अथ पञ्चदशोऽध्यायः

## பதினைந்தாம் அத்தியாயம்

### भागवता ऊचुः

सद्गुरो करुणासिन्धो रसिकेन्द्रशिखामणेः ।
गोपीनाथस्य कृष्णस्य वद रासमहोत्सवम् ॥१॥

பாகவதர்கள்

1. குருதேவ! கருணாஸிந்தோ! ரஸிகேந்திரசிகாமணியான கோபீநாதனான கண்ணனின் ராஸமஹோத்ஸவத்தை சொல்வீராக.

परमात्मा वासुदेवो योगिनामपि दुर्लभः ।
कथं प्रेमविमुग्धानां वल्लवीनां वशङ्गतः ॥२॥

2. யோகிகளுக்கும் துர்லபனான பரமாத்மாவான வாஸுதேவன் ப்ரேமையில் மயங்கிய கோபிகைகளுக்கு எப்படி வசமானான்?

चरितं गोकुलेन्द्रस्य महाश्चर्यमिदं प्रभोः ।
प्रेमभक्तिं पुरस्कृत्य कुलाचारस्तिरस्कृतः ॥३॥

3. கோகுலேந்த்ரனான கண்ணனின் இந்த சரித்ரம் மிகவும் ஆச்சர்யம்! ப்ரேமபக்திக்கு மதிப்பு தந்து குலாசாரத்தைத் தள்ளி விட்டானே!

### श्रीसद्गुरुरुवाच

काननं तच्छरच्चन्द्रचन्द्रिकाधवलं शुभम् ।
उत्फुल्लप्रसवामोदपरिशीलितमारुतम् ॥४॥

कूजत्कोकिलसङ्गीतमाधुर्यपुलकीकृतम् ।
विलोक्य परमानन्दनिर्भरा राधिका तदा ॥५॥
जगाम यमुनातीरं कृष्णसङ्गमकाङ्क्षिणी ।
अनुजग्मुश्च वल्लव्यो राधिकां प्रियदर्शनाम् ॥६॥

4-6 சரத்கால சந்திரனால் வெண்மையாக சோபிப்பதும், மலர்ந்த புஷ்பங்களை பரிசீலனை செய்து ஸுகந்தமாய் வீசும் காற்றுடையதும், கோகிலங்கள் கூவுவதைக் கேட்டு அந்த இனிமையில் மெய்சிலிர்க்கச் செய்வதுமான யமுனா தீரத்தைப்பார்த்து பரமானந்தமடைந்த ராதா, கண்ணனை ஸந்திக்க விரும்பி யமுனா தீரத்தை அடைந்தாள். ப்ரியதர்சினியான அவளை அவளது தோழிகளும் பின் தொடர்ந்தனர்.

निकुञ्जे तत्र राधाया सख्यश्च ललितादयः ।
प्रतिकर्म तदा चक्रुः परमानन्दनिर्भराः ॥७॥

7. அங்கு நிகுஞ்ஜத்தில் லலிதாமுதலிய ஸகிகள் ராதைக்குப் பெருமகிழ்ச்சியுடன் அலங்காரம் செய்தனர்.

निधाय वेणीमध्ये तु मल्लिकामुकुलानि च ।
केशप्रसाधनञ्चक्रे काचिद्गोपकुमारिका ॥८॥

8. ஒரு கோபி ராதைக்கு மல்லி அரும்பு வைத்து தலைவாரி வங்கிப்பின்னல் பின்னி விட்டாள்.

हारकङ्कणकेयूरमणिमञ्जीरमेखलाः ।
धारयामास सप्रेम काचिद्वल्लवसुन्दरी ॥९॥

9. ஒரு கோபி ஹாரம் கங்கணம் கிங்கிணி கேயூரம் மேகலை முதலிய ஆபரணங்களை அன்புடன் ராதைக்குப் பூட்டிவிட்டான்.

सुगन्धेनाङ्गरागेण कस्तूरीकज्जलादिभिः ।
अलञ्चकार गान्धर्वा काचिदाभीरनन्दिनी ।।१०।।

10. ஒரு கோபி ஸுகந்தமான அங்கராகம், மை, கஸ்தூரி திலகம், மருதாணி இவைகளால் ராதையை அழகுபடுத்தினாள்.

आत्मनः प्रतिबिम्बं सा मुकुरे च करस्थिते ।
विलोक्य राधिका सद्यो मुग्धाभूदात्मनि स्वयम् ।।११।।

11. கையிலுள்ள கண்ணாடியில் தனது அழகை தானே பார்த்து ராதை தன்னிடமே மயங்கிவிட்டாள்.

परमप्रेमसम्युक्ता गोपिकास्ताः प्रसाधिकाः ।
उवाच मधुरं वाक्यं राधिका मृदुहासिनी ।।१२।।

12. தனக்கு அலங்காரம் செய்துவிட்ட தனது ஸகிகளைப் பார்த்து ராதை அன்புடன் மந்தஹாஸம் செய்துகொண்டே சொன்னாள்.

**श्रीराधोवाच**

दास्यामि वः प्रहृष्टाहं सम्मानं चिरकाङ्क्षितम् ।
तल्लभध्वं मया दत्तं यद्यूयं प्रेमतत्पराः ।।१३।।

**ஸ்ரீராதை**

13. ஸகிகளே ! உங்களுக்கு ஒரு ஸம்மானம் தர வேண்டும் என்று எனக்கு வெகுநாள் ஆசை. இன்று அதை பெற்றுக்கொள்வீர்கள்.

**गोप्य ऊचुः**

अलं सम्मानदानेन त्वमस्माकं प्रिया किल ।
दामोदरप्रिये राधे दास्यं ते कामयामहे ।।१४।।

**கோபிகைகள்**

14. ராதே! நீ எங்கள் தோழியல்லவா? ஸம்மானம்

வேண்டாம். தாமோதரனின் ப்ரியே! உனக்குத் தொண்டு செய்யவே விரும்புகிறோம்.

### श्रीराधोवाच

ऋणमेतत्प्रवृद्धं मे युष्माकं प्रेमसाधनैः ।
जानाम्यहं विशेषेण मम वोऽशुल्कदासिकाः ।।१५।।

### ஸ்ரீராதை

15. நீங்கள் அன்புடன் செய்யும் தொண்டுக்கு நான் கடமைப்பட்டுள்ளேன். நீங்கள் பலனை விரும்பாத தாஸிகள் என்று நான் அறிவேன்.

### श्रीसद्गुरुरुवाच

इत्युक्त्वा राधिकादेवी प्रययौ यमुनातटम् ।
तत्र मन्दारवृक्षस्य मूले कृष्णं ददर्श सा ।।१६।।

### ஸ்ரீஸத்குரு

16. இவ்வாறு சொல்லி ராதை யமுனாதீரம் வந்தாள். அங்கு மந்தாரமரத்தடியில் மாதவனைக் கண்டாள்.

अजानन्निव गोविन्दो राधिकां तामुपस्थिताम् ।
मुरलीवादनं चक्रे राधानाम्ना पुनः पुनः ।।१७।।

17. ராதை வந்திருப்பதை அறியாதவன் போல் கோவிந்தனும் ராதே! ராதே! என்று குழலூதிக் கொண்டிருந்தான்.

पस्पर्श देवी तस्यांसं मृदुलेन करेण सा ।
पुलकीकृतसर्वाङ्गो ददर्श प्रेयसीं हरिः ।।१८।।

18. ராதை தன் மெல்லிய கையால் கண்ணனின் தோள்பட்டையைத் தொட்டாள், கண்ணன் திடுக்கிட்டு திரும்பிப் பார்த்தான்.

### श्रीकृष्ण उवाच

स्वागतं ते वरारोहे राधिके चित्तरञ्जनि ।
आह्वयन् वादये वेणुं त्वां मम प्राणवल्लभाम् ।।१९।।

### கண்ணன்

19. சித்தரஞ்சனி! ராதிகே! சிறந்த பெண்மணி! எனக்கு உயிரான நாயகியான உன்னைத்தான் குழலினால் கூவி அழைத்தேன்.

### श्रीराधोवाच

यदि वादयसे वेणुं मामुद्दिश्य प्रियां तव ।
आगतां स्वयमेवात्र किं पुनर्मां न पश्यसि ।।२०।।

### ஸ்ரீராதை

20. என்னைக் கூவி அழைத்தது உண்மையாகில் ப்ரியையான நான் வந்தும் பாராமல் இருந்தது ஏனோ?

### श्रीकृष्ण उवाच

किं न वेत्सि प्रिये भावं मम चित्तसमुद्भवम् ।
आस्थितोहं तथा तूष्णीं त्वत्करस्पर्शकाङ्क्षया ।।२१।।

### கண்ணன்

21. ப்ரியே! என் மனம் உனக்குப் புரியவில்லையா? நான் பாராமல் இருந்தால்தான் நீ வந்து என்னைத் தொடுவாய் என்றிருந்தேன்,

### श्रीसद्गुरुरुवाच

एवमुक्ता तदा राधा माधवेनापि लज्जिता ।
अवाङ्मुखी मन्दमन्दमुवाच ललितं वचः ।।२२।।

### ஸ்ரீஸத்குரு

22. இவ்வாறு கண்ணன் சொன்னதும் ராதை வெட்கத்துடன்

தலைகுனிந்து மெள்ளமெள்ள அழகாகப் பேசினாள்.

श्रीराधोवाच

यदि त्वं गोपललनाः कुलाचारपरायणाः ।
आनय सांप्रतं त्वत्र तदा त्वं वेणुपण्डितः ।।२३।।

23. குலாசாரத்தில் கட்டுப்பட்டிருப்பதிலேயே லக்ஷியம் உள்ள கோபிகைகளை இழுத்தால் தான் நீர் சிறந்த வேணுபண்டிதன்.

श्रीसद्गुरुरुवाच

इत्युक्तः प्रियया कृष्णो गोपिकाह्वानकौतुकः ।
कोमलाधरसंसक्तवेणुना मधुरं जगौ ।।२४।।

ஸ்ரீஸத்குரு

24. இவ்வாறு ராதையால் சொல்லப்பட்ட கண்ணன் கோபிகைகளை இழுக்குமார்வத்துடன் கோமளமான அதரத்தில் வேணுவை பொருத்தி மதுரமாகப் பாடினான்.

मुरलीगानमाधुर्यरसास्वादनलोलुपाः ।
विस्मृतस्वकुलाचारा गोपिकाः कृष्णमाययुः।।२५।।

25. வேணுகானத்தின் ரஸத்தைப் பருகும் ஆசையால் தன் குல ஆசாரங்களை மறந்து கோபிகைகள் கண்ணனிடம் ஓடிவந்தனர்.

कृष्णं दृष्ट्वा तदा गोप्यो जगन्मोहनसुन्दरम् ।
तस्थुश्च पुरतो मुग्धास्तदालिङ्गनकाङ्क्षया।।२६।।

26. ஜகன்மோஹன ஸுந்தரனான கண்ணனைக் கண்டு கோபிகைகள் கண்ணனைத் தழுவிக் கொள்ளும் ஆசையினால் மயங்கி எதிரில் நின்றனர்.

तां विलोक्य तदा कृष्णः परिहासमुवाच ह ।

प्रेमगम्भीरया वाचा दिव्यताम्बूलगन्धया ।।२७।।

27. அவர்களைக்கண்டு கண்ணன் தாம்பூலம் மணக்கும் திருவாயினால் பரிஹாஸமாயும் ப்ரேமையுடனும் கம்பீரமாயும் பேசினான்.

**श्रीकृष्ण उवाच**

गोष्ठं गच्छत सुन्दर्यो यूयं धर्मपरायणाः ।
अहं केलिकलादक्षः सञ्चरामि महावने ।।२८।।

28. ஸுந்தரிகளே! நீங்கள் தர்மமே லக்ஷியமாக இருக்க வேண்டும். எனவே கோகுலத்திற்குத் திரும்புங்கள். நான் எப்போதும் கேளிகைகள் செய்துகொண்டு வனத்தில் திரிபவன்.

पतिव्रतानामशुभं जारस्य मुखदर्शनम् ।
युष्माकं वदतैवात्र किमागनकारणम् ।।२९।।

29. பதிவ்ரதைகள் வேறுபுருஷனின் முகத்தைப் பார்க்கலாகாது. நீங்கள் இங்குவந்த காரணம் என்ன?

स्वयमेवागता यूयं मत्समागमकाङ्क्षया ।
किन्तु निन्दन्ति मां नित्यं युष्माकं बान्धवाः किल।।३०।

30. நீங்கள் தானாகவே என்னை ஸந்திக்கும் ஆசையால் இங்கு வருகின்றீர்கள். ஆனால் உங்கள் பந்துக்கள் வீணாக என்னைத் திட்டுகின்றனர்.

**श्रीसद्गुरुरुवाच**

श्रुत्वा कृष्णस्य वचनं वल्लव्यः स्फुरिताधराः ।
ऊचुस्तस्याग्रतस्तूष्णीं बाष्पस्निग्धविलोचनाः।।३१।।

ஸ்ரீஸத்குரு

31. இவ்வாறு கண்ணனின் வசனத்தைக் கேட்டு கோபிகைகள்

கண்களில் நீர் மல்க, துயரத்தினால் உதடு துடிக்க, எதிரில் சற்றுமௌனமாய் நின்று பிறகு பேசலானார்கள்.

गोप्य ऊचुः

सन्त्यज्य सर्वविषयांस्त्वामेव शरणं गतान् ।
गोपीजनानिमान् कृष्ण स्वामिन् मा त्यज माधव ।।३२ ।।

கோபிகைகள்

32. மாதவ! எல்லாவிஷயங்களையும் விட்டு உம்மையே சரணமடைந்த இந்த கோபிகைகளை நீர்விட்டு விடாதீர்.

फलं हि सर्वधर्माणां भवतश्चरणार्चनम् ।
सर्वेषामपि जीवानां त्वामेवात्मा न संशयः ।। ३३ ।।

33. எல்லாதர்மங்களுக்கும் உமது பாதஸேவையே பலன் ஆகும், எல்லா ஜீவன்களுக்கும் நீரே அந்தர்யாமி அல்லவா?

आत्मैव परमः प्रेष्ठो देहे न प्रेम जायते ।
शरीरमात्मना त्यक्तं त्यजन्ति प्रेमिणो जनाः ।। ३४ ।।

34. ஆத்மாவே ப்ரியத்துக்குரியது, சரீரமன்று. ஆத்மா நீங்கிய சரீரத்தை எல்லா உறவினர்களும் விட்டுவிடுகின்றனர்.

तस्मात्त्वमेव नो नाथः पुत्रो बन्धुर्धनं गृहम् ।
त्वमेव दैवमिष्टं हि यतस्त्वं विष्णुरव्ययः ।।३५ ।।

35. ஆகையால் நீரே எங்கள் நாதன், புத்ரன் ,பந்து, தனம் , க்ருஹம் இஷ்டதைவம் எல்லாம். ஏனெனில் நீரே எல்லோருக்கும் அந்தர்யாமியான பரமாத்மா அல்லவா?

चित्तं सुखेन भवता हृतमस्माकमच्युत ।
किन्तु त्वां प्राप्तुमिच्छन्ति ध्यानयोगेन योगिनः ।।३६ ।।

36. அச்சுதா! எங்கள் சித்தமோ ப்ரயாஸையின்றி உம்மிடமே லயித்துவிட்டது. யோகிகளோ உம்மை தியானம் செய்ய அப்யாஸம் செய்கின்றனர்.

अबलानामिहास्माकं दास्यं देहि दयानिधे ।
अस्माकं हृदयं नूनं जानासि प्राणवल्लभ ॥३७॥

37. ப்ராணவல்லப! இந்த அபலைகளுக்கு உமது ஸேவையைத் தாரும். எங்கள் உள்ளம் உமக்கே தெரியும்.

**श्रीसद्गुरुरुवाच**

इत्युक्तोपि तदा कृष्णो गोपीभिः प्रेमपूर्वकम् ।
तूष्णीमास दयासिन्धुर्वैमुख्यं दर्शयन् प्रभुः ॥३८॥

38. அன்புடன் கோபிகைகள் இவ்வாறு வேண்டியும் தயாநிதியான ப்ரபுவான கண்ணன் ஏனோ பாராமுகமாகவே இருந்தான்.

दयार्द्रा राधिका तत्र निरीक्ष्य निजकिङ्करीः ।
ताभिः समन्विता सद्यः प्रतस्थे कुपिता तदा ॥३९॥

39. தயாநிதியான ராதை அப்போது தன் தோழிகளைப் பார்த்து அவர்களையும் கூட்டிக் கொண்டு கண்ணனிடம் கோபம் காட்டிப் புறப்பட்டாள்.

विलोक्य प्रेयसीं राधां गोपीजनसमन्विताम् ।
सान्त्वयामास गोविन्दः प्रस्थितां गोकुलाय च ॥४०॥

40. கோபிகைகளுடன் கிளம்பிவிட்ட தனது காதலியான ராதையைப்பார்த்து கோவிந்தன் ஸமாதானம் செய்தான்.

ताः समादाय गोविन्दो यमुनापुलिनं गतः ।
वादयन् मधुरं वेणुं चक्रे रासमहोत्सवम् ॥४१॥

41. அவர்களை அழைத்துக் கொண்டு கோவிந்தன் யமுனா புளினத்தை அடைந்து வேணுகானம் செய்துகொண்டே ராஸமஹோத்ஸவத்தை ஆரம்பித்தான்.

नूपुराणां किङ्किणीनां निनदः सुस्वरोऽभवत् ।
प्रवृत्ते रासनाट्ये तु यमुनापुलिने तदा ॥४२॥

42. யமுனாபுளினத்தில் ராஸநாட்டியம் ஆரம்பித்தது. கோபிகைகளின் கைவளைகள் கால் சலங்கைகள், இவைகளின் சப்தம் கிளம்பியது.

वनमाली घनश्यामः पीताम्बरधरो हरिः ।
गोपीजनकुचद्वन्द्ववरकुङ्कुमचर्चितः ॥४३॥

पदशिञ्जितमञ्जीरो मुरलीगानतत्परः ।
राधालिङ्गनमुग्धाङ्गो विरेजे रासमण्डले ॥४४॥

43-44. நீலமேகச்யாமளனும், பீதாம்பரதாரியும், வனமாலை அணிந்தவனும், கோபிகைகளின் ஸ்தனகும்பங்களில் உள்ள குங்குமத்தினால் அங்கிதமான வக்ஷஸ்தலமுள்ளவனும், ராதையின் ஆலிங்கனத்தால் மோஹித்தவனாய் கண்ணன் ராஸமண்டலத்தில் விளங்கினான்.

काचित्पाणियुगाभ्यां तं गाढमालिङ्ग्य माधवम् ।
चुचुम्ब प्रेमसंमुग्धा कोमलाधरपल्लवम् ॥४५॥

45. ஒருவள் தனது கைகளால் கண்ணனை இறுகக் கட்டித்தழுவி ப்ரேமையுடன் அதர இதழில் முத்தம் இட்டாள்.

कस्याश्चिद्गोपसुन्दर्या नृत्यन्त्या प्रेमपूर्वकम् ।
शिथिलीकृतवस्त्रं तन्ममर्द स्तनमण्डलम् ॥४६॥

46. அன்புடன் ஆடும் ஒருகோபஸுந்தரியின் கஞ்சுகம்

அவிழ்ந்துவிடவே அவளது ஸ்தனங்களை கண்ணன் மர்தனம் செய்தான்.

कस्याश्चिदधरं प्रेम्णा ताम्बूलेन सुगन्धितम् ।
खण्डयामास गोविन्दो दशनैर्मौक्तिकोपमैः ।।४७।।

47. தாம்பூல ஸுகந்தமுள்ள ஒருவளின் அதரத்தை கண்ணன் முத்துபோன்ற பற்களால் கடித்து விட்டான்.

कस्याश्चिद्बाहुलतिकां प्रगृह्य परिलालयन् ।
चुचुम्ब भगवान् कृष्णो नानाभावरसोज्ज्वलः ।।४८।।

48. விதவிதமான ப்ரேமபாவத்தால் ஜொலிக்கும் கண்ணன் ஒருவளுடைய கொடிபோன்ற கையைப்பற்றி முத்தமிட்டான்.

उद्धृत्य पाणिपद्माभ्यां कामप्याभीरसुन्दरीम् ।
आश्लिष्य वक्षसा कृष्णश्चुचुम्बाधरपल्लवम् ।।४९।।

49. ஒருவளுடைய கையை உயர்த்தி, வக்ஷஸ்தலத்தால் ஆலிங்கனம் செய்துகொண்டு கண்ணன் அதரபல்லவத்தில் முத்தமிட்டான்.

एवं प्रेमरसोन्मत्तो नृत्यन् गायन् मुहुर्मुहुः ।
चचार यमुनातीरे गोपीमण्डलसम्युतः ।।५०।।

50. இவ்வாறு ப்ரேமரஸத்தினால் உன்மத்தனாகி பாடிக் கொண்டும், ஆடிக்கொண்டும் கோபிகைகளுடன் கூடி யமுனா தீரத்தில் கண்ணன் ஸஞ்சரித்தான்.

रासक्रीडान्तरे कृष्णः स्वच्छन्दगतिरीश्वरः ।
गत्वा निकुञ्जं देव्या च चक्रे सुरतकेलिकाम् ।।५१।।

51. ராஸக்ரீடையின் இடையில் சுதந்திரமாய் விளையாடும்

கண்ணன் ராதையுடன் நிகுஞ்ஜம் சென்று ஸுரதலீலை செய்தான்.

श्रीकृष्णविरहोन्मत्ता विचिन्वन्त्यः प्रियं तदा ।
प्रिययोः पदचिह्नानि ददृशुर्यमुनावने ।।५२।।

52. கண்ணனின் பிரிவைத் தாளாமல் கோபிகைகள் அவனைத்தேடி அலைந்து வழியில் கண்ணனின் அடிச்சுவடுகளைக் கண்டனர்.

तद्दर्शनपरानन्दा गोप्यो निःस्वार्थचेष्टिताः ।
निकुञ्जं सत्वरं जग्मुः क्रीडादर्शनकाङ्क्षया ।।५३।।

53 அடிச்சுவடுகளைக் கண்டு ஆனந்தம் கொண்ட கோபிகைகள் சுயநலமற்ற பிரேமைஉள்ளவர்களாய் ராதாக்ருஷ்ண லீலையைப்பார்க்க ஆசையினால் நிகுஞ்ஜம் சென்றனர்.

तत्र पल्लवपर्यङ्के राधिकास्तनपर्वते ।
क्रीडन्तं ददृशुर्गोप्यो गोपेन्द्रसुतकुञ्जरम् ।।५४।।

54. அங்கு கிஸலயசயனத்தில் ராதையின் ஸ்தனங்களாகிய மலைகளில் விளையாடும் நந்தநந்தனனாகிய யானைக்குட்டியைக் கண்டனர்.

प्रिययोः सुरतं दृष्ट्वा परमानन्दनिर्भराः ।
बभूवुर्व्रजसुन्दर्यः परस्परसुभाषणाः ।।५५।।

55. அங்கு காதலர்களின் லீலையைக் கண்டு கோபிகைகள் பரமானந்தம் அடைந்து பரஸ்பரம் பேசிக்கொண்டனர்.

अथ नन्दात्मजः कृष्णो वञ्चितो राधया तदा ।
अन्तर्दधे च तां त्यक्त्वा सा वने दुःखिताऽभवत् ।।५६।।

56. பிறகு நந்தகுமாரனான கண்ணன் ராதையால்

வஞ்சிக்கப்படவே மறைந்து போனான். உடனே ராதை விரஹதாபத்தை அடைந்தாள்.

आसाद्य सान्त्वयामासुर्गोपिका वार्षभानवीम् ।
पुनः पुलिनमागत्य यमुनाया जगुर्हरिम् ॥५७॥

57. கோபிகைகள் ராதையினிடம் வந்து ஸமாதானம் செய்தனர். பிறகு யமுனையின் மணல்வெளிக்கு வந்து கண்ணனைப் பாடினார்கள்.

गोप्य ऊचुः

श्यामसुन्दर गोविन्द जन्मना तव माधव ।
वैकुण्ठादधिको भाति व्रजः सर्वसमृद्धिमान् ॥५८॥

கோபிகைகள்

58. ச்யாமசுந்தர! கோவிந்த! நீ அவதரித்ததால் வ்ரஜபூமி வைகுண்டத்தைவிட சிறந்ததாயிற்று. இங்கு ஸர்வஸம்ருத்தியும் காணப்படுகிறது.

अस्माकं रक्षणायैवमवतीर्य त्वया प्रभो ।
वधः सङ्कल्पितः किं नु तवैव विरहाग्निना ॥५९॥

59. ப்ரபோ! எங்களை ரக்ஷிக்க வேண்டி அவதரித்துவிட்டு முடிவில் உமது விரஹாக்னியில் பொசுக்கி, வதம் செய்ய நினைத்தீரோ?.

दावाग्निभक्षकोसि त्वं दामोदर दयानिधे ।
विरहाग्निमिहास्माकं शमय श्यामसुन्दर ॥६०॥

60. ஸ்யாமஸுந்தர! முன்பு காட்டுத்தீயைக் குடித்தீரே ! இப்போது எங்கள் விரஹத்தீயை அணைக்கலாகாதா.

गोवर्धनं करे धृत्वा वर्षाद्रक्षितवानसि ।

धृत्वास्माकं स्तनाद्रिं त्वमश्रुवर्षं निवारय ।।६१।।

61. கோவர்தனமலையைத் தூக்கி மழைபொழிவதைத் தடுத்தீரே! எங்கள் ஸ்தனங்களைக் கையில் தாங்கி கண்ணீரைத் தடுக்கலாகாதா!

त्वयैव निहताः कृष्ण दैतेया धेनुकादयः ।
अद्य घोरतमं वीरं किं कन्दर्पमुपेक्षसे ।।६२।।

62. கண்ணா! தேனுகாஸுரன்முதலிய அஸுரர்களைக் கொன்றீரே! அவர்களைவிடக் கொடியவனான மன்மதனை ஜயிக்கலாகாதா!

पीत्वा मुकुन्द जीवामस्तवैव चरितामृतम् ।
दग्धा मन्मथबाणेन निशायां यमुनावने ।।६३।।

63. மன்மதபாணத்தினால் பொசுங்கிய நாங்கள் உமது கதாம்ருதத்தைப்பருகி பிருந்தாவனத்தில் பிழைத்து உள்ளோம்.

त्रुटिर्युगायते कृष्ण तवैव विरहेण नः ।
त्रुटीकुरु युगान्नाथ त्वत्सङ्गमसुखेन नः ।।६४।।

64. கண்ணா! உமது விரஹத்தினால் நொடிப்பொழுது யுகமாகிறது.உமது ஸங்கத்தைத்தந்து யுகத்தை நொடிப்பொழு தாக்குவீர்.

त्यक्त्वा पुत्रान् पतीन् बन्धूंस्त्वामेव शरणं गतान् ।
त्यक्तुं नार्हसि गोपाल निशि गोपीजनानिमान् ।।६५।।

65. கோபால! இந்த இரவில் கணவன்,மக்கள் ஸகல பந்துக்களையும் விட்டு உம்மையே சரணமடைந்த எங்களை நீர் கைவிடலாகாது.

वनेस्मिन् कण्टकव्याप्ते क्व गतोसि दयानिधे ।
सुकुमार त्वमागत्य सान्त्वय प्रियसुन्दरीः ।।६६।।

66. தயாநிதே! முள்ளும் கல்லும் நிறைந்த இந்தக்காட்டில் எங்கு அலைகிறீர்? ஸுகுமாரஸுந்தரனே! உமது ப்ரியஸுந்தரிகளான எங்களை ஸமாதானம் செய்வீராக.

### श्रीसद्गुरुरुवाच

इति ता गोपसुन्दर्यो यमुनापुलिनं गताः ।
रुरुदुः सुस्वरं दीनं कृष्णदर्शनलालसाः ।।६७।।

ஸ்ரீஸத்குரு

67. இவ்வாறு அந்த கோபிகைகள் யமுனாபுளினத்தை அடைந்து கண்ணனைக் காண துடித்துக் கதறி அழுதார்கள்.

तासामाविरभूच्छौरिः स्मयमानमुखाम्बुजः ।
पीताम्बरधरः स्रग्वी साक्षान्मन्मथमन्मथः ।।६८।।

68. அவர்கள் இடையில் மந்தஹாஸவதனனாய், பீதாம்பரதாரியாய், வனமாலியாய், மன்மதமன்மதனாய் கண்ணன் எதிரில் ஆவிர்பவித்தான்.

पुनश्चिक्रीड गोविन्दो यमुनापुलिने प्रभुः ।
गोपीनामनुरूपोसौ महायोगीश्वरो हरिः ।।६९।।

69. மஹாயோகேச்வரனான ஹரி மறுபடியும் கோபிகைகளுக்கு அனுரூபமானரூபங்கள் தரித்து யமுனாபுளினத்தில் விளையாடினான்.

एवं निशासु गोपीभिः स्वच्छन्दं यमुनावने ।
आत्मारामोपि गोविन्दो रेमे करुणयान्वहम् ।।७०।।

कस्याश्चिद्व्रजसुन्दर्याः मृदुलं पाणिपल्लवम् ।
आदाय धारयामास स्वयमंसे सुखप्रदः ।।२४।।

24. ஒரு வ்ரஜஸுந்தரியின் பல்லவம் போன்ற கையைத் தானாகவே எடுத்துக் கழுத்தில் போட்டுக் கொண்டு அவளுக்கு ஸுகம் தந்தான்.

कामप्यवाङ्मुखीं गोपीं लज्जया ललितां हरिः ।
मन्दमन्दमुपागत्य पृष्ठतः परिषस्वजे ।।२५।।

25. வெட்கத்தினால் தலைகுனிந்தவாறு இருக்கும் ஒருவளைக் கண்டு மெள்ள கண்ணன் அவளது பின்புறமாகச் சென்று கட்டிக்கொண்டான்.

आनन्दयन् प्रतिपदं प्रेमभाषणपूर्वकम् ।
कस्याश्चित्प्रेममुग्धाया मुमोच स्तनपट्टिकाम् ।।२६।।

26. கண்ணன் கொஞ்சிப்பேசி ஒருவளை மயக்கி அவள் மயங்கி நின்றபொழுது அவளது கஞ்சுகத்தை மெல்ல அவிழ்த்து விட்டான்.

एवं बहुविधा लीला विधाय भगवान् हरिः ।
समेतो राधया देव्या डोलामध्यमुपागमत् ।।२७।।

27. இவ்வாறு பகவானாகிய கண்ணன் பலவிதமாய் விளையாடி அங்குள்ள ஊஞ்சலில் அமர்ந்தான்.

दिव्यरत्नमयी डोला दिव्यदंपतिशोभिता ।
चचाल मन्दमन्दं सा मन्दमारुतसेविता ।।२८।।

28. திவ்யதம்பதிகளால் சோபிக்கும் திவ்யரத்னமயடோலை மந்தமாருதத்தில் மெள்ள மெள்ள அசைந்தது.

नानापुष्पमयीं डोलां नानारत्नविराजिताम् ।

सरसं स्पन्दयामासुर्गोपिकाः प्रेमपूर्वकम् ॥२९॥

29. பலபுஷ்பங்களால் அலங்கரிக்கப்பட்ட பலவிதமாய் ரத்னம் பதிந்த டோலையைத் தோழிகள் அன்புடன் ஆட்டினார்கள்.

जगुराभीरसुन्दर्यः सुस्वरञ्च परस्परम् ।
मृदङ्गं वादयन्त्यश्च रणयन्त्यो विपञ्चिकाम् ॥३०॥

30. கோபஸுந்தரிகள் வீணைவாசித்துக்கொண்டும், மிருதங்கம் வாசித்துக்கொண்டும் இனிமையாகப் பாடினர்.

तत्र ता ननृतुः काश्चिन्नानाभावप्रदर्शकाः ।
किरन्त्यो दिव्यकर्पूरकुङ्कुमादीनि माधवे ॥३१॥

31. கண்ணன்மேல் கற்பூரம் குங்குமப்பூ இவைகளின் பொடியைத் தூவி பல ரஸபாவங்களைக் காட்டி சிலர் நாட்டிய மாடினர்.

एवं सुगन्धकाश्मीरकुङ्कुमैरभिरञ्जितौ ।
विरेजतुर्दम्पती तौ नयनानन्दवर्धनौ ॥३२॥

32. இவ்வாறு ஸுகந்தமான காச்மீர குங்குமங்களால் அந்த தம்பதிகள் கண்களுக்கு ஆனந்தத்தை வர்தனம் செய்பவர்களாய் விளங்கினர்.

वन्दनारुणगात्रश्रीप्रकाशितवनान्तरः ।
रराज राधिकानाथो रत्नडोलान्तरे तदा ॥३३॥

33. ஹோலிப்பொடியால் வர்ணம்மாறிய தனது காத்ர சோபையால் ப்ருந்தாவனத்தையே சோபிக்கச் செய்யும் கண்ணன் ரத்னமயமான டோலையில் ராதையுடன் இருந்தான்.

एवं स्वच्छन्दवृत्तीनां किङ्करीणां हरिः स्वयम् ।

आनन्दं वर्धयन् रेमे विशुद्धप्रेमचेष्टितः ।।३४।।

34. இவ்வாறு சுதந்திரமாய் விளையாடும் தனது கிங்கரிகளுடன் கண்ணன் தனது சுத்தமான ப்ரேம சேஷ்டைகளால் அவர்களது ஆனந்தத்தை வளர்த்தான்.

गोपीसहस्रमध्यस्थं नानाकेलिविशारदम् ।
विलोक्य पञ्चविशिखः स्वयमेव विमोहितः ।।३५।।

35. ஆயிரக்கணக்கான கோபிகைகள் நடுவில் பலவிதமான லீலை செய்யும் கண்ணனைக் கண்டு மன்மதன் தானே மயங்கிவிட்டான்.

विसृज्य चापं बाणांश्च बद्धाञ्जलिपुटस्तथा ।
योगेश्वर नमस्तुभ्यमिति तुष्टाव मन्मथः ।।३६।।

36. கரும்புவில்லையும் , புஷ்பபாணங்களையும் விட்டு காமன் கைகூப்பி யோகேச்வர நமஸ்துப்யம் என்று துதித்தான்.

आत्मानं बहुमेने च कामः कृष्णेन निर्जितः ।
ब्रह्मरुद्रादयः सर्वे यस्य सन्ति वशे सुराः ।।३७।।

37. ப்ரும்மருத்ராதிகளையும் வென்ற மன்மதன் கண்ணனிடம் தோற்றுப்போனாலும் தன்னைப் பெருமைப்படுத்திக் கொண்டான்.

आत्मारामोपि गोविन्दो योगिनामपि दुर्लभः ।
रमते गोपकन्याभिः केवलं कृपयैव हि ।।३८।।

38. கோவிந்தன் ஆத்மாராமனாயினும் யோகிதுர்லபன் . ஆயினும் கருணையால் மட்டும் கோபிகைகளுடன் விளையாடினான்.

संप्राप्य ब्रह्मसंस्पर्शं तथैवाभीरकन्यकाः ।

ब्रह्मानन्दनिमग्नास्ता बभूवुर्विजितेन्द्रियाः ॥३९॥

39. கோபிகைகளும் இவ்வாறு ப்ரம்ஹஸம்ஸ்பர்சத்தைப் பெற்று ப்ரம்ஹாநந்தத்தில் மூழ்கி இந்த்ரியஸுகத்தை மறந்தனர்.

इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये लीलाकाण्डे वसन्तोत्सववर्णनं नाम सप्तदशोऽध्यायः ॥१७॥

இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமி மஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில் லீலாகாண்டத்தில் பதினேழாம் அத்தியாயம் முற்றும்

## अथाष्टादशोऽध्यायः

## பதினெட்டாம் அத்தியாயம்

### श्रीसद्गुरुरुवाच

एवं वसन्तकाले तु विकसत्पुष्पमण्डिते ।
रमते रसिकेन्द्रोऽयं रमणीभिः समन्वितः ॥१॥

ஸத்குரு

1. இவ்வாறு பூக்கள் மலர்ந்த ஸுகந்தமான வஸந்தகாலத்தில் ரமணிகளுடன் கூடி ரஸிகேந்த்ரன் விளையாடினான்.

अथ बृन्दावने रम्ये यमुनापुलिने हरिः ।
वारिक्रीडां समारेभे वल्लवीगणसेवितः ॥२॥

2. ப்ருந்தாவனத்தில் யமுனாஜலத்தில் கண்ணன் கோபிகைகளுடன் ஜலக்ரீடை செய்ய ஆரம்பித்தான்.

भस्त्रायन्त्रेण सलिलमादाय श्यामसुन्दरः ।

सिञ्चन् व्रजाङ्गनाः सर्वा विजहार ससंभ्रमम् ।।३।।

3. ச்யாமசுந்தரன் பீச்சாங்குழலினால் தண்ணீரை எடுத்து கோபிகைகளின் மேல் அடித்து விளையாடினான்.

तं कृष्णं प्रतिसिञ्चन्त्यो गोपिकाः प्रीतिपूर्वकम् ।
नानावर्णञ्च सलिलमादाय निजरेचकैः ।।४।।

4. கோபிகைகள் யாவரும் பலவிதமான வண்ணமுள்ள தண்ணீரைப் பீச்சாங்குழலில் எடுத்துப்ரேமையுடன் கண்ணன் மேல் அடித்தனர்.

विजह्रुः तत्र सरसं स्वच्छन्दं यमुनावने ।
वादयन्तश्च वाद्यानि गायन्त्यश्च परस्परम् ।।५।।

5. ப்ருந்தாவனத்தில் பாடிக்கொண்டும் வாத்யம் வாசித்துக் கொண்டும் அவர்கள் யாவரும் சுதந்திரமாய் விளையாடினர்.

किरन्त्यः कुङ्कुमादीनि मेघश्यामलविग्रहे ।
धावन्तमनुधावन्त्यो रेमिरे यमुनावने ।।६।।

6. ப்ருந்தாவனத்தில் குங்குமங்களை ச்யாமஸுந்தரன் மேல் தூவி ஓடுகின்ற கண்ணனுடன் தாங்களும் ஓடி விளையாடினர்.

रेचकप्रेरितेनैव दिव्यकुङ्कुमवारिणा ।
स्निग्धपीताम्बरं कृष्णं ददृशुर्वल्लवाङ्गनाः ।।७।।

7. பீச்சாங்குழலால் பீச்சப்பட்ட தண்ணீரால் நனைந்து போன பீதாம்பரத்துடன் விளையாடும் கண்ணனை கோபிகைகள் பார்த்தனர்.

संसिक्तवसनौ पीनौ निबिडौ भगवान् हरिः ।
तासां स्तनौ विलोक्यासीत्सुप्रीतहृदयस्तथा ।।८।।

8. பகவானாகிய கண்ணன் தண்ணீரால் நனைக்கப்பட்டு பருத்து அழகாக உள்ள அவர்களது ஸ்தனங்களைப் பார்த்து மகிழ்ந்தான்.

ससंभ्रमं समाश्लिष्य गोपिकाः प्रेमपूर्वकम् ।
अपहृत्य दृतिं कृष्णो ववर्ष सलिलं मुहुः ।।९।।

9. பரபரப்புடன் ஓடிவந்து அன்புடன் அவர்களது கையிலுள்ள பீச்சாங்குழலைப் பிடிங்கினான்

एवं नानाविधैर्वर्णैश्चित्रितो भगवान् हरिः ।
विचित्ररूपः शुशुभे भगवान् भास्करो यथा ।।१०।।

10. இவ்வாறு பல வண்ணமுள்ள தண்ணீரால் நனைக்கப்பட்ட கண்ணன் பலவர்ணமுள்ள ஸூர்யன்போல் ஜொலித்தான்.

गोपीगणकुचद्वन्द्वकुङ्कुमाङ्कितवक्षसा ।
परिरेभे प्रियां राधां हरिर्मदनमोहनः ।।११।।

11. மதனமோஹனன் கோபிகைகளின் ஸ்தனங்களில் உள்ள குங்குமம் படிந்த தனது மார்பினால் ராதையைக் கட்டிக்கொண்டான்.

कलिन्दजायाः पुलिने धावन्तीनामितस्ततः ।
मञ्जुमञ्जीरनिनदः कर्णानन्दप्रदोऽभवत् ।।१२।।

12. யமுனாதீரத்தில் இங்குமங்கும் ஓடும் கோபிகைகளின் கால்சலங்கையின் சப்தம் காதுக்கினியதாக இருந்தது.

तथा बृन्दावनं रम्यं विविधैर्वन्दनैस्तदा ।
शुशुभे गोपिकानाञ्च कृष्णस्य पदलाञ्छनैः ।।१३।।

13. இவ்வாறு ப்ருந்தாவனம் பலவித வண்ணப் பொடிகளால் படிந்த கண்ணனுடையவும் கோபிகைகளுடையவும் அடிச்சுவடுகளால் அழகியதாயிற்று.

धावन्त्यो गोपिकास्तत्र कृष्णपीडितकुन्तलाः ।
किञ्चिद्रोषेण संयुक्ता ववृषुर्वन्दनानि ताः ।।१४।।

14. கண்ணனால் பிடித்து இழுக்கப்பட்ட பின்னலுடைய கோபிகைகள் கொஞ்சம் ரோஷத்துடன் கண்ணனை பீச்சாங்குழல் தண்ணீரால் அடித்தனர்.

काश्चित्प्रच्युतनीव्यश्च गलितस्तनपट्टिकाः ।
प्रेमोद्वेगेन संयुक्ता गोविन्दं परिरेभिरे ।।१५।।

15. சிலர் ப்ரேம உத்வேகத்தில் இடுப்புத் துணியும் ஸ்தனகஞ்சுகமும் அவிழ்ந்தது தெரியாமல் கண்ணனைக் கட்டிக் கொண்டனர்.

एवं सरभसं कृष्णः क्रीडन् सूर्यसुतावने ।
अथावरुह्य कालिन्द्यां रेमे रसिकशेखरः ।।१६।।

16. ரஸிகசேகரன் இவ்வாறு பரபரப்புடன் விளையாடி விட்டு பிறகு யமுனையில் இறங்கி அவர்களுடன் நீராடலானான்.

सिञ्चन्त्यो यामुनं वारि करपद्मैः परस्परम् ।
मध्ये निषण्णं गोविन्दं सप्रेम परिरेभिरे ।।१७।।

17. அவர்கள் பரபரப்புடன் பரஸ்பரம் கைகளால் தண்ணீரை வாரிஅடித்துக்கொண்டு மத்தியில் நிற்கும் கண்ணனை அன்புடன் கட்டிக்கொண்டனர்.

यमुनाजलसंसिक्तं राकाचन्द्रेण राजितम् ।
तासां गोविन्दकान्तानां सौन्दर्यं द्विगुणीकृतम् ।।१८।।

18. பௌர்ணமிநிலவில் யமுனைஜலத்தில் நனைந்த கோவிந்தகாந்தைகளான அவர்களின் அழகும் சோபையும் இரண்டுமடங்கு அதிகமாயிற்று.

गलितं वसनं तासामुन्नतस्तनमण्डलात् ।
तासां कुलाचार इव चचाल यमुनाजले ॥१९॥

19. அவர்களின் உத்துங்கமான ஸ்தனமண்டலத்திலிருந்து நழுவிய மேலாடை குலதர்மம் நழுவியதுபோல் யமுனையில் மிதந்தது.

तासां कुङ्कुमपङ्केन लिप्ता कृष्णा महानदी ।
नानानुरागसंयुक्ता शुशुभे गोपिकेव सा ॥२०॥

20. அவர்களின் குங்குமங்களால் சிவந்த தண்ணீருள்ள மஹாநதியான யமுனை புதிய அனுராகமுள்ள கோபிகைபோல் திகழ்ந்தாள்.

ताडयन्त्यश्च पद्मेन चालिङ्ग्यन्त्यश्च माधवम् ।
नात्मानं सस्मरुस्तत्र गोपिकाः काममोहिताः ॥२१॥

21. காமமோஹிதைகளான கோபிகைகள் கண்ணனை தாமரைப்பூக்களால் அடிப்பதும் ஆசைதீர கட்டிக் கொள்வதுமாக தன்னை மறந்து போனார்கள்.

यमुनासलिलेनैव विलीने कुङ्कुमे तदा ।
शुशुभे निजकान्त्यैव विशदं स्तनमण्डलम् ॥२२॥

22. யமுனாஜலத்தினால் குங்குமம் கரைந்ததும் அவர்கள் ஸ்தனம்மண்டலம் அதற்குள்ள சோபையுடன் விளங்கியது.

ताः समाश्लिष्य गोविन्दो न तृप्तिं प्राप कामपि ।
ससंभ्रमं प्रियास्तत्र परिरेभे पुनः पुनः ॥२३॥

23. கோவிந்தனுக்கு அவர்களைக் கட்டிக்கொண்டு அலுக்கவேயில்லை. எனவே பரபரப்புடன் அவர்கள் யாவரையும்

कस्याश्चिद्व्रजसुन्दर्याः मृदुलं पाणिपल्लवम् ।
आदाय धारयामास स्वयमंसे सुखप्रदः ॥२४॥

24. ஒரு வ்ரஜஸுந்தரியின் பல்லவம் போன்ற கையைத் தானாகவே எடுத்துக் கழுத்தில் போட்டுக் கொண்டு அவளுக்கு ஸுகம் தந்தான்.

कामप्यवाङ्मुखीं गोपीं लज्जया ललितां हरिः ।
मन्दमन्दमुपागत्य पृष्ठतः परिषस्वजे ॥२५॥

25. வெட்கத்தினால் தலைகுனிந்தவாறு இருக்கும் ஒருவளைக் கண்டு மெள்ள கண்ணன் அவளது பின்புறமாகச் சென்று கட்டிக்கொண்டான்.

आनन्दयन् प्रतिपदं प्रेमभाषणपूर्वकम् ।
कस्याश्चित्प्रेममुग्धाया मुमोच स्तनपट्टिकाम् ॥२६॥

26. கண்ணன் கொஞ்சிப்பேசி ஒருவளை மயக்கி அவள் மயங்கி நின்றபொழுது அவளது கஞ்சுகத்தை மெல்ல அவிழ்த்து விட்டான்.

एवं बहुविधा लीला विधाय भगवान् हरिः ।
समेतो राधया देव्या डोलामध्यमुपागमत् ॥२७॥

27. இவ்வாறு பகவானாகிய கண்ணன் பலவிதமாய் விளையாடி அங்குள்ள ஊஞ்சலில் அமர்ந்தான்.

दिव्यरत्नमयी डोला दिव्यदंपतिशोभिता ।
चचाल मन्दमन्दं सा मन्दमारुतसेविता ॥२८॥

28. திவ்யதம்பதிகளால் சோபிக்கும் திவ்யரத்னமயடோலை மந்தமாருதத்தில் மெள்ள மெள்ள அசைந்தது.

नानापुष्पमयीं डोलां नानारत्नविराजिताम् ।

सरसं स्पन्दयामासुर्गोपिकाः प्रेमपूर्वकम् ॥२९॥

29. பலபுஷ்பங்களால் அலங்கரிக்கப்பட்ட பலவிதமாய் ரத்னம் பதிந்த டோலையைத் தோழிகள் அன்புடன் ஆட்டினார்கள்.

जगुराभीरसुन्दर्यः सुस्वरञ्च परस्परम् ।
मृदङ्गं वादयन्त्यश्च रणयन्त्यो विपञ्चिकाम् ॥३०॥

30. கோபஸுந்தரிகள் வீணைவாசித்துக்கொண்டும், மிருதங்கம் வாசித்துக்கொண்டும் இனிமையாகப் பாடினர்.

तत्र ता ननृतुः काश्चिन्नानाभावप्रदर्शकाः ।
किरन्त्यो दिव्यकर्पूरकुङ्कुमादीनि माधवे ॥३१॥

31. கண்ணன்மேல் கற்பூரம் குங்குமப்பூ இவைகளின் பொடியைத் தூவி பல ரஸபாவங்களைக் காட்டி சிலர் நாட்டியமாடினர்.

एवं सुगन्धकाश्मीरकुङ्कुमैरभिरञ्जितौ ।
विरेजतुर्दम्पती तौ नयनानन्दवर्धनौ ॥३२॥

32. இவ்வாறு ஸுகந்தமான காச்மீர குங்குமங்களால் அந்த தம்பதிகள் கண்களுக்கு ஆனந்தத்தை வர்தனம் செய்பவர்களாய் விளங்கினர்.

वन्दनारुणगात्रश्रीप्रकाशितवनान्तरः ।
रराज राधिकानाथो रत्नडोलान्तरे तदा ॥३३॥

33. ஹோலிப்பொடியால் வர்ணம்மாறிய தனது காத்ர சோபையால் ப்ருந்தாவனத்தையே சோபிக்கச் செய்யும் கண்ணன் ரத்னமயமான டோலையில் ராதையுடன் இருந்தான்.

एवं स्वच्छन्दवृत्तीनां किङ्करीणां हरिः स्वयम् ।

आनन्दं वर्धयन् रेमे विशुद्धप्रेमचेष्टितः ॥३४॥

34. இவ்வாறு சுதந்திரமாய் விளையாடும் தனது கிங்கரிகளுடன் கண்ணன் தனது சுத்தமான ப்ரேம சேஷ்டைகளால் அவர்களது ஆனந்தத்தை வளர்த்தான்.

गोपीसहस्रमध्यस्थं नानाकेलिविशारदम् ।
विलोक्य पञ्चविशिखः स्वयमेव विमोहितः ॥३५॥

35. ஆயிரக்கணக்கான கோபிகைகள் நடுவில் பலவிதமான லீலை செய்யும் கண்ணனைக் கண்டு மன்மதன் தானே மயங்கிவிட்டான்.

विसृज्य चापं बाणांश्च बद्धाञ्जलिपुटस्तथा ।
योगेश्वर नमस्तुभ्यमिति तुष्टाव मन्मथः ॥३६॥

36. கரும்புவில்லையும் , புஷ்பபாணங்களையும் விட்டு காமன் கைகூப்பி யோகேச்வர நமஸ்துப்யம் என்று துதித்தான்.

आत्मानं बहुमेने च कामः कृष्णेन निर्जितः ।
ब्रह्मरुद्रादयः सर्वे यस्य सन्ति वशे सुराः ॥३७॥

37. ப்ரும்மருத்ராதிகளையும் வென்ற மன்மதன் கண்ணனிடம் தோற்றுப்போனாலும் தன்னைப் பெருமைப்படுத்திக் கொண்டான்.

आत्मारामोपि गोविन्दो योगिनामपि दुर्लभः ।
रमते गोपकन्याभिः केवलं कृपयैव हि ॥३८॥

38. கோவிந்தன் ஆத்மாராமனாயினும் யோகிதுர்லபன் . ஆயினும் கருணையால் மட்டும் கோபிகைகளுடன் விளையாடினான்.

संप्राप्य ब्रह्मसंस्पर्शं तथैवाभीरकन्यकाः ।

ब्रह्मानन्दनिमग्नास्ता बभूवुर्विजितेन्द्रियाः ॥३९॥

39. கோபிகைகளும் இவ்வாறு ப்ரம்ஹஸம்ஸ்பர்சத்தைப் பெற்று ப்ரம்ஹாநந்தத்தில் மூழ்கி இந்த்ரியஸுகத்தை மறந்தனர்.

इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये लीलाकाण्डे वसन्तोत्सववर्णनं नाम सप्तदशोऽध्यायः ॥१७॥

இவ்வாறு ஶ்ரீக்ருஷ்ணப்ரேமி மஹாப்ரபு அருளிய ஶ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில் லீலாகாண்டத்தில் பதினேழாம் அத்தியாயம் முற்றும்

## अथाष्टादशोऽध्यायः

## பதினெட்டாம் அத்தியாயம்

### श्रीसद्गुरुरुवाच

एवं वसन्तकाले तु विकसत्पुष्पमण्डिते ।
रमते रसिकेन्द्रोऽयं रमणीभिः समन्वितः ॥१॥

ஸத்குரு

1. இவ்வாறு பூக்கள் மலர்ந்த ஸுகந்தமான வஸந்தகாலத்தில் ரமணிகளுடன் கூடி ரஸிகேந்த்ரன் விளையாடினான்.

अथ बृन्दावने रम्ये यमुनापुलिने हरिः ।
वारिक्रीडां समारेभे वल्लवीगणसेवितः ॥२॥

2. ப்ருந்தாவனத்தில் யமுனாஜலத்தில் கண்ணன் கோபிகைகளுடன் ஜலக்ரீடை செய்ய ஆரம்பித்தான்.

भस्त्रायन्त्रेण सलिलमादाय श्यामसुन्दरः ।

सिञ्चन् व्रजाङ्गनाः सर्वा विजहार ससंभ्रमम् ।।३।।

3. ச்யாமசுந்தரன் பீச்சாங்குழலினால் தண்ணீரை எடுத்து கோபிகைகளின் மேல் அடித்து விளையாடினான்.

तं कृष्णं प्रतिसिञ्चन्त्यो गोपिकाः प्रीतिपूर्वकम् ।
नानावर्णञ्च सलिलमादाय निजरेचकैः ।।४।।

4. கோபிகைகள் யாவரும் பலவிதமான வண்ணமுள்ள தண்ணீரைப் பீச்சாங்குழலில் எடுத்துப்ரேமையுடன் கண்ணன் மேல் அடித்தனர்.

विजह्रुः तत्र सरसं स्वच्छन्दं यमुनावने ।
वादयन्तश्च वाद्यानि गायन्त्यश्च परस्परम् ।।५।।

5. ப்ருந்தாவனத்தில் பாடிக்கொண்டும் வாத்யம் வாசித்துக் கொண்டும் அவர்கள் யாவரும் சுதந்திரமாய் விளையாடினர்.

किरन्त्यः कुङ्कुमादीनि मेघश्यामलविग्रहे ।
धावन्तमनुधावन्त्यो रेमिरे यमुनावने ।।६।।

6. ப்ருந்தாவனத்தில் குங்குமங்களை ச்யாமஸுந்தரன் மேல் தூவி ஓடுகின்ற கண்ணனுடன் தாங்களும் ஓடி விளையாடினர்.

रेचकप्रेरितेनैव दिव्यकुङ्कुमवारिणा ।
स्निग्धपीताम्बरं कृष्णं ददृशुर्वल्लवाङ्गनाः ।।७।।

7. பீச்சாங்குழலால் பீச்சப்பட்ட தண்ணீரால் நனைந்து போன பீதாம்பரத்துடன் விளையாடும் கண்ணனை கோபிகைகள் பார்த்தனர்.

संसिक्तवसनौ पीनौ निबिडौ भगवान् हरिः ।
तासां स्तनौ विलोक्यासीत्सुप्रीतहृदयस्तथा ।।८।।

8. பகவானாகிய கண்ணன் தண்ணீரால் நனைக்கப்பட்டு பருத்து அழகாக உள்ள அவர்களது ஸ்தனங்களைப் பார்த்து மகிழ்ந்தான்.

ससंभ्रमं समाश्लिष्य गोपिकाः प्रेमपूर्वकम् ।
अपहृत्य दृतिं कृष्णो ववर्ष सलिलं मुहुः ॥९॥

9. பரபரப்புடன் ஓடிவந்து அன்புடன் அவர்களது கையிலுள்ள பீச்சாங்குழலைப் பிடிங்கினான்

एवं नानाविधैर्वर्णैश्चित्रितो भगवान् हरिः ।
विचित्ररूपः शुशुभे भगवान् भास्करो यथा ॥१०॥

10. இவ்வாறு பல வண்ணமுள்ள தண்ணீரால் நனைக்கப்பட்ட கண்ணன் பலவர்ணமுள்ள ஸூர்யன்போல் ஜொலித்தான்.

गोपीगणकुचद्वन्द्वकुङ्कुमाङ्कितवक्षसा ।
परिरेभे प्रियां राधां हरिर्मदनमोहनः ॥११॥

11. மதனமோஹனன் கோபிகைகளின் ஸ்தனங்களில் உள்ள குங்குமம் படிந்த தனது மார்பினால் ராதையைக் கட்டிக்கொண்டான்.

कलिन्दजायाः पुलिने धावन्तीनामितस्ततः ।
मञ्जुमञ्जीरनिनदः कर्णानन्दप्रदोऽभवत् ॥१२॥

12. யமுனாதீரத்தில் இங்குமங்கும் ஓடும் கோபிகைகளின் கால்சலங்கையின் சப்தம் காதுக்கினியதாக இருந்தது.

तथा बृन्दावनं रम्यं विविधैर्वन्दनैस्तदा ।
शुशुभे गोपिकानाञ्च कृष्णस्य पदलाञ्छनैः ॥१३॥

13. இவ்வாறு ப்ருந்தாவனம் பலவித வண்ணப் பொடிகளால் படிந்த கண்ணனுடையவும் கோபிகைகளுடையவும் அடிச்சுவடு களால் அழகியதாயிற்று.

धावन्त्यो गोपिकास्तत्र कृष्णपीडितकुन्तलाः ।
किञ्चिद्रोषेण संयुक्ता ववृषुर्वन्दनानि ताः ।।१४।।

14. கண்ணனால் பிடித்து இழுக்கப்பட்ட பின்னலுடைய கோபிகைகள் கொஞ்சம் ரோஷத்துடன் கண்ணனை பீச்சாங்குழல் தண்ணீரால் அடித்தனர்.

काश्चित्प्रच्युतनीव्यश्च गलितस्तनपट्टिकाः ।
प्रेमोद्वेगेन संयुक्ता गोविन्दं परिरेभिरे ।।१५।।

15. சிலர் ப்ரேம உத்வேகத்தில் இடுப்புத் துணியும் ஸ்தனகஞ்சுகமும் அவிழ்ந்தது தெரியாமல் கண்ணனைக் கட்டிக் கொண்டனர்.

एवं सरभसं कृष्णः क्रीडन् सूर्यसुतावने ।
अथावरुह्य कालिन्द्यां रेमे रसिकशेखरः ।।१६।।

16. ரஸிகசேகரன் இவ்வாறு பரபரப்புடன் விளையாடி விட்டு பிறகு யமுனையில் இறங்கி அவர்களுடன் நீராடலானான்.

सिञ्चन्त्यो यामुनं वारि करपद्मैः परस्परम् ।
मध्ये निषण्णं गोविन्दं सप्रेम परिरेभिरे ।।१७।।

17. அவர்கள் பரபரப்புடன் பரஸ்பரம் கைகளால் தண்ணீரை வாரிஅடித்துக்கொண்டு மத்தியில் நிற்கும் கண்ணனை அன்புடன் கட்டிக்கொண்டனர்.

यमुनाजलसंसिक्तं राकाचन्द्रेण राजितम् ।
तासां गोविन्दकान्तानां सौन्दर्यं द्विगुणीकृतम् ।।१८।।

18. பௌர்ணமிநிலவில் யமுனைஜலத்தில் நனைந்த கோவிந்தகாந்தைகளான அவர்களின் அழகும் சோபையும் இரண்டுமடங்கு அதிகமாயிற்று.

गलितं वसनं तासामुन्नतस्तनमण्डलात् ।
तासां कुलाचार इव चचाल यमुनाजले ।।१९।।

19. அவர்களின் உத்துங்கமான ஸ்தனமண்டலத்திலிருந்து நழுவிய மேலாடை குலதர்மம் நழுவியதுபோல் யமுனையில் மிதந்தது.

तासां कुङ्कुमपङ्केन लिप्ता कृष्णा महानदी ।
नानानुरागसंयुक्ता शुशुभे गोपिकेव सा ।।२०।।

20. அவர்களின் குங்குமங்களால் சிவந்த தண்ணீருள்ள மஹாநதியான யமுனை புதிய அனுராகமுள்ள கோபிகைபோல் திகழ்ந்தாள்.

ताडयन्त्यश्च पद्मेन चालिङ्ग्यन्त्यश्च माधवम् ।
नात्मानं सस्मरुस्तत्र गोपिकाः काममोहिताः ।।२१।।

21. காமமோஹிதைகளான கோபிகைகள் கண்ணனை தாமரைப்பூக்களால் அடிப்பதும் ஆசைதீர கட்டிக் கொள்வதுமாக தன்னை மறந்து போனார்கள்.

यमुनासलिलेनैव विलीने कुङ्कुमे तदा ।
शुशुभे निजकान्त्यैव विशदं स्तनमण्डलम् ।।२२।।

22. யமுனாஜலத்தினால் குங்குமம் கரைந்ததும் அவர்கள் ஸ்தனமண்டலம் அதற்குள்ள சோபையுடன் விளங்கியது.

ताः समाश्लिष्य गोविन्दो न तृप्तिं प्राप कामपि ।
ससंभ्रमं प्रियास्तत्र परिरेभे पुनः पुनः ।।२३।।

23. கோவிந்தனுக்கு அவர்களைக் கட்டிக்கொண்டு அலுக்கவேயில்லை. எனவே பரபரப்புடன் அவர்கள் யாவரையும்

ஒரே மூச்சால் கட்டிக்கொண்டான்

तदा तासाञ्च गोपीनां रसिकेन्द्रस्य तस्य च ।
केवलं यामुनं वारि बभूवावरणं बत ।।२४।।

*24. அப்போது அவர்களுக்கும் கண்ணனுக்கும் கேவலம் யமுனாஜலம் தான் வஸ்த்ரமாக இருந்தது.*

वेणीबन्धच्युतैः पुष्पैस्तथा काश्मीररेणुभिः ।
अलङ्कृता तदा कृष्णा शुशुभे मन्दगामिनी ।।२५।।

*25. பின்னலிலிருந்து நழுவிய பூக்களாலும் மார்பிலிருந்து நழுவிய குங்குமங்களாலும் யமுனாநதி சோபையுடன் மெள்ள சென்று கொண்டிருந்தாள்.*

एवं विधाय गोपीभिः प्रेयस्या राधया सह ।
यमुनायां जलक्रीडां लतागृहमुपागमत् ।।२६।।

*26. இவ்வாறு கோபிகைகளுடனும் ராதையுடனும் ஜலக்ரீடை செய்துவிட்டு கண்ணன் நிகுஞ்ஜத்திற்கு வந்தான்.*

तत्र तौ राधिकाकृष्णौ वस्त्रभूषणलेपनैः ।
अलङ्कृतावभवतां गोपीभिः प्रेमपूर्वकम् ।।२७।।

*27. பிறகு ராதையையும் கண்ணனையும் கோபிகைகள் வஸ்த்ரபூஷண சந்தனபுஷ்பங்களால் அலங்கரித்து விட்டனர்.*

एवं वसन्तकाले तु राकाचन्द्रविराजिते ।
बृन्दावने हरिर्मुग्धो रेमे राधिकया सह ।।२८।।

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये लीलाकाण्डे वसन्तोत्सववर्णनं नामाष्टादशोऽध्यायः ।।१८।।*

28. இவ்வாறு வஸந்தகாலத்தில் பௌர்ணமி நிலவினால் அழகிய ஸ்ரீப்ருந்தாவனத்தில் மோஹமடைந்த கண்ணன் ராதையுடன் விளையாடினான்.

இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமி மஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவனமாஹாத்மியத்தில் லீலாகாண்டத்தில் வஸந்தோத்ஸவவர்ணனம் முற்றும்

# अथैकोनविंशोऽध्यायः

## பத்தொன்பதாம் அத்தியாயம்

### भागवता ऊचुः

हरेर्लीलाविनोदस्य बृन्दावनविहारिणः ।
अस्माकं गुरुराजेन्द्र दिनचर्यां वद प्रभो ।।१।।

பாகவதர்கள்

1. குருராஜேந்த்ர! ப்ரபோ! லீலாவினோதனான ப்ருந்தாவன விஹாரியான கண்ணனின் தினசர்யையை எங்களுக்குச் சொல்லவேண்டும்.

### श्रीसद्गुरुरुवाच

पावनं पावनानाञ्च मङ्गलानाञ्च मङ्गलम् ।
राधिकावल्लभस्याद्य वक्ष्यामि दिनचेष्टितम् ।।२।।

ஸ்ரீஸத்குரு

2. பரமபாவனமானதும் பரமமங்களமானதுமான க்ருஷ்ணனின் தினசர்யையை சொல்லுவேன்.

विशदायां दिशि प्राच्यां सूर्यसूतस्य रश्मिभिः ।
उत्फुल्लेषु च पद्मेषु गुञ्जत्सु भ्रमरेषु च ।।३।।

बालं निद्रालसं कृष्णं प्रेमवात्सल्यपूरिता ।
प्रबोधयन्ती मधुरैर्वचनैर्नन्दभामिनी ॥४॥

ददाति मधुरं क्षीरं मुद्गान्नं लड्डुकं तथा ।
अश्नाति बालगोपालो दन्तधावनपूर्वकम् ॥५॥

*3-5. அருணோதயமாகி ஸூர்யகிரணத்தால் கிழக்கு வெளுத்ததும், தாமரை மலர்ந்ததும் வண்டுகள் ரீங்காரம் செய்யும் பொழுது தூக்கக்கலக்கத்துடன் உள்ள கண்ணனை யசோதை வாத்ஸல்யத்துடன் மதுரமான வசனங்களால் எழுப்பி பல் துலக்கிவிட்டு பாலகோபாலனுக்கு இட்லியும் பொங்கலும், பாலும் தருகிறாள். அதைக் கண்ணன் விரும்பிச் சாப்பிடுகிறான்.*

अथ नन्दात्मजः कृष्णो मातृमृष्टः स्वलङ्कृतः ।
शिरोवेष्टनसंयुक्तः शृङ्गवेत्रधरो हरिः ॥६॥

धेनूः सञ्चारयंस्तूर्णं वादयन् मुरलीमपि ।
गोपबालकसंयुक्तो गच्छति श्रीवनं मुदा ॥७॥

*6,7. பிறகு கண்ணன் அம்மா அலங்காரம் செய்துவிட்டதும் முண்டாசு கட்டிக்கொண்டு ச்ருங்கமும் பிரம்பும் எடுத்துக் கொண்டு மாடுகளை ஓட்டிக்கொண்டு குழலூதிக்கொண்டு ஆயர்சிறுவர்களுடன் ப்ருந்தாவனம் செல்லுவான்.*

तत्र नानाविधां लीलां कृत्वा गोपालनन्दनः ।
आनन्दयति गोपालान् सौहृदप्रेमतत्परान् ॥८॥

*8. அங்கு கோபாலன் பலவிதமான லீலைகள் செய்து அன்புடன் தனது நண்பர்களை ஆனந்தப்படுத்துவான்.*

अथ मध्यङ्गते सूर्ये यमुनान्तिकमागतः ।

अश्नाति विविधञ्चान्नं बालकैः प्रेमपूर्वकम् ॥९॥

*9. நடுப்பகலில் யமுனைக்கு வந்து பாலகர்களுடன் தான் கொண்டுவந்த விதவிதமான அன்னங்களைச் சாப்பிடுவான்,*

निकुञ्जञ्च प्रविश्याथ प्रेयसीगणसेवितः ।
शेते पल्लवतल्पे च सखीवीजितचामरः ॥१०॥

*10. பிறகு தனது ப்ரியைகளுடன் நிகுஞ்ஜம் வந்து கிஸலய சயனத்தில் ஓய்வு எடுத்துக் கொள்வான், அப்போது அவனது தோழிகள் சாமரம் போடுவார்கள்.*

अथोत्थाय मुकुन्दस्य मन्दरश्मौ दिवाकरे ।
गोपीगोपालसंयुक्तश्चरति श्रीवने मुदा ॥११॥

*11. பிறகு எழுந்துவந்து முகுந்தன் இளம்வெய்யிலானதும் தனது நண்பர்களுடனும், கோபிகைகளுடனும் ஸ்ரீவனத்தில் ஸஞ்சரிப்பான்.*

एवं बहुविधां लीलां विधाय व्रजनन्दनः ।
सायमायाति गोविन्दो नन्दस्य भवनं प्रति ॥१२॥

*12. இவ்வாறு பலலீலைகள் செய்து நந்தபாலன் மாலையில் நந்தபவனம் திரும்புவான்.*

आगच्छन्तं नन्दबालं गोरजश्चुरितालकम् ।
दिव्यपीताम्बरधरं पुष्पमालाविभूषितम् ॥१३॥

स्वेदस्निग्धकपोलञ्च कज्जलालिप्तलोचनम् ।
वादयन्तञ्च मुरलीं नृत्यन्तञ्च मुहुर्मुहुः ॥१४॥

विलोक्य गोपवनिता गृहद्वारस्थितास्तदा ।

भवन्ति परमानन्दविकसत्पद्मलोचनाः ।।१५।।

*15. கோதூளி படிந்த கேசமுடையவனும், திவ்யபீதாம்பர தாரியும், புஷ்பமாலாபூஷிதனும், வியர்வை அரும்பிய கன்ன முடையவனும், மைகலைந்த கண்களுடையவனும், வேணுகானம் செய்பவனும், அடிக்கடி நடனமாடுபவனும், மாலைப்பொழுது திரும்பிவருபவனுமான கண்ணனை கோபவனிதைகள் பார்த்து பரமானந்தத்தினால் மலர்ந்த கமலநயனமுடையவர்களாக ஆவார்கள்.*

रोहिण्या च परिष्वक्तो लालितश्च यशोदया ।
नन्देन साकं क्षीरान्नं भुक्त्वा हलधरेण च ।।१६।।

क्रीडन् कलिन्दजातीरे सङ्केतस्थानमागतः ।
राधां प्रतीक्षमाणश्च निगूढस्तत्र वर्तते ।।१७।।

*16.17 ரோஹிணியால் கட்டிக்கொள்ளப்பட்டவனாய் யசோதையால் லாலனை செய்யப்பட்டவனாய் நந்தகோபனுடனும் பலராமனுடனும் பால்சாதம் சாப்பிட்டுவிட்டு யமுனைக்கரையில் விளையாடுபவனாய் தான் ஸங்கேதம் செய்த நிகுஞ்ஜத்திற்கு ராதை வருகிறாளோ என்று எதிர்பார்த்து அங்கு ரகசியமாகக் காத்திருப்பான்.*

तदा सखीजनैः साकं प्रेयसीं तामुपस्थिताम् ।
आनीय भगवान् कृष्णः प्रेम्णा सान्त्वयति प्रभुः ।।१८।।

*18. அப்போது அங்கு தனது தோழிகளுடன் வந்த காதலியான ராதையை அழைத்து அன்புடன் ஸமாதானம் செய்வான்.*

अथ गोपीजनैः साकं यमुनापुलिनं गतः ।
करोति रासलीलाञ्च कृष्णो मदनमोहनः ।।१९।।

*19. பிறகு மதனமோஹனன் கோபிஜனங்களுடன் யமுனா புளினம் வந்து ராஸலீலை செய்வான்.*

रासलीलान्तरे कृष्णो राधामादाय सत्वरम् ।

प्रविश्य मधुरं कुञ्जं करोति रतिमच्युतः ॥२०॥

20. ராஸலீலையின் மத்தியில் கண்ணன் ராதையை அழைத்துக் கொண்டு நிகுஞ்ஜம் வந்து மதுரமாக ரதிலீலை செய்வான்.

कृष्णं रतिरणश्रान्तं राधिकास्तनमण्डले ।
स्वपन्तञ्चाथ पश्यन्ति निगूढा गोपिकास्तथा ॥२१॥

21. ரதிலீலை செய்து ராதையின் ஸ்தனமண்டலத்தில் களைத்துப்போய் படுத்திருக்கும் கண்ணனை கோபிகைகள் இரகசியமாய் பார்த்து மகிழ்வார்கள்.

अथार्धरात्र उत्थाय प्रेयसीगणसंयुतः ।
आगच्छति गृहं कृष्णो निद्रालसविलोचनः ॥२२॥

22. பிறகு அர்த்தராத்திரியில் கண்ணன் எழுந்து தனது காதலிகளுடனும் ராதையுடனும் தூக்கக் கலக்கத்தினால் அழகிய லோசனங்களுள்ளவனாய் வீடு திரும்புவான்.

एवं करोति गोविन्दो लीलां परमपावनीम् ।
विशुद्धप्रेमतात्पर्यघटनापरिपूरिताम् ॥२३॥

23. தூயஅன்பே லக்ஷியமான கண்ணன் ப்ரேமை நிறைந்த லீலைகளை இவ்வாறு தினந்தோறும் செய்கிறான்.

भावयेत् कृष्णभक्तस्तु यमुनातीरमागतः ।
दिनचर्यामिमां भक्त्या यथाकालं यथारुचि ॥२४॥

24. ப்ருந்தாவனம் வந்த கிருஷ்ணபக்தன் இந்த லீலைகளையே அந்தந்த ஸமயத்தில் அவனது ருசிக்குத் தக்கப்படி தியானம் செய்யவேண்டும்.

भावयन्ते यथा भक्ता भावग्राही जनार्दनः ।

तथा भक्तस्य शुद्धस्य साक्षादायाति सन्निधिम् ।।२५।।

*25. பக்தர்களின் மனோபாவத்தையே ஏற்றுக் கொள்ளும் பகவானும் அந்த மனோபாவத்திற்கு ஏற்றபடி பக்தர்களுக்கு திவ்ய தர்சனமும் தருவான்.*

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये लीलाकाण्डे दिनचर्यावर्णनं नामैकोनविंशोऽध्यायः ।।१९।।*

*இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமி மஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவனமாஹாத்மியத்தில் லீலாகாண்டத்தில் பத்தொன்பதாம் அத்தியாயம் முற்றும்*

## अथ विंशोऽध्यायः

## இருபதாம் அத்தியாயம்

*भागवता ऊचुः*

निकुञ्जलीलां कृष्णस्य सद्गुरो वद विस्तरात् ।
श्रद्धया श्रोतुमिच्छामो रहस्यमिदमुत्तमम् ।।१।।

பாகவதர்கள்

*1. ஸத்குரோ! கண்ணனின் நிகுஞ்ஜலீலையை விஸ்தாரமாக சொல்ல வேண்டும், இந்த உத்தமமான ரஸஸ்யத்தைக் கேட்க விரும்புகிறோம்.*

*श्रीसद्गुरुरुवाच*

भगवत्युदिते चन्द्रे श्रीवने परिशोभिते ।
विकसन्ति च पुष्पाणि वृक्षेषु लतिकासु च ।।२।।

ஸ்ரீஸத்குரு

2. பகவானாகிய சந்திரன் உதயமானதும் நிலவு வெளிச்சத்தில் ப்ருந்தாவனத்தில் மரங்களிலும் செடிகளிலும் புஷ்பங்கள் மலர்ந்தன.

कूजन्ति कोकिलगणा वाति मन्दञ्च मारुतः ।
गुञ्जन्ति भ्रमराश्चैव मधुपानमदाकुलाः ।।३।।

3. குயில்கள் கூவுகின்றன, மந்தமாருதம் வீசுகிறது. மதுஉண்டு மதம்பிடித்த வண்டுகள் ரீங்காரம் செய்கின்றன.

एवं मनोरमे तत्र कालिन्दीतटकानने ।
नानालङ्कारसंयुक्तश्चरति श्यामसुन्दरः ।।४।।

4. இவ்வாறு மனோரம்யமான யமுனாதீரத்திலுள்ள காட்டில் ச்யாமஸுந்தரன் ஸர்வாலங்கார ஸம்பன்னனாய் ஸஞ்சரித்தான்.

वनमाली घनश्यामो हरिचन्दनचर्चितः ।
कज्जलालिप्तनयनः कस्तूरीतिलकाञ्चितः ।।५।।

कनकाम्बरधारी च कटिशोभितशृङ्खलः ।
कोटिमन्मथलावण्यः कण्ठशोभितकौस्तुभः ।।६।।

अधरे विनिवेश्यापि वंशीं वादयते हरिः ।
राधानामानि मधुरं तदानयनकाङ्क्षया ।।७।।

5-7. வனமாலை அணிந்தவனும், மேகச்யாமளனும், ஹரிசந்தனம் பூசியவனும், மைதீட்டிய கண்கள்உடையவனும் கஸ்தூரி திலகமணிந்தவனும், பீதாம்பரம் அணிந்தவனும், இடுப்பில் மணிமேகலை அணிந்தவனும், கோடிமன்மதர்களுக்கு ஸமமான அழகுள்ளவனுமான கண்ணன் தனது அதரத்தில் குழலைப்பொருத்தி ராதையை அழைக்க விரும்பி மதுரமாய் வாசித்தான்.

एवमाहूय भगवान् वंशीनादेन राधिकाम् ।
निकुञ्जं प्रविवेशाथ तत्सङ्गमकुतूहलः ।।८।।

8. இவ்வாறு ராதையைக் கூப்பிட்டு ச்யாமஸுந்தரன் அவளை எதிர்பார்த்து அவளுடன் விளையாடும் ஆசையால் நிகுஞ்ஜத்தில் ப்ரவேசித்தான்.

मुहुर्मुहुः पश्यति च पन्थानं श्यामसुन्दरः ।
सोत्कण्ठं राधिकायास्तु समागमकुतूहलः ।।९।।

9. ராதையுடன் சேரும் குதூஹலத்தில் ஆர்வத்துடன் அவள் வரும் வழியை அடிக்கடி பார்த்தவாறு நின்றான்.

तदा तां प्रेयसीं राधां सखी सद्गुणसंयुता ।
संसारयन्ती विपिनं मन्दमन्दमुपागमत् ।।१०।।

10. பிறகு ப்ரியையான அந்த ராதையை மிகவும் நல்ல குணமுள்ள அவளது தோழி மெல்லமெல்ல அழைத்துக்கொண்டு ப்ருந்தாவனம் வந்தாள்.

तत्र तं सुन्दराकारं गोविन्दं प्राणवल्लभम् ।
अवलोक्य निकुञ्जे सा लज्जयाऽवाङ्मुखी स्थिता ।।११।।

11. அங்கு நிகுஞ்ஜத்தில் தனது ப்ராணவல்லபனும் ஸுந்தரரூபனுமான கண்ணனைக் கண்டு வெட்கத்துடன் தலைகுனிந்து நின்றாள்.

कुञ्जद्वारे निषण्णां तां लज्जितां वृषभानुजाम् ।
अवोचल्ललिता देवीं राधिकां कृष्णवल्लभाम् ।।१२।।

12. குஞ்ஜத்தின் வாசலில் நிற்கும் கண்ணனின் காதலியான ராதையை அவளது தோழியான லலிதா சொல்லுகிறாள்.

### ललितोवाच

तमसा निभृतं ह्येतन्निकुञ्जं पुष्पमण्डितम् ।
प्रविश स्वामिनि प्रेम्णा स्वामिनं ते वशीकुरु ।।१३।।

லலிதா

13. ஸ்வாமினி! இந்த நிகுஞ்ஜம் இருள்மண்டிக் கிடக்கிறது. எனவே நிகுஞ்ஜத்தில் ப்ரவேசித்து ஸ்வாமியை வசம் செய்து கொள்வாய்.

प्रतीक्षते वरारोहे तवालिङ्गनमच्युतः ।
कामं पूरय कृष्णस्य कामितार्थफलप्रदे ।।१४।।

14. விரும்பிய பலனைத்தரும் அழகிய பெண்ணே! அச்சுதன் உன்னை ஆலிங்கனம் செய்துகொள்ள விரும்புகிறான். அவனது ஆசையை நிறைவேற்று.

### श्रीराधोवाच

त्वमेव पूर्वं गच्छाद्य ललिते प्रियभाषिणि ।
अहमिच्छामि ते सङ्गं कृष्णेन लतिकागृहे ।।१५।।

ஸ்ரீராதா

15. ப்ரியமாகப் பேசும் லலிதே! நீயே முன்னதாகச் செல்வாயாக. நிகுஞ்ஜத்தில் நீயும் கண்ணனும் சேர்த்திருப்பதைத்தான் நான் விரும்புகிறேன்.

शृणु मे वचनं सद्यः कामं पूरय मे सखि ।
यदानीतास्म्यहं कृच्छ्रात्त्वया निःस्वार्थवृत्तया ।।१६।।

16. சுயநலமில்லாமல் என்னை அழைத்து வந்தாய்அல்லவா! எனவே உன்னைத்தான் கண்ணனுடன் கூட்டி வைக்க விரும்புகிறேன்.

எனது ஆசையை நிறைவேற்று. என் வசனத்தைக் கேள்.

## ललितोवाच

स्वच्छन्दवृत्तिरस्माकं प्राणकान्तो हरिः स्वयम् ।
त्वामेवाह्वयति क्षिप्रं प्रविशेदं लतागृहम् ।।१७।।

லலிதா

17. நமதுப்ராணகாந்தனான ஹரி சுதந்திரமானவர், உங்களையே அவர் விரும்பி அழைத்தார். எனவே நீயே நிகுஞ்ஜத்தில் ப்ரவேசி.

आवां कृष्णसुखायैव भवावो वृषभानुजे ।
तवैव कृपया मेऽपि सुलभः कृष्णसङ्गमः ।।१८।।

18. ராதே! நாம் க்ருஷ்ணஸுகத்திற்காகவே பிறந்திருக்கிறோமல்லவா, உனது க்ருபையால் எனக்கும் க்ருஷ்ணஸங்கமம் கிடைக்கும்.

## श्रीसद्गुरुरुवाच

इत्युक्ता राधिकादेवी पदाग्रन्यस्तवीक्षणा ।
लज्जयाऽवाङ्मुखी मन्दं प्राविशल्लतिकागृहम् ।।१९।।

ஸ்ரீஸத்குரு

19. இவ்வாறு சொல்லப்பட்ட ராதை தனது பாதத்தின் நுனியையே பார்த்தவாறு தலைகுனிந்தபடியே வெட்கத்துடன் நிகுஞ்ஜத்தில் ப்ரவேசித்தாள்.

राधावदनसौन्दर्यमकरन्दं निपीय च ।
मदालसौ मुकुन्दस्य विलोचनमधुव्रतौ ।।२०।।

20. ராதாவின் முககமலத்தின் மதுவை உண்டு கண்ணனின்

நயனப்ரமரங்கள் வெறிபிடித்ததுபோல் அலைந்தன.

नानालङ्कारसंयुक्तां सर्वाभरणभूषिताम् ।
विलोक्य प्रेयसीं राधां परिपूर्णमनोरथः ॥२१॥

21 பலவிதமாய் அலங்காரம் செய்துகொண்டிருப்பவளும், ஸர்வஆபரணங்களும் பூட்டிக்கொண்டிருப்பவளுமான ராதையைப் பார்த்து மாதவன் தனது ஆசை நிறைவேறியவனாக ஆனான்.

उत्थाय प्रेमसंपूर्णः परिरम्भणकौतुकात् ।
उपस्थिताया राधाया जग्राह करपल्लवम् ॥२२॥

22. அவளைத் தழுவவேண்டி ஆர்வத்துடன் எழுந்திருந்து பக்கத்திலுள்ள அவளது கையைப் பற்றிக் கொண்டான்.

सखीषु निर्गतास्वद्य त्रपा सापि विनिर्गता ।
परिरेभे नन्दसूनुः सान्त्वयन् वृषभानुजाम् ॥२३॥

23. ஸகிகள் சென்றதும் வெட்கமும் போய்விட்டது. நந்தகுமாரன் ராதையைக் கட்டிக்கொண்டு ஸமாதானம் செய்தான்.

आत्मनः प्रेयसीमङ्के विनिवेश्य गदाग्रजः ।
हस्तेनालिङ्ग्य मधुरं सल्लापञ्चाकरोद्धरिः ॥२४॥

24. தனது காதலியான ராதையை மடியில் உட்கார வைத்துக்கொண்டு கண்ணன் மதுரமாய் ப்ரேமஸல்லாபம் செய்தான்.

लज्जिताऽवाङ्मुखीं राधा प्रियस्याङ्के च संस्थिता ।
उत्फुल्लयति सानन्दं लीलापद्मं करस्थितम् ॥२५॥

25. தனது காதலனின் மடியில் உட்கார்ந்திருக்கும் ராதை வெட்கத்தினால் தலை குனிந்தவாறு தனது கையிலுள்ள தாமரைப்பூவை மலர்த்திக்கொண்டிருந்தாள்.

तस्याः कपोलमुकुरे विन्यस्य वदनाम्बुजम् ।
तत्सौरभविमुग्धात्मा सन्तुष्टोऽभवदच्युतः ॥२६॥

26. தனது முககமலத்தை அவளது கன்னத்தில் வைத்து ஸுகந்தத்தினால் மயங்கி அச்சுதன் ஸந்தோஷமடைந்தான்.

समूह्य करपद्मेन कुटिलानलकान् हरिः ।
तस्याः सीमन्तमाघ्राय विमुग्धोऽभवदच्युतः ॥२७॥

27. கண்ணன் தனது கரங்களால் சுருள்சுருளான அவளது கேசங்களை அள்ளி முடிந்து அவளது உச்சியை முகர்ந்து அவளிடம் மோஹமடைந்தான்.

कृशोदर्यास्तटिद्वर्णं सर्वसौन्दर्यसङ्ग्रहम् ।
स्वरूपं माधवो वीक्ष्य परिरेभे पुनः पुनः ॥२८॥

28. க்ருசமான உதரமுள்ள ராதையின் மின்னல் கொடி போன்ற அழகிய திருமேனியைக் கண்டு ஆசையுடன் அடிக்கடி ஆலிங்கனம் செய்துகொண்டான்.

अथ पल्लवपर्यङ्के नानापुष्पसुगन्धिते ।
विनिवेश्य प्रियां राधां पादसेवाञ्चकार सः ॥२९॥

29. பலவிதமான புஷ்பங்களால் ரம்யமான பல்லவசயனத்தில் ராதையைப் படுக்கச்செய்து பகவானே பாதஸேவை செய்தான்.

कोमलौ चरणौ तस्याः कृष्णो मदनमोहनः ।
परिरेभे प्रेमभरो विपुलेनैव वक्षसा ॥३०॥

30. மதனமோஹனனான கண்ணன் அவளது பாதகமலங்களை தனது மார்புடன் சேர்த்து ப்ரேமையுடன் கட்டிக்கொண்டான்.

राधिकाचरणालिप्तलाक्षाङ्कितमुरःस्थलम् ।

शुशुभे विपुलं श्यामं यथा मेघोऽरुणप्रभः ।।३१।।

31.ராதையின் சரணகமலத்திலுள்ள ரஸத்தினால் சிவந்த கண்ணனின் விசாலமான வக்ஷஸ்தலம் கிரணம்பட்ட மேகம்போல் கோபித்தது.

राधिकास्तनशैलेन्द्रद्वन्द्वमध्ये मदालसः ।
स्वेदस्निग्धशरीरोऽयं रमते कृष्णकुञ्जरः ।।३२।।

32.ராதையின் ஸ்தனமண்டலமான மலைசிகரத்தில் மதவியர்வையுடன்கூடிய கண்ணனாகிய யானைக்குட்டி விளையாடியது,

स्तनौ च निबिडौ तस्याः पक्वतालफलोपमौ ।
प्राप्य वक्षःस्थलं शौरेरभूतां पुलकाङ्कितौ ।।३३।।

33. பக்வமான பனம்பழம்போல் உருண்டதிரண்ட ராதையின் ஸ்தனங்கள் கண்ணனின் வக்ஷஸ்தலத்தில் அமிழ்ந்ததும் மெய் சிலிர்த்தன.

कृष्णवक्षःस्थलं प्राप्ते निबिडस्तनमण्डले ।
अभून्निःश्वाससंयुक्ता राधाऽलसनिरीक्षणा ।।३४।।

34. தனது ஸ்தனங்கள் கண்ணனின் வக்ஷஸ்தலத்தை அடைந்ததும் ஸுகபரவசமான ராதை கண்களை மூடி பெருமூச்சு விட்டாள்.

पक्वबिम्बनिभं तस्या विलोक्याधरसंपुटम् ।
विमुग्धः कृष्णकीरश्च बुभुजे प्रेमपूर्वकम् ।।३५।।

35. பக்வமான கொவ்வைப்பழம்போன்ற ராதையின் உதட்டை கண்ணனாகிய கிளி கடித்தது.

राधाधराशोकदलाच्छ्यामसुन्दरखण्डितात् ।
प्रस्रुता च सुधाधारा वर्धयामास मन्मथम् ।।३६।।

36. ச்யாமஸுந்தரனால் கடிக்கப்பட்ட அசோக தளம் போன்ற ராதையின் உதட்டிலிருந்து அம்ருததாரை பெருகியது. அது காமத்தை வளர்த்தது.

गोविन्दः पाणिपद्माभ्यां मर्दयंस्तनमण्डलम् ।
आनन्दसंभ्रमायास्तद्ददर्श मुखपङ्कजम् ।।३७।।

37. கோவிந்தன் தன் கைகளால் அவளது ஸ்தனமண்டலத்தை மர்தனம் செய்து ஆனந்தத்தினால் பரபரப்பு அடைந்த அவளது முகத்தைப்பார்த்து மகிழ்ந்தான்.

एवं क्रीडति गोविन्दे राधिकास्तनकोरके ।
स्वयमेव च्युता नीवी गलितं वसनं तथा ।।३८।।

38. ராதையின் ஸ்தனத்தின் நுனியில் இவ்வாறு கண்ணன் விளையாடும்போதே அவளது இடுப்புவஸ்த்ரம் தானாகவே அவிழ்ந்து போயிற்று.

तन्न सस्मार सा देवी रतिकेलिविमोहिता ।
तस्या बभूव वसनं तत्क्षणं श्रीपतेर्वपुः ।।३९।।

39. ரதிலீலையில் மயங்கியுள்ள தேவி அதை கவனிக்க வில்லை. ஆனால் அப்போது அவளுக்கு வஸ்திரமாய் கண்ணனின் திருமேனியே ஆயிற்று.

राधायाः करवल्लीभ्यां निबद्धः श्यामसुन्दरः ।
बभूवाद्भुतसौन्दर्यो सौदामिन्या घनो यथा ।।४०।।

मुहुर्मुहुर्विलुठतोः परिरभ्य परस्परम् ।

राधिकाकृष्णयोस्तत्र श्रूयते नूपुरध्वनिः ।।४१।।

40.41, ராதையின் கொடிபோன்ற கைகளால் கட்டப்பட்ட ச்யாமஸுந்தரன் மின்னல்கொடியுடன் சோபிக்கும் மேகம்போல் விளங்கினான். அடிக்கடி கிஸலயசயனத்தில் கட்டிப்புரளும் ராதா கிருஷ்ணர்களின் நூபுரத்வனி மட்டும் வெளியில் கேட்டது.

कृष्णो रतिरणश्रान्तः स्वेदस्निग्धकलेबरः ।
शिश्ये राधास्तनद्वन्द्वे निवेशितमुखाम्बुजः ।।४२।।

42.ரதிலீலை செய்து களைப்படைந்த கண்ணன் அவளது ஸ்தனங்களின் மேலேயே முகத்தைப் பொருத்தி வியர்வை அரும்பிய மேனியுடன் படுத்திருந்தான்.

कृपया राधिकादेवी स्वपन्तं स्तनमण्डले ।
आलिङ्ग्य निजवस्त्रेण ममार्ज स्वेदमादरात् ।।४३।।

43. தனது ஸ்தனமண்டலத்தில் தூங்கும் கண்ணனை ராதை கருணையுடன் தனது வஸ்திரத்தினால் அவனது வியர்வையைத் துடைத்தாள்.

अद्भुतं सुरतं ह्येतद्गान्धर्वागिरिधारिणोः ।
पश्यन्त्यः प्रेमसंपूर्णाः सख्यस्तृप्तिं न लेभिरे ।।४४।।

44. அத்புதமான இந்த ராதாக்ருஷ்ணர்களின் சுரதலீலையைக்கண்டு தோழிகளுக்கு அலுக்கவே இல்லை.

तदा निकुञ्जरन्ध्रेषु विनिवेशितवीक्षणाः ।
ददृशुर्भावुकाः सख्यः कृष्णस्य सुरतोत्सवम् ।।४५।।

45. அப்போது நிகுஞ்ஜத்தின் இடைவெளிகளில் தங்கள் கண்களை பொருத்தி கண்ணனின் சுரதலீலையை தர்சனம் செய்து மகிழ்ந்தனர்.

राधास्तनोपधानं तं शयानं राधिकोदरे ।
स्निग्धं श्रमजलेनापि निद्रालसविलोचनम् ॥४६॥
देवीं रतिरणश्रान्तां म्लानपुष्पलतोपमाम् ।
विलोक्य कृपया सख्यः सद्यः कुञ्जमुपागताः॥४७॥
व्यजनैर्वीजयामासुर्वीक्षमाणाः परस्परम् ।
विशुद्धप्रेमनिलयाः कृष्णसौख्यपरायणाः ॥४८॥

*46-48. ராதையின் ஸ்தனங்களையே உபதானமாகக் கொண்டு அவள்மேல் களைத்து உறங்கும் கண்ணனையும் ரதிலீலையில் களைத்து பூமாலைபோல் வாடிக்கிடக்கும் ராதையையும் கண்டு தோழிகள் குஞ்ஜத்தில் ப்ரவேசித்து கண்ணனின் ஸுகத்தையே தங்கள் ஸுகமாய் நினைக்கும் சுத்தமான ப்ரேமைக்கு இருப்பிடமான அவர்கள் பரஸ்பரம் பார்த்துக் கொண்டே ராதைக்கும் கண்ணனுக்கும் விசிறியை எடுத்து வீசினார்கள்.*

रहस्यमेतत्कृष्णस्य लीलाचेष्टितमद्भुतम् ।
प्रकाशयेन्नैव लोके कामक्रोधपरायणे ॥४९॥

*49. ரஹஸ்யமான இந்த ராதாகிருஷ்ணலீலையை காமக்ரோதமே லக்ஷியமான உலகில் ப்ரகாசப்படுத்தலாகாது*

यो वदेत्कृष्णभक्ताय जितसर्वेन्द्रियाय च ।
तस्मै प्रसन्नो भगवान् ददात्यात्मानमेव च ॥५०॥

*50.புலனடக்கம் உள்ள கிருஷ்ணபக்தனுக்குமட்டும் எவன் இதைச் சொல்லுவானோ அவனுக்கு கண்ணன் தன்னைத் தானே கொடுப்பான்.*

परीक्ष्य शिष्यं बहुधा बोधयेत्कृष्णचेष्टितम् ।

संस्मरेत् प्रेमिको भक्तो गुह्यमेतत्परं सदा ॥५१॥

50. சிஷ்யனை பலவிதத்தில் பரீக்ஷித்தபிறகு இந்த ரஹஸ்யத்தை உபதேசிக்க வேண்டும். தனக்குத்தானே இந்தலீலையை த்யானம் செய்துகொண்டிருக்க வேண்டும்.

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये लीलाकाण्डे निकुञ्जलीलावर्णनं नाम विंशोऽध्यायः ॥२०॥*

இவ்வாறு ஸ்ரீகிருஷ்ணப்ரேமி மஹாப்ரபு அருளிய
ஸ்ரீப்ருந்தாவனமாஹாத்மியத்தில் லீலாகாண்டத்தில்
இருபதாம் அத்தியாயம் முற்றும்

# अथैकविंशोऽध्यायः

# இருபத்தொன்றாம் அத்தியாயம்

*श्रीसद्गुरुरुवाच*

सर्ववेदान्तवेद्यो हि परमात्मा सनातनः ।
तमेव वल्लवीनाथं ब्रह्मविद्याऽनुवर्तते ॥१॥

ஸ்ரீஸத்குரு

1. ஸனாதனமான பரமாத்மா ஸகலவேதாந்தங்களால் ப்ரதிபாதிக்கப்படுகிறவன். அவனையே ப்ரம்ஹவித்யை அனுஸரிக்கிறது.

श्रुतिवाक्यानि सर्वाणि गोपीरूपं समाश्रिताः ।
अनुगच्छति गोविन्दं कालिन्दीतटकानने ॥२॥

2. எல்லா ச்ருதிவாக்யங்களும் கோபிகைகளாக ஆகி யமுனைக்கரையில் கோவிந்தனைப் பின்தொடர்கின்றன.

वेदवेदान्ततत्त्वज्ञा मुनयः संशितव्रताः ।

त्यक्त्वा तपांसि घोराणि कृष्णमेव भजन्ति हि ।।३।।

3. வேதவேதாந்தங்களை அறிந்தவர்களும், கடுமையான தவமுள்ளவர்களுமான முனிவர்கள் கடுமையான தவங்களை விட்டு விட்டு கண்ணனையே பஜிக்கின்றனரன்றோ.

किमत्र चित्रं गोविन्दे सर्ववेदान्तवेदिते ।
यदि कुर्याद्रतिं साक्षाद्ब्रह्मविद्या सुदुर्लभा ।।४।।

4. வேதாந்த வேத்யனான கோவிந்தனிடம் ப்ரம்ஹவித்யை பக்தி செய்கிறாள் என்றால் என்ன ஆச்சர்யம்?

कदाचिद्यमुनातीरं जाबालिर्मुनिपुङ्गवः ।
ब्रह्मजिज्ञासया घोरं तपः कर्तुमुपागमत् ।।५।।

5. ஒருஸமயம் ஜாபாலி என்ற முனிவர் ப்ரம்ஹத்தை அறியவேண்டி தவம் செய்வதற்காக யமுனாதீரம் வந்தார்.

शान्तनानामृगगणं शान्तपक्षिसमाकुलम् ।
शान्तसर्वलतावृक्षं शान्तसिद्धर्षिसेवितम् ।।६।।

विलोक्य तन्महारण्यं सर्वसङ्कल्पवर्जितः ।
निर्विकल्पसमाधिस्थः परमां शान्तिमाप सः ।।७।।

6.7. ம்ருகங்களும், பக்ஷிகளும், ஸித்தர்களும், ரிஷிகளும் , செடிகொடிகளும்கூட சாந்தமாக இருப்பதைக் கண்டு இந்த மஹாரண்யத்தில் தானும் ஸர்வஸங்கல்பங்களும் அடங்கி நிர்விகல்ப ஸமாதியை அடைந்தார்.

शान्तिं लब्ध्वा महायोगी मुनीनामपि दुर्लभाम् ।
चचार यमुनातीरे विचिन्वंस्तस्य कारणम् ।।८।।

8. முனிவர்களுக்குகூட துர்லபமான நிம்மதியை அடைந்து ஜாபாலிமுனிவர் இதற்கு காரணமென்ன என்று தேடி அலைந்தார்.

तत्र न्यग्रोधवृक्षस्य मूले योगासनस्थिताम् ।
शुक्लाम्बरां तटिद्वर्णां महाशान्तस्वरूपिणीम् ॥९॥

ध्यानमुद्राङ्किततकरां नासाग्रन्यस्तलोचनाम् ।
आश्चर्यं परमं लेभे देवीं काञ्चिद्विलोक्य सः ॥१०॥

9.10. அங்கு ஒரு ஆலமரத்தினடியில் யோகாஸனத்தில் கண்களை மூடி த்யானமுத்ரையுடன் வீற்றிருப்பவளும், பரமசாந்தமான ஸ்வரூபமுள்ளவளும், வெள்ளையான வஸ்த்ரமுள்ளவளும், சுத்தமானவளுமான ஒரு தேவியைக் கண்டு ஆச்சர்யம் அடைந்தார்.

तत्समीपं शनैर्गत्वा प्रणम्य च यथाविधि ।
पप्रच्छ श्रद्धया भक्त्या तद्दर्शनकुतूहलात् ॥११॥

11. அவளை தர்ஸனம் செய்த குதூஹலத்தில் ஸமீபத்தில் வந்து ச்ரத்தா பக்தியுடன் முறைப்படி வணங்கி அந்த தேவியைப் பார்த்துக் கேட்டார்.

जाबालिरुवाच

का त्वं कमलपत्राक्षि ज्ञानवैराग्यतत्परे ।
लेभेऽहं परमां शान्तिं सन्निधौ ते वरानने ॥१२॥

ஜாபாலி

12. ஞானவைராக்யமே லக்ஷ்யமாகக்கொண்ட தேவி நீர் யார்? உம்மைக்கண்டு நான் பரமசாந்தியை அடைந்தேனே.

श्रीदेव्युवाच

अहं तु ब्रह्मविद्यास्मि सर्ववेदान्तवेदिता ।

तपः करोम्यहं नित्यमत्रैव यमुनावने ।।१३।।

தேவி

13. ஸர்வவேதாந்தரூபிணியான ப்ரம்ஹவித்யைதான் நான். இந்த யமுனாதீரத்தில் தவம் செய்கிறேன்.

## जाबालिरुवाच

हन्त त्वां लब्धुमेवान्ये तपः कुर्वन्ति योगिनः ।
सा त्वं तपः सुघोरञ्च किं करोषि वदाशु मे।।१४।।

ஜாபாலி

14. ஆச்சர்யம்! உன்னை அடையத்தானே யாவரும் தவம் செய்கின்றனர். நீயே தவம் செய்யக் காரணம் என்ன?

## ब्रह्मविद्योवाच

साहं मुमुक्षुभिः सेव्या साक्षाज्ज्ञानस्वरूपिणी ।
किन्तु भक्तिरसं त्यक्त्वा न मे शान्तिस्तपोधन।।१५।।

தேவி

15. மோக்ஷத்தை விரும்பும் ஞானிகளால் ஸேவிக்கப்படும் ஞானஸ்வரூபிணியாக நான் இருக்கிறேன். ஆனால் பக்தி ரஸமில்லாத நான் நிம்மதியடையவில்லை.

गोकुलेन्द्रस्य पुत्रोऽभूत्पूर्णं ब्रह्म सनातनम् ।
तमेव लब्धुं गोविन्दं चित्तं ते नाथमिच्छति ।।१६।।

16.ஸனாதனமான பூர்ணப்ருஹ்மம் நந்தபாலனாக ஆனபிறகு அவனையே நாதனாக அடைய என் மனம் ஆசைப்படுகிறது.

भक्तिं विना तत्पादाब्जसेवा नैव हि लभ्यते ।
जन्मान्तरकृतेनैव पुण्यैर्भक्तिः प्रजायते ।।१७।।

17. பக்திஇல்லாவிடில் க்ருஷ்ணபாதஸேவை கிடைக்காது. ஜன்மாந்தரங்களில் செய்த புண்யங்களாலேயே க்ருஷ்ணபக்தி உண்டாகும்.

अहं तु ब्रह्मविद्यास्मि न मे जन्म न मे मृतिः ।
तस्मादत्रैव तं प्राप्तुं करोम्येवं महत्तपः ॥१८॥

18. நான் ப்ரஹ்மவித்யை. எனக்கு ஜன்மமோ மரணமோ இல்லை. எனவே இப்பிறவியிலேயே கண்ணனை அடையத் தவம் செய்கிறேன்.

मया पूर्वं परं ब्रह्म निराकारमितीरितम् ।
साहं नन्दसुताकारदर्शनान्मोहितास्मि च ॥१९॥

19. நான் முன்பெல்லாம் ப்ரஹ்மம் நிராகாரம் என்று சொல்லிக்கொண்டிருந்தேன். இப்போது நந்தபாலனின் ஆகாரத்தைக்கண்டு நானே மோஹமடைகிறேன்.

लज्जा भवति मे ब्रह्मन्निराकारस्य कीर्तनात् ।
तस्मादिच्छामि कृष्णस्य दिव्यमङ्गलविग्रहम् ॥२०॥

20. ப்ரம்மம் நிராகாரமென்றால் எனக்கு வெட்கமுண்டாகிறது. ஏனெனில் கண்ணனின் திவ்யமங்கள விக்ரஹத்தை நானே ஆசைப்படுகிறேன்.

एवमेवास्तु सोप्यर्थो निराकार इति श्रुतिः ।
अप्राकृतं हि तद्रूपं मायागुणविवर्जितम् ॥२१॥

21. நிராகாரம் என்ற ச்ருதிவாக்யத்திற்கு ப்ராக்ருதமான சரீரமற்றது ப்ரம்மம் என்ற அர்த்தமே.

माया तस्य परा शक्तिः कृष्णस्य परमात्मनः ।
तयाऽवतीर्य लोकेऽस्मिन् मायावी क्रीडति स्वयम् ॥२२॥

22. மாயையும் க்ருஷ்ணபரமாத்மாவின் சக்தியன்றோ? அதனால்தான் கண்ணன் உலகில் தோன்றி பல லீலைகளைச் செய்கிறான். அதனால் பகவான் மாயாவி என்று சொல்லப் படுகிறான்.

गृह्यन्ते निर्विकारेण तेनैव परमात्मना ।
रूपलीलागुणाः सर्वे निजशक्त्यैव मायया ।।२३।।

23. விகாரமற்ற பரமாத்மா தனது மாயாசக்தியாலேயே பல நாமரூபங்களையும் லீலாகுணங்களையும் தரிக்கிறான்.

माया न मिथ्या तस्यैवं भास्करस्य प्रभा यथा ।
कृष्णस्य सा परा शक्तिर्जगत्सृष्टिविधायिनी ।।२४।।

24. உலகில் ச்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களுக்குக் காரணமாயும், பகவானின் சக்தியுமாய் இருக்கும் மாயை மித்யை (பொய்) இல்லை. ஸூர்யனின் ப்ரபைபோல் அது ப்ரம்மத்தின் சக்தியாகும்.

तथा कृष्णस्वरूपञ्च मायिकं न च कल्पितम् ।
अपारकरुणासिन्धुः स्वयं रूपं बिभर्ति सः ।।२५।।

25. அவ்வாறே க்ருஷ்ணஸ்வருபமும், மாயிகமோ கல்பிதமோ இல்லை. அது அப்ராக்ருதமும் சின்மயமுமாகும். அபார கருணாஸிந்துவான பகவான் தானாகவே அத்தகைய ரூபத்தைத் தரிக்கிறான்.

सच्चिदानन्दरूपं तत्परं ब्रह्म सनातनम् ।
कृष्णाख्यं दृश्यते साक्षाद्घनानन्दरसाकृति ।।२६।।

26. ஸத் சித் ஆனந்தமான அந்த பூர்ணப்ரம்மமே க்ருஷ்ணன் என்ற பெயருடன் சிதானந்த ரஸகனமூர்த்தியாக விளங்குகிறான்.

कृष्णस्वरूपं दिव्यं तदप्राकृतमनामयम् ।

येऽवजानन्ति ते मूढाः प्राप्नुवन्त्येव यातनाः ।।२७।।

27. அப்ராக்ருதமும், நிகரற்றதும் திவ்யமுமான க்ருஷ்ண ஸ்வரூபத்தை எவர்கள் அவமதிப்பார்களோ அவர்கள் நரகத்தையே அடைவார்கள்.

नैषा तर्केण लब्धव्या मतिर्ब्रह्मपरा मुने ।
याहं साक्षाद्ब्रह्मविद्या तपसा विचिनोमि तम् ।।२८।।

28. வரட்டுதர்க்கத்தினால் இதையறிய முடியாது. ஸாக்ஷாத் ப்ரம்மவித்யையான நானே தவம், த்யானம் செய்கிறேனல்லவா?

साधनानां परं श्रेष्ठं साधनं प्रवदामि ते ।
परां भक्तिं विना सत्यं कृष्णो नैव हि लभ्यते ।।२९।।

29. எல்லா ஸாதனங்களைக் காட்டிலும் பக்தியே சிறந்த ஸாதனமாகும். ப்ரேமபக்தி இல்லாவிடில் க்ருஷ்ணன் கிடைக்கவே மாட்டான்.

सर्वधर्मान् परित्यज्य योगयागव्रतात्मकान् ।
गोपीभावेन गोविन्दं ध्यायेन्नित्यं जनार्दनम् ।।३०।।

30. யோகம், யாகம்முதலிய ஸர்வஸாதனங்களையும் விட்டுவிட்டு கோபீபாவத்துடன் கண்ணனையே த்யானம் செய்ய வேண்டும்.

**श्रीसद्गुरुरुवाच**

एवमुक्तो महायोगी जाबालिर्ब्रह्मविद्यया ।
भक्तिमाश्रित्य परमां वेद ब्रह्म सनातनम् ।।३१।।

**ஸ்ரீஸத்குரு**

31. ப்ரம்மவித்யையால் இவ்வாறு சொல்லப்பட்ட ஜாபாலிமுனிவர் ப்ரேமபக்தியை ஆச்ரயித்து ப்ரம்மஸ்வரூபத்தை அறிந்தார்.

यतन्ते ब्रह्मविद्यायै भक्तियोगपराङ्मुखाः ।
अपरोक्षानुभूतिः सा तेषां नूनं सुदुर्लभा ॥३२॥

32. பக்தியோகத்தில் உபேக்ஷையுடன் சிலர் ஞானத்திற்காக முயற்சிக்கின்றனர். அவர்களுக்கு ஞானம் ஸித்திக்காது,

भक्त्या मामभिजानातीत्येवं वदति माधवे ।
भक्तिं तामवमत्यैव यतन्तेऽज्ञानगर्विताः ॥३३॥

33. பக்தியால்தான் என்னை அறியமுடியுமென்று பகவானே சொல்லியும் ஞானத்தினால் கர்வமடைந்த இவர்கள் பக்தியை அலக்ஷியம் செய்கின்றனர்.

आत्मारामा महाशान्ता ब्रह्मभूता मुनीश्वराः ।
भजन्ति परया भक्त्या कृष्णं व्याससुतादयः॥३४॥

34. ஆத்மாராமர்களும் ப்ரம்மபூதர்களுமான ஸ்ரீசுகப்ரம்மம் முதலியவர்களோ ப்ரேமபக்தியுடன் க்ருஷ்ணபஜனை செய்கின்றனர்.

*इति श्रीमत्परमहंसपरिव्राजकाचार्यवर्यसर्वप्राणिसंरक्षकजगद्गुरु-श्रीभगवन्नामबोधेन्द्रचरणारविन्दमकरन्दरसिकेन श्रीकृष्णप्रेमिमहाप्रभुणा विरचिते श्रीबृन्दावनमाहात्म्ये लीलाकाण्डे ब्रह्मविद्याचरितं नामैकविंशोऽध्यायः॥२१॥*

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமி ஸ்வாமிகள் அருளிச்செய்த ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்ம்யம் லீலாகாண்டத்தில் இருபத்தொன்றாம் அத்தியாயம் முற்றும்.**

**॥ इति लीलाकाण्डः समाप्तः ॥**

**லீலாகாண்டம் முற்றும்**

॥ श्रीभक्तकोलाहलार्पणमस्तु ॥

श्रीहरिः

**श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचितं**

# श्रीबृन्दावनमाहात्म्यम्

ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிஸ்வாமிகள் அருளிச்செய்த

# ஸ்ரீப்ருந்தாவனமாஹாத்ம்யம்

## मधुराकाण्डम्

## மதுராகாண்டம்

## अथ प्रथमोऽध्यायः

## முதல் அத்யாயம்

*भागवता ऊचुः*

श्रीकृष्णे गोकुलं प्राप्ते नानाक्रीडापरायणे ।
देवकीवसुदेवौ तौ किं चक्रतुरनादरौ ॥१॥

**பாகவதர்கள்**

*1. கண்ணன் கோகுலம் சென்று பல லீலைகள் செய்து கொண்டிருக்கையில் ஆதரவற்ற தேவகியும் வஸுதேவரும் என்ன செய்தனர்?*

कंसेन पीडिताः सर्वे यादवाः साधवस्तथा ।
कमेकं शरणं प्राप्य जीवन्ति स्माकुतोभयाः ॥२॥

*2. கம்ஸனால் பீடிக்கப்பட்ட ஸாதுக்களான யாதவர்கள் யாவரும் யாரை சரணடைந்து பயமின்றி வாழ்ந்தார்கள்?*

भूभारहरणायैवमवतीर्णो हरिः स्वयम् ।
किं चकार कृपासिन्धुः खलशिक्षणतत्परः ॥३॥

3. துஷ்டநிக்ரஹம் செய்து பூபாரத்தை நீக்கவேண்டி அவதரித்த க்ருபாளுவான பகவான் என்ன செய்தான்?

**श्रीसद्गुरुरुवाच**

पुत्रशोकातुरा देवी देवकी प्रललाप ह ।
पुत्रं स्मरन्ती नितरां वासुदेवं दिने दिने ॥४॥

**ஸ்ரீஸத்குரு**

4. புத்ரசோகத்தினால் வருந்தும் தேவகி தனது புத்ரனான வாஸுதேவனையே நினைத்து ப்ரலாபம் செய்தாள்.

**देवक्युवाच**

नाहं भाग्यवती नूनं तादृशस्य महात्मनः ।
पुत्रस्य स्पर्शने हन्त लालने पालनेपि वा ॥५॥

**தேவகி**

5. அந்தோ! அத்தகைய பிள்ளையைப் பெற்றும் லாலனை, பாலனைசெய்ய எனக்கு பாக்யமில்லையே.

न मे भाग्यस्य लेशोऽपि कृष्णस्य कलभाषणम् ।
सर्वदुःखप्रशमनं श्रोतुं कर्णसुखप्रदम् ॥६॥

6. எல்லா துக்கங்களையும் மறக்கச் செய்யும் கண்ணனின் அந்த மழலைச்சொல்லைக் கேட்க எனக்கு பாக்யமில்லையே.

सुन्दरं सुनसं सुभ्रू चारुनेत्रं सुतस्य मे ।
मुखं पश्यन्ति कृष्णस्य भाग्यवन्तो हि गोकुले ॥७॥

7. அழகிய மூக்கும், அழகிய புருவமும், அழகிய கண்களும்,

அழகிய வாயும் உள்ள அந்த கண்ணனின் முகத்தைக் காண கோகுலவாஸிகளே பாக்யம் செய்துள்ளனர்.

न स्मरस्येव नूनं त्वं गोकुलानन्दवर्धन ।
पितरौ नौ कृपासिन्धो कंसासुरनिपीडितौ ॥८॥

8. ஹே கண்ணா! கோகுலாநந்தவர்த்தன! க்ருபாஸிந்தோ! இங்கே கம்ஸனால் பீடிக்கப்பட்டு கஷ்டப்படும் உனது பெற்றோர்களான எங்களை மறந்துவிட்டனையோ!

## श्रीसद्गुरुरुवाच

एवं प्ररुदतीं दीनां स्मृत्वा स्मृत्वा निजात्मजम् ।
सान्त्वयामास तां देवीं वसुदेवो महामनाः ॥९॥

## ஸ்ரீஸத்குரு

9. இவ்வாறு தனது பிள்ளையை நினைத்து நினைத்து வருந்தும் தேவகியை தைர்யசித்தமுள்ள வஸுதேவர் தேற்றினார்.

## वसुदेव उवाच

मा शुचो मम जाये त्वं पुत्रवत्यसि देवकि ।
कालं तावत्प्रतीक्षस्व तव सौख्यप्रदं ननु ॥१०॥

## வஸுதேவர்

10. என் மனைவியான தேவகி! நீ புத்ரவதியாக இருக்கிறாய். துயரப்படாதே. காலத்தை எதிர்பார்த்திரு. ஸுகம் தானே வரும்.

दुर्लभं सर्वदा दुःखं दुर्लभं सर्वदा सुखम् ।
सुखदुःखसमत्वेन शान्तिं प्राप्नोति मानवः ॥११॥

11. ஸுகமும் எப்போதுமில்லை. துக்கமும் எப்போதுமில்லை. ஸுகதுக்கம் மாறிமாறி வரும். ஸமபுத்தி உடையவனே நிம்மதியைப் பெறுவான்.

त्वया संपूजितो विष्णुः पुत्रत्वं प्राप यो हरिः ।
स एव त्वां समुद्धृत्य पालयेद्दुःखसागरात् ॥१२॥

12. உன்னால் பூஜிக்கப்பட்ட பகவான் உனக்குப் புத்ரனாக தோன்றியிருக்கிறார். அவரே உன்னைத் துன்பக்கடலில் இருந்து கரையேற்றுவார்.

श्रीसद्गुरुरुवाच

एवं प्रसान्त्विता देवी देवकी शौरिणा तदा ।
संस्मृत्य पुत्रमाहात्म्यं मौनेनास सुदुःखिता ॥१३॥

ஸ்ரீஸத்குரு

13. இவ்வாறு வஸுதேவரால் ஸமாதானம் செய்யப்பட்ட தேவகி புத்ரனின் மஹிமையை நினைத்து மனம் தேறினாள்

तदाजगाम देवर्षिर्वसुदेवस्य वेश्म तत् ।
दुःखितानां जनानां तु साधवः परमा गतिः ॥१४॥

14. அப்போது வஸுதேவரின் வீட்டிற்கு நாரதர் வந்தார். துன்பப்படுபவர்களுக்கு ஸாதுக்களே துணைவர்களன்றோ!

तं विलोक्य महात्मानं नारदं मुनिसत्तमम् ।
पूजयामास भक्त्या च शूरसेनात्मजः प्रभुः ॥१५॥

15. வீட்டிற்கு வந்த நாரதரைக் கண்ட வஸுதேவர் பக்தியுடன் அவரைப் பூஜித்தார்.

पृष्ट्वा च कुशलं हृष्टो देवर्षिर्दीनवत्सलः ।
पुत्रशोकाकुलां दीनां सान्त्वयामास देवकीम् ॥१६॥

16. தீனவத்ஸலனான நாரதர் வஸுதேவரை குசலப்ரச்னம் செய்துவிட்டு புத்ரசோகத்தினால் கஷ்டப்படும் தேவகியையும் தேற்றினார்.

अद्यैव गोकुलं प्राप्य तव दुःखं सुदुःसहम् ।
निवेदयामि कृष्णाय मा शुचो वामलोचने ॥१७॥

17. இப்போதே கோகுலம் சென்று உனது துன்பத்தை கண்ணனிடம் தெரிவிக்கிறேன், வருந்தாதே பெண்ணே!

इत्युक्त्वा क्षिप्रमुत्थाय गोकुलं प्रस्थितो मुनिः ।
भोजराजसभां प्राप देवकार्यधुरन्धरः ॥१८॥

18. இவ்வாறு சொல்லி தேவகார்யத்தை நிர்வகிக்கும் நாரதர் உடனே எழுந்து கம்ஸஸபைக்கு வந்தார்.

वसुदेवस्य पुत्रं तं गोकुले नन्दमन्दिरे ।
एधमानं वधायैव जानीहि तव भूपते ॥१९॥

19. அரசே! உன்னை வதம் செய்யவேண்டி கோகுலத்திற்கு வருகிறான் அந்த வஸுதேவபுத்ரன்.

विष्णुमायाञ्च तां कन्यां नन्दगोपसुतां निशि ।
आनीतां वसुदेवेन जानीहि त्रिदिवङ्गताम् ॥२०॥

20. அன்றே கண்ணனை கோகுலத்தில் விட்டுவிட்டு, நந்தகோபனின் பெண்ணை வஸுதேவன் கொண்டு வந்திருந்தான். அந்த விஷ்ணுமாயை வானத்தில் சென்று மறைந்துவிட்டாள். இந்த உண்மையை அறிவாயாக.

यत्कार्यं शीघ्रमेव त्वं पर्यालोच्य च मन्त्रिभिः ।
तदेव कुरु भोजेन्द्र महद्भयमुपस्थितम् ॥२१॥

21. மந்திரிகளுடன் ஆலோசித்து என்ன செய்யவேண்டுமோ அதை சீக்கிரமே செய். அரசே! ஜாக்ரதை.

इत्युक्त्वा भोजराजं तं नारदो देवदर्शनः ।
अवाप गोकुलं क्षिप्रं कृष्णदर्शनलालसः ॥२२॥

22. இவ்வாறு கம்ஸனைப் பார்த்துச் சொல்லிவிட்டு நாரதர் க்ருஷ்ணதர்சனம் செய்யும் ஆர்வத்தினால் கோகுலம் வந்தார்.

कृष्णेन पूजितस्तत्र देवर्षिः प्रीतमानसः ।
रहस्युवाच गोविन्दं भक्तवत्सलमच्युतम् ॥२३॥

23. அங்கு கண்ணனால் பூஜிக்கப்பட்ட நாரதர் ப்ரீதியடைந்து பக்தவத்ஸலனான அச்சுதனைப் பார்த்து இவ்வாறு சொன்னார்.

नारद उवाच

भक्तवत्सल गोविन्द लोकशोकविनाशक ।
अवतीर्णोसि लोकेस्मिन् धर्मत्राणाय केवलम् ॥२४॥

நாரதர்

24. பக்தவத்ஸல! கோவிந்த! யாவருடைய துன்பங்களையும் விலக்குபவனே! உலகில் தர்மத்தை ரக்ஷிப்பதற்காகவே அவதரித்துள்ளாய்.

तथापि प्रेमपाशेन निबद्धो गोपिकाजनैः ।
न जानासि परं लोकं कंसाद्यसुरपीडितम् ॥२५॥

25. ஆயினும் கோபீஜனங்களின் ப்ரேமைக்குக் கட்டுப்பட்டு இங்கு கோகுலத்திலேயே வஸித்துக் கொண்டுள்ள நீ உலகில் கம்ஸன்முதலிய அசுரர்களால் துன்பப்படும் மக்களை மறந்துவிட்டீரோ.

सदा रोदिति ते माता कुररीव च देवकी ।
पुत्र पुत्रेति गोविन्द पतिना सान्त्वितापि सा ॥२६॥

26. உன் தாயார் தேவகி உனது பிரிவால் எப்போதும் அணில்பிள்ளைபோல் கதறுகிறாள். அவளை உன் பிதா தேற்றிவருகிறார்.

तथैव तव लीलाञ्च मधुराद्वारकादिषु ।
द्रष्टुमिच्छाम्यहमपि विविधां सज्जनप्रियाम् ॥२७॥

27. அவ்வாறே நானும் மதுரா, துவாரகாமுதலிய இடங்களில் உனது லீலைகளைக் காண விரும்புகிறேன். உனது லீலை ஸாதுக்களுக்கு பிரியமானவை அல்லவா!

**श्रीसद्गुरुरुवाच**

इत्युक्त्वा महतीपाणिर्नारदो नन्दनन्दनम् ।
तथा तेनाभ्यनुज्ञातः प्रत्युत्थाय क्वचिद्गतः ॥२८॥

**ஸ்ரீ ஸத்குரு**

28. இவ்வாறு சொல்லிவிட்டு மஹதீ என்ற வீணையை கையில் தரிக்கும் நாரதர் கண்ணனிடம் விடைபெற்றுச் சென்று விட்டார்.

भगवानपि विश्वात्मा विज्ञाय जगदातुरम् ।
चिन्तयामास बहुधा व्रजत्यागः कथं भवेत् ॥२९॥

29.ஸர்வாந்தர்யாமியான பகவானும் கோகுலத்தை விட்டு எப்படி வெளிஉலகிற்குப் போவது என்ற கவலையிலாழ்ந்தான்.

धर्मस्य पालनञ्चापि कर्तव्यं दुष्टनाशनम् ।
सान्त्वनञ्चापि पित्रोश्च कर्तव्यं साधुरक्षणम् ॥३०॥

30. தர்மத்தையும் ரக்ஷிக்கவேண்டும்தான், பெற்றோர்களையும் ஸமாதானம் செய்யவேண்டும்தான், துஷ்டநிக்ரஹம் செய்து சிஷ்டபரிபாலனமும் செய்யவேண்டியதுதான்.

शोकञ्च प्राप्नुयान्नूनमाभीरजनमण्डलम् ।
मम बृन्दावनत्यागाद्धन्त कालगतिः परा ॥३१॥

31. நான் ப்ருந்தாவனத்தை விடுவேனானால் வ்ரஜபூமியே துன்பத்தில் மூழ்கிப்போகும். நான் ப்ருந்தாவனத்தை

விட்டுப்போகும்படி எனக்கும் ஒரு காலம் வந்ததே, அந்தோ!

न त्यजेयं व्रजञ्चापि गच्छेयं मधुरामपि ।
यथाकथञ्चिद्योगेन मामकानां हिताय हि ॥३२॥

32. எப்படியாவது எனது யோகமஹிமையால் ப்ருந்தாவனத்தையும் விடமாட்டேன். மதுரைக்கும் போவேன். யாவருக்கும் ஹிதமே செய்வேன்.

इति निश्चित्य भगवान् प्रशान्तहृदयो हरिः ।
जहौ दुःखं कृपासिन्धुर्व्रजत्यागभयोद्भवम् ॥३३॥

33. இவ்வாறு நிச்சயம் செய்துகொண்டு பகவானாகிய ஹரி வ்ரஜத்தை விட்டு போகும் கவலையை விட்டு நிம்மதி அடைந்தான்.

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये मधुराकाण्डे देवकीप्रलापो नाम प्रथमोऽध्यायः ॥१॥*

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிமஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில் மதுராகாண்டத்தில் முதல் அத்யாயம் முற்றும்.**

# अथ द्वितीयोऽध्यायः

# இரண்டாம் அத்யாயம்

### श्रीसद्गुरुरुवाच

मधुरायां महानासीदक्रूर इति विश्रुतः ।
धनाधिकारी कंसस्य दयादिगुणसंयुतः ॥१॥

महाभागवतः श्रीमान् ज्ञानवैराग्यसंयुतः ।
कृष्णभक्तिपरो नित्यं कृष्णदर्शनलालसः ॥२॥

### ஸ்ரீஸத்குரு

1,2. மஹாபாகவதோத்தமரும், ஞானமும் வைராக்யமும்

உள்ளவரும், ஸ்ரீமானும், க்ருஷ்ணபக்தியே லக்ஷியமானவரும், தினமும் கண்ணனைக் காணவேண்டி துடிப்பவரும், கருணை முதலிய நற்குணமுள்ளவருமான அக்ரூரர் என்ற ஒரு மஹான் கம்ஸனுடைய நிதிமந்திரியாக மதுரையில் வாழ்ந்துவந்தார்.

आकर्ण्य नारदमुखात् कृष्णलीलां दिने दिने ।
बृन्दावनं गन्तुकामो निरपेक्षोऽभवद्गृहे ॥३॥

3. நாரதர்மூலமாக க்ருஷ்ணலீலைகளைக் கேள்விப்பட்டு தினந்தோறும் ஸ்ரீப்ருந்தாவனம் போகவேண்டும் என்ற ஆவலுடன் இருந்துவந்தார்.

दिदृक्षुरपि गोविन्दं बृन्दारण्यमुपेत्य सः ।
कंसाद्भीतो न प्रतस्थे गान्दिनेयो महामतिः ॥४॥

4. மஹாபக்திமானாகிய அக்ரூரர் கண்ணனை ப்ருந்தாவனம் போய்ப் பார்க்க விரும்பியும் கம்ஸனிடமுள்ள பயத்தினால் புறப்படவேயில்லை.

गमिष्यामि कदा क्षिप्रं यमुनातीरकाननम् ।
श्रीकृष्णचरणाम्भोजलाञ्छनालङ्कृतं महत् ॥५॥

5. ஸ்ரீக்ருஷ்ணசரணகமலத்தினால் அங்கிதமான ப்ருந்தாவனத்திற்கு நான் எப்பொழுது போவேன்? யமுனாதீரத்திற்கு நான் சீக்ரமே போவேனா?

कदा द्रक्ष्यामि गोविन्दं गोपिकाजनवल्लभम् ।
मुरलीनादमाधुर्यपुलकीकृतभूरुहम् ॥६॥

6. கோபிகாஜனவல்லபனான கோவிந்தனை நான் எப்பொழுது பார்ப்பேன் ? அவன் குழலூதினால் மேனி சிலிர்க்குமே!

चरिष्यामि कदा नृत्यन् यमुनातटकानने ।
स्वामिन् प्रसीद कृष्णेति कीर्तयन् प्रेमपूरितः ॥७॥

7. ஹே க்ருஷ்ணஸ்வாமி! அருள் செய்க, என்று நான்

கூவிக்கொண்டே ப்ரேமபக்தியுடன் யமுனாதீரத்தில் எப்பொழுது ஸஞ்சரிப்பேன்?

कदा भिक्षामटन् गोष्ठे विरक्तो विजितेन्द्रियः ।
कृष्णभक्तः करिष्यामि वासं श्रीयमुनावने ॥८॥

8. புலன்களை அடக்கி, விரக்தி உள்ளவனாய் கோகுலத்தில் பிக்ஷை எடுத்துக்கொண்டு எப்பொழுது நான் ப்ருந்தாவனத்தில் வாஸம் செய்வேன்?

एवं संस्मृत्य संस्मृत्य प्ररुदन् सान्त्वयन् स्वयम् ।
कालं प्रतीक्षमाणश्च मधुरायामुवास सः ॥९॥

9. இவ்வாறு காலத்தை எதிர்பார்த்து புலம்பிக்கொண்டே அந்த 'அக்ரூரர் மதுரையில் வசித்துவந்தார்.

तमेव प्रेषयामास गान्दिनेयं यदूत्तमम् ।
कृष्णमानय गोपालमिति कंसोपि दुर्मतिः ॥१०॥

10. கம்ஸன் துர்மதியுடையவன் ஆயினும் அந்த அக்ரூரரையே, நீர்போய் கோபாலனை அழைத்துவாரும் என்று அனுப்பினான்.

सद्यः प्रतस्थे संहृष्टः कृष्णदर्शनकौतुकात् ।
अक्रूरो रथमारुह्य पुण्यं श्रीयमुनावनम् ॥११॥

11. கண்ணனைக் காணும் ஆர்வத்தினால் ஸந்தோஷம் அடைந்து அக்ரூரர் ரதத்திலேறிக்கொண்டு உடனேயே ப்ருந்தாவனம் புறப்பட்டுவிட்டார்.

गच्छन् पथि महात्माऽयमक्रूरः प्रेमसंयुतः ।
एवञ्च चिन्तयामास बहुधा संस्मरन् हरिम् ॥१२॥

12. மஹாத்மாவாகிய அக்ரூரர் போகும்வழியெல்லாம் பக்தியுடன் கண்ணபிரானை த்யானித்து இவ்வாறு சிந்தித்துக் கொண்டே போனார்.

सफलं मम जन्मेदं सफलो मे मनोरथः ।
द्रक्ष्यामि नूनं गोविन्दं बृन्दावनविहारिणम् ।।१३।।

13. என் பிறவி ஸபலமாயிற்று. என் ஆசை நிறைவேறியது. ப்ருந்தாவனவிஹாரியான க்ருஷ்ணனைப் பார்க்கப்போகிறேன்.

किं मयाऽऽचरितं पुण्यं किं कृतं परमं तपः ।
दुर्लभं योगिनामेवं संप्राप्तं कृष्णदर्शनम् ।।१४।।

14. நான் என்ன பாக்யம் செய்தேன். நான் என்ன தவம் செய்தேன். யோகிகளுக்கும் துர்லபமான க்ருஷ்ணதர்சனம் எனக்கும் கிடைத்ததே.

क्वाहं मन्दमतिर्दीनः सन्ततं कंससेवकः ।
श्रीकृष्णदर्शनं क्वेदं सुराणामपि दुर्लभम् ।।१५।।

15. மிகவும் மந்தமதியாகிய நான் எங்கே! கம்ஸஸேவகனான எனக்கு தேவதுர்லபமான க்ருஷ்ணதர்சனம் எப்படித் தகும்?

धन्योहं भुवि धन्योहं धन्यमेव कुलं मम ।
यन्मया क्रियते यात्रा श्रीमद्बृन्दावनाय हि ।।१६।।

16. நான் மிகவும் பாக்யவான். எனது குலமே பாக்யம் செய்தது, ஆஹா! நான் ப்ருந்தாவனயாத்திரை செய்கிறேனே.

स नूनं भोजराजोपि चकार करुणां मयि ।
यो मां संप्रेषयामास श्रीकृष्णानयनाय तु ।।१७।।

17. கம்ஸனும் என்னிடம் கருணை காட்டிவிட்டானே. என்னையல்லவா ப்ருந்தாவனம் அனுப்பினான்.

भगवानपि गोविन्दो भक्तभावकुतूहलः ।
दास्यत्यालिङ्गनं मह्यं शात्रवं न करिष्यति ।।१८।।

18. பகவானாகிய கோவிந்தனும் என்னைக் கட்டிக்கொள்ளப் போகிறான். விரோதி என்று நினைக்கமாட்டான், பக்த வத்ஸலன் இல்லையா?

अक्रूरः संस्मरन्नेवं स्वयमेव मुहुर्मुहुः ।
प्ररुदन् बाष्पसुस्निग्धो यमुनावनमागमत् ॥१९॥

19. அக்ரூரர் இவ்வாறு நினைத்து நினைத்துக் கண்ணீர் விட்டுக்கொண்டே புலம்பிக்கொண்டு ப்ருந்தாவனம் வந்து சேர்ந்தார்.

इदं बृन्दावनं धन्यं धन्येयं यमुनानदी ।
धन्यो गोवर्धनः शैलो धन्यं श्रीगोकुलं तथा ॥२०॥

20. இந்த ப்ருந்தாவனமே தன்யமானது, இந்த யமுனாநதியே தன்யமானது. இந்த கோவர்த்தனமே தன்யமானது. இந்த கோகுலமே தன்யமானது.

धन्या गोपालकाः सर्वे धन्या गोपालकस्त्रियः ।
धन्यो गोपाधिराजश्च धन्या गोपेश्वरी तथा ॥२१॥

21. கோபிகைகள் யாவரும் தன்யமானவர்கள். ஆயர்சிறுவர்கள் யாவரும் தன்யமானவர்கள். நந்தகோபனே பாக்யவான். யசோதையே பாக்யவதி.

इति संस्मृत्य सानन्दं बृन्दारण्यं मनोरमम् ।
पश्यन् पुलकिताङ्गश्च प्रेमोन्मत्तो बभूव सः ॥२२॥

22. இவ்வாறு நினைத்து ஆனந்தமாக மனோரம்யமான ப்ருந்தாவனத்தைப் பார்த்து பக்தியால் பித்துப் பிடித்தவராக ஆனார்.

विलोक्य श्रीवने भक्तः श्रीमच्छरणलाञ्छनम् ।
मुकुन्दस्य रसोन्मत्तः पपात स्यन्दनाद्भुवि ॥२३॥

23. பக்தனாகிய அக்ரூரர் ப்ருந்தாவனத்தில் ஸ்ரீக்ருஷ்ணசரண கமலம் படிந்து இருப்பதைக்கண்டு மெய்சிலிர்த்து ரதத்திலிருந்து விழுந்தார்.

कृष्णपादपरागेषु विलुठन् पुलकाङ्कितः ।
आनन्दबाष्पनयनो गोकुलं प्राप संभ्रमात् ॥२४॥

24. ஸ்ரீக்ருஷ்ணபாததூளியில் விழுந்துபுரண்டு ஆனந்தக் கண்ணீரால் நனைந்து பரபரப்புடன் கோகுலம் அடைந்தார்.

तत्र नन्दगृहे कृष्णमानन्दरसकन्दलम् ।
दिव्यपीताम्बरधरं मेघश्यामलविग्रहम् ॥२५॥

गोपबालगणैर्युक्तं कोमलाधरविद्रुमम् ।
व्यत्यस्तचरणाम्भोजं लालितञ्च यशोदया ॥२६॥

मुरलीवादनपरं वल्लवीजनवल्लभम् ।
मुकुन्दं मोहनाकारं मन्दस्मितमुखाम्बुजम् ॥२७॥

दृष्ट्वापि परमानन्दबाष्पसुस्निग्धलोचनः ।
पपात चरणोपान्ते गान्दिनेयस्तु दण्डवत् ॥२८॥

25-28 அங்கு நந்தபவனத்தில் ஆனந்தரஸமூர்த்தியும், திவ்ய பீதாம்பரதரனும், மேகச்யாமளவிக்ரஹனும், ஆயர்சிறுவர் களுடன் கூடியவனும், பவழம்போன்ற உதடுகள் உடையவனும், கால்மாற்றி வைத்துக்கொண்டு நிற்பவனும், யசோதையால் லாலனை செய்யப்படுபவனும், வேணுகானலோலனும், கோபீஜனவல்லபனும் மந்தஹாஸவதனனும், ஜகன்மோஹன னும், முகுந்தனுமாகிய கண்ணனைக் கண்டு ஆனந்தக் கண்ணீரால் நனைந்த கண்களுடையவராய் ஸ்ரீக்ருஷ்ண சரணத்தில் ஒரு தண்டம்போல் விழுந்தார்.

तमुत्थाप्य कृपासिन्धुराश्लिष्य प्रेमपूर्वकम् ।
पूजाञ्चकार गोविन्दो गृहमानीय सादरम् ॥२९॥

*29. அன்புடன் அவரை எழுப்பித் தழுவிக்கொண்டு க்ருபா ஸிந்துவான கண்ணன் வீட்டிற்குள்ளே அழைத்து வந்து பூஜை செய்தான்.*

बलभद्रेण नन्देन यथाविधि समर्चितः ।
कृष्णदर्शनसन्तुष्टो जहौ मार्गपरिश्रमम् ॥३०॥

*30. பலராமராலும், நந்தகோபராலும் முறைப்படி உபசரிக்கப் பட்ட அக்ரூரர் க்ருஷ்ண தர்சனாநந்தத்தினால் யாத்திரை வந்த சிரமம் நீங்கினார்.*

भोजनानन्तरं कृष्णस्त्वक्रूरशयनङ्गतः ।
पप्रच्छ कुशलं पित्रोस्तथा कंसचिकीर्षितम् ॥३१॥

*31. போஜனமானதும் கண்ணன் அக்ரூரரின் கட்டிலுக்கு வந்து உட்கார்ந்து தனது பெற்றோர்களின் க்ஷேமத்தையும், கம்ஸனின் திட்டத்தையும் விஜாரித்தார்.*

सर्वं तत्कथयामास गान्दिनेयो महामनाः ।
आर्जवेनैव संयुक्तः श्रीकृष्णाय परात्मने ॥३२॥

*32. அக்ரூரர் உள்ளதுஉள்ளபடி ஸ்ரீக்ருஷ்ணபரமாத்மாவிடம் எல்லாவற்றையும் சொல்லிவிட்டார்.*

साधूनां रक्षणायापि खलानां शमनाय च ।
गन्तुं श्रीमधुरां कृष्णो निश्चयं कृतवान् प्रभुः ॥३३॥

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये मधुराकाण्डे*
*अक्रूरागमनं नाम द्वितीयोऽध्यायः ॥२॥*

33. ப்ரபுவான க்ருஷ்ணன் ஸாதுக்களை ரக்ஷிக்கவேண்டியும், துஷ்டர்களை அழிக்கவேண்டியும் மதுரைக்குப் போகத் தீர்மானித்துவிட்டான்.

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிமஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில் மதுராகாண்டத்தில் இரண்டாம் அத்யாயம் முற்றும்.**

# अथ तृतीयोऽध्यायः

## மூன்றாமத்யாயம்

### श्रीसद्गुरुरुवाच

प्रातरुत्थाय गोपेन्द्रो गोविन्दस्य निदेशतः ।
प्रयाणायोचितं कर्म मधुरायाश्चकार ह ॥१॥

### ஸ்ரீஸத்குரு

1. காலையில் எழுந்து நந்தகோபன் கண்ணனின் உத்தரவினால் மதுரைக்குப்போக எல்லாம் தயார் செய்யலானார்.

किन्तु तद्धृदयं खिन्नं पुत्रत्यागभयेन वै ।
शमयन्नात्मनो दुःखं सञ्चचार प्रहृष्टवत् ॥२॥

2. ஆனால் அவரது உள்ளம் புத்ரனான கண்ணனைப் பிரியும் பயத்தினால் கஷ்டப்பட்டுக்கொண்டிருந்தது. அதை அடக்கிக் கொண்டு முகமலர்ச்சியுடன் காணப்பட்டார்.

भोजाधिराजनगरीं गन्तुं विहितनिश्चयम् ।
अवलोक्य प्रियं कान्तं रुरुदुर्वल्लवस्त्रियः ॥३॥

3. மதுராபுரிக்குப் போகத் தீர்மானித்துவிட்ட தங்கள் ப்ராணகாந்தனை நினைத்து கோபிகைகள் அழுதனர்.

यशोदापि सुतस्यैवं मधुरागमनोत्सवम् ।
निशाम्य नितरां खिन्ना प्रललाप च सन्ततम् ॥४॥

4. கண்ணன் மதுரைக்குக் கிளம்பும் உத்ஸாஹத்தைப் பார்த்து யசோதையும் அழுதுபுலம்பிக் கொண்டிருந்தாள்.

एवं हि गोपवृद्धाश्च सङ्गम्य च परस्परम् ।
निरोधनाय कृष्णस्य मन्त्रञ्चक्रुर्यथातथा ॥५॥

5. ஆயர்கள்யாவரும் பரஸ்பரம்கூடி எப்படியாவது கண்ணனை மதுரைக்குப் போகாமல் தடுத்துவிடவேண்டும் என்று ஆலோசித்துக் கொண்டிருந்தனர்.

गावश्च गान्दिनेयस्य रथं दृष्ट्वा मुहुर्मुहुः ।
क्रन्दन्ति सहिता वत्सैः शकुन्ताश्च रुदन्ति हि ॥६॥

6. பசுக்களும், கன்றுக்குட்டிகளும்கூட அக்ரூரரின் ரதத்தைப் பார்த்து அடிக்கடி கத்திக்கொண்டிருந்தன. அவ்வாறே பசுபக்ஷிகள் யாவும் கத்தின.

### व्रजवासिन ऊचुः

कथं वीक्षामहे कृष्णं नन्दसूनुमितः परम् ।
गृहानागत्य चास्माकं हरन्तं मधुरं पयः ॥७॥

### வ்ரஜவாஸிகள்

7. இனிமேல் நந்தலாலாவை எப்படிப் பார்க்கப் போகிறோம்?. இனி வீடுகளில்வந்து வெண்ணை திருடி லீலைகள் செய்வானோ?

कथं वीक्षामहे कृष्णं गोपबालमितःपरम् ।
प्रातरुत्थाय सानन्दं चारयन्तं स्वगोकुलम् ॥८॥

8. காலையில் எழுந்து கறவைகள்பின்போகும் கண்ணனை இனி எப்படிப் பார்ப்போம்?

कथं वीक्षामहे कृष्णं गोपीनाथमितःपरम् ।
यमुनापुलिने रासलीलां कुर्वन्तमच्युतम् ॥९॥

9. யமுனையில் ராஸக்ரீடை செய்யும் கோபீரமணனான கண்ணனை இனி எப்படிப் பார்ப்போம்?

कथं वीक्षामहे कृष्णं नीलबालमितःपरम् ।
वंशीवटं समारुह्य वादयन्तञ्च वंशिकाम् ॥१०॥

10. வம்சீவடத்தில் ஏறி அமர்ந்து வேணுகானம் செய்யும் கோபாலனை இனி எப்படிப் பார்ப்போம்?

अक्रूरनाम्ना विख्यातः क्रूरभावसमन्वितः ।
नूनं विधिरयं कृष्णं नेतुमिच्छति सत्वरम् ॥११॥

11. விதியே அக்ரூரர் வடிவம் எடுத்துவந்துள்ளதோ! இவருக்கு அக்ரூரர் என்ற பெயர் தகுமோ? இவ்வளவு க்ருரமான சுயநல மனோபாவம் உடையவராக இருக்கிறாரே!

निवारयाम गोविन्दं प्रस्थितं मधुरां प्रति ।
सुदुःसहो हि विरहः प्राणनाथस्य हन्त नः ॥१२॥

12. கண்ணன் மதுரைக்குப் போவதைத் தடுப்போம். வாருங்கள். நம் ப்ராணகாந்தனின் விரஹம் நமக்குத் தாங்காதன்றோ!

संप्रेष्य मधुरां कृष्णं वृथैव प्राणधारणम् ।
निपत्य यमुनायां वा मरणं साधु रोचते ॥१३॥

13. கண்ணனை மதுரைக்கு அனுப்பிவிட்டு எதற்கு உயிரை வைத்துக்கொண்டிருக்க வேண்டும்? யமுனையில் விழுந்தாவது உயிர் துறப்போம்.

### श्रीसद्गुरुरुवाच

इति सञ्चिन्त्य सञ्चिन्त्य नन्दसूनोर्गुणान् बहून् ।
तत्र तत्रैव तिष्ठन्तः प्रलपन्ति स्म चित्रधा ॥१४॥

**ஸ்ரீஸத்குரு**

14. நந்தலாலாவின் பல குணங்களை நினைத்து நினைத்து ஆங்காங்கு நின்றுகொண்டு பலவாறு புலம்பிக் கொண்டிருந்தனர்.

सर्वानाहूय भगवान् सान्त्वयामास माधवः ।
सप्रेममधुरस्मेरसरोजवदनो हरिः ॥१५॥

15. அன்புடன் முறுவல் செய்யும் அழகிய முகமுடைய கண்ணன் யாவரையும் அழைத்து ஆறுதல் மொழி கூறினான்.

**श्रीभगवानुवाच**

नाहं त्यजामि मद्भक्तान् कदापि करुणालयः ।
दुःखं भयञ्च मोहञ्च चिन्तां त्यजत सत्वरम् ॥१६॥

**ஸ்ரீபகவான்**

16. கருணாநிதியான நான் என் பக்தர்களை ஒருக்காலும் விடமாட்டேன். துக்கம், பயம், மயக்கம், கவலை இவைகளை விடுங்கள்.

अहं बृन्दावने नित्यं वसामि परमादरात् ।
चारयन् गोकुलं सर्वमाभीरार्भकसंयुतः ॥१७॥

17. நான் ப்ருந்தாவனத்தில் ஆனந்தமாக மாடு மேய்த்துக் கொண்டு சிறுவர்களுடன் எப்போதும் விளையாடிக் கொண்டிருக்கிறேன்.

अहं वंशीवटे नित्यं वसामि परमादरात् ।
वादयन् वंशनालञ्च गोपिकाह्वानतत्परः ॥१८॥

18. நான் வம்சீவடத்தில் கோபிகைகளைக் கூப்பிட்டு தினமும் குழலூதிக் கொண்டிருக்கிறேன்.

अहं नन्दगृहे नित्यं वसामि परमादरात् ।
नवनीतं हरन्नेवं यशोदानन्दवर्धनः ॥१९॥

19. நான் யசோதையை ஆனந்தப்படுத்துகிறவனாய் நவநீதலீலை செய்துகொண்டு நந்தபவனத்திலேயே எப்பொழுதும் வசிக்கிறேன்.

अहं गोवर्धने नित्यं वसामि परमादरात् ।
गोपीगोपालगोवत्सगोकुलानन्दवर्धनः ॥२०॥

20. கோபிகைகள், கோபாலர், கோக்கள், கன்றுகள் இவைகளை ஆனந்தப்படுத்திக்கொண்டு கோவர்த்தனத்திலேயே வசிக்கிறேன்.

अहं कुञ्जगृहे नित्यं वसामि परमादरात् ।
स्वच्छन्दं केलिकां कुर्वन् राधिकानन्दवर्धनः ॥२१॥

21. ராதையை ஆனந்தப்படுத்தவேண்டி சுதந்திரமாய் விளையாடிக்கொண்டு நான் என்றும் குஞ்ஜக்ருஹத்திலேயே இருக்கிறேன்.

यमुनापुलिने नित्यमादरेण वसाम्यहम् ।
साकमाभीरनारीभिः कुर्वन् रासमहोत्सवम् ॥२२॥

22. கோபிகைகளுடன் ராஸக்ரீடை செய்துகொண்டு நான் என்றும் யமுனா புளினத்திலேயே வசிக்கிறேன்.

एवं बृन्दावनस्थं मां द्रष्टुमिच्छति यो नरः ।
ददामि दर्शनं तस्मै भक्ताय व्रजवासिने ॥२३॥

23. இவ்வாறு ப்ருந்தாவனத்தில் நித்யவாஸம் செய்யும் என்னை எந்த வ்ரஜவாஸியான பக்தன் தர்சனம் செய்ய விரும்புகிறானோ அவனுக்கு தர்சனம் தருவேன்.

लीलामात्रं हि मे नूनं मधुरागमनं त्विदम् ।

वस्तुतः श्रीवने नित्यं वसामि व्रजवासिभिः ॥२४॥

24. மதுரைக்குப் போவது என்பது ஒரு லீலைதான். ஆனால் நான் உண்மையில் வ்ரஜவாசிகளுடன் ப்ருந்தாவனத்திலேயே வசிக்கிறேன்.

अप्राकृतं रूपमन्यत्सङ्गृह्य निजमायया ।
मधुरामपि गच्छामि देवकीसान्त्वनाय तु ॥२५॥

25. தேவகியை சமாதானம் செய்யவேண்டி அப்ராக்ருதமான வேறு ஒரு ரூபத்தை தரித்துக்கொண்டு மதுரைக்குப் போவேன்.

एवं लीलारहस्यं मे दुरूहमितरैर्जनैः ।
प्रकाशयेन्नैव लोके कदापि व्यावहारिके ॥२६॥

26. எனது இந்த லீலையை யாரும் புரிந்துகொள்ள முடியாது. எனவே வ்யவஹார உலகில் இதைச் சொல்லலாகாது.

वासभूमिः किलास्माकं गोलोकस्तु सनातनः ।
तत्र बृन्दावनञ्चास्ति यमुना च गिरीश्वरः ॥२७॥

27. எனது வாஸபூமி கோலோகமாகும். அது அழியாதது. அங்கு ப்ருந்தாவனம், யமுனை, கோவர்த்தனம் எல்லாம் இருக்கின்றன.

यथाऽहमवतीर्णोऽस्मि लोकेस्मिन्निजमायया ।
तथा बृन्दावनञ्चेदं भुवनेऽस्मिन् प्रदृश्यते ॥२८॥

28. நான் எப்படி பூமியில் அவதரித்துள்ளேனோ அவ்வாறே ப்ருந்தாவனமும் காணப்படுகிறது.

मन्यन्ते प्राकृतं मर्त्यं यथा मां पामरा नराः ।
तथैव प्राकृतां भूमिं मन्यन्ते यमुनाटवीम् ॥२९॥

29. பாமரமக்கள் என்னை ப்ராக்ருத மனிதனாக நினைக்கின்றனர். அவ்வாறே பாமரமக்கள் ப்ருந்தாவனத்தையும் ப்ராக்ருதபூமியாக நினைக்கின்றனர்.

चिन्मात्रं शाश्वतं नित्यं निर्विकारं सनातनम् ।
प्रीतिवर्धनमेवं मे लीलाक्षेत्रमिदं वनम् ॥३०॥

30. இந்த ப்ருந்தாவனம் சின்மயமானது. விகாரமும் நாசமும் அற்ற சனாதனமானது. எனக்கு மிகவும் ப்ரீதிகரமானது.

श्रीसद्गुरुरुवाच

एवं रहसि गोविन्दः प्रवदन्निजवैभवम् ।
दर्शयामास गोलोकं शाश्वतं प्रकृतेः परम् ॥३१॥

ஸ்ரீஸத்குரு

31. இவ்வாறு நந்தகுமாரன் இரகசியமாக தனது வைபவத்தைச் சொல்லி யாவருக்கும் ஸனாதனமான கோலோகத்தைக் காட்டினான்.

परानन्दस्य कृष्णस्य सन्त्यज्य विरहे भयम् ।
लीलानुकरणञ्चक्रुः शोकमोहविमूर्च्छिताः ॥३२॥

32. பரமானந்தஸ்வரூபனான கண்ணனின் விரஹதாபத்தை விட்டு சோகத்தினால் மூர்ச்சையடைந்தவர்களாகி க்ருஷ்ண லீலைக்கு அனுசரணையாகவே இருந்தனர்.

लीलानुकरणञ्चेदं यदि दुःखप्रदायकम् ।
किं पुनर्वस्तुतः कृष्णविरहे व्रजवासिनाम् ॥३३॥

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये मधुराकाण्डे व्रजसान्त्वनं नाम तृतीयोऽध्यायः ॥३॥*

*33. இந்த லீலானுகரணமே துக்கப்ரதமாக இருந்தால் அவர்கள் உண்மையாகவே கண்ணனைப் பிரிந்தால் எப்படி உயிர் வாழ்வார்கள்?*

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிமஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில் மதுராகாண்டத்தில் மூன்றாம் அத்யாயம் முற்றும்.**

# अथ चतुर्थोऽध्यायः

## நான்காம் அத்யாயம்

### *श्रीसद्गुरुरुवाच*

लीलाभिनयनं शौरेर्मधुरागमनं त्विदम् ।
यथार्थमेव मन्वाना रुरुदुर्व्रजवासिनः ॥१॥

### ஸ்ரீஸத்குரு

*1. லீலாபிநயனமான கண்ணனின் மதுராயாத்ரையை யதார்த்தமாகவே கருதி வ்ரஜவாஸிகள் கதறி அழுதனர்.*

### *व्रजवासिन ऊचुः*

हा हा मुकुन्द गोविन्द हा हा दामोदर प्रभो ।
श्यामसुन्दर गोपाल हा हा नन्दकुमारक ॥२॥

### வ்ரஜவாஸிகள்

*2. ஹா! ஹா! முகுந்த! கோவிந்த! ஹா ஹா தாமோதரப்ரபோ! ச்யாமஸுந்தர! கோபால! ஹா ஹா நந்தகுமாரக!*

क्षणार्धमपि गोविन्द श्रीवनं मा त्यज प्रभो ।
त्वमेव जीवनं कृष्ण सर्वेषां व्रजवासिनाम् ॥३॥

*3. ப்ரபோ! ஒரு க்ஷணம்கூட ப்ருந்தாவனத்தை விட்டுப் போகாதே! கண்ணா! வ்ரஜவாஸிகளுக்கு நீயே ஜீவனமல்லவா?*

मन्दस्मितमुखाम्भोजं तव वीक्ष्य वयं प्रभो ।

अन्यत्कर्म न जानीमो मृदुभाषणमोहिताः ॥४॥

4. ப்ரபோ! உனது மந்தஹாஸவதனத்தையும், மதுரவசனத்தையும் அனுபவித்த நாங்கள் வேறு எதுவும் அறியோமே.

सर्वस्वञ्च त्वमेवासि त्वदधीना वयं ननु ।
प्राणवल्लभ गोविन्द त्वदर्थं प्राणधारणम् ॥५॥

5. எங்களுக்கு ஸர்வமும் நீதானே. நாங்கள் உன் அடிமையல்லவா? நீ எங்கள் ப்ராணநாதன் அல்லவா? நீ சென்றபிறகு எங்களுக்கு எதற்கு ப்ராணன் இருக்கவேண்டும்?

मा त्यजास्मान् हरे कृष्ण त्वामेव शरणङ्गतान् ।
गोपान् गोपीश्च गोवत्सान् यशोदां नन्दमेव हि ॥६॥

6. கோவிந்த! உன்னையே சரணமடைந்த நந்தன், யசோதை, கோபர்கள், கோபிகள், மாடு, கன்றுகள் இவைகளை நீ கைவிட்டுவிடாதே.

बृन्दावनमिदं सर्वं त्वां विना नैव शोभते ।
यमुनापुलिनञ्चापि शून्यमेव भवेन्ननु ॥७॥

7. இந்த ப்ருந்தாவனமும் நீயின்றி சோபிக்காதே. நீ இல்லாவிடில் யமுனாபுளினம் சூன்யமாகத் தோன்றும்.

एवं गोपालकाः सर्वे गोपिकाश्च पुनः पुनः ।
प्रलपन्तो रुदन्ति स्म सान्त्वयामास तान् हरिः ॥८॥
गत्वा श्रीमधुरामद्य हत्वा कंसं दुरासदम् ।
आयास्यामि पुनर्गोष्ठं कृत्वा च सुहृदां सुखम् ॥९॥

ஸ்ரீஸத்குரு

8,9. இவ்வாறு ஆயர்கள்யாவரும், கோபிகைகளும் புலம்பி அழுதனர். கண்ணன் அவர்களை சமாதானம் செய்தான். நான் மதுரைக்குச் சென்று அடக்கமுடியாத சத்ருவான கம்ஸனைக் கொலைசெய்து ஸாதுக்களைக் காப்பாற்றிவிட்டு மறுபடியும் கோகுலம் வருவேன்.

### श्रीसद्गुरुरुवाच

इत्युक्त्वा नन्दबालश्च रामेण सह सत्वरम् ।
अक्रूररथमारूढः प्रययौ मधुरां हरिः ॥१०॥

10. என்று சொல்லிவிட்டு ராமனுடன் கண்ணன் அக்ரூரரின் ரதத்திலேறி மதுரைக்கு ப்ரயாணமானான்.

रथे गच्छति सर्वेपि रामगोविन्दसंयुते ।
अनुजग्मू रुदन्तश्च गोपाला गोपिकास्तथा ॥११॥

11. ராமனும் கண்ணனும் ஏறிக்கொண்ட ரதம் கிளம்பியதுமே கோபர்களும் கோபிகைகளும் அழுதுகொண்டே பின் தொடர்ந்தனர்.

तान्निवार्य स्वयं कृष्णः प्रेमभाषणसान्त्वनैः ।
प्रतस्थे मधुरामेव सर्वकार्यधुरन्धरः ॥१२॥

12, கண்ணன் அவர்கள் யாவரையும் அன்புடன் பேசி தடுத்துவிட்டு பிறகு அவதார காரியத்தைச் செய்யவேண்டி மதுரைக்குப் புறப்பட்டான்.

अक्रूरो यमुनामेत्य व्योममध्यङ्गते रवौ ।
स्नानञ्चकार विधिवत् केशवेपि रथस्थिते ॥१३॥

13. அக்ரூரர் யமுனைக்கு வந்ததும் கண்ணன் ரதத்திலிருக்கும் போதும் விதிப்படி ஸ்னானம் செய்து அனுஷ்டானம் செய்யலானார்.

### श्रीभगवानुवाच

मयि पार्श्वस्थिते राम विमुग्धा व्रजवासिनः ।
स्नानसन्ध्यादिकं कर्म न स्मरन्ति कदाचन ॥१४॥

ஸ்ரீபகவான்

14. ராம! நான் பக்கத்திலிருக்கும்போது வ்ரஜவாசிகள் ஸ்னானஸந்திகளை மறந்து என்னையே பார்த்து நிற்பர்.

अयं तु विधिवत्स्नाति रथे संस्थाप्य मामिह ।
इदं हि लक्षणं विद्धि व्रजादन्यत्र वासिनाम् ॥१५॥

15, இவரோ என்னை ரதத்தில் உட்காரவைத்துவிட்டு விதிப்படி ஸ்னானம் செய்கிறார்.இதுதான் வ்ரஜவாசிகளுக்கும் வேறு மனிதர்களுக்கும் உள்ள வேற்றுமை.

तस्मात्सुदुर्लभं दिव्यं ददामि मम दर्शनम् ।
यथा वसामि वैकुण्ठे योगनिद्रासमन्वितः ॥१६॥

16. இவருக்கு மிகவும் துர்லபமான எனது திவ்யதரிசனத்தைத் தருவேன். வைகுண்டத்தில் எப்படி இருக்கிறேனோ அந்த யோகநித்ரையிலுள்ள தர்சனம் இவருக்குத் தருவேன்.

श्रीसद्गुरुरुवाच

इत्युक्त्वा भगवान् कृष्णो वैष्णवं रूपमास्थितः ।
आविर्बभूव यमुनासलिले परमाद्भुतम् ॥१७॥

ஸ்ரீஸத்குரு

17. இவ்வாறு சொல்லி பகவான் க்ருஷ்ணன் தனது விஷ்ணு ரூபத்துடன் யமுனையில் ஆவிர்பவித்தான்.

तं विलोक्य घनश्यामं कनकाम्बरधारिणम् ।
शान्तं चतुर्भुजं कृष्णं शङ्खचक्रगदाधरम् ॥१८॥

सर्वलोकेश्वरं विष्णुमष्टलक्ष्मीसमन्वितम् ।
सनकादिसमाराध्यं शेषपर्यङ्कमास्थितम् ॥१९॥

विष्वक्सेनसुनन्दाद्यैः पार्षदैः परिसेवितम् ।
ब्रह्मरुद्रादिभिर्देवैः सिद्धैश्च परिपूजितम् ॥२०॥

तुष्टाव प्रणतश्चापि प्रेमसञ्जातगद्गदः ।
बद्धाञ्जलिपुटो भक्तः परमानन्दनिर्भरः ॥२१॥

*18-21.மேகச்யாமளனும், பீதாம்பரதாரியும், சதுர்புஜனும், ஆனந்தரூபனும், சங்குசக்ரகதாதரனும். ஸர்வலோகேச்வரனும், அஷ்டலக்ஷ்மிஸமேதனும், சேஷசயனனும், ஸனகாதிகள் விஷ்வக்ஸேனர் ஸுநந்தர்முதலிய பார்ஷதர்களால் ஸேவிக்கப் படுபவரும், ப்ரும்மருத்ராதி தேவர்களாலும் ஸித்தர்களாலும் பூஜிக்கப்படுபவருமான பகவானைக் கண்டு பரமானந்த மடைந்து, மேனிசிலிர்த்து, கண்ணீர்மல்கி, கைகுவித்து அக்ரூரர் துதித்தார்.*

### अक्रूर उवाच

नमो वैकुण्ठनाथाय जगदुद्भवहेतवे ।
नमो मत्स्यस्वरूपाय निगमोद्धारकाय च ॥२२॥

### அக்ரூரர்

*22. உலக ஸ்ருஷ்டிக்குக் காரணமான வைகுண்டநாத! நமோ நம: வேதத்தை ரக்ஷித்த மத்ஸ்யமூர்த்தியான உமக்கு நமஸ்காரம்.*

नमो यज्ञवराहाय नमस्ते ज्ञानमूर्तये ।
नमोस्तु कूर्मरूपाय नमो मन्दरधारिणे ॥२३॥

*23. ஞானஸ்வரூபனான வராஹமூர்த்தியான உமக்கு நமஸ்காரம். மந்தரமலையைத் தாங்கிய கூர்மமூர்த்தியான உமக்கு நமஸ்காரம்.*

नमोस्तु नरसिंह्माय दैत्यसंहारकारिणे ।

नमो लक्ष्मीनिवासाय प्रह्लादवरदाय ते ॥२४॥

24. அஸுரஸம்ஹாரம் செய்த நரசிம்மமூர்த்தியான உமக்கு நமஸ்காரம். ப்ரஹ்லாதனுக்கு அருள் செய்த ஶ்ரீநிவாஸ! உமக்கு நமஸ்காரம்.

नमो वामनरूपाय त्रिविक्रम नमोस्तु ते ।
नमोस्तु भृगुरामाय नमः श्रीराघवाय ते ॥२५॥

25. வாமனனாய் வந்து உலகை அளந்த உமக்கு நமஸ்காரம். பரசுராமனாயும், ஶ்ரீராமனாயும் வந்த உமக்கு நமஸ்காரம்.

नमो बुद्धाय शुद्धाय पाराशर्याय ते नमः ।
नमोस्तु बलभद्राय नमः सङ्कर्षणाय ते ॥२६॥

26. சுத்தமான ஞானமுள்ள வியாஸராய் வந்த உமக்கு நமஸ்காரம். ஸங்கர்ஷண ரூபனான பலராமனாய் வந்த உமக்கு நமஸ்காரம்.

नमोस्तु वासुदेवाय देवकीनन्दनाय च ।
नन्दगोपकुमाराय श्रीकृष्णाय नमो नमः ॥२७॥

27. வாஸுதேவனாய், தேவகிநந்தனனாய், நந்தகோபகுமாரனாய், க்ருஷ்ணனாக வந்த உமக்கு நமஸ்காரம்.

संसारसागरे मग्नं मामुद्धर कृपानिधे ।
प्रपन्नं पाहि मां कृष्ण शरणागतवत्सल ॥२८॥

28. க்ருபாநிதே! சரணாகதவத்ஸலா! கண்ணா! ஸம்ஸார ஸாகரத்தில் மூழ்கிய என்னை கரையேற்றுவாயாக.

श्रीसद्गुरुरुवाच

इति सङ्कीर्तयन् कृष्णं गान्दिनेयः कृताह्निकः ।
परमाश्चर्यसंयुक्तो रथस्थं प्राप माधवम् ॥२९॥

ஸ்ரீஸத்குரு

29. இவ்வாறு கீர்த்தனம் செய்துகொண்டே அக்ரூரர் அனுஷ்டானத்தை முடித்து விட்டு ரதத்திலுள்ள கண்ணனிடம் வந்தார்.

तं विलोक्य समुद्भ्रान्तमजानन्निव माधवः ।
पप्रच्छ प्रहसन् कृष्णस्त्वया दृष्टं किमद्भुतम् ॥३०॥

30. பக்திபரவசமாக உள்ள அக்ரூரரைப் பார்த்து பகவான் அறியாதவன் போல் ' ஏதாகிலும் அதிசயம் கண்டீரோ ' என்று கேட்டான்.

बद्धाञ्जलिपुटो भक्तः प्रणिपत्य पुनः पुनः ।
प्रेमगद्गदया वाचा प्रत्युवाच गतस्मयः ॥३१॥

31. பக்தனாகிய அக்ரூரர் கைகுவித்து வணங்கி ஸம்சயம் நீங்கியவராய் ப்ரேமையால் தழுதழுத்த குரலுடன் சொன்னார்.

सर्वाश्चर्यमये देवे मम स्यन्दनमास्थिते ।
आश्चर्यं तु किमन्यत्र किं दृष्टव्यमितःपरम् ॥३२॥
इत्युक्त्वा रथमारुह्य रश्मीन् जग्राह यादवः ।
कृष्णानयनहर्षेण प्रययुः सत्वरं हयाः ॥३३॥

32,33. ஆச்சர்யத்துக்கெல்லாம் ஆச்சர்யமான தேவன் எனது ரதத்தில் வீற்றிருக்கும்பொழுது வேறு என்ன ஆச்சர்யம் பார்க்க வேண்டும். இவ்வாறு சொல்லிவிட்டு அக்ரூரர் ரதத்திலேறி குதிரையின் கடிவாளத்தைப் பற்றினார். கண்ணனை அழைத்து செல்லும் குதூஹலத்துடன் குதிரைகள் வேகமாய் ஓடின.

इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये मधुराकाण्डे
मधुरागमनं नाम चतुर्थोऽध्यायः ।४।।

இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிமஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில் மதுராகாண்டத்தில் நான்காம் அத்யாயம் முற்றும்.

# अथ पञ्चमोऽध्यायः
## ஐந்தாம் அத்யாயம்

### श्रीसद्गुरुरुवाच

आनीय मधुरां कृष्णं कंसायापि निवेद्य च ।
हरेरनुज्ञयाऽक्रूरो जगाम स्वनिकेतनम् ॥१॥

### ஸ்ரீஸத்குரு.

1. கண்ணனை மதுரைக்கு அழைத்துவந்து கம்ஸனிடமும் செய்தி சொல்லிவிட்டுஅக்ரூரர் தன் வீடு சென்றார்.

भगवानपि सर्वज्ञः प्रातरुत्थाय केशवः ।
वयस्यैः सह सानन्दं मधुरां प्रविवेश सः ॥२॥

महाप्रासादसंयुक्तां राजवीथीप्रकाशिताम् ।
सभाचत्वरसंयुक्तां क्रीडावनसमन्विताम् ॥३॥

सुवर्णकलशोपेतैश्चित्रध्वजसमन्वितैः ।
विमानैः शोभितां दिव्यां पुरीं मायामयीमिव ॥४॥

2-4 பகவான் கண்ணனும் காலையிலிருந்து தனது நண்பர் களுடன் மதுரையைப் பார்க்க வேண்டி பெரியப்ராகாரத்துடன் கூடியதும், கோட்டைச்சுவர்உள்ளதும், ராஜவீதிகள் உள்ளதும், நாற்சந்துகளும் ஸபைகளும், ரதவீதிகளும் உள்ளதும், உத்யானவனங்கள் உள்ளதும், தங்கக் கலஸமும், சித்ரத்வஜமும் உள்ள விமானங்கள் உடையதும், மாயாமயமான நகர் போன்றதுமான மதுரையில் ப்ரவேசித்தான்.

नागराश्च जनाः सर्वे वीक्ष्य श्रीनन्दनन्दनम् ।
आश्चर्यचकितास्तस्थुरनुजग्मुश्च तं तथा ॥५॥

नागरीणां हरंश्चित्तं नागराणां शिरोमणिः ।
अलञ्चकार मधुरां पादन्यासैः शुभङ्करैः ॥६॥

5,6. நகரமக்கள் யாவரும் கண்ணனைக் கண்டு ஆச்சர்யம் அடைந்தனர். அவனையே பின்தொடர்ந்து வந்தனர். நாகரீக மானவர்களுள் சிரோமணியான கண்ணன் நகரநாரிகளின் மனதைக் கவர்ந்தவனாய் சுபத்தைச் செய்யும் தனது திருவடி களால் நகரம்முழுதும் நடந்து அழகு செய்தான்.

अवलेपभराक्रान्तं रजकस्य शिरो हरिः ।
लीलया पातयामास वस्त्रयाच्ञामिषेण सः ॥७॥

7. வஸ்த்ரத்தை யாசிக்கும் வ்யாஜத்தில் வண்ணானின் தலையில் கர்வமென்ற அதிக பாரமிருந்ததால் தலையை விளையாட்டாக கீழே இறக்கிவிட்டான்.

रचयन्तमलङ्कारमात्मनो वायकं हरिः ।
अलञ्चकार कृपया स्वसारूप्यं प्रदाय च ॥८॥

8. தனக்கு அழகுபடுத்திவிட்ட தையல்காரனுக்கு கண்ணன் தன் ஸாரூப்யத்தைத் தந்தான்.

मालाकारस्य भवनं गत्वा गोपालबालकैः ।
पूजितो विविधैर्माल्यैः शुशुभे नन्दनन्दनः ॥९॥

9. மாலாகாரரின் வீட்டிற்கு நண்பர்களுடன் சென்று அவரால் பூஜிக்கப்பட்டு விதவிதமான மாலைகளணிந்து சோபித்தான்.

सुगन्धचन्दनालिप्तः कुब्जायाः कृपया हरिः ।
तस्या जहार वक्षोजकुङ्कुमञ्च स्वयं तथा ॥१०॥

10. குப்ஜையினால் ஸுகந்தசந்தனத்தால் பூசப்பட்ட கண்ணன் அவளைத் தழுவிக்கொள்ளும் வியாஜத்தில் அவளது மார்பி லுள்ள குங்குமத்தைப் பறித்துக் கொண்டான்.

गत्वा कृष्णगजेन्द्रोऽयं सहस्रस्तम्भमण्टपम् ।
शरासनेक्षुदण्डञ्च बभञ्ज लघुलीलया ॥११॥

11. இந்த கண்ணனாகிய யானைக்குட்டி ஆயிரங்கால்மண்டபம் சென்று அங்குள்ள கம்ஸதனுஸாகிய கரும்பை முறித்து விட்டது.

अथ कृष्णमृगेन्द्रोऽयं साहसेनैव लीलया ।
हत्वा कुवंलयापीडं दन्तपाणिर्जगर्ज च ॥१२॥

12. பிறகு கண்ணனாகிய சிங்கம் குவலயாபீடம் என்ற யானையைக் கொன்று அதன் தந்தத்தையும் பறித்துக்கொண்டு கர்ஜனை செய்தது.

प्रविवेश सभां कृष्णो गोपबालसमन्वितः ।
मध्ये मृगानां वन्यानां मृगराज इव प्रभुः ॥१३॥

13. காட்டுமிருகங்கள் இடையில் சிங்கம்போல் சிறுவர்களுடன்கூட கண்ணன் ஸபையில் ப்ரவேசம் செய்தான்.

नराणामपि सर्वेषां नेत्राब्जानि विशेषतः ।
विकसन्ति तदा तत्र कृष्णसूर्यावलोकनात् ॥१४॥

14. கண்ணனாகிய ஸூர்யனைக் கண்டு அப்போது அங்கு உள்ள மக்களின் நயனங்களாகிய தாமரைகள் மலர்ந்தன.

एवञ्च मल्लशलभा दृष्ट्वा कृष्णहुताशनम् ।
स्वयं प्रविश्य सहसा जहुः प्राणान् सुदुःसहम् ॥१५॥

15. கண்ணனாகிய அக்னியில் வீழ்ந்து மல்லர்களாகிய பூச்சிகள் தானாகவே பொசுங்கிப்போயின.

प्रसारितकराणां तु परमाश्चर्यदर्शनात् ।
अमराणां करेभ्यश्च पुष्पवृष्टिः पपात ह ॥१६॥

16. உடனே ஆச்சர்யத்தால் கைவிரித்த தேவர்களின் கைகளிலிருந்து மலர்மாரிப் பொழிந்தது.

सद्यः सभान्तरे तत्र जनकोलाहलोऽभवत् ।
भटाश्च वादयामासुर्मुरजं विवशास्तदा ॥१७॥

17. உடனே அங்கு ஸபையில் ஜனங்களின் கோலாஹலம் அதிகமாயிற்று. கண்ணனுக்கு வெற்றி முரசு படர்கள் முழக்கினர்.

कोपं प्रकटयामास विन्यस्य हृदये भयम् ।
तर्जयामास गोपालान् कंसः सिह्मासनः स्थितः ॥१८॥

18. சிங்காஸனத்திலுள்ள கம்ஸன், உள்ளத்தில் பயத்தை வைத்துக்கொண்டு கோபத்தை நடித்தான். இடையர்களை மிரட்டினான்.

यथा गिरीन्द्रशिखरं वज्रपाणिः सुराधिपः ।
तथैव पातयामास कंसं सिह्मासनात्प्रभुः ॥१९॥

19. மலைச்சிகரத்தை இந்திரன் வீழ்த்தியதுபோல் கண்ணன், சிங்காசனத்திலிருந்த கம்ஸனை வீழ்த்தினான்.

मुष्टिप्रहरणेनैवमुद्विघ्नो भोजभूपतिः ।
प्राणान् समर्पयामास कृष्णाय परमात्मने ॥२०॥

20. குத்துச்சண்டையில் மூச்சுத்திணறிய கம்ஸன் க்ருஷ்ண பரமாத்மாவிற்கு தனது மூச்சுகளைக் கொடுத்துவிட்டான்.

श्रीकृष्णं परमात्मानं भयेनैव सदा स्मरन् ।
संसारबन्धनिर्मुक्तः संप्राप परमं पदम् ॥२१॥

21. ஸ்ரீக்ருஷ்ணபரமாத்மாவை பயத்தினாலேயே த்யானம் செய்துகொண்டிருந்த கம்ஸனும் ஸம்ஸாரபந்தம் நீங்கி பரமபதம் அடைந்தான்.

उपेक्षया पिबन्नेव भेषजं लभते सुखम् ।
एवं नाम जपन् विष्णोर्भवरोगाद्विमुच्यते ॥२२॥

22. வெறுப்புடன் மருந்து குடித்தாலும் ஆரோக்யம் பெறுவதுபோல் மஹிமை தெரியாது ஹரிநாமம் சொன்னாலும் முக்தி பெறுவான்.

अन्यान् विद्रावयामास मुसलेन हलायुधः ।
यथा प्रभञ्जनो मेघान् महानादसमन्वितान् ॥२३॥

23. இடிமுழக்கும் மேகங்களை காற்று விரட்டுவதுபோல், மற்ற கம்ஸசகோதரர்களை பலராமன் ஹலாயுதத்தாலேயே விரட்டினார்.

अभयं प्रददौ कृष्णः सभामागत्य सादरम् ।
सर्वेषां यादवानाञ्च सुराणाञ्च गवां सताम् ॥२४॥

24. பிறகு கண்ணபிரான் ஸபைக்கு வந்து எல்லா மக்களுக்கும், தேவர்களுக்கும், பசு பக்ஷிகளுக்கும் அபயம் தந்தான்.

बभूवुर्मुकुलान्येवं कृष्णचन्द्रविलोकनात् ।
जनपद्मकरस्यापि कराब्जानि सभान्तरे ॥२५॥

25. கண்ணனாகிய சந்த்ரனைக் கண்டு எல்லா மக்களின் கரங்களாகிய கமலங்களும் மொட்டு போலாயின.

अङ्गीकृत्याञ्जलिं तेषां नागराणां महामतिः ।
उग्रसेनञ्चाभ्यषिञ्चद्राज्ये मातामहं बलात् ॥२६॥

26. நகரமக்களின் அஞ்ஜலியை ஏற்றுக்கொண்டு கண்ணபிரான் தனது மாதாமஹரான உக்ரசேனரையே பலவந்தமாக முடிசூட்டினான்.

पितरौ सान्त्वयामास मुञ्चन् कारागृहाद्धरिः ।
स्वरूपदर्शनानन्दसञ्जातज्ञानसंभ्रमौ ॥२७॥

27. கண்ணனின் திவ்யதர்சனம் பெற்றதால் ஞானமடைந்த பெற்றோர்களை காராக்ருஹத்திலிருந்து விடுவித்து ஸமாதானம் செய்தான்.

नन्दञ्च प्रेषयामास प्रेमभाषणपूर्वकम् ।
स्वकीयविरहाक्रान्तमानसं गोकुलाय हि ॥२८॥

28. தனது பிரிவாற்றாமையால் கலங்கி நிற்கும் நந்தகோபனிடம் ப்ரேமஸல்லாபம் செய்து ஸமாதானப்படுத்தி கோகுலம் அனுப்பினான்.

नन्दः स्वभवनं गन्तुं गोविन्दविरहाक्षमः ।
वसुदेवमुपागत्य ययाचेऽनुमतिं तथा ॥२९॥

29. நந்தன் க்ருஷ்ணவிரஹத்துடன் வசுதேவனிடம் வந்து கோகுலம் திரும்பிச் செல்ல அனுமதி கேட்டான்.

नन्द उवाच

नमस्तेस्तु महाभाग गन्तुमिच्छामि गोकुलम् ।
अनुज्ञां देहि मे शीघ्रं सुहृत्त्वं किल मे ननु ॥३०॥

நந்தகோபன்

30. மஹாபாக்யவானே! உனக்கு வணக்கம். நான் கோகுலம் செல்ல விரும்புகிறேன். அனுமதி கொடு. நீ என் நண்பன் அல்லவா?

स्वभावं तव पुत्रस्य न जानासि यदूत्तम ।
तस्मादहं वदाम्येवं नैव त्वां शिक्षयामि च ॥३१॥

31. யாதவச்ரேஷ்ட! உன் புத்ரனின் சுபாவத்தை நீ அறியாய். எனவே சொல்லுகிறேன். உனக்கு நான் புத்தி கூறவில்லை.

विलासरसिकोप्येष गुणवान् विनयान्वितः ।

विनैव कैतवं सर्वैः सङ्गम्य क्रीडति प्रभुः ॥३२॥

32. கண்ணன் எப்போதும் விளையாட்டுப் பிள்ளையாயினும் வணக்கமுள்ளவன். யாவரிடமும் கலகலப்பாகப் பேசிப் பழகுவான். கபடம் கிடையாது.

लोकवेदौ न जानाति सदा प्रेमपरायणः ।
कापट्यरहितो बालः सर्वज्ञः सर्वशक्तिमान् ॥३३॥

33. ஒன்றும் தெரியாத குழந்தை. ஆனால் எல்லாம் தெரிந்தவன். ஏதும் சக்தியற்ற சிறுவன். ஆனால் ஸர்வ வல்லமையுடையவன்.

अस्येष्टं नवनीतं हि देहि तत्प्रेमपूर्वकम् ।
संस्मरन् संस्मरन् गोष्ठं नूनं कार्श्यमवाप्नुयात् ॥३४॥

34. கோகுலத்தை நினைத்து நினைத்து இளைத்துவிடப் போகிறான். அவன் விரும்பிய அளவு அவனுக்கு தினமும் வெண்ணை கொடுத்துவா.

**वसुदेव उवाच**

प्रेमभावं तमेवं तु जानामि प्राणवल्लभ ।
इमं प्राणसमं पुत्रं गोष्ठं प्रापय सादरम् ॥३५॥

**வஸுதேவன்**

35. ஆருயிர் நண்ப! கண்ணனிடம் உனது அன்பை நான் அறிவேன். எனவே உயிருக்கு ஸமமான இந்த பிள்ளையை கோகுலத்திற்கே அழைத்துச்செல்.

केवलं जनकोऽहं तु त्वं हि पुत्रस्य पोषकः ।
पुत्रशोकञ्च ते कर्तुं नाहमिच्छामि गोपते ॥३६॥

36. நான் பெற்றவன் மட்டுமே வளர்த்தவன் நீதானே. நந்தகோப! உனக்கு புத்ரசோகம் தர நான் விரும்பவில்லை.

नन्द उवाच

साधु प्रोक्तं महाभाग प्रेमपूर्णमिदं वचः ।
अत्रैव वसतु श्यामो युवयोर्वर्धयन् सुखम् ॥३७॥

நந்தகோபன்

37. மஹாபாக்யவானே! நன்றாகச் சொன்னாய். உன் வசனம் ப்ரேமபூர்ணமானது. ஆனாலும் கண்ணன் பெற்றோர்களான உங்களுக்கே ஸுகம் தந்துகொண்டு இங்கேயே இருக்கட்டும்.

कंसेन निहताः सर्वे पुत्रास्तव महामते ।
इममेकं निशाम्य त्वं परमानन्दमाप्नुहि ॥३८॥

38. புத்திமானே! உனது பிள்ளைகள் யாவரையும் கம்சன் கொன்று விட்டான். எனவே கண்ணனின்முகத்தைப் பார்த்து சந்தோஷப்படு.

त्वमेवाहमहञ्च त्वं भेदो नास्त्येवमावयोः ।
त्वत्सुखेन सुखं मेऽपि मत्सुखेन सुखञ्च ते ॥३९॥

39. நீயேதான் நான்; நானேதான் நீ. நம்இருவருக்கும் பேதமில்லை. உன் ஸுகத்தினால் எனக்கு ஸுகம். என் ஸுகத்தினால் உனக்கு ஸுகம்.

श्रीसद्गुरुरुवाच

इत्युक्त्वा प्रेमभावेन परिरभ्य यदूत्तमम् ।
तथा तेनाभ्यनुज्ञातः प्रतस्थे गोकुलं प्रति ॥४०॥

ஸ்ரீஸத்குரு

40. இவ்வாறுசொல்லி அன்புடன் வஸுதேவரை தழுவி விடைபெற்றுக்கொண்டு கோகுலம் சென்றான் நந்தன்.

कंसविद्रावितान् सर्वान् विदेशस्थान् जनानपि ।

आनीय सान्त्वयामास दत्वा तेभ्यो धनं गृहम् ॥४१॥

41. பிறகு கண்ணபிரான் கம்ஸனால் நாடுகடத்தப்பட்ட யாதவர்கள் யாவரையும் அழைத்து அவர்களுக்கு வீடு நிலம் கொடுத்து வாழவைத்தான்.

अथ रामेण गोविन्दश्चोपनीतो यथाविधि ।
सान्दीपनेर्गुरुकुले चकाराध्ययनं प्रभुः ॥४२॥

42. பிறகு கோவிந்தன் பலராமனுடன் உபநயனமும் செய்விக்கப் பட்டு குருகுலம் சென்று ஸாந்தீபனி என்ற முனிவரிடம் சாஸ்திர அத்யயனம் செய்தான்.

मृतं पुत्रं पुनर्दत्वा सर्वशक्तो हरिः स्वयम् ।
गुरोरनुज्ञया प्राप पुनश्च मधुरां पुरीम् ॥४३॥

43. ஸர்வசக்தனான பகவான் அவருக்கு செத்துவிட்ட பிள்ளையை மீண்டும் பிழைக்கவைத்து தக்ஷிணையாகக் கொடுத்துவிட்டு அனுமதிபெற்று மதுரை திரும்பினான்.

नृपतेरुग्रसेनस्य शासनं शिरसा वहन् ।
पालयामास धरणीं ब्रह्मेन्द्रादिनियामकः ॥४४॥

44. ப்ரம்மா, இந்திரன்முதலிய தேவர்களையும் நியமனம் செய்யும் பகவான் உக்ரஸேனரைத் தலைவனாக்கி அவனது ஆக்ஞையை சிரஸாவகித்து நடந்தான்.

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये मधुराकाण्डे कंसवधो नाम पञ्चमोऽध्यायः ॥५॥*

**இவ்வாறு ஶ்ரீக்ருஷ்ணப்ரேமிமஹாப்ரபு அருளிய ஶ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில் மதுராகாண்டத்தில் ஐந்தாம் அத்யாயம் முற்றும்.**

# अथ षष्ठोऽध्यायः

## ஆறாம் அத்யாயம்

### श्रीसद्गुरुरुवाच

आसीत्कृष्णस्य सचिवो महाभागवतोत्तमः ।
उद्धवो नाम विख्यातः सर्वसद्गुणसंयुतः ॥१॥

साक्षाद्बृहस्पतेः शिष्यः सर्वशास्त्रविचक्षणः ।
दयावान् सर्वभूतेषु प्रेमवात्सल्यसंयुतः ॥२॥

ऋजुस्वभावः शान्तश्च डम्भासूयाविवर्जितः ।
तेजस्वी सुप्रसन्नश्च जितक्रोधो जितेन्द्रियः ॥३॥

विरक्तो रसिकश्चैव विवेकी वैष्णवप्रियः ।
सदस्यो यादवेन्द्रस्य संमतः सर्वथा सताम् ॥४॥

ஸ்ரீஸத்குரு

*1-4 யாதவஸபையில் முக்யமானவனும் ஸாதுக்கள் யாவருக்கும் ஸம்மதமானவனும், விரக்தி உடையவனும் ஆனால் ரஸிகனும், வைஷ்ணவர்களிடம் நட்புள்ளவனும், ஜிதேந்த்ரியனும், கோபமில்லாத சாந்தஸ்வபாவனும், தேஜஸ்வியும், ப்ரஸன்ன மானவனும், டம்பம், அஸூயை அற்றவனும், பொறுமை சாலியும், நேர்மையுள்ளவனும், ப்ரேமையும், வாத்ஸல்யமும் உள்ளவனும், எல்லா ப்ராணிகளிடமும் இரக்கமுள்ளவனும், ஸாக்ஷாத் ப்ருஹஸ்பதியின் சிஷ்யனும், ஸர்வசாஸ்த்ரமும் அறிந்தவனும், ஸகலஸத்குணங்களும் நிறைந்தவனும், மஹா பாகவதோத்தமனுமான உத்தவன் என்று புகழ்பெற்ற ஒருவன் கண்ணனுக்கு மந்திரியாக இருந்தான்.*

सोऽयं कदाचित्कृष्णस्य सन्निधिं प्राप सादरम् ।

द्रष्टुकामो मुकुन्दस्य मुखं कमलसन्निभम् ॥५॥

5. கண்ணனின் முககமலத்தைப் பார்க்கவேண்டி ஒருஸமயம் க்ருஷ்ணஸந்நிதிக்கு வந்தான்.

तदा चिन्ताकुलः कृष्णो निःश्वसन्निःश्वसन्मुहुः ।
कपोलन्यस्तहस्तश्च तस्थौ हेमासने प्रभुः ॥६॥

6. அப்போது தங்கமயமான ஆஸனத்தில் ப்ரபுவான கண்ணன் ஏனோ கன்னத்தில் கைவைத்துக்கொண்டு துயரத்துடன் பெருமூச்சுவிட்டுக்கொண்டு அமர்ந்திருந்தான்.

एवं विलोक्य सुहृदं गोविन्दं सुहृदां वरः ।
अपृच्छत्प्रेमसंयुक्तः कृपया यदुनन्दनः ॥७॥

7. தனது நண்பனை இந்நிலையில் பார்த்த நண்பனாகிய உத்தவன் அன்புடன் கோவிந்தனைப் பார்த்துக் கேட்டான்.

उद्धव उवाच

किं शोचसि महाभाग जगदानन्दवर्धन ।
रसिकोऽसि सदा त्वं तु कुतूहलसमन्वितः ॥८॥

உத்தவன்

8. ஜகத்திற்கே ஆனந்தம் தருபவனே! நீ ஏன் துன்பப்படுகிறாய்? ரஸிகனாகிய நீ எப்போதும் குதூஹலமாக இருப்பாயே.

किं वृथा चिन्तया ग्रस्तो मामात्मानं निजप्रियम् ।
एवं शोचयसि प्रेष्ठ दीनभावं प्रदर्शयन् ॥९॥

9. ஏன் வீணாக கவலைப்பட்டு தீனனாய் இவ்வாறு உட்கார்ந்து வருந்துகிறாய். என்னையும் வருத்தப்படுத்துகிறாய்.

श्रीभगवानुवाच

सदा सन्तुष्टचित्तोऽहं सर्वत्र समदर्शनः ।

तथापि शान्तिं न लभे श्रीमद्बृन्दावनं स्मरन् ॥१०॥

ஸ்ரீபகவான்

*10. எங்கும் ஸமதர்சனமே செய்யும் நான் எப்போதுமே ஸந்தோஷமாகத்தான் இருப்பேன். ஆயினும் ப்ருந்தாவனத்தை நினைத்து என் மனதில் சாந்தி இல்லை.*

अद्यैव गन्तुमिच्छामि श्रीमद्बृन्दावनं परम् ।
किन्तु बध्नन्ति मामत्र बान्धवाः स्वार्थतत्पराः ॥११॥

*11. இப்போதே ப்ருந்தாவனம் போக ஆசைப்படுகிறேன். ஆனால் சுயநலமுள்ள பந்துக்கள் என்னை இங்கே கட்டிப் போட்டுள்ளார்கள்.*

उद्धव उवाच

सन्त्यज्य मधुरामेनां सर्वसंपत्समन्विताम् ।
गोकुले प्रीतिरधिका तव माधव वर्तते ॥१२॥

உத்தவன்

*12. மாதவ! ஸர்வ ஸம்பத்துமுள்ள மதுரையைவிட உனக்கு கோகுலத்தில் ப்ரீதி அதிகம் உள்ளது.*

देवकीवसुदेवाद्याः पूज्याः सन्त्यत्र माधव ।
तथापि किं कामयसे पुण्यं श्रीयमुनावनम् ॥१३॥

*13. மாதவ! பூஜிக்கத்தக்க உனது பெற்றோர்களான தேவகியும், வஸுதேவரும் இங்கு இருக்கின்றனர். ஆயினும் உனக்கு ஏன் ப்ருந்தாவனத்தில் ப்ரியம்?*

साक्षाद्बृहस्पतेर्वाक्यात्त्वां जानामि सुरोत्तमम् ।
विष्णुं शरण्यं लोकानामवतीर्णं स्वमायया ॥१४॥

*14. ஸாக்ஷாத் ப்ருஹஸ்பதியின் வசனத்தால் உன்னை பகவான் என்று நான் அறிவேன். ஸர்வசரண்யனான விஷ்ணுவான நீயே தனது மாயையால் உலகில் அவதரித்து உள்ளாய் அல்லவா?*

तथापि मर्त्यधर्मेण विरहाकुलमानसः ।
वृथा शोचसि गोविन्द त्वं सर्वव्यापकोसि हि ॥१५॥

15. ஆயினும் மனிதனைப்போல் பிரிவாற்றாமையால் நீயும் கலங்குகிறாய். எங்கும் நிறைந்த உனக்குப் பிரிவு ஏது?

श्रीभगवानुवाच

शृणु त्वं व्रजमाहात्म्यं मन्मुखादेव यादव ।
यदहं सर्वलोकेशो गन्तुमिच्छामि सांप्रतम् ॥१६॥

16. யாதவ! என் முகத்தாலேயே வ்ரஜமாஹாத்மியத்தைக் கேள். லோகேச்வரனான நானே வ்ரஜத்திற்குச் செல்ல விரும்புகிறேன்.

ஸ்ரீபகவான்

वैकुण्ठे वा ब्रह्मलोके श्वेतद्वीपे तथा रवौ ।
अन्यत्र मधुरायां वा वासो मे न हि रोचते ॥१७॥

17. வைகுண்டத்திலோ, ப்ரம்மலோகத்திலோ, ச்வேத த்வீபத்திலோ, ஸூர்யமண்டலத்திலோ, மதுரையிலோ வேறு எங்கும் எனக்கு வாஸம் பிடிக்கவில்லை.

अहमिच्छामि सततं प्रणयानन्दकन्दले ।
श्रीमद्बृन्दावने वासं सह गोकुलबालकैः ॥१८॥

18. நான் ப்ரேமானந்தத்திற்குக் காரணமான ப்ருந்தாவனத்திலேயே ஆயர்சிறுவர்களுடன் வஸிக்க விரும்புகிறேன்.

ते न जानन्ति शास्त्रार्थमनुष्ठानं विदन्ति न ।
तत्र तत्रैव तिष्ठन्ति मदेकप्रेमतत्पराः ॥१९॥

19. அவர்களுக்கு சாஸ்திரமோ அனுஷ்டானமோ தெரியாது. ஆனால் ப்ரேமையுடன் என்னைப் பார்த்துக்கொண்டு ஆங்காங்கே நிற்பார்கள்.

लोकवेदौ न जानन्ति जानन्ति प्रेम निर्मलम् ।

कृष्ण कृष्णेत्याह्वयन्ति सदा मां प्रेमपूर्वकम् ॥२०॥

20. லௌகீகமும் வைதீகமும் தெரியாத அவர்கள் அன்புடன் என்னை கண்ணா!கண்ணா ! என்று அழைப்பார்கள்.

केचिद्भजन्ति मोक्षाय कामायार्थाय केचन ।
केचिद्धर्माय मां लोके नराः कैतवमाश्रिताः ॥२१॥

21. சிலர் தர்மத்திற்காகவும், சிலர் அர்த்தத்திற்காகவும், சிலர் காமத்திற்காகவுமே உலகில் என்னை பஜிக்கின்றனர்.

मामेकमेव निष्कामा भजन्ति व्रजवासिनः ।
वैकुण्ठमपि नेच्छन्ति मल्लीलारसिका हि ते ॥२२॥

22. ஆனால் வ்ரஜவாஸிகளோ நிஷ்காம்யபக்தி செய்கின்றனர். எனது லீலையையே ரஸிக்கும் அவர்கள் வைகுண்டத்தைக்கூட விரும்பவில்லை.

नवनीतादिकं गव्यं भक्ष्यं भोज्यं मम प्रियम् ।
अपहृत्य गृहेभ्यो मे ददन्ति व्रजबालकाः ॥२३॥

23. ஆயர்சிறுவர்கள் வீடுகள்தோறும் சென்று எனக்கு ப்ரியமான வெண்ணெய் முதலிய பதார்த்தங்களைத் திருடிவந்து எனக்கே கொடுப்பார்கள்

कुलधर्ममपश्यन्त्यो मत्प्रेमपरमाः स्त्रियः ।
स्वकीयाः कन्यकाः सर्वा मया संयोजयन्ति ताः ॥२४॥

24. என்னிடம் ஆய்ச்சிமார்கள் தங்கள் கன்னிகைகளை குல தர்மத்தை லக்ஷியம் செய்யாமல் என்னுடன் விளையாட விடுவார்கள்.

तथा गोपालवृद्धाश्च ममैव वचनं परम् ।
मन्यन्ते श्रद्धया शास्त्रमन्यत्रोपेक्षया बत ॥२५॥

25. அவ்வாறே பெரியவர்களான ஆயர்களும் நான்

சொல்வதையே சாஸ்திரமாகக்கருதி அதன்படியே நடப்பார்கள்.

नाहं ब्रह्मास्मि न रुद्रो नाहं विष्णुः सनातनः ।
पुत्रोस्मि नन्दगोपस्य सत्यं सत्यं वदाम्यहम् ॥२६॥

26. நான் ப்ரம்மா இல்லை. ருத்ரனும் இல்லை. ஸனாதனமான விஷ்ணுவும் இல்லை. நந்தகோபனுடைய பிள்ளை. ஸத்யமாகச் சொல்லுகிறேன்.

उदारहृदयस्तातो माता कैतववर्जिता ।
ततो मां गान्दिनेयेन प्रेषयामासतुः सुतम् ॥२७॥

27. என் அப்பா நந்தன் உதாரகுணமுள்ளவர். என் அம்மா யசோதையோ கபடு, சூது அறியாதவள். அதனால்தான் என்னை அக்ரூரருடன் ரதத்தில் அனுப்பிவிட்டனர்.

किं विद्यया किमर्थेन किं राज्येन यदूत्तम ।
श्रीमद्बृन्दावनं त्यक्त्वा मम दीनस्य किं परैः ॥२८॥

28. நான் என்ன படிக்கவேண்டும்? எங்கு ராஜ்யம் ஆள வேண்டும்? ப்ருந்தாவனத்தைவிட்டு எனக்கு என்னதான் வேண்டும்?

अहं बृन्दावने नित्यं विशुद्धप्रेमतत्परः ।
वल्लवीभिः सञ्चरामि नानाकेलिकुतूहलः ॥२९॥

29. நான் எப்போதும் சுத்தமான அன்பை மதித்து கோபிகை களுடன் பல கேளிக்கைகள் செய்துகொண்டு ப்ருந்தாவனத்தி லேயே இருக்கிறேன்.

एवं हि मम माहात्म्यं भावञ्च हृदयं मम ।
गोपिका एव जानन्ति ममाराधनपद्धतिम् ॥३०॥

30. என் மனோபாவத்தையும் என் பெருமையையும் என்னை பூஜிக்கும் முறையையும் கோபிகைகளே அறிவார்கள்.

नानानियमयुक्तेन न प्रसन्नोस्मि कर्मणा ।
अहमिच्छामि गोपीभिर्दत्तं तत्प्रेमचुम्बनम् ॥३१॥

31. பலவிதமான நியமங்களுடன்கூடிய பூஜையை நான் ஏற்பதில்லை. கோபிகைகள் செய்யும் ப்ரேமசும்பனத்தையே நான் விரும்புகிறேன்.

न मां जानन्ति देवाश्च मुनयश्च दृढव्रताः ।
जानन्ति व्रजसुन्दर्यः प्रेमभावविचक्षणाः ॥३२॥

32. தேவர்களும், தவம் செய்யும் முனிவர்களும்கூட என்னை அறிவதில்லை. ப்ரேமபாவங்களில் திறமைசாலிகளான கோபிகைகளே என்னைப் புரிந்து கொண்டவர்கள்.

संस्मरन् संस्मरन्नत्र सीदामि व्रजसुन्दरीः ।
ताश्च मद्विरहेणैव वसन्ति यमुनावने ॥३३॥

33. அந்த வ்ரஜஸுந்தரிகளை நினைத்து நினைத்து நான் இங்கு வருந்துகிறேன். அவர்களும் என்னை நினைத்து நினைத்து அங்கு வருந்துகின்றனர்.

तस्मादद्यैव गच्छ त्वं गोकुलं विरहाकुलम् ।
मम लीलाचरित्रस्य वर्णनेन प्रसान्त्वय ॥३४॥

34. உத்தவா! ஆகையால் நீ கோகுலம் போய்வா. எனது லீலைகளைச் சொல்லி அவர்களை ஸமாதானம் செய்துவா.

नूनं श्रुत्वा तव मुखान्मच्चरित्रानुवर्णनम् ।
आनन्दं प्राप्नुयुर्गोपा गोप्यश्च प्रेमतत्पराः ॥३५॥

35. உனது முகத்தினால் எனது சரித்ரத்தைக் கேட்டு கோபகோபிகைகள் யாவரும் பரமானந்தம் அடைவார்கள். அவர்களுக்கு எனது ப்ரேமையே லக்ஷியம்.

श्रीसद्गुरुरुवाच

इत्युक्त्वा देवकीपुत्रः प्रेषयामास गोकुलम् ।
उद्धवं शुद्धचारित्रं तत्प्रेम्णस्त्वभिवृद्धये ॥३६॥

ஸ்ரீஸத்குரு

36. இவ்வாறு சொல்லி தேவகிபுத்ரன் உத்தவனை கோகுலம் அனுப்பினான். உண்மையில் உத்தவனுக்கு ப்ரேமபக்தியை வளர்ப்பதற்கே இப்படி செய்தான்.

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये मधुराकाण्डे उद्धवसन्देशो नाम षष्ठोऽध्यायः ॥६॥*

இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிமஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில் மதுராகாண்டத்தில் ஆறாம் அத்யாயம் முற்றும்.

## अथ सप्तमोऽध्यायः

## ஏழாவது அத்யாயம்

श्रीसद्गुरुरुवाच

उद्धवः कृष्णचरणौ प्रणम्य प्रेमपूर्वकम् ।
प्रतस्थे श्रीवनं सद्यः कृष्णप्रीतिविवर्धनः ॥१॥

ஸ்ரீஸத்குரு

1. க்ருஷ்ணனின் ப்ரீதியை வளர்க்கும் உத்தவனும் ப்ரேமையுடன் ஸ்ரீக்ருஷ்ண சரணத்தை வணங்கிவிட்டு ஸ்ரீப்ருந்தாவனம் புறப்பட்டான்.

गच्छन् बृन्दावनं श्रीमानुद्धवः प्रेमपूर्वकम् ।
चिन्तयामास सानन्दं स्वभाग्यं सुरदुर्लभम् ॥२॥

2. ஸ்ரீஉத்தவன் ப்ருந்தாவனம் போய்க்கொண்டே தேவர்களுக்கும் கிடைத்தற்கரிய பாக்யம் தனக்குக் கிடைத்துவிட்டதாக நினைத்தான்.

## उद्धव उवाच

क्वाहं मन्दमतिर्दीनः क्व तच्छ्रीयमुनावनम् ।
संप्रेषितोस्म्यहं तत्र कृष्णेन करुणाब्धिना ॥३॥

**உத்தவன்**

3. மந்தமதியான நான் எங்கே? ப்ருந்தாவனம் எங்கே? க்ருபாளுவான கண்ணன் என்னை ப்ருந்தாவனம் அனுப்பி விட்டானே.

अहो द्रक्ष्यामि सानन्दं श्रीमद्बृन्दावनं महत् ।
यत्र सर्वं मुकुन्दस्य पादपद्मेन लाञ्छितम् ॥४॥

4. எங்கும் கண்ணனின் பாதகமலத்தினால் அடையாளம் செய்யப்பட்டிருக்கும் ப்ருந்தாவனத்தை நானும் பார்க்கப் போகிறேன். ஆச்சர்யம்.

द्रक्ष्यामि गोकुलं पुण्यं द्रक्ष्यामि यमुनानदीम् ।
द्रक्ष्यामि गिरिराजेन्द्रं द्रक्ष्यामि श्रीवनं बत ॥५॥

5. புண்ணியமான கோகுலத்தைப் பார்க்கப் போகிறேன். யமுனாநதியைப் பார்க்கப் போகிறேன். கோவர்தனமலையைப் பார்க்கப் போகிறேன். ப்ருந்தாவனத்தைப் பார்க்கப் போகிறேன்.

यस्य स्मरणमात्रेण परमात्मा विमोहितः ।
द्रक्ष्याम्यहं तदेवाद्य कालिन्दीतटकाननम् ॥६॥

6. எந்த யமுனைக்கரை காட்டை நினைத்து பகவானே மோஹித்துப் போகிறானோ அந்த ப்ருந்தாவனத்தை இப்போது நான் காணப்போகிறேன்.

उलूखले या बबन्ध भवबन्धविमोचकम् ।
तां द्रक्ष्यामि यशोदाञ्च मातृभावेन माधवम् ॥७॥

7. பந்தத்தை நீக்கும் பரமாத்மாவை உரலில் கட்டிய அன்னை யசோதையை பார்க்கப்போகிறேன்.

ब्रह्मादिसुरसेव्योऽपि यं ववन्दे हरिः स्वयम् ।
नमस्यामि तमेवाहं नन्दगोपं महामतिम् ॥८॥

8. ப்ரம்மாதிதேவர்களும் வணங்கும் பகவானும் எவரை வணங்குவானோ அந்த நந்தகோபனை நான் வணங்குவேன்.

साक्षात्कर्तुमनीशा यं यतन्ते यतयः सदा ।
तमेव स्ववशञ्चक्रुरहो भाग्यं व्रजौकसाम् ॥९॥

9. யதிகளும் எவரை ஸாக்ஷாத்காரம் செய்ய முயற்சிக்கின்றனரோ அவரை தனக்கு வசமாக்கிக் கொண்ட வ்ரஜவாசிகளின் பாக்யமே பாக்யம்.

सर्वलोकैकपालेन पालितान् यमुनावने ।
गोवत्सानिह सानन्दं द्रक्ष्यामि व्रजबालकान् ॥१०॥

10. ஸர்வலோகங்களையும் காப்பாற்றும் பகவானாலேயே காப்பாற்றப்பட்ட மாடு கன்றுகளின் பாக்யமே பாக்யம். அந்த கன்றுகளையும் சிறுவர்களையும் பார்க்கப் போகிறேன்.

### श्रीसद्गुरुरुवाच

इत्येवं बहुधा स्मृत्वा पुलकाङ्कितविग्रहः ।
न विवेद गतं मार्गं क्षिप्रं प्राप च गोकुलम् ॥११॥

### ஸ்ரீஸத்குரு

11. இவ்வாறு பலவாறு நினைத்து மெய்சிலிர்த்து ஆனந்தமடைந்த உத்தவன் சீக்ரமாக கோகுலம் வந்துவிட்டான். வழிகடந்தது தெரியவேயில்லை.

ददर्श च महापुण्यां तापसामरसेविताम् ।
यमुनां सर्वपापघ्नीं कृष्णसंस्पर्शसौभगाम् ॥१२॥

12. கண்ணன் ஜலக்ரீடை செய்த பாக்யமுடையதும்,

பாபங்களைப் போக்குவதும், தேவர்களாலும், முனிவர்களா லும் வணங்கப்படுவதுமான யமுனாநதியைக் கண்டார்.

ददर्श श्रीवनं पुण्यं नानावृक्षसमाकुलम् ।
राधामुकुन्दसंस्पर्शपुलकाङ्कितभूरुहम् ॥१३॥

13. ராதையும் கண்ணனும் தொட்டதால் சிலிர்த்துப்போன மரங்களால் சூழப்பட்ட புண்ணியமான ப்ருந்தாவனத்தைக் கண்டான்.

ददर्श गिरिराजेन्द्रं नानावत्ससमाकुलम् ।
यं दधार कराग्रेण लीलया नन्दनन्दनः ॥१४॥

14. நந்தநந்தனன் விளாயாட்டாகக் குடையாய்ப் பிடித்ததும், பல மரங்கள் சூழ்ந்ததும், பல ப்ராணிகளுக்கு இருப்பிடமான துமான கோவர்தனமலையைப் பார்த்தான்.

गोकुलं प्राप सानन्दं गोपीगोपालसेवितम् ।
नीलबालपदाम्भोजपरागपरिमण्डितम् ॥१५॥

15. சின்னக்கண்ணன் தளர்நடைநடந்து விளையாடிய புழுதிகள் படிந்த கோகுலத்தைக் கண்டு பரமானந்தம் அடைந்தான்.

नन्दगोपगृहं प्राप परमाश्चर्यसंयुतः ।
संस्मरन् संस्मरन् शौरेर्बाललीलां पुनः पुनः ॥१६॥

16. அங்கு நந்தபவனத்தை அடைந்தான். அங்கு நடந்த கண்ணனின் பாலலீலைகளை நினைந்து நினைந்து ஆச்சர்யம் அடைந்தான்.

तं दृष्ट्वा नन्दगोपश्च दूरादुत्थाय संभ्रमात् ।
आगत्य परिरेभे च स्नेहपूर्वं यदूत्तमम् ॥१७॥

17. அந்த உத்தவனைக்கண்டு நந்தகோபனும் ஓடிவந்து தழுவிக் கொண்டு ஸ்னேஹத்துடன் உள்ளே அழைத்துச் சென்றார்.

समानिनाय सदनं स्वागतञ्च तथाऽब्रवीत् ।
यशोदा च महाभागा पुत्रं स्मृत्वा ददर्श तम् ॥१८॥

18. ஸ்வாகதம் சொல்லி உள்ளே அழைத்தார். பாக்யவதியான யசோதையும் தன் குழந்தையான கண்ணனாகவே உத்தவனை நினைத்தாள்.

नानोपचारसंयुक्तमातिथ्यं परिगृह्य सः ।
प्रपेदे परमानन्दं तयोः प्रेमविलोकनात् ॥१९॥

19. அவர்கள் செய்யும் பல உபசாரங்களைப் பெற்று அவர்களின் அன்பைக் கண்டு பரமானந்தம் அடைந்தான் உத்தவன்.

पुनः पुनर्विलोक्यापि यशोदां नन्दमुद्धवः ।
न प्राप तृप्तिलेशञ्च प्रेमपर्याकुलेक्षणः ॥२०॥

20. யசோதையையும் நந்தனையும் பலதடவை கண்டும் உத்தவன் அலுப்படையவேயில்லை. அவர்களைக் கண்டு ஆனந்தக் கண்ணீர் வடித்தான்.

मनसा चिन्तयामास तयोर्भाग्यं पुनः पुनः ।
ययोः पुत्रत्वलाभेन स्वभाग्यं श्लाघते हरिः ॥२१॥

21. எவர்களின் புத்ரனாய் ஆனது தனது பாக்யமென்று பகவானே சொல்வானோ அவர்களின் பாக்யத்தை நினைத்து நினைத்துப் பார்த்தான் உத்தவன்.

उद्धवं लालयामास नन्दगोपश्च सादरम् ।
वात्सल्यप्रेमसंयुक्तः श्रीकृष्णस्मरणात्तदा ॥२२॥

22. அப்போது நந்தனும், உத்தவனைக் கண்ணனாகவே நினைத்து வாத்ஸல்யத்துடன் லாலனை செய்தார்.

पप्रच्छ कुशलं प्रेम्णा यदूनां माधवस्य च ।
पुत्रवात्सल्यसञ्जातबाष्पपर्याकुलेक्षणः ॥२३॥

*23. நந்தகோபன் உத்தவனைப் பார்த்து கண்ணீர் மல்க யாதவர்களுடையவும், கண்ணனுடையவும் க்ஷேமத்தை விஜாரித்தார்.*

दर्शयामास सानन्दं सर्वं लीलास्थलं गृहे ।
सर्वं क्रीडनकञ्चापि कृष्णस्य स्वसुतस्य सः ॥२४॥

*24. வீட்டில் கண்ணன் விளையாடிய இடமெல்லாம் காட்டினார். கண்ணன் வைத்துக்கொண்டிருந்த விளையாட்டு பொருட்களையெல்லாம் காட்டினார்.*

भग्नं तेन च मन्थानं दधिभाण्डमुलूखलम् ।
वस्त्राण्याभरणाण्येवं किरीटं बर्हभूषितम् ॥२५॥

तथा रत्नमयान्दोलं वेणुञ्च मधुरस्वनम् ।
दर्शयामास गोपेन्द्रः कृष्णस्मरणतन्मयः ॥२६॥

*25,26. கண்ணனின் நினைவில் தன்மயமாகியுள்ள நந்தகோபன், கண்ணன் முறித்துவிட்ட மத்து, உடைத்துவிட்ட பானை, கண்ணனைக் கட்டிய உரல், கண்ணனின் வஸ்த்ரம், ஆபரணம், மயில்தோகையணிந்த மணிமகுடம், ரத்னமயமான தொட்டில், புல்லாங்குழல் எல்லாவற்றையும் காட்டினார்.*

उद्धवो बाष्पसुस्निग्धलोचनो निखिलञ्च तत् ।
विलोक्य प्रेमपूर्वञ्च परमानन्दमाप सः ॥२७॥

*27. கண்ணீர் மல்கிய கண்களுடன் உத்தவன் அவைகளைக் கண்டு பரமானந்தம் அடைந்தான்.*

तौ वृद्धौ पुत्रविश्लेषमूर्च्छितौ प्रियभाषणैः ।

सान्त्वयामास सहसा सर्वज्ञः सात्वतां निधिः ॥२८॥

28. யாதவகுலத்திற்கு நிதிபோன்றவனும், எல்லாம் அறிந்தவனுமான உத்தவன், புத்ரசோகத்தினால் மூர்ச்சையடைந்த யசோதையையும், நந்தனையும் ஸமாதானம் செய்தான்.

कृष्णस्य बाललीलायाः कीर्तनाच्छ्रवणादपि ।
शीघ्रमेव गता रात्रिरुद्धवस्य तयोरपि ॥२९॥

29. கண்ணனின் பாலலீலைகளைப் பேசிக்கொண்டிருந்ததால் அவர்களுக்கு இரவுவேளை சீக்ரமாகவே கழிந்துவிட்டது.

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये मधुराकाण्डे उद्धवव्रजयात्रा नाम सप्तमोऽध्यायः ॥७॥*

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிமஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில் மதுராகாண்டத்தில் ஏழாம் அத்யாயம் முற்றும்.**

# अथाष्टमोऽध्यायः

## எட்டாம் அத்யாயம்

### श्रीसद्गुरुरुवाच

उद्गायतीनां गोपीर्नामाकर्ण्य मधुरस्वनम् ।
उद्धवः परमानन्दं प्रभाते प्राप गोकुलम् ॥१॥

### ஸ்ரீஸத்குரு

1. அதிகாலையில் கோகுலத்தில் கோபிகைகள் உயர்ந்த குரலில் செய்யும் க்ருஷ்ணகீர்த்தனத்தைக் கேட்டு உத்தவன் பரமானந்தம் அடைந்தான்.

शीघ्रमुत्थाय नन्देन स्नानार्थं यमुनां गतः ।
नन्देन कथितं दिव्यं कृष्णलीलारसात्मकम् ॥२॥

शुश्राव यमुनादेव्या माहात्म्यं परमाद्भुतम् ।
स्नानञ्चकार विधिवत् कृष्णं स्मृत्वा पुनः पुनः ॥३॥

2,3. சீக்கிரம் எழுந்து நந்தகோபனுடன் ஸ்னானத்திற்காக யமுனைக்கு வந்து நந்தன் சொன்ன க்ருஷ்ணலீலாமயமான, அத்புதமான யமுனாமாஹாத்மியத்தைக் கேட்டுக்கொண்டே கண்ணனை நினைத்தவாறு பலதடவை சந்தோஷமாக யமுனா ஸ்னானம் செய்தான்.

पूर्वं संप्रेषयामास तं गृहाय व्रजाधिपः ।
स्वयं कृत्यावशेषश्च शीघ्रमेव कृताह्निकम् ॥४॥

4. சீக்கிரமாக ஸ்னானம்செய்து நிற்கும் உத்தவனை நந்தன் தனக்கு வேலை இருப்பதால் முன்னதாகவே வீட்டுக்கு அனுப்பினார்.

आगच्छन्तं तमालोक्य दूराद्गोकुलयोषितः ।
कृष्णं स्मृत्वा संभ्रमेण समाजग्मुस्तदन्तिकम् ॥५॥

5. கொஞ்சதூரத்திலிருந்து உத்தவனைக் கண்ட கோபிகைகள் கண்ணன் வந்துவிட்டதாகவே கருதி ஓடி வந்து பார்த்தனர்.

कृष्णसारूप्यसम्युक्तं कृष्णस्मरणकौतुकम् ।
कृष्णकीर्तनसन्तुष्टं कृष्णदर्शनलालसम् ॥६॥

कृष्णलीलारसज्ञञ्च कृष्णतत्त्वविदां वरम् ।
कृष्णप्राणप्रियतमं कृष्णध्यानपरायणम् ॥७॥

कृष्णकैङ्कर्यपरमं कृष्णलालनपोषितम् ।
कृष्णानुग्रहसुप्रीतं कृष्णप्रेमपरिष्कृतम् ॥८॥

कृष्णचन्दनलिप्ताङ्गं कृष्णमालाविभूषितम् ।

कृष्णवस्त्रपरीधानं कृष्णभूषणभूषितम् ॥९॥

कृष्णोच्छिष्टप्रियं कृष्णं कृष्णस्य सचिवञ्च तम् ।
विलोक्य गोपिकाः सर्वा लेभिरे परमां मुदम् ॥१०॥

6-10. க்ருஷ்ணனைப்போல் முகஜாடை உள்ளவனும், க்ருஷ்ண ஸ்மரணத்தினால் குதூஹலம் உடையவனும், க்ருஷ்ண கீர்த்தனத்தால் ஸந்தோஷம் அடைபவனும், க்ருஷ்ண தர்சனத்தில் ஆர்வமுள்ளவனும், க்ருஷ்ணலீலைகளில் ரஸ மறிந்தவனும், க்ருஷ்ணதத்வம் அறிந்தவர்களில் சிறந்தவனும், க்ருஷ்ணனின் ஆருயிர் நண்பனும், க்ருஷ்ணத்யானமே லக்ஷியமானவனும், க்ருஷ்ணகைங்கர்யம் செய்பவனும், க்ருஷ்ணனால் லாலனை செய்யப்படுபவனும், க்ருஷ்ணனின் அனுக்ரஹத்தில் ப்ரீதி அடைந்தவனும், க்ருஷ்ணப்ரேமையே ஆபரணமானவனும், க்ருஷ்ணனின் சந்தனத்தால் பூசப்பட்ட வனும், க்ருஷ்ணனின் மாலையணிந்தவனும், க்ருஷ்ணவஸ்த்ரம் தரித்தவனும், க்ருஷ்ணனின் பூஷணத்தை அணிந்தவனும், க்ருஷ்ணப்ரஸாதத்தையே சாப்பிடுபவனும், க்ருஷ்ணவர்ண மானவனும், க்ருஷ்ணனின் மந்திரியுமான உத்தவனைக் கண்டு கோபிகைகள் பரமானந்தம் அடைந்தனர்.

उद्धवस्यान्तिकं गत्वा ज्ञात्वा कृष्णसखञ्च तम् ।
लज्जया गोपिकाः सर्वा दुःखेनापि निपीडिताः ॥११॥

रुरुदुस्तत्र तत्रैव स्थिताः प्रेमसमाकुलाः ।
कृष्णं संस्मृत्य संस्मृत्य सर्वस्वं गोकुलस्य तु ॥१२॥

11,12. உத்தவனிடம் வந்தும், வெட்கத்தினால் ஒன்றும் கேட்காதவர்களாய், ஆங்காங்கு நின்றுகொண்டு அவனைக் கண்ணனின் நண்பன் என்றும், துக்கத்தினால் பீடிக்கப்பட்ட வர்களாய் கோகுலத்தின் ஸர்வஸ்வமாகிய கண்ணனையே நினைத்து நினைத்து ப்ரேமையால் உருகி அழுதனர்.

काचिन्मधुकरं दृष्ट्वा कृष्णसङ्गमकाङ्क्षिणी ।
तस्यैव दूतं मन्वाना भाषते प्रियभाषिणी ॥१३॥

13. ஒருவள் வண்டு ஒன்றைப் பார்த்து அதையே க்ருஷ்ண தூதனாக கல்பனை செய்துகொண்டு அதனுடன் பேசுகிறாள்.

काचिल्लतागृहं गत्वा कृष्णध्यानपरायणा ।
कपोलविन्यस्तकरा तस्थौ बाष्पाकुलेक्षणा ॥१४॥

14. ஒருவள் நிகுஞ்ஜம் சென்று கன்னத்தில் கைவைத்துக் கொண்டு கண்ணீருடன் கண்ணனையே நினைத்துக் கொண்டு உட்கார்ந்திருக்கிறாள்.

काचित्कोकिलगानेन सुस्वरं प्रेमपूरिता ।
प्रिय प्रियेति मधुरं प्रलपत्यसितेक्षणा ॥१५॥

15. அழகிய கண்களுடைய ஒருவள் குயில் கூவுவதைக் கேட்டு, தானும் அதனுடன் ஒன்றி ' ப்ரிய! ப்ரிய!' என்று கூவிக் கொண்டிருக்கிறாள்.

काचित्कीरं समागत्य रक्ततुण्डं सुभाषणम् ।
कथयामास कृष्णस्य कथां सज्जनसेविताम् ॥१६॥

16. ஒருவள் சிவந்த அலகுடைய பச்சைக்கிளியைக் கண்டு அதற்கு அழகாக க்ருஷ்ண கதை சொல்லிக்கொண்டிருக்கிறாள்.

काचिद्गोवत्समालिङ्ग्य सुकुमारं प्रियावहा ।
क्व वर्तते तव सखा वनमालीति पृच्छति ॥१७॥

17. ஒருவள் அழகிய கன்றுக்குட்டியைத் தழுவி உன் நண்பனான கண்ணன் எங்கு சென்றனன் என்று ப்ரியமுடன் கேட்கிறாள்.

काचित्केकिशिखण्डञ्च ललितं पतितं क्वचित् ।
विलोक्य कृष्णस्मरणात्सद्यो मूर्च्छामवाप ह ॥१८॥

18. ஒருவள் கீழே விழுந்துகிடக்கும் மயிலிறகைக் கண்டு க்ருஷ்ணஸ்மரணத்தால் மூர்ச்சையாகிறாள்.

काचित्तिष्ठति कृष्णायास्तटे पुष्पितभूरुहे ।
अध्वानं नन्दबालस्य पश्यन्ती स्तिमितेक्षणा ॥१९॥

19. ஒருவள் யமுனைக்கரையில் பூத்துக்குலுங்கும் ஒரு மரத்தைப் பார்த்து கண்ணன் வரும் பாதையைக் கண்கொட்டாமல் பார்த்து நிற்கிறாள்.

काचिद्भवति संमुग्धा गुञ्जामालां विलोक्य च ।
दत्तां तु निभृते कुञ्जे कृष्णेन प्रीतिपूर्वकम् ॥२०॥

20. ஒருவள் முன்பு நிகுஞ்ஜத்தில் கண்ணன் தனக்கு இரகசியமாகக் கொடுத்த குஞ்ஜாமாலையைப் பார்த்துக் கண்ணீர் விடுகிறாள்.

काचित्पीताम्बरं शौरेः परिधाय पुनः पुनः ।
जहाति विरहं तस्य स्मृत्वा तत्परिरम्भणम् ॥२१॥

21. ஒருவள் கண்ணன் தந்த பீதாம்பரத்தை மாற்றிமாற்றி கட்டிக்கொண்டு கண்ணனையே கட்டிக்கொண்டதுபோல் விரஹவேதனையைத் தணித்துக் கொள்கிறாள்.

स्वप्ने कृष्णपरिष्वङ्गं प्राप्य काचित्किशोरिका ।
सखीमालिङ्ग्य सानन्दं वदति प्रेमपूर्वकम् ॥२२॥

22. கனவில் கண்ணனைத் தழுவியதாகக் கண்ட கோபகிசோரி பக்கத்தில் படுத்துறங்கும் தன் தோழியையே கண்ணனாகக் கருதித் தழுவிக் கொள்கிறாள்.

प्रसारितकरा काचिद्विलोक्य जलदञ्च खे ।
आगच्छ प्रिय कृष्णेति प्रलपत्यमलाशया ॥२३॥

23. கபடமறியாத ஒரு கோபி ஆகாயத்தில் நீலமேகத்தைக் கண்டு என் ப்ரியமுள்ள கண்ணா! வருக என்று உயரே கையை உயர்த்திக் கூப்பிடுகிறாள்.

काचित्पुलकसंव्याप्तशरीरा गद्गदस्वरा ।
प्रेमभावेन संपूर्णा कृष्ण कृष्णेति रोदिति ॥२४॥

24. ஒருவள் மேனி சிலிர்த்துக் கண்ணீர் மல்கி தொண்டை தழுதழுத்து ப்ரேமபாவம் நிரம்பியவளாய் கண்ணா! கண்ணா! என்று கதறுகிறாள்.

काचिद्गोकुलवीथीषु कृष्णध्यानपरायणा ।
विलुठन्ती गतप्रज्ञा हरिनामानि गायति ॥२५॥

25. ஒருவள் ப்ரக்ஞையில்லாமல் க்ருஷ்ணநாமங்களைச் சொல்லிக்கொண்டு க்ருஷ்ணத்யானத்துடன் கோகுலவீதிகளில் புரள்கிறாள்.

एवं कृष्णरतिं दिव्यां ब्रह्मादिसुरदुर्लभाम् ।
विलोक्य तासां गोपीनामुद्धवो विस्मितोऽभवत् ॥२६॥

26. இவ்வாறு ப்ரம்மாதிதேவர்களுக்கும் துர்லபமான அவர்களுடைய க்ருஷ்ண பக்தியைக் கண்டு உத்தவன் ஆச்சர்யம் அடைந்தான்.

अदृष्टपूर्वं तत्प्रेम विलोक्य व्रजयोषिताम् ।
परमानन्दसंयुक्तः प्रणामञ्च चकार सः ॥२७॥

27. இதற்குமுன் பார்த்திராத க்ருஷ்ணப்ரேமையைக் கண்டு உத்தவன் பரமானந்தமடைந்து அவர்களுக்கு ப்ரணாமம்கூட செய்துவிட்டான்.

अहो कृष्णस्य कृपया यूयं तु परिपूरिताः ।
लौकिकीवैदिकीवृत्तिर्विनष्टा हि स्वयञ्च वः ॥२८॥

28. ஆஹா! க்ருஷ்ணக்ருபையால் நீங்கள் பூர்ணமாகி விட்டீர்கள். லௌகிகமும் வைதிகமுமான எந்த கடமையும் உங்களுக்குக் கிடையாது.

अहञ्च कृष्णकृपया पूरितोऽस्मि न संशयः ।
युष्माकं दर्शनं प्राप्तमस्मिन् बृन्दावने शुभे ॥२९॥

29. நானும் க்ருஷ்ணக்ருபைக்குப் பாத்திரமாகி விட்டேன். ஏனெனில் ப்ருந்தாவனத்தில் உங்கள் தர்சனம் எனக்குக் கிடைத்ததே.

सर्वात्मा वासुदेवोऽयमेक एव न संशयः ।
मम युष्माकमप्यन्तर्भाति साक्षी सनातनः ॥३०॥

30. பரமாத்மாவான வாஸுதேவன் ஒருவனே சாச்வதமானவன். அவன் எங்கும் வ்யாபித்து எல்லாவற்றிற்கும் சாக்ஷியாக இருக்கிறான். ஸம்சயமில்லை.

अस्माकं सङ्गमेनैवं भगवान्नन्दनन्दनः ।
सुप्रसन्नो भवत्येव हृदये निवसन् सदा ॥३१॥

31. நம்மைக் கூட்டிவைத்து நமது இதயத்திலுள்ள அந்த நந்தநந்தனன் ஸுப்ரஸன்னமாகிறான்.

एवं बहुविधैर्वाक्यैः कृष्णतत्त्वविमर्शनैः ।
वल्लवीः सान्त्वयामास सरसं सात्वतोत्तमः ॥३२॥

32. இவ்வாறு உத்தவன் க்ருஷ்ணதத்வத்தை ஆராயும் பலவிதமான ஹிதவசனங்களால் அவர்களைச் சமாதானம் செய்தான்.

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये मधुराकाण्डे गोपीसान्त्वनं नामाष्टमोऽध्यायः ॥८॥*

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிமஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில் மதுராகாண்டத்தில் எட்டாவது அத்யாயம் முற்றும்.**

# अथ नवमोऽध्यायः

## ஒன்பதாம் அத்யாயம்

### श्रीसद्गुरुरुवाच

अथ ताः प्रेष्ठविरहतापात् संपीडिता अपि ।
सर्वाः प्रहृष्टवदना वल्लवीः सन्ददर्श ह ॥१॥

### ஸ்ரீஸத்குரு

*1. பிறகு ப்ரியனின் விரஹத்தினால் பீடிக்கப்பட்டிருந்தும்கூட முகமலர்ச்சியுடன் இருக்கும் அந்த எல்லா கோபிகைகளையும் உத்தவன் பார்த்தான்.*

चित्राम्बरधरा गोपीः सर्वाभरणभूषिताः ।
कज्जलालिप्तनयनाः कस्तूरीतिलकाञ्चिताः ॥२॥

चित्राङ्कितकपोलाश्च सुगन्धिकुटिलालकाः ।
अनुलेपनदिग्धाङ्गीर्हरिचन्दनचर्चिताः ॥३॥

ताम्बूलपूरितमुखीस्तारुण्यरसरञ्जिताः ।
प्रहृष्टवदनाः सर्वाः परिहासविचक्षणाः ॥४॥

नानाकेलिकलासक्ता नाट्यसङ्गीतकोविदाः ।
हृष्टपुष्टशरीराश्च कृष्णप्रेमपरायणाः ॥५॥

विलोक्य सात्वतश्रेष्ठः परमाश्चर्यसंयुतः ।
पप्रच्छ कृष्णदासीस्ताः प्रणामञ्च विधाय सः ॥६॥

*2-6. அழகிய ஆடைகள் அணிந்தவர்களும், ஸர்வாபரணங்களு மணிந்தவர்களும், கண்களில் மைதீட்டிக் கொண்டிருப்பவர்*

களும், கஸ்தூரிதிலகம் அணிந்தவர்களும், கன்னத்தில் சித்ரம் எழுதிக்கொண்டிருப்பவர்களும், ஸுகந்தமான கேசமுள்ளவர்களும், சந்தனம் பூசிக்கொண்டிருப்பவர்களும், அனுலேபனம் பூசிக்கொண்டிருப்பவர்களும், தாம்பூலம் போட்டுக் கொண்டிருப்பவர்களும், இளவயதிற்கேற்ற ரஸிகஸ்வபாவம் உடையவர்களும், பரஸ்பரம் பரிஹாஸம் செய்துகொள்பவர்களும், நாட்டியத்திலும் சங்கீதத்திலும் விருப்பமுடையவர்களும், ஸந்தோஷமாக உள்ளவர்களும், பலவிதமாக விளையாடுபவர்களும், இளைக்காத புஷ்டியான சரீரமுள்ளவர்களும், க்ருஷ்ணப்ரேமையே லக்ஷியமானவர்களும், க்ருஷ்ணதாஸிகளுமான அந்த கோபிகைகளைப் பார்த்து வணங்கி பாகவதச்ரேஷ்டனான உத்தவன் ஆச்சர்யமடைந்து நின்றான்.

## उद्धव उवाच

अहो विचित्रभावोऽयं भवतीनां व्रजाङ्गनाः ।
यद्यूयं संप्रहृष्टाःस्थ श्रीकृष्णविरहेपि च ॥७॥

**உத்தவன்**

7. ஆஹா! கோபிகைகளே! உங்கள் மனோபாவம் விசித்ரமாக இருக்கிறது. க்ருஷ்ணவிரஹத்திலும்கூட நீங்கள் ஸந்தோஷமாக இருக்கிறீர்கள்.

चिन्ता जागरणोद्वेगौ कार्श्यं मलिनता तथा ।
प्रलापोन्मादमूर्च्छाश्च व्याधिः प्रलय एव च ॥८॥

भवन्ति प्रियविश्लेषात् पीडितानां तु योषिताम् ।
न तथा दृश्यते भावो युष्मासु विरहोद्भवः ॥९॥

8,9. **சிந்தா, ஜாகரணம், உத்வேகம், இளைப்பு, மலினதா ப்ரலாபம், உன்மாதம், மூர்ச்சை, ப்ரளயம்** என்ற அவஸ்தைகள் ப்ரியனின் பிரிவினால் பெண்களுக்கு உண்டாகும். அவைகள் உங்களிடம் ஏன் இல்லை?

कथं त्यक्त्वा प्रियतमं कृष्णं सर्वाङ्गसुन्दरम् ।
यूयं स्वलङ्कृताः स्थैवं मह्यं वदत पृच्छते ॥१०॥

10. ஸர்வாங்கஸுந்தரனான கண்ணனைவிட்டு நீங்கள் இப்படி அலங்காரம் செய்துகொண்டு எப்படி இருக்கிறீர்கள்? எனக்குச் சொல்லவேண்டும்.

गोप्य ऊचुः

त्वमेव कृष्णदूतोसि मधुरायाः समागतः ।
कृष्णचित्तं न जानासि कोमलादपि कोमलम् ॥११॥

கோபிகைகள்.

11. மதுரையிலிருந்து வந்திருக்கும் க்ருஷ்ண தூதன்தானே நீர். உமக்கே க்ருஷ்ண ஹ்ருதயம் தெரியவில்லையா? கண்ணனின் இதயம் மிகவும் கோமளமானதன்றோ!

वसति प्रेमभक्तानां हृदये नन्दनन्दनः ।
वियोगतीक्ष्णभावेन न दहेत्प्रेष्ठमीश्वरम् ॥१२॥

12. ப்ரேமபக்தர்களின் உள்ளத்தில்தானே கண்ணன் இருக்கிறான். எனவே விரஹதாபத்தினால் அவனைப் பொசுக்கி விடலாகாது.

तापं न सोढुं शक्नोति गोविन्दः करुणानिधिः ।
भक्तानां मृदुचित्तानां नात्मानं शोचयेदतः ॥१३॥

13. ம்ருதுவான சித்தமுள்ள பக்தர்களின் விரஹதாபத்தை கண்ணன் தாளமாட்டான். எனவே பக்தன் தன்னை மிகவும் வருத்திக் கொள்ளக்கூடாது.

सन्ततं संस्मरन् कृष्णं प्रेमभावकुतूहलः ।
लभते तत्सुखे सौख्यं स्वार्थचिन्तां परित्यजेत् ॥१४॥

14. கண்ணனையே எப்போதும் சிந்தனை செய்துகொண்டு அவனது ஸுகத்திலேயே தானும் ஸுகப்படவேண்டும். இவ்விஷயத்தில் சுயநலத்தை விட்டுவிடவேண்டும்.

संयोगं वा वियोगं वा ददाति भगवान् हरिः ।
स्वच्छन्दशुद्धचारित्रः प्रेमतत्त्वविशारदः ॥१५॥

15. சுதந்திரமாக விளையாடும் கண்ணன் ஸம்யோகத்தையோ வியோகத்தையோ தரட்டும். அவன் இஷ்டம். ப்ரேமையின் ரஹஸ்யம் யாவும் அவனுக்கே தெரியும். அவன் பகவானன்றோ!

अस्माकं प्राणनाथाय शरीरं तु समर्पितम् ।
तस्मादलङ्कृतं ह्येवं तस्यैव परितुष्टये ॥१६॥

16. எங்கள் திருமேனி எங்கள் ப்ராணநாதனான கண்ணனுக்கே ஸமர்ப்பித்தாகி விட்டது. எனவே இதை நாங்கள் அலங்கரித்து கொள்கிறோம். ஏனெனில் இந்த சரீரம் கண்ணனுக்கு அபிமானபாத்ரமாயிற்றே!

न चेन्द्रियाणां प्रीत्यर्थं क्रियते देहपोषणम् ।
शरीरमेवमस्माभिः पूजितं कृष्णतृप्तये ॥१७॥

17. இந்த்ரியப்ரீதிக்காக சரீரபோஷணம் நாங்கள் செய்ய வில்லை. க்ருஷ்ண ப்ரீதிக்காகவே உடம்பை நாங்கள் பார்த்துக் கொள்கிறோம்.

प्राणानपि परित्यक्तुं स्वातन्त्र्यं हन्त नास्ति नः ।
अस्माकं प्राणनाथस्तु भगवान् कृष्ण एव हि ॥१८॥

18. உயிரை விட்டுவிடவும் எங்களுக்குச் சுதந்திரம் கிடையாது. எங்கள் உயிரும் எங்கள் ப்ராணநாதனான கண்ணனுடையதே.

मनसापि परं दुःखं संप्राप्तुं नैव शक्नुमः ।
अस्माकं हृदयेशोऽयं न सहेत रतिज्वरम् ॥१९॥

19. மனதினாலும் துன்பப்படக்கூடாது. ஏனெனில் எங்கள் மனதில் கண்ணன் இருக்கிறான். அவன் தாபத்தைத் தாங்க மாட்டான்.

एवमेव विचिन्त्याद्य श्रीकृष्णविरहेपि च ।
सदा संरक्षितप्राणाः सञ्चराम वयं ननु ॥२०॥

20. இவ்வாறு நினைத்து, ஸ்ரீக்ருஷ்ணவிரஹம் இருந்த போதிலும் நாங்கள் சரீரத்தை அவனுக்காகவே, அவனை எதிர்பார்த்தே போஷித்து வருகிறோம்.

तथापि कृष्णविरहं सोढुं नैव हि शक्नुमः ।
स हि सर्वस्वमस्माकं न जानीमः परं वयम् ॥२१॥

21. இருந்தாலும் க்ருஷ்ணவிரஹம் எங்களுக்குத் தாங்க முடியவில்லை. கண்ணனே எங்களுக்கு எல்லாம் அல்லவா! எங்களுக்கு வேறு எதுவும் தெரியாது.

**उद्धव उवाच**

प्रेमभावो दुरूहोऽयं युष्माकं वल्लवाबलाः ।
यत्तोषयथ सानन्दं हृदयस्थं जनार्दनम् ॥२२॥

**உத்தவன்**

22. கோபிகைகளே! உங்களுடைய இந்த ப்ரேமபாவம் யாருக்கும் புரியாது. எப்போதும் இதயத்தில் கண்ணனை ஸந்தோஷமாக வைத்துக்கொண்டுள்ளீர்களே.

न जानन्ति परं गुह्यं प्रेमतत्त्वं परात्मनः ।
ब्रह्मशक्रमहेशाद्याः क्वाहं कश्चन यादवः ॥२३॥

23. பரமாத்மாவின் ப்ரேமரஹஸ்யம், ப்ரம்மா, ருத்ரன்முதலிய தேவர்களுக்கே புரியாதெனில் நான் ஒரு யாதவன். எம்மாத்திரம்?

यूयमेव महाभागा ब्रह्मादिसुरपूजिताः ।

प्रेमभावनिबद्धं हि पूर्णं ब्रह्म सनातनम् ॥२४॥

24. நீங்களே ப்ரம்மாதிதேவர்களுக்கும் பூஜ்யைகளான பாக்யவதிகள். ஏனெனில் ஸனாதனமான பூர்ணப்ரம்மம் உங்கள் அன்புக்கு வசமாகிவிட்டதே.

यस्य सन्दर्शनायैव तपः कुर्वन्ति योगिनः ।
युष्माकं दर्शनार्थं तु हन्त रोदिति स प्रभुः ॥२५॥

25. எவரை தர்சனம் செய்ய யோகிகளும் தவம் செய்கின்றனரோ, அந்த ப்ரபு உங்களைப் பார்க்கவேண்டி அழுகிறானே!

यस्य श्रीचरणाम्भोजरेणुमिच्छन्ति वै सुराः ।
युष्माकं पादपद्मेषु विलुठत्येव सोऽच्युतः ॥२६॥

26. எவருடைய பாததூளியை தேவர்களும் விரும்புகின்றனரோ அந்த அச்சுதன் உங்கள் திருவடிகளில் புரளுகிறானே.

कोटिजन्मकृतैः पुण्यैर्योगयागव्रतादिभिः ।
प्रकाशते क्वापि पात्रे गोविन्दे भक्तिरीदृशी ॥२७॥

27. கோடிஜென்மம் செய்த புண்ணியங்களாலும், யோகம், யாகம், வ்ரதம் இவைகளாலும் இத்தகைய க்ருஷ்ணபக்தி கிடைக்கும்.

योगिनामपि सिद्धानां सुराणामपि दुर्लभा ।
भक्तिर्गोविन्दपादाब्जे सुदृढा प्रेमरूपिणी ॥२८॥

28. யோகிகளுக்கும், தேவர்களுக்கும், ஸித்தர்களுக்குங்கூட துர்லபமான இத்தகைய க்ருஷ்ணபக்தி எங்கேயோ ஒருவரிடம் தான் ப்ரகாசிக்கிறது.

नित्यानामपि मुक्तानां पार्षदानां जनार्दने ।
माधुर्यरससंपूर्णा दुर्लभा भक्तिरीदृशी ॥२९॥

29. நித்யர்கள், முக்தர்கள், பகவத்பார்ஷதர்களுக்குக்கூட இத்தகைய மதுரபாவம் நிறைந்த ப்ரேமபக்தி துர்லபம்.

अविचिन्त्यैव माहात्म्यं कृष्णस्य परमात्मनः ।
जारभावेन तं यूयं चकृढ्वे स्ववशं हरिम् ॥३०॥

30. பரமாத்மாவின் மஹிமையைக்கண்டு பயப்படாத நீங்கள் அவனை ஜாரபாவத்துடன், தங்களுக்கு வசமாக்கிக்கொண்டு விட்டீர்களே.

अत्रैवास्ति हरिर्नूनं सत्यमेव वदाम्यहम् ।
मधुरागमनं तस्य जाने लोकविडम्बनम् ॥३१॥

31. உண்மையில் கண்ணன் உங்களிடமே இருக்கிறான். அவன் மதுரைக்குப் போகவேயில்லை. போனது எல்லாம் நடிப்பே.

कथं प्रणयसारज्ञः सर्वज्ञो भगवान् हरिः ।
अनन्यभावसंसिद्धाः सन्त्यजेद्वो दयानिधिः ॥३२॥

32. ஸர்வக்ஞனான பகவான் உங்கள் ப்ரேமரஸம் தெரிந்தவனல்லவா? அனன்ய நிஷ்டையுடன் அவனையே பஜிக்கும் உங்களை தயாநிதியான க்ருஷ்ணன் ஏன் விடுவான்?

### श्रीसद्गुरुरुवाच

इत्युक्त्वा यादवश्रेष्ठः प्रेमगद्गदभाषणः ।
पुलकाङ्कितगात्रोऽभूत् कुर्वन् शिरसि चाञ्जलिम् ॥३३॥

### ஸ்ரீஸத்குரு

33. இவ்வாறு சொல்லி யாதவச்ரேஷ்டனான உத்தவன் கண்ணீர் மல்கி, மேனி சிலிர்த்து, தொண்டை தழுதழுத்து சிரஸில் கைகூப்பி கோபிகைகளை வணங்கினான்.

तं विलोक्य महाबुद्धिः कृष्णतत्त्वविदां वरम् ।
विशुद्धहृदयं गोप्यः संप्रापुः परमां मुदम् ॥३४॥

34. க்ருஷ்ணதத்வம் அறிந்தவனும், சுத்தசித்தமுள்ளவனும், மஹாபுத்திமானுமான அந்த உத்தவனைக் கண்டு கோபிகைகள் பரமானந்தம் அடைந்தனர்.

इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये मधुराकाण्डे गोपीप्रेमदर्शनं नाम नवमोऽध्यायः ॥९॥

இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிமஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில் மதுராகாண்டத்தில் ஒன்பதாம் அத்யாயம் முற்றும்.

# अथ दशमोऽध्यायः

## பத்தாம் அத்யாயம்

### श्रीसद्गुरुरुवाच

अथ ता नन्दगोपश्च कृष्णदासीर्यथाक्रमम् ।
न्यवेदयत्प्रेमपूर्वमुद्धवाय महात्मने ॥१॥

### ஸ்ரீஸத்குரு

1. பிறகு நந்தகோபன் மஹாத்மாவான உத்தவனுக்கு க்ருஷ்ணதாஸிகளான கோபிகைகளை முறைப்படி அன்புடன் அறிமுகப்படுத்தி வைத்தான்.

### नन्द उवाच

इयं स्नुषा मे कल्याणी राधिका वार्षभानवी ।
यस्याः कटाक्षलेशेन निबद्धो व्रजनन्दनः ॥२॥

### நந்தகோபன்

2, இவள் வ்ருஷபானுகோபகுமாரியும், எனது நாட்டுப் பெண்ணுமான ராதை. இவளது கடாக்ஷத்திற்குக் கண்ணன் கட்டுப்பட்டவன்

इयं च ललिता नाम्नी गोपी ललितवीक्षणा ।

अस्यास्ताम्बूलसौगन्ध्यविवशो राधिकाप्रियः ॥३॥

3. அழகிய பார்வையுடைய இவள் லலிதா என்ற கோபி. ராதாரமணன் இவளுடைய தாம்பூலசுகந்தத்தினால் தன் வஸம் இழந்தவன்.

इयं विशाखा कृष्णस्य प्रेयसी प्रेमभूषणा ।
अस्याश्चन्दनलेपेन सुप्रसन्नः सदा हरिः ॥४॥

4. அன்பே பூஷணமான இவள் விசாகா என்ற கோபிகை. இவள் தரும் சந்தனப் பூச்சால் கண்ணன் சுப்ரஸன்னமாவான்.

इयं चम्पकवल्ली च कृष्णचन्द्रमनोहरी ।
चामरं वीजयन्त्येव पार्श्वे तिष्ठति वै हरेः ॥५॥

5. க்ருஷ்ணசந்திரனின் மனதைக் கவரும் இவள் சம்பகவல்லி. சாமரம் வீசிக்கொண்டு எப்போதும் கண்ணன் பக்கத்திலேயே நிற்பாள்.

इयं विचित्रचरिता चित्रा नाम व्रजाङ्गना ।
कृष्णं तोषयति प्रेम्णा वस्त्रालङ्कारकर्मणा ॥६॥

6. விசித்ரமான சரித்ரம் உடைய இவள் சித்ரா என்ற கோபிகை. வஸ்த்ராலங்காரம் செய்வதால் இவள் கண்ணனை சுகப்படுத்துவாள்.

इयं सखी तुङ्गविद्या चञ्चलापाङ्गवीक्षणा ।
अस्याः सङ्गीतसंमुग्धश्चपलः श्यामसुन्दरः ॥७॥

7. சஞ்சலமான அழகிய பார்வையுடைய இவள் துங்கவித்யா என்ற ஸகி. ஸ்யாமஸுந்தரன் இவளது கானத்தில் மயங்கி விடுவான்.

इयं सखी रङ्गदेवी कृशाङ्गी दिव्यसुन्दरी ।
नाट्यं करोति कृष्णस्य सन्निधौ प्रियदर्शना ॥८॥

8. நடுத்தரமான ஆக்ருதி உடையவள் ரங்கதேவி என்ற ஸகி. இவள் கண்ணனின் எதிரில் தினமும் நாட்டியமாடுவாள்.

अर्घ्यपाद्यादिसेवायां सुदेवी नाम गोपिका ।
नियुक्ता नीलबालेन निर्मलप्रेमतत्परा ॥९॥

9. நிர்மலமான ப்ரேமை உள்ள இந்த ஸகி ஸுதேவி. இவள் அர்க்யம், பாத்யம் முதலிய தீர்த்தகைங்கைர்யம் செய்ய நீலபாலனால் நியமிக்கப்பட்டவள்.

इयं चन्द्रावली नाम गोपिका चारुवीक्षणा ।
परितोषयति प्रेष्ठं सन्ततं पुष्पमालया ॥१०॥

10. அழகான பார்வையுள்ள இவள் சந்த்ராவளி என்ற கோபிகை. இவள் தினமும் புஷ்பமாலை கட்டி கண்ணனுக்குப் போடுவாள்.

एवं गोपीजनैः कृष्णः पूजितो भक्तिनिष्ठया ।
नित्यं करोति सानन्दं दिव्यं रासमहोत्सवम् ॥११॥

11. இவ்வாறு பக்திநிஷ்டையுடன் கோபிகைகளால் பூஜிக்கப்படும் கண்ணன் ஆனந்தமாக தினமும் ராஸலீலை செய்கிறான்.

मम पुत्रस्य कृष्णस्य विचित्रं प्रेमचेष्टितम् ।
संस्मरन् संस्मरन्नत्र जीवामि यदुनन्दन ॥१२॥

12. என் புத்ரனின் விசித்ரமான சேஷ்டிதங்களை நினைத்து நினைத்து ஜீவித்து வருகிறேன் உத்தவ!

**श्रीसद्गुरुरुवाच**

इत्युक्त्वोपरते नन्दे गोपिका लज्जयापि च ।
पप्रच्छुः प्रेष्ठविषयं प्रणिपत्य यदूत्तमम् ॥१३॥

ஸ்ரீஸத்குரு

13. இவ்வாறு நந்தன் சொன்னதும், கோபிகைகள் வெட்கத்துடன் உத்தவனை வணங்கிவிட்டு கண்ணன் விஷயமாகக் கேட்டனர்.

गोप्य ऊचुः

स्वागतं सात्वतश्रेष्ठ कृष्णप्रेमपरायण ।
जानीमस्त्वां मुकुन्दस्य पार्षदं प्रियदर्शनम् ॥१४॥

கோபிகைகள்

14. க்ருஷ்ணபக்தியே லஷியமாகக்கொண்ட பாகவதச்ரேஷ்டரான உமக்கு ஸ்வாகதம். உம்மை முகுந்தனின் பார்ஷதர் என்று அறிந்தோம். உமது தரிசனத்தால் ப்ரீதி அடைந்தோம்.

अपि स्मरति नः कृष्णो रसिकेन्द्रो व्रजाबलाः ।
यदर्थं त्यक्तसर्वस्वा वहामो जीवितं वयम् ॥१५॥

15. எங்கள் ரஸிகேந்த்ரனான கண்ணனுக்கு எங்கள் நினைவு உள்ளதா? நாங்கள் அவருக்காகவே ஸர்வத்தையும்விட்டு உயிர் தரிக்கிறோமே!

अपि शोचति गोविन्दः प्रियाणां विरहेण नः ।
अथवा राजकन्याभिः सानन्दं रमतेपि वा ॥१६॥

16. எங்களைவிட்டுப் பிரிந்த கண்ணபிரானும் வருந்துகிறானா அல்லது ராஜகுமாரிகளுடன் ஸுகமாய் விளையாடுகிறானா?

तथापि प्रेमभावज्ञो गोपीर्नो नैव विस्मरेत् ।
मधुरायां वसत्येवं निबद्धो बन्धुभिः किल ॥१७॥

17. பந்துக்களுக்குக் கட்டுப்பட்டு மதுரையில் வஸித்தாலும் ப்ரேமையின்நிலை தெரிந்த கண்ணன் எங்களை மறக்கவே மாட்டான்.

दुःसहप्रेष्ठविरहतापेनात्र मृता वयम् ।
अस्माभिः क्रियते नूनं तदर्थं प्राणधारणम् ॥१८॥

18. ஸஹிக்கமுடியாத ப்ரியவிரஹத்தினால் நாங்கள் செத்து விட்டபோதிலும் அவருக்காகவே உயிரை வைத்துக் கொண்டிருக்கிறோம்.

**उद्धव उवाच**

गोविन्दतत्त्वज्ञानेन दुःसहं विरहानलम् ।
शमयन्त्यः समाधानं भजत व्रजबालिकाः ॥१९॥

**உத்தவன்**

19. ஆயர்சிறுமிகளே! நீங்கள் க்ருஷ்ணதத்துவத்தை உணர்ந்து அந்த ஞானத்தினால் விரஹதாபத்தை ஸமாதானம் செய்து கொள்ளுங்கள்.

स एष परमात्मा हि निर्विकारो निरञ्जनः ।
निराकारः परं तत्त्वं सर्वत्र व्याप्य तिष्ठति ॥२०॥

20. க்ருஷ்ணபரமாத்மா நாமரூபமற்றமர். அவர் எங்கும் வ்யாபித்து எல்லாமாக இருக்கிறார். நிர்மலமானவர். விகாரமற்றவர்.

वियोगो वस्तुतो नैव लीलामात्रविडम्बनम् ।
अपरिच्छिन्नरूपोऽयं सर्वव्यापी सनातनः ॥२१॥

21. எங்கும் நிறைந்து எல்லாமாக இருக்கும் பரமாத்மாவை எப்படிப் பிரியமுடியும்? எனவே பிரிவு என்பது ஒரு லீலையாகும்.

एवं विज्ञानयोगेन कृष्णतत्त्वं विचार्य च ।
शोकं विमुच्य सानन्दं क्रीडत व्रजकन्यकाः ॥२२॥

22. இவ்வாறு ஞானயோகத்தினால் க்ருஷ்ணனைப் புரிந்து

கொண்டு துக்கம் நீங்கி கோபகன்னிகைகளான நீங்கள் விளையாடிக்கொண்டிருங்கள்.

**गोप्य ऊचुः**

त्वमस्यात्मविदां श्रेष्ठः सर्वशास्त्रविशारदः ।
तस्मात्कृष्णं परं तत्त्वं वदसि प्राज्ञसंमतम् ॥२३॥

**கோபிகைகள்**

*23. உத்தவ! நீர் ஸர்வசாஸ்திரமும் படித்த ஞானிஅன்றோ! நீர் க்ருஷ்ணனை பரதத்துவமாக அறிந்துள்ளீர். இது உம்மைப் போன்ற பண்டிதர்களுக்கு ஸம்மதமானது.'*

वयं तु नन्दबालस्य प्रेमवीक्षणमोहिताः ।
विस्मरेम कथं तस्य स्वरूपं श्यामसुन्दरम् ॥२४॥

*24. நாங்களோ கண்ணனின் அன்பு கலந்த பார்வையிலேயே மயங்கினவர்கள். அந்த ஸுந்தர ரூபத்தை எப்படி மறப்போம்?*

निराकारं परं तत्त्वं कथं वदसि यादव ।
अस्माकं लोचनपथाद्गोविन्दो न निवर्तते ॥२५॥

*25. பரதத்வம் நிராகாரமானது என்று எப்படி நீர் வர்ணிக்கிறீர்? உத்தவ! கோவிந்தனின் ரூபம் எங்கள் கண்ணைவிட்டு அகலவேயில்லையே.*

अस्माकमग्रतः कृष्णः पृष्ठतः कृष्ण एव हि ।
पार्श्वतः कृष्ण एवास्ति कृष्णः सर्वत्र दृश्यते ॥२६॥

*26. எங்களுக்கு முன்னும் பின்னும், பக்கத்திலும் எங்கும் அந்த ச்யாமசுந்தரனே தெரிகிறான்.*

स्वप्नेपि क्षीरचोरो हि जाग्रति श्यामसुन्दरः ।
सुषुप्त्यां नन्दसूनुर्हि समाधौ कृष्ण एव नः ॥२७॥

27. எங்களுடைய கனவும் க்ஷீரசோரன்தான். விழித்துக் கொண்டாலும் சியாமஸுந்தரன்தான். தூங்கினாலும் நந்தலாலாதான். ஸமாதியிலும் க்ருஷ்ணன்தான்.

कृष्णादन्यं न जानीमः सर्वं कृष्णमयं जगत् ।
नूनं कृष्णवियोगोऽयं लीलामात्रविडम्बनम् ॥२८॥

28. கண்ணனைத்தவிர வேறு ஏதும் அறியோம். எல்லாம் க்ருஷ்ணமயம் ஜகத். உண்மையில் நீ சொன்னபடி விரஹமும் ஒரு லீலையே.

कृष्णः कोऽसौ निराकारः संभ्रमात्कीर्तितस्त्वया ।
अस्माकं प्राणनाथस्तु जगन्मोहनविग्रहः ॥२९॥

29. நீ சொன்ன உருவமற்ற க்ருஷ்ணன் யார் ? எங்கள் க்ருஷ்ணன் ஜகன்மோஹன விக்ரஹனாயிற்றே.

अद्यैव काशीं गच्छ त्वं शास्त्रज्ञजनमण्डिताम् ।
वेदान्तनिर्णयं तत्र कुरु पण्डितसत्तम ॥३०॥

30. பண்டிதச்ரேஷ்டரே! நீர் நேராக இப்போதே காசிக்குப் போவீராக. அங்கு வேதாந்த நிர்ணயம் செய். பண்டிதர்கள் உம்மை கௌரவிப்பார்கள்.

### श्रीसद्गुरुरुवाच

इत्युक्त्वा प्रेमभावज्ञो वल्लवीभिर्यदूत्तमः ।
लज्जितोऽभूत्तदा तासां प्रेमभक्तिं विलोक्य सः ॥३१॥

### ஸ்ரீஸத்குரு

31. இவ்வாறு கோபிகைகளால் சொல்லப்பட்ட பண்டித ச்ரேஷ்டனான உத்தவன் அவர்களது க்ருஷ்ணபக்தியைக் கண்டு வெட்கிப்போனான்.

इयेष तादृशीं भक्तिं गोविन्दे नन्दनन्दने ।

ज्ञानप्रसङ्गे सहसाप्युपेक्षां प्राप यादवः ॥३२॥

32. அவர்களைப்போல் தனக்கும் நந்தலாலாவிடம் பக்தி உண்டாகாதா என்று ஆசைப்பட்டான். இந்த ஞான ப்ரஸங்கத்தில் உடனே உபேக்ஷையும் அடைந்தான்.

इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये मधुराकाण्डे उद्धवगोपीसंवादो नाम दशमोऽध्यायः ॥१०॥

இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிமஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில் மதுராகாண்டத்தில் பத்தாம் அத்யாயம் முற்றும்

# अथैकादशोऽध्यायः

## பதினோராம் அத்யாயம்.

### श्रीसद्गुरुरुवाच

अथ तत्रागतान् गोपान् वयस्यान् वनमालिनः ।
नन्दगोपः प्रीतिपूर्वमुद्धवाय न्यवेदयत् ॥१॥

### ஸ்ரீஸத்குரு

1. பிறகு அங்குவந்த கண்ணனின் நண்பர்களான கோபர்களை நந்தகோபன் உத்தவனுக்கு அறிமுகப்படுத்தி வைத்தார்.

### नन्द उवाच

श्रीदामा नाम गोपालो राममाधवयोः सखा ।
ज्येष्ठभ्राता राधिकायाः सर्वसद्गुणसंयुतः ॥२॥

### நந்தகோபன்.

2. ஸகலநற்குணமுள்ளவனும், ராதையின் மூத்த ஸகோதரனுமான இவன் ராமனுக்கும் நண்பன். இவன் பெயர் ஸ்ரீதாமா.

सुबलो नाम गोपालो माधवप्रेमभाजनः ।

कनिष्ठसोदरो देव्यास्तत्सारूप्यकलेबरः ॥३॥

3. இவன் ஸுபலன் என்ற நண்பன். ராதையின் தம்பி. ராதையைப்போலவே முகஜாடை உள்ளவன். கண்ணனுக்கு மிகவும் பிடித்தமானவன்.

अयञ्च स्तोककृष्णस्तु कृष्णप्रेमपरायणः ।
नानाकेलिपरो बालो नवनीरदसुन्दरः ॥४॥

4. இவன் பெயர் ஸ்தோகக்ருஷ்ணன். இவன் கண்ணனைப் போலவே வண்ணமழகியவன். கண்ணனிடம் அன்பு கொண்டவன். மிகவும் குறும்பு செய்பவன்.

अर्जुनो नाम गोपालो गोविन्दप्रेमतत्परः ।
अलङ्करोति सानन्दं कृष्णं गैरिकधातुभिः ॥५॥

5. இவன் அர்ஜுனன் என்ற கோபன். கோவிந்தனிடம் மிகவும் ப்ரேமை கொண்டவன். கைரிகமான தாதுக்களால் கண்ணனை அழகுபடுத்துவான்.

वरूथपोऽयं गोपालः कृष्णेन सह सादरम् ।
गोकुलं यमुनातीरे नित्यं चारयति प्रियः ॥६॥

6. இவன் வரூதபன் என்ற கோபன். கண்ணனுடன் யமுனாதீரத்தில் தினமும் மாடுகளை ஓட்டிச்செல்வான்.

देवप्रस्थमिमं पश्य राधारमणसेवकम् ।
दण्डपाणिं धृतोष्णीषं प्रसन्नवदनाम्बुजम् ॥७॥

7. முண்டாசும் கைத்தடியுமாய் நிற்கும் இவனைப் பார். இவன் தேவப்ரஸ்தன். ராதாரமணனான க்ருஷ்ணனுக்கு ஸேவை செய்பவன்.

अयञ्च विकटाकारो नाम्ना तु मधुमङ्गलः ।
दधिभाण्ड इति प्राह परिहासेन यं हरिः ॥८॥

8. விகடமான ரூபமுள்ள இவன் பெயர் மதுமங்களன். இவனை ச்யாமஸுந்தரன் பரிஹாஸமாக ததிபாண்டன் என்றழைப்பான்.

सुभद्रो नाम गोपालो गोविन्दस्य प्रियः सुहृत् ।
अनेनैव सदा कृष्णः कानने चरति प्रभुः ॥९॥

9. ஸுபத்ரன் என்ற இவன் கண்ணனின் ப்ரிய நண்பன். இவனுடன்தான் கண்ணன் காடுகளில் ஸஞ்சரிப்பான்.

अंशुर्नाम वयस्योऽयं गोपालस्य महात्मनः ।
अंसेन वहति श्यामं सञ्चारश्रान्तमच्युतम् ॥१०॥

10. அம்சு என்ற இவன் கண்ணனின் தோழன். கண்ணன் களைத்துவிட்டால் கண்ணனை இவன் தோளில் தூக்கி நடப்பான்.

### श्रीसद्गुरुरुवाच

एवं निवेदिताः सर्वे गोपाला यदुसत्तमम् ।
आवृत्य परितस्तस्थुः प्रहृष्टवदनास्तदा ॥११॥

### ஸ்ரீஸத்குரு

11. இவ்வாறு நந்தன் சொன்னதும் கோபர்கள் யாவரும் ப்ரஸன்னமான முககமலத்துடன் உத்தவனை சூழ்ந்து கொண்டு நின்றனர்.

तान् समालिङ्ग्य सानन्दमुद्धवः प्रेमतत्परः ।
उवाच प्रेमवेगेन बाष्पपूरितलोचनः ॥१२॥

12. அவர்களை அன்புடன் தழுவிக்கொண்டு ஆனந்தக்கண்ணீர் வடித்து உத்தவன் ஆனந்தப்பட்டு இவ்வாறு கூறுவான்.

### उद्धव उवाच

यूयमेव महाभागा नूनं हि भुवनत्रये ।
इष्टं मित्रं हि युष्माकं पूर्णं ब्रह्म सनातनम् ॥१३॥

**உத்தவன்**

13. நீங்களே மூவுலகிலும் பாக்யசாலிகள். ஏனெனில் பூர்ணமான ஸனாதனமான ப்ரம்ஹமே உங்கள் நண்பனாக ஆயிற்றன்றோ?

सुराणामसुराणाञ्च योगिनामपि दुर्लभम् ।
वासुदेवं वशीकृत्य यूयं क्रीडामकार्ष्ट ह ।।१४।।

14. ஸுராஸுரர்களுக்கும் யோகிகளுக்கும் துர்லபமான வாஸுதேவனை வசம் செய்துகொண்டு நீங்கள் விளையாடினீர் களன்றோ!

अहञ्च गोपबालोस्मि कृष्णस्य परमः सखा ।
नाहं यदुकुलोत्पन्नो नाहं मधुपुरी जनः ।।१५।।

15. நான் யாதவனல்ல. மதுரையிலிருந்து வந்தவனல்ல. நானும் உங்களைப்போல் ஆயர்சிறுவன்தான். கண்ணனுடைய நண்பன்.

एवमेव वयस्यं मां विचिन्त्य व्रजबालकाः ।
कृष्णलीलास्थलं सर्वं प्रदर्शयत सादरम् ।।१६।।

16. குழந்தைகளே! இவ்வாறு என்னை நினைத்து, நீங்கள் கண்ணன் விளையாடிய இடங்களை எனக்குக் காட்டுவீர்களாக.

**श्रीसद्गुरुरुवाच**

इत्युक्ता बालकाः सर्वे परमानन्दनिर्भराः ।
उद्धवेन सह प्रापुः पुण्यं श्रीयमुनावनम् ।।१७।।

**ஸ்ரீஸத்குரு**

17. இவ்வாறு சொல்லப்பட்ட ஆயர்சிறுவர்கள் பெருமகிழ்ச்சியுடன் உத்தவனுடன் கூட ப்ருந்தாவனம் சென்றனர்.

अत्रैव नन्दबालस्तु रेमे कन्दुकलीलया ।
अत्रैव गोपनारीणां वस्त्राण्यपजहार सः ॥१८॥

*18. இங்குதான் கண்ணன் கோபிகைகளுடன் பந்து விளையாடுவான். இங்குதான் நந்தலாலா கோபிகைகளின் வஸ்த்ராபஹரணம் செய்தான்.*

अत्रैव दानलीला च कलिता वनमालिना ।
अत्रैव राधया सार्धं डोलालीलां चकार सः ॥१९॥

*19. இங்குதான் வனமாலி கோபிகைகளுடன் தானலீலை செய்தான். இங்குதான் ஹரி ராதையுடன் ஊஞ்சலாடுவான்.*

अत्रैवास्मिन् महावृक्षे वेणुं वादयते हरिः ।
अत्रैवास्मिन्निकुञ्जे तु राधया रमते हरिः ॥२०॥

*20. இந்த மரத்தில்தான் கண்ணன் குழலூதுவான். இந்த குஞ்ஜத்தில்தான் கண்ணன் ராதையுடன் விளையாடுவான்.*

अत्रैव यमुनातीरे रासलीलाञ्चकार सः ।
अत्रैव नन्दबालेन शङ्खचूडवधः कृतः ॥२१॥

*21. இங்குதான் நந்தபாலன் ராஸலீலை செய்வான். இங்குதான் அவன் சங்கசூடனை வதம் செய்தான்.*

अत्रैव निहतो दैत्यः सर्परूपधरो महान् ।
अत्रैव यमुनायां तु कृतं हि वनभोजनम् ॥२२॥

*22. இங்குதான் அகாஸுரவதம் நடந்தது. இங்குதான் நாங்கள் கண்ணனுடன் வனபோஜனம் செய்வோம்.*

अत्रैव नागराजोऽपि कालीयो मर्दितोऽभवत् ।
अत्रैव यज्ञपत्नीनां दर्शनं प्रददौ हरिः ॥२३॥

*23. இங்குதான் காளியநர்த்தனம் நடந்தது. இங்குதான்*

யக்ஞபத்னிகளுக்கு ஹரிதர்சனம் தந்தான்.

अत्रैव यमुनायां तु प्लवलीलां चकार सः ।
अत्रैव माधवीकुञ्जे चक्रे मधुमहोत्सवम् ॥२४॥

24. இங்குதான் யமுனையில் ஓடத்தில் கண்ணன் செல்வான். இங்குதான் மாதவிகுஞ்ஜத்தில் வஸந்தோத்ஸவம் நடைபெறும்.

अस्मिन् गोवर्धने नित्यं वसति श्यामसुन्दरः ।
सप्ताहमत्र शैलेन्द्रो धृतो माधवपाणिना ॥२५॥

25. இந்த கோவர்த்தனமலையைத்தான் மாதவன் ஏழு நாட்கள் குடைபிடித்தான். இங்கு கண்ணன் தினமும் வஸிக்கிறான்.

## श्रीसद्गुरुरुवाच

एवं गोपालबालैस्तु दर्शितेषु स्थलेषु सः ।
विलुठन् विलुठन् प्रेम्णा स्मरन् कृष्णं रुरोद सः ॥२६॥

## ஸ்ரீஸத்குரு

26. இவ்வாறு ஆயர்சிறுவர்கள் லீலாஸ்தலங்களை காண்பித்ததும் ப்ரேமையுடன் அந்த இடங்களில் உத்தவன் விழுந்து புரண்டு கண்ணீர்விட்டான்.

रुरुदुः स्म तदा गोपाः परिरभ्य तथोद्धवम् ।
कृष्णस्य चरितं सर्वं कीर्तयन्तः पुनः पुनः ॥२७॥

27. அப்போது அந்த கோபர்களும் உத்தவனைக் கட்டிக் கொண்டு கண்ணீர் விட்டனர். க்ருஷ்ணலீலை யாவையும் உத்தவனுக்குச் சொல்லி மகிழ்ந்தனர்.

एवं बृन्दावने नित्यं सञ्चरन्नुद्धवो महान् ।
गोपालबालकैः साकं प्रपेदे परमं सुखम् ॥२८॥

28. இவ்வாறு உத்தவன் தினந்தோறும் ஆயர்சிறுவர்களுடன்

ப்ருந்தாவனஸஞ்சாரம் செய்வதில் மிகவும் ஸுகப்பட்டான்.

एवं सायं गृहं गत्वा नन्देन च यशोदया ।
कृष्णकीर्तनसंमुग्धो बभूव सुखजीवनः ॥२९॥

29. மாலை வீடுவந்ததும் நந்தனுடனும் யசோதையுடனும் க்ருஷ்ணகீர்த்தனம் செய்பவனாய் ஸுகமாய் வாழ்ந்தான்.

कृष्णसारूप्यसंपन्नं कृष्णभक्तिपरायणम् ।
तं मेनिरे गोपबालाः श्रीकृष्णं पुनरागतम् ॥३०॥

30. கண்ணனின் ஸாரூப்யம் அடைந்தவனும், க்ருஷ்ணபக்தனுமாகிய உத்தவனை ஆயர்சிறுவர்கள் மீண்டும் கண்ணனே வந்துவிட்டதாகக் கருதி ஸந்தோஷப்பட்டனர்.

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये मधुराकाण्डे लीलास्थलदर्शनं नामैकादशोऽध्यायः ॥११॥*

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிமஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில் மதுராகாண்டத்தில் பதினோராம் அத்யாயம் முற்றும்**

# अथ द्वादशोऽध्यायः

## பன்னிரெண்டாம் அத்யாயம்.

### श्रीसद्गुरुरुवाच

एवं कृष्णसखः सोपि नन्दगोपेन लालितः ।
मासत्रयं श्रीवनेस्मिन्नुवास प्रेमपूर्वकम् ॥१॥

### ஸ்ரீஸத்குரு

1. இவ்வாறு நந்தகோபனால் லாலனை செய்யப்பட்டு மூன்று மாதங்கள் ப்ருந்தாவனத்திலேயே வாஸம் செய்தான்.

वसन् बृन्दावने नित्यं कीर्तयन् कृष्णकेलिकाः ।
उद्धवो नैव सस्मार बन्धूंश्च मधुरापुरीम् ॥२॥

2. ஶ்ரீக்ருஷ்ணகீர்த்தனம் செய்துகொண்டு ப்ருந்தாவனத்திலேயே வஸிக்கும் உத்தவனுக்கு பந்துக்கள் ஞாபகமே இல்லை. மதுரையும் மறந்துவிட்டது.

तथापि गोपवृद्धास्तु कृष्णसान्त्वनहेतवे ।
उद्धवं प्रेषयामासुः कृपया मधुरां प्रति ॥३॥

3. ஆயினும் ஆயர்கள் கண்ணனை ஸமாதானம் செய்யவேண்டி உத்தவனை மதுரைக்கு அனுப்பினர்.

गोपा ऊचुः

गच्छ शीघ्रं मधुपुरीं सान्त्वय प्रियमच्युतम् ।
अस्माकं विरहेणैव दुनोति ननु माधवः ॥४॥

கோபர்கள்

4. உத்தவ! சீக்கிரம் மதுராவுக்குச்செல். கண்ணனை ஸமாதானம் செய். எங்கள் விரஹத்தினால் கண்ணன் மிகவும் தாபப்படுவான்.

नैकत्र प्रियसंवास इति रीतिर्हि लौकिकी ।
तस्माद्विरहजं दुःखं शमयेद्बुद्धिमान्नरः ॥५॥

5. நண்பர்கள் ஒரே இடத்தில் வாஸம் செய்யமுடியாது என்பது உலகநீதி. எனவே அதை உணர்ந்து தனக்குத்தானே ஸமாதானம் செய்துகொள்ள வேண்டியதுதான்.

आशा हि परमं दुःखं नैराश्यं परमं सुखम् ।
तथापीशकृतः पाशो मुनीनामपि दुस्त्यजः ॥६॥

6. ஆசைப்படபட துன்பம்தான். ஆசையை விடவிட இன்பம்தான். ஆயினும் நமக்குள்ள பாசம் ஈசனால் செய்யப்பட்டதினால் விடமுடியவில்லை.

कीर्तयन्तः सदा कृष्णं वयं जीवाम गोकुले ।
कथं जीवति गोविन्दस्त्वेकाकी मधुरापुरे ॥७॥

7. நாங்களோ பலர்கூடி க்ருஷ்ணகீர்த்தனம் செய்துவருகிறோம். ஒருவருக்கொருவர் ஸமாதானம் சொல்கிறோம். கண்ணனோ தனியாக இருந்துகொண்டு கஷ்டப்படுகிறான்.

श्रीसद्गुरुरुवाच

इत्युक्तोप्युद्धवः सद्यः प्रतस्थे मधुरापुरीम् ।
आमन्त्र्य गोपवृद्धांश्च कृष्णदर्शनकौतुकात् ॥८॥

ஸ்ரீஸத்குரு

8. இவ்வாறு கோபர்கள் சொன்னதும் உத்தவனும் பெரியோர்களிடம் விடைபெற்று கண்ணனைக் காணும் ஆர்வத்துடன் மதுரைக்கு புறப்பட்டான்.

बृन्दावनं गोकुलञ्च यशोदां नन्दमेव च ।
गोपबालान् गोपिकाश्च गोवर्धनगिरिं तथा ॥९॥
सन्त्यज्य मधुरां गन्तुमियेष न हि यादवः ।
तथापि प्रययौ शौरेः सान्त्वनायैव केवलम् ॥१०॥

9,10. ப்ருந்தாவனத்தையோ, கோகுலத்தையோ, யசோதையையோ, நந்தனையோ, ஆயர்சிறுவர்களையோ, கோபிகைகளையோ, கோவர்த்தனத்தையோ விட்டுப்பிரிந்து மதுரைக்குப் போக உத்தவனுக்கு மனம் வரவில்லைதான். ஆயினும் கண்ணனை ஸமாதானம் செய்யவேண்டியே திரும்பினான்.

गच्छन् पथि महाभागः संस्मरन् संस्मरन् मुहुः ।
विशुद्धं प्रेम गोपीनां रुरोद रथमास्थितः ॥११॥

11. பாதையில் செல்லும்போது கோபிகைகள் தன்னிடம் காட்டிய அன்பை நினைத்து நினைத்து அழுதான்.

उद्धव उवाच

अहो धन्यमिदं जन्म धन्यं मम कुलं तथा ।

यदहं गोपनारीणामभवं प्रेमभाजनम् ॥१२॥

**உத்தவன்**

12. என் குலம் தன்யமானது. என் பிறவி பயன்பெற்றது. ஆஹா! ஏனெனில் கோபிகைகளின் அன்பிற்கு நான் பாத்ரமானேன்.

प्रेमभक्तिर्दृढा कृष्णे मुनीनामपि दुर्लभा ।
गोपिकानां प्रसादेन लभ्यते नात्र संशयः ॥१३॥

13. முனிவர்களுக்கும் துர்லபமான ப்ரேமபக்தி கோபிகைகளின் அனுக்ரஹத்தினால் கிடைக்கும் என்பதில் ஐயமில்லை.

क्वाहं वराको मूर्खश्च क्व ता गोपालवल्लभाः ।
तथापि करुणाञ्चक्रुर्मयि कृष्णस्य किङ्करे ॥१४॥

14. பாமரனும் மூர்க்கனுமாகிய நான் எங்கே! க்ருஷ்ண தாஸிகளான அவர்கள் எங்கே!. என்னை க்ருஷ்ணபக்தன் என்று மதித்துப் பேசினார்களே!

अधीतं विस्मृतं सर्वं शास्त्रं तु यमुनावने ।
आविर्भूतमहो कृष्णे विशुद्धं प्रेम केवलम् ॥१५॥

15. நான் படித்த ஸர்வசாஸ்த்திரமும் ப்ருந்தாவனத்தில் மறந்துவிட்டது. கண்ணனின் தூயப்ரேமை ஒன்றே நெஞ்சில் நிற்கிறது.

पुस्तके ध्यानयोगोस्ति कर्मयोगोस्ति पुस्तके ।
पुस्तके ज्ञानयोगोस्ति भक्तियोगोस्ति पुस्तके ॥१६॥

16. த்யானயோகம், கர்மயோகம். ஞானயோகம், பக்தியோகம் எல்லாம் புஸ்தகத்தில் காணக்கிடைக்கும்.

केवलानुभवानन्दः कृष्णभक्तिरसात्मकः ।
दृश्यते हृदि गोपीनां पुस्तके न हि दृश्यते ॥१७॥

17. ஆனால் அனுபவானந்தரஸரூபமான க்ருஷ்ணப்ரேமை மட்டும் கோபிகைகளிடந்தான் இருக்கிறது. புஸ்தகத்திலில்லை.

प्रक्षिप्य पुस्तकं सर्वं डम्भासूयाविवर्धनम् ।
अमानी मानदो गच्छेच्छ्रीमद्बृन्दावनं सुधीः ॥१८॥

18. டம்பத்தையும், அஸூயையும் வளர்க்கும் எல்லா புஸ்தகங்களையும் தூக்கியெறிந்துவிட்டு கர்வமின்றி பிறருக்கு மதிப்புக் கொடுப்பவனாய் ப்ருந்தாவனம் செல்பவனே புத்திமான்.

सर्वे शास्त्रार्थतत्त्वज्ञाः सर्वे नागरिका जनाः ।
बलवन्तो धनाढ्याश्च मधुरायामिमे बत ॥१९॥

19. மதுரையில் உள்ளவர்கள் யாவரும் சாஸ்திரம் படித்தவர்கள். யாவரும் பணமும், பலமும், நாகரிகமும் உள்ளவர்கள்தான்.

किन्तु कृष्णं न जानन्ति ज्ञात्वापि न भजन्ति तम् ।
कृष्णभक्तिर्विशुद्धा तु नन्दग्रामे हि दृश्यते ॥२०॥

20. ஆனால் கண்ணனைப் புரிந்துகொள்ளவில்லை. புரிந்து கொண்டும் சிலர் பக்தி செய்யமுடியவில்லை. ப்ரேமபக்தியோ நந்தக்ராமத்தில்தான் காணப்படுகிறது.

अद्यैव शीघ्रं गोविन्दं बलादानीय गोकुलम् ।
रंस्यामि निवसन्नत्र मधुरायां तु किं सुखम् ॥२१॥

21, இப்போதே கண்ணனை பலாத்காரம் செய்து இழுத்து வந்து கோகுலத்தில்விட்டு அவனுடன் விளையாடுவேன். மதுரையில் என்ன வைத்திருக்கிறது?

श्रीसद्गुरुरुवाच

एवं बहुविधां चिन्तां संप्राप्य यदुपुङ्गवः ।
त्वरया मधुरां प्राप कृष्णस्य भवनं तथा ॥२२॥

ஸ்ரீஸத்குரு

22. இவ்வாறு பலவிதமாய் நினைத்தவாறு உத்தவன் மதுரைக்கு வந்து, சீக்கிரமே க்ருஷ்ணபவனம் வந்து சேர்ந்தான்.

तं विलोक्याच्युतो दूराद्गोकुलादागतं प्रियम् ।
आसनात्सहसोत्थाय परिरेभे जवेन वै ॥२३॥

23. கோகுலத்திலிருந்து வந்துவிட்ட உத்தவனை கொஞ்ச தூரத்தில் பார்த்ததுமே கோவிந்தன் ஆஸனத்திலிருந்து ஓடிவந்து தழுவிக்கொண்டான்.

पप्रच्छ कुशलञ्चापि सर्वेषां व्रजवासिनाम् ।
गद्गदस्तब्धवचनः प्रणयस्निग्धवीक्षणः ॥२४॥

24. கண்ணீர் மல்க, தொண்டை தழுதழுக்க, கண்ணன் எல்லா வ்ரஜவாஸிகளுடையவும் க்ஷேமத்தை விசாரித்தான்.

उद्धवोपि महाभागः कथयन्निखिलाः कथाः ।
प्रददावुपहारञ्च दत्तं तद्व्रजवासिभिः ॥२५॥

25. மஹாபாக்யவானான உத்தவனும் எல்லா கதைகளையும் சொல்லிவிட்டு வ்ரஜவாஸிகள் கொடுத்தனுப்பிய உபகாரங்களை கண்ணனுக்கு அளித்தான்.

विशुद्धं प्रेम गोपीनां स्मृत्वा स्मृत्वा रुरोद सः ।
सान्त्वयामास तं कृष्णः प्रेमतत्त्वविदां वरः ॥२६॥

26. கோபிகைகளின் சுத்தமான ப்ரேமையை நினைத்து உத்தவன் அழுதான். கண்ணன் அன்பின் பெருமையைச் சொல்லி உத்தவனை சமாதானம் செய்தான்.

अथ कृष्णोद्धवौ नित्यं कीर्तयन्तौ परस्परम् ।
माहात्म्यं श्रीवनस्येदं तत्रैव सुखमूषतुः ॥२७॥

27. இவ்வாறு கண்ணனும் உத்தவனும் தினமும் ப்ருந்தாவன மாஹாத்மியத்தைப்பற்றி பேசிக்கொண்டே மதுரையில் ஸுகமாக வாழ்ந்தனர்.

बृन्दावने निवासाय प्रार्थयामास चोद्धवः ।
भूभारं हर्तुकामोसौ नानुमेने यदूत्तमः ॥२८॥

28. ப்ருந்தாவனத்திற்கே போய்விடுவோம் என்று உத்தவன் கண்ணனை வேண்டினான். அவதாரகாரியம் இருப்பதால் கண்ணன் சம்மதிக்கவில்லை.

चरितं परमं पुण्यं कृष्णस्य मधुरापतेः ।
यः पठेच्छ्रद्धया नित्यं प्राप्नुयात्परमं पदम् ॥२९॥

29. மதுராபதியின் புண்ணியமான சரித்ரத்தை யார் படிப்பார்களோ அவர்களே பரமபதம் அடைவார்கள்.

शृणुयात्कीर्तयेद्वापि भक्तिपूर्वं दिने दिने ।
आयुरारोग्यमैश्वर्यं धनमिष्टञ्च विन्दति ॥३०॥

30. தினந்தோறும் சிரத்தையுடன் கேட்பவர்களும், சொல்லுபவர் களும் ஆயுள், ஆரோக்யம், ஐச்வர்யம், இஷ்டமான தனம் இவைகளைப் பெறுவார்கள்.

किं राज्येन धनेनापि किं स्वर्गेनापि फल्गुना ।
प्राप्नुयात्कृष्णपादाब्जे भक्तिं प्रेमस्वरूपिणीम् ॥३१॥

इति श्रीमत्परमहंसपरिव्राजकाचार्यवर्यसर्वप्राणिसंरक्षकजगद्गुरु-
श्रीभगवन्नामबोधेन्द्रचरणारविन्दमकरन्दरसिकेन श्रीकृष्णप्रेमिमहाप्रभुणा
विरचिते श्रीबृन्दावनमाहात्म्ये मधुराकाण्डे उद्धवमधुरागमनं नाम
द्वादशोऽध्यायः ॥१२॥

31. தனத்தினாலும், ராஜ்யத்தினாலும் என்ன பயன்? ஸ்வர்கமே கிடைத்தாலும் அற்பமே. ஸ்ரீக்ருஷ்ணபாதாரவிந்தத்தில் திடமான பக்தியைப் பெறுவான்.

**இவ்வாறு பரமஹம்ஸபரிவ்ராஜகாசார்ய ஸர்வப்ராணிஸம்ரக்ஷக ஜகத்குரு ஸ்ரீபகவன்னாமபோதேந்த்ரஸரஸ்வதி சரணாரவிந்தங்களை ஆச்ரயித்த ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிமஹாப்ரபுவால் அருளிச்செய்யப்பட்ட ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில் மதுராகாண்டத்தில் பன்னிரெண்டாமத்யாயம் முற்றும்.**

## மதுராகாண்டம் ஸம்பூர்ணம்.

श्रीहरिः

ஸ்ரீஹரி:

**श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचितं**

# श्रीबृन्दावनमाहात्म्यम्

# ஸ்ரீப்ருந்தாவனமாஹாத்மியம்

## द्वारकाकाण्डम्

## துவாரகாகாண்டம்

## अथ प्रथमोऽध्यायः

### முதல் அத்யாயம்

**भागवता ऊचुः**

**பாகவதர்கள்**

अहो कृष्णस्य चरितं मधुरं परमाद्भुतम् ।
श्रुत्वापि सन्ततं स्वामिंस्तृप्तिर्नैवोपजायते ॥१॥

*1. ஸ்வாமி! க்ருஷ்ணசரித்ரம் மதுரமானது. மிகவும் அத்புதமானது. ஆச்சர்யம்! எவ்வளவு கேட்டாலும் அலுக்கவே இல்லை.*

कदा जगाम भगवान् द्वारकां दिव्यवैभवाम् ।
कथं भीष्मकुमारीञ्च भक्तामपजहार सः ॥२॥

*2. பகவான் எப்போது துவாரகைக்கு சென்றான்? துவாரகையில் திவ்யமான வைபவங்களைக் காண்பித்தானல்லவா! தன்னிடம் பக்தியுள்ள ருக்மணிதேவியை எப்படி கல்யாணம் செய்து கொண்டான்?*

निहत्य शिशुपालादीन् भूभारं हृतवान् कथम् ।
श्रीमद्बृन्दावनं पुण्यमाजगाम पुनः कदा ॥३॥

3. சிசுபாலன்முதலியவர்களைக் கொன்று எப்படி பூபாரத்தை நீக்கினான்? மறுபடியும் ப்ருந்தாவனத்திற்கு எப்போது வந்தான்?

एतत्सर्वं कृपासिन्धोश्चरितं परमात्मनः ।
अस्माकं श्रोतुकामानां सद्गुरो वद विस्तरात् ॥४॥

4. ஸத்குரோ! க்ருபாஸிந்துவான பரமாத்மாவின் இந்த எல்லா சரித்திரங்களையும் கேட்க விரும்புகிறோம். எங்களுக்கு விஸ்தாரமாக சொல்வீராக.

**श्रीसद्गुरुरुवाच**

कृष्णस्य द्वारकालीलां सङ्ग्रहेण वदाम्यहम् ।
यत्र श्रीवासुदेवस्य माहात्म्यं संप्रकाशते ॥५॥

**ஸ்ரீஸத்குரு**

5. கண்ணனின் துவாரகாலீலையை நான் சுருக்கமாகச் சொல்லுவேன். அந்த துவாரகையில் வாசுதேவனின் பெருமை ப்ரகாசமானதன்றோ!

अनन्तं कृष्णमाहात्म्यं ननु वाचामगोचरम् ।
तथापि कीर्तयाम्यद्य सङ्ग्रहेण यथामति ॥६॥

6. ஸ்ரீக்ருஷ்ணமஹிமை அனந்தமானது. மனதிற்கும் வாக்கிற்கும் எட்டாதது. ஆயினும் தெரிந்தவரை சொல்கிறேன்.

संप्रोक्तं विस्तरेणैव शुकव्यासपराशरैः ।
वासुदेवस्य माहात्म्यं वैकुण्ठपददायकम् ॥७॥

7. பராசரர், வ்யாசர், சுகர்முதலிய முனிவர்களால் வைகுண்டபதம் தரும் வாசுதேவ மஹாத்மியம் நன்றாக சொல்லப்பட்டிருக்கிறது.

मम श्रीनन्दबालस्य बृन्दावनविहारिणः ।
माधुर्यरसलीलायामेव चित्तं प्रलीयते ॥८॥

8. எனக்கு நந்தநந்தனனான ப்ருந்தாவனவிஹாரியின் மாதுர்யரஸலீலைகளிலேயே மனம் செல்கிறது.

भगवान् देवकीपुत्रो भक्तरक्षणतत्परः ।
अक्रूरस्य गृहं प्राप सचिवेन समन्वितः ॥९॥

9. பக்தரக்ஷணதத்பரனான பகவான் தேவகீபுத்ரன் மந்திரியான உத்தவனுடன் அக்ரூரர் க்ருஹத்திற்குச் சென்றான்.

पूजितो गान्दिनेयेन भक्तिपूर्वं यथाविधि ।
सुप्रसन्नोऽभवत्कृष्णः परमानन्दविग्रहः ॥१०॥

10. அக்ரூரரால் பக்தியுடன் முறைப்படி பூஜிக்கப்பட்டவராய் பரமானந்தமூர்த்தியான கண்ணன் ப்ரஸன்னமானான்.

प्रेषयामास तं देवः कृपया हस्तिनापुरम् ।
पाण्डवान् कुशलं प्रष्टुं पीडितान् धृतराष्ट्रजैः ॥११॥

11. க்ருபாளுவான பகவான் அந்த அக்ரூரரை கௌரவர்களால் துன்பப்படும் பாண்டவர்களை விஜாரித்து வரும்படி ஹஸ்தினாபுரத்திற்கு தூது அனுப்பினான்.

ततः कुब्जागृहं प्राप भगवान् पुरुषोत्तमः ।
नानालङ्कारसंयुक्तः साक्षान्मन्मथमन्मथः ॥१२॥

12. பிறகு பல அலங்காரம் செய்துகொண்டு மன்மத மன்மதனான புருஷோத்தமனான கண்ணன் குப்ஜையின் க்ருஹத்திற்குச் சென்றான்.

आलिङ्ग्य तां महाभागां परमप्रेमसंयुताम् ।
कृपया तोषयामास नानाशृङ्गारलीलया ॥१३॥

13. மிகவும் ப்ரேமையுடன்கூடிய அவளை தழுவிக்கொண்டு பல ச்ருங்கார கேளிக்கைகளால் அவளை மகிழ்வித்தான்.

सापि वव्रे मुकुन्दस्य भक्त्या पादाम्बुजातयोः ।
जन्मजन्मनि सम्बन्धं प्रेमभावकुतूहलात् ॥१४॥

14. அவளும் முகுந்தனின் பாதாரவிந்தத்தில் பிறவிதோறும் திடபக்தியையும் சம்பந்தத்தையுமே வேண்டினாள்.

श्रुत्वा कंसवधं घोरं कृतं धीरेण शौरिणा ।
जरासन्धः प्रकुपितः समरायाजगाम च ॥१५॥

15. தீரனான க்ருஷ்ணனால் கம்சன் வதம் செய்யப்பட்ட செய்தியறிந்து ஜராஸந்தன் மிகவும் கோபமடைந்து யுத்தத்திற்கு வந்தான்.

शङ्खचक्रधरः श्रीमान् शाङ्र्गपाणिः सनातनः ।
शत्रुं विद्रावयामास शङ्खनादेन लीलया ॥१६॥

16. சங்குசக்ரதரனும், சார்ங்கபாணியுமான ஸ்ரீனிவாஸனான க்ருஷ்ணன் விளையாட்டாக யுத்தம் செய்து சத்ருவை சங்கமுழக்கத்தினால் விரட்டிவிட்டான்.

एतस्मिन्नन्तरे कश्चिन्म्लेच्छराजो महाबलः ।
रुरोध निजसैन्येन परितो मधुरापुरीम् ॥१७॥

17. இதற்கிடையில் ஒரு ம்லேச்சராஜன் தனது படையுடன் வந்து மதுராபுரியை முற்றுகையிட்டான்.

सद्य एव जगन्नाथस्त्वविचिन्त्यपराक्रमः ।
विश्वकर्माणमाहूय कारयामास वै पुरीम् ॥१८॥

18. எல்லையற்ற பராக்ரமமுடைய ஜகன்னாதன் உடனே விச்வகர்மாவை கூப்பிட்டு த்வாரகாபுரியை நிர்மாணம் செய்வித்தான்.

समुद्रमध्ये विपुलां नानाशिल्पमनोरमाम् ।
द्वारकां निर्ममे सोपि विचित्रभवनान्विताम् ॥१९॥

19. ஸமுத்திரத்தின் மத்தியில் பல சில்பவேலைகளுடன்கூடிய மனத்திற்கு ரம்யமான பலவிதமான விசித்ரமான மாளிகைகள் நிரம்பிய துவாரகாபுரியை நிர்மாணம் செய்தான்.

समुद्रपरिखां दिव्यां सालप्राकारसंयुताम् ।
सुरैरपि सुदुर्धर्षां महाप्रासादशोभिताम् ॥२०॥

सुवर्णकलशोपेतां गरुडध्वजशोभिताम् ।
नवरत्नमयैर्दिव्यैर्विमानैरभिभूषिताम् ॥२१॥
विचित्रमण्टपैश्चापि क्रीडोद्यानैः समन्विताम् ।
सभाचत्वररथ्याढ्यां राजवीथीपरिष्कृताम् ॥२२॥
प्रविश्य द्वारकां पुण्यां पालयामास यादवान् ।
यवनं घातयामास मुचुकुन्देन चाच्युतः ॥२३॥

20 23 .கடலையே அகழியாகக் கொண்டதும், உயர்ந்த மதிள் சுவர் உள்ளதும் தேவர்களாலும் ப்ரவேசிக்க முடியாத கோட்டையும், தங்கக்கவசமும் கருடக்கொடியும் நவரத்னமயமான விமானங்களும் உள்ளதும், விசித்ரமான மண்டபங்களும், ஸபைகளும், நாற்சந்துகளும் ராஜவீதிகளும், உத்யானவனங்களும், ரதவீதிகளும் உள்ளதுமான துவாரகையில் ப்ரவேசித்து யாதவர்களை பரிபாலித்து வந்தான் பகவான். காலயவனன் என்ற ம்லேச்சனையும் முசுகுந்தன் என்ற யோகீச்வரரால் நாசமாகும்படி ஸங்கல்பித்தான்.

मुचुकुन्दोऽपि राजेन्द्रः कृष्णस्य परमात्मनः ।
दर्शनाज्जन्मसाफल्यं प्राप हन्त यदृच्छया ॥२४॥

24. எதிர்பாராமல் யோகீச்வரரான முசுகுந்தனும் பகவானின் தரிசனத்தைப் பெற்று பிறவிஎடுத்த பலன் பெற்றான்.

भगवानपि गोविन्दो द्वारकायां सुखं वसन् ।
पालयामास निखिलं जगद्दैत्यभयाकुलम् ॥२५॥

25. பகவான் த்வாரகையில் சுகமாக வஸித்துக்கொண்டு உலகை பரிபாலித்து வந்தான். உலகில் அஸுரபயத்தை நீக்கினான்.

सर्वेपि लोकपालाश्च शक्रवैश्रवणादयः ।
ऐश्वर्यमर्पयामासुस्तस्मै तद्दत्तमेव हि ॥२६॥

26. இந்திரன், குபேரன்முதலிய லோகபாலகர்கள் முன்பு தங்களுக்கு பகவான் தந்த ஐச்வர்யத்தை இப்போது

பகவானுக்கே ஸமர்ப்பித்தனர்.

भगवान् बलभद्रश्च चिकीर्षल्लोकसङ्ग्रहम् ।
रेवतीमुपयेमे च वसुदेवप्रचोदितः ॥२७॥

27. பகவானாகிய பலராமனும் லோகக்ஷேமார்த்தமாக வஸுதேவரின் நியமனத்தால் ரேவதி என்ற பெண்ணைத் திருமணம் செய்து கொண்டார்.

एवञ्च यादवाः सर्वे प्रेमवात्सल्यसंयुताः ।
द्रष्टुकामा भवन्ति स्म विवाहं वनमालिनः ॥२८॥

28. ப்ரேமையும் வாத்ஸல்யமும்கொண்ட யாதவர்யாவரும் வனமாலியான கண்ணனின் விவாஹத்தையும்ஆர்வத்துடன் எதிர்பார்த்திருந்தனர்.

कन्यां विदर्भराजस्य सुकुमारीं स्वयंवरे ।
स्वयं जहार भगवान् वैनतेयः सुधामिव ॥२९॥

29. கருடன் அமுதத்தைக் கொண்டு வந்ததுபோல் சுயம்வரத்தில் தானேசென்று விதர்ப ராஜகுமாரியான ருக்மிணியை பகவான் கொண்டுவந்தான்.

किमत्र चित्रं कृष्णस्य सर्वशक्तस्य चेष्टिते ।
स्ववशे वर्तते यस्य सेश्वरं सकलं जगत् ॥३०॥

30. உலகும் உலகத்தலைவர்களான ப்ரும்மாதிகளும் எவன் வசத்தில் இருக்கின்றனரோ அவன் செய்த லீலையில் எது நடக்காதது?

इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये द्वारकाकाण्डे द्वारकागमनं नाम प्रथमोऽध्यायः ॥१॥

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிஸ்வாமிகள் அருளிச்செய்த ஸ்ரீப்ருந்தாவனமாஹாத்ம்யம் த்வாரகாகாண்டத்தில் முதல் அத்யாயம் முற்றும்.**

# अथ द्वितीयोऽध्यायः

## இரண்டாம் அத்யாயம்

### भागवता ऊचुः

### பாகவதர்கள்

विवाहं रुक्मिणीदेव्या वक्तुमर्हसि सद्गुरो ।
कथं जहार भगवान् भीष्मकन्यां स्वयंवरे ॥१॥

1. ஸத்குரோ! ருக்மிணிதேவியின் விவாஹத்தை எங்களுக்குச் சொல்வீராக பகவான் சுயம்வரத்தில் பீஷ்மககுமாரியை எப்படிக் கொணர்ந்தான்?

पञ्चेन्द्रियैः पीड्यमानमस्माकं धिषणामिव ।
आनिनाय पदं स्वीयं रुक्मिणीं भ्रातृपीडिताम् ॥२॥

2. ஐந்து புலன்களால் பீடிக்கப்பட்ட புத்தியைபோல் ஐந்து ஸஹோதரர்களால் பீடிக்கப்பட்ட ருக்மிணியைத் தன்னிடம் சேர்த்துக்கொண்டான்.

भगवत्पादसेवायामस्त्येव प्रतिबन्धकः ।
विनाशयति तं देवो भक्तानां कृपया खलु ॥३॥

3. பகவானுடைய பாதஸேவைக்கு பலஇடையூறுகள் இருக்கின்றன. அவைகளை நீக்கி பக்தர்களை பகவான் க்ருபையால் தன்னிடம் சேர்த்துக் கொள்கிறான்.

एवमेव कृपासिन्धुराजहार च रुक्मिणीम् ।
निश्चितां शिशुपालाय भ्रातृभिः कृष्णनिन्दकैः ॥४॥

4. இவ்வாறுதான் கண்ணனை நிந்தை செய்யும் ருக்மிமுதலிய சகோதரர்களால் சிசுபாலனுக்காக நிச்சயம் செய்துவைத்துள்ள ருக்மிணியை க்ருபாஸிந்துவான பகவான் கொண்டுவந்து விட்டான்.

इदं हि पुण्यमाख्यानं माधवस्य श्रियःपतेः ।
विस्तराच्छ्रोतुमिच्छामस्तन्नो वद जगद्गुरो ॥५॥

5. ஜகத்குருவே! இந்தப் புண்ணியமான உபாக்யானத்தை நாங்கள் கேட்க விரும்புகிறோம். அதை விஸ்தாரமாகச் சொல்வீராக.

श्रीसद्गुरुरुवाच
ஸத்குரு

विदर्भदेशे विमले सर्वसंपत्समन्विते ।
भीष्मको नाम राजाऽऽसीद्सर्वसद्गुणसंयुतः ॥६॥

6. செல்வம் கொழிக்கும் விதர்பதேசத்தில் ஸகலகுணங்களும் பொருந்திய பீஷ்மகர் என்ற அரசர் இருந்து வந்தார்.

तस्य पञ्चाऽभवन्पुत्रास्तेषां रुक्मी तु पूर्वजः ।
शिशुपालसखः सोपि कृष्णभक्तिपराङ्मुखः ॥७॥

7. அவருக்கு ஐந்து பிள்ளைகள். அவர்களுள் ருக்மி மூத்தவன். அவன் சிசுபாலனின் நண்பன். எப்போதும் கண்ணனை நிந்தை செய்வான்.

रुक्मिणी नाम कन्याऽऽसीद्भीष्मकस्य महात्मनः ।
अंशभूतां जगन्मातुर्यामाहुस्तत्त्वदर्शिनः ॥८॥

8. மஹாத்மாவான பீஷ்மகருக்கு ருக்மிணி என்ற கன்னிகையும் இருந்தாள். அவளை ஜகன்மாதாவான லக்ஷ்மிதேவியின் அவதாரம் என்று பெரியோர்கள் கூறுகின்றனர்.

सर्वसौन्दर्यसंयुक्तदिव्यमङ्गलविग्रहः ।
मानुषं रूपमास्थाय साक्षाल्लक्ष्मीर्हि राजते ॥९॥

9. ஸர்வஸௌந்தர்யமும் பூர்ணமான திவ்யமங்கள விக்ரஹமுள்ள ஸாக்ஷாத் லக்ஷ்மிதேவியே மனிதரூபத்தில் ப்ரகாஸித்தாள்.

बाल्यादाकर्ण्य कृष्णस्य माहात्म्यं नारदेन तु ।

तमेव हि पतिं प्राप्तुं भैष्म्यासीत्कृतनिश्चया ॥१०॥

10. பால்யம்முதற்கொண்டு நாரதர்மூலமாக க்ருஷ்ண மாஹாத்மியத்தைக் கேட்டு ருக்மிணி க்ருஷ்ணனையே தன் கணவனாக அடைய நிச்சயம் செய்துகொண்டாள்.

भगवानपि रुक्मिण्या रूपशीलगुणानपि ।
आकर्ण्य नारदमुखात्तस्यां प्रीतियुतोऽभवत् ॥११॥

11. பகவானும் நாரதர்மூலமாக ருக்மிணியின் குணம், அழகு, சீலம்இவைகளை கேள்விப்பட்டு அவளிடம் ப்ரீதி உள்ளவனாக இருந்தான்

एतस्मिन्नन्तरे रुक्मी वासुदेवस्य शार्ङ्गिणः ।
मानभङ्गं कर्तुमिच्छन् मेने चैद्याय रुक्मिणीम् ॥१२॥

12. இதற்க்கிடையில் ருக்மியோ கண்ணனை மானபங்கப் படுத்தவேண்டி ருக்மிணியை சிசுபாலனுக்குக் கொடுக்கத் திட்டமிட்டான்.

भैष्मी तु प्रेष्ठविरहात् कृशाङ्गी मलिनाऽभवत् ।
सान्त्वयामास तां भीष्मो घटयंस्तत्स्वयंवरम् ॥१३॥

13. ருக்மிணி தனது ப்ரியனின் விரஹத்தினால் எப்போதும் கண்ணீர் விட்டுக்கொண்டு இளைத்தவளாக இருந்தாள். பீஷ்மகராஜன் அவளை கண்ணனுக்கே தருவதாகச் சொல்லி தேற்றினார்.

स्वयंवरेपि गोविन्दमीर्ष्यया भीष्मकात्मजः ।
नैवानिनाय रुक्मी तु शिशुपालवशङ्गतः ॥१४॥

14. சுயம்வரம் ஏற்பாடு செய்தார். ஆனால் சிசுபாலன் புத்தியை கேட்டு ருக்மி அந்த சுயம்வரத்திற்க்கு கண்ணனை அழைக்கவே இல்லை.

विज्ञाय रुक्मिणी तस्य विद्वेषं स्वसखीमुखात् ।
प्रपेदे शरणं कृष्णमन्यस्पर्शभयेन हि ॥१५॥

15. தன் தோழியின்மூலமாக இதை அறிந்த ருக்மிணி வேறு வரனை விரும்பாது கண்ணனையே சரணடைந்தாள்.

प्रेषयामास कृष्णाय दूतं कञ्चिद्द्विजोत्तमम् ।
रुक्मिणी प्रेमभावज्ञमिङ्गितज्ञं महामतिम् ॥१६॥

16. ப்ரேமபாவமும் இங்கிதமும் தெரிந்த புத்திசாலியான ஒரு ப்ராம்மணனை ருக்மிணி கண்ணனிடம் தூது அனுப்பினாள்.

पत्रमादाय विप्रोपि द्वारकानगरीं गतः ।
कृष्णाय प्रददौ तूर्णं संप्रहृष्टमनास्तथा ॥१७॥

17. அந்த ப்ராம்மணனும் ருக்மிணி தந்த பத்ரத்தை எடுத்துக்கொண்டு விரைவில் சென்று கண்ணனைக் கண்டு மனமகிழ்ச்சியுடன் அதைக் கண்ணனிடம் கொடுத்தார்.

श्रुत्वा तव गुणान् दिव्यान् कीर्तितान्नारदादिभिः ।
त्वामेव पतिभावेन भजामि यदुनन्दन ॥१८॥

18. புவனஸுந்தர! நாரதர்மூலமாக உமது கல்யாண குணங்களைக் கேட்டு உம்மையே கணவனாக வரித்து நான் சரணடைகிறேன்.

नूनं जानासि सर्वज्ञ हृदयं मम निर्मलम् ।
तथापि प्रेमतापेन पत्रमेतत्समर्पितम् ॥१९॥

19, ஸர்வக்ஞ்ஞான உமக்கு என் தூய உள்ளம் தெரியும். இருந்தாலும் ப்ரேமதாபத்தினால் இந்த பத்ரம் அனுப்பப் பட்டது.

विद्राव्य शाङ्र्गनादेन शिशुपालमुखानरीन् ।
स्वभागं नय मां शीघ्रमात्मनश्चरणान्तिकम् ॥२०॥

20. சார்ங்கவில்லின் நாணொலியால் சிசுபாலன்முதலிய விரோதிகளை விரட்டிவிட்டு உமது பாகத்தை நீர் கைப்பற்றுவீராக.

इत्येवं लिखितं देव्या स्वयं भीष्मककन्यया ।

पुनः पुनः पठन् कृष्णः संप्राप परमां मुदम् ॥२१॥

21. இவ்வாறு ருக்மிணிதேவியால் எழுதப்பட்ட கடிதத்தை பகவான் திருப்பித்திருப்பிப் படித்து மகிழ்ந்தான்.

परेद्युस्त्वरया देवो रथमारुह्य माधवः ।
कुण्डिनं नगरं प्राप चतुरङ्गबलान्वितः ॥२२॥

22. மறுநாள் பகவான் சதுரங்கசேனையுடன் தேரில் ஏறி வெகுவேகமாக குண்டினநகரம் வந்து சேர்ந்தான்.

तत्रापि नागरैः सर्वैः कृष्णदर्शनलालसैः ।
भीष्मकेनापि सानन्दं मुकुन्दः पूजितोऽभवत् ॥२३॥

23. அங்கு எல்லா நகரமக்களாலும், பீஷ்மகராஜனாலும் பகவான் வரவேற்கப்பட்டு உபசரிக்கப்பட்டான்.

श्रीकृष्णागमने शङ्कां प्राप्य सर्वे नरेश्वराः ।
शिशुपालं समाश्रित्य तिष्ठन्ति स्म रणोत्सुकाः ॥२४॥

24. கண்ணன் வந்ததை அறிந்து சங்கைகொண்ட சிசுபாலனைச் சேர்ந்த எல்லா அரசர்களும் யுத்தத்திற்குத் தயாரானார்கள்.

त्रिविक्रमोपि भगवानविचिन्त्यपराक्रमः ।
जहार भीष्मकसुतां सङ्केतस्थानमागताम् ॥२५॥

25. உலகை அளக்கும் பகவானா இவர்களைக் கண்டு பயப்படுவான்? குறிப்பிட்ட இடம் வந்ததும் ருக்மிணியை பகவான் கவர்ந்து கொண்டான்.

आरोप्य स्यन्दनं भैष्मीं प्रतस्थे द्वारकां हरिः ।
परिभूय नृपान् सर्वान् शाङ्र्गचापच्युतैः शरैः ॥२६॥

26. சார்ங்கம் என்னும் வில்லிலிருந்து கிளம்பிய பாணங்களால் அரசர்களை விரட்டி அடித்து ருக்மிணியைத் தேரில் ஏற்றிக்கொண்டு பகவான் துவாரகை சென்றான்.

उत्सवश्च महानासीद्द्वारकायां विशेषतः ।

प्रतिगेहं प्रतिजनं परमानन्दवर्धनः ॥२७॥

27. துவாரகையில் விசேஷமாக கல்யாண உத்ஸவம் நடைபெற்றது. ஒவ்வொரு வீட்டிலும் ஒவ்வொரு மக்களும் இந்த உத்ஸவத்தைக் கொண்டாடினர்.

द्वारकानगरीमध्ये सहस्रस्तम्भमण्टपे ।
सर्वयादवसंसेव्ये सुरदुन्दुभिनादिते ॥२८॥

दिव्यपुष्पसमाकीर्णे श्रुतिघोषपवित्रिते ।
नरनारीगणानन्दे नानासंभारसंभृते ॥२९॥

रुक्मिणीकृष्णयोश्चक्रे शुभं वैवाहिकं विधिम् ।
परमानन्दसंयुक्तो गर्गाचार्यो महामुनिः ॥३०॥

28-30 துவாரகாநகரத்தின் மத்தியில் ஸகலயாதவர்களும் கூடியிருக்க, ஆயிரங்கால் மண்டபத்தில் தேவதுந்துபி முழங்க, மலர்மாரி பொழிய, வேதகோஷம் ஒலிக்க, நரர்களும் நாரிகளும் மகிழ்ச்சியுடன்கூட பல மங்களத்ரவ்யங்கள் நிரம்பிய கல்யாண வேதிகையில் ருக்மிணிக்கும் க்ருஷ்ணனுக்கும் விதிப்படி கர்காசாரியர் திருக்கல்யாணம் நடத்திவைத்தார்.

रुक्मिण्या सहितं कृष्णं परिपूर्णमनोरथम् ।
विलोक्य परमं हर्षं प्रापुः सर्वेपि यादवाः ॥३१॥

31. ருக்மிணியுடன்கூடி பரிபூர்ணமனோரதனாய் இருக்கும் க்ருஷ்ணனைக்கண்டு ஸகலயாதவர்களும் மகிழ்வடைந்தனர்.

परमं मङ्गलं पुण्यं चरितं रुक्मिणीपतेः ।
पठतां शृण्वताञ्चापि परमानन्दवर्धनम् ॥३२॥

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये द्वारकाकाण्डे रुक्मिणीविवाहो नाम द्वितीयोऽध्यायः ॥२॥*

32. இந்த ருக்மிணிபதியான க்ருஷ்ணனின் சரித்ரம் பரம

மங்களமானது. படிப்பவர்களுக்கும், கேட்பவர்களுக்கும் பரமானந்தம் தருவதாகும்.

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமி ஸ்வாமிகள் அருளிச்செய்த ப்ருந்தாவன மாஹாத்மியத்தில் துவாரகாகாண்டத்தில் ருக்மிணிகல்யாணம் என்ற இரண்டாம் அத்யாயம்.**

# अथ तृतीयोऽध्यायः

## மூன்றாம் அத்யாயம்

### भागवता ऊचुः

### பாகவதர்கள்

सत्यभामादिदेवीनामुद्वाहं परमाद्भुतम् ।
सांप्रतं श्रोतुमिच्छामस्त्वन्मुखाद्गुरुपुङ्गव ॥१॥

1. குருச்ரேஷ்டரே! உமது முகத்தினால் சத்யபாமாமுதலிய தேவிகளின் பரம அத்புதமான விவாஹத்தையும் கேட்க விரும்புகிறோம்.

वासुदेवो द्वारवत्यां श्रीवने नन्दनन्दनः ।
एवं भैष्मी द्वारवत्यां राधिका श्रीवने किल ॥२॥

2. துவாரகையின் ப்ரபு வாஸுதேவன். ப்ருந்தாவனத்தின் ப்ரபு நந்தநந்தனன். அவ்வாறே துவாரகையின் மஹாராணி ருக்மிணி. ப்ருந்தாவன மஹாராணி ராதையன்றோ!

रुक्मिणीराधयोर्भेदं यः पश्यति विमूढधीः ।
स करोति मुरारातेरप्रीतिं परमां ननु ॥३॥

3. ருக்மிணி ராதை இருவருக்கும் எந்த மூடன் பேதம் பார்க்கிறானோ அவன் க்ருஷ்ணனுக்கு அப்ரீதியை செய்தவனாவான்.

हरेः प्रियतमा एव सत्यभामादयः स्त्रियः ।
यथा गोकुलसुन्दर्यः सख्यस्तु ललितादयः ॥४॥

4. லலிதாமுதலிய கோபிகைகளைப்போல் ஸத்யபாமா முதலியவர்களும் ஸ்ரீக்ருஷ்ணனுக்கு ப்ரியமான தேவிகளன்றோ!

आसां मधुरभावेन श्रीकृष्णं पुरुषोत्तमम् ।
भजतीनां सदा प्रेम्णा भाग्यं वर्णय सद्गुरो ॥५॥

5. ஸத்குரோ! புருஷோத்தமனான க்ருஷ்ணனை மதுர பாவத்துடன் பஜிக்கும் இவர்களின் பாக்யத்தை வர்ணிப்பீராக.

**श्रीसद्गुरुरुवाच**

**ஸ்ரீஸத்குரு**

सत्राजित् सूर्यभक्तस्तु तस्यैवानुग्रहेण च ।
स्यमन्तकं मणिं लब्ध्वा नितरां गर्वितोऽभवत् ॥६॥

6. ஸூர்யபக்தனான ஸத்ராஜித் ஸூர்யனின் அனுக்ரஹத்தினால் ஸ்யமந்தகமணியை அடைந்து கர்வம் பிடித்திருந்தான்.

चिन्तयन् मङ्गलं तस्य देशस्य च जनार्दनः ।
ययाचे तं मणिं राज्ञे स्वर्णभारफलप्रदम् ॥७॥

7. அந்த மணி ஒரு நாளைக்கு எட்டு சேர் தங்கம் தருவதாகும். எனவே அவனுடைய நலனுக்காகவும், இராஜ்ஜியத்தின் நன்மைக்காகவும் அந்த மணியை பகவான் தன்னிடமிருக்கட்டும் என்று யாசித்தான்.

साक्षाच्छ्रीरुक्मिणीशेन कौस्तुभाञ्चितवक्षसा ।
याचितोपि ददौ नैव सत्राजिद्धन्त दुर्भगः ॥८॥

8. கௌஸ்துபமணியை அணிந்தவனும், ருக்மிணி காந்தனுமான ஸாக்ஷாத் க்ருஷ்ணனாலேயே கேட்கப்பட்டும் துர்பாக்ய வானான அவன் அந்த மணியைத் தர மறுத்துவிட்டான்.

प्रसेनस्तं मणिं धृत्वा भ्रात्रा दत्तं वनङ्गतः ।
हतो जाम्बवता तत्र मणिहेतोर्महात्मना ॥९॥

9. அவன் தம்பி ப்ரஸேனன் ஸ்யமந்தகத்தை அணிந்து காட்டுக்கு வேட்டையாடப்போயிருக்கையில் மஹாபலசாலியான ஜாம்பவான் அவனைக் கொன்றுவிட்டு மணியைக் கைப்பற்றினான்.

वृत्तमेतदविज्ञाय सत्राजिद्देवकीसुतम् ।
शङ्कमानो वृथा निन्दां चकार निजबान्धवैः ॥१०॥

10. இவ்விஷயமறியாத ஸத்ராஜித்து மணியை க்ருஷ்ணன்தான் எடுத்திருப்பான் என்று தனது பந்துக்களுடன் க்ருஷ்ணனை நிந்தை செய்யலானான்.

भगवानपि सर्वात्मा मणिं जाम्बवता हृतम् ।
विज्ञाय तद्गुहां प्राप लोकनिन्दाभयात्प्रभुः ॥११॥

11. தனக்கு ஏற்பட்ட அபவாதத்தை நீக்கவேண்டி எல்லாமறிந்த பகவானும் ஜாம்பவானின் குகைக்கு வந்து சேர்ந்தான்.

तत्र युद्धमभूत्तेन मणिहेतोर्गुहालये ।
नष्टवीर्यो ऋक्षराजः प्रपेदे शरणं हरिम् ॥१२॥

12. மணியின் காரணமாக ஜாம்பவானுக்கும் பகவானுக்கும் யுத்தம் நேர்ந்தது. தோல்வியடைந்த ஜாம்பவான் பகவானை சரணமடைந்தான்.

तमेव वासुदेवञ्च विज्ञाय रघुपुङ्गवम् ।
प्रददौ परमप्रीतो मणिञ्च स्वसुतां तथा ॥१३॥

13. அந்த வாஸுதேவனையே தனது இஷ்டதெய்வமான ராமபிரானாக அறிந்துகொண்ட ஜாம்பவான் ஸ்யமந்தக மணியையும், தனது பெண்ணான ஜாம்பவதியையும் கண்ணனுக்குக் கொடுத்தான்.

जाम्बवत्यासमं कृष्णो मणिं गृह्णन् स्यमन्तकम् ।
प्रहृष्टो द्वारकां प्राप यादवानन्दवर्धनः ॥१४॥

14. பகவான் க்ருஷ்ணன் ஜாம்பவதியுடன் ஸ்யமந்தக மணியையும் பெற்றுக்கொண்டு துவாரகை வந்து சேர்ந்தான். யாதவர்கள் ஆனந்தமடைந்தனர்.

सत्राजिते ददौ शौरिः सभायां तु स्यमन्तकम् ।
मिथ्यापवादकारी स प्राप लज्जां भयं तथा ॥१५॥

15. ஸத்ராஜித்தை ஸபைக்கு அழைத்து அந்த ஸ்யமந்தகமணியை பகவான் அவனிடமே தந்தான். வீண் அபவாதத்தை கிளப்பிவிட்ட அவன் வெட்கத்தையும் பயத்தையுமடைந்தான்.

स्नेहभङ्गभयात्सद्यः सत्राजिच्छौरये सुताम् ।
प्रददौ सत्यभामाञ्च कृष्णप्रेमपरायणाम् ॥१६॥

16. இவ்வாறு ஸ்னேஹபங்கமேற்பட்டதே என்று ஸத்ராஜித்து க்ருஷ்ணபக்தியுள்ள தனது பெண் ஸத்யபாமாவை கண்ணனுக்கே தந்துவிட்டான்.

कोसलाधिपतेः पुत्रीं सत्यां सर्वाङ्गसुन्दरीम् ।
उपयेमे वीर्यशुल्काच्छमयन् वृषसप्तकम् ॥१७॥

17. கோஸலாதிபதியின் பெண்ணான ஸத்யா என்பவளை பகவான் பந்தயத்தில் ஏழு காளைகளை அடக்கி, கல்யாணம் செய்துகொண்டான்.

अर्जुनेन चरन् कृष्णो रम्ये सूर्यसुतातटे ।
तपश्चरन्तीं कालिन्दीमुपलेभे शुभव्रताम् ॥१८॥

तथैव गृहमानीय युधिष्ठिरनिदेशतः ।
महासभायां सानन्दमुपयेमे यथाविधि ॥१९॥

18,19. யமுனைக்கரையில் அர்ஜுனனுடன் வேட்டையாட வரும்போது க்ருஷ்ணன் காளிந்தி என்ற கன்னிகையைக் கண்டு விசாரித்து, அவள் தன்னை அடைவதற்காக தவம் செய்வதறிந்து அவளைக் கூட்டி வந்து யுதிஷ்டிரரின் நியமனத்தால் மஹாஸபையில் ஆனந்தமாக விவாஹம் செய்துகொண்டான்.

विन्दानुविन्दसंरुद्धामरविन्दविलोचनः ।
स्वयंवरसभां गत्वा मित्रविन्दां जहार च ॥२०॥

आनीय द्वारकां देवीं सुहृन्मण्डलमध्यगः ।
उपयेमे यथाशास्त्रं वसुदेवनिदेशतः ॥२१॥

20,21. தாமரைக்கண்ணன் விந்தன், அனுவிந்தன் என்ற இரண்டு ஸஹோதரர்களாலும் அடக்கி வைக்கப்பட்டிருந்த மித்ரவிந்தாவை சுயம்வரத்தில் சென்று, கொண்டுவந்து துவாரகையில் வஸுதேவரின் நியமனத்தால் பந்துக்களின் மத்தியில் விவாஹம் செய்துகொண்டான்.

सुताञ्च मद्राधिपतेः स्वयंवरसभां गतः ।
लक्ष्मणां लक्षणैर्युक्तां लीलयाऽपजहार च ॥२२॥

22. பத்ரதேசத்து அரசனின் புதல்வியான நல்ல லக்ஷணமுள்ள லக்ஷ்மணாவை சுயம்வரத்திலிருந்து, கொண்டுவந்து கல்யாணம் செய்துகொண்டான்.

भद्राञ्च भ्रातृभिर्दत्तां सुतामेव पितृष्वसुः ।
उपयेमे द्वारकायां गर्गाचार्यनिदेशतः ॥२३॥

23. ஸகோதரர்களால் தரப்பட்ட கேகயராஜகுமாரியான பத்ராவையும் கர்காசார்யர் சொற்படி விவாஹம் செய்து கொண்டான்.

भैष्मी जाम्बवती भामा सत्या भद्रा च लक्ष्मणा ।
कालिन्दी मित्रविन्दा च महिष्यस्त्वष्टधा हरेः ॥२४॥

24. ருக்மிணி, ஸத்யபாமா, ஜாம்பவதி, ஸத்யா, பத்ரா, லக்ஷ்மணா, காளிந்தி, மித்ரவிந்தா என்று கண்ணபிரானுக்கு எட்டு மஹிஷிகள்.

एवं षोडशसाहस्त्रं सुन्दरीणाञ्च योषिताम् ।
आनिनाय द्वारवतीं निहत्य नरकासुरम् ॥२५॥

25. மேலும் நரகாஸுரனைக் கொன்று பதினாறாயிரத்து நூறு கன்னிகைகளை பகவான் மீட்டு துவாரகைக்குக் கொண்டு வந்தான்.

पाणिञ्जग्राह तासाञ्च तावद्रूपधरो हरिः ।
योगेश्वरस्तु युगपत्तत्तत्पितृनिदेशतः ॥२६॥

*26. யோகேச்வரனான க்ருஷ்ணன் அவரவர் தந்தை சொற்படி ஒரே முஹூர்த்தத்தில் அவர்களை பாணிக்ரஹணம் செய்துகொண்டான்.*

नरकेन हृतं पूर्वं कुण्डलं प्रददौ तथा ।
अदित्यै देवमात्रे च कृपयैव दिवङ्गतः ॥२७॥

*27. நரகனால் அபஹரிக்கப்பட்டிருந்த குண்டலத்தை ஸ்வர்கம்சென்று தேவமாதாவான அதிதிக்குத் தந்தான்.*

निर्जित्य च सुरान् सर्वान् सत्यभामाप्रचोदितः ।
पारिजाततरुं हृत्वा द्वारकां प्रविवेश च ॥२८॥

*28. ஸத்யபாமையால் தூண்டப்பட்டு எல்லா தேவர்களையும் வென்று பாரிஜாதமரத்தைக் கொணர்ந்து துவாரகை வந்து சேர்ந்தான்.*

स्थापयामास तं वृक्षं सत्यभामागृहे प्रभुः ।
यन्निमित्तमभूद्वैरं रुक्मिणीसत्यभामयोः ॥२९॥

*29. துவாரகையில் ஸத்யபாமாவின் மாளிகையில் பாரிஜாதமரத்தை நட்டுவிட்டான். அதன் காரணமாக ருக்மிணிக்கும் ஸத்யபாமாவிற்கும் கலஹம் வந்தது ப்ரஸித்தம்.*

भगवान् सान्त्वयामास कलहं प्रणयोद्भवम् ।
मध्यस्थं नारदं कृत्वा लीलया जगतां गुरुः ॥३०॥

*30. ஜகத்குருவான பகவான் அந்த கலஹத்தை மத்யஸ்தராய் நாரதரை வைத்து விளையாட்டாகவே ஸமாதானப்படுத்தி விட்டான்.*

एवं मानुषवेषेण मोहयन् पामरान्नरान् ।
वसति स्म द्वारवत्यां गार्हस्थ्यं धर्ममाचरन् ॥३१॥

*31. இவ்வாறு ச்யாமஸுந்தரன் மனுஷ்யனைப்போல்*

பாமரமக்களை மோஹிக்கச் செய்துகொண்டு துவாரகையில் வஸித்துக்கொண்டு தர்ம பரிபாலனம் செய்துவந்தான்.

इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये द्वारकाकाण्डे सत्यभामादिविवाहो नाम तृतीयोऽध्यायः ॥३॥

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிஸ்வாமிகள் அருளிச்செய்த ஸ்ரீப்ருந்தாவன மஹாத்மியத்தில் துவாரகாகாண்டத்தில் மூன்றாமத்யாயம்**

## अथ चतुर्थोऽध्यायः

## நான்காமத்யாயம்

### श्रीसद्गुरुरुवाच

### ஸ்ரீஸத்குரு

एवं भूलोकवैकुण्ठे पुण्ये द्वारवतीपुरे ।
विरेजे भगवान् कृष्णः सुरासुरनमस्कृतः ॥१॥

1. இவ்வாறு பூலோகவைகுண்டமான புண்யமான துவாரகாபுரியில் பகவான் க்ருஷ்ணன் தேவாஸுரர்களால் வணங்கப்பட்டவனாய் ப்ரகாசித்தான்.

हेमरत्नमयैर्दिव्यैर्विमानैरभिशोभिते ।
सुवर्णकलशोपेते गरुडध्वजसंयुते ॥२॥

महाप्रासादमहिते स्फटिकस्तम्भशोभिते ।
दिव्यरत्नस्थले नानामुक्तासरविराजिते ॥३॥

मणिसोपानसंयुक्ते जालरन्ध्रपरिष्कृते ।
पुञ्जिकापुञ्जसंयुक्ते रत्नदीपप्रकाशिते ॥४॥

पारिजातवनामोदे नानावृक्षसमावृते ।
लतागृहपरिव्याप्ते क्रीडोद्यानसमन्विते ॥५॥

हंससारससंयुक्ते पद्माकरपरिष्कृते ।

नानामण्टपसंयुक्ते शुककोकिलकूजिते ॥६॥
दासदासीगणव्याप्ते सप्तकक्ष्यासमन्विते ।
अलङ्कृतमहाद्वारे द्वारपालाभिरक्षिते ॥७॥
स्वगृहे यादवेन्द्रोऽयं वासुदेवः सनातनः ।
निषण्णो रत्नडोलायां रुक्मिण्या रमते प्रभुः ॥८॥

2-8. ரத்னங்கள் பதித்த ஸுவர்ணவிமானங்களால் சோபிக்கின்றதும், கருடக்கொடியுடன்கூடி ஸுவர்ண கலசங்கள் உள்ளதும், திவ்யமான ரத்னமயமான ஸ்தலங்கள் உள்ளதும், பலவித முத்துஸரங்கள் தொங்குகின்றதும், மணிமயமான படிக்கட்டுக்கள் உள்ளதும் பெரிய ஜன்னல்கள் உள்ளதும். பலவித சில்பவேலைப்பாடுகள் செய்யப்பட்டதும், ரத்னதீபங்களால் ப்ரகாசமானதும் பாரிஜாதவனத்தின் ஸுகந்தத்துடன் கூடியதும், பலவித வ்ருக்ஷங்கள் உடைய தோட்டமுடையதும், பல நிகுஞ்ஜங்களால் அழகியதும், விளையாடுவதற்கான உத்யானவனங்களுள்ளதும், ஹம்ஸமும், ஸாரஸமும் நீந்திவிளையாடும் தாமரைக்குளமுள்ளதும், பலவிதமான மண்டபங்களுள்ளதும், கிளியும், குயிலும் கூவுவதும், கைங்கர்யம் செய்யும் தாஸர்களும், தாஸிகளும் சூழ்ந்ததும், ஏழு ப்ராகாரங்கள் உள்ளதும், துவார பாலகர்களால் பரிபாலிக்கப்பட்ட அலங்கரிக்கப்பட்ட பெரிய கோபுரவாசல்கள் உள்ளதுமான தனது மாளிகையில், யாதவர்களுக்கு அரசனும் ஸனாதனமான பரமாத்மாவுமான வாஸுதேவன் ருக்மிணியுடன்கூடி ரத்னமயமான ஊஞ்சலில் அமர்ந்து விளையாடுகிறான்.

दिव्यपीताम्बरधरो हरिचन्दनचर्चितः ।
वनमाली घनश्यामः कस्तूरीतिलकाङ्कितः ॥९॥
सरोजचारुवदनः सर्वाभरणभूषितः ।
रमते रमया साकं साक्षान्मन्मथमन्मथः ॥१०॥

9,10. திவ்யபீதாம்பரதாரியும், ஹரிசந்தனசர்ச்சிதனும், வனமாலையணிந்தவனும், கஸ்தூரிதிலக மணிந்தவனும், நீலமேகச்யாமளனும், ஸர்வாபரணபூஷிதனும், கமலம்போன்ற வதனமுள்ளவனும், ஸாக்ஷாத் மன்மதமன்மதனுமான கண்ணபிரான் லக்ஷ்மீதேவியான ருக்மிணிதேவியுடன் விளையாடுகிறான்.

काचिद्देवी प्रियं कान्तमुपतस्थे जगत्पतिम् ।
पूर्णचन्द्रप्रभं चारु करेणादाय चामरम् ॥११॥

11. ஒரு தேவி ஜகன்னாதனும், தன் நாதனுமான க்ருஷ்ணனின் ஸமீபம் சந்த்ரனைப்போன்ற அழகான சாமரத்தை வீசிக்கொண்டு நிற்கிறாள்.

अन्या काचिन्मुकुन्दस्य भुजयोरपि वक्षसि ।
लिलेप लज्जया युक्ता शीतलं हरिचन्दनम् ॥१२॥

12. மற்றொரு தேவி கண்ணனின் புஜங்களிலும் வக்ஷஸ்தலங்களிலும் சீதளமான பரிமளமான சந்தனம் பூசிவிடுகிறாள்.

देवी काचिन्मुरारातेर्ललाटे विपुले प्रभोः ।
विलिलेप परं प्रेम्णा कस्तूरीतिलकं तथा ॥१३॥

13. மற்றொரு தேவி ப்ரபுவின் விசாலமான நெற்றியில் அன்புடன் கஸ்தூரிதிலகமிட்டு விடுகிறாள்.

केशप्रसाधनञ्चक्रे काचिद्देवी श्रियःपतेः ।
मुकुरे दर्शयामास मुखमन्या मुदान्विता ॥१४॥

14. ஒருவள் ச்ரிய:பதியான கண்ணனின் தலையை வாரிவிடுகிறாள். மற்றொருவள் கண்ணனின் முகத்தைக் கண்ணாடியில் காட்டுகிறாள்.

शर्करामधुरञ्चैलाकेसरादिसुगन्धितम् ।
पायसं प्रददौ काचिद्देवी प्रणयपूरिता ॥१५॥

15. வேறொருதேவி ஏலக்காய் போட்டு சுகந்தமாய்

சர்க்கரைபோட்டு இனிமையாய் காய்ச்சிய பாலை அன்புடன் தருகிறாள்.

पूगीफलसमायुक्तं नागवल्लीदलैर्युतम् ।
कर्पूरचूर्णसंयुक्तं ताम्बूलं प्रददौ च सा ॥१६॥

16. மேலும் அவள் ஸுகந்த பாக்குத்தூளுடனும் கற்பூரசூர்ணத்துடன்கூடிய தாம்பூலத்தைத் தந்தாள்.

आन्दोलं स्पन्दयामासुः सानन्दं राजकन्यकाः ।
वल्लकीं वादयामास रुक्मिणी रुचिरस्मिता ॥१७॥

17. அந்த ராஜகுமாரிகள் ஆனந்தமாக ஊஞ்சலாடினார்கள். அழகிய முகமுடைய ருக்மிணி முறுவலுடன் வீணை வாசித்தாள்.

नानाभावं दर्शयन्ती शृङ्गाररसवर्धिनी ।
चकार नटनं देवी सत्यभामा सुलोचना ॥१८॥

18. அழகிய கண்களுடைய ஸத்யபாமை பலவிதமான பாவத்தைக்காட்டி ச்ருங்காரரஸத்தை வளர்ப்பவளாக நாட்டியம் ஆடினாள்.

एवमन्तःपुरे कृष्णः पूजितो वनितागणैः ।
तारामण्डलमध्यस्थो विरेजे चन्द्रमा यथा ॥१९॥

19. இவ்வாறு நாரீமணிகளால் பூஜிக்கப்பட்ட க்ருஷ்ணன் நக்ஷத்ரமண்டபத்தில் சந்திரன் போல் சோபித்தான்.

तासामालिङ्गनेनैव स्तनकुङ्कुमपङ्किलः ।
चचार चोद्यानवने वैजयन्तीलताधरः ॥२०॥

20. அவர்கள் ஆலிங்கனத்தால் ஸ்தனங்களில் உள்ள குங்குமக்குழம்பு பூசியவனாய் வைஜயந்தி மாலை அணிந்து உத்யானவனத்தில் அவர்களுடன் கண்ணன் ஸஞ்சரித்தான்.

क्वचिल्लतागृहे तत्र प्रियाभिः क्रीडति प्रभुः ।
वसन्तमण्टपे चापि डोलायामभिराजते ॥२१॥

21. தனது ப்ரியைகளுடன் ப்ரபு ஒருஸமயம் வஸந்தமண்டபத்தில் ஊஞ்சலில் ஆடுவான். ஒருஸமயம் லதாக்ருஹத்தில் விளையாடுவான்.

जलक्रीडां करोत्येव सानन्दं कमलालये ।
रेचकैर्जलमादाय सिञ्चन् राजकुमारिकाः ॥२२॥

22. அந்த ராஜகுமாரிகளை பீச்சாங்குழலால் தண்ணீர் அடித்துக்கொண்டு பகவான் தாமரைத் தடாகத்தில் ஜலக்ரீடை செய்வான்.

क्वचिदारुह्य सानन्दं गिरिं रैवतकं हरिः ।
गुहासु रमते तत्र निजपत्नीभिरावृतः ॥२३॥

23. சிலஸமயம் ரைவதமலையின் குகைக்குள் சென்று தனது பட்டமஹிஷிகளுடன் பகவான் விளையாடுகிறான்.

एवं रत्नाकरे चापि क्रीडति श्यामसुन्दरः ।
सानन्दं प्लवमारुह्य रुक्मिण्यादिसमावृतः ॥२४॥

24. அவ்வாறே ருக்மிணிமுதலிய தேவிகளுடன் ச்யாமஸுந்தரன் ஓடத்தில் ஏறி ஸமுத்திரத்தில் சென்று விளையாடுவான்.

एवं निशासु पत्नीभिः सानन्दं परिसेवितः ।
बृन्दावनकथां सर्वां वदति प्रेमपूर्वकम् ॥२५॥

25. இவ்வாறு தனது பட்டமஹிஷிகளுடன் ஆனந்தமாக ஸேவிக்கப்பட்டவனாய் இரவு வேளைகளில் அவர்களுக்கு தனது ப்ருந்தாவனலீலைகளைத் தானே சொல்வான்.

राधायाः प्रेमभावञ्च गोपीनामपि ताः स्त्रियः ।
श्रुत्वा श्रुत्वा परं हर्षं प्रापुरेव हरेर्मुखात् ॥२६॥

26. ராதையுடையவும், கோபிகைகளுடையவும் ப்ரேம பாவங்களைக் கண்ணனே சொல்ல கேட்டுக்கேட்டு அந்த தேவிகள் பெருமகிழ்ச்சி அடைவார்கள்.

यामे तृतीये संप्राप्ते निद्राकुलविलोचनः ।
भैष्मीपर्यङ्कमासाद्य शिश्ये यादवनन्दनः ॥२७॥

27. மூன்றாவது ஜாமத்தில் தூக்கம் வந்துவிட்ட பகவான் ருக்மிணிசயனத்திற்கு வந்து சயனிப்பான்.

परिरभ्य तमीशानं स्तनान्तरगतं प्रभुम् ।
अवाप परमानन्दं जगन्मातापि रुक्मिणी ॥२८॥

28. ஜகன்மாதாவான ருக்மிணியும் ஸர்வேச்வரனை தனது மார்புடன் அணைத்துக்கொண்டு ஆனந்தமாகப் படுத்திருப்பாள்.

मुखं पद्मपलाशाक्षं पद्मगन्धसमन्वितम् ।
पश्यन्ती भीष्मकन्या सा निद्रां न प्राप वै हरेः ॥२९॥

29. பகவான் தூங்கியபிறகு பரமஸுகந்தமானதும் கமலம்போல் மலர்ந்துள்ளதுமான பகவானின் முகத்தையே ருக்மிணி பார்த்திருப்பாளேதவிர இரவு பூராவும் தூங்கமாட்டாள்.

माहात्म्यं चिन्तयन्ती च प्राणनाथस्य रुक्मिणी ।
भाग्यं संस्मृत्य संस्मृत्य निद्रां न प्राप चात्मनः ॥३०॥

30. ருக்மிணிதேவி தனது ப்ராணநாதனின் மாஹாத்மியத்தையும், தனது பாக்யத்தையும் நினைத்து நினைத்து பார்த்துக்கொண்டு இருப்பாளேயன்றி தூங்கவே மாட்டாள்.

जालरन्ध्रप्रविष्टा सा पूर्णचन्द्रप्रभा तदा ।
अनयोर्दिव्यदम्पत्योः प्रददौ परमां मुदम् ॥३१॥

31. ஜன்னல் வழியாக நிலவு வெளிச்சம் இந்த திவ்யதம்பதிகளுக்குப் பரமானந்தத்தைக் கொடுக்கும்.

इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये द्वारकाकाण्डे
अन्तःपुरवर्णनं नाम चतुर्थोऽध्यायः ॥४॥

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிஸ்வாமிகள் அருளிச்செய்த ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில் துவாரகா காண்டத்தில் நான்காமத்யாயம்.**

# अथ पञ्चमोऽध्यायः

## ஐந்தாமத்யாயம்

### श्रीसद्गुरुरुवाच

महामेरुनिभे कृष्णो रुक्मिण्याः स्तनमण्डले ।
शयानः सुखनिद्रोपि कीर्तयामास राधिकाम् ॥१॥

### ஸ்ரீஸத்குரு

*1. மஹாமேருமலைபோல் உன்னதமான ருக்மிணியின் ஸ்தனமண்டலத்தில் படுத்துறங்கும் கண்ணன் "ராதே" என்று சொன்னான்.*

राधे मुदं मे देहीति कीर्तयन्तं प्रियं पतिम् ।
निद्रालसं बोधयन्ती पप्रच्छ परमाङ्गना ॥२॥

*2. " ராதே! முத்தம் தா " என்று சொல்லும் ப்ரியபதியான கண்ணனை எழுப்பி ருக்மிணி இவ்வாறு கேட்டாள்.*

### रुक्मिण्युवाच

शयानो मम पर्यङ्के युक्तोपि सुखनिद्रया ।
संस्मरन् राधिकामेव स्वप्नं प्राप्तोसि माधव ॥३॥

### ஸ்ரீருக்மிணி

*3. மாதவ! தூங்குகின்றீரா! கனவு காணுகின்றீரா? என் பக்கத்தில் படுத்திருந்தபோதிலும் " ராதே" என்கின்றீரே.*

तस्यां ते तादृशं प्रेम जानामि प्राणवल्लभ ।
तथा तामपि जानामि विरहाद्रुदतीं तव ॥४॥

*4. ப்ராணவல்லப! அவளிடம் உமக்கு அவ்வளவு ப்ரேமை என்பதை அறிந்தேன். அவ்வாறே அவளுக்கும் உம்மிடம் அவ்வளவு ப்ரேமை இருக்குமல்லவா?*

का सहेत प्राणनाथ विरहं तव माधव ।

यस्य दर्शनमात्रेण प्राप्यते परमं सुखम् ॥५॥

5. மாதவ! உமது விரஹத்தை யார்தான் தாளமுடியும்? உம்மை தர்சனம் செய்தாலேயே பரமானந்தம் உண்டாகிறதே!

**श्रीभगवानुवाच**

सत्यमेव प्रिये देवि वदसि प्रेमपूर्वकम् ।
रूपान्तरेण त्वामेव पश्यामि ननु राधिकाम् ॥६॥

**ஸ்ரீபகவான்**

6. ப்ரியே! தேவி! நீ சொல்வது உண்மையே. ஆனால் அந்த ராதையே உன் ரூபத்தில் இருப்பதாகக் காண்கிறேன். உன்னைத்தான் " ராதே" என்று கூப்பிட்டேன்.

अक्रूरस्यन्दनं प्राप्ते मयि ता गोकुलस्त्रियः ।
अनुजग्मुः प्रशोचन्त्यो ममैव विरहाक्षमाः ॥७॥

7. நான் அக்ரூரரின் ரதத்தில் ஏறி கிளம்பியதும் கோகுலஸ்த்ரீகள் அலறிக்கொண்டே பின்தொடர்ந்தனர்.

लोकवेदौ न जानन्ति नरकं स्वर्गमेव ताः ।
केवलं मां तोषयन्ति नानाशृङ्गारकेलिभिः ॥८॥

8. அவர்களுக்கு உலகமோ சாஸ்த்திரமோ தெரியாது. பாபமோ புண்யமோ ஸ்வர்கமோ, நரகமோ தெரியாது. அவர்கள் என்னையே பலவித ச்ருங்காரகேளிகைகளால் ஸந்தோஷப்படுத்துவார்கள்.

क्षणमात्रमपि व्यर्थं मम गोपीजनं विना ।
तस्मादहं सदा देवि ध्यायामि यमुनावनम् ॥९॥

9. கோபிகைகளை விட்டுவிட்டு ஒரு கணம் நான் ஜீவிப்பது வீணே. ஆதலால்தான் எப்போதும் ப்ருந்தாவனத்தையே நினைத்துக்கொண்டிருக்கிறேன்.

सर्वसंपत्समृद्धायां द्वारवत्यामहं प्रिये ।
निवसन्नपि सातङ्कं गोकुलं संस्मराम्यहम् ॥१०॥

10. ப்ரியே! செல்வம் கொழிக்கும் துவாரகையில் இருந்தபோதிலும் நான் கோகுலத்தையே நினைக்கிறேன் பார்.

वसुदेवेन सप्रेम जनकेनापि लालितः ।
वात्सल्यप्रेमनिलयं नन्दमेव स्मराम्यहम् ॥११॥

11. அன்புடன் தந்தையான வஸுதேவரால் போஷிக்கப் பட்டிருந்தும்கூட நந்தகோபனையே நினைக்கிறேன். அவர் அன்புக்கும் வாத்ஸல்யத்திற்கும் இருப்பிடமன்றோ!

तथा जनन्या देवक्या परमान्नेन भोजितः ।
इच्छामि गव्यमेवाहं प्रेम्णा दत्तं यशोदया ॥१२॥

12. அவ்வாறே அன்னை தேவகி எனக்கு பரம்மான்னம் போஜனம் செய்விக்கிறாள். ஆயினும் யசோதை போடும் அந்த வெண்ணையையே விரும்புகிறேன்.

एवं त्वयापि सानन्दं परिरब्धोपि रुक्मिणि ।
मधुरप्रेमनिलयां राधामेव स्मराम्यहम् ॥१३॥

13. ருக்மிணி! இவ்வாறுதான் நீயே என்னைக் கட்டித் தழுவி ஸுகப்படுத்தும்போதும்கூட ராதையையே நினைக்கிறேன்.

एवञ्च राजकन्याभिः सत्यभामादिभिः प्रिये ।
तोषितोपि प्रेमभावाद्गोपकन्याः स्मराम्यहम् ॥१४॥

14. ஸத்யபாமைமுதலிய ராஜகுமாரிகளுடன் கூடியிருக்கும் போதிலும் லலிதாமுதலிய கோபகுமாரிகளையே என் மனம் நாடுகிறது.

यदुवीरैः सेवितोपि भूमिपालैरपीतरैः ।
गोपालैः रन्तुमिच्छामि कुर्वन् गोचारणं वने ॥१५॥

15. அரசர்களாலும் யாதவவீரர்களாலும் ஸேவிக்கப்பட்டிருந்த போதிலும் தினமும் ஆயர் சிறுவர்களுடன் ப்ருந்தாவனத்தி லேயே மாடு மேய்க்க விரும்புகிறேன்.

श्रीवने रमते चित्तं सन्ततं मम रुक्मिणि ।

इदं स्वभावजं कर्म मम गोचारणं ननु ॥१६॥

16. என் மனம் ப்ருந்தாவனத்திலேயே ரமிக்கிறது. ருக்மிணி! இது எனக்கு ஸ்வபாவம். மாடுமேய்ப்பது என் தொழில்.

लौकिकैर्वैदिकैरत्र जनैर्नानामताकुलैः ।
पीडितोस्मि द्वारवत्यां शान्तिर्मे न हि रुक्मिणि ॥१७॥

17. ருக்மிணி! இங்கு த்வாரவதிநகரத்தில் பல லௌகீக ஜனங்களாலும், வைதீக ஜனங்களாலும் பீடிக்கப்பட்டு இருக்கிறேன். ஆளுக்குத்தக்கபடி பேசி நல்லபேர் எடுக்க வேண்டும். நிம்மதியில்லை.

किन्तु गोपीजनैस्तत्र गोकुलग्रामवासिभिः ।
केवलं प्रेमभावेन पूजितोस्मि प्रियंवदे ॥१८॥

18. ப்ரியமாகப் பேசுபவளே! ஆனால் கவடுசூதற்ற கோபீ ஜனங்களால் நான் ப்ருந்தாவனத்தில் எப்போதும் பூஜிக்கப் பட்டிருப்பேன்.

कदा द्रक्ष्यामि यमुनां कदा यास्यामि गोकुलम् ।
कदा रंस्यामि सानन्दं गोपीभिर्यमुनावने ॥१९॥

19. எப்போது யமுனையைப் பார்ப்பேன்? எப்போது ப்ருந்தாவனம் போவேன்? எப்போது கோபிகைகளுடன் ஆனந்தமாக விளையாடுவேன்.

नूनं राजमदेनैवं मया गोप्यो हि वञ्चिताः ।
त्यक्तप्राणा भविष्यन्ति नूनं मद्विरहाग्निना ॥२०॥

20. அரசு வந்துவிட்டது என்ற மதத்தினால் கோபிகைகளைக் கைவிட்டு விட்டேனே. அவர்கள் இவ்வளவு நாள் உயிரை விட்டிருப்பார்கள்.

**श्रीसद्गुरुरुवाच**

इत्युक्त्वा रुद्धकण्ठस्तु भगवान् गद्गदस्वरः ।
निरुन्धन् परमं दुःखं तूष्णीमास कृपानिधिः ॥२१॥

### ஸ்ரீஸத்குரு

21. இவ்வாறு ப்ராணகாந்தனால் சொல்லப்பட்ட கோபீஜன ப்ரேமையை கேட்டு ருக்மிணி ஆனந்தக்கண்ணீர் விட்டாள். தனது ப்ராணகாந்தனைப் பார்த்துச் சொல்கிறாள்.

### रुक्मिण्युवाच

एवं गोपीजनप्रेम श्रुत्वा कृष्णेन वर्णितम् ।
उवाच प्राणकान्तं सा बाष्पाकुलविलोचना ॥२२॥
एवं चेत्तर्हि गोविन्द राधिकामपि गोपिकाः ।
आनय द्वारकामेव सानन्दं प्राणवल्लभ ॥२३॥

### ஸ்ரீருக்மிணி

22,23. ப்ராணவல்லப! கோவிந்த! அப்படியானால் ராதிகாவையும் மற்ற கோபிகைகளையும் துவாரகைக்கு அழைத்து வந்துவிடுமே!

अस्माभिः सह गोप्यश्च सानन्दं पादसेवनम् ।
कुर्वन्तु तव गोविन्द ब्रह्मरुद्रादिदुर्लभम् ॥२४॥

24. கோவிந்த! எங்களுடன்கூடி கோபிகைகளும் ப்ரும்மருத்ராதிகளுக்கும் கிடைக்காத உமது பாதஸேவையைச் செய்யட்டுமே.

सखीभावेन ताः सर्वाः पूजयिष्याम्यहं मुदा ।
यतस्ताः प्रेमतत्त्वज्ञाः प्रेममार्गप्रदर्शिकाः ॥२५॥

25. ப்ரேமையின் ரஹஸ்யம் அறிந்தவர்களும் ப்ரேமபக்தியைக் கற்றுக்கொடுப்பவர்களுமான அவர்களை நானும்கூட ஸகிகளாக நினைத்து கௌரவிப்பேன்.

### श्रीभगवानुवाच

### ஸ்ரீபகவான்

हृदयस्थं सुमधुरं वदसि प्राणवल्लभे ।
असूयां नैव जानासि जानासि प्रेम निर्मलम् ॥२६॥

26. என்னுயிர் காதலி! உன் உள்ளத்தைத் விட்டுப்பேசுகிறாய். அதை நான் அறிவேன். உனக்கு அசூயையே கிடையாது. உன் ப்ரேமை நிர்மலமானது.

तव कौतूहलं दृष्ट्वा श्रुत्वापि वचनं तव ।
सर्वं त्वयैव पश्यामि मत्प्राणं गोपिकाजनम् ॥२७॥

27. உன் வார்த்தையைக் கேட்டு உன் குணத்தையும் பார்த்து என் உயிரான கோபிகைகள் யாவரும் நீயே என்று நினைக்கிறேன்.

अहमप्येवमिच्छामि त्वं यथा वदसि प्रिये ।
किन्तु बृन्दावनं त्यक्त्वा नेच्छन्ति द्वारकां हि ताः॥२८॥

28. ப்ரியே! நீ சொல்வதுபோல் நானும் அப்படித்தான் விரும்புகிறேன். ஆனால் அவர்கள் ப்ருந்தாவனத்தை விட்டுவிட்டு துவாரகை வர விரும்பமாட்டார்கள்

रुक्मिण्युवाच

एवं चेत्तर्हि गच्छाम वयं यादवनन्दन ।
बृन्दावने महारण्ये सञ्चराम यथासुखम् ॥२९॥

ருக்மிணி

29. கண்ணா! அப்படியானால் நாம் யாவரும் ப்ருந்தாவனமே போய்விடுவோம். அங்கு போய் குதூஹலமாக ஸஞ்சரிப்போம்.

श्रीभगवानुवाच

कैतवं नैव जानासि गोपिका त्वमपि प्रिये ।
अत्र स्थितान् बान्धवांश्च त्यक्तुं नेच्छामि यादवान्॥३०॥

ஸ்ரீபகவான்

30. ப்ரியே! நீயும் கோபியைப்போல் இருக்கிறாய். கவடுசூதே தெரியவில்லை. இவ்வளவு பந்துக்களையும் அழைத்துக் கொண்டு எங்கு ப்ருந்தாவனம் போவது!

वर्तते विविधं कर्म ममापि जगतीतले ।

कारणं ह्यवतारस्य भूभारहरणात्मकम् ॥३१॥

31. உலகில் எனக்குப் பல ஜோலி இருக்கிறது. பூபாரத்தை இறக்கியாகணும். அதுதான் அவதார கார்யம்.

तस्मात्तत्रैव गोपीनां हृदये निवसाम्यहम् ।
अत्रापि केनाप्यंशेन सञ्चरामि यदूत्तमैः ॥३२॥
क्षिप्रं द्रक्ष्यसि ता गोपीर्दुःखं मा स्म गमः प्रिये ।
अनुरूपासि मे भार्या यतस्त्वं प्रेमपूरिता ॥३३॥

32. ஆகையால் கோபிகைகளின் இதயத்திலிருந்துகொண்டே இங்கும் இருக்கிறேன். எங்கும் இருக்கிறேன்.

**श्रीसद्गुरुरुवाच**

इत्युक्त्वा वासुदेवश्च भीष्मकन्यां तु रुक्मिणीम् ।
आलिङ्ग्य सान्त्वयामास सप्रियं प्रीतिवर्धनः ॥३४॥

**ஸ்ரீஸத்குரு**

34. இவ்வாறு சொல்லி ப்ரீதிவர்தனனான பகவான் ஸ்ரீருக்மிணியை ஆலிங்கனம் செய்துகொண்டு சமாதானம் செய்தான்.

एवं प्रतिदिनं तत्र रुक्मिणीवासुदेवयोः ।
व्रजमाहात्म्यसल्लापाद्रजनी सुखदाऽभवत् ॥३५॥

35. இவ்வாறு தினமும் ருக்மிணியுடன் வாசுதேவன் வ்ரஜமாஹாத்மியத்தை பேசுவதாகவே இரவுவேளையைக் கழித்தான்.

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये द्वारकाकाण्डे रुक्मिणीकृष्णसंवादो नाम पञ्चमोऽध्यायः ॥५॥*

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிஸ்வாமிகள் அருளிச்செய்த ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில் த்வாரகாகாண்டத்தில் ஐந்தாமத்யாயம்.**

# अथ षष्ठोऽध्यायः

## ஆறாமத்யாயம்

### भागवता ऊचुः

द्वारकायां वसन्नेवं बलभद्रेण संयुतः ।
किं किं चकार भगवान् लीलया वद सद्गुरो ॥१॥

### பாகவதர்கள்

*1. ஸத்குரோ! இவ்வாறு பலதேவருடன் த்வாரகையில் வஸித்தவாறே பகவான் என்ன என்ன லீலைகள் செய்தானோ அவை யாவையும் சொல்லுவீராக.*

### श्रीसद्गुरुरुवाच

सर्वं कृष्णस्य चरितं सङ्ग्रहेण वदाम्यहम् ।
अप्रमेयं हि माहात्म्यं कृष्णस्य परमात्मनः ॥२॥

### ஸ்ரீஸத்குரு

*2. எல்லா ஸ்ரீக்ருஷ்ணகதைகளையும் நான் சுருக்கமாகச் சொல்லுகிறேன். க்ருஷ்ணபரமாத்மாவின் லீலைகள் அனந்தமன்றோ!*

दशपुत्रान् प्रतिक्षेत्रं जनयामास माधवः ।
अनुकुर्वल्लोकरीतीमपि योगेश्वरार्चितः ॥३॥

*3. யோகேச்வரர்களாலும் பூஜிக்கப்படும் க்ருஷ்ணன் உலகத்தை அனுஸரித்து ஒவ்வொரு மனைவியிடமும் பத்து பத்து புத்ரர்களை உண்டாக்கினான்.*

नियुतं षष्टिसाहस्रमशीतिश्चेति संख्यया ।
वदन्ति पुत्रान् कृष्णस्य योगमायासमुद्भवान् ॥४॥

*4. ஸ்ரீக்ருஷ்ணனுக்கு லக்ஷத்திஅறுபதாயிரத்து எண்பது புத்ரர்கள் இருந்தனர். இவ்வளவு பேர்களும் யோகசக்தியால் தோன்றியவர்களே.*

प्रभावममप्रमेयं तं कृष्णस्य परमात्मनः ।
अविज्ञाय विमूढास्तु स्त्रीलोलं मेनिरे हरिम् ॥५॥

5. க்ருஷ்ணபரமாத்மாவின் அளவுகடந்த மஹிமையை அறியாத வர்கள் அவனை ஸ்த்ரீலோலனாகமட்டும் நினைக்கின்றனர்.

यस्य ध्यानबलेनैवं तादात्म्येन शुकादयः ।
जयन्ति स्त्रीसुखं लोके किं चित्रं परमात्मनि ॥६॥

6. எவரை த்யானம் செய்த பலத்தினால் சுகர்முதலிய முனிவர்கள்கூட ஸ்த்ரீஸுகத்தை ஜயித்துவிடுகின்றனரோ அத்தகைய பரமாத்மாவைக் கேட்கவும் வேண்டுமா!

भीष्माद्या ब्रह्मनिष्ठाश्च दृष्ट्वा योगबलं प्रभोः ।
विस्मयं प्राप्नुवन्ति स्म निन्दन्ति स्म खलास्तथा ॥७॥

7. ப்ரஹ்மச்சாரிகளான பீஷ்மர் முதலியவர்கள்கூட ஸ்ரீக்ருஷ்ணனின் யோகபலத்தைக்கண்டு ஆச்சர்யப்படுகின்ற னர். மூடர்களோ நிந்தை செய்கின்றனர்.

तेषां श्रीकृष्णपुत्राणां प्रथमो लोकनायकः ।
प्रद्युम्नोऽभून्महावीरो येन भैष्मी तु सुप्रजा ॥८॥

8. அந்த க்ருஷ்ணகுமாரர்களுள் மூத்தவன் லோகநாதனான ப்ரத்யும்னன். அவனைப் பெற்ற ருக்மிணி பாக்யவதி.

निहत्य शम्बरं दैत्यं तत्सुतां रतिमीश्वरः ।
आनीय द्वारकां तूर्णमुपयेमे यथाविधि ॥९॥

9. சம்பராஸுரனை வதம் செய்து, அவனது புதல்வியான ரதியை த்வாரகைக்குக் கொண்டுவந்து விவாஹம் செய்துகொண்டான்

तत्सुतश्चानिरुद्धोऽभूज्जगत्प्रख्यातपौरुषः ।
बाणस्य तनयामूषामुपयेमे यथाविधि ॥१०॥

10.. ப்ரத்யும்னனின் புத்ரன் அநிருத்தன். இவன் உலகில் புகழ்பெற்ற பராக்ரமம் உடையவன். பாணாசுரனை யுத்தத்தில் வென்று, அவனது புதல்வியான உஷாவைக் கொண்டுவந்து

விவாஹம் செய்துகொண்டான்.

साम्बो दुर्योधनसुतां लक्ष्मणां तु स्वयंवरे ।
जहार लीलया धीरो बलदेवेन रक्षितः ॥११॥

11. ஸாம்பன் என்ற க்ருஷ்ணகுமாரன் துர்யோதனனின் புதல்வியான லக்ஷ்மணாவை அபஹரித்தான். பிறகு பலதேவரால் ரக்ஷிக்கப்பட்டவனாய் அவளை த்வாரகைக்குக் கொண்டுவந்து விவாஹம் செய்துகொண்டான்.

पार्थोपि तीर्थयात्रायामागतो द्वारकापुरीम् ।
सञ्जहार सुभद्राञ्च माधवेनानुमोदितः ॥१२॥

12. க்ருஷ்ணஸஹோதரியான ஸுபத்ராவை அர்ஜுனன் தீர்த்தயாத்திரையாக த்வாரகைக்கு வந்து க்ருஷ்ணனின் அனுமதியின்மேல் அபஹரித்துக்கொண்டு சென்று விவாஹம் செய்துகொண்டான்.

नृगञ्च भूपतिं कूपादुद्धृत्य कृपया हरिः ।
प्रापयामास च स्वर्गं यादवानां तथाग्रतः ॥१३॥

13. சாபத்தினால் ஓணானாயிருந்த ந்ருகன் என்ற அரசனை கிணற்றிலிருந்து கைதூக்கிவிட்டு அவன் சாபத்தை நீக்கி யாதவர்கள் முன்னிலையிலேயே ஸ்வர்கம் அனுப்பினான் பகவான்.

पौण्ड्रकं वासुदेवञ्च विष्णुसारूप्यगर्वितम् ।
निहत्य लीलया कृष्णो वारणासीं ददाह च ॥१४॥

14. விஷ்ணுஸாரூப்யத்தை அடைந்தும் அசூயைப்பட்ட பௌண்ட்ரகவாஸுதேவனை வதம்செய்து காசிப்பட்டணத்தையும் கொளுத்தினான்.

बहुलाश्वेन राज्ञा च श्रुतदेवेन धीमता ।
युगपत्पूजितो देवो दिव्यलीलाञ्चकार च ॥१५॥

15. பஹுலாச்வன் என்ற அரசனாலும், ச்ருததேவன் என்ற ப்ராஹ்மணனாலும் ஒரேஸமயத்தில் பூஜிக்கப்பட்டு பகவான்

இரண்டு ரூபம் தாங்கி லீலை செய்தான்.

दरिद्रस्यापि विप्रस्य गृह्णन् पृथुकतण्डुलान् ।
अतुलां संपदं तस्मै प्रददौ दीनवत्सलः ॥१६॥

16. தீனதயாளுவான க்ருஷ்ணன் ஏழையான குசேலரின் அவலை வாங்கி சாப்பிட்டு அவருக்கு அளவு கடந்த செல்வத்தைத் தந்து ரக்ஷித்தான்.

पार्थेन लीलया गत्वा वैकुण्ठं परमं पदम् ।
द्विजपुत्रानानिनाय भगवानीश्वरेश्वरः ॥१७॥

17. ஈச்வரர்களுக்கீச்வரனான கண்ணபிரான் அர்ஜுனனுடன் வைகுண்டம் சென்று த்வாரகையிலிருந்த ஒரு பிராம்மணனின் பிள்ளைகளை மீட்டுவந்தான்.

एवमद्भुतचारित्रे महावैभवसंयुते ।
वासुदेवे द्वारवत्यां वसति प्रेमपूर्वकम् ॥१८॥
बलदेवोपि सानन्दं नन्दगोपदिदृक्षया ।
प्राप बृन्दावनं रम्यं सानन्दं हि यदृच्छया ॥१९॥

18,19 இவ்வாறு அளவுகடந்த மஹிமையும் அத்புத சரித்ரமும் உள்ள பகவான் க்ருஷ்ணன் துவாரகையில் அரசாட்சி செய்கையில் ஒருஸமயம் பலராமன், நந்தன் யசோதை இருவரையும் காணவேண்டி கோகுலம் வந்தார்.

तं विलोक्य तदा रामं रमणीयमुखाम्बुजम् ।
परिरभ्य स्वयं नन्दः पुत्रस्पर्शसुखं गतः ॥२०॥

20. அழகிய முகமுடைய பலராமனை ஆலிங்கனம் செய்துகொண்டு நந்தகோபன் புத்ரஸ்பர்சத்தினால் உண்டான ஸுகத்தை அடைந்தார்.

एवं गोपेश्वरी चैनं परिरभ्य पुनः पुनः ।
गोविन्दस्यापि कुशलं पप्रच्छ प्रेमपूर्वकम् ॥२१॥

21. இவ்வாறே யசோதையும் பலராமனை மறுபடியும்

மறுபடியும் கட்டிக்கொண்டு ப்ரேமையுடன் கண்ணன் க்ஷேமமா? என்று கேட்டாள்.

अब्रवीद्वासुदेवस्य वैभवं सुरदुर्लभम् ।
यस्य साक्षान्महालक्ष्मीरष्टधा गृहिणी स्थिता ॥२२॥

22. வாஸுதேவனின் அளவுகடந்த மஹிமையை பலராமன் வர்ணித்தார். லக்ஷ்மிதேவியே எட்டு பட்டமஹிஷிகளாகி பாதஸேவை செய்கின்றாள் அன்றோ!

तच्छ्रुत्वा कृष्णमाहात्म्यं ननु वाचामगोचरम् ।
अजानन्ती यशोदापि पप्रच्छासितवाससम् ॥२३॥

23. பேச்சுக்கடங்காத க்ருஷ்ணமாஹாத்ம்யத்தைக் கேட்டு ஒன்றுமறியாத யசோதை பலராமனைப் பார்த்து கேட்டாள்.

### यशोदोवाच

### யசோதை

कनिष्ठस्ते महाभाग द्वारकाया गृहेष्वपि ।
नवनीतादिकं हृत्वा भुङ्क्ते किं लीलया हरिः ॥२४॥

24. மஹாபாக்யவானே! உன் தம்பி கண்ணன் துவாரகையிலும் வீடுகளில் வெண்ணை திருடி சாப்பிட்டு விளையாடுகிறானா?

एवं प्रतिदिनं कृष्णो संप्राप्योपवनं तथा ।
गोवत्सचारणं तत्र बालैः साकं करोति वा ॥२५॥

25. அவ்வாறே அங்கும் நண்பர்களுடன்கூடி பக்கத்துக் காட்டிற்குப்போய் மாடு மேய்க்கிறானா?

अथ राजकुमारीभिः सानन्दं निशि माधवः ।
समुद्रसलिलं गत्वा जलक्रीडां करोति किम् ॥२६॥

26. ராஜகுமாரிகளுடன் தினந்தோறும் ஆனந்தமாக ஸமுத்ரத்தில் ஜலக்ரீடை செய்கின்றானா?

अथवा मदभिस्नेहात्संस्मरन् मामिह स्थिताम् ।
अदुःखार्हः परं दुःखं भजते वा ममात्मजः ॥२७॥

27. அல்லது என் குழந்தையான கண்ணன் என்னையே நினைத்துக்கொண்டு அழுது கொண்டிருக்கிறானோ! அவன் அப்படி அழலாகாதே. அவன் ஸந்தோஷமாக இருக்க வேண்டியவனாயிற்றே.

श्रीसद्गुरुरुवाच

ஸ்ரீஸத்குரு

इति गोपेश्वरीप्रोक्तं विशुद्धप्रेमपूरितम् ।
आकर्ण्य बलदेवोपि नितरां दुःखितोऽभवत् ।
तदा नन्दो महाप्राज्ञो यशोदां प्रत्युवाच ह ॥२८॥

28. இவ்வாறு யசோதை சொன்னதைக்கேட்டு பலராமன் அம்மாவின் கபடமற்ற அன்பை நினைத்துக்கண்ணீர் விட்டான். நந்தகோபன் சிரித்துக்கொண்டே யசோதையைப்பார்த்துச் சொன்னார்.

नन्द उवाच

நந்தகோபன்

अलं प्रश्नेन ते पुत्रः परमानन्दवर्धनः ।
सांप्रतं नैव गोपालो भूपालं विद्धि तं प्रिये ॥२९॥

29. போதும் உனது கேள்வி. உன் பிள்ளை அரசனாகி விட்டான் தெரியுமா? யாவருக்கும் பரமானந்தம் தருகிறான். முன்புபோல் அவன் கோபாலன் இல்லை. இப்போது பூபாலன்.

यत्कटाक्षबलेनैव जीवन्ति पृथिवीश्वराः ।
तस्य गोचारणं कर्म नोचितं गोकुलेश्वरि ॥३०॥

30. நீ இடைச்சிதானே. உனக்கு என்ன தெரியும்? ஸகல ராஜாக்களும் ஸேவிக்கும் ராஜராஜனான ஸ்ரீக்ருஷ்ணன் இப்போது மாடுமேய்க்கப் போவானா என்ன?

यशोदोवाच

गोचारणं न हि यदि किमर्थं द्वारकां गतः ।

किमनेन नरेन्द्राणां युयुत्सूनां मुहुर्मुहुः ॥३१॥

யசோதை

31. மாடுமேய்க்காமல் எதற்கு துவாரகையில் போய் இருக்கவேண்டும். அந்த சண்டைக்காரர்களான அரசர்களுடன் இவனுக்கு என்ன வேலை?

श्रीसद्गुरुरुवाच

ஸ்ரீஸத்குரு

लोकवेदमजानन्त्या जनन्या प्रेमपूर्णया ।
संप्रोक्तं वचनं श्रुत्वा जहास भगवान् बलः ॥३२॥

32. உலகமோ சாஸ்த்ரமோ அறியாத கவடுசூதற்ற ப்ரேமை நிரம்பிய அம்மாவின் வசனத்தைக்கேட்டு பலராமன் சிரித்தான்.

सान्त्वयन् गोपिकाः सर्वाः कृष्णस्य प्रियवार्तया ।
पुनः प्राप द्वारवतीं कृष्णदर्शनलालसः ॥३३॥

33. கோபிகைகள் யாவரையும் ஸமாதானம் செய்துவிட்டு க்ருஷ்ணனைப் பார்க்க ஆவலுடன் மீண்டும் துவாரகைக்கு வந்தான் பலராமன்.

कृष्णाय वर्णयामास गोपीनां प्रेमचेष्टितम् ।
उपहारान् ददौ ताभिर्दत्तं च प्रीतिपूर्वकम् ॥३४॥

34. கண்ணனிடம் கோகுலவாஸிகளின் எல்லா கதைகளையும் தெரிவித்தான்.அவர்கள் தந்த பொருள்களையும் க்ருஷ்ணனுக் குத் தந்தான்.

इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये द्वारकाकाण्डे बलदेवव्रजयात्रावर्णनं नाम षष्ठोऽध्यायः ॥६॥

இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிஸ்வாமிகள் அருளிச்செய்த ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில் துவாரகா காண்டத்தில் ஆறாமத்யாயம்.

# अथ सप्तमोऽध्यायः

## ஏழாவது அத்யாயம்

### श्रीसद्गुरुरुवाच

कृष्णस्य योगवीर्यं तद्द्रष्टुकामो महामुनिः ।
सानन्दं द्वारकां प्राप तथा श्रीकृष्णमन्दिरम् ॥१॥

ஸ்ரீஸத்குரு

*1. ஸ்ரீக்ருஷ்ணனின் யோகசக்தியைக் காணவேண்டி நாரத முனிவர் த்வாரகையில் க்ருஷ்ணனின் ஆலயத்திற்கு வந்தார்.*

दूराद्विलोक्य भगवान् देवर्षिं गृहमागतम् ।
संभ्रमादासनाद्भैष्म्या सहोत्थाय कृताञ्जलिः ॥२॥
अवोचन्मधुरं वाक्यं भक्तिपूर्वं प्रणम्य च ।
अर्घ्यपाद्यादिकं दत्वा वासुदेवो जगद्गुरुः ॥३॥

*2,3. நாரதரைப் பார்த்ததுமே ஜகத்குருவான க்ருஷ்ணன் எழுந்திருந்து ருக்மிணியுடன் வணங்கி கைகூப்பி பக்தியுடன் அர்க்யம், பாத்யம் எல்லாம் கொடுத்து பூஜித்து மதுரமாய் சொன்னான்.*

### श्रीभगवानुवाच

ஸ்ரீபகவான்

स्वागतं सात्वतश्रेष्ठ धन्योस्मि तव दर्शनात् ।
अद्यैव सफलं जन्म तव पादाब्जसेवया ॥४॥

*4. பாகவதச்ரேஷ்டரே! ஸ்வாகதம். உமது தர்சனத்தினால் தன்யனானேன். உமது பாதஸேவையால் இன்றே என் ஜன்மம் ஸபலமாயிற்று.*

सदा धर्मार्थकामेषु लोभेन चरतामिह ।
मादृशानां गृहस्थानां सत्सङ्गावसरः कुतः ॥५॥

5. எப்போதும் அறம், பொருள், இன்பம் என்ற த்ரிவர்க்கத்தாலேயே சுழலும் என்னைப்போன்ற க்ருஹஸ்தர்களுக்கு ஸத்ஸங்கத்திற்கு அவகாசமேது?

तस्मादेव हि तत्त्वज्ञाः समुत्थाय भवार्णवात् ।
संप्राप्य काननं पुण्यं लभन्ते सङ्गमं सताम् ॥६॥

6. ஆதலால்தான் விஷயமறிந்தவர்கள் ஸம்ஸாரத்திலிருந்து எழுந்திருந்து கானகத்தை அடைந்து ஸத்ஸங்கத்தை நாடுகின்றனர்.

अस्तु किं बहुना देव किं कर्तव्यं मया प्रभो ।
सुखदुःखसमा यूयं नित्यतृप्ता हि साधवः ॥७॥

7. ஸரி, இருக்கட்டும். தேவ! ப்ரபோ! என்னால் என்ன ஆக வேண்டும்? ஸுகதுக்கங்களை ஸமமாகப் பார்க்கும் நீங்கள் எப்போதும் த்ருப்தியுடன் கூடியவர்களன்றோ!

श्रीसद्गुरुरुवाच

ஸ்ரீஸத்குரு

आकर्ण्य वचनं रम्यं सारं सुष्ठु मितं मुनिः ।
परमं विस्मयं प्राप नैव किञ्चिदुवाच च ॥८॥

8. ஸாரமாயும், தெளிவாயும், மிதமாயும் பேசும் கண்ணனின் பேச்சைக்கேட்டு நாரதர் ஆச்சர்யமடைந்தார்.ஏதும் பதில் பேசவில்லை.

पूजाञ्च विधिवत्प्राप्य तूष्णीमेव महामुनिः ।
सत्यभामागृहं प्राप तत्रापि ददृशे हरिः ॥९॥

9. விதிப்படி செய்த பூஜையையும் பெற்று நாரதமுனிவர் ஸத்யபாமாவின் வீட்டுக்குச் சென்றார். அங்கும் க்ருஷ்ணனைக் கண்டார்.

एवं सर्वत्र युगपद्योगदृष्ट्या तु नारदः ।
ददर्श वासुदेवं तं नानाधर्मपरायणम् ॥१०॥

10. இவ்வாறு ஒரேஸமயத்தில் பலவிதமான தர்மங்களைச் செய்துகொண்டிருக்கும் கண்ணபிரானை தனது ஞான த்ருஷ்டியால் எங்கும் கண்டார்.

क्वचित्सन्ध्यामुपासीनमासीनं व्याघ्रचर्मणि ।
क्वचित्साकं धर्मपत्न्या क्रीडन्तं शिशुभिस्तथा ॥११॥
क्वचिद्दानानि कुर्वन्तं ब्राह्मणेभ्यो मुदान्वितम् ।
क्वचिन्नानाविधञ्चान्नं भुञ्जानं प्रियबान्धवैः ॥१२॥
क्वचित्पुत्रांल्लालयन्तं प्रेमवात्सल्यसम्युतम् ।
क्वचिदर्थानाहरन्तं निर्जित्य निखिलान् रिपून् ॥१३॥
क्वचिच्छृङ्गारनाट्यञ्च पश्यन्तं वारयोषिताम् ।
क्वचिल्लोकहितं कार्यं चिन्तयन्तं स्वमन्त्रिभिः ॥१४॥
सन्धिविग्रहतत्त्वज्ञं सभायां सुस्थितं क्वचित् ।
अक्षक्रीडाञ्च कुर्वाणं प्रियया चोद्धवेन च ॥१५॥
क्वचिन्मातङ्गमारुह्य चरन्तञ्च महोत्सवे ।
क्वचित्स्यन्दनमारूढं काम्भोजं हयमेव च ॥१६॥
देवकीवसुदेवौ च प्रणमन्तं तथा क्वचित् ।
दीनानपि तदा विप्रान् पूजयन्तं कृपानिधिम् ॥१७॥
एवं हि युगपद्दृष्ट्वा सर्वत्र द्वारकापुरे ।
कृष्णमेकमनेकञ्च नितरां विस्मितोऽभवत् ॥१८॥

11-18. ஒரு இடத்தில் புலித்தோலில் வீற்றிருந்து ஸந்த்யாவந்தனம் செய்பவனும், மற்றொரு வீட்டில் மனைவிகளுடனும் குழந்தைகளுடனும் விளையாடுபவனும், ஒரு வீட்டில் ஏழைகளுக்கும் ப்ராம்மணர்களுக்கும் தானம் செய்பவனும், மற்றொரு வீட்டில் பந்துக்களுடனும், நண்பர்களுடனும் பலவிதமான போஜனம் செய்பவனும், ஒரு வீட்டில் புத்ரர்களை

வாத்ஸல்யத்துடன் லாலனை செய்பவனும், ஒரு இடத்தில் விரோதிகளை வென்று நிதிகோசத்திற்கு வேண்டிய நிதிகளைத் திரட்டி வருபவனும், ஒரு இடத்தில் தாஸிகளின் ச்ருங்கார நாட்யத்தைப் பார்ப்பவனும், ஒரு இடத்தில் மந்திரிகளுடன் ஆலோசனை செய்பவனும், அரசர்களுக்குள் பேதநீதி ஸமாதானங்களை நடத்துபவனும், ஒரு இடத்தில் ப்ரியையுட னும் உத்தவனுடனும் பகடையாடுபவனும், ஒரு இடத்தில் பெரிய யானைமேல் ஏறி உத்ஸவத்தில் ஊர்வலம் வருபவனும், ஒரு இடத்தில் குதிரை ஏறி வருபவனும், ரதமேறி வருபவனும், ஒரு வீட்டில் தேவகியையும் வஸுதேவரையும் வணங்குபவனும், ஒரு வீட்டில் ஏழைகளையும், ப்ராம்மணர்களையும் ஆதரிப்ப வனுமான க்ருஷ்ணனை பல இடங்களில் பல ரூபத்தில் பல காரியங்களைச் செய்வதைக் கண்டு நாரதர் ஆச்சர்யமடைந்தார்.

योगेश्वरस्य माहात्म्यं चिन्तयन्नारदो मुनिः ।
इन्द्रप्रस्थे गोकुले च वैकुण्ठेपि ददर्श तम् ॥१९॥

*19. யோகீச்வரனான க்ருஷ்ணனின் மஹிமையை சிந்தித்த நாரதர் துவாரகையில் கண்டதுபோலவே அதேசமயத்தில் கோகுலத்திலும் இந்த்ரப்ரஸ்தத்திலும் வைகுண்டத்திலும் கண்டார்.*

क्वचिद्युधिष्ठिरेणैव चिन्तयन्तं जगद्धितम् ।
अटन्तं मृगयाञ्चैव फाल्गुनेनं तथा क्वचित् ॥२०॥
पूजितं भीमसेनेन क्रीडन्तं कृष्णया सह ।
यमाभ्यां सेवितञ्चापि राजमार्गगतं क्वचित् ॥२१॥

*20,21. ஒரு இடத்தில் தர்மபுத்ரருடைய யோகக்ஷேமத்தைப்பற்றி ஆலோசிப்பவனும், ஒரு இடத்தில் அர்ஜுனனுடன் காட்டிற்கு வேட்டையாடச் செல்பவனும், ஒரு வீட்டில் பீமசேனனால் பூஜிக்கப்படுபவனும்,ஒரு வீட்டில் த்ரௌபதியுடன் விளையாடு பவனும், ஒரு வீட்டில் நகுலஸஹதேவர்களால் ஸேவிக்கப் படுபவனும், ஒரு இடத்தில் ராஜமார்கத்தில் ரதத்தில் செல்பவனுமான க்ருஷ்ணனைக் கண்டார்.*

एवमेव व्रजे कृष्णं नानारूपेण सुस्थितम् ।
मुरलीं वादयन्तञ्च चारयन्तञ्च गोकुलम् ॥२२॥
यशोदया लालितञ्च क्वचिन्नन्देन लालितम् ।
क्वचिद्धरन्तं गव्यानि क्वचित्क्रीडन्तमर्भकैः ॥२३॥
क्वचिद्राधिकया साकं रममाणं लतागृहे ।
क्वचिद्गोपीजनैः सर्वैः कुर्वन्तं रासनर्तनम् ॥२४॥
एवं विलोक्य भगवान्नारदो ब्रह्मदर्शनः ।
परमानन्दसंमुग्धो मूर्च्छितो न्यपतत्क्वचित् ॥२५॥

*22-25. அவ்வாறே வ்ரஜபூமியிலும் வேணுகானம் செய்பவனும், ஒரு இடத்தில் மாடுமேய்ப்பவனும், ஒரு இடத்தில் யசோதையால் லாலனை செய்யப்படுபவனும், ஒரு இடத்தில் நந்தகோபனால் லாலனை செய்யப்படுபவனும், ஒரு இடத்தில் நவநீதம் திருடுபவனும், ஒரு இடத்தில் சிறுவர்களுடன் விளையாடுபவனும், ஒரு நிகுஞ்ஜத்தில் ராதையுடன் விளையாடு பவனும், ஒரு இடத்தில் கோபிகைகளுடன் ராஸக்ரீடை செய்பவனுமான பகவானை இவ்வாறு பலவிடங்களில் பலவிதமாய் பலரூபத்தில் கண்டு பரமானந்தமடைந்து மூர்ச்சித்து ஒரு இடத்தில் விழுந்துவிட்டார்.*

तत्रापि वासुदेवेन प्रेमपूर्वं प्रसान्त्वितः ।
तुष्टाव प्रणतश्चापि वेपमानः कृताञ्जलिः ॥२६॥

*26. அங்கும் வந்த பகவானால் எழுப்பி ஸமாதானம் செய்யப்பட்டவராய் நாரதர் கைகூப்பி வணங்கித் துதித்தார்.*

**नारद उवाच**

**நாரதர்**

वासुदेव नमस्तेस्तु नन्दनन्दन ते नमः ।

रुक्मिणीप्राणनाथाय राधिकेशाय ते नमः ॥२७॥

27. வாஸுதேவ! நந்தநந்தன! நமஸ்தே! ருக்மிணிப்ராணகாந்த ! ராதிகேச! நமஸ்தே !

ब्रह्मरुद्रादयः सर्वे लोकपाला अपि प्रभो ।
भ्रमन्ति तव मायायां बालकस्तु कियानहम् ॥२८॥

28. ப்ரம்மருத்ராதி லோகபாலகர்களும் உமது மாயையில் சுழலுகின்றனர். சிறுவனான நான் எம்மாத்திரம்!

बहुभार्यस्य ते कृष्ण दिदृक्षुर्योगमद्भुतम् ।
त्वामेव दृष्ट्वा सर्वत्र विस्मयं प्राप्तवानहम् ॥२९॥

29. பல கல்யாணம் செய்துகொண்டிருக்கும் உம்மைக் காண வேண்டிவந்த நான் உமது விச்வரூபத்தையே கண்டு விட்டேன்.

किं चित्रमेवं लीलायां योगिनामीश्वरस्य ते ।
भक्तिर्भवतु मे देव तव पादसरोरुहे ॥३०॥

30. யோகிகளுக்கும் ஈச்வரனாகிய நீர் எதைச்செய்தாலும் ஆச்சர்யம் என்ன இருக்கிறது.! ஏனெனில் உம்மால் முடியாதது என்ன ? உமது பாதத்தில் எனக்கு திடபக்தியே வேண்டும்.

**श्रीभगवानुवाच**

**ஸ்ரீபகவான்**

भगवंस्त्वादृशानां तु योगिनां कृपया हरिः ।
ऐश्वर्यं दृश्यते किञ्चित्तस्मान्नैवाहमीश्वरः ॥३१॥

31. பகவானே! உம்மைப்போன்ற மஹான்களின் ஆசீர்வாதத்தாலேயே நானும் இத்தகைய ஐச்வர்யத்தைப் பெற்றுள்ளேன். நான் சுயமே ஈச்வரனில்லை.

यद्यस्ति महतां सेवा यद्यस्ति महतां कृपा ।
जगत्त्रये दुर्लभं किं मादृशां गृहिणां प्रभो ॥३२॥

32. மஹான்களுடைய க்ருபையும் ஸேவையும் கிடைத்து

விட்டால் என்னைப்போன்ற க்ருஹஸ்தர்களுக்கு எதுதான் கிடைக்காது?

### श्रीसद्गुरुरुवाच

### ஸ்ரீஸத்குரு

एवं लोकैकनाथेन स्वच्छन्दं संस्तुतो हरिः ।
तूष्णीमेव समुत्थाय प्रसन्नः प्रस्थितः क्वचित् ॥३३॥

33. இவ்வாறு லோகநாதனால் சுதந்திரமாய்க் கொண்டாடப் பட்ட நாரதமுனிவர் ப்ரஸன்னமாகிப் பேசாமல் எழுந்து கொண்டு போய்விட்டார்.

इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये द्वारकाकाण्डे श्रीकृष्णगार्हस्थ्यदर्शनं नाम सप्तमोऽध्यायः ॥७॥

இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிஸ்வாமிகள் அருளிச்செய்த ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில் த்வாரகா காண்டத்தில் ஏழாவது அத்யாயம்.

## अथाष्टमोऽध्यायः

## எட்டாமத்யாயம்

### भागवता ऊचुः

नोपपन्नमिदं सर्वं श्रीशुकस्याप्यसंमतम् ।
द्वारकायां गोकुले च युगपच्चरितं हरेः ॥१॥

### பாகவதர்கள்

1. ஸத்குரோ! துவாரகையிலும், கோகுலத்திலும் ஒரேஸமயத்தில் பகவான் இருந்தான் என்று சொல்வது எப்படிப் பொருந்தும்? இப்படி சுகரும் சொல்லவில்லையே.

सर्वथा गोकुलं त्यक्त्वा मधुरां प्राप माधवः ।
इत्येव वर्णितं व्यक्तं व्यासपुत्रेण धीमता ॥२॥

2. முற்றிலும் கோகுலத்தைவிட்டு பகவான் மதுரை சென்றுவிட்டான் என்றுதானே ஞானியான ஸ்ரீசுகரே சொல்லியிருக்கிறார்.

जायते महती शङ्का वचने सद्गुरो तव ।
सर्वज्ञोसि त्वमप्यद्य संशयं नाशय प्रभो ॥३॥

3. ப்ரபோ! ஸத்குரோ! நீங்கள் சொன்ன இவ்விஷயத்தில் பெரிய ஸந்தேஹமுண்டாகிறது. தாங்கள் ஸர்வக்ஞர். எங்கள் ஸம்சயத்தை நீக்கவேண்டும்.

### श्रीसद्गुरुरुवाच

### ஸ்ரீ ஸத்குரு

गुरुपादाब्जभक्तानां युष्माकं संशयः कथम् ।
लौकिकानां मनस्तृप्त्यै यूयं पृच्छथ वैष्णवाः ॥४॥

4. வைஷ்ணவர்களே! குருபக்தியுடைய உங்களுக்கு ஸம்சயமேது? லௌகீக ஜனங்களின் மனத்ருப்திக்காக வேண்டி இந்தக் கேள்வி கேட்கின்றீர்கள்.

वैकुण्ठे निवसन्नेव यथा गोकुलमागतः ।
गोकुले निवसन्नेव तथा हि मधुराङ्गतः ॥५॥

5. வைகுண்டத்திலிருந்துகொண்டே எப்படி கோகுலம் வந்தானோ அப்படியே கோகுலத்திலிருந்தபடியே வைகுண்டம் சென்றார்.

सर्वशक्तस्य कृष्णस्य किं वा लोके सुदुष्करम् ।
तस्मात्संशयलेशञ्च कर्तुं नार्हथ वैष्णवाः ॥६॥

6. வைஷ்ணவர்களே! ஸர்வசக்தனான க்ருஷ்ணனுக்கு முடியாதது என்ன இருக்கிறது?. எனவே அற்ப ஸந்தேஹமும் படக்கூடாது.

### भागवता ऊचुः

### பாகவதர்கள்

अत्र क्रीडति गोविन्दो गूढः कपटमानुषः ।

दिव्यशक्तिप्रकटनं न कुर्याद्धि कदाचन ॥७॥

7. இங்கு பகவான் மனுஷ்யாவதாரம்தானே செய்துள்ளார். ஒரு காலும் திவ்யசக்தியை ப்ரகடனம் செய்யமாட்டாரே!

श्रीसद्गुरुरुवाच

ஸ்ரீஸத்குரு

हन्त मृद्भक्षणे काले जनन्यै स्वमुखाम्बुजे ।
कः समर्थो दर्शयितुं ब्रह्माण्डं सचराचरम् ॥८॥

8. ஆஹா! பகவான் மண்ணைத் தின்றுவிட்டு வாயில் அகில உலகங்களையும் அம்மாவுக்குக் காட்டவில்லையா?

प्रतिगोपीजनं नृत्यन् तावद्रूपधरो निशि ।
चकार लीलया देवस्त्वतिमानुषचेष्टितम् ॥९॥

9. ராஸக்ரீடையில் ஒவ்வொரு கோபிகைக்கு ஒவ்வொரு நாயகனாய் பலரூபம் தரித்து விளையாடவில்லையா?

षोडशस्त्रीसहस्राणां गृहेषु भगवान् हरिः ।
रमते द्वारकायाञ्च तावद्रूपधरः किल ॥१०॥

10. துவாரகையிலும் பதினாராயிரத்து நூற்றெட்டு வீடுகளில் பதினாராயிரத்து நூற்றெட்டு ஸ்த்ரீகளுடன் பதினாராயிரத்து நூற்றெட்டு ரூபம் தாங்கி இல்லறம் நடத்தவில்லையா?

बहुलाश्वेन राज्ञापि श्रुतदेवेन याचितः ।
रूपद्वयधरो देवस्तत्तद्गेहमवाप हि ॥११॥

11. ராஜாவான பஹுலாச்வன், பிராமணனான ச்ருததேவன் இருவருக்காக வேண்டி இருரூபம் தாங்கி இருவர் வீட்டிற்கும் போய் இருவர் செய்த பூஜையையும் ஏற்கவில்லையா?

एवं हि गोकुले कृष्णो निवसन्नेव लीलया ।
मधुरायां द्वारकायामिन्द्रप्रस्थेपि दृश्यते ॥१२॥

12. இவ்வாறே கோகுலத்திலிருந்தவாறே மதுரையிலும்.

துவாரகையிலும் இந்த்ரப்ரஸ்தத்திலும் ஸ்ரீக்ருஷ்ணன் விளையாடுகிறான். ஏன் முடியாதா?

भागवता ऊचुः

பாகவதர்கள்

उपपन्नमिदं सर्वं सर्वशक्तस्य सद्गुरो ।
सुप्रसिद्धमिदं शौरेरतिमानुषचेष्टितम् ॥१३॥

*13. ஸத்குரோ! ஸர்வசக்தனான பகவானுக்கு முடியாததே இல்லை. இவ்வாறு மனிதசக்திக்கு மேற்பட்ட லீலைகளும் க்ருஷ்ணாவதாரத்தில் ஸஹஜம்தான்.*

किन्तु कृष्णस्य विरहो वर्णितो व्रजवासिनाम् ।
श्रीशुकाचार्यदेवेन व्यक्तमेव मुहुर्मुहुः ॥१४॥

*14. ஆனால் ஸ்ரீசுகர் ஸ்ரீமத் பாகவதத்தில் கோபிகைகள் விரஹத்தினால் வாடியதாக பல தடவை சொல்லியிருக்கிறாரே.*

श्रीसद्गुरुरुवाच

ஸ்ரீஸத்குரு

स्फूर्तिरेव हि सर्वत्र कृष्णरूपस्य दृश्यते ।
व्यवहारेप्यपश्यन्तो दुःखं विरहजं गताः ॥१५॥

*15. பகவானின் ஆவிர்பூதஸ்வரூபமே எங்கும் தெரிகிறது. ஆனால் வ்ரஜவாஸிகள் வ்யவஹாரத்திலும் அவனைக் காணாது விரஹதாபமடைந்தனர்.*

ये यथा द्रष्टुमिच्छन्ति गोविन्दं व्रजवासिनः ।
ते तथा तत्र पश्यन्ति कृष्णमेव मुहुर्मुहुः ॥१६॥

*16. வ்ரஜவாஸிகள் விரும்பியபடியெல்லாம் அவர்கள் அவ்வப்பொழுது க்ருஷ்ணதர்சனம் பெற்றுத்தான் இருந்தனர்.*

श्रीकृष्णदर्शनं तेषां मायिकं कल्पितं न हि ।
दिव्यशक्तिप्रकटितं जानीत परमात्मनः ॥१७॥

17. அவர்கள் கண்ட க்ருஷ்ணஸ்வரூபமும் கல்பிதமோ மாயிகமோ இல்லை. பகவானின் திவ்யசக்தியால் ப்ரகடனம் செய்யப்பட்டது.

अस्मिन् बृन्दावने विष्णोर्नित्यलीला प्रकाशते ।
अन्यत्र दृश्यते लीला प्राकृतैर्व्यावहारिकी ॥१८॥

18. இந்த ப்ருந்தாவனத்தில் பகவானின் நித்யலீலை நடக்கிறது. வேறு இடங்களில் வ்யவஹாரலீலைகள் நடக்கின்றன. அவைகளை பாமரமக்களும் பார்க்கும்படி இருக்கிறது.

स्फुरणं द्वारकायाञ्च विद्यते पार्थसारथेः ।
नित्यं निरीक्षमाणानामिति सूतस्य वाक्यतः ॥१९॥

19, துவாரகையிலும் பகவானின் நித்ய ஆவிர்பாவமுண்டு. நித்யம் நிரீக்ஷமாணானாம் என்று ஸூதர் சொல்லவில்லையா!

रहो गतः पार्श्वगतः शुद्धान्ते क्रीडति प्रभुः ।
निवसन् पाण्डवैः साकमपि योगेश्वरेश्वरः ॥२०॥

20. பாண்டவர்களுடன் துவாரகையிலிருந்தபோதிலும் துவாரகையில் ரஹஸ்யமாக ருக்மிணி முதலிய தேவிகளுடன் இருந்து வந்தான் என்று ரஹோகத: பார்ச்வகத: என்றும் ஸூதர் சொல்லியிருக்கிறாரே.

तथापि रुक्मिणी मुख्याः कृष्णस्य परमाः स्त्रियः ।
मेघहंसादिदौत्येन गायन्ति विरहातुराः ॥२१॥

21. ஆயினும் வ்யவஹாரத்திலும் அவனைப் பாராமல் க்ருஷ்ணனிடம் மேகம் ஹம்ஸம் முதலியவைகளை தேவிகள் தூது அனுப்பினர்.

कृष्णस्य चरणाम्भोजं नित्यनूतनमेव हि ।
क्षणमात्रमपि त्यक्तुं कापि देवी न शक्नुयात् ॥२२॥

22. க்ருஷ்ணஸங்கமம் நித்யநூதனமில்லையா! எனவே ஒரு கணம் கூட அவனைப் பிரிய எவர்தான் ஸஹிப்பர்?

तस्मान्न विस्मयः कार्यः कृष्णस्य चरितेऽद्भुते ।
सर्वत्र राजते शौरेरतिमानुषचेष्टितम् ॥२३॥

23. ஆகையால் க்ருஷ்ணசரித்ரத்தில் எதுவும் நடக்காத விந்தையில்லைபகவானின் திவ்யலீலை எங்கும்தான் நடக்கிறது.

भागवता ऊचुः

பாகவதர்கள்

व्यवहारेपि सर्वत्र स्थातुं कृष्णस्तु शक्नुयात् ।
तथा किं न चकारायं सर्वशक्तोपि माधवः ॥२४॥

24. வ்யவஹாரத்திலும் பகவான் எங்குமிருக்க சக்தி உடையவர்தானே. அப்படி ஏன் செய்யவில்லை?

श्रीसद्गुरुरुवाच

ஸ்ரீ ஸத்குரு

लोकविस्मापनं कर्तुं नेच्छति श्यामसुन्दरः ।
मोहयत्येव निखिलान् पामरान्नरचेष्टया ॥२५॥

25. க்ருஷ்ணன் லோகத்தை ஆச்சர்யப்படுத்த விரும்புவதில்லை. எனவே உலகை அனுசரித்தே லீலை செய்து பாமரமக்களை மோஹிக்கச் செய்கிறான்.

किन्तु जानन्ति कृष्णस्य वैभवं नारदादयः ।
ते हि पश्यन्ति सर्वत्र राजमानं तमेव हि ॥२६॥

26. ஆனால் பகவானின் அத்புதச் செயலை நாரதர்முதலிய பக்தர்களே அறிவார்கள். அவர்களே எங்கும் அவனைக் காண்கின்றனர்.

भागवता ऊचुः

பாகவதர்கள்

भवद्वाक्यकुठारेण विच्छिन्नः संशयद्रुमः ।
अन्यच्च कृष्णचरितं विस्तराद्वर्णय प्रभो ॥२७॥

27. ப்ரபோ! தங்கள் வாக்யமாகிய கோடாரியினால் எங்கள் ஸம்சயமாகிய மரம் வெட்டி வீழ்த்தப்பட்டது. மற்ற க்ருஷ்ணலீலைகளைச் சொல்வீர்களாக.

शाब्दे परे च निष्णातं सर्वज्ञं शिष्यवत्सलम् ।
आचार्यं ये प्रपद्यन्ते न विषीदन्ति ते क्वचित् ॥२८॥

28. சப்தபரும்மத்திலும், பரப்ரும்மத்திலும் லயித்துவிட்ட ஸர்வக்ஞரான குருவை அடைந்தவர்களுக்கு துயரமேயில்லை.

अहो भाग्यवशादेव कृष्णस्य कृपया ननु ।
अस्माभिः सेवितोस्त्यत्र स्वच्छन्दगमनो भवान् ॥२९॥

29. சுதந்திரமான தாங்கள் எங்களுக்கு வசமாக இருக்கக் காரணம் க்ருஷ்ணக்ருபையே. அது எங்கள் பாக்யமேயன்றோ!

श्रोतव्यं कृष्णचरितमलं विषयवार्तया ।
दुःसङ्गे लभ्यते दुःखं सत्सङ्गे लभ्यते सुखम् ॥३०॥

30. வீண் பேச்சு வேண்டாம். கேட்க வேண்டியது க்ருஷ்ணகதையேயன்றோ! துஷ்டஸங்கத்தினால் துக்கம்தான். ஸத்ஸங்கத்தினால்தான் சுகம்.

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये द्वारकाकाण्डे सद्गुरुभागवतसंवादो नामाष्टमोऽध्यायः ॥८॥*

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிஸ்வாமிகள் அருளிச்செய்த ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில் த்வாரகாகாண்டத்தில் எட்டாவது அத்யாயம்.**

## अथ नवमोऽध्यायः

## ஒன்பதாம் அத்யாயம்

### श्रीसद्गुरुरुवाच

### ஸ்ரீஸத்குரு

सूर्योपरागे संप्राप्ते सर्वेपि द्वारकौकसः ।
समन्तपञ्चकं प्रापुर्महोत्सवकुतूहलाः ॥१॥

1. ஸூர்யக்ரஹண புண்யகாலத்தில் எல்லா த்வாரகாவாஸிகளும் மஹோத்ஸவம் பார்க்கவேண்டி குருக்ஷேத்ரம் வந்தனர். 'ஸமந்தபஞ்சகம்' என்ற தீர்த்தம் அங்கு இருக்கிறது.

यत्र भार्गवरामेण कृतं तीर्थं सुमङ्गलम् ।
प्रकाशते पवित्रं हि महर्षिगणसङ्गमात् ॥२॥

2. பரசுராமரால் அங்கு புண்யதீர்த்தம் ஏற்படுத்தப்பட்டதன்றோ! அதில் மஹரிஷிகள் தீர்த்தமாடுவதால் பரம பாவனமாயிற்று.

तत्र स्नात्वा च विधिवत् कृत्वा च पितृतर्पणम् ।
ब्राह्मणेभ्यो ददुर्धेनूर्वस्त्राणि च धनानि च ॥३॥

3. யாதவர்கள் அதில் விதிப்படி தீர்த்தமாடி பித்ருதர்ப்பணம் முடித்து ப்ராம்மணர்களுக்குத் தானம் கொடுத்து பிறகு தங்கள் கூடாரத்திற்கு வந்து சேர்ந்தனர்.

इतस्ततः सञ्चरन्तो भाषमाणाः परस्परम् ।
स्नात्वा सर्वेषु तीर्थेषु संप्रापुः शिबिरञ्च ते ॥४॥

4. இங்குமங்கும் ஸஞ்சரித்து பரஸ்பரம் ஸம்பாஷணை செய்துகொண்டு ஸந்தோஷமாக எல்லாம் பார்த்துவிட்டு கூடாரம் வந்துசேர்ந்தனர்.

पाण्डवाः कौरवाः सर्वे राजानश्च महाबलाः ।
भीष्मद्रोणादयश्चापि तथा कुन्त्यादयः स्त्रियः ॥५॥
आगतं कृष्णमाकर्ण्य तद्दर्शनकुतूहलात् ।
आजग्मुः शिबिरं सद्यो नानोपायनपाणयः ॥६॥

5,6. பாண்டவர்களும் கௌரவர்களும் மற்றும் பல ராஜாக்களும், மஹாபலசாலிகளான பீஷ்மர் துரோணர்முதலியவர்களும், குந்திமுதலிய ஸ்திரீகளும், க்ருஷ்ணன் வந்திருப்பதைக் கேட்டு பல உபஹாரங்களை எடுத்துக்கொண்டு பகவான் இருக்கும் கூடாரத்திற்கு வந்து சேர்ந்தனர்.

भगवानपि गोविन्दः सपत्नीको यथाविधि ।
तैः साकमुपसङ्गम्य पप्रच्छ कुशलं तथा ॥७॥

7. பகவானாகிய கோவிந்தனும் ருக்மிணிமுதலிய தேவிகளுடன் அவர்களை வரவேற்று குசலப்ரச்னம் செய்தான்.

ब्रह्मादिभिः सुरैः सर्वैः पूजितेन परात्मना ।
पूजिता भूमिपाः सर्वे प्रापुश्च परमं सुखम् ॥८॥

8. ப்ரம்மாதிதேவர்களாலும் பூஜிக்கப்படும் பகவானாலேயே பூஜிக்கப்பட்டு எல்லா அரசர்களும் மகிழ்ச்சியடைந்தனர்.

एवञ्च सर्वे मुनयो वासुदेवदिदृक्षवः ।
आजग्मुः परमानन्दं कृष्णस्य शिबिरं महत् ॥९॥

9. அவ்வாறே மஹரிஷிகளும் பகவானைக் காணவேண்டி பகவானிருக்கும் பெரிய கூடாரத்திற்கு வந்து சேர்ந்தனர்.

ब्रह्मण्यदेवो भगवान् स्वधर्ममनुशिक्षयन् ।
जग्राह भक्तिपूर्वञ्च तेषां पादोदकं शिवम् ॥१०॥

10. ப்ரஹ்மண்ய தேவனான பகவானும் ஸ்வதர்மத்தை உலகுக்குக் காட்டவேண்டி அவர்களின் பாததீர்த்தத்தை எடுத்துக் கொண்டான்.

एवं राजस्त्रियः सर्वाः सर्वालङ्कारभूषिताः ।
सङ्गता कृष्णपत्नीभिर्लेभिरे परमां मुदम् ॥११॥

11. ஸர்வாலங்காரமும் செய்து கொண்டிருக்கும் ராஜஸ்த்ரீகள் யாவரும் ருக்மிணிமுதலிய க்ருஷ்ணபத்னிகளுடன் கலந்து ஸம்பாஷணை செய்து மகிழ்ந்தனர்.

राजानः सर्वशास्त्रज्ञा नानादेशादुपागताः ।
कृष्णस्य महदैश्वर्यं दृष्ट्वा प्रापुश्च निश्चयम् ॥१२॥

12. பல தேசத்திலிருந்து வந்துள்ள எல்லா அஸ்த்ர சஸ்த்ரங்களும் அறிந்த அரசர்களும் க்ருஷ்ணனின் மஹத்தான ஐஸ்வர்யத்தைக் கண்டு ஆச்சர்யமடைந்தனர்.

द्रौपदी कृष्णपत्नीभिः सह भैष्म्यादिभिस्तदा ।
उपविश्य क्वचित्प्रीता पप्रच्छ भगवत्कथाम् ॥१३॥

13. த்ரௌபதியும் க்ருஷ்ணபத்னிகளுடன் தனியாக அமர்ந்து பகவத்கதைகளைக் கேட்டாள்.

तासां वैवाहिकं कर्म पप्रच्छ च पृथक् पृथक् ।
ताः सर्वाः कथयामासुः पाञ्चालीं प्रति लज्जया ॥१४॥

14. க்ருஷ்ணபத்னிகளின் விவாஹக்கதையை த்ரௌபதி அவரவர்களைத் தனித்தனியாகக் கேட்டாள். அவர்களும் லஜ்ஜையுடன் கதை சொன்னார்கள்.

सानन्दं पूजयामास कृष्णपत्नीर्यशस्विनीः ।
पतिव्रता महाभागा कृष्णा कृष्णसखी च सा ॥१५॥

15. பதிவ்ரதையும் மஹாபாக்யவதியுமான க்ருஷ்ணனின் ஸகியான க்ருஷ்ணபத்னிகளை பக்தியுடன் பூஜை செய்தாள்.

एतस्मिन्नन्तरे नन्दो गोपैः सर्वैः समन्वितः ।
आजगाम प्रेमपूर्वं कृष्णदर्शनलालसः ॥१६॥

16. இந்த ஸமயம் நந்தகோபன் ஆயர்களுடன் க்ருஷ்ணனைக் காணுமார்வத்துடன் வந்து சேர்ந்தான்.

तं दृष्ट्वा दूरतो नन्दं शूरसेनात्मजः सुधीः ।
उत्थाय चासनात्तूर्णं परिरेभे पुनः पुनः ॥१७॥

17. நந்தனைக் கண்ட வஸுதேவன் ஆஸனத்திலிருந்து ஓடிவந்து நந்தனை ஆனந்தத்துடன் அடிக்கடி தழுவிக்கொண்டு வரவேற்றான்.

नन्दस्य परमं प्रेम स्मरन्नानकदुन्दुभिः ।
मुमोचानन्दबाष्पञ्च सुहृद्दर्शनकौतुकात् ॥१८॥

18. நந்தனைக் கண்ட ஆனந்தத்துடன் வஸுதேவன் நந்தன் செய்த உபகாரத்தை நினைத்து ஆனந்தக்கண்ணீர்விட்டார்.

आलिङ्ग्य नन्दमहिषीं देवक्या सह रोहिणी ।
पप्रच्छ कुशलं प्रेम्णा गोकुलस्य मनस्विनी ॥१९॥

19. பெரிய மனதுள்ள தேவகியும் ரோஹிணியும் யசோதையைக்கட்டித் தழுவி ஆனந்தமடைந்து கோகுலத்தின் க்ஷேமத்தை விசாரித்தனர்.

रोहिणीं देवकीञ्चापि परिरभ्य व्रजेश्वरी ।
बलभद्रस्य कृष्णस्य प्रेम्णा पप्रच्छ चेष्टितम् ॥२०॥

20. யசோதை, ரோஹிணியையும் தேவகியையும் ஆனந்தமுடன் கட்டிக்கொண்டு பலராமன், க்ருஷ்ணன் இருவரின் க்ஷேமத்தை விசாரித்தாள்.

एकत्रैव समासीनास्ताः सर्वाः कृष्णमातरः ।
कृष्णस्य विविधां लीलां वदन्ति स्म परस्परम् ॥२१॥

21. ஓரிடத்திலமர்ந்து அந்த க்ருஷ்ணமாதாக்கள் யாவரும் பரஸ்பரம் க்ருஷ்ணலீலைகளைப் பேசி மகிழ்ந்தனர்.

आकर्ण्य वासुदेवोऽपि नन्दगोपमुपागतम् ।
सन्त्यज्य सकलान् भूपानाजगाम ससंभ्रमम् ॥२२॥

22. நந்தகோபன் வந்திருப்பதையறிந்த கண்ணன் எல்லா அரசர்களையும் முனிவர்களையும்கூட விட்டுவிட்டு ஓடி வந்தான்.

चक्रे प्रणामं नन्दस्य रामेण सह माधवः ।
आलिङ्ग्य पुत्रौ नन्दोऽपि बाष्पस्निग्धोऽभवत्तदा॥२३॥

23. பலராமனுடன்கூட ஓடிவந்து நந்தகோபனை வணங்கினான். நந்தனும், பலராமனையும் கண்ணனையும் கட்டிக்கொண்டு ஆனந்தக் கண்ணீர் வடித்தான்.

यशोदापि प्रियं पुत्रमालिङ्ग्य प्रेमपूर्वकम् ।
गोकुलादाहृतं स्वादु नवनीतं ददौ तदा ॥२४॥

24. யசோதையும் கண்ணனைக் கட்டிக்கொண்டு

கோகுலத்திலிருந்து கொண்டுவந்த வெண்ணையை வாயிலூட்டினாள்.

वर्णयामास सानन्दं बाललीलां व्रजेश्वरी ।
देवकीं प्रति कृष्णस्य बाष्पस्निग्धविलोचना ॥२५॥

25. தேவகியைப் பார்த்து யசோதை கண்ணனின் பாலலீலைகளை ஆனந்தபாஷ்பத்துடன் வர்ணித்தாள்.

यशोदायास्तदा कृष्णे वात्सल्यं वीक्ष्य देवकी ।
संप्राप परमानन्दं परमाश्चर्यमेव च ॥२६॥

26. கண்ணனிடம் யசோதைக்குள்ள வாத்ஸல்யத்தைக் கண்டு தேவகி ஆச்சர்யமும் ஆனந்தமுமடைந்தாள்

अङ्कञ्च स्वयमारुह्य यशोदाया हरिस्तदा ।
प्रेम प्रकटयामास बालचापल्यपूरितम् ॥२७॥

27. கண்ணன் யசோதையின் மடியில் தானே ஏறி உட்கார்ந்து தனது ப்ரேமையையும் குறும்புத்தனத்தையும் காட்டினான்.

एवं प्रसन्नहृदयां राधिकां श्यामसुन्दरः ।
आश्लिष्य सान्त्वयामास सप्रेम मृदुभाषणैः ॥२८॥

28. ப்ரஸன்னமான மனதுடன் நிற்கும் ராதையைக் கண்ட ச்யாமஸுந்தரன் அவளிடம் ஓடிவந்து ம்ருதுவான ஸல்லாபங்களால் அவளை ஸமாதானம் செய்தான்.

एवञ्च गोपिकाः सर्वाः परिरभ्य पृथक् पृथक् ।
सान्त्वयामास सानन्दं प्रेमभाषणपूर्वकम् ॥२९॥

29. அவ்வாறே எல்லா கோபிகைகளயும் தனித்தனியாகப் பார்த்து ஸல்லாபம் செய்து ஸமாதானப்படுத்தினான்.

अथ तत्रागताः कृष्णो रुक्मिणीप्रमुखाः स्त्रियः ।
मात्रे निवेदयामास प्रेमपूर्वं पृथक् पृथक् ॥३०॥

30, பிறகு அங்கு வந்த ருக்மிணிதேவியை தேவகி, யசோதைஅம்மாவுக்கு அறிமுகம் செய்து வைத்தாள்.

यशोदा च महाभागा महाभाग्यवतीश्च ताः ।
शिरस्याघ्राय सानन्दं परिरभ्य चुचुम्ब सा ॥३१॥

31. மஹாபாக்யவதியான யசோதை மஹாபாக்யசாலிகளான அவர்களைக்கட்டி அணைத்து உச்சி முகர்ந்து முத்தமிட்டாள்.

इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये द्वारकाकाण्डे तीर्थयात्रा नाम नवमोऽध्यायः ॥९॥

இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிஸ்வாமிகள் அருளிச்செய்த ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்ம்யத்தில் த்வாரகா காண்டத்தில் ஒன்பதாவது அத்யாயம்.

## अथ दशमोऽध्यायः

## பத்தாவது அத்யாயம்.

### श्रीसद्गुरुरुवाच

### ஸ்ரீஸத்குரு

अथ ता गोपिकाः सर्वाः समानीय हरिः स्वयम् ।
शिबिरं प्रविवेशापि रुक्मिण्यादिभिरावृतः ॥१॥

1. பிறகு பகவான் அந்த எல்லா கோபிகைகளையும் அழைத்துக்கொண்டு ருக்மிணிமுதலிய தேவிகளாலும் சூழப்பட்டவனாய் தனது கூடாரத்திற்குள் ப்ரவேசித்தான்.

रुक्मिणीप्रमुखा देव्यो राधिकाप्रमुखास्तदा ।
परस्परं वीक्षमाणाः परं प्रापुश्च विस्मयम् ॥२॥

2. ருக்மிணிமுதலிய தேவிகளும் ராதிகாமுதலிய கோபிகைகளும் பரஸ்பரம் பார்த்து ஆச்சர்யப்பட்டுக் கொண்டனர்.

ताः सर्वा वार्षभानव्यै प्रेमपूर्वं न्यवेदयत् ।
लज्जयाऽवाङ्मुखीः कृष्णः परिहासविचक्षणः ॥३॥

3. பரிஹாஸம் செய்வதில் திறமைசாலியான கண்ணன் அந்த ருக்மிணிமுதலிய தேவிகளை ராதைக்குப் பரிசயம் செய்வித்தான்.

அவர்களும் வெட்கத்துடன் தலை குனிந்து நின்று கொண்டிருந்தனர்.

### श्रीभगवानुवाच

### ஸ்ரீபகவான்

एषा विदर्भतनया रुक्मिणी रुचिरानना ।
सत्यभामामिमां विद्धि तथा जाम्बवतीमिमाम् ॥४॥

4. ராதே! அழகிய முகமுடைய இவள் விதர்பராஜகுமாரியான ருக்மிணி. இவள்தான் ஸத்யபாமா. இவள்தான் ஜாம்பவதி.

कालिन्दीयमियं सत्या तथेमां विद्धि लक्ष्मणाम् ।
मित्रविन्दामिमां विद्धि भद्रामेनाञ्च राधिके ॥५॥

5. இவள் பெயர் காளிந்தி. இவள் ஸத்யா. இவள் லக்ஷ்மணா. இவள் மித்ரவிந்தா. இவள் பத்ரா.

युष्माकं विरहादत्र दूयमानस्य मे प्रिये ।
एताः कुर्वन्ति सरसं सान्त्वनं प्रेमपूर्वकम् ॥६॥

6. ப்ரியே! உங்கள் விரஹத்தினால் கஷ்டப்படும் என்னை இவர்கள்தான் ஸரஸமாய் அன்புடன் ஸமாதானம் செய்வார்கள்.

वर्णिता गोकुलकथा मया बहुधा प्रिये ।
तथापि श्रोतुकामानामासां वर्णय सुन्दरि ॥७॥

7. ப்ரியே! இவர்களுக்கு நான் கோகுலகதையை பலவிதமாக வர்ணித்துச் சொல்லியிருக்கிறேன். ஸுந்தரி! உன்னிடம் கேட்க விரும்புகின்றனர். நீயே இவர்களுக்குச் சொல்லு.

### श्रीसद्गुरुरुवाच

### ஸ்ரீஸத்குரு

इत्युक्त्वा राधिकां कृष्णः सरसं प्रियभाषणः ।
भैष्म्यै निवेदयामास ललिताद्या सखीस्तथा ॥८॥

8.ப்ரியமாய்ப் பேசும் கண்ணன் இவ்வாறு ராதையிடம் சொல்லிவிட்டு பிறகு ருக்மிணிக்கு லலிதா முதலிய ஸகிகளைப் பரிசயம் செய்வித்தான்.

**श्रीभगवानुवाच**

**ஸ்ரீபகவான்**

एषा हि ललितादेवी मम प्राणसमा सखी ।
इयं विशाखा पद्मैषा तथेयं रङ्गदेविका ॥९॥
इन्दुलेखामिमां विद्धि तुङ्गविद्यामिमां तथा ।
चित्रलेखामिमां चैवं विद्धि चम्पकवल्लिकाम् ॥१०॥

9,10. இவள்தான் என் உயிர்த்தோழி லலிதா. இவள் விசாகா. இவள் பத்மா. இவள் ரங்கதேவி. இவள் இந்துலேகா. இவள் துங்கவித்யா. இவள் சந்த்ரலேகா. இவள் சம்பகவல்லி.

अष्टौ सख्यः प्रधाना हि मम श्रीवनचारिणः ।
ललितादिसखीनाञ्च सख्यः सन्ति सहस्रश ॥११॥

11. ப்ருந்தாவனத்தில் ஸஞ்சரிக்கும் எனக்கு இந்த எட்டுபேர்களும் ப்ரதான ஸகிகள். ஆனால் இவர்களுக்கும் ஸகிகளான கோபிகைகள் ஆயிரக்கணக்கில் இருக்கின்றனர்.

ताः सर्वाः श्रीवने प्रेम्णा निकुञ्जेषु दिने दिने ।
कुर्वन्ति मम कैङ्कर्यं राधिकायाश्च सादरम् ॥१२॥

12. இவர்கள் யாவரும் ப்ருந்தாவனத்தில் நிகுஞ்ஜத்தில் எனக்கும ராதைக்கும் தினந்தோறும் அன்புடன் ஸேவை செய்கின்றனர்.

आसां प्रणयपाशेन निबद्धोहं वरानने ।
व्यर्थं हि जीवितं मन्ये द्वारकानगरे मम ॥१३॥

13. அழகிய முகமுள்ள ருக்மிணி! இவர்களின் ப்ரேமையால் கட்டுண்ட நான் இங்கு த்வாரகையில் வீண்பொழுது போக்குகிறேனே என்று நினைக்கிறேன்.

54

शृणु श्रीवनमाहात्म्यं राधया कथितं प्रिये ।

मम बाल्यचरित्रं ते परमानन्दवर्धनम् ॥१४॥

14. ப்ரியே! ஸ்ரீப்ருந்தாவனமாஹாத்மியத்தையும் எனது பாலலீலைகளையும் ஸ்ரீராதையையே சொல்லச்சொல்லிக் கேள்.

**श्रीसद्गुरुरुवाच**

**ஸ்ரீஸத்குரு**

इत्युक्त्वा नन्दसूनुश्च तूर्णमुत्थाय चासनात् ।
यशोदासान्त्वनायैव जगामैव तदन्तिकम् ॥१५॥

15. இவ்வாறு சொல்லிவிட்டு நந்தகுமாரன் சீக்ரமாக ஆஸனத்திலிருந்து எழுந்திருந்து யசோதையை ஸமாதானம் செய்யவேண்டிச் சென்றுவிட்டான்.

तदा कृष्णप्रियाः सर्वाः प्रेमपूर्वं स्मिताननाः ।
अन्योन्यं गाढमालिङ्ग्य कृष्णलीलां जगुस्तथा ॥१६॥

16. அப்பொழுது க்ருஷ்ணப்ரியைகளான அவர்கள் யாவரும் சிரித்த முகத்துடன் அன்யோன்யம் ஆலிங்கனம் செய்து கொண்டு க்ருஷ்ண லீலைகளைப் பாடினார்கள்.

तासां तु राजकन्यानां भैष्म्यादीनां विलोक्य ताः ।
न जातो गर्वलेशोऽपि प्रेमैव सुखसाधनम् ॥१७॥

17. கோபிகைகளைப் பார்த்து ருக்மிணிமுதலிய ராஜகுமாரிகளுக்குக் கொஞ்சங்கூட கர்வமே வரவில்லை. ப்ரேமையல்லவா ஸுகஸாதனம்.

एवमाभीरकन्यानां राधादीनां विलोक्य ताः ।
असूया नैव संभूता प्रेमैव सुखसाधनम् ॥१८॥

18. அவ்வாறே ராதைமுதலிய கோபிகைகளுக்கும் ருக்மிணிமுதலிய ராணிகளைப் பார்த்து அஸூயையே வரவில்லை. ப்ரேமையல்லவா ஸுகஸாதனம்

रुक्मिणीप्रमुखास्तत्र कृष्णस्य परमाः स्त्रियः ।

रहस्यं प्रेमभावस्य पप्रच्छुर्वार्षभानवीम् ॥१९॥

19. பகவானின் பட்டமகிஷிகளான ருக்மிணிமுதலியவர்கள் ராதையினிடம் ரஹஸ்யமாக ப்ரேமபாவங்களைப் பற்றிக் கேட்டனர்.

### महिष्य ऊचुः

### பட்டமஹிஷிகள்

कथं नन्दात्मजं कृष्णं विशुद्धप्रेमतत्परम् ।
आराध्य तं वशीकुर्याद्वद नो वार्षभानवि ॥२०॥

20. ராதே! தூய அன்பையே லக்ஷியமாகக்கொண்ட கண்ணனை எப்படி ஆராதித்து வசமாக்குவது? அதை எங்களுக்குச் சொல்லவேண்டும்.

### राधिकोवाच

### ராதை

न शक्नुयाद्वशीकर्तुं ब्रह्मादिसुरदुर्लभम् ।
लोकः सर्वसमर्थोऽपि केवलं पूजया हरिम् ॥२१॥

ப்ரும்மாதி தேவர்களுக்கும் துர்லபமான பகவானை உலகில் யார்தான் பூஜையால் மட்டும் வசமாக்கிவிட முடியும்?

कस्यापि न वशं याति स्वच्छन्दगतिरच्युतः ।
तं वशीकर्तुमिच्छन्ति योगिनः स्वार्थतत्पराः ॥२२॥

22. சுதந்திரனான பகவான் யாருக்கும் வசமாவதில்லை. ஆனால் யோகிகள் ஸித்திகளையே விரும்புபவர்கள் பகவானை வசம் செய்ய நினைக்கின்றனர்.

प्रीतिं लभेत कृष्णस्य स्वातन्त्र्ये प्रेमपूर्वकम् ।
लीलाभाजनमात्मानं सदा तस्यैव चिन्तयेत् ॥२३॥

23. கண்ணனை நம்முடன் சுதந்திரமாக விளையாடவிட வேண்டும், நம்மை அவனுடைய லீலாபாத்ரமாகவே

சிந்தித்திருக்க வேண்டும்.

कामं क्रोधमसूयाञ्च डंभं लोभञ्च माधवः ।
उपेक्षते स्वभक्तेषु प्रेम शुद्धमपेक्षते ॥२४॥

24. காமம், கோபம், அஸூயை, டம்பம், லோபித்தனம் இவைகளை கண்ணன் தனது பக்தர்களிடம் இருந்தால்கூட வெறுக்கிறான். சுத்தமானப்ரேமை ஒன்றையே விரும்புகிறான்.

या नारी तत्सुखायैव स्मरत्यात्मानमन्वहम् ।
सैव भाग्यवती नूनं प्रेमभावविचक्षणा ॥२५॥

25. எந்த பெண் தனது ஸுகத்தைப் பாராட்டாமல் அவனது ஸுகத்திலேயே ஸுகப்படுகிறாளோ அவளே பாக்யவதி. அவளே ப்ரேமபாவம் நன்கு அறிந்தவள்.

स्वार्थलाभं विहायैव तत्सुखे सुखमाप्नुयात् ।
इदं प्रेमरहस्यं हि यथा जानन्ति गोपिकाः ॥२६॥

26. சுயநலமற்று கண்ணனின் ஸுகத்தில் ஸுகமடையவேண்டும். இதை கோபிகைகளே அறிவார்கள். இதுவே ப்ரேம ரஹஸ்யம்.

तथा यूयमपि प्रेम्णा डम्भासूयाविवर्जिताः ।
भजध्वं शुद्धभावेन प्राणवल्लभमच्युतम् ॥२७॥

27. இவ்வாறே நீங்களும் டம்பம் அசூயை இவைகளைவிட்டு சுத்த மனதுடன் ப்ராணவல்லபனான அச்யுதனையே பஜியுங்கள்.

भेदभावं परित्यज्य प्रेमपूर्वं परस्परम् ।
आनन्दयत गोविन्दं चुम्बनालिङ्गनादिभिः ॥२८॥

28. பேதபாவத்தை விட்டு பரஸ்பரம் ப்ரேமபாவத்துடன் கோவிந்தனை சும்பனம் ஆலிங்கனம் முதலியன செய்து ஆனந்தப்படுத்துங்கள்.

एवमाराधितो नित्यं प्रेमभक्त्या कृपानिधिः ।
कदाप्यन्तःपुरं त्यक्त्वा न गच्छेद्बहिरच्युतः ॥२९॥

29. இவ்வாறு ப்ரேமபக்தியுடன் ஆராதித்தால் க்ருபாநிதியான பகவான் ஒருகாலும் நம் அந்தப்புரத்தை விட்டு வெளியே போகவே மாட்டான்.

### श्रीसद्गुरुरुवाच

### ஸ்ரீஸத்குரு

इत्युक्तं वाक्यमाकर्ण्य परमानन्दवर्धनम् ।
राधिकां पूजयामासुः कृष्णपत्न्यः पृथक् पृथक् ॥३०॥

30. இவ்வாறு பரமானந்தவர்தனமான ராதையின் வசனத்தைக்கேட்டு க்ருஷ்ணபத்னிகள் தனித்தனியாக ராதையை பூஜித்தனர்.

भगवानपि गोविन्दो रजन्यां पुनरागतः ।
रुक्मिण्या राधया चापि रेमे रसविवर्धनः ॥३१॥

31. பகவான் கோவிந்தனும் இரவு திரும்பி வந்து ராதாருக்மிணி ஸமேதனாய் அவர்களின் ரஸத்தை வளர்ப்பவனாய் விளையாடினான்.

सखीभावेन सा सेवे रुक्मिणी प्रेमतत्परा ।
राधया रममाणं तं रसिकेन्द्रं तु रात्रिषु ॥३२॥

32. ருக்மிணியும் ராதையின் ஸகியாக தன்னை பாவித்து ப்ரேமையுடன் ராதாரமணனை ஸேவித்தாள்.

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये द्वारकाकाण्डे श्रीराधारुक्मिणीसंवादो नाम दशमोऽध्यायः ॥१०॥*

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிஸ்வாமிகள் அருளிச்செய்த ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில்துவாரகாகாண்டத்தில் பத்தாவது அத்யாயம்.**

# अथैकादशोऽध्यायः

## பதினோராம் அத்யாயம்

### श्रीसद्गुरुरुवाच

### ஸ்ரீஸத்குரு

समन्तपञ्चकक्षेत्रे वसुदेवो महामनाः ।
चकार यज्ञं परमं महर्षिगणचोदितः ॥१॥

*1. குருக்ஷேத்ரத்தில் மஹாமனஸ்வியான வஸுதேவர் முனிவர்களின் ப்ரேரணையால் ஒரு யாகம் செய்தார்.*

सर्वे जनाश्च सानन्दं तत्र यज्ञदिदृक्षया ।
चक्रुर्वासं मुकुन्देन प्रेमपूर्वं समर्चिताः ॥२॥

*2. அந்த யக்ஞமஹோத்ஸவத்தில் எல்லா ஜனங்களும் க்ருஷ்ணனால் கௌரவிக்கப்பட்டு தங்கியிருந்தனர்.*

सर्वसम्पत्समृद्धे तु तस्मिन् यज्ञमहोत्सवे ।
परं कौतूहलं प्रापुः सकला यात्रिका जनाः ॥३॥

*3. எல்லா யாத்ரிகஜனங்களும் ஸர்வஸம்பத்தும் நிறைந்த அந்த யக்ஞமஹோத்ஸவத்தில் குதூஹலமாய்க் கலந்துகொண்டனர்.*

एवं मासाश्च चत्वारो गोपीनां कृष्णसङ्गमात् ।
गताः क्षणमिव क्षेत्रे भार्गवेण विनिर्मिते ॥४॥

*4. பரசுராம க்ஷேத்ரமான ஸமந்தபஞ்சகத்தில் இவ்வாறு நான்கு மாதம் ஓடிவிட்டன. கோபிகைகளுடன் கண்ணனும்கூடி இருந்தான்.*

सर्वे जनाः स्वनगरं ययुः कृष्णेन मानिताः ।
एवञ्च यादवाः सर्वे द्वारकाञ्च प्रतस्थिरे ॥५॥

*5. எல்லா ஜனங்களும் க்ருஷ்ணனிடம் விடைபெற்று க்ருஷ்ணன் செய்த ஸம்பாவனையைப் பெற்று மகிழ்ந்து*

தங்கள்தங்கள் நகரத்துக்குத் திரும்பினர். யாதவர்களும் துவாரகைக்குப் புறப்பட்டனர்.

एवं हि गोपिकाः सर्वाः श्रीकृष्णविरहाक्षमाः ।
रुरुदुस्तत्र तत्रैव स्थित्वा नन्देन सान्त्विताः ॥६॥

6. அவ்வாறே கோபிகைகள் யாவரும் க்ருஷ்ணவிரஹம் தாளாமல் ஆங்காங்கு நின்றுகொண்டு அழுது கொண்டிருந்த னர். அவர்களை நந்தகோபன் ஸமாதானப்படுத்தினான்.

इयेष द्वारकां नेतुं सर्वं गोपीजनं हरिः ।
रसिकेन्द्रो हि भगवान् राधिकाविरहाक्षमः ॥७॥

7. ராதையின் பிரிவுதாளாத ரஸிகேந்த்ரனான கண்ணன் எல்லா கோபிகைகளையும் துவாரகைக்கு அழைத்துப்போக விரும்பினான்.

**श्रीभगवानुवाच**

**ஸ்ரீபகவான்**

यूयमागच्छत प्रेम्णा मया सार्धं वराननाः ।
द्वारकां प्राप्य तत्रैव भवाम सुखजीविनः ॥८॥

8. ஸுமுகிகளான நீங்கள் யாவருமே என்னுடன் துவாரகை வந்துவிடுங்களேன். அங்கு நாம் ஸுகமாய் இருக்கலாமே.

युष्माकं विरहेणैव नित्यमस्मि सुदुःखितः ।
तस्मादागच्छताद्यैव मया सार्धं पुरीं मम ॥९॥

9. உங்கள் விரஹத்தினால் நான் தினமும் துன்பப்படுகிறேன். எனவே இப்போதே என்னுடன் துவாரகைக்கு வந்துவிடுங்கள்.

**श्रीराधोवाच**

**ஸ்ரீராதிகா**

गच्छ त्वं द्वारकां कृष्ण स्वच्छन्दं देवकीसुत ।
अहञ्च श्रीवनं यामि सखीजनसमन्विता ॥१०॥

10. தேவகிநந்தன! கண்ணா! நீயும் சுதந்திரமாக உன் இஷ்டப்படியே துவாரகைக்குப் போ. நானும் என் ஸகிகளுடன் ஸ்ரீப்ருந்தாவனமே போகின்றேன்.

बृन्दाञ्च यमुनाञ्चैव तथा गोवर्धनं गिरिम् ।
त्यक्तुं न कामये सत्यं यशोदां नन्दमेव च ॥११॥

11. ஸ்ரீப்ருந்தாவனம், கோவர்தனம், யமுனை, கோகுலம், நந்தன், யசோதை இவர்களை விட்டுப் பிரிந்திருக்க என் மனம் ஏற்கவில்லை.

त्वं तु तत्र निकुञ्जेषु दृश्यादृश्यस्वरूपदृक् ।
रमसे गोपनारीभिर्नित्यं रासविलासकृत् ॥१२॥

12. நீயும் அங்கு நிகுஞ்ஜங்களில் காணாமல் கண்டும் காட்சி தந்து நித்யமும் ராஸலீலை செய்கிறாய்.

लोकवेदनिबद्धस्य जानामि हृदयं तव ।
तथापि गोपीभावं त्वं न विस्मरसि माधव ॥१३॥

13. மாதவ! உலகத்தாலும், சாஸ்த்ரத்தாலும் பந்தப்பட்டிருந்தும் நீ கோபீபாவத்தை மதிக்கிறாய். அதுவே போதும்.

अलं ते स्मितलेशोऽपि मम सौख्याय केशव ।
तञ्च संस्मृत्य संस्मृत्य जीवामि यमुनातटे ॥१४॥

14. கேசவ! உனது முறுவல் ஒன்றே போதுமானது. அதை நினைத்து நினைத்து நான் ப்ருந்தாவனத்தில் உயிர் பிழைத்திருப்பேன்.

## श्रीभगवानुवाच

## ஸ்ரீபகவான்

द्वारकां नाहमिच्छामि न राज्यं न च वै सुखम् ।
यथापूर्वं महारण्ये कामये चारणं गवाम् ॥१५॥

15. ராதே! நான் துவாரகையை விரும்பவில்லை. அரசாள வேண்டுமென்றோ ராஜஸௌக்யத்திலோ எனக்கு விருப்ப

மில்லை. முன்புபோல் ப்ருந்தாவனத்தில் மாடுமேய்க்கத்தான் விரும்புகிறேன்.

त्वरते कार्यकालो मे तथापि वृषभानुजे ।
क्षिप्रमेवागमिष्यामि श्रीमद्बृन्दावनं स्वयम् ॥१६॥

16. ராதே! ஆயினும் என் கடமையும் காலமும் என்னை இழுக்கிறது. எல்லாவற்றையும் முடித்துக்கொண்டு சீக்கிரமே ப்ருந்தாவனம் வந்துவிடுகிறேன்.

## श्रीसद्गुरुरुवाच

ஸ்ரீஸத்குரு

इत्युक्त्वा प्रेमबाष्पेण सुस्निग्धनयनाम्बुजः ।
प्रतस्थे द्वारकां कृष्णो रुक्मिण्यादिभिरावृतः ॥१७॥

17. இவ்வாறு சொல்லிக் கமலக்கண்ணன் கண்ணீர் பெருக்கிக்கொண்டே ருக்மிணி முதலியவர்களுடன் துவாரகைக்குப் புறப்பட்டான்.

रुदतीं राधिकां तत्र श्रीकृष्णविरहेण च ।
सान्त्वयामास ललिता सखीजनसमन्विता ॥१८॥

18. ஸ்ரீக்ருஷ்ணவிரஹத்தினால் ராதையும் அழுதாள். தோழிகளுடன் லலிதா அவளை ஸமாதானம் செய்தாள்.

## ललितोवाच

லலிதா

गच्छ त्वं राधिके तेन सानन्दं द्वारकापुरीम् ।
दास्यं कुर्मो वयञ्चापि श्रीमन्नन्दयशोदयोः ॥१९॥

19. ராதே! நீ கண்ணனுடன் ஆனந்தமாக துவாரகைக்குப் போய்விடு. நந்தனையும், யசோதையையும் நாங்கள் ஸேவை செய்துகொண்டு கவனித்துக் கொள்கிறோம்.

सुदुःसहो हि विरहः प्रियस्य वनमालिनः ।

तमेव प्राप्य तत्रैव नित्यं सुखमवाप्नुहि ॥२०॥

20. கண்ணன்பிரிவு தாள முடியாதல்லவா. எனவே அவனுடனேயே சென்று ஸுகமாக இருந்து வா.

श्रीराधोवाच

ஸ்ரீராதிகா

तस्यैव करुणां स्मृत्वा शोचामि न वियोगतः ।
उद्वाह्य राजकन्याश्च न विस्मरति गोपिकाः ॥२१॥

21. கண்ணனின் கருணையை நினைத்துத்தான் அழுகிறேன். விரஹத்தினால்கூட கண்ணீர் விடவில்லை. இவ்வளவு ராஜகுமாரிகளைக் கல்யாணம் செய்துகொண்டும் கோபிகைகளான நம்மை அவன் மறக்கவில்லையன்றோ!

किमस्माभिर्वनौकोभी राजराजस्य तस्य तु ।
तथाप्यस्मद्वियोगेन दुःखितो द्वारकां गतः ॥२२॥

22. ராஜாதிராஜனான துவாரகேசனுக்கு காட்டில் வாழும் நம்மால் ஆகவேண்டியது என்ன?. ஆயினும் நம்மைப் பிரிந்து கண்ணீர் பெருக்கிக்கொண்டே செல்கிறான் பார்.

अहं तु द्वारकां गन्तुं नेच्छामि ललिते सखि ।
विशुद्धं प्रेम नास्त्यत्र सर्वे शास्त्रविदो नराः ॥२३॥

23. ஸகி! லலிதே! நான் துவாரகைக்குப் போக விரும்பவில்லை. அங்கு சாஸ்த்ரமரியாதைகளுக்கு மதிப்பு தருவார்களேயன்றி சுத்தப்ரேமைக்கு மதிப்பிராது.

स एव नायकः कृष्णः साहमेवास्मि राधिका ।
रतिलीला च सा नूनं तदेव प्रेमकौतुकम् ॥२४॥
किन्तु कृष्णातटे रम्ये माधवीलतिकागृहे ।
मृदुपल्लवपर्यङ्के यत्सुखं तन्न विद्यते ॥२५॥

24,25. அதே நாயகனான க்ருஷ்ணன்தான். அதே நாயகியான ராதை நான்தான். அதே ப்ரேமையும், குதூஹலமும்தான்.

ஆனால் யமுனைக்கரையில் ப்ரேமமாதுரிகுஞ்ஜத்தில் நாங்கள் விளையாடும்போது கிடைத்த ஸுகம் இங்கு கிடைக்கவில்லை.

तस्माद्बृन्दावनं रम्यं क्षिप्रं गच्छाम सादरम् ।
तत्रापि रमते कृष्णः सानन्दं गूढचेष्टितः ॥२६॥

26. ஆகையால் ப்ருந்தாவனம் ப்ருந்தாவனம்தான். அதற்கு ஸமமான வேறு எந்த இடம் ரம்யமாக இருக்கும்! எனவே ப்ருந்தாவனமே போய்விடுவோம் வா. அங்கும் நமக்கு கண்ணன் நம்முடனேயே இருப்பான்.

**श्रीसद्गुरुरुवाच**

इत्युक्त्वा राधिकादेवी ललितादिसखीगणैः ।
प्रतस्थे श्रीवनं रम्यं नन्देनैव महात्मना ॥२७॥

**ஸ்ரீஸத்குரு**

27. இவ்வாறு சொல்லிவிட்டு ராதாதேவி லலிதாமுதலிய ஸகிகளுடன் நந்தகோபனுடன் ஸ்ரீப்ருந்தாவனமே புறப்பட்டு விட்டாள்.

मार्गेषु कीर्तयन्तस्ते कृष्णस्यैव कथां सदा ।
प्रापुर्बृन्दावनं क्षिप्रं कृष्णदर्शनलालसाः ॥२८॥

28. அவர்கள் யாவரும் வழியெல்லாம் கண்ணனைப் பற்றிப் பேசிக்கொண்டே கண்ணனைக் காணும் ஆர்வத்துடன் ப்ருந்தாவனம் வந்து சேர்ந்தனர்.

तत्रापि निवसन् कृष्णो नित्यं रासविलासकृत् ।
राधिकां सान्त्वयामास प्रेयसीर्गोपिकास्तथा ॥२९॥

29. ப்ருந்தாவனத்திலும் நித்யராஸவிஹாரியான வம்சீதரன் ராதையையும், கோபிகைகளையும் ஸமாதானம் செய்தான். அவன்தான் ப்ருந்தாவனத்தைவிட்டு வேறு எங்கும் போகவில்லையே.

नैव जानन्ति तां लीलां दिव्यां कृष्णस्य पामराः ।

व्यवहारकथां लोके तस्मादेव वदन्ति ते ॥३०॥

*30. க்ருஷ்ணனின் இந்த நித்யலீலாரஹஸ்யம் பாமரமக்களுக்குப் புரியாது. எனவே வ்யவஹாரக் கதைகளையேதான் உலகுக்குச் சொல்லவேண்டும்.*

बुद्धिमोहं न जनयेन्नित्यलीलां वदन् हरेः ।
अनुसृत्य व्यासपुत्रं व्यवहारकथां वदेत् ॥३१॥

*31. மக்களுக்கு க்ருஷ்ணனின் நித்யலீலையைச் சொல்லி குழப்பத்தை உண்டாக்கக் கூடாது. ஸ்ரீசுகர் சொன்னபடி வியவஹாரலீலையைமட்டும்தான் சொல்லவேண்டும்.*

सङ्गम्य कृष्णरसिकाः प्रेमभावात्परस्परम् ।
कुर्वन्ति नित्यलीलायाः कीर्तनं राधिकापतेः ॥३२॥

*32. ரஸிகர்களான பக்தர்களும் ப்ரேமையுடன்கூடி ராதாரமணனின் நித்யலீலைகளை ரஸித்து ஸல்லாபம் செய்கின்றனர்.*

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये द्वारकाकाण्डे गोपीनां बृन्दावनगमनं नामैकादशोऽध्यायः ॥११॥*

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிஸ்வாமிகள் அருளிச்செய்த ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில் துவாரகாகாண்டத்தில் பதினோராம் அத்யாயம்.**

# अथ द्वादशोऽध्यायः

# பன்னிரெண்டாம் அத்யாயம்

## *भागवता ऊचुः*

**பாகவதர்கள்**

प्रविश्य द्वारकां कृष्णः पुण्यश्रवणकीर्तनः ।
किञ्चकार कृपासिन्धुर्लोकधर्मं विडम्बयन् ॥१॥

*1. புண்யச்ரவண கீர்த்தனனான பகவான் க்ருஷ்ணன் துவாரகைக்கு வந்து லோகத்தை அனுசரித்து என்ன என்ன லீலைகள் செய்தான்?*

कथं जहार भूभारं करुणासिन्धुरीश्वरः ।
कदा पुनर्गोकुलञ्च प्राप भक्तजनप्रियः ॥२॥

2. க்ருபாஸிந்துவான ஈச்வரன் பூபாரத்தை எப்படி நீக்கினான்? பக்தவத்ஸலன் எப்பொழுது மறுபடியும் கோகுலம் வந்தான்?

पवित्रं कृष्णचरितं विचित्रमखिलं प्रभो ।
शृण्वतामपि नो नित्यं तृप्तिलेशो न जायते ॥३॥

3. விதவிதமானதும், பவித்ரமானதுமான க்ருஷ்ணசரித்ரத்தைக் கேட்டு எங்களுக்கு அலுப்பு ஏற்படவே இல்லை.

श्रीसद्गुरुरुवाच

ஸ்ரீஸத்குரு

सर्वसंपत्समृद्धायां स्वपुर्यां वसतो हरेः ।
लीलायां व्यावहारिक्यां विरक्तिरभवत्प्रभोः ॥४॥

4. ஸர்வஸம்பத்தும் நிறைந்த துவாரகையில் அரசாட்சி செய்துவரும் பகவானுக்கு லோகவ்யவஹாரலீலையில் உபரதி உண்டாகியது.

शीघ्रमेव भुवो भारं हृत्वा स्वच्छन्दचेष्टितः ।
इयेष गन्तुं भगवान् शाश्वतं परमं पदम् ॥५॥

5. சீக்ரமாகவே பூபார்த்தை நீக்கிவிட்டு சாச்வதமான பரமபதத்திற்கே போய்விட நினைத்தான்

अस्मिंल्लोकेऽवतीर्यास्य व्यतीतं शरदां शतम् ।
नित्ययौवनरूपस्य किं भयं कालवेगतः ॥६॥

6. இவ்வுலகில் அவதரித்து பகவானுக்கு நூறு வயதாகிவிட்டது. பகவானுக்கு என்ன! காலனைக் கண்டு பயமா? நித்யயௌவன ரூபனல்லவா!

आहूतो धर्मराजेन राजसूयचिकीर्षया ।
शक्रप्रस्थं जगामापि निजदारसमावृतः ॥७॥

7. ராஜஸூயம் செய்ய விரும்பி தர்மராஜனால் அழைக்கப்பட்டு தனது தேவிகளுடன்கூட க்ருஷ்ணன் இந்த்ரப்ரஸ்தம் வந்தார்.

चक्रुर्दिग्विजयञ्चापि पाण्डवाः कृष्णबान्धवाः ।
भीमेन घातयामास जरासन्धमपि प्रभुः ॥८॥

8. க்ருஷ்ணனின் தலைமையில் பாண்டவர்கள் திக்விஜயமும் செய்தனர். பீமன் மஹாராஜனான ஜராஸந்தனை மல்யுத்தத்தில் கொன்று போட்டான்.

जरासन्धनिरुद्धानां क्षत्रियाणां गुहान्तरे ।
कृपया दर्शनं दत्वा मोचयामास तानपि ॥९॥

9. ஜராஸந்தனால் குகையில் அடைக்கப்பட்டிருந்த அரசர்களை பகவான் விடுவித்து திவ்யதர்சனம் தந்தான்.

पूजितो धर्मराजेन राजसूयसभान्तरे ।
सर्वदेवसमाराध्यो हरिः सर्वोत्तमो बभौ ॥१०॥

10. ஸர்வதேவர்களாலும் பூஜிக்கப்படும் க்ருஷ்ணன் தர்மராஜனால் ராஜஸூயஸபையில் பூஜிக்கப்பட்டு ஸர்வோத்தமனாய் விளங்கினான்.

कृष्णस्य वैभवं दृष्ट्वा पार्थिवानां सुदुर्लभम् ।
दमघोषात्मजः क्रोधमवापासूयया खलः ॥११॥

11. துஷ்டனான சிசுபாலன், அரசர்களுக்கும் துர்லபமான க்ருஷ்ணனின் வைபவத்தைக் கண்டு அஸூயைப்பட்டான்.

अधिचिक्षेप तं कृष्णं सभायां बहुशः खलः ।
तच्छ्रुत्वा मुनयः सर्वे प्रापुर्दुःखं सुदुःसहम् ॥१२॥

12. துஷ்டனான சிசுபாலன் ஸபையிலேயே வெகுவாக க்ருஷ்ணபூஜையை ஆக்ஷேபித்தான். அது கேட்டு முனிவர்கள் மிகவும் வருந்தினர்.

भीमसेनमुखाः सर्वे राजानः खड्गपाणयः ।
उत्तस्थुर्युगपत्क्रोधात्तं हन्तुं चेदिभूपतिम् ॥१३॥

13. பீமஸேனன்முதலிய அரசர்கள் மிகவும் கோபம்கொண்டு சிசுபாலனைக் கொல்லவேண்டி கத்தியை உருவிக்கொண்டு கிளம்பினர்.

तान्निवार्य स्वयं कृष्णो लीलया तं जघान ह ।
कराग्रगलितेनैव चक्रेणामिततेजसा ॥१४॥

14. அவர்களைத் தடுத்து க்ருஷ்ணன் தனது கையிலிருந்து கிளம்பிய சக்ரத்தினாலேயே விளையாட்டாக அவனை அடித்து வதம் செய்தான்.

आत्मज्योतिस्तदा तस्य दमघोषात्मजस्य तु ।
कृष्णस्य चरणं प्राप पश्यत्सु सकलेष्वपि ॥१५॥

15. அப்போது அங்கு சிசுபாலனின் ஆத்மஜோதி உலகம் அறியும்படி க்ருஷ்ணசரீரத்தில் ப்ரவேசித்தது.

पुष्पवृष्टिर्महत्यासीद्दुन्दुभिश्च ननाद ह ।
शिशुपाले पदं प्राप्ते कृष्णस्याखिलसाक्षिणः ॥१६॥

16. ஸகலஸாக்ஷியான க்ருஷ்ணனின் பதத்தை சிசுபாலன் அடைந்தபோது ஆகாசத்திலிருந்து மலர்மாரி பொழிந்து தேவதுந்துபியும் முழங்கியது.

यज्ञे समाप्ते राजापि परिपूर्णमनोरथः ।
गङ्गायां बन्धुभिः साकं चकारावभृथं महान् ॥१७॥

17. ராஜஸூயயாகம் முடிந்தபிறகு தர்மபுத்ரர் தன் மனோரதம் நிறைவேறியவராக பந்துக்களுடன் கங்கையில் அவப்ருத ஸ்னானம் செய்தார்.

एवं हि राजसूयेन वासुदेवो युधिष्ठिरम् ।
राज्ये महति संस्थाप्य प्रतस्थे द्वारकापुरीम् ॥१८॥

18. இவ்வாறு வாஸுதேவன் ராஜஸூயயாகம் நடத்திவைத்து தர்மபுத்ரரை மஹத்தான ராஜ்யத்தில் ஸ்தாபித்துவிட்டு துவாரகைக்குச் சென்றார்.

मध्ये मार्गे समाकर्ण्य दन्तवक्त्ररणोत्सवम् ।
सद्यो विस्मृत्य शुद्धान्तं रणभूमिङ्गतो हरिः ॥१९॥

19. நடுவழியிலேயே தந்தவக்த்ரன் யுத்தத்திற்கு வரவே அந்தப்புரம் செல்லாமலேயே ரணகளத்திற்கு பகவான் வந்து சேர்ந்தான்.

मायाविना च शाल्वेन दन्तवक्त्रेण माधवः ।
युयुधे सुचिरं देवः शङ्खमुद्यम्य लीलया ॥२०॥

20. மாயாவியான சால்வராஜனுடனும், தந்தவக்ரனுடனும் சார்ங்கபாணியாக பகவான் லீலையாக யுத்தம் செய்தான்.

निहतो दन्तवक्त्रश्च कृष्णेन परमात्मना ।
प्राप विष्णुपदं दिव्यं योगिनामपि दुर्लभम् ॥२१॥

21. க்ருஷ்ணபரமாத்மாவால் கொல்லப்பட்ட தந்தவக்த்ரனும் யோகிகளுக்கும் துர்லபமான விஷ்ணுபதம் அடைந்தான்.

वैकुण्ठपार्षदौ पूर्वं सच्चिदानन्दविग्रहौ ।
शापेन सनकादीनां भुवने पतितौ किल ॥२२॥

22. ஸச்சிதானந்த விக்ரஹமுள்ள விஷ்ணுபார்ஷதர்களே முன் ஸனகாதிகளின் சாபத்தினால் மூன்று பிறவி எடுத்தார்களன்றோ!

तावेव दैत्यौ भूत्वापि हतौ प्रथमजन्मनि ।
यज्ञेश्वरेण कृष्णेन प्रह्लादवरदेन च ॥२३॥

23.அவர்களே முதல் பிறவியில் ஹிரண்யாக்ஷ ஹிரண்யகசிபுவாகி, ப்ரஹ்லாதவரதனான க்ருஷ்ணனால் கொல்லப்பட்டனர்.

अथ तौ राक्षसौ भूत्वा लोकहिंसाञ्च चक्रतुः ।
जघान राघवो भूत्वा लीलया जगदीश्वरः ॥२४॥

24. அவர்களே அடுத்த பிறவியில் ராவணகும்பகர்ணர்களாகி ராமாவதாரத்தினால் கொல்லப்பட்டனர்.

अद्यापि तौ दुरात्मानौ शिशुपालकरूषजौ ।
निहत्य वासुदेवोऽपि प्रददौ परमं पदम् ॥२५॥

25. இப்போது அவர்களே சிசுபால தந்தவக்த்ரர்களாகி க்ருஷ்ணனால் கொல்லப்பட்டு மீண்டும் பரமபதமே சென்றனர்.

एतस्मिन्नन्तरे कृष्णां कितवैरभिपीडिताम् ।
पालयामास गोविन्दो दत्वा वस्त्राणि मायया ॥२६॥

26. இதற்கிடையில் சூதாடிகளான கௌரவர்களால் பீடிக்கப்பட்ட த்ரௌபதியை அளவுகடந்த வஸ்த்ரம் தந்து பகவான் அவளது மானத்தைக் காப்பாற்றினான்.

द्यूतेन धर्मपुत्रोपि निर्जितः कितवैस्तदा ।
विसृज्य राज्यमखिलं जगाम विपिनं महत् ॥२७॥

27. சூதாட்டத்தில் தன் சொத்தை இழந்து தர்மபுத்ரர் காட்டுக்கு வந்துவிட்டார்.

तच्छ्रुत्वा भगवान् कृष्णः कृपया भक्तवत्सलः ।
वनं जगाम तं द्रष्टुं सत्यभामासमन्वितः ॥२८॥

28. அது கேட்டு பக்தவத்ஸலனான பகவான் க்ருஷ்ணன், ஸத்யபாமையுடன் அவர்களைப் பார்க்க வந்து சேர்ந்தான்.

सान्त्वयामास पाञ्चालीं बहुधा रुदतीं सखीम् ।
वाक्येन प्रेमपूर्णेन सुदीनान् पाण्डवानपि ॥२९॥

29. கஷ்டப்படுகின்ற பாண்டவர்களையும், அழுகின்ற தனது ஸகியான பாஞ்சாலியையும் ப்ரேமவசனங்களால் ஸமாதானம் செய்தான்.

सर्वत्र कलिना व्याप्तं जगद्दुर्योधनात्मना ।
विलोक्य मेने जगतां महद्भयमुपस्थितम् ॥३०॥

30.துர்யோதனரூபமான கலியால் உலகெங்கும் பயமேற்பட்டதைக் கண்டு பகவான் சிந்தித்தார்.

भगवानपि विश्वात्मा सर्वत्रोपेक्षया हरिः ।
बृन्दावनं गन्तुमिच्छन् प्रतस्थे मधुरापुरीम् ॥३१॥

31. எல்லா இடத்திலும் வெறுப்படைந்து, ஸர்வாந்தர்யாமியான க்ருஷ்ணன் ப்ருந்தாவனம் போக விரும்பி மதுரைக்கு வந்து சேர்ந்தான்.

संप्रेष्य द्वारकां पत्नीं सत्यभामां प्रियां प्रभुः ।
प्रतस्थे श्रीवनायैव सुहृज्जनदिदृक्षया ॥३२॥

32. ப்ரியையான ஸத்யபாமையை அங்கிருந்தே துவாரகைக்கு அனுப்பிவிட்டு, தான்மட்டும் ப்ரியஜனங்களைப் பார்க்க வேண்டி ப்ருந்தாவனம் வந்து சேர்ந்தான்.

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये द्वारकाकाण्डे भारतकथासङ्ग्रहो नाम द्वादशोऽध्यायः ॥१२॥*

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிஸ்வாமிகள் அருளிச்செய்த ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில் துவாரகாகாண்டத்தில் பன்னிரெண்டாவது அத்யாயம்.**

# अथ त्रयोदशोऽध्यायः

## பதிமூன்றாமத்யாயம்

### *भागवता ऊचुः*

### பாகவதர்கள்

श्रीमद्बृन्दावनं गत्वा सर्वकालसुखावहम् ।
गोविन्दो गूढसङ्कल्पः किं चकार कृपानिधिः ॥१॥

*1. தனது ஸங்கல்பத்தை வெளியிடாத க்ருபாநிதியான பகவான் ஸர்வ காலத்திலும் ஸுகம் தரும் ப்ருந்தாவனம் சென்று என்ன செய்தான்?*

### *श्रीसद्गुरुरुवाच*

यमुनामवरुह्याथ बलदेवसमन्वितः ।
चिक्षेप चायुधं सर्वं तथा कवचमेव च ॥२॥

कालिन्द्यां विधिवत्स्नात्वा मन्दमारुतसेवितः ।
विश्रान्तिं परमां लेभे जहौ युद्धपरिश्रमम् ॥३॥
विश्रान्तिस्थानमद्यापि कृष्णस्य तु जगत्पतेः ।
विद्यते यमुनातीरे संसारश्रमनाशनम् ॥४॥

ஸ்ரீஸத்குரு

2-4 மதுரை வந்ததும் பலதேவருடன் தனது ஸகல ஆயுதங்களையும் யமுனையில் எறிந்து விட்டு, யமுனையில் நீராடி, மந்தமாருதத்தில் விச்ராந்தி எடுத்துக்கொண்டு, யுத்தத்தினால் வந்த எல்லா களைப்பும் தீர்ந்தவனானான். மதுரையில் யமுனாதீரத்தில் விச்ராந்திகாட் என்ற அந்த புண்யஸ்தானம் இன்றுமிருக்கிறது. யாவருக்கும் ஸம்ஸார ச்ரமத்தைத் தீர்க்கின்றது.

यमुनाजलमादाय प्रतिज्ञाञ्च चकार सः ।
इतःपरमहं युद्धं न कुर्यामिति निश्चयात् ॥५॥

5. பகவான் யமுனாஜலத்தைக் கையிலெடுத்து, இனி நான் யுத்தம் செய்யமாட்டேன் என்று ப்ரதிக்ஞையும் செய்துவிட்டான்.

अलं नगरवासेन युद्धकोलाहलेन च ।
बृन्दावनङ्गतो नित्यं विहरिष्यामि राधया ॥६॥

6. நகரவாஸமும், இந்த யுத்தகோலாஹலமும் போதும் இனி ப்ருந்தாவனம் சென்று நிம்மதியாக ராதையுடன் இருக்கப் போகிறேன்.

इति निश्चित्य भगवान् सानन्दं नन्दनन्दनः ।
प्राप गोपपुरीं रम्यां नन्दगोपेन पालिताम् ॥७॥

7. இவ்வாறு தீர்மானித்து பகவான் ஆனந்தமாக நந்தகோபனால் பரிபாலிக்கப்பட்டு வந்த ஸ்ரீகோகுலம் வந்து சேர்ந்தான்.

दृष्ट्वा तद्गोकुलं कृष्णः श्रीवनं यमुनां तथा ।

स्मरन् बाल्ये कृता लीलाः सुस्निग्धहृदयोऽभवत् ॥८॥

8. கோகுலம், யமுனை, ப்ருந்தாவனம் இவைகளைக் கண்ட கண்ணன் தனது பால்யலீலைகளை நினைத்து உள்ளங்குழைந்த வனானான்.

बृन्दावनं गोवर्धनं यमुनापुलिनं तथा ।
जहौ विरहजं तापं तं दृष्ट्वा श्यामसुन्दरम् ॥९॥

9. ப்ருந்தாவனம், கோவர்தனம், யமுனை இம்மூன்றும்கூட ச்யாமஸுந்தரனைப் பார்த்து விரஹதாபம் நீங்கப்பெற்றன.

गावश्च हरिणाश्चैव मयूराः कोकिलाः शुकाः ।
ससंभ्रममुपागत्य पूजयामासुरच्युतम् ॥१०॥

10. மாடுகள், மான்கள், மயில்கள், குயில்கள் யாவும் பரபரப்புடன் கண்ணனிடம் வந்து முன்புபோல் பூஜித்தன.

नन्दगोपो महाभागः प्रेमपूर्वं प्रियं सुतम् ।
आश्लिष्य मूर्ध्न्युपाघ्राय सप्रेम परमं सुखम् ॥११॥

11. மஹாபாக்யவானான நந்தகோபன் தனது செல்லப் பிள்ளையான கண்ணனை ஆலிங்கனம் செய்துகொண்டு உச்சிமுகர்ந்து ஸுகமடைந்தான்.

यशोदा च प्रियं पुत्रमकस्मादागतं तदा ।
आनीय भोजयामास बलभद्रेण संयुतम् ॥१२॥

12. எதிர்பாராமல் வந்துள்ள செல்லப்பிள்ளையான கண்ணனைக் கண்டு யசோதையும், பலராமனுக்கும் கண்ணனுக்கும் போஜனம் செய்வித்தாள்.

प्रणयक्रोधसंयुक्तां राधिकां स्फुरिताधराम् ।
सान्त्वयामास सान्त्वज्ञः प्रेमसंभाषणादिभिः ॥१३॥

13. ப்ரணயகோபத்துடன் உதட்டை பிதுக்கிக்கொண்டு நிற்கும் ராதையைக் கண்ணன் அன்புடன் பேசி ஸமாதானப் படுத்தினான்.

एवं हि वल्लवीः सर्वाः परिरभ्य पृथक् पृथक् ।
पप्रच्छ कुशलं कृष्णः सान्त्वयन् प्रेमपूर्वकम् ॥१४॥

14. அவ்வாறே எல்லா கோபிகைகளையும் தனித்தனியாக குசலப்ரச்னம் செய்து அன்புடன் ஸமாதானப்படுத்தினான்.

गोपवृद्धाश्च गोपाश्च गोविन्दं पुनरागतम् ।
विलोक्य परमानन्दं प्रापुः प्रेमपरायणाः ॥१५॥

15. வயோதிகர்களான கோபர்களும் கோபிகைகளும் கண்ணன் வந்திருப்பதைக் கண்டு ப்ரேமையுடன் விசாரித்து பரமானந்த மடைந்தனர்.

शिखण्डमकुटञ्चैव गुञ्जामालां मनोरमाम् ।
पीताम्बरं नूपुरञ्च मुरलीञ्च ददुर्हरेः ॥१६॥

16. மயிலிறகுமகுடம், நூபுரம், குழல், பீதாம்பரம், அழகிய குஞ்ஜாமாலை இவைகளை கண்ணனுக்கு பழையபடியே தந்தனர்.

परिगृह्य च तत्सर्वं राजवेषं विहाय च ।
उवास सुखमत्रैव कथयन् विविधाः कथाः ॥१७॥

17. அவைகளை ஏற்றுக்கொண்டு ராஜவேஷத்தை விட்டுவிட்டு விதவிதமான கதைகளைப் பேசிக்கொண்டு ஸுகமாக இங்கேயே வஸித்தான்.

उत्सवश्च महानासीद्यथापूर्वञ्च गोकुले ।
गोपा नृत्यन्ति गायन्ति हसन्ति प्रवदन्ति च ॥१८॥

18. முன்போலவே உத்ஸவமும் குதூஹலமும் உண்டாயிற்று, ஆயர்கள்யாவரும் ஆடவும், பாடவும், ஆனந்தப்படவும் ஆரம்பித்தனர்.

वितानानि विचित्राणि बद्ध्वा तोरणमालिकाम् ।
दीपावलिं समुज्ज्वाल्य पूर्णकुंभान्निधाय च ॥१९॥

अलङ्कृत्य पुरीं सर्वे गोपाला जातसंभ्रमाः ।
चक्रुर्महोत्सवं तत्र श्रीकृष्णजनने यथा ॥२०॥

19,20. அழகிய விசித்ரமான விதானங்கள் கட்டி, தோரண மாலைகளும் கட்டி, தீபங்கள் ஏற்றி பூர்ணகும்பங்கள் வைத்து ஊரை அலங்கரித்து, ஆயர்கள் யாவரும் ஆனந்த ஸம்ப்ரம மடைந்து முன்பு க்ருஷ்ணஜனனோத்ஸவம் கொண்டாடியது போல் இப்போதும் கொண்டாடினர்.

भगवानपि गोविन्दः प्रेमपूर्वमुपासितः ।
विरेजे राधया सार्धं गोलोकभुवने यथा ॥२१॥

21. பகவான் கோவிந்தனும் ப்ரேமையுடன் பூஜிக்கப்பட்டவனாய் கோலோகத்திலிருப்பதுபோல் ராதையுடன் ஆனந்தமாக ப்ரகாசித்தான்.

निशि वल्लवनारीभिर्यमुनापुलिनङ्गतः ।
परमानन्दसंयुक्तश्चक्रे रासमहोत्सवम् ॥२२॥

22. இரவு யமுனாபுளினத்தில் கோபிகைகளுடன்கூடி பரமானந்தமாக ராஸமஹோத்ஸவம் செய்தான்.

प्रातर्गोपालबालैश्च बृन्दावनमुपागतः ।
चिक्रीड च यथापूर्वं चारयन् गोकुलं मुदा ॥२३॥

23. தினமும் காலையில் பாலகர்களுடன்கூடி ப்ருந்தாவனம் சென்று மாடு மேய்த்து வருவான்.

बृन्दावनमुपागत्य क्रीडतो गोपबालकैः ।
राजाधिराजसेव्यस्य विस्मृतं राजवैभवम् ॥२४॥

24. ராஜாதிராஜஸேவ்யனான க்ருஷ்ணனுக்கு ப்ருந்தாவனம் வந்ததும், தான் பூபாலன் என்பதே மறந்து போய்விட்டது. முற்றிலும் கோபாலனாகவே ஆகிவிட்டான்.

कृपाकटाक्षं यस्यैव याचन्ते राजपुङ्गवाः ।
सोयं बृन्दावनं गत्वा रमते गोपबालकैः ॥२५॥

25. சக்ரவர்த்திகள்கூட எவருடைய கடாக்ஷத்தை தினமும் விரும்புகின்றனரோ அவன் இந்த இடையச்சிறுவர்களுடன் ப்ருந்தாவனம் சென்று விளையாடுகின்றான்.

बृन्दावने निकुञ्जेषु यमुनापुलिनेष्वपि ।
गोवर्धने गोकुले च चचार श्यामसुन्दरः ॥२६॥

26. ப்ருந்தாவனம், யமுனை, கோவர்தனம், கோகுலம், நிகுஞ்ஜங்கள் இவைகளில் ச்யாமஸுந்தரன் ஸஞ்சரித்தான்.

गोबृन्दमखिलं वीक्ष्य सवत्सं पूर्वपालितम् ।
अवाप परमं हर्षं गायन्नामानि माधवः ॥२७॥

27. தான் மேய்த்த மாடுகளையும் கன்றுகளையும் அதனதன் பெயரைச் சொல்லிக் கூப்பிட்டு மகிழ்ந்தான்.

चन्द्रावलीं राधिकाञ्च सह तत्तत्सखीजनैः ।
लतागृहं समानीय चक्रे सुरतकेलिकाम् ॥२८॥

28. சந்த்ராவளியையும், ராதையையும் அவரவர் ஸகிகளுடன் நிகுஞ்ஜத்திற்கு அழைத்து வந்து லீலைகள் செய்தான்.

आलिङ्ग्य तं प्रियं कान्तमास्वाद्याधरमाधुरीम् ।
जहुर्विरहजं दुःखं स्वच्छन्दं वल्लवाङ्गनाः ॥२९॥

29. கோபிகைகள் தங்கள் ப்ராணகாந்தனை ஆலிங்கனம் செய்துகொண்டு அவனது அதராம்ருதத்தைப் பருகி விரஹதாபத்தை நீக்கிக்கொண்டனர்.

एवं बृन्दावने रम्ये क्रीडन् गोपालबालकः ।
नैव सस्मार भगवान् गन्तुं द्वारवतीं पुनः ॥३०॥

30. இவ்வாறு ப்ருந்தாவனம் வந்து விளையாடும் கோபாலன் துவாரகை திரும்பிப் போவதை மறந்தேவிட்டான்.

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये द्वारकाकाण्डे श्रीकृष्णव्रजागमनं नाम त्रयोदशोऽध्यायः ॥१३॥*

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிஸ்வாமிகள் அருளிச்செய்த ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்ம்யத்தில் துவாரகா காண்டத்தில் பதிமூன்றாமத்யாயம்.**

# अथ चतुर्दशोऽध्यायः

## பதினான்காமத்யாயம்

### श्रीसद्गुरुरुवाच

### ஸ்ரீஸத்குரு

उषित्वा गोकुले तत्र मासत्रयमुदारधीः ।
प्रतस्थे द्वारकां कृष्णः सर्वकार्यधुरन्धरः ॥१॥

1. இவ்வாறு கோகுலத்தில் மூன்று மாதங்கள் கழித்துவிட்டு, மற்ற கார்யங்களை செய்து முடிக்கவேண்டி பகவான் துவாரகைக்குப் புறப்பட்டான்.

प्रस्थितं केशवं वीक्ष्य सर्वेपि व्रजवासिनः ।
लब्ध्वा विरहजं दुःखं रुरुदुस्तत्र तत्र हि ॥२॥

2. பகவான் புறப்பட்டுவிட்டதைப் பார்த்து வ்ரஜவாஸிகள் அங்கு வந்து நின்றுகொண்டு விரஹவேதனையால் அழவாரம்பித்தனர்.

सर्वेपि कृष्णं संप्राप्य कृताञ्जलिपुटास्तदा ।
एवं हि प्रार्थयामासुर्भक्तिपूर्वं समाकुलाः ॥३॥

3. எல்லாஜனங்களும் கண்ணனிடம் வந்து கைகுவித்து பக்தியுடன் வேண்டிக்கொண்டனர்.

### व्रजवासिन ऊचुः

### வ்ரஜவாஸிகள்

नन्दनन्दन गोविन्द नवनीरदसन्निभ ।
पाहि पद्मपलाशाक्ष पुरुषोत्तम माधव ॥४॥

4. நந்தநந்தன! கோவிந்த! நீலமேகச்யாமள! தாமரைக்கண்ணா! புருஷோத்தம! மாதவ! எங்களைக் காப்பாற்றுவாயாக.

किमर्थं गोकुलं त्यक्त्वा द्वारकां गन्तुमिच्छसि ।

अक्रूरो नागतोऽद्यापि स्वयमेव व्रजेश्वर ॥५॥

5. ப்ருந்தாவனேச்வர! ஏன் தானாகவே கோகுலத்தைவிட்டு துவாரகைக்குப் புறப்பட்டுவிட்டாய் அக்ரூரர்கூட வர வில்லையே!

निहता बहवो दुष्टा जरासन्धादयस्त्वया ।
सर्वत्र सर्वदा देव सुखं जीवन्ति साधवः ॥६॥

6. ஜராஸந்தன்முதலிய துஷ்டர்கள்தான் ஒழிந்துவிட்டார்களே. அங்கும் எப்போதும் ஸாதுக்கள் ஸுகமாகத்தானே வாழ்கின்றனர்.

तस्मादत्रैव तिष्ठ त्वं सानन्दं व्रजवासिभिः ।
अलं ते पुरवासेन सदा युद्धश्रमेण च ॥७॥

7.ஆகையால் வ்ரஜவாஸிகளுடன் இங்கேயே ஸுகமாகவே இருக்கலாமே. இனி துவாரகையும் வேண்டாம். யுத்த குதூகலமும் வேண்டாம்.

## श्रीभगवानुवाच

## ஸ்ரீபகவான்

कौरवैः पीडिताः सर्वे पाण्डवा मत्परायणाः ।
वने वसन्ति दैन्येन पालयिष्यामि तानिह ॥८॥

8. என் பக்தர்களான பாண்டவர்கள் கௌரவர்களால் பீடிக்கப்பட்டு காட்டில் கஷ்டப்படுகின்றனர். அவர்களைப் பரிபாலிக்க வேண்டும்.

भूभारभूतानखिलान् स्वार्थोन्मूलितसौहृदान् ।
नाशयिष्याम्यहं शीघ्रं निमित्तीकृत्य पाण्डवान् ॥९॥

9. அந்த பாண்டவர்களையே காரணமாகக்கொண்டு சுயநலமே லக்ஷியமான பூபாரமான அரசர்களை ஒழித்துக்கட்ட வேண்டும்.

एवं लीलां बहुविधां समाप्य त्वरया ततः ।

अवतीर्णैः पार्षदैश्च गमिष्यामि परं पदम् ॥१०॥

10. இவ்வாறு எனது அவதாரகாரியத்தை செய்து முடித்துவிட்டு, கூட அவதரித்துள்ள பார்ஷதர்களுடன் வைகுண்டம் செல்வதாக இருக்கின்றேன்.

### व्रजवासिन ऊचुः

### வ்ரஜவாஸிகள்

एवञ्चेत् करुणासिन्धो गच्छ त्वं द्वारकापुरीम् ।
पूर्वमेव तथा किन्तु नः प्रापय परं पदम् ॥११॥

11. கருணாஸிந்தோ! அப்படியானால் நீ துவாரகைக்குச் செல். ஆனால் எங்களை அதற்குமுன் பரமபதமனுப்பித்து விடு.

इच्छामो न वयं कृष्ण वैकुण्ठगमनं तव ।
तस्मादस्मान् पूर्वमेव संप्रापय परं पदम् ॥१२॥

12. க்ருஷ்ணா! உமது பரமபதப்ராப்த்தியை நாங்கள் பார்க்க விரும்பவில்லை. எனவே எங்களை அதற்குமுன் பரமபதம் அனுப்பிவிடு.

### श्रीसद्गुरुरुवाच

इत्युक्त्वा प्रेमबाष्पेण सुस्निग्धनयनास्तदा ।
गोलोकं गन्तुमिच्छन्तो गोविन्दं शरणङ्गताः ॥१३॥

### ஸ்ரீஸத்குரு

13. இவ்வாறு வ்ரஜவாஸிகள்யாவரும் கண்ணீர் விட்டுக்கொண்டே கோலோகம் போக விரும்பியவர்களாய் கோவிந்தனை சரணடைந்தனர்.

यत्र कृष्णस्य संयोगो नित्यमेव हि लभ्यते ।
तत्रैव गन्तुमिच्छन्ति सर्वे ते व्रजवासिनः ॥१४॥

14. எங்கு க்ருஷ்ணனின் நித்யஸம்யோகம் கிடைக்குமோ அங்கேயே கோகுலவாஸிகள் சென்றுவிட நினைத்தனர்.

सद्य एव कृपासिन्धुः प्रपन्नानखिलाञ्जनान् ।
गोलोकं प्रापयामास सशरीरञ्च लीलया ॥१५॥

15. உடனே பகவான் வ்ரஜவாஸிகள் யாவரையும் சரீரத்துடனேயே கோலோகம் அடைவித்தான். இது அவனது லீலை.

नन्दं यशोदां राधाञ्च गोपीश्च सकलान् जनान् ।
प्रापयामास गोलोकं पशुपक्षिगणानपि ॥१६॥

16. நந்தன், யசோதை, ராதை, கோபிகைகள், மற்றமக்கள், பசு, பக்ஷிகள் யாவரையுமே கோலோகம் அனுப்பிவிட்டான்.

नित्यं सनातनं दिव्यं परमानन्दवर्धनम् ।
वैकुण्ठं परमं प्राप्य ददृशुः कृष्णमेव तम् ॥१७॥

17. அழியாததும், அனாதிகாலமாய் இருப்பதும், திவ்யமானதும், பரமானந்தமயமானதும், மஹாவைகுண்டமானதுமான கோலோகத்தையடைந்து அவர்கள் யாவரும் அங்கும் கோபாலனையே கண்டனர்.

उत्थाय चासनात्कृष्णः सानन्दं परिरभ्य तान् ।
सान्त्वयामास कृपया राधया सह माधवः ॥१८॥

18. உடனே அங்கு ஸிம்ஹாஸனத்தில் ராதையுடன் வீற்றிருந்த கண்ணன் எழுந்திருந்து இவர்கள் யாவரையும் வரவேற்று தன்னிடம் ஏற்றுக்கொண்டான்.

भागवता ऊचुः

பாகவதர்கள்

कथं प्राकृतदेहेन वैकुण्ठगमनं कृतम् ।
वैकुण्ठे तु परे लोके ब्रह्मसारूप्यमुच्यते ॥१९॥

19. ப்ராக்ருதசரீரத்துடன் எப்படி வைகுண்டம் போகமுடியும்? வைகுண்டத்தில் ப்ரஹ்மஸாரூப்யமன்றோ சொல்லப்படுகிறது.

**श्रीसद्गुरुरुवाच**

**ஸ்ரீஸத்குரு**

यथापूर्वमिमान् गोपान्नीत्वा गोलोकमद्भुतम् ।
दर्शयामास कृपया तथैवमकरोदिह ॥२०॥

20. அதற்குமுன்னமேயே இவர்கள் யாவரையும் வைகுண்டமழைத்துச் சென்று காட்டவில்லையா? அதுபோல் இப்போதும் செய்தான்,

यथा पार्थं कृपासिन्धुरनुनीय परं पदम् ।
विप्रपुत्रं नेतुकामः संप्रापैव तथा कृतम् ॥२१॥

21. பார்த்தனை அழைத்துக்கொண்டு ப்ராம்மணனின் பிள்ளைகளை மீட்கவேண்டி பரமபதம் போகவில்லையா? அப்படியே இப்போதும் செய்தான்.

सत्यभामां समानीय स्वर्गवासः कृतो यथा ।
तथैवाद्यापि गोपीनां प्रददौ परमं पदम् ॥२२॥

22. ஸத்யபாமையுடன் ஸவர்கம் சென்று வாஸம் செய்து திரும்பி வரவில்லையா?அதுபோல் இப்போதும் செய்தான்.

**भागवता ऊचुः**

**பாகவதர்கள்**

लीलान्तरे प्रविष्टानां कृष्णस्य निजमायया ।
युक्तमेव हि तत्सर्वं सदेहगमनं प्रभो ॥२३॥

23. ப்ரபோ! லீலையின் நடுவே க்ருஷ்ணன் மாயையால் லோகாந்தரம் சென்று திரும்பி வந்தது நடக்கக்கூடியதே.

किन्तु संसारमुक्तानां प्रपन्नानां महात्मनाम् ।
पाञ्चभौतिकदेहेन तत्र किं लभ्यते सुखम् ॥२४॥

24. ஆனால் ஸம்ஸாரத்திலிருந்து விடுபட்டபிறகும் ப்ராக்ருத சரீரத்துடன் வைகுண்டம் போவது எதற்காக? அங்கு என்ன ஸுகம் கிடைத்துவிடும்.

### श्रीसद्गुरुरुवाच

#### ஸ்ரீ ஸத்குரு

श्रीकृष्णपार्षदाः सर्वे गोपाला गोपिकास्तथा ।
तेषां स्वरूपं चिन्मात्रमद्यापि किल साधवः ॥२५॥

25. ஸாதுக்கள்ளே! கோபிகைகள், கோபர்கள் யாவரும் க்ருஷ்ணபார்ஷதர்களன்றோ! அவர்கள் யாவருடைய ஸ்வரூபமும் இங்கும்கூட சின்மயமானதே.

सहावतीर्णाः कृष्णेन गोलोकान्नित्यपार्षदाः ।
पुनरेवं तथा जग्मुर्गोलोकञ्च सनातनम् ॥२६॥

26. கோலோகத்திலிருந்து கோவிந்தனுடன்கூடவே வந்த நித்யபார்ஷதர்கள் யாவரும் இப்போது கூடவே சென்று விட்டனர்.

द्रोणस्यापि वसोरत्र नन्दसारूप्यमुच्यते ।
यथा वेदवतीत्वञ्च सीताया वर्ण्यते श्रियः ॥२७॥

27. த்ரோணர் என்ற வஸுவிற்கு நந்தனின் ஸாரூப்யமே சொல்லப்பட்டது. வேதவதி என்ற பெண் எப்படி லக்ஷ்மியின் அவதாரமான ஸீதாதேவியில் கலந்திருந்தாளோ.

### भागवता ऊचुः

#### பாகவதர்கள்

क्वचिद्वदसि गोलोकं वैकुण्ठं वदसि क्वचित् ।
वैलक्षण्यं वद स्वामिन्ननयोर्दिव्यलोकयोः ॥२८॥

28. ஒருஸமயம் கோலோகம் என்கிறீர். ஒருஸமயம் வைகுண்டம் என்கிறீர். இந்த இரண்டுக்கும் பேதமென்ன? இரண்டும் திவ்யலோகம்தானே.

### श्रीसद्गुरुरुवाच

#### ஸ்ரீ ஸத்குரு

ब्रह्माण्डकोटिभिर्व्याप्तं सर्वं प्रकृतिमण्डलम् ।

तदतिक्रम्य गोलोकः परमे व्योम्नि शोभते ॥२९॥

29. கோடிப்ரஹ்மாண்டங்களால் வ்யாபிக்கப்பட்டது எல்லாம் ப்ரக்ருதிமண்டலமே. ஆனால் அதைத் தாண்டி சிதாகாசத்தில் கோலோகமென்ற பரமபதமுள்ளது.

वैकुण्ठमेव गोलोको नात्र कार्या विचारणा ।
यत्र प्रकृतिसम्बन्धः स्वल्पोपि न हि विद्यते ॥३०॥

30. வைகுண்டமே கோலோகம். இதில் ஸந்தேஹமேயில்லை. ஏனெனில் இது ப்ரக்ருதிக்கு அப்பாற்பட்டது.

शुद्धसत्त्वमयं सर्वं सच्चिदानन्दविग्रहम् ।
ज्योतिर्मयं परानन्दं शाश्वतं प्रकृतेः परम् ॥३१॥

31. எல்லா சுத்தஸத்வமயமான ஜோதிர்மயமான ஆனந்தமய மான சாச்வதமான அப்ராக்ருதமான ஸத்சிதானந்த ஸ்வரூபமானது.

परमे व्योम्नि गोलोकः परं लीलास्थलं हरेः ।
यत्र पश्यन्ति गोविन्दं तद्भक्ताः कामरूपिणः ॥३२॥

32. அத்தகைய சிதாகாசத்தில் ஸ்ரீக்ருஷ்ணபரமாத்மாவின் கோலோகமென்கிற நித்யலீலா ஸ்தலமுள்ளது. அங்கு பக்தர்கள் விரும்பிய ரூபத்தை எடுத்துக்கொண்டு கோவிந்தனை ஸதா பார்க்கின்றனர்.

### भागवता ऊचुः

### பாகவதர்கள்

अत्रैव कर्मभेदेन जन्मभेदो हि विद्यते ।
भेदस्य कारणं किं स्याद्वैकुण्ठे तु सनातने ॥३३॥

33. இங்குதான் கர்மபேதத்தினால் ஜன்மபேதமிருக்கிறது. வைகுண்டத்திலும் பேதம் எதற்கு? அதுதான் கர்மஸாத்ய மில்லாத ஸனாதனமான லோகமாயிற்றே!

तत्रापि पशुपक्ष्यादिजन्म संप्राप्यते यदि ।

जीवानां मोक्षलोकत्वं वैकुण्ठे कथ्यते कथम् ॥३४॥

34. அங்கு பசு, பக்ஷிமுதலிய ஜன்மபேதங்கள் ப்ராப்தமாகும் பக்ஷத்தில் அது எப்படி மோக்ஷமாகும்?

सुखं शारीरकं नास्ति यस्मिंल्लोके सनातने ।
योषित्पुरुषभेदस्य तस्मिन् किं कारणं गुरो ॥३५॥

35. ஸத்குரோ! எங்கு சரீரஸுகமில்லையோ அங்கு ஆண் பெண் பேதமெதற்கு? எங்களுக்குச் சொல்லவேண்டும்.

श्रीसद्गुरुरुवाच

ஸ்ரீஸத்குரு

मुक्तानां कामरूपत्वं प्रोच्यते न हि कर्मणा ।
स्वच्छन्दमेव रूपाणि गृह्णन्ति विविधानि च ॥३५॥

36. முக்தர்களுக்கு கர்மாதீனமான சரீரமில்லை. தன் இஷ்டப்படி அவ்வப்போது பல ரூபங்களை எடுத்துக் கொள்கின்றனர்.

पशुपक्ष्यादिरूपाणि लतावृक्षादिकानि च ।
गृह्णन्ति सूरयस्तत्र लीलार्थं हि श्रियःपतेः ॥३६॥

37. பசு,பக்ஷிகள், லதாவ்ருக்ஷங்கள் முதலிய ரூபங்களை எடுத்துக்கொண்டு ஸ்ரீய:பதியான பரமாத்மாவின் லீலாரஸத்தை வளர்க்கின்றனர்.

योषित्पुरुषभेदोऽपि नैव देहसुखाय तु ।
गृह्यते प्रेमलाभाय कृष्णस्य रसरूपिणः ॥३७॥

38. ஸ்த்ரீபுருஷபேதமும் தேஹஸுகத்திற்காக அன்று. ஸ்ரீக்ருஷ்ணனின் ப்ரேமரஸத்தை வளர்ப்பதற்காகவே. அந்த பேதமும் வைகுண்டத்திலும் கோலோகத்திலும் காணப் படுகிறது.

**भागवता ऊचुः**

**பாகவதர்கள்**

वयमेव कृतार्थाः स्मः सद्गुरो कृपया तव ।
नष्टः सन्देहसन्दोहो भास्करेण यथा तमः ॥३९॥

39. ஸத்குரோ! நாங்களே பாக்யவான்கள். தங்கள் உபதேசத்தினால் உண்டான ஞான ஸூர்யனால் அக்ஞானமாகிய இருள் அழிந்துவிட்டது.

एवं गुरुकटाक्षेण विद्यामप्राप्य मानवाः ।
क्लिश्यन्ति शास्त्रगर्तेषु सन्देहकृमिपीडिताः ॥४०॥

40. குருகடாக்ஷத்தினால் ஞானம் பெறாதவர்கள் தாங்களே படித்த சாஸ்த்ரங்களாகிய குழிகளில் விழுந்து ஸம்சயமாகிய க்ருமிகளால் கடிக்கப்பட்டு துன்பப்படுகின்றனர்

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये द्वारकाकाण्डे दिव्यगोलोकप्रस्थापनं नाम चतुर्दशोऽध्यायः ॥१४॥*

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிஸ்வாமிகள் அருளிச்செய்த ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில் துவாரகா காண்டத்தில் பதினான்காம் அத்யாயம்.**

# अथ पञ्चदशोऽध्यायः

## பதினைந்தாம் அத்யாயம்

**भागवता ऊचुः**

**பாகவதர்கள்**

संप्रेष्य सर्वान् गोपालान्निजलोकं कृपानिधिः ।
संप्राप्य द्वारकां कृष्णः किं चकार ततः परम् ॥१॥

1. க்ருபாநிதியான பகவான் தனது ஜனங்களை கோலோகம் அனுப்பிவிட்டு மீண்டும் துவாரகை வந்து என்ன செய்தான்?

## श्रीसद्गुरुरुवाच

## ஸ்ரீஸத்குரு

पूर्वमेवोदितं सर्वं पाण्डवानां महात्मनाम् ।
सङ्ग्रहेणैव युष्माकमरण्यगमनं मया ॥२॥

2. பாண்டவர்கள் வனத்திற்குச் சென்ற கதையை முன்னமேயே சுருக்கமாக நான் உங்களுக்கு சொன்னேன்.

शापाद्दुर्वाससश्चापि पालयामास माधवः ।
शाकान्नमेव भुञ्जानः कृष्णया दत्तमीश्वरः ॥३॥

3. த்ரௌபதி தந்த கீரையை சாப்பிட்டு பகவான் பாண்டவர்களை துர்வாஸ சாபத்திலிருந்து காப்பாற்றினான்.

वनवासं समाप्याथ पार्था द्वादशवार्षिकम् ।
विंसटेऽज्ञातवासञ्च श्रीकृष्णं शरणं ययुः ॥४॥

4. பாண்டவர்கள் பன்னிரெண்டு வருஷம் வனவாஸமும், விராடதேசத்தில் அக்ஞாத வாஸமும் முடிந்து க்ருஷ்ணனையே சரணடைந்தனர்.

दूतो भूत्वा कृपासिन्धुः पाण्डवानामपीश्वरः ।
राजधर्मान् बहूनुक्त्वा विश्वरूपमदर्शयत् ॥५॥

5. பகவான் க்ருஷ்ணனும் பாண்டவதூதனாகி ஹஸ்தினாபுரம் சென்று ஸபையில் பல ராஜ தர்மங்களையும் சொல்லி விச்வரூபமும் காட்டி வந்தான்.

उपचारान् कौरवाणामुपेक्ष्य यदुनन्दनः ।
विदुरस्य गृहं गत्वा बुभुजे प्रीतिपूर्वकम् ॥६॥

6. துர்யோதனன் செய்த பொய்யுபசாரங்களை வெறுத்து, விதுரர்வீடு சென்று கண்ணபிரான் விருந்துண்டான்.

सेनां स्वकीयां गोविन्दः कौरवाय प्रदाय च ।
आत्मानमेव पार्थाय प्रददौ भक्तवत्सलः ॥७॥

7. தனது ஸேனையை கௌரவர்களுக்கு தந்துவிட்டு, பக்தவத்ஸலனான பகவான் பார்த்தனுக்கு ஸாரதியாக தன்னையே தந்தான்.

धर्मक्षेत्रे कुरुक्षेत्रे प्रवृत्ते समरे हरिः ।
प्रेमवात्सल्यसंयुक्तो विजयस्यास सारथिः ।।८।।

8. தர்மக்ஷேத்ரமான குருக்ஷேத்ரத்தில் யுத்தம் ஆரம்பித்ததும் ப்ரேமையுடனும் வாத்ஸல்யத்துடனும் கண்ணன் அர்ஜுனனுக்கு ஸாரத்யம் செய்தான்.

भीष्माद्यैर्लोकपूज्यैश्च युद्धं कर्तुं किरीटिनि ।
धर्माधर्मविचारेण भीतेस्मिन् भगवान् हरिः ।।९।।
आत्मविद्यामुपदिशन् कर्मण्येव प्रवर्तयन् ।
निजभक्तिप्रपत्तिभ्यां पोषयामास तं प्रभुः ।।१०।।

9,10. லோகபூஜ்யர்களான பீஷ்மர்முதலிய பெரியோர்களுடன் எப்படி யுத்தம் செய்வதென்று தர்மாதர்மபயத்தினால் அர்ஜுனன் கலங்கியபோது ஆத்மவித்யையை உபதேசித்து, கர்மயோகத்தில் அவனை ப்ரவ்ருத்திக்கச் செய்து, தனது பக்தியாலும் ப்ரபத்தியாலும் அவனைப் போஷித்தான்.

भीष्मप्रतिज्ञां भगवानङ्गीकृत्य स्वयं हरिः ।
साक्षाद्रथाङ्गमादाय स्वप्रतिज्ञां जहौ प्रभुः ।।११।।

11. பீஷ்மரின் ப்ரதிக்ஞையை நிறைவேற்றவேண்டி தானே சக்ரத்தை எடுத்து ப்ரத்யக்ஷமாக தர்சனம் தந்து தனது ப்ரதிக்ஞையை விட்டுக்கொடுத்தான்.

मध्ये युद्धं कृपासिन्धुस्तृणीकृतमहाबलः ।
अश्वान् विश्रमयन् कृष्णः कृष्णमेनमतोषयत् ।।१२।।

12. நடுயுத்தத்தில் வீரர்கள் யாவரையும் புல்லாய் மதித்து குதிரைகளைக் குளிப்பாட்டி தேரில் பூட்டி அர்ஜுனனை மகிழ்வித்தான்.

प्रच्छाद्य भास्करं कृष्णः स्वशक्त्या योगमायया ।
जयद्रथवधे पार्थप्रतिज्ञां पर्यपालयत् ॥१३॥

13. தனது மாயையால் ஸூர்யனையும் மறைத்து ஜயத்ரதவதத்திற்காக அர்ஜுனன் செய்த ப்ரதிக்ஞையைக் காப்பாற்றினான்.

प्रयुक्तं भगदत्तेन वैष्णवास्त्रं श्रियःपतिः ।
जग्राह मालारूपेण पाण्डवं पालयन् प्रभुः ॥१४॥

14. பகதத்தன் ப்ரயோகம் செய்த வைஷ்ணவாஸ்த்ரத்தை மாலையாக தரித்து அர்ஜுனனைக் காப்பாற்றினான்.

द्रोणञ्च घातयामास व्याजीकृत्यैव कुञ्जरम् ।
तथा कर्णं महात्मानं वञ्चनेनैव वञ्चकम् ॥१५॥

15. ஒரு யானையை வ்யாஜமாகக்கொண்டு துரோணனை வதம் செய்வித்தான். வஞ்சகனான கர்ணனை வஞ்சனையாகக் கொன்றான்.

दग्धं नारायणास्त्रेण द्रौणिहस्तच्युतेन च ।
भीमञ्च पालयामास स्वशक्त्या पाण्डवप्रियः ॥१६॥

16. அச்வத்தாமா போட்ட நாராயணாஸ்த்ரத்திலிருந்து பாண்டவப்ரியனான பகவான் தனது வல்லமையால் பீமனைக் காப்பாற்றினான்.

भङ्गं दुर्योधनस्यापि साक्षीभूत्वा कृपानिधिः ।
कारयामास भीमेन धर्मरक्षणतत्परः ॥१७॥

17. தர்மத்தை ரக்ஷிப்பதையே லக்ஷியமாகக்கொண்ட கண்ணபிரான் ஸாக்ஷியாக, தான் இருந்துகொண்டு பீமனைக்கொண்டு துர்யோதனனின் துடையை முறிக்கச் செய்தான்.

गान्धारी पुत्रशोकार्तां सान्त्वयामास माधवः ।
रक्षितुं प्रार्थयामास पाण्डवान् पुण्यचेष्टितान् ॥१८॥

18. புத்ரசோகத்தினால் மனங்கலங்கிய காந்தாரியை பகவான் ஸமாதானம்செய்து பாண்டவர்களை ஆசீர்வதிக்கச் செய்தான்.

उत्तरागर्भमाविश्य कृपयैव गदाधरः ।
अभिमन्युसुतं प्रेम्णा पालयामास माधवः ॥१९॥

19. பகவான் உத்தராகர்பத்திலும் தோன்றி அபிமன்யுவின் புத்ரனை அன்புடன் பரிபாலித்தான்.

पाञ्चजन्येन दिव्येन क्षीरमादाय पावनम् ।
वासुदेवस्तु सानन्दमभ्यषिञ्चद्युधिष्ठिरम् ॥२०॥

20. தனது பாஞ்சஜன்யத்தால் பால் எடுத்து தர்மபுத்ரரை சிங்காஸனத்தில் உட்கார வைத்து பட்டாபிஷேகமும் தானே செய்தான்.

पाण्डवैः पूज्यमानश्च हैमं स्यन्दनमास्थितः ।
प्रतस्थे द्वारकां कृष्णो नयनानन्दवर्धनः ॥२१॥

21. பாண்டவர்களால் பூஜிக்கப்பட்டு தங்கரதத்தில் ஏறி பக்தர்களின் கண்களுக்கு ஆனந்தமளிப்பவனாய் துவாரகைக்குப் புறப்பட்டான்.

दुर्योधनः कलिः साक्षादेवं धर्मो युधिष्ठिरः ।
याज्ञसेनी परा शक्तिरन्ये देवा हि पाण्डवाः ॥२२॥
कलिना पीडितं धर्मं स्थापयामास माधवः ।
तथैव शक्तिं देवानां पालयामास केशवः ॥२३॥
देवानामपि सा शक्तिः कलिना पीडिता ननु ।
धर्मेण कृष्णं शरणं लब्ध्वा सा जीविताऽभवत् ॥२४॥

22-24. துர்யோதனன்தான் கலி. யுதிஷ்டிரன்தான் தர்மர். பாண்டவர்கள் தேவர்கள். கலியால் பாதிக்கப்பட்ட தர்மத்தினால் தேவர்கள் சக்தி இழந்தனர். த்ரௌபதி செய்த பகவன்னாமகீர்த்தனத்தினால் மீண்டும் தெய்வசக்தி காப்பாற்றப்பட்டு கலியாகிய துர்யோதனன் ஒழிந்து

தர்மபுத்ரராகிய தர்மம் நிலைநாட்டப்பட்டது.

हा कृष्ण कृष्ण कृष्णेति नामकीर्तनमात्रतः ।
भगवान्नृणवान् भूत्वा पाञ्चालीं पर्यपालयत् ॥२५॥

25. ஹாக்ருஷ்ண! க்ருஷ்ண! க்ருஷ்ண! என்று நாமகீர்த்தனம் செய்ததினால்மட்டும் பகவான் கடனாளியாகி பாண்டவர்களைக் காப்பாற்றினான்.

तस्मादस्मिन् कलौ घोरे कृष्णनाम्नस्तु कीर्तनात् ।
धर्मं धर्मफलञ्चापि दैवीं शक्तिञ्च पालयेत् ॥२६॥

26. ஆகையால் இந்த கோரமான கலியில் க்ருஷ்ணநாம கீர்த்தனத்தினாலேயே தர்மத்தையும், தர்மபலனையும், தெய்வசக்தியையும் காப்பாற்றமுடியும்.

त्यक्त्वा सर्वोत्तमञ्चैतत्पुण्यं श्रीकृष्णकीर्तनम् ।
अन्यत्सर्वं निष्फलं हि कलिः कल्मषवर्धनः ॥२७॥

27. ஸர்வோத்தமமான க்ருஷ்ணநாம கீர்த்தனத்தை விட்டு மற்ற எந்த தர்மம் செய்தாலும் பயனில்லை. ஏனெனில் கலி தர்மங்களைக் கெடுத்துவிடும்.

एक एव परो धर्मः कलिगर्वविनाशकः ।
कृष्णनामजपो नृणां सर्वमङ्गलदायकः ॥२८॥

28. கலியின் கர்வத்தை அடக்கத் திறமையுடைய ஒரே தர்மம் க்ருஷ்ணநாமகீர்த்தனமே. அதுவே மக்களுக்கு ஸர்வமங்களமும் தரவல்லது.

कलिना पीडिता देवी द्रौपदी परमाकुला ।
पालिता यस्य नाम्नैव तस्य नामैव नो गतिः ॥२९॥

29. கலியினால் பீடிக்கப்பட்ட த்ரௌபதியைக் காப்பாற்றிய அதே க்ருஷ்ணனின் நாமமே நமக்கும் கதி.

नामकीर्तनमाहात्म्याद्धर्मं पालयितुं कलौ ।
अवतारं चकारैव श्रीकृष्णो जगतां पतिः ॥३०॥

30. ஜகத்குருவான க்ருஷ்ணன் நாமகீர்த்தன மாஹாத்மியத்தாலேயே தர்மத்தை நிலைநாட்ட அவதரித்தார்.

एवं स्वनाममाहात्म्यं स्थापयामास माधवः ।
महाभारतयुद्धेन कलिनिग्रहमाचरन् ॥३१॥

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये द्वारकाकाण्डे युधिष्ठिरपट्टाभिषेको नाम पञ्चदशोऽध्यायः ॥१५॥*

31. பகவான் இவ்வாறு மஹாபாரதயுத்தத்தில் கலியை அடக்கி தனது நாமகீர்த்தன மாஹாத்மியத்தை நிலைநாட்டினான்.

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிஸ்வாமிகள் அருளிச்செய்த ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில் துவாரகாகாண்டத்தில் பதினைந்தாம் அத்யாயம்.**

## अथ षोडशोऽध्यायः

## பதினாறாமத்யாயம்

### श्रीसद्गुरुरुवाच

### ஸ்ரீஸத்குரு

प्रविश्य द्वारकां कृष्णः प्रहृष्टहृदयः प्रभुः ।
प्रदध्मौ पाञ्चजन्यञ्च करसंपुटसंस्थितम् ॥१॥

1. பகவான் பாரதயுத்தம் முடிந்து துவாரகைக்கு வந்து ஆனந்தமாக பாஞ்சஜன்யத்தை கையிலிருந்து வாயில்வைத்து முழக்கினான்.

पाञ्चजन्यध्वनिं श्रुत्वा श्रोत्रानन्दविवर्धनम् ।
आजग्मुर्यादवाः सर्वे सञ्जातकुतुकास्तदा ॥२॥

2. காதுக்கினிய சங்கத்வனியைக்கேட்டு யாதவர்கள் யாவரும் குதாஹலமாய் ஓடிவந்தனர்.

स्वागतं ते महाराज जगदानन्दवर्धन ।
इति सङ्कीर्तयन्तस्ते चक्रुः पुष्पाञ्जलिं मुदा ॥३॥

3. ஜகதானந்தவர்தன! க்ருஷ்ண! மஹாராஜ! உமக்கு ஸ்வாகதம்என்று புஷ்பாஞ்ஜலி செய்து வரவேற்றனர்.

आनन्दयन् जनं सर्वं प्रेमहासावलोकनैः ।
सदनं वासुदेवस्य प्राप सात्वतपुङ्गवः ॥४॥

4.யாதவச்ரேஷ்டனான கண்ணன் யாவருக்கும் ப்ரேமையுடன்கூடிய கடாக்ஷத்தாலும், மந்தஹாஸத்தாலும் ஆனந்தத்தைத் தந்துகொண்டு வஸுதேவர் மாளிகைக்கு வந்தான்

मातरं पितरञ्चापि गर्गाचार्यं तपोधनम् ।
अभिवाद्य स्वभवनं संप्राप कृतमङ्गलः ॥५॥

5.மாதா, பிதா, குருவான கர்காசாரியர் இவர்களை. வணங்கிவிட்டு ஆசிபெற்று தனது மாளிகைக்கு வந்தான்.

उत्थाय सर्वा देव्यश्च भर्तृदर्शनकौतुकात् ।
स प्रेम पूजयामासुर्निवृत्तविरहज्वराः ॥६॥

6. தங்கள் நாதனைக் கண்ட தேவிகள்யாவரும் எழுந்திருந்து ஓடிவந்து வரவேற்று உபசரித்து விரஹவேதனை நீங்கினர்.

तोषयन्निजदारांश्च लालयन्निजपुत्रकान् ।
सर्वं गृहोचितं धर्ममाचचार कृपानिधिः ॥७॥

7. தனது தேவிகளையும் புத்ரர்களையும் சந்தோஷப்படுத்தி தனது இல்லறதர்மங்களை நடத்தி வந்தான்.

एवं वसति गोविन्दे द्वारकायां यथासुखम् ।
आजग्मुर्मुनयः सर्वे कृष्णदर्शनकौतुकाः ॥८॥

8. இவ்வாறு கோவிந்தன் துவாரகையில் ஸுகமாக வாஸம் செய்துவருகையில் ஒருஸமயம் முனிவர்கள் க்ருஷ்ண தர்சனத்திற்காக வந்தனர்.

अपचारं तदा चक्रुर्हेलया यदुबालकाः ।
शेपुश्च मुनयः सर्वे विज्ञाय भगवन्मतिम् ॥९॥

9. யாதவகுமாரர்கள் விளையாட்டாக முனிவர்களுக்கு அபசாரம் செய்துவிட்டனர். முனிவர்களும் பகவானின் திருவுள்ளமறிந்து சபித்துவிட்டனர்.

दुस्तरं ब्रह्मदण्डं तं विज्ञाय भगवानपि ।
आनीय यादवान् सर्वान् प्रभासक्षेत्रमाययौ ॥१०॥

10. நீக்கமுடியாத ப்ரம்மசாபத்தைப்பெற்று பகவானும் யாதவர்கள்யாவரையும் அழைத்துக்கொண்டு ப்ரபாஸக்ஷேத்ரம் வந்து சேர்ந்தான்.

तत्र मैरेयदोषेण जातक्रोधाः परस्परम् ।
नियुद्धं निधनं प्रापुर्यादवाः कृष्णचोदिताः ॥११॥

11. அங்கு க்ருஷ்ணப்ரேரணையாலேயே யாதவர்கள் யாவரும் மதுபானம் செய்துவிட்டு புத்திமயக்கத்தால் பரஸ்பரம் அடித்துக்கொண்டு அழிந்து போனார்கள்.

जगत्युपेक्षया देवो देवैः संप्रार्थितस्तथा ।
गन्तुमिच्छन् परं लोकं क्वचिद्योगासने स्थितः ॥१२॥

12. உலகில் உபேக்ஷயடைந்த பகவான் தேவர்களால் பரலோகம் வரும்படி ப்ரார்த்திக்கப்பட்டவனாய் ஓரிடத்தில் பத்மாஸனத்தில் வீற்றிருந்தான்.

तदा विनीतवच्छ्रीमानुद्धवः सचिवोत्तमः ।
प्रपेदे शरणं कृष्णं मैत्रेयेण समन्वितः ॥१३॥

13. அப்போது மந்திரிச்ரேஷ்டனான உத்தவன் மைத்ரேய முனிவருடன் கண்ணனைத் தேடி வந்து சரணடைந்தான்.

शुद्धं भागवतं धर्ममुक्त्वा तस्मै कृपानिधिः ।
बदरीं प्रेषयामास सान्त्वयंस्तं पुनः पुनः ॥१४॥

14. க்ருபாநிதியான க்ருஷ்ணன் சுத்தமான பாகவததர்மத்தை அவனுக்கு உபதேசித்து ஸமாதானம் செய்து பதரிகாச்ரமம் போகும்படி அனுப்பிவிட்டான்.

अथ देवैः पूज्यमानः शङ्खचक्रगदाधरः ।
वैकुण्ठं प्राप भगवानचिन्त्यनिजमायया ॥१५॥

15. பிறகு பகவான் தனது ஆச்சர்யமான மாயாசக்தியுடன் சங்கசக்ரகதாதரனாய் வைகுண்டம் சென்றான்.

अनुजग्मुस्तमेवेशं रुक्मिण्याद्यास्तथा स्त्रियः ।
अवतीर्णा भुवं ये ये पार्षदास्तेपि तं ययुः ॥१६॥

16. ஸ்ரீருக்மிணிமுதலிய தேவிகள்யாவரும், அவ்வாறே உலகில் அவதரித்திருந்த வைகுண்ட பார்ஷதர்கள் யாவரும் பகவானைப் பின்தொடர்ந்தனர்.

स्त्रीणां षोडशसाहस्रमादाय विजयस्तदा ।
दूयमानमनाः सद्यः प्रतस्थे हस्तिनापुरम् ॥१७॥

17. பதினாறாயிரம் தேவிகளை அழைத்துக்கொண்டு அர்ஜுனன் மனது ஒடிந்தவனாய் ஹஸ்தினாபுரம் புறப்பட்டான்.

मध्ये मार्गं तु तं जित्वा कृष्णो गोपवपुर्धरः ।
स्वलोकं प्रापयामास ता देवीर्निजसुन्दरीः ॥१८॥

18. நடுவழியில் பகவானே கோபர்களைப்போல் வந்து அர்ஜுனனை வென்று அந்த தேவிகளை கோலோகம் கொண்டு சேர்த்தான்.

पार्थोपि प्रेष्ठविरहसन्तप्तहृदयस्तदा ।
दीनं युधिष्ठिरं गत्वा दीनदीनो न्यवेदयत् ॥१९॥

19. அர்ஜுனனும் க்ருஷ்ணவிரஹத்தினால் மிகவும் தீனமான தசையை அடைந்து தர்மரிடம் சென்று பகவானின் அந்தர்தானம் முதலிய ஸகல வ்ருத்தாந்தங்களையும் தெரிவித்தான்.

एवञ्च पाण्डवाः सर्वे पाञ्चाल्या सह दुःखिताः ।
लेभिरे परमं स्वर्गं श्रीकृष्णविरहातुराः ॥२०॥

20. பாண்டவர்கள் யாவரும் பாஞ்சாலியுடன் க்ருஷ்ண விரஹத்தினால் மிகவும் வருந்தி ஸவர்காரோஹணம் செய்தனர்.

विदुरोपि महाभागः श्रुत्वा योगगतिं हरेः ।
ध्यायन् सर्वेश्वरं कृष्णं जहौ योगबलाद्वपुः ॥२१॥

21. விதுரரும் பகவானின் அந்தர்தானத்தைக் கேட்டு, ப்ரபாஸக்ஷேத்ரம் வந்து அங்கு யோகமார்க்கத்தினால் சரீரத்தை விட்டு ஸ்வர்கம் சென்றார்.

अभ्यषिञ्चद्विष्णुरातं ब्राह्मणा वेदपारगाः ।
मधुरायां वज्रनाभं सर्वलोकहितैषिणः ॥२२॥

22. யாவருக்கும் ஹிதத்தைச் செய்யும் ப்ராம்மணர்கள் ஹஸ்தினாபுரத்தில் பரீக்ஷித்தையும், மதுரையில் வஜ்ரநாபனையும் பட்டாபிஷேகம் செய்வித்தனர்.

परीक्षिदपि राजर्षी रञ्जयन् सकलं जनम् ।
पालयामास भुवनमादिराजो यथा पृथुः ॥२३॥

23. ராஜரிஷியான பரீக்ஷித்து ஸகலஜனங்களையும் ரஞ்ஜனம் செய்யும் நற்குணம் உள்ளவனாய் உலகை ரக்ஷித்துவந்தான்.

लब्ध्वा तमेव राजानं महाभागवतोत्तमम् ।
कृष्णभक्तिं परां प्रापुर्मानवाः सुरदुर्लभाम् ॥२४॥

24. பரமபாகவதோத்தமனான அவனையே அரசனாக அடைந்த மக்கள் யாவரும் தேவதுர்லபமான க்ருஷ்ணபக்தியை அடைந்தனர்.

राजापि कृष्णमाहात्म्यं श्रुत्वा वृद्धैः प्रकीर्तितम् ।
कृष्णभक्तिं परां लेभे गर्भे कृष्णेन पालितः ॥२५॥

25. கர்பத்திலேயே க்ருஷ்ணனால் காப்பாற்றப்பட்ட பரீக்ஷித்தும் பெரியோர்கள் சொன்ன க்ருஷ்ணகதையைக் கேட்டு திடமான க்ருஷ்ணபக்தியை அடைந்தான்.

कलिं विद्रावयामास दुरतिक्रमशासनः ।

कृष्णसङ्कीर्तनं लोके सर्वत्रैव प्रकाशयन् ॥२६॥

26. உலகில் க்ருஷ்ணஸங்கீர்த்தனத்தை ப்ரசாரம் செய்து பரீக்ஷித்து கலியை விரட்டினான்.

जगत्सर्वं विलोक्यापि श्रीकृष्णविरहातुरम् ।
श्रीमद्बृन्दावनं प्राप वज्रनाभसमन्वितः ॥२७॥

27. உலகம்யாவும் க்ருஷ்ணவிரஹத்தினால் கஷ்டப்படுவதைக் கண்டு பரீக்ஷித்து வஜ்ரநாபனுடன் ஸ்ரீப்ருந்தாவனம் வந்து சேர்ந்தான்.

तावद्घोरं तपः कृत्वा वासुदेवेन सान्त्वितः ।
उद्धवः श्रीवनं प्राप त्यक्त्वा बदरिकाश्रमम् ॥२८॥

28. அதற்குள் பதரிகாச்ரமம் சென்று கோரமான தவம் செய்து பகவானால் ஸமாதானப்படுத்தப்பட்ட உத்தவன் ப்ருந்தாவனமே வந்துவிட்டான்.

शाण्डिल्योक्तप्रकारेण साक्षात्कृत्य तथोद्धवम् ।
गोविन्ददेवं तत्रैव स्थापयामास भूपतिः ॥२९॥

29. சாண்டில்யமுனிவர் சொன்னபடி அந்த உத்தவனை ப்ரத்யக்ஷமாகப் பார்த்து பிறகு அவரது ஆக்ஞையால் ப்ருந்தாவனத்தில் கோவிந்ததேவனை ப்ரதிஷ்டை செய்தான்.

यः पठेत् कृष्णचरितं सर्वकल्मषनाशनम् ।
धर्मार्थकाममोक्षादीन् लभते नात्र संशयः ॥३०॥

30. எவர்கள் க்ருஷ்ணசரித்ரத்தைப் படிப்பார்களோ அவர்கள் தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் என்னும் புருஷார்த்தங்களை அடைவர், ஸம்சயமில்லை.

आयुरारोग्यमैश्वर्यं धनं धान्यं निकेतनम् ।
सर्वं प्राप्नोति यो भक्त्या शृणुयात्कृष्णकीर्तनम् ॥३१॥

31. ஆயுள், ஆரோக்யம், ஐச்வர்யம், தனம், தான்யம் எல்லாம் க்ருஷ்ணகதையைக் கேட்பதினால் மட்டும் சுலபமாய்க் கிடைக்கும்.

पुत्रार्थी लभते पुत्रं धनार्थी लभते धनम् ।
आनुकूल्यञ्च भार्याया लभ्यते कृष्णकीर्तनात् ॥३२॥

32. க்ருஷ்ணகதையைக் கேட்பதால் புத்ரனை விரும்புபவன் புத்ரனை அடைவான். தனத்தை விரும்புபவன் தனத்தை அடைவான். அனுகூலமான மனைவியை விரும்புபவன் அனுகூலமான மனைவியை அடைவான்.

विमुच्यतेपि संसाराच्छृणुयाद्यो हरेः कथाम् ।
भक्तिञ्च लभते कृष्णे पुरुषार्थोत्तमोत्तमाम् ॥३३॥

33. க்ருஷ்ணகதையைக் கேட்பவன் ஸம்ஸாரத்திலிருந்து முக்தி அடைவான். புருஷார்த்தங்களில் மிகவும் சிறந்ததான பக்தியையும் அடைவான்.

*इति श्रीमत्परमहंसपरिव्राजकाचार्यवर्यसर्वप्राणिसंरक्षकजगद्गुरु-श्रीभगवन्नामबोधेन्द्रचरणारविन्दमकरन्दरसिकेन श्रीकृष्णप्रेमिमहाप्रभुणा विरचिते श्रीबृन्दावनमाहात्म्ये द्वारकाकाण्डे भगवद्वैकुण्ठगमनं नाम षोडशोऽध्यायः॥१६॥*

இவ்வாறு ஸ்ரீமத்பரமஹம்ஸபரிவ்ராஜகாசார்யவர்ய ஸர்வப்ராணிஸம்ரக்ஷகஜகத்குருஸ்ரீபகவந்நாம போதேந்த்ரஸ்வாமிகளின் சரணாரவிந்தமகரந்தத்தை ரஸிக்கும் ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிமஹாப்ரபுவால் அருளிச் செய்யப்பட்ட ஸ்ரீப்ருந்தாவனமாஹாத்மியத்தில் துவாரகா காண்டத்தில் பகவானின் வைகுண்டகமனம் என்ற பதினாறாம் அத்யாயம்.

## ॥ इति द्वारकाकाण्डः समाप्तः ॥

## த்வாரகாகாண்டம் ஸம்பூர்ணம்

*॥ श्रीभक्तकोलाहलार्पणमस्तु ॥*

श्रीहरिः

श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचित

# श्रीबृन्दावनमाहात्म्यम्

ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிஸ்வாமிகள் அருளிச்செய்த

# ஸ்ரீப்ருந்தாவனமாஹாத்ம்யம்

## भागवतधर्मकाण्डम्

## பாகவததர்மகாண்டம்

### अथ प्रथमोऽध्यायः

### முதல் அத்யாயம்

**भागवता ऊचुः**

धन्या वयं महाभाग कृतार्थाः स्मो जगत्त्रये ।
यत्पीतं त्वन्मुखाम्भोजच्युतं हरिकथामृतम् ॥१॥

**பாகவதர்கள்**

*1. மஹாமஹிமையுடைய குருவே! மூவுலகிலும் நாங்களே பாக்யவான்கள். ஏனெனில் தங்கள் முககமலத்திலிருந்து பெருகும் ஹரிகதையாகிய தேனைப் பருகுகிறோமல்லவா!*

आदौ सृष्टिरहस्यञ्च बृन्दायाश्चरितं तथा ।
माहात्म्यं यमुनायाश्च गोवर्धनगिरेस्तथा ॥२॥

श्रीदेव्याश्चरितं पुण्यं कृष्णस्याद्भुतचेष्टितम् ।
ललिताद्यष्टगोपीनां भैष्म्यादीनाञ्च सद्गुरो ॥३॥

पवित्राणि चरित्राणि भक्तकर्णसुखानि च ।

एतत्सर्वं गुरुश्रेष्ठ श्रुतं भक्त्या यथाक्रमम् ॥४॥

2-4. முதலில் ச்ருஷ்டிரஹஸ்யம் , ப்ருந்தாதேவி , யமுனாதேவி , கோவர்தனகிரிராஜன், ஸ்ரீக்ருஷ்ணன் , ஸ்ரீராதாதேவி , அஷ்டஸகிகள் , ருக்மிணிமுதலிய தேவிகளின் சரித்திரமும் இதுவரை கேட்டோம். இவையாவும் பரமபவித்ரமானதாயும் , ரஸமானதாயும் , ஆனந்தகரமாயும் , அத்புதமாயும் இருந்தன.

अद्यैव श्रोतुमिच्छामः सर्वशास्त्रार्थसंमतान् ।
पुण्यान् भागवतान् धर्मान् कृष्णभक्तिप्रदायकान् ॥५॥

5. இப்போது ஸர்வசாஸ்த்ரங்களுடையவும் ஸாரமாயும், க்ருஷ்ணபக்திதரக் கூடியதாகவும் புண்யமானதாகவும் உள்ள பாகவததர்மங்களைக் கேட்க விரும்புகிறோம்.

ज्ञानवैराग्ययुक्तस्य भक्तियोगस्य सद्गुरो ।
अस्माकं श्रोतुकामानां माहात्म्यं वद विस्तरात् ॥६॥

6. ஞானம், வைராக்யம், என்னும் அங்கங்களுடன்கூடிய பக்தியோகத்தின் மாஹாத்மியத்தை எங்களுக்கு விஸ்தாரமாகச் சொல்லுவீராக. நாங்கள் அதைக் கேட்க விரும்புகிறோம்.

### श्रीसद्गुरुरुवाच

नमो धर्माय महते कृष्णाय परमात्मने ।
वैष्णवेभ्यो नमस्कृत्य वक्ष्ये धर्मान् सनातनान् ॥७॥

### ஸ்ரீஸத்குரு

7. மஹிமைஉடைய தர்மத்திற்கு வந்தனம். க்ருஷ்ண பரமாத்மாவிற்கும் வந்தனம். வைஷ்ணவர்களையும் நமஸ்கரித்துவிட்டு ஸனாதனமான தர்மங்களைச் சொல்லுவேன்.

ईश्वरः प्रकृतिर्जीव इति तत्त्वत्रयं स्मृतम् ।
वेदान्तवाक्यविदितं तद्वक्ष्यामि यथामति ॥८॥

8. ஈச்வரன், ப்ரக்ருதி, ஜீவன் என்று தத்துவங்கள் மூன்று. அவைகளை என் புத்திக்கு எட்டியவரை சொல்லுவேன். வேதாந்த வாக்யங்களாலேயே அவை அறியப்படுகின்றன.

निर्विशेषं परं ब्रह्म वदन्ति ब्रह्मवादिनः ।
अव्यक्तं तन्निराकारं निर्गुणञ्च निरञ्जनम् ॥९॥

9. பரப்ரம்மமானது நாமம், ரூபம், குணம் என்ற எந்தவிதமான விசேஷணமும் அற்றது என்று ப்ரம்மவாதிகள் சொல்கின்றனர். விபக்தமாய் அறியப்படாததே ப்ரம்மம். அது மாறுபாடற்றது.

गजेन्द्रेण कृते स्तोत्रे निर्विशेषपरे तदा ।
हरिरेवाजगामासौ सर्वदेवनमस्कृतः ॥१०॥

10. கஜேந்த்ரன் செய்த நிர்குணபரமான ஸ்தோத்திரத்தைக் கேட்டு நாம,ரூபமுடைய ஸ்ரீபகவானே அங்கு தோன்றினார். அந்த ஹரியை ஸகல தேவர்களும் தொழுதனர்.

साकारं सगुणं ब्रह्म निर्विशेषमितीर्यते ।
अप्राकृतत्वान्नित्यत्वान्निगमान्तेषु केवलम् ॥११॥

11. இதனால் ஸகுணஸாகாரமான ஸ்ரீபகவானையே வேதம் நிர்குணநிராகாரமாக சொல்லுகிறது என்று தெரிகிறது. அது எப்படிச் சொல்ல முடியும் எனில் ப்ராக்ருதமான நாமரூப குணங்கள் இல்லை என்றே கருத்து, அந்த பகவானின் நாமரூபங்கள் அப்ராக்ருதமாயும் நித்யமாயுமிருக்கின்றன.

पुण्डरीकमिवाक्षीति विष्णोर्वेदान्तवाक्यतः ।
सौन्दर्यसारसर्वस्वं श्रूयते रसमुत्तमम् ॥१२॥

12. விஷ்ணுவின் கண்கள் புண்டரீகம்போல் (தாமரைபோல்) இருக்கின்றன என்று ச்ருதி கூறுவதால் ப்ரம்மத்திற்கு அழகுநிரம்பிய ரூபம் உண்டு என்று தெரிகிறது.

सर्वगन्धः सर्वरसः सत्यकाम इति श्रुतेः ।

जानीयात्तत्परं ब्रह्म कल्याणगुणसंभृतम् ॥१३॥

13. ஸர்வகந்தன் ஸர்வரஸன் ஸர்வகாமன் என்ற விசேஷணங் களை ச்ருதி கூறுவதால் ப்ரம்மத்திற்கு அனந்தகல்யாண குணங்கள் உண்டு என்று தெரிகிறது.

लीलार्थमेव मिथुनस्वरूपं तदिति श्रुतेः ।
ब्रह्मणो दिव्यदाम्पत्यं व्यक्तमेव प्रकाशितम् ॥१४॥

14. ஏற்கனவே இருந்த ப்ரம்மம் லீலைக்காக மிதுனமாக (ஆண் பெண் ஜோடியாக) ரூபமெடுத்தது என்று ச்ருதி சொல்வதால் ப்ரம்மம் திவ்யதம்பதிரூபமாக இருப்பதாய்த் தெரிகிறது.

परमे व्योम्नि तद्विष्णोः परं पदमिति श्रुतेः ।
अक्षयः शाश्वतो लोको ब्रह्मणः परिकीर्त्यते ॥१५॥

15. பரமாகாசத்தில் அந்த விஷ்ணுவின் பரமபதம் இருப்பதாக ச்ருதி கூறுவதால் ப்ரம்மத்திற்கு ஒரு தனித்த லோகம் இருப்பதாகவும் தெரிகிறதுஅது அழிவதில்லை, சாச்வதமானது.

परास्य शक्तिर्विविधा कृष्णस्येति परा श्रुतिः ।
तस्मात् सशक्तिकं ब्रह्म सर्वकारणकारणम् ॥१६॥

16. அந்த ப்ரம்மத்திற்கு பஹுவிதமான சக்திகள் இருப்பதாக ச்ருதியே சொல்வதால் ப்ரம்மம் ஸர்வசக்தனாக இருக்கிறது என்று தெரிகிறது. சக்தி உடைய ப்ரம்மமே ஜகத்காரணமாக இருக்கமுடியும். சக்தியற்ற நிர்குணப்ரம்மம் ஜகத்கர்த்தாவாக முடியாது.

चिच्छक्त्या परमं ब्रह्म सर्वत्र व्याप्य तिष्ठति ।
अप्राकृतेन रूपेण परमे धाम्नि वर्तते ॥१७॥

17. அந்த ப்ரம்மம் தனது சித்சக்தியால் உலகம் முழுவதும் வியாபித்துள்ளது. ஆனால் சித்ரூபத்துடன் பரமபதத்திலேயே நிலைத்துள்ளது.

तमसो रजसश्चैव परस्तादिति वाक्यतः ।
विशुद्धं सत्त्वमेवास्य विद्यते परमात्मनः ॥१८॥

18. ரஜோகுணத்திற்கும் தமோகுணத்திற்கும் அப்பாற்பட்டது பரமபதம் என்று சொல்லியிருப்பதால் அந்த பரமபதம் சுத்தஸத்வமயமானது என்று ஆயிற்று.

ब्रह्मरुद्रमहेन्द्रादिसृष्टिसंहारवाक्यतः ।
परत्वमुच्यते विष्णोः शुकव्यासपराशरैः ॥१९॥

19. ப்ரம்மா ருத்ரன் மஹேந்த்ரன் முதலிய தேவர்களுக்கும் ஸ்ருஷ்டி ஸம்ஹாரம் சொல்லப்படுவதால் விஷ்ணுவே உத்பத்தியும் அழிவுமற்ற பரமாத்மா என்று சுகர், வ்யாஸர், பராசரர் என்ற ரிஷிகள் சொல்கின்றனர்.

सदानन्दस्वरूपं तत्परं ब्रह्म रसाकृति ।
सर्वसद्गुणसंपूर्णं रसो वै स इति श्रुतेः ॥२०॥

20. அந்த பரமாத்மா ரஸரூபமாய் இருக்கிறான் என்று ச்ருதி சொல்வதால் ரஸரூபமான பரப்ரம்மம் ஸகலகல்யாணகுண முடையதாக இருக்கிறது.

अजायमानो बहुधा विजायत इति श्रुतेः ।
ब्रह्मणो बहुरूपत्वं पुराणेषु प्रकीर्त्यते ॥२१॥

21. பிறப்பற்றவராயினும் பரமாத்மா பல பிறவியெடுக்கிறான் என்று ச்ருதி சொல்லுவதால் ப்ரம்மம் அனந்தரூபமானது என்று தெரிகிறது.

जायमानः स तु श्रेयान् भवतीति श्रुतेरपि ।
अवतारेण देवस्य विशेषः परिकीर्त्यते ॥२२॥

22. அப்படி பிறப்பெடுப்பதால் பரமாத்மாவிற்கு பெருமையே என்று ச்ருதி சொல்லுவதால் அவதாரங்களின் பெருமை அறியப்படுகிறது.

पुत्राद्वित्ताच्च सर्वस्मात्स प्रेयानिति वाक्यतः ।
ब्रह्मणः प्रेष्ठरूपत्वं वात्सल्यञ्च प्रगीयते ॥२३॥

*23. மனைவி, மக்கள், பணம், காசு இவைகளைக் காட்டிலும் ப்ரியம் வைக்கத்தக்கவன் பரமாத்மா என்று ச்ருதி கூறுவதால் பரமாத்மா ப்ரேஷ்டரூபன் என்று தெரிகிறது.*

कामान्नी कामरूपीति मुक्तलक्षणकीर्तनात् ।
मुक्तानामपि जीवानां रूपग्रहणमुच्यते ॥२४॥

*24. இஷ்டமான ரூபங்களை எடுத்துக்கொண்டு இஷ்டமான இன்பங்களை அனுபவிப்பவர்கள் முக்தர்கள் என்று ச்ருதி கூறுவதால் முக்தர்களுக்கும் ரூபமுண்டு என்று தெரிகிறது.*

मुक्तानां कामरूपत्वाद्गोपीत्वञ्चापि गृह्यते ।
यतो ब्रह्मरसश्चायं स्वच्छन्दमनुभूयते ॥२५॥

*25. முக்தர்கள் இஷ்டப்படி ரூபம் தரிக்கலாமாதலால் ப்ருந்தாவன கோபிகையாகி க்ருஷ்ணானுபவம் பெற முடியுமன்றோ!*

ब्रह्मणः सत्यकामत्वाद्वैचित्र्यं वर्ण्यते परम् ।
तस्माल्लीलारसश्चायं बहुधा संप्रकाशते ॥२६॥

*26. ப்ரம்மமும் ஸத்யகாமனாக இருப்பதால் பவித்ரமான லீலாரஸங்களை தன் இச்சையாலேயே வளர்த்து முக்தர்களையும் ஆனந்தப்படுத்தும்.*

एवं बहुविधैः सत्यैः शाश्वतैश्च विशेषणैः ।
विशिष्टं तत्परं ब्रह्म निर्विशेषमितीर्यते ॥२७॥

*27. இவ்வாறு பலவிதமான அப்ராக்ருதமான நித்யமான சின்மயமான விசேஷணங்களால் நிறைந்திருக்கும் ப்ரும்மத்தை ப்ராக்ருத விசேஷணங்கள் இல்லாததால் நிர்விசேஷம் (நிர்குணம்) என்று ச்ருதி கூறுகிறது.*

परमात्मनि सर्वेशे मायामोहो न विद्यते ।
अनाद्यविद्योपहतान् पुरुषान् बोधयत्यतः ॥२८॥

28. ஸர்வேச்வரனான பரமாத்மாவுக்கு மாயாமோஹம் கிடையாது. ஆதலால்தான் அனாதிகாலமாய் மாயையில் மோஹித்துக்கிடக்கும் ஜீவர்களை ஈச்வரன் எழுப்புகிறான்.

तदात्मकत्वान्निखिलं परं ब्रह्मेति च श्रुतिः ।
सर्वथा निर्विकारोऽयं परमात्मा सनातनः ॥२९॥

29. ப்ரம்மமே எல்லா பூதங்களுக்கும் அந்தர்யாமியாகி இருப்பதால் ஸர்வம் ப்ரம்மமயம் என்று ச்ருதி கூறுகிறது. உலகுக்கு அந்தர்யாமியாக இருக்கும் பரமாத்மா விகாரப் படுவதில்லை. அழிவதுமில்லை. ஸனாதனமானவன்.

एवं वेदान्तवाक्यानां श्रीकृष्णे परमात्मनि ।
तात्पर्यं परमं ज्ञात्वा न मुह्यन्ति कदाचन ॥३०॥

30. இவ்வாறு வேதாந்தவாக்யங்கள் யாவும் ஸ்ரீக்ருஷ்ணனையே ப்ரதிபாதிக்கின்றன என்று அறிந்தவர்கள் ஒருக்காலும் மயங்கமாட்டார்கள்.

इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये भागवतधर्मकाण्डे ब्रह्मतत्त्वनिरूपणं नाम प्रथमोऽध्यायः ॥१॥

இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிமஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்ம்யம் பாகவததர்மகாண்டத்தில் ப்ரம்மதத்வநிருபணம் என்னும் முதல் அத்யாயம்.

# अथ द्वितीयोऽध्यायः

# இரண்டாமத்யாயம்

भागवता ऊचुः

गजेन्द्रमोक्षणं पुण्यमाख्यानं वद सद्गुरो ।
यस्माद्विष्णुपरत्वस्य ज्ञानं सञ्जायते नृणाम् ॥१॥

பாகவதர்கள்

1. ஸத்குருவே! புண்யமான கஜேந்த்ரமோக்ஷகதையை எங்களுக்குச் சொல்வீராக. அதைக் கேட்டாலன்றோ மனிதர்களுக்கு விஷ்ணுபரத்வஞானம் உண்டாகும்.

श्रीसद्गुरुरुवाच

अस्ति क्षीराम्बुधेस्तीरे त्रिकूटो नाम पर्वतः ।
समन्तात्तस्य शैलस्य वर्तते काननं महत् ॥२॥

नानावृक्षसमाकीर्णं नानामृगसमावृतम् ।
सदा मुनिगणैः सेव्यं दिव्यं परमपावनम् ॥३॥

ஸ்ரீஸத்குரு

2,3. க்ஷீராப்தியின் கரையில் த்ரிகூடம் என்னும் ஒரு மலை இருக்கிறது. அதன் ஸமீபம் ஒரு பெரிய காடும் இருக்கிறது. அந்தக்காடு பல வ்ருக்ஷங்களாலும் பல மிருகங்களாலும் சூழப்பட்டதாயும், முனிவர்கள் தவம் செய்யத் தகுந்ததாயும் அதனாலேயே பரமபவித்ரமானதாயும் இருந்தது.

आसीत्तत्र गजेन्द्रस्तु महाबलसमन्वितः ।
मृगानां सिह्ममुख्यानामपि शास्ता बभूव सः ॥४॥

4. அந்தக் காட்டில் கஜேந்த்ரன் என்ற மஹாபலம் பொருந்திய ஒரு யானை இருந்தது. அது ஸிம்மம்முதலிய மற்ற மிருகங்களுக்குக்கூட அரசனாக இருந்தது.

गजेन्द्रमदगन्धस्याघ्राणमात्रेण दुद्रुवुः ।
हर्यक्षाः परितो भीताः किं पुनस्त्वितरे मृगाः ॥५॥

5. கஜேந்த்ரனின் மதகந்தத்தை முகர்ந்து பயந்துபோய் சிம்மங்கள்கூட ஓடிவிடும். மற்ற மிருகங்களைப்பற்றிக் கேட்கவும் வேண்டுமா?

प्रशम्य कानने घोरान् मृगान् दुष्टान् स्वतेजसा ।

पालयामास मातङ्गो मृगान् साधून् महाबलः ॥६॥

6. அந்த யானை இவ்வாறு அந்த கோரமான வனத்தில் துஷ்டமிருகங்களை அடக்கி ஸாதுமிருகங்களைப் பரிபாலித்து வந்தது.

कदाचिद्ग्रीष्मसन्तापसन्दग्धमभवद्वनम् ।
न क्वापि ददृशे शीतं सर्वत्र विपिने जलम् ॥७॥

7. ஒருஸமயம் கோடைகாலத்தில் அந்தக் காடு வறண்டு விட்டது. எங்கும் குளிர்ந்த ஜலமே கிடைக்கவில்லை.

तदा सर्वे मृगाश्चापि करिणश्च विशेषतः ।
करिण्यः कलभाश्चापि बभूवुर्दुःखिता भृशम् ॥८॥

8.அப்போது அந்தக் காட்டில் யானைகளும், பெண்யானை களும், யானைக்குட்டிகளும் மிகவும் துன்பப்பட்டன.

तैः सर्वैः सह हस्तीन्द्रः सञ्चरन् काननान्तरे ।
आघ्राय पद्मगन्धं स प्राप वापीं यदृच्छया ॥९॥

9. கஜேந்த்ரன் தனது பரிவாரத்துடன் காட்டிலலைந்து வருகையில் தாமரையின் நறுமணத்தை முகர்ந்து சமீபத்தி லுள்ள வாபிக்கு வந்து சேர்ந்தது.

संपूर्णां सलिलेनैष वीक्ष्य वापीं महागजः ।
प्रमोदं परमं लेभे ग्रीष्मतापसमाकुलः ॥१०॥

10. க்ரீஷ்மதாபத்தினால் கலங்கிய அந்த கஜேந்த்ரன் தண்ணீர் நிரம்பிய வாபியைக் கண்டதும் குதூஹலம் அடைந்தது.

अवतीर्य महावापीं सहान्यैः करिभिः करी ।
कलभैः करिणीभिश्च चिक्रीडाम्बुनि शीतले ॥११॥

11. பெண்யானைகளுடனும், குட்டியானைகளுடனும் கஜேந்த்ரன் அந்த வாபியில் இறங்கி ஜலக்ரீடை செய்தது.

तदा तच्चरणाक्रान्तं रम्यं पद्मवनं महत् ।
विनष्टमभवत्तत्र मत्स्यकूर्मादयस्तथा ॥१२॥

12. அப்போது அந்த யானையின் கால்பட்டு அந்தத் தாமரைக்காடு நாசமடைந்தது. மீன், ஆமைமுதலிய ஜலஜந்துக்கள் நசுங்கிப் போயின.

तदा कश्चिज्जलचरः कुपितो मकरो महान् ।
चरणं पीडयामास गजेन्द्रस्य महात्मनः ॥१३॥

13. அப்போது ஒரு முதலை மிகவும் கோபமடைந்து மஹாத்மாவான கஜேந்த்ரனின் காலைப் பிடித்து இழுத்தது.

यदृच्छया परं दुःखं प्राप्य वारणपुङ्गवः ।
चकर्ष चरणं खिन्नो मकरस्य मुखाद्बली ॥१४॥

14. எதிர்பாராமல் இந்தத் துன்பமடைந்த பலசாலியான கஜேந்த்ரன் முதலையின் வாயிலிருந்து தன்னை மீட்கவேண்டிக் காலை இழுத்தது.

न शशाक गजेन्द्रोऽयमात्मानं झषवक्त्रतः ।
विमोक्तुं बलवांस्तस्मात्परमं दुःखमाप सः ॥१५॥

15. முதலை வாயிலிருந்து தனது காலை இழுக்கமுடியாமல் கஜேந்த்ரன் பலசாலியாக இருந்தபோதிலும் முதலை வாயில் அகப்பட்டு துன்பப்பட்டது.

सर्वे सन्त्यज्य तं बन्धुं जग्मुरन्ये गजा वनम् ।
एकः शत्रुमुखं प्राप्य दुःखितोऽभूद्गजोत्तमः ॥१६॥

16. மற்ற யானைகள் தனது பந்துவான கஜேந்த்ரனை விட்டுச் சென்று விட்டன.கஜேந்த்ரன் மட்டும் ஆயிரம் வருஷம் துன்பப்பட்டது.

एवं वर्षसहस्रेषु गतेषु न ममार सः ।
क्षुधाक्लान्तोपि हस्तीन्द्रः पीडितो मकरेण च ॥१७॥

17. பல வருஷங்களாகியும் கஜேந்த்ரன் சாகவில்லை. அந்த முதலையும் பசியால் வாடி சாகவில்லை.

विचार्य मनसा सद्यो गजेन्द्रो धीमतां वरः ।
आजुहाव परं ब्रह्म जगतो मूलकारणम् ॥१८॥

18. இதை விசாரித்து தன் மனதினாலேயே அறிந்துகொண்ட கஜேந்த்ரன் உலகின் மூலகாரணமான பரம்பொருளைக் கூவி அழைத்தான்.

गजेन्द्र उवाच

यतो जातमिदं सर्वं यस्मिंस्तिष्ठति कारणे ।
यत्र लीनं भवत्यन्ते तद्ध्यायामि परात्परम् ॥१९॥

கஜேந்த்ரன்

19. எங்கிருந்து உலகம் தோன்றியதோ, எதில் நிலைபெற்றுள் ளதோ, எதனில் மறைகிறதோ அந்தப் பரம்பொருளை த்யானிக்கிறேன்.

अनामरूपं चिन्मात्रमनिर्देश्यमजं प्रभुम् ।
अक्षरं शाश्वतं नित्यमप्रमेयं स्मराम्यहम् ॥२०॥

20. நாமரூபங்களற்றதும், சின்மயமானதும், சொல்லுக்கு எட்டாததும், பிறப்பற்றதும், ப்ரபுவும், அழிவற்றதும், சாச்வத மானதும், நித்யமானதும், ப்ரமாணங்களுக்கு எட்டாததுமான அந்த பரம்பொருளை த்யானிக்கிறேன்.

महताञ्च महद्यद्यन्मङ्गलानाञ्च मङ्गलम् ।
पवित्राणां पवित्रं तद्ध्यायामि ब्रह्म शाश्वतम् ॥२१॥

21. மஹத்துக்கெல்லாம் மஹத்தும் மங்களத்துக்கெல்லாம் மங்களமும் பவித்ரத்துக்கெல்லாம் பவித்ரமான அந்த பரப்ரும்மத்தை த்யானம் செய்கிறேன்.

तस्मै नमोस्तु देवाय जगज्जन्मादिहेतवे ।

अपरिच्छिन्नरूपाय ब्रह्मणे परमात्मने ॥२२॥

22. உலகில் உத்பத்தி ஸ்திதி நாசத்துக்குக் காரணமான எங்கும் வ்யாபித்த பரப்ரும்மமான அந்த தேவனுக்கு நமஸ்காரம்.

संसारसागरे घोरे ग्रस्तं मां मृत्युना प्रभुः ।
कृपया रक्षतु क्षिप्रं भगवान् परमेश्वरः ॥२३॥

23. கோரமான ஸம்ஸாரஸாகரத்தில் ம்ருத்யுவினால் பீடிக்கப்பட்ட என்னை அந்த பரமேச்வரன் க்ருபையால் ரக்ஷிக்கட்டும்.

श्रीसद्गुरुरुवाच

एवं प्रपन्नं हस्तीन्द्रं कीर्तयन्तं महेश्वरम् ।
दृष्ट्वा ब्रह्मादयो देवाश्चक्रुस्तस्मिन् कृपां तदा ॥२४॥

ஸ்ரீஸத்குரு

24. இவ்வாறு பரமேச்வரனையே கூவி சரணமடைந்த அந்த யானையைப் பார்த்து ப்ரும்மாதிதேவர்கள் கருணை செய்தனர்.

निर्विशेषपरे स्तोत्रे तस्मिन् हस्तीन्द्रकीर्तिते ।
अधिकारमपश्यन्तो न ररक्षुरजादयः ॥२५॥

25. ஆனால் அந்த ஸ்தோத்திரம் பரமாத்மாவைப் பற்றியதாக இருப்பதால் ப்ரம்மாதிதேவர்கள் ரக்ஷிக்க வரமுடியவில்லை.

नाहं नाहमिति स्मृत्वा तिष्ठत्सु निखिलेष्वपि ।
देवेषु तत्र तं कोपि न ररक्ष महागजम् ॥२६॥

26. ப்ரம்மாதிதேவர்களும் தங்களுக்கு இந்த ஸ்தோத்திரம் தகாது என்று கருதி நானில்லை நானில்லை நான் பரப்ரும்மமில்லை என்று கருதி நின்றுவிட்டனர்.தேவர்களில் ஒருவன் கூட கஜேந்த்ரனைக் காக்கவில்லை.

तत्राविरासीद्भगवान् शङ्खचक्रगदाधरः ।
वेदरूपं गरुत्मन्तमारुह्य त्वरया हरिः ॥२७॥

नीलोत्पलदलश्यामः प्रसन्नवदनाम्बुजः ।
संसेव्यमानः सकलैः पार्षदैः सुरसत्तमैः ॥२८॥

27,28 அப்போது சங்கசக்ரதரனாக பகவான் ஹரி, வேதஸ்வரூப னான கருடன் மேலேறி, நீலோத்பலம்போல் ச்யாமவர்ண மாயும், ப்ரஸன்னமான முககமலம் உடையவராயும், நித்ய பார்ஷதர்களாலும் தேவர்களாலும் ஸேவிக்கப்படுபவராயும் அங்கு தோன்றினான்.

तं विलोक्य घनश्यामं तिष्ठन्तं हरिमम्बरे ।
आदाय पद्मं हस्तेन पूजाञ्चक्रे महागजः ॥२९॥

29. ஆகாயத்தில் நிற்கும் நீலமேகச்யாமளனான ஹரியைக் கண்டு கஜேந்த்ரன் தனது துதிக்கையால் ஒரு தாமரைப்பூவை ஸமர்ப்பித்து பூஜை செய்தான்.

नक्रं चक्रेण सहसा निहत्य कृपया हरिः ।
उज्जहार करीन्द्रं तं हस्तेनाकृष्य माधवः ॥३०॥

30. மாதவன் தன் கைசக்கரத்தினால் முதலையைப் பிளந்து கஜேந்த்ரனைத் தனது கையால் துதிக்கையைப் பிடித்து இழுத்துக் காப்பாற்றினான்.

तत्करस्पर्शमात्रेण तत्सारूप्यमवाप्य सः ।
तेन साकमवापापि वैकुण्ठं परमं पदम् ॥३१॥

31. பகவானின் கரம் பட்டதுமே கஜேந்த்ரன் ஸாரூப்யமடைந்து பகவானுடனேயே வைகுண்டம் சென்றுவிட்டான்.

मकरोपि दिवं प्राप कृपया श्रीपतेस्तदा ।
विष्णुचक्रप्रतापेन दग्धपापो महाबलः ॥३२॥

32. முதலையும் விஷ்ணுசக்ரத்தின் ப்ரபாவத்தால் தனது பூர்வபாபம் நீங்கி பகவானின் க்ருபையால் முதலை சரீரம் நீங்கி தேவலோகம் சென்றான்.

यः पठेच्छृणुयाद्वापि नित्यं प्रातः समाहितः ।
गजेन्द्रमोक्षं परमं स प्राप्नोति हरेः पदम् ॥३३॥

33. யார் தினமும் காலையில் இந்த கஜேந்த்ரமோக்ஷத்தை ச்ரத்தையுடன் படிப்பார்களோ அவர்கள் பரமபதத்தை அடைவார்கள்.

इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये भागवतधर्मकाण्डे गजेन्द्रमोक्षो नाम द्वितीयोऽध्यायः ॥२॥

இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமி மஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்ம்யம் பாகவததர்மகாண்டத்தில் கஜேந்த்ரமோக்ஷம் என்னும் இரண்டாமத்யாயம்.

# अथ तृतीयोऽध्यायः

## மூன்றாமத்யாயம்

### श्रीसद्गुरुरुवाच

निर्गुणोपि परो देवो गुणवान् भवति स्वयम् ।
निराकारोपि गोविन्दः साकारो भवति स्वयम् ॥१॥

### ஸ்ரீஸத்குரு

1. பகவான் ஸ்வரூபத்தினால் நிர்குணமாக இருந்தபோதிலும் ஸகுணமாகவுமிருக்கிறான். அவ்வாறே ஸ்வரூபத்தினால் நிராகாரமாக இருந்தபோதிலும் ஸாகாரமாகவுமிருக்கிறான்.

निष्क्रियोपि परो विष्णुः क्रियावान् भवति स्वयम् ।
निर्विशेषोपि गोविन्दो दृश्यते सविशेषवान् ॥२॥

2. விஷ்ணு எந்த க்ரியையுமற்றவராயினும் ஸர்வகர்த்தாவாகவுமிருக்கிறான். எந்த விசேஷணமும் அற்றவராயினும் ஸர்வ விசேஷணங்களும் உள்ளவராகவும் இருக்கிறார்.

नामरूपगुणातीतं परं ब्रह्म तु तत्त्वतः ।

तथापि भक्तवात्सल्यात् सगुणं भवति स्वयम् ॥३॥

3. உண்மையில் பரப்ரும்மம் நாமரூபகுணங்கள் அற்றதுதான். ஆயினும் பக்த வாத்ஸல்யத்தினால் நாமரூபகுணங்களைத் தரிக்கிறது.

निष्क्रियोपि परो देवो ब्रह्मरुद्रस्वरूपधृत् ।
जगत्सृष्टिविनाशञ्च करोति भगवान् हरिः ॥४॥

4. பகவான் எந்த க்ரியையுமற்றவராயினும் ப்ரம்ஹா, ருத்ரன் என்னும் ரூபத்தை தரித்துக்கொண்டு உலகச்ருஷ்டி, நாச மென்னும் க்ரியைகளைச் செய்கிறான்.

जगत्सृष्टिञ्च रजसा सत्त्वेन परिपालनम् ।
तमसा सर्वसंहारं कुरुते निर्गुणो हरिः ॥५॥

5. ஸத்வகுணத்தினால் உலகின் பரிபாலனத்தையும், ரஜோ குணத்தினால் ஸ்ருஷ்டியையும், தமோகுணத்தினால் ஸம்ஹாரத்தையும் பகவான் செய்கிறான்.

हरिर्हि निर्गुणः साक्षाद्गुणवानिव दृश्यते ।
ब्रह्मादिरूपभेदेन कुर्वन् सृष्ट्यादिकेलिकाः ॥६॥

6. ஹரி ஸ்வரூபத்தினால் நிர்குணமானவர். ஆனால் குணமுடையவர்போல் காணப்படுகிறார். ப்ரம்ஹாமுதலிய தேவதைகளின் ரூபங்களில் தானே ஸ்ருஷ்டிமுதலிய லீலைகளைச் செய்கிறார்.

सरस्वतीनदीतीरे मुनयः संशितव्रताः ।
यज्ञञ्चक्रुर्महात्मानः पुरस्कृत्य भृगुं मुनिम् ॥७॥

7. ஸரஸ்வதிநதிதீரத்தில் ப்ருகுமுனிவரை முன்னிட்டுக்கொண்டு பல முனிவர்கள் யாகம் செய்தனர்.

तदा तत्रागतो ज्ञानी नारदो भगवान् मुनिः ।
पप्रच्छ तान् मुनीन् सर्वान् रणयन् वल्लकीं मृदु ॥८॥

8. அப்போது அங்கு வந்த நாரதமுனிவர் அடிக்கடி வீணையை மீட்டிக் கொண்டே அவர்களைப் பார்த்து ஒரு கேள்வி கேட்டார்.

नारद उवाच

कमुद्दिश्य परं देवं यज्ञोयं क्रियते तथा ।
को देवः सर्वदेवेषु श्रेष्ठः सत्त्वगुणान्वितः ॥९॥

நாரதர்

9. எந்த தேவனைக் குறித்து நீங்கள் யக்ஞம் செய்கிறீர்கள்? எந்த தேவன் ஸர்வ தேவர்களிலும் சிறந்தவன்?

मुनय ऊचुः

सर्वान् देवान् समत्वेन वयं मन्यामहे मुने ।
को देवः श्रेष्ठ इत्येष संप्रश्नो व्यर्थ एव हि ॥१०॥

முனிவர்கள்

10. முனிவரே! எல்லா தெய்வமும் ஒன்றுதானே. அப்படித் தானே நாங்கள் பாவிக்கிறோம். எந்த தெய்வம் சிறந்தது என்ற கேள்வி வீணே.

नारद उवाच

एक एव परो देवः सर्वदेवनियामकः ।
जगत्सृष्ट्यादिकर्ता तु स एव परमेश्वरः ॥११॥

நாரதர்

11. ஒரே தேவன் ஸர்வதேவர்களையும் நியமிப்பவன். ஜகத்ச்ருஷ்டி, ஸம்ஹாரம் செய்பவன் ஒரே பரமேச்வரனே.

परमेशबहुत्वे तु जगत्सृष्ट्यादिकर्मणि ।
जायेत कलहस्तेषामीश्वराणां परस्परम् ॥१२॥

12. பல ஈச்வரர்கள் இருந்தால் உலகஸ்ருஷ்ட்யாதி விஷயங்களில் ஈச்வரர்களுக்குள் பரஸ்பரம் கலகம் வந்துவிடும்.

तस्मादेकः परो देवः सर्वदेवनियामकः ।
अन्ये देवा नियाम्या हि तदधीना न संशयः ॥१३॥

13. ஆகையால் ஒருதேவனே பரமேச்வரன், மற்ற தேவர்களையும் நியமிப்பவன் அவனே. பரமேச்வரனுக்கு அடங்கியவர்களே மற்ற தேவர்கள். இதில் ஸம்சயமில்லை.

### मुनय ऊचुः

सृष्टिं करोति ब्रह्मैवं विष्णुः पालयति प्रभुः ।
हरो हरति तत्सर्वमित्येवमनुशुश्रुम ॥१४॥

### முனிவர்கள்

14. ப்ரஹ்மாவே ஸ்ருஷ்டிகர்த்தா. விஷ்ணுவே ரக்ஷிப்பவர். ருத்ரனே ஸம்ஹார கர்த்தா. இவ்வாறுதான் நாங்கள் தொன்றுதொட்டு கேட்டு வந்துள்ளோம்.

### नारद उवाच

त्रिषु देवेषु को देवः परमश्च गुणाधिकः ।
यूयं परीक्ष्य विज्ञाय कुरुध्वं निश्चयं परम् ॥१५॥

### நாரதர்

15. அந்த மும்மூர்த்திகளுள் யார் சிறந்தவர் என்றும், யார் மிகவும் நல்ல குணமுடையவர் என்றும் நீங்களே பரீக்ஷை செய்து தெரிந்து கொள்ளுங்கள்.

### श्रीसद्गुरुरुवाच

इत्याकर्ण्य मुनेर्वाक्यं नारदस्य महात्मनः ।
भृगुर्देवपरीक्षायै प्रतस्थे मुनिपुङ्गवः ॥१६॥

### ஸ்ரீஸத்குரு

16. இவ்வாறு நாரதமுனிவரின் வார்த்தையைக் கேட்டு முனிவரில் சிறந்தவரான ப்ருகு தேவர்களைப் பரீக்ஷை செய்யப் புறப்பட்டார்.

स गत्वा सत्यलोकं तु ब्रह्माणं वीक्ष्य तत्र च ।
प्रणामं न चकारास्मै परीक्षां कर्तुमिच्छया ॥१७॥

*17. அவர் ஸத்யலோகம் வந்து ப்ரம்மாவை வணங்காமல் அவரை பரீக்ஷை செய்யவேண்டி நின்றார்.*

तदा ब्रह्मा प्रियं पुत्रमविनीतमुपेक्ष्य सः ।
सरस्वत्यैव सल्लापं चक्रे कामकुतूहलः ॥१८॥

*18. அப்போது ப்ரம்மா வினயமற்றவரான தன் புத்ரனான ப்ருகுவை தானும் அலக்ஷியம் செய்து, ஸரஸ்வதிதேவியுடனேயே ஸரஸ ஸல்லாபம் செய்து கொண்டிருந்தார்.*

तं त्यक्त्वा राजसं देवं कैलासमगमद्भृगुः ।
अकालेप्यागते तस्मिन् कोपं प्राप महेश्वरः ॥१९॥

*19. இவரை ரஜோகுணமுடைய தேவன் என்று அறிந்த ப்ருகு நேராக கைலாஸம் வந்தார். அகாலத்தில் வந்ததால் ப்ருகுவிடம் கோபமடைந்தார் சிவன்.*

तं त्यक्त्वा तामसं देवं कोपेन महता भृगुः ।
क्षीराब्धिं प्राप विष्णोश्च परीक्षां कर्तुमिच्छया ॥२०॥

*20. சிவனையும் தாமஸதேவதை என்று அறிந்த ப்ருகுமுனிவர் விஷ்ணுவையும் பரீக்ஷை செய்யவேண்டி க்ஷீராப்திக்கு வந்து சேர்ந்தார்.*

मृदुले शेषपर्यङ्के शयानं श्यामसुन्दरम् ।
योगनिद्रामीलिताक्षं पीताम्बरधरं प्रभुम् ॥२१॥
शान्तं सर्वगुणोपेतं सर्वलोकमहेश्वरम् ।
दृष्ट्वा वक्षःस्थले तस्य पादक्षेपं चकार सः ॥२२॥

*21,22. சேஷசயனத்தில் படுத்து யோகநித்ரை செய்பவரும், நீலவர்ணமானவரும், பீதாம்பரமணிந்தவரும், சாந்தமானவரும்,*

ஸர்வகுணங்களுமுடையவரும், ஸர்வலோகங்களுக்கும் ஈச்வரனுமான விஷ்ணுவைப் பார்த்து அவரது மார்பில் தனது காலை வைத்தார்.

सहसोत्थाय गोविन्दो मुनेः पादौ प्रगृह्य सः ।
अतीव कोमलौ तात चरणौ ते महामुने ।
मम वक्षःस्थलन्यासात् क्लेशं संप्रापतुः किल ॥२३॥

एवं संसान्त्वयन् देवः पूजयामास केशवः ।
श्रिया सह जगन्नाथः क्षमावान् हि स्वभावतः ॥२४॥

23,24. உடனே கோவிந்தன் எழுந்திருந்து அவரது பாதத்தைத் தனது கையால் வருடி உமது பாதம் கோமளமானதாயிற்றே. எனது இதயம் கடினமானதாயிற்றே. என் மார்பில் கால் பட்டதால் நோகுகிறதோ என்று அவரை ஸமாதானம் செய்து அந்த ஆதிகேசவன் ஸ்வபாவத்திலேயே பொறுமைசாலியாக இருப்பதால் லக்ஷ்மியுடன்கூடி ப்ருகு முனிவரைப் பூஜித்தான்.

अथागत्य सरस्वत्यास्तीरं मुनिवरो भृगुः ।
उवाच मधुरं श्लक्ष्णं स्वशिष्यानाश्रमस्थितान् ॥२५॥

25. பிறகு அந்த ப்ருகுமுனிவர் ஸரஸ்வதிநதிதீரம் வந்து, அங்குள்ள தனது சிஷ்யர்களைப் பார்த்துக் கூறினார்.

भृगुरुवाच

विष्णुरेव परो देवः सदा सत्त्वगुणान्वितः ।
ब्रह्मा रजोगुणोपेतस्तमोगुणयुतो हरः ॥२६॥

ப்ருகு

26. விஷ்ணுவே ஸத்வகுணமுள்ளவர். அவரே சிறந்த தேவன் ப்ரம்மா ரஜோகுணமுள்ளவர். சிவன் தமோகுணமுள்ளவர்.

सत्त्वात्सञ्जायते ज्ञानं ज्ञानान्मोक्षमवाप्नुयात् ।

तस्मान्मुमुक्षुर्गोविन्दे भक्तिं कुर्याद्दृढव्रतः ॥२७॥

27. ஸத்வகுணத்தினால்தான் ஞானமுண்டாகும். ஞானத்தினால் தான் மோக்ஷமடைவான். எனவே மூமுக்ஷுவானவன் விஷ்ணு பக்தியே செய்யவேண்டும்.

यतो भूतानि जायन्ते येन जीवन्ति यं तथा ।
संविशन्ति तमेवैकं जानीत परमं हरिम् ॥२८॥

28. யாரிடத்திலிருந்து ஸர்வபூதங்களும் உண்டாகின்றனவோ, எவரிடத்தில் நிலைத்துள்ளதோ, ப்ரளயத்தில் எவரிடமொடுங் குகிறதோ அந்த ஹரியையே பரதத்வமாக அறியுங்கள்.

तदधीनो जगद्ब्रह्मा सृजति प्रलये हरः ।
तदधीनो हरत्येवं तस्मात्सर्वोत्तमो हरिः ॥२९॥

29. அந்த விஷ்ணுவிற்கு அதீனமாக இருந்தே ப்ரும்மா படைக்கிறார், அவருக்கு அதீனமாக இருந்தே சிவன் ஸம்ஹரிக்கி றான். எனவே ஹரியே ஸர்வோத்தமன்.

ब्रह्मरुद्रादिदेवेषु त्यक्त्वाऽसूयां महामनाः ।
सर्वदेववरे विष्णौ कुर्याद्भक्तिं दृढव्रतः ॥३०॥

30. இந்த மும்மூர்த்திகளிலும் அஸூயையை விட்டு, ஆனால் விஷ்ணுவிடமே பக்தி செய்ய வேண்டும். ஸர்வதேவர்களிலும் சிறந்தவர் விஷ்ணுவே.

**श्रीसद्गुरुरुवाच**

एवं भृगुमुनेर्वाक्यं श्रुत्वा सर्वेपि सात्विकम् ।
विष्णुमाराधयन्ति स्म मुनयो वैष्णवोत्तमाः ॥३१॥

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये भागवतधर्मकाण्डे भृगूपाख्यानं नाम तृतीयोऽध्यायः ॥३॥*

**ஸ்ரீஸத்குரு**

31. இவ்வாறு ப்ருகு முனிவரின் வாக்யத்தைக் கேட்டு எல்லா

முனிவர்களும் ஸாத்விகனான விஷ்ணுவையே ஆராதிக்கும் வைஷ்ணவர்களாக ஆனார்கள்.

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமி மஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்ம்யம் பாகவததர்மகாண்டத்தில் மூன்றாமத்யாயம்.**

# अथ चतुर्थोऽध्यायः

## நான்காம் அத்யாயம்

### श्रीसद्गुरुरुवाच

कालः कर्म परं ब्रह्म प्रकृतिः पुरुषस्तथा ।
पञ्चैते शाश्वता नित्या नैषां नाशो हि विद्यते ॥१॥

ஸ்ரீஸத்குரு

*1. காலம் கர்மம் ப்ரக்ருதி ஜீவன் பரப்ரம்மம் இவை ஐந்தும் நித்யமான தத்வங்களாகும். இவைகளுக்கு அழிவில்லை.*

स्वातन्त्र्यमपि कालस्य जडत्वान्न कदाचन ।
परस्य ब्रह्मणः शक्त्या क्रमेणैव प्रवर्तते ॥२॥

*2. காலம் ஜடமாக இருப்பதால் சுதந்திரமானதல்ல. பரமாத்மாவின் சக்தியாலேயே க்ரமமாக இயங்குகிறது.*

तथा कर्मफलञ्चापि स्वयमेव न सिद्ध्यति ।
जडत्वमेव सिद्धं हि कर्मणोऽपि प्रमाणतः ॥३॥

*3. அவ்வாறு கர்மபலனும் தானே கிடைத்துவிடாது. கர்மாவும் ஜடம்தானே. எனவே ஈச்வரனே கர்மபலனைத் தருகிறான்.*

अध्यक्षकेण प्रकृतिः कृष्णेन परमात्मना ।
आब्रह्मलोकपातालं सूयते सचराचरम् ॥४॥

*4. ப்ரக்ருதியும் அத்யக்ஷகனான க்ருஷ்ணபரமாத்மாவின் இச்சையாலேயே ப்ரம்மலோகம்முதல் ஸர்வலோகங்களையும் பெறுகிறது.*

अनन्तशक्तियुक्तस्य कृष्णस्य परमात्मनः ।
वक्ष्यामि शक्तिवैचित्र्यमनन्तं श्रुतिसंमतम् ॥५॥

5. க்ருஷ்ணபரமாத்மா அனந்தசக்திகள் உடையவர். அவை விசித்ரமானவை. வேதத்தில் சொன்னபடி அவைகளைச் சொல்கிறேன்.

ह्लादिनी सन्धिनी संविदिति शक्तित्रयं परम् ।
इच्छाशक्तिः क्रियाशक्तिर्ज्ञानशक्तिरितीर्यते ॥६॥

6. ஹ்லாதினி ஸந்தினி ஸம்வித் என்று மூன்று சக்திகள் முக்யமானவை. இவையே இச்சாசக்தி க்ரியாசக்தி ஞானசக்தி என்பர்.

तत्रापि ह्लादिनी मुख्या सच्चिदानन्दरूपिणी ।
यां वदन्ति पुराणानि साक्षाद्रासेश्वरीं पराम् ॥७॥

7. அந்த சக்திகளுள் ஹ்லாதினிசக்தியே முக்யமானது. இந்த சக்தியையே ஸச்சிதானந்த ஸ்வரூபிணியான ராஸேச்வரியான ஸாக்ஷாத் ராதை என்று புராணங்கள் சொல்லுகின்றன.

ह्लादिन्या परया शक्त्या संयुक्तो भगवान् हरिः ।
आह्लादयति गोविन्दश्चेतनाचेतनं जगत् ॥८॥

8. பகவானான க்ருஷ்ணன் ஹ்லாதினிசக்தியினாலேயே சேதனாசேதனமான ஸகலஜகத்தையும் ஆனந்தப்படுத்துகிறான்.

अनाद्यविद्योपहतान् जीवानुत्थाप्य सैव हि ।
प्रदर्शयति कारुण्यात्पुरुषार्थचतुष्टयम् ॥९॥

9. அனாதிகாலமாக அவித்யையில் மூழ்கிக்கிடக்கும் ஜீவ கோடிகளை எழுப்பி கருணையால் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் புருஷார்த்தங்களைக் காட்டிக் கொடுப்பது இந்த பராசக்தியே.

ददाति भजनानन्दं जीवेभ्यः कृपया भुवि ।

प्रेमभक्तिस्वरूपेण स्वयमेव हि संस्थिता ॥१०॥

10. ஜீவர்களுக்கு ப்ரேமபக்தியாகத் தானே இருந்து பஜனா னந்தத்தையும் க்ருபையினால் தருவதும் ஹ்லாதினிசக்தியே.

नित्यलीलारसञ्चापि कृष्णस्य परमात्मनः ।
प्रवर्धयति सानन्दं गोलोकभुवनेऽपि सा ॥११॥

11. கோலோகபுவனத்தில் க்ருஷ்ணபரமாத்மாவின் நித்ய லீலைகளை ப்ரகாசப்படுத்துவதும் ஹ்லாதினிசக்தியே.

वैकुण्ठेपि च सा शक्तिर्महालक्ष्मीस्वरूपिणी ।
जीवेभ्यो नित्यमुक्तेभ्यो मोक्षानन्दं ददाति च ॥१२॥

12. வைகுண்டத்திலும் மஹாலக்ஷ்மியாக இருந்து நித்யர் களுக்கும் முக்தர்களுக்கும் மோக்ஷானந்தத்தைத் தருபவள் ஹ்லாதினிசக்தியே.

अवतारेषु चान्येषु कृष्णस्य परमात्मनः ।
अनुरूपस्वरूपेण ददाति परमं रसम् ॥१३॥

13. க்ருஷ்ணபரமாத்மாவின் அவதாரங்களிலும் அவனுக்கு அனுரூபமாய் தானும் ரூபங்கள் எடுத்து லீலைகள் செய்வதும், லீலாரஸத்தைத் தருவதும் ஹ்லாதினிசக்தியே.

शक्तिरन्यापि कृष्णस्य जगत्सृष्ट्यादिकारिणी ।
वदन्त्युपनिषत्सङ्घा यामेव त्रिगुणात्मिकाम् ॥१४॥

14. மற்றொரு சக்தி மூன்று குணங்கள் உள்ள மாயையாகும். இதுவே உலக ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரலீலைக்கு ஹேது என்று உபநிஷத்துக்கள் கூறுகின்றன.

जडशक्तिरियं माया कृष्णस्य परमात्मनः ।
वेदान्तिनो यां वदन्ति मूलप्रकृतिमीश्वरीम् ॥१५॥

15. க்ருஷ்ணபரமாத்மாவின் இந்த மாயாசக்தி ஜடமானது.

இதைத்தான் வேதாந்திகள் மூலப்ரக்ருதி என்கின்றனர்.

सन्धिनीत्यपि विख्याता क्रियाशक्तिरियं विभोः ।
यया विमोहिता जीवा न जानन्ति हरिं विभुम् ॥१६॥

16. ஸந்தினி என்ற க்ரியாசக்தியும் இதுவேயாகும். இந்த மாயையால் மோஹித்த ஜீவர்கள் க்ருஷ்ணபரமாத்மாவை அறிவதில்லை.

निर्विकारस्य शुद्धस्य ब्रह्मणः परमात्मनः ।
जगद्रूपेण वै साक्षात्परिणामो न विद्यते ॥१७॥

17. சித்ரூபமான பரமாத்மா நிர்விகாரமாக இருப்பதால் அதுதானே உலகமாக பரிணமிக்கிறது.

सर्वशक्तस्य कृष्णस्य निर्विकारस्य वै प्रभोः ।
मायायाः परिणामेन जगत्सृष्टमिदं ध्रुवम् ॥१८॥

18. ஸர்வசக்தனான க்ருஷ்ணபரமாத்மாவின் மாயாசக்தியே பரிணமித்து உலகம் உண்டாகிறது.

प्रकृत्याश्चापि संसिद्धं तदधीनत्वमेव हि ।
तस्मात् स एव भगवान् सर्वकारणकारणम् ॥१९॥

19. ப்ரக்ருதியும் அந்த பரமாத்மாவுக்கே சொந்தமாக இருப்பதால் பரமாத்மாவே ஸர்வகாரணங்களுக்கும் காரணமாகிறான்.

अन्यामपि परां शक्तिं वक्ष्यामि परमात्मनः ।
ज्ञानशक्तिरियं प्रोक्ता या संविदिति कथ्यते ॥२०॥

20. பரமாத்மாவின் மற்றொரு சக்தி ஸம்வித் என்கிற ஞானசக்தியாகும்.

शुद्धज्ञानस्वरूपिण्या सर्वज्ञो भगवान् हरिः ।
अनयैव महाशक्त्या निखिलं व्याप्य तिष्ठति ॥२१॥

21. ஸர்வஞனான பகவான் ஹரி தனது இந்த ஞானசக்தி யினாலேயே உலகெங்கும் வியாபித்து நிற்கின்றான்.

अणोरणीयान्महतो महीयानिति वाक्यतः ।
चिच्छक्त्या बोधयन् सर्वं सर्वत्र व्याप्य तिष्ठति ॥२२॥

22. அணுவுக்கும் அணுவாகவும், மஹத்துக்கு மஹத்தாகவும் இந்த ஞானசக்தியாலேயே அந்தர்யாமியாக இருந்து ஸகல ப்ராணிகளையும் உணர்வு உடையதாகச் செய்கிறான்.

तदंशा निखिला जीवा बद्धा मुक्ताश्च शाश्वताः ।
ममैवांशो जीवभूत इति वाक्यप्रमाणतः ॥२३॥

23. இந்த ஞானசக்தியின் அம்சமே பக்தர்கள் முக்தர்கள் என்ற ஸகல ஜீவர்களும். எனது ஜீவர்கள் என்று பகவானே சொல்கிறானல்லவா?

अभिन्नं ब्रह्मरूपेण शक्तित्रयमिदं सदा ।
तथैवान्याश्रयालाभाद्भास्करस्य प्रभा यथा ॥२४॥

24. இந்த மூன்று சக்திகளுக்கும் ப்ரம்மஸ்வரூபம்தவிர வேறு ஆதாரம் கிடையாது. ஸூர்யனும் ப்ரபையும்போல் சக்தியும் சக்திமானும் அபேதமாய் தோன்றும்.

ईश्वरस्यापि शक्तेश्च भेदो नैव कदाचन ।
अद्वैतमप्यतः प्रोक्तं द्वैतमस्त्यपि भेदतः ॥२५॥

25. சக்தி சக்திமானாகிய ஈச்வரனைவிட்டு வேறு அல்ல. சக்திஇல்லாதவன் சக்திமானாகவும் ஆகமாட்டான். எனவே ஈச்வரனும், அவனது சக்தியும் ஒன்று என்பதால் அத்வைதம் ஸித்திக்கிறது. துவைதவாதிகள் பேதப்படுத்திப் பேசும்போது துவைதம் தோன்றுகிறது.

एवं वेदान्तवाक्यानां द्वैताद्वैताविरोधतः ।
कृष्णस्य कृपया व्यक्तमर्थं पश्यति पण्डितः ॥२६॥

26. இவ்வாறு வேதாந்தவாக்யங்களுக்கு த்வைதம் அத்வைதம் இரண்டுக்கும் விரோதமென்ற அர்த்தத்தை அறிபவர்களே பண்டிதர்கள். தெளிவான ஞானம் க்ருஷ்ணக்ருபையாலேயே உண்டாகும்.

अनन्तशक्तियुक्तस्य कृष्णस्य परमात्मनः ।
एवञ्च शक्तिवैचित्र्ये स्वभावे तु किमद्भुतम् ॥२७॥

27. இவ்வாறு அனந்தசக்தியுள்ள பகவான் க்ருஷ்ணனின் ஸ்வபாவமான விசித்ரமான சக்திகளில் எது அத்புதம்? எல்லாமே ஸர்வசக்தனுக்கு அதீனமானதுதானே.

कालस्य कर्मणश्चापि प्रकृतेः पुरुषस्य च ।
सर्वस्वतन्त्रो भगवान् श्रीकृष्णः प्रभुरुच्यते ॥२८॥

28. காலம், கர்மா, ப்ரக்ருதி, ஜீவன் எல்லாம் ஈச்வரனுக்கு அதீனமானவை. ஸ்ரீக்ருஷ்ணபரமாத்மா ஒருவரே ஸர்வ ஸ்வதந்த்ரமானவர்.

एषाञ्च पुरुषादीनां न स्वातन्त्र्यं कदाचन ।
सर्वानिमान्नियमयन् परिपाति यथाक्रमम् ॥२९॥

29. இந்த ஜீவன்முதலிய தத்வங்களுக்கு ஒருக்காலும் சுதந்திரமே கிடையாது. இதை ஆளுபவன் ஈச்வரனான ஸ்ரீக்ருஷ்ண பரமாத்மாவே. இவைகளை பரிபாலித்து வருபவனுமவனே.

कृष्णस्य देवदेवस्य कारुण्यादेव हि स्फुटम् ।
जायते निर्मलं ज्ञानं भक्तियोगेन नान्यथा ॥३०॥

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये भागवतधर्मकाण्डे*
*शक्तितत्त्वनिरूपणं नाम चतुर्थोऽध्यायः ॥४॥*

30. தேவதேவனான க்ருஷ்ணபரமாத்மாவின் கருணை யினாலேயே அவனிடம் பக்தி செய்பவர்களுக்கே தெளிவான

ஸம்சயமற்ற ஞானமுண்டாகும். வேறு வழியில்லை.

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிமஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்ம்யம் பாகவததர்மகாண்டத்தில் நான்காமத்யாயம்.**

# अथ पञ्चमोऽध्यायः

## ஐந்தாமத்யாயம்

### भागवता ऊचुः

अवतारांस्तदंशेन जीवानपि वदन्ति हि ।
जीवावतारयोर्भेदं वद सद्गुरुपुङ्गव ॥१॥

**பாகவதர்கள்**

*1. அவதாரங்களையும் ஈச்வரனின் அம்சமென்கின்றனர். ஜீவர்களையும் ஈச்வரனின் அம்சமென்கின்றனர். அவதாரங்களுக்கும் ஜீவர்களுக்கும் பேதமென்ன? குருதேவ! இதை விளக்க வேண்டும்.*

### श्रीसद्गुरुरुवाच

संरक्षणाय धर्मस्य प्रशमायेतरस्य च ।
परित्राणाय भक्तानामसतां निधनाय च ॥२॥

अवतारं करोत्येष स्वयं कृष्णः पुनः पुनः ।
करोति विविधां लीलां पुण्यश्लोकशिखामणिः ॥३॥

**ஸ்ரீஸத்குரு**

*2,3. புண்யச்லோகசிகாமணியான க்ருஷ்ணன் ஸாதுக்களை ரக்ஷிப்பதற்கும், துஷ்டர்களை அடக்குவதற்கும், தர்மத்தை நிலைநாட்டுவதற்கும் அடிக்கடி அவதரிக்கின்றான். பலவிதமான லீலைகள் செய்கிறான்.*

चिद्रूपत्वादभेदेन प्रोच्यते परमात्मना ।
वस्तुतो भेद एवास्ति जीवात्मपरमात्मनोः ॥४॥

4. சித்ரூபமாகவே இருப்பதால் அபேதம் சொல்லப்படுகிறது. ஆனால் ஜீவாத்மாவுக்கும் ஈச்வரனுக்கும் உண்மையாகவே பேதமுண்டு.

वालाग्रशतभागस्येत्याम्नायार्थप्रमाणतः ।
अणुरेवेति जीवात्मा व्यक्तमेव हि विद्यते ॥५॥

5. வாலாக்ரசதபாகஸ்ய' என்ற ச்ருதி வாக்யத்தின்படி ஜீவன் அணுஸ்வரூபமானவன் என்று தெரிகிறது.

सर्वदा विभुरेवासौ परमात्मा सनातनः ।
न तस्य प्राकृतो बन्धः स भूमेति परा श्रुतिः ॥६॥

6. ஸ பூமா என்ற ச்ருதி வாக்யத்தினால் ஈச்வரன் விபு என்று தெரிகிறது. இந்த பரமேச்வரனுக்கு ப்ரக்ருதியால் பந்தம் கிடையாது.

सर्वज्ञः परमात्मा तु जीवः किञ्चिज्ज्ञ एव हि ।
सर्वशक्तः परात्मा स जीवोऽशक्त इतीर्यते ॥७॥

7. பரமாத்மா ஸர்வக்ஞன்; ஜீவனோ கிஞ்சிக்ஞன். பரமாத்மா ஸர்வசக்தன்; ஜீவனோ அசக்தன்.

सर्वस्वतन्त्रो भगवान् जीवस्तु तदधीनता ।
अणुस्वरूपो जीवस्तु परमात्मा विभुः स्मृतः ॥८॥

8. பரமாத்மா ஸர்வஸ்வதந்த்ரன்;. ஜீவனோ பரதந்த்ரன். பரமாத்மா விபு; அவனோ அணுஸ்வரூபன்.

अंशी च भगवान् साक्षात्तदंशा जीव उच्यते ।
मायया मोहितो जीवो भगवान् मोक्षदायकः ॥९॥

9. பரமாத்மா அம்சீ; ஜீவனோ அம்சம். பரமாத்மா முக்தி தருபவன்; ஜீவன் பந்தப்பட்டவன்.

कर्ता भोक्ता च जीवस्तु परमात्मा फलप्रदः ।

एवं भेदोस्ति च व्यक्तं जीवात्मपरमात्मनोः ॥१०॥

*10. ஜீவனோ கர்த்தாவாகவும் போக்தாவாகவும் இருக்கிறான். ஈச்வரனோ கர்மபலனைத் தருபவன். இவ்வாறு ஜீவாத்மாவுக்கும் பரமாத்மாவுக்கும் பல பேதம் இருக்கிறது.*

ज्ञानशक्तिस्तु कृष्णस्य परा प्रकृतिरुच्यते ।
विस्फुलिङ्गा यथा वह्नेस्तथा जीवास्तदंशकाः ॥११॥

*11. க்ருஷ்ணபரமாத்மாவின் ஞானசக்தியே பராப்ரக்ருதி எனப்படும். தீயின் சுடர்போல் அந்த ஞானசக்தியின் அம்சங்களே ஜீவாத்மாக்கள்.*

एकमेवात्मतत्त्वं हि तेषां सामान्यरूपतः ।
स्वरूपतस्तथा तेषामणुत्वञ्च प्रकीर्त्यते ॥१२॥

*12. ஜீவாத்மாக்களின் ஸமஷ்டிரூபம் ஒரே ஆத்மா என்று சொல்லப்படுகிறது. ஆனால் வியஷ்டிரூபத்தினால் பல ஜீவாத்மாக்களும் சொல்லப்படுகின்றன.*

कृष्णस्य नित्यलीलायां तथैव परमे पदे ।
नित्यमुक्ताः सन्ति जीवा ह्लादिन्या परिरक्षिताः ॥१३॥

*13. க்ருஷ்ணனுடைய நித்யலீலையிலும் பரமபதத்திலும் ஹ்லாதினிசக்தியால் ரக்ஷிக்கப்பட்டு நித்யர்களும் முக்தர்களுமான ஜீவர்கள் இருக்கின்றனர்.*

अनाद्यविद्योपहताः केचिज्जीवा विवेकतः ।
परं पदं प्राप्नुवन्ति ह्लादिन्यैव समुद्धृताः ॥१४॥

*14. அனாதிகாலமாக அவித்யையால் மோஹித்திருந்த போதிலும் சில ஜீவன்கள் ஹ்லாதினிசக்தியால் உத்தாரணம் செய்யப்பட்டவர்களாய் விவேகிகளாய் முக்தி பெறுகின்றனர்.*

अनन्ता जीववर्गास्तु संसारे तु पुनः पुनः ।

भ्रमन्ति कृष्णविमुखाः कामभोगपरायणाः ॥१५॥

15. பல ஜீவர்கள் காமபோகத்தில் விருப்பமுள்ளவர்களாய் க்ருஷ்ணனை மறந்து இந்த ஸம்ஸாரத்திலேயே உழலுகின்றனர்.

अव्यक्तस्य विशुद्धस्य विकाररहितस्य च ।
आत्मनो बुद्धितत्त्वेन मायामोहः प्रजायते ॥१६॥

16. அரூபமானதும் விகாரமற்றதும் சுத்தமானதுமான ஆத்மதத்வத்தில் புத்தியாகிய உபாதையால் மாயாமோஃஹ முண்டாகிறது.

बुद्धिस्तु द्विविधा प्रोक्ता लौकिकी पारमार्थिकी ।
अविद्या लैकिकी चैवं विद्या सा पारमार्थिकी ॥१७॥

17. புத்தி லௌகீகமானது; பரமார்த்தமானது என்று இரண்டு வகைப்படும். லௌகீகபுத்தியே அவித்யை. பாரமார்த்திக புத்தியே வித்யை.

अविद्ययैव बन्धस्तु विद्यया मोक्ष एव हि ।
गुरुगोविन्दकारुण्यात् सा विद्या संप्रकाशते ॥१८॥

18. அவித்யையால் பந்தமும் வித்யையால் மோக்ஷமும் உண்டாகிறது. குரு கோவிந்தன் இவர்களின் காருண்யத்தினாலேயே பாரமார்த்திகபுத்தி ப்ரகாசிக்கிறது.

चिन्मयो बुद्धिमान् सूक्ष्मः शाश्वतो निर्मलस्तथा ।
कृष्णाश्रयस्तथाणुश्च जीवात्मैव सनातनः ॥१९॥

19. இந்த ஜீவாத்மா புத்தியுடன் கூடியவனாய், சின்மயமானவனாய், ஸூக்ஷ்மமானவனாய், சாச்வதமாக இருப்பவனாய், அழுக்கற்றவனாய் அழியாதவனாய், க்ருஷ்ணனை ஆச்ரயித்தவனாய் இருக்கிறான்.

प्रवर्तते कर्मणैव संसृत्यामीश्वरेच्छया ।

जन्मकर्मफलाधीनं स्वातन्त्र्यं नैव विद्यते ॥२०॥

20. ஈச்வரேச்சையால் ஜீவன் தனது பூர்வகர்மத்தினாலேயே ஸம்ஸாரத்தில் ப்ரவ்ருத்திக்கிறான். கர்மபலத்துக்கு அதீன மானதே இவனது ஜன்மம், ஜீவனுக்கு சுதந்திரமில்லை.

मुक्तानामपि भक्तानां संसारो न कदाचन ।
गोविन्दभुजगुप्तास्ते लभन्ते न पुनर्भवम् ॥२१॥

21. முக்தர்களுக்கும் பக்தர்களுக்கும் ஸம்ஸாரபந்தமில்லை. கோவிந்தனால் ரக்ஷிக்கப்படுமிவர்களுக்கு மறுபிறவி கிடையாது.

संरक्षणाय साधूनामवतीर्णे परात्मनि ।
अवतारं प्रकुर्वन्ति मुक्ता जीवाश्च लीलया ॥२२॥

22. ஸாதுக்களை ரக்ஷிக்க பகவான் அவதாரம் செய்யும்போது சிலசமயம் முக்தர்களும் கூட அவதரிக்கின்றனர்.

नदीसमुद्रसंयोगे भेदोस्ति परमाणुतः ।
अभेदः स्थूलरूपेण दृश्यते व्यक्तमेव हि ॥२३॥

23. நதி ஸமுத்திரத்தில் கலந்து விட்டால் ஸ்தூலமான பேதம் தெரியாத போனாலும் நதிஜலத்தில் பரமாணுக்கள் கலக்காமல் பேதமாகவே இருக்கிறது. ஸூக்ஷ்மமான பேதம் இருக்கவே செய்கிறது.

एवं मोक्षेपि भेदोस्ति जीवात्मपरमात्मनोः ।
तथा समानरूपत्वात् स्थूलभेदो विनश्यति ॥२४॥

24. இவ்வாறு மோக்ஷத்திலும் ஜீவாத்மாக்களுக்கும் பரமாத்மாக்களுக்கும் பேதம் இருக்கிறது. ஸாரூப்யமடைந்து விட்டதால் ஸ்தூலமான பேதம் நீங்கிவிட்டது.

लीलया विग्रहं कृत्वा मुक्तास्तत्रापि स्वेच्छया ।
अनुरूपेण रूपेण क्रीडन्ति परमात्मना ॥२५॥

25. முக்தர்கள்கூட லீலையாக பல ரூபங்கள் தரித்து பரமாத்மாவுடன் விளையாடுகின்றனர்.

सर्ववेदान्तसंप्रोक्तमात्मतत्त्वं पठन्ति ये ।
गोपीभावेन संसिद्धा लभन्ते ते परं पदम् ॥२६॥

26. இவ்வாறு ஸர்வவேதாந்தங்களிலும் ஸித்தாந்தம் செய்யப்படும் ஆத்மதத்வத்தை கோபீபாவத்தினால் அறிந்த வர்கள் அந்த பரமபதத்தை அடைகின்றனர்.

इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये भागवतधर्मकाण्डे जीवतत्त्वनिरूपणं नाम पञ्चमोऽध्यायः ॥५॥

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமி மஹாப்ரபு அருளிய ப்ருந்தாவன மாஹாத்மியத்தில் பாகவததர்மகாண்டத்தில் ஐந்தாமத்யாயம்.**

# अथ षष्ठोऽध्यायः

# ஆறாம் அத்யாயம்

**भागवता ऊचुः**

तत्त्वत्रयमिदं प्रोक्तं सर्ववेदान्तसंमतम् ।
उपायञ्च फलञ्चापि सद्गुरो वद विस्तरात् ॥१॥

**பாகவதர்கள்**

1. ஸத்குரோ! மூன்று தத்வங்களைப்பற்றி விவரித்துக் கூறினீர். இப்போது உபாயத்தையும்பலனையும் எங்களுக்கு சொல்வீராக.

**श्रीसद्गुरुरुवाच**

नात्मानं पातयेद्घोरे दुस्तरे भवसागरे ।
अवलम्ब्य गुरोः पादमात्मनात्मानमुद्धरेत् ॥२॥

**ஸ்ரீஸத்குரு**

2. தன்னைத்தானே ஸம்ஸாரத்தில் வீழ்த்திக்கொள்ளக் கூடாது. ஸத்குருவின் சரணத்தைப் பிடித்துக்கொண்டு கரையேற வேண்டும்.

आत्मा नित्योऽव्ययः शुद्धो निर्विकारः सनातनः ।
न तस्य मृत्युर्न जरा नाधयो व्याधयस्तथा ॥३॥

3. ஆத்மா நித்யமானது. சின்மயமானது. அழிவற்றது. விகாரமற்றது. சுத்தமானது. ஸனாதனமானது. அதற்கு மூப்பு மரணம் வ்யாதி எதுவும் கிடையாது.

सर्वत्र व्याप्य तिष्ठन्तमात्मानं ज्ञानरूपिणम् ।
अनेकरूपमेकञ्च यः पश्यति स पश्यति ॥४॥

4. எங்கும் வ்யாபித்து நிற்கும் ஞானஸ்வரூபமான ஆத்ம தத்வத்தை அனேக ரூபமாயும் ஏகரூபமாயும் எவன் பார்க்கிறானோ அவனே பார்க்கிறான்.

न शरीरं न च प्राणा न मनो नेन्द्रियाणि च ।
शुद्धविज्ञानरूपोऽयमन्तरात्मा सनातनः ॥५॥
यस्य ज्ञानप्रकाशेन शरीरं पाञ्चभौतिकम् ।
सप्राणं सेन्द्रियञ्चेदं चिन्मात्रमिव दृश्यते ॥६॥

5,6. அந்த ஆத்மாவிற்கு சரீரமோ, ப்ராணனோ, மனமோ, புலன்களோ இல்லை. தனித்த அந்த ஆத்மா சித்ரூபமானது. அந்த ஆத்மாவின் ஞானப்ரகாசத்தினாலன்றோ சரீரமோ மனமோ இந்த்ரியங்களோ அறிவுஉடையதுபோல இயங்குகின்றன.

तमेव परमात्मानं केवलं भावयन् हृदि ।
देहात्मबुद्धिरहितः सर्वदुःखाद्विमुच्यते ॥७॥

7. அந்த ஆத்மாவைபே தன்ஸ்வரூபமாக அறிந்து சரீரத்தில் நான் என்கிற புத்தியைவிட்டவனே சாந்தியை அடைகிறான். அவனுக்கு எந்த துக்கமும் இல்லை.

शीतोष्णसुखदुःखादिक्लेशो देहस्य नात्मनः ।
आत्मायं निर्विकारो हि सच्चिदानन्दरूपधृत् ॥८॥

8. சீதம், உஷ்ணம், ஸுகம்., துக்கம் முதலியவை தேகத்திற்கே தவிர ஆத்மாவிற்கில்லை. ஸச்சிதானந்தரூபமான ஆத்மா விகாரமற்றது.

आत्मनः शाश्वतस्यास्य विनाशो न कदाचन ।
प्रलपन्ति विमूढास्तु शरीरे विनिपातिते ॥९॥

9. சரீரம் விழுந்ததும் மூடர்கள் புலம்பி அழுகின்றனர். சாச்வதமான ஆத்மாவிற்கு நாசம் என்பதேயில்லை.

अव्यक्तोऽयमणुर्नित्यो व्यक्तं देहं तु नश्वरम् ।
यावत्कर्मफलं तावत्प्रविश्यैव ददाति सः ॥१०॥

10. கண்ணுக்குப் புலப்படாத அணுரூபமான ஆத்மா தனது கர்மானுபவம் இருக்கும் வரை ஒரு சரீரத்தில் புகுந்து அந்த சரீரத்தைச் சுமக்கிறது.

न तस्य बन्धुर्न पिता न माता न सुतादयः ।
न धनं न गृहञ्चापि न दुःखं न सुखं तथा ॥११॥

11. அந்த ஆத்மாவிற்கு மாதா,பிதா, பந்து, மனைவி, மக்கள், தனம், வீடு, ஸுகம், துக்கம் எதுவும் சொந்தமில்லை.

अनित्यं रक्षितुं वापि नित्यं नाशयितुं तथा ।
न कोपि शक्नुयान्नूनं वृथैव परिदेवना ॥१२॥

12. அநித்யமான சரீரத்தை ரக்ஷிக்கவும் முடியாது. நித்யமான ஆத்மாவை அழிக்கவும் முடியாது. வீண் அழுகை ஏன்?

इदं सुखमिदं दुःखं प्रियमेतत्तदप्रियम् ।
एवं भेदेन पश्यन्तं बुद्धिमात्माऽनुपश्यति ॥१३॥

13. இது ஸுகம்; இது துக்கம், இது பிரியமானது; இது பிரியமானதல்ல என்று பேதப்படுத்திப் பார்க்கும் புத்தியை ஆத்மா அனுசரித்து நிற்கிறது.

न करोति न चाश्नाति न जिघ्रति न पश्यति ।
सङ्कल्पञ्च विकल्पञ्च हृदयस्यानुपश्यति ॥१४॥

14. ஆத்மா சுயமாகவே எதையும் செய்யவில்லை. அனுபவிப்பது மில்லை. முகருவதுமில்லை. பார்க்கவுமில்லை. மனதின் ஸங்கல்பத்தையும் விகல்பத்தையும் பார்த்துக்கொண்டு ஸாக்ஷியாக நிற்கிறது.

न तस्य जाग्रत्स्वप्नञ्च सुषुप्तिश्च तथात्मनः ।
स्थानत्रयात्परं प्राप्तस्तुरीये तिष्ठति प्रभुः ॥१५॥

15. அதற்கு தூக்கமோ, கனவோ, விழிப்போ எதுவுமில்லை. மூன்று அவஸ்தைகளுக்குமப்பால் துரீயநிலையில் அது இருக்கிறது.

सर्वं बुद्धिकृतं पश्यन्नात्मा साक्ष्येव वर्तते ।
यावत्सांसारिकीं बुद्धिस्तावद्बन्धोऽस्य विद्यते ॥१६॥

16. புத்தியால் செய்யப்படும் ஸகலவ்யவஹாரங்களையும் பார்த்துக்கொண்டு ஆத்மா ஸாக்ஷியாகவே நிற்கிறது. எதுவரை ஸம்ஸாரபுத்தி இருக்கிறதோ அதுவரை ஸம்ஸாரபந்தமுண்டு.

तावत्सांसारिकीं बुद्धिं सन्त्यज्य परमात्मनि ।
चित्तं सन्धारयेद्धीरो भक्तियोगेन सन्ततम् ॥१७॥

17. ஆகையால் ஸம்ஸாரபுத்தியை ஒழிக்கவேணடும். அதற்கு ஸாதனம் பக்தியை பக்தியோகத்தினால் பரமாத்மாவிடம் லயிக்கச்செய்வதே.

न बध्नीयान्निजं तत्त्वं देहप्राणेन्द्रियादिभिः ।
अंशभूतो हि कृष्णस्य सोयमात्मा सनातनः ॥१८॥

18. தனது ஸ்வரூபத்தை தேஹம், புலன்கள், மனம் இவைகளால் பந்தப்படுத்தக்கூடாது. ஸனாதனமான இந்த ஆத்மா ஈச்வராம்சமானது அன்றோ!

केचिद्योगेन सांख्येन भक्तियोगेन पण्डिताः ।
उद्धरन्त्यात्मनात्मानमस्मात्संसारसागरात् ॥१९॥

19. சிலர் கர்மயோகத்தினாலும் சிலர் பக்தியோகத்தினாலும் சிலர் ஞானயோகத்தினாலும் ஸம்ஸாரத்திலிருந்து கரை ஏறுகின்றனர். இவர்களே பண்டிதர்கள்.

अन्ये निपत्य संसारे कामक्रोधपरायणाः ।
अप्राप्य कृष्णचरणं भ्रमन्त्येव पुनः पुनः ॥२०॥

20. மற்றவர்கள் ஸம்ஸாரத்திலிருந்து க்ருஷ்ணசரணத்தை அடையாமலேயே பல பிறவி எடுத்து சுழலுகின்றனர்.

अहो धैर्यमहो धैर्यमहो धैर्यं दुरात्मनाम् ।
नरकायैव गच्छन्ति स्थितेपि हरिकीर्तने ॥२१॥

21. என்ன தைர்யம்! என்ன தைர்யம்! என்ன தைர்யம்! இவர்களுக்கு, ஹரிநாமகீர்த்தனம் இருக்கும்போதுகூட நரகத்திற்கே போகின்றனரே.

आत्मानात्मविचारेण ज्ञानयोगं करोति यः ।
स प्राप्नोति परं ब्रह्म निराकारञ्च शाश्वतम् ॥२२॥

22. ஆத்மாநாத்மவிசாரரூபமான ஞானயோகத்தை செய்பவர்கள் நிர்குண நிராகாரப்ரம்மத்தை அடைகின்றனர்.

ज्ञानवैराग्यसंयुक्तं भक्तियोगं करोति यः ।
साक्षान्नारायणे देवे स प्राप्नोति परं पदम् ॥२३॥

23. ஸர்வேச்வரனான ஸாக்ஷாத் நாராயணனிடத்தில் ஞானவைராக்யத்துடன் பக்திசெய்பவர்கள் வைகுண்டமடைவார்கள்.

शुद्धप्रेमस्वरूपिण्या दृढया भक्तिनिष्ठया ।
नित्यलीलां प्रविशति श्रीकृष्णरसिको महान् ॥२४॥

24. ஸ்ரீக்ருஷ்ணனிடம் சுத்தமான ப்ரேமபக்தி செய்பவன் அவனது நித்யலீலையில் ப்ரவேசிக்கிறான்.

प्राविशेन्नित्यलीलां वा वैकुण्ठं वा परं पदम् ।
कैवल्यमथवा गच्छेन्न पतेद्भवसागरे ॥२५॥

25. நித்யலீலையில் ப்ரவேசிக்க வேண்டும் அல்லது வைகுண்டமாவது போகவேண்டும், அல்லது கைவல்யத்தையாவது அடையவேண்டும். இம்மூன்றையும்விட்டு தன்னைத்தானே வீழ்த்திக் கொள்ளக்கூடாது.

निर्विकारस्य शुद्धस्य चिन्मात्रस्यान्तरात्मनः ।
स्वरूपहानिरेषा तु संसारविषयस्पृहा ॥२६॥

26. ஸம்ஸாரவிஷயத்தில் ஆசையானது சுத்தமான ஆத்மாவை தனக்குத்தானே கெடுத்துக் கொள்வதாகும்.

प्रभावमात्मनः स्मृत्वा कृष्णस्य परमात्मनः ।
स्पृहां न कुर्याच्छुद्धात्मा दुर्गन्धे विषये सुखे ॥२७॥

27. ஜீவாத்மாவான தனது பெருமையையும், பரமாத்மாவான க்ருஷ்ணனின் பெருமையையும் நினைத்துப் பார்த்து விஷய ஸுகத்தின் துர்கந்தத்தில் ஆசை வைக்கலாகாது.

पित्तवातकपैर्युक्तं रुधिरस्नायुसंभृतम् ।
न शरीरं कामयेत मलमूत्रनिकेतनम् ॥२८॥

28. பித்தம், கபம், வாதம், ரத்தம், நரம்பு இவைகளால் செய்யப்பட்டதும், மலமூத்ரங்களுக்கு இருப்பிடமானதுமான இந்த சரீரத்தை ஆசைப்படக்கூடாது.

शुद्धसत्त्वमयं दिव्यं कृष्णसौख्यप्रवर्धनम् ।
चिन्मयं गोपिकारूपं प्राप्नुयाद्भक्तिनिष्ठया ॥२९॥

29. சுத்தஸத்வமயமானதும், திவ்யமானதும், க்ருஷ்ணனுக்கு ஸுகம் தரக்கூடியதும், சின்மயமானதுமான கோபிகாரூபத்தை பக்திநிஷ்டையினால் அடையவேண்டும்.

नाहं देहो न च प्राणा नेन्द्रियाणि मनस्तथा ।
अहमात्मा निर्विकारो दासोहं परमात्मनः ॥३०॥
इति सञ्चिन्तयन्नित्यं गोपीभावेन भक्तिमान् ।
देहात्मबुद्धिं सन्त्यज्य प्रविशेद्रासमण्डलम् ॥३१॥

*30,31.* நான் தேஹமில்லை. நான் ப்ராணனுமில்லை. நான் மனமுமில்லை. நான் இந்த்ரியமுமில்லை. நான் விகாரமற்ற ஆத்மாவாக இருக்கிறேன். நான் பரமாத்மாவின் தாஸன் என்று த்யானம் செய்துகொண்டு கோபீபாவத்தினால் பகவானிடம் பக்திசெய்து தேஹமே ஆத்மா என்ற புத்தியைவிட்டு ராஸமண்டலத்தில் பக்திமான் ப்ரவேசிப்பான்.

शीतोष्णसुखदुःखानि देहे पश्यन्न चात्मनि ।
गोपीभावेन संसिद्धः परमां शान्तिमाप्नुयात् ॥३२॥

*32.* சீதம், உஷ்ணம், ஸுகம், துக்கம், இவைகளை தேஹவிஷய மென்று தள்ளிவிட்டு அவைகளை அனுபவிக்காமல் தன்னை கோபியாகவே பார்க்கும் ஸித்தன் சாந்தியடைவான்.

स्थितप्रज्ञो भवेद्भक्तः समलोष्टाश्मकाञ्चनः ।
सन्ततं चिन्तयन् प्रेम्णा गोपीभावेन माधवम् ॥३३॥

*33.* கல், மண்கட்டி, ஓடு, பொன் இவைகளை ஸமமாகப் பார்க்கும் கோபீபாவத்துடன் ப்ரேமையுடன் மாதவனை த்யானிப்பவனாய் ஸ்தித ப்ரக்ஞனாய் இருக்கவேண்டும்.

देहात्मबुद्धिसञ्जातमविवेकं शनैः शनैः ।
कृष्णकीर्नमाहात्म्याद्विसृजेत्साधुसङ्गमात् ॥३४॥

*34.* தேஹாத்மபுத்தியால் வந்த அவிவேகத்தை மெள்ள மெள்ள ஸாதுஸங்கத்தினாலும் க்ருஷ்ணகீர்த்தன மாஹாத்மியத்தாலும் நீக்கிவிடவேண்டும்.

गोपीभावेन शुद्धेन दिव्यदम्पतिसेवनम् ।

इह वाऽन्यत्र वा नृणां प्राप्तव्यं फलमुच्यते ॥३५॥

35. சுத்தமான கோபீபாவத்துடன் திவ்யதம்பதிகளை ஸேவிப்பதே மனிதர்களுக்கு இஹபரலாபமாகும். இதுவே சிறந்த தவம்.

देहात्मबुद्धिं विस्मृत्य तथा लज्जां विसृज्य च ।
नामसङ्कीर्तनं कुर्यादेतदेव परं तपः ॥३६॥

36. தேஹாத்மபுத்தியைவிட்டு வெட்கத்தைவிட்டு ஸதாகாலமும் நாமஸங்கீர்த்தனம் செய்யவேண்டும்.

केचिन्निन्दन्ति डम्भेण प्रशंसन्ति च केचन ।
न पश्येल्लौकिकीं वृत्तिं कुर्वन् गोविन्दकीर्तनम् ॥३७॥

37. சிலர் பஜனையை கேலி செய்வார்கள். சிலர் புகழ்வார்கள். உலகம் என்ன சொல்லுகிறது என்று பார்க்கக்கூடாது. கோவிந்தகீர்த்தனமே ஸதா செய்யவேண்டும்.

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये भागवतधर्मकाण्डे आत्मतत्त्वनिरूपणं नाम षष्ठोऽध्यायः ॥६॥*

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமி மஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில் பாகவததர்மகாண்டத்தில் ஆறாமத்யாயம்.**

## अथ सप्तमोऽध्यायः

## ஏழாம் அத்யாயம்

### श्रीसद्गुरुरुवाच

नित्याश्च शाश्वताः सर्वेप्यवताराः परात्मनः ।
ब्रह्मणो बहुरूपत्वान्नास्त्यत्र परमाद्भुतम् ॥१॥

### ஸ்ரீஸத்குரு

1. பரமாத்மாவின் அவதாரரூபங்கள் நித்யமாயும், சாச்வதமாயுமிருக்கின்றன. ப்ரம்ஹம் அனந்தரூபமாயிருப்பதால் இது அதிசயமில்லை.

व्यवहारेण लोकेऽस्मिन् कदाचित् प्रकटीकृताः ।
अवताराः कालधर्मात्तेनैवापि तिरोहिताः ॥२॥

2. வியவஹாரலீலையில் ஒருகாலத்தில் இவ்வுலகில் அவை தோன்றி மறைகின்றன.

अनन्यभक्तिनिष्ठानां यथाकामं पुनः पुनः ।
अवताराः प्रदृश्यन्ते तेनैव निजमायया ॥३॥

3. திடமான பக்தி உள்ளவர்களுக்கு அதே அவதாரரூபங்கள் மீண்டும் மீண்டும் தர்சனம் தருகின்றன அல்லவா?

वेदानुद्धर्तुकामोऽसौ यं रूपं धृतवान् पुरा ।
तेनैव मत्स्यरूपेण सत्यव्रतमुपागमत् ॥४॥

4. வேதத்தை உத்தாரணம் செய்ய ப்ரளயகாலத்தில் எந்த மத்ஸ்யரூபத்தை பகவான் தரித்தானோ அதே ரூபத்துடன் பிற்காலத்தில் ஸத்யவ்ரதனுக்கு தர்சனம் தந்தான்.

आदिकूर्मः स्वयं भूत्वा लोकान् वहति यः परः ।
स एव सुरकार्यार्थं दधौ मन्दरपर्वतम् ॥५॥

5. ஆதிகூர்மமாகி ஸ்ருஷ்டிகாலத்தில் பதினான்கு லோகங்களுக்கும் ஆதாரபீடமாக இருப்பவனே, மீண்டும் தேவாஸுரர்கள்கூடி க்ஷீராப்தியைக் கடையும்போது மந்த்ரமலையைத் தூக்கினான்.

तथैवादिवराहश्च भूमिमुद्धृत्य दंष्ट्रया ।
पुनर्जघान समरे हिरण्याक्षं महासुरम् ॥६॥

6. ஆதிவராஹமாகி பூமியைத் தூக்கி நிற்பவனே மீண்டும் ஹிரண்யாக்ஷனை வதம் செய்தான்.

पूर्वमेव धृतान्येव रूपाणि परमात्मनः ।
अवतारे प्रदृश्यन्ते नवीनानीव लौकिकैः ॥७॥

7. இவ்வாறு பூர்வமே தரித்த பகவானின் ஸனாதனமான ரூபங்களே மீண்டும் உலகில் நவீனமானதுபோல் தோன்று கின்றன.

यत्परं ब्रह्म गोलोके कृष्णरूपेण वर्तते ।
तदेव रमतेप्यत्र बृन्दारण्ये च गोकुले ॥८॥

8. எந்த பரப்ரஹ்மம் கோலோகத்தில் க்ருஷ்ணரூபமாக இருக்கிறதோ அதே ரூபத்தில் த்வாபரயுகத்தின் முடிவில் கோகுலத்திலும், ப்ருந்தாவனத்திலும் தோன்றி விளையாடிற்று.

एवमेवावताराणां विनाशो नैव विद्यते ।
वर्तन्ते दिव्यलोकेषु तत्रत्यैः पूजिता जनैः ॥९॥

9. இவ்வாறு அவதாரரூபங்களுக்கு வினாசமுமில்லை. திவ்யலோகங்களில் அங்குள்ள பக்தர்களால் பூஜிக்கப் படுகின்றன.

अदित्या कश्यपाज्जातो देवदेवस्त्रिविक्रमः ।
अद्यापि स्वर्गलोकेयमुपेन्द्रः पूज्यते सुरैः ॥१०॥

10. கச்யபருக்கும் அதிதிக்கும் புத்ரனாய்த் தோன்றி உலகை அளந்த வாமனமூர்த்தி உபேந்திரன் என்ற பெயரில் இன்றும் ஸ்வர்க்கத்தில் பூஜிக்கப்படுகிறார்.

तथैव भगवान् रामः परिवारेण संयुतः ।
दिव्ये सान्तानिके लोके पूज्यते सिद्धसत्तमैः ॥११॥

11. அவ்வாறே பகவான் ஸ்ரீராமச்சந்த்ரப்ரபுவும் திவ்யமான ஸாந்தானிக லோகத்தில் பரிவாரத்துடன் இன்றும் பூஜிக்கப்படுகிறார்.

एवं सङ्कर्षणो देवो बलभद्रः सनातनः ।
पूज्यते नागलोके तु नागराजादिभिः सदा ॥१२॥

12. அவ்வாறே ஸங்கர்ஷணமூர்த்தியான பலராமன்

ரஸாதலத்தில் (நாகலோகத்தில்) அனந்தன் முதலிய நாகராஜர்களால் இன்றும் பூஜிக்கப்படுகிறார்.

एवमेव स्वयं कृष्णः परमात्मा सनातनः ।
गोलोके परमे धाम्नि रमते रासमण्डले ॥१३॥

13. இவ்வாறே பகவான் கோபாலக்ருஷ்ணன் கோலோகம் என்ற திவ்யதாமத்தில் நடக்கும் நித்யராஸமண்டலத்தில் ரமிக்கிறார்.

प्रतिकल्पं प्रतियुगं कृष्णस्य परमात्मनः ।
अवतारास्त्विमे व्यक्तं प्रदृश्यन्ते पुनः पुनः ॥१४॥

14. ஒவ்வொரு கல்பகாலத்திலும் ஒவ்வொரு யுகத்திலும் க்ருஷ்ணபரமாத்மாவின் இந்த அவதாரங்கள் மீண்டும் மீண்டும் தோன்றுகின்றன.

महाप्रलयकाले तु परमात्मा सनातनः ।
रूपाण्यात्मनि सङ्गृह्य शिष्यते स्वयमेव हि ॥१५॥

15. மஹாப்ரளயகாலத்தில் ஸனாதனமான பரமாத்மா எல்லா ரூபங்களையும் தன்னிடமே மறைத்துக்கொண்டு யோகநித்ரை செய்கிறார்.

तथाप्यत्यन्तनाशस्तु रूपाणां परमात्मनः ।
न विद्यते यतस्तानि प्रकाशन्ते पुनः पुनः ॥१६॥

16. ரூபங்களுக்கு ப்ரளயகாலத்தில் லயம் ஏற்பட்டதேதவிர நாசம் ஏற்படுவதில்லை. ஏனெனில் அதே ரூபங்கள் தோன்றுகின்றன அல்லவா?

मर्त्यानामिह लोके तु विद्यते पार्थिवं वपुः ।
वस्वादीनां पितॄणां तु तथा जलमयं वपुः ॥१७॥

17. இஹலோகத்தில் மனிதர்களின் உடல் ப்ருதிவி அம்சமானது. வஸு முதலிய தேவதாரூபமான பித்ருக்களுடைய சரீரம் ஜலமயமானது.

भूतप्रेतपिशाचानां वायव्यं विद्यते वपुः ।
देवानामपि सिद्धानां तथा तेजोमयं वपुः ॥१८॥

18. பூதப்ரேதபிசாசுகளின் உடல் காற்று வடிவமானது. தேவர்களுடையவும் ஸித்தர்களுடையவும் சரீரம் தேஜோமயமானது.

एवं कैवल्यनिष्ठानामन्तरिक्षमयं वपुः ।
इमानि भौतिकान्येव जीवानां तत्त्वभेदतः ॥१९॥

,19. இவ்வாறே கைவல்யநிஷ்டர்களுடைய சரீரம் (ஸனகாதிகள்) அந்தரிக்ஷமயமானது. இத்தகைய ஜீவர்களின் சரீரங்கள் உண்மையில் வேறுவேறு விதமானவை.

त्रैगुण्यविषयाण्येवं पञ्चभूतमयानि च ।
जीवा गृह्णन्ति रूपाणि सुखदुःखानुभूतये ॥२०॥

20. மூன்று குணங்களுடையதும், பாஞ்சபௌதிகமான்துமான சரீரங்களையே ஜீவர்கள் ஸுகதுக்க அனுபவத்திற்காக எடுக்கின்றனர்.

भौतिका एव भावाश्च कामक्रोधादयस्तथा ।
दृश्यन्ते जीववर्गेषु सत्त्वादिगुणभेदतः ॥२१॥

21. ஸத்வம் முதலிய குணங்களால் பௌதிகமான காமக்ரோதம் முதலிய பாவங்களே ஜீவர்களிடம் காணப்படுகின்றன.

नित्यानामपि मुक्तानां जीवानां ब्रह्मणस्तथा ।
चिन्मयान्येव रूपाणि विद्यन्ते शुद्धसत्त्वतः ॥२२॥

22. நித்யர்களும் முக்தர்களுமான வைகுண்டவாஸிகளான ஜீவர்களுடையவும் அவ்வாறே ப்ரம்ஹத்தின் ஸ்வரூபமும் சின்மயமானதேயாகும்.

परो मात्रया तनुवा वृधानेति च वाक्यतः ।
पाञ्चभौतिकतन्मात्ररहितत्वं हि विद्यते ॥२३॥

23. தன் இச்சையால் எடுத்துக்கொண்ட த்ரிவிக்ரமரூபம்போல் எல்லா ப்ரம்ஹ ஸ்வரூபங்களும் பாஞ்சபௌதிகமானது அல்ல என்று தெரிகிறது.

लीलामात्रं हि कृष्णस्य ब्रह्मणः परमात्मनः ।
एवं स्वरूपग्रहणं भक्तानन्दप्रदायकम् ॥२४॥

24. ப்ரம்ஹமான க்ருஷ்ணபரமாத்மாவுக்கு இப்படி பல ரூபங்கள் தரிப்பது கர்மவிதியல்ல. பக்தர்களை ஆனந்தப் படுத்துவதற்காக லீலாமாத்ரமேயாகும்.

प्रपन्नजनतानन्दसन्दोहं प्रथितुं प्रभुः ।
एवं दधाति रूपाणि नानालीलामयानि सः ॥२५॥

25. ஈச்வரன் பக்தஜனங்களின் அளவுகடந்த ஆனந்தத்தை வளர்ப்பதற்காகவே இத்தகைய லீலாமயமான அவதார ரூபங்களை எடுக்கிறான்.

अवतारस्वरूपाणि सर्वाणि परमात्मनः ।
अप्राकृतान्येव नूनं यतः कृष्णो निरामयः ॥२६॥

26. க்ருஷ்ணன் விகாரமடைந்து பல ரூபங்களைத் தரிப்ப தில்லை. எனவே இவ்வளவு ரூபங்களும் ப்ரக்ருதிமயமானவை யல்ல.

अप्राकृतत्वान्नित्यानि रूपाणि परमात्मनः ।
तानि गृह्णाति गोविन्दो यथाकालं यथारुचि ॥२७॥

27. அப்ராக்ருதமாய் இருப்பதாலேயே இவை நித்யமானவை, அந்த ரூபங்களை கோவிந்தன் அந்தக் காலத்தில் அந்தந்த பக்தர்களின் ருசிப்படி ப்ரகடனம் செய்கிறான்.

तान्यदृश्यानि सूक्ष्मत्वाद्रूपाणि परमात्मनः ।
कृष्णसङ्कल्पमात्रेण दृश्यन्ते पामरैरपि ॥२८॥

28. அந்த க்ருஷ்ணபரமாத்மாவின் ரூபங்கள் எப்போதும் மறைந்தே இருக்கின்றன. ஸ்ரீக்ருஷ்ணனின் க்ருபையால் பாமரர்களுக்குக்கூட ப்ரத்யக்ஷமாகி விடுகின்றன.

ये यथा द्रष्टुमिच्छन्ति दृढभक्तियुता नराः ।
तथात्मानं दर्शयति गोविन्दो भक्तवत्सलः ॥२९॥

29. எவர்கள் எப்படி பார்க்க விரும்புகின்றனரோ அவர்களுக்கு அப்படியே பகவான் திடபக்தியாலேயே தர்சனம் தருகிறான்.

वासुदेवश्चतुर्व्यूहो विराट्पुरुष एव च ।
ब्रह्मा विष्णुश्च रुद्रश्च मत्स्यकूर्मादयस्तथा ॥३०॥
वराहो नरसिंहश्च भगवान् रघुनन्दनः ।
भार्गवो बलभद्रश्च हयग्रीवश्च वामनः ॥३१॥
ऋषभः कपिलो बुद्धो दत्तात्रेयः पृथुस्तथा ।
कृष्णद्वैपायनो व्यासो नारदः सनकादयः ॥३२॥
एते चांशकलाः पुंसः कृष्णस्य परमात्मनः ।
नानावतारकृद्देवः कृष्णस्तु भगवान् स्वयम् ॥३३॥

30,33. பரவாஸுதேவன் நான்கு வ்யூஹமூர்த்திகள், விராட் புருஷன், மும்மூர்த்திகள், மத்ஸ்ய கூர்ம வ்ராஹாதி தசாவதாரங்கள் ஹயக்ரீவன், ருஷபர், கபிலர், புத்தர், தத்தாத்ரேயர்முதலிய இருபத்திநான்கு இவையாவும் க்ருஷ்ணபரமாத்மாவின் அம்சாவதாரங்களாகும். இவ்வாறு பல அவதாரங்கள் செய்யும் க்ருஷ்ணபரமாத்மா ஸ்வயம் பகவான்.

अवताररहस्यञ्च गुह्यमेतदिदं परम् ।
यः पठेच्छृणुयान्नित्यं दुःखग्रामाद्विमुच्यते ॥३४॥

34. இவ்வாறு ரஹஸியமான இந்த அவதார விஷயத்தை யார் ச்ரத்தையுடன் படிப்பானோ அவன் ஸம்ஸாரதுக்கங்களி லிருந்து விடுபடுவான்.

इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये भागवतधर्मकाण्डे अवताररहस्यं नाम सप्तमोऽध्यायः ॥७॥

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமி மஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில் பாகவததர்மகாண்டத்தில் ஏழாவது அத்யாயம்.**

# अथाष्टमोऽध्यायः

## எட்டாம் அத்யாயம்

### श्रीसद्गुरुरुवाच

अद्य वक्ष्यामि युष्माकं भक्तिं साधनरूपिणीम् ।
सर्वपापप्रशमनां सर्वकल्मषनाशिनीम् ॥१॥

### ஸ்ரீஸத்குரு

1. ஸர்வ பாபங்களையும் ஸர்வகல்மஷங்களையும் வினாசம் செய்கின்ற ஸாதன பக்தியை உங்களுக்குச் சொல்லுவேன்.

आभीरयुवराजेन नेयमर्हति सौरतम् ।
भक्तिः साधनरूपा तु सुन्दरी बालिका यथा ॥२॥

2. ஸாதனரூபமான பக்தி அழகிய சிறுமி போன்றது. எனவே கண்ணனுக்கு கல்யாணம் செய்து கொடுக்க இன்னும் வயது வரவில்லை.

इयमेव परा भक्तिः सर्वलक्षणसंयुता ।
कृष्णसंयोगसुलभा सुन्दरी युवतिर्यथा ॥३॥

3. இந்த பக்தியே ஸர்வலக்ஷணமும் பொருந்திய ப்ரேமபக்தி யாகிவிட்டால் க்ருஷ்ணஸம்யோகத்திற்கு ஸுலபமான யுவதி போன்றது.

कालं प्रतीक्षमाणस्तु वर्धयेद्वैष्णवोत्तमः ।
दातुं कृष्णाय सन्तुष्टो भक्तिं कन्यामिव स्वयम् ॥४॥

4. எனவே வைஷ்ணவன் கன்னிகையை கல்யாணம் செய்து கொடுக்கும் வயது வரும்வரை காப்பாற்றி வருவதுபோல் ஸாதனபக்தியே ப்ரேமபக்தியாக ஆகும் வரை காப்பாற்றி வரவேண்டும்.

देवतान्तरसंयोगं नेयमर्हति कन्यका ।
पालयेच्छ्रद्धया तस्माद्भक्तिं स्वनियमेन च ॥५॥

5. இந்த பக்தியாகிய கன்னிகையை தேவதாந்தரம் தொடாமல் காப்பாற்ற வேண்டும். இந்த பக்தி க்ருஷ்ணனுக்கே உரியது என்ற ச்ரத்தையும் நியமமும் வேண்டும்.

दास्यं कुर्यात्सतां नित्यं डम्भाहङ्कारवर्जितः ।
सर्वसेव्यो हरिः साक्षाद्येषां कैङ्कर्यमिच्छति ॥६॥

6. டம்பம் அஹம்பாவமின்றி ஸாதுக்களுக்குத் தொண்டு செய்ய வேண்டும். ஸாக்ஷாத் பகவானே ஸாதுஸேவைக்கு ஆசைப் படுகிறானன்றோ!

यथा सत्सङ्गलाभेन पापं सर्वं विनश्यति ।
न तथा विविधैर्योगैस्तपसा तीर्थयात्रया ॥७॥

7. ஸத்ஸங்கத்தினால் பாபம் விலகுவதுபோல் மற்ற தீர்த்த யாத்திரை தவம் யோகம்முதலியவைகளால்கூட பாபம் விலகாது.

न कुर्यादपराधं तु वैष्णवानां महात्मनाम् ।
भक्तापराधपापस्य प्रायश्चित्तं न विद्यते ॥८॥

8. வைஷ்ணவர்களுக்கு அபசாரம் செய்யக் கூடாது. பாகவதா பசாரமாகிய பாபத்திற்கு ப்ராயச்சித்தம் விதிக்கப்படவில்லை.

कायेन मनसा वाचा साधूनाममलात्मनाम् ।
न कुर्यादपचारं तु हितकामी सदाऽऽत्मनः ॥९॥

9. தனக்கு ஹிதம்வேண்டும் மனிதன் மனது வாக்கு காயம் மூன்று கரணங்களாலும் பாகவதர்களுக்கு அபசாரம் செய்யக் கூடாது.

निर्दोषान्वा सदोषान्वा न निन्देद्वैष्णवान्नरः ।
तेषु निर्व्याजकोपेषु क्षमावान् विनतो भवेत् ॥१०॥

10. குற்றமிருந்தாலும், குற்றமில்லாவிடிலும் ஸாதுக்களை நிந்திக்கலாகாது. ஒருகால் காரணமின்றி அவர்கள் நம்மை கோபித்தாலும் நாம் பணிந்து போகவேண்டும்.

पतितः स्खलितश्चापि दुराचारयुतोपि वा ।
कीर्तयेद्यदि गोविन्दं स महान् दैवतं हि नः ॥११॥

11. பதிதனானாலும், பாபியானாலும், வழிதவறியவனானாலும், துராசாரமுள்ளவனாயினும் கோவிந்தகீர்த்தனம் செய்து விட்டால் அவனை தெய்வமாக நினைக்க வேண்டும்.

शृणुयाच्छ्रद्धया नित्यं पुण्यां भागवतीं कथाम् ।
भक्ताः सङ्गम्य चान्योन्यं प्रवदन्ति पुनः पुनः ॥१२॥

12. பக்தர்கள்கூடி அடிக்கடி பாகவதம் படித்துச் சொல்வார்கள். அதை தினமும் ச்ரத்தையுடன் கேட்க வேண்டும்.

नामसङ्कीर्तनं कुर्याद्भक्तैः सङ्गम्य तत्परः ।
तस्य कीर्तनमात्रेण जायते परमोत्सवः ॥१३॥

13. பக்தர்களுடன்கூடி அதுவே லக்ஷியமாக நாமகீர்த்தனம் செய்ய வேண்டும். பகவானைப் பாடினாலேயே பரமகுதூஹலம் உண்டாகும்.

साक्षान्नारायणो देवो गुरुरूपेण वर्तते ।
इत्यभेदेन भावेन कुर्याद्भक्तिं गुरूत्तमे ॥१४॥

14. ஸாக்ஷாத் நாராயணனே குருரூபமாக இருக்கிறாரென்று அபேதமாக நினைத்து குருபக்தி செய்ய வேண்டும்.

गुरूपदिष्टं मन्त्रञ्च नियमेन जपेन्नरः ।
सन्ततं हृदयाकाशे ध्यायञ्छ्रीनन्दनन्दनम् ॥१५॥

15. குரு உபதேசம் செய்த மந்திரத்தை தினமும் நியமத்துடன் இதயத்தில் க்ருஷ்ணத்யானம் செய்துகொண்டே ஜபிக்க வேண்டும்.

आराधयेद्गृहे नित्यं शालग्रामं श्रियः पतिम् ।
पत्रं पुष्पं फलं तोयं प्रेमपूर्वं समर्पयेत् ॥१६॥

16. தினமும் க்ருஹத்தில் சாளக்ராமபூஜை செய்ய வேண்டும். பத்ரம், புஷ்பம், பழம், தீர்த்தம் இவைகளை ச்ரத்தையுடன் ஸமர்ப்பிக்க வேண்டும்.

हरिपादोदकं पीत्वा सर्वकल्मषनाशनम् ।
महाप्रसादमश्नीयात्तुलसीदलभूषितम् ॥१७॥

17. ஸர்வகல்மஷங்களையும் நீக்கவல்ல ஹரிபாததீர்த்தத்தை சாப்பிட்டு பிறகு துளஸீதளத்தினால் அலங்கரிக்கப்பட்ட மஹாப்ரஸாதம் சாப்பிட வேண்டும்.

विष्णुक्षेत्राणि मुख्यानि गच्छेद्भागवतोत्तमः ।
यत्र प्रकाशते नित्यमर्चारूपेण माधवः ॥१८॥

18. எந்த எந்த கோவில்களில் பகவான் அர்ச்சாவதாரமாக எழுந்தருளி இருக்கிறானோ அந்த அந்த விஷ்ணுக்ஷேத்திரங்களுக்குப் போகவேண்டும்.

एकादशीव्रतं कुर्याच्छ्रद्धया वैष्णवोत्तमः ।
एकान्तमनसा कृष्णं कीर्तयेन्निशि केशवम् ॥१९॥

19. வைஷ்ணவோத்தமன் அவசியம் ஏகாதசிவ்ரதம் செய்ய வேண்டும். இரவு திடசித்தத்துடன் க்ருஷ்ணகீர்த்தனம் செய்யவேண்டும்.

अश्वत्थं तुलसीं धेनुं ब्राह्मणञ्च पतिव्रताम् ।
अर्चयेद्वैष्णवो नित्यं प्रेमपूर्वं यथाविधि ॥२०॥

20. அரசுமரம், துளஸிச்செடி, பசு, ப்ராம்மணன் இவர்களை ச்ரத்தையுடன் பூஜிக்க வேண்டும்.

सात्विकाहारसंयुक्तो नियमैर्विविधैरपि ।
इन्द्रियाणि जयेद्भक्तः कृष्णनामजपप्रियः ॥२१॥

21. ஸாத்விகமான ஆஹாரமே சாப்பிடுவதாலும், பலவிதமான நியமங்களாலும் க்ருஷ்ணநாமஜபத்திலேயே லக்ஷியமுள்ள பக்தன் புலன்களை அடக்கவேண்டும்.

यशोदानन्दनं ध्यायंल्लौकीकविमुखो भवेत् ।
वैदिकान् दूरतो दृष्ट्वा प्रणमेन्नीचवत्स्वयम् ॥२२॥

22. க்ருஷ்ணத்யானமே லக்ஷியமாகஉள்ள பக்தன் லௌகீகமான ஜனங்களிடம் பாராமுகமாக இருக்கவேண்டும்.ஸாதகர்களைக் கண்டால் தூரத்திலேயே வணங்கி விட்டு விலக வேண்டும்.

यदृच्छालाभसन्तुष्टः स्वदारिद्र्यनिराकुलः ।
कुटुम्बमाचरेद्भक्तो न क्वचिदृणवान् भवेत् ॥२३॥

23. கிடைத்ததைக்கொண்டு தன் ஏழ்மையில் கலங்காதவனாய் கடன் வாங்காதவனாய் குடும்பம் நடத்தவேண்டும்.

सन्ततं चिन्तयन् कृष्णं भावलोकेषु सञ्चरन् ।

तादृशैः साधुभिः साकं कुर्याद्भक्तो दिने दिने ॥२४॥

24. எப்போதும் க்ருஷ்ணத்யானமே செய்துகொண்டு உயர்ந்த மனோபாவமாகிய தனி உலகில் ஸஞ்சரித்துக்கொண்டு அத்தகைய ஸாதுக்களிடமே பழக வேண்டும்.

सत्यं क्षमामहिंसाञ्च जीवकारुण्यमेव च ।
परोपकारं विनयं वैष्णवः पालयेत्सदा ॥२५॥

25. ஸத்யம், பொறுமை, ஜீவகாருண்யம், பரோபகாரம், வினயம் முதலிய நற்குணங்களை வைஷ்ணவன் பரிபாலிக்க வேண்டும்.

मातरं पितरञ्चैव वृद्धानपि च बान्धवान् ।
सप्रेम पूजयेन्नित्यं वैष्णवो विहिताञ्जलिः ॥२६॥

26. மாதா, பிதாக்களையும், முதியோர்களையும், பந்துக்களையும் கை குவித்து வணங்கி அன்புடன் பூஜிக்க வேண்டும்.

पत्नीञ्च बालकानेवं विष्णुधर्मेण शिक्षयेत् ।
न तेषु कुर्यात्कोपञ्च मनसा बहुमानयन् ॥२७॥

27. மனைவி, மக்களைக்கூட பாகவததர்மத்தில் பழக்கவேண்டும். அவர்களுடைய பக்தியைக் கண்டு அவர்களை பாகவதர்களாக நினைத்து மதிக்கவேண்டும். அவர்களிடம்கூட கோபிக்க லாகாது.

आकर्ण्य कथितां बालैः कलभाषणपूर्वकम् ।
कथां यशोदापुत्रस्य परमानन्दमाप्नुयात् ॥२८॥

28. குழந்தைகள் மழலைச்சொல்லில் சொல்லும் க்ருஷ்ணகதையைக் கேட்டு பரமானந்தமடைய வேண்டும்.

पत्न्याऽनुकूलया सार्धं गार्हस्थ्यं धर्ममाचरन् ।
विष्णुमाराधयेदेवं वैष्णवानपि वैष्णवः ॥२९॥

एकादशीव्रतं कुर्याच्छ्रद्धया वैष्णवोत्तमः ।
एकान्तमनसा कृष्णं कीर्तयेन्निशि केशवम् ॥१९॥

19. வைஷ்ணவோத்தமன் அவசியம் ஏகாதசிவ்ரதம் செய்ய வேண்டும். இரவு திடசித்தத்துடன் க்ருஷ்ணகீத்ர்த்தனம் செய்யவேண்டும்.

अश्वत्थं तुलसीं धेनुं ब्राह्मणञ्च पतिव्रताम् ।
अर्चयेद्वैष्णवो नित्यं प्रेमपूर्वं यथाविधि ॥२०॥

20. அரசுமரம், துளஸிச்செடி, பசு, ப்ராம்மணன் இவர்களை ச்ரத்தையுடன் பூஜிக்க வேண்டும்.

सात्त्विकाहारसंयुक्तो नियमैर्विविधैरपि ।
इन्द्रियाणि जयेद्भक्तः कृष्णनामजपप्रियः ॥२१॥

21. ஸாத்விகமான ஆஹாரமே சாப்பிடுவதாலும், பலவிதமான நியமங்களாலும் க்ருஷ்ணநாமஜபத்திலேயே லக்ஷியமுள்ள பக்தன் புலன்களை அடக்கவேண்டும்.

यशोदानन्दनं ध्यायंल्लौकीकविमुखो भवेत् ।
वैदिकान् दूरतो दृष्ट्वा प्रणमेन्नीचवत्स्वयम् ॥२२॥

22. க்ருஷ்ணத்யானமே லக்ஷியமாகஉள்ள பக்தன் லௌகீகமான ஜனங்களிடம் பாராமுகமாக இருக்கவேண்டும்.ஸாதகர்களைக் கண்டால் தூரத்திலேயே வணங்கி விட்டு விலக வேண்டும்.

यदृच्छालाभसन्तुष्टः स्वदारिद्र्यनिराकुलः ।
कुटुम्बमाचरेद्भक्तो न क्वचिदृणवान् भवेत् ॥२३॥

23. கிடைத்ததைக்கொண்டு தன் ஏழ்மையில் கலங்காதவனாய் கடன் வாங்காதவனாய் குடும்பம் நடத்தவேண்டும்.

सन्ततं चिन्तयन् कृष्णं भावलोकेषु सञ्चरन् ।

तादृशैः साधुभिः साकं कुर्याद्भक्तो दिने दिने ॥२४॥

24. எப்போதும் க்ருஷ்ணத்யானமே செய்துகொண்டு உயர்ந்த மனோபாவமாகிய தனி உலகில் ஸஞ்சரித்துக்கொண்டு அத்தகைய ஸாதுக்களிடமே பழக வேண்டும்.

सत्यं क्षमामहिंसाञ्च जीवकारुण्यमेव च ।
परोपकारं विनयं वैष्णवः पालयेत्सदा ॥२५॥

25. ஸத்யம், பொறுமை, ஜீவகாருண்யம், பரோபகாரம், வினயம் முதலிய நற்குணங்களை வைஷ்ணவன் பரிபாலிக்க வேண்டும்.

मातरं पितरञ्चैव वृद्धानपि च बान्धवान् ।
सप्रेम पूजयेन्नित्यं वैष्णवो विहिताञ्जलिः ॥२६॥

26. மாதா, பிதாக்களையும், முதியோர்களையும், பந்துக்களையும் கை குவித்து வணங்கி அன்புடன் பூஜிக்க வேண்டும்.

पत्नीञ्च बालकानेवं विष्णुधर्मेण शिक्षयेत् ।
न तेषु कुर्यात्कोपञ्च मनसा बहुमानयन् ॥२७॥

27. மனைவி, மக்களைக்கூட பாகவததர்மத்தில் பழக்கவேண்டும். அவர்களுடைய பக்தியைக் கண்டு அவர்களை பாகவதர்களாக நினைத்து மதிக்கவேண்டும். அவர்களிடம்கூட கோபிக்கலாகாது.

आकर्ण्य कथितां बालैः कलभाषणपूर्वकम् ।
कथां यशोदापुत्रस्य परमानन्दमाप्नुयात् ॥२८॥

28. குழந்தைகள் மழலைச்சொல்லில் சொல்லும் க்ருஷ்ணகதையைக் கேட்டு பரமானந்தமடைய வேண்டும்.

पत्न्याऽनुकूलया सार्धं गार्हस्थ्यं धर्ममाचरन् ।
विष्णुमाराधयेदेवं वैष्णवानपि वैष्णवः ॥२९॥

29. அனுகூலமான மனைவியுடன் இவ்வாறு இல்லறம் நடத்திக்கொண்டு பகவானையும் பாகவதர்களையும் ஆராதிக்க வேண்டும்.

पितृभ्यामपि पत्न्या च पुत्रैरपि च बान्धवैः ।
निन्दितोपि हरिं स्मृत्वा कोपञ्च क्षमया त्यजेत् ॥३०॥

30. பெற்றோர்கள், மனைவி, மகன், பந்துக்கள்கூட தன்னை நிந்தித்தாலும் இதுவும் பகவானின் விசித்ரகேளிக்கை என்று நினைத்து பொறுத்துப்போக வேண்டும். அவர்களிடம் கோபிக்கலாகாது.

क्षमावान् प्रार्थयेन्नित्यं शत्रूणामपि मङ्गलम् ।
न शत्रुर्न क्वचिन्मित्रं भक्तानां समदर्शिनाम् ॥३१॥

31. தன் விரோதிகூட க்ஷேமமாக இருக்கவேண்டும் என்றே வைஷ்ணவன் நினைக்க வேண்டும். ஏனெனில் ஸமதர்சியான வைஷ்ணவனுக்கு யாரும் நண்பனுமில்லை, விரோதியுமில்லை.

विमुखो निवसेन्नित्यं कामिनीकाञ्चनादिषु ।
दूरतो वर्जयेद्भीतो लौकिकान्नास्तिकान्नरान् ॥३२॥

32. பக்தன் காமினி, காஞ்சனம் முதலியவைகளில் விமுகனாக இருக்கவேண்டும். லோகாயதர்களையும் நாஸ்திகர்களையும் கண்டால் தூர விலக வேண்டும்.

एवं साधारणीं भक्तिं वर्धयन् वैष्णवोत्तमः ।
अचिरेणैव कालेन प्रेमभक्तिमवाप्नुयात् ॥३३॥

इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये भागवतधर्मकाण्डे साधनभक्तिनिरूपणं नामाष्टमोऽध्यायः ॥८॥

33. இவ்வாறு ஸாதனபக்தியை வளர்த்துக்கொண்டவன் வைஷ்ணவோத்தமனாகி சீக்ரமே ப்ரேமபக்தியை அடைவான்.

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமி மஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில் பாகவததர்மகாண்டத்தில் எட்டாமத்யாயம்.**

# अथ नवमोऽध्यायः

## ஒன்பதாம் அத்யாயம்

### श्रीसद्गुरुरुवाच

प्रेमभक्तिरसं वक्तुं केनापि न हि शक्यते ।
बालिकायै यथा मात्रा भर्तृसंयोगजं सुखम् ॥१॥

ஶ்ரீஸத்குரு

1. பதிஸம்யோகஸௌக்யத்தை மாதா கல்யாணமாகாத கன்னிகைக்கு சொல்லமுடியாததுபோல் ப்ரேமபக்தி அனுபவத்தை யாராலும் சொல்ல முடியாது,

अहैतुक्यप्रतिहता नानाभावरसोज्ज्वला ।
लोकवेदक्रियातीता प्रोच्यते भक्तिरुत्तमा ॥२॥

2. பலனைக் கருதாமல் இடையறாது செய்யப்படுவதும், பலவிதமான பாவத்தினாலும் ரஸத்தினாலும் ஜொலிக்கின்றதும், லௌகீக வைதீக க்ரியைகளுக்கு அதீதமானதுமாய் இருப்பது ப்ரேமபக்தி.

कण्ठावरोधरोमाञ्चस्वेदकम्पाश्रुलक्षणैः ।
प्रेमभक्तिः क्वचित्पात्रे लक्ष्यते बहुदुर्लभा ॥३॥

3. யாரோஒருவரிடமே மிகவும் துர்லபமான ப்ரேமபக்தி கண்டம் தழுதழுத்தல், மேனிசிலிர்ப்பு, வியர்வை, கம்பம், கண்ணீர்முதலிய லக்ஷணங்களுடன் தென்படுகிறது.

शैलादपि कठोरं तत्कुसुमादपि पेलवम् ।
प्रेमभक्तस्य हृदयं ज्ञातुं कोपि न शक्नुयात् ॥४॥

4. கல்லைவிடக் கடினமானதும், புஷ்பத்தைவிட ம்ருதுவானதுமான ப்ரேமபக்தனின் இதயத்தை யாரும் அறியமுடியாது.



आत्मानमपि हन्त्येष प्रेमोद्वेगेन निर्घृणः ।

मयूरबर्हं दृष्ट्वापि भृशं रोदिति तत्क्षणात् ॥५॥

5. ப்ரேமையின் உத்வேகத்தினால் கருணையின்றி தன்னையும் அடித்துக் கொள்வான். ஆனால் ஒரு மயிலிறகைப் பார்த்தால் கூட மனம் நெகிழ்ந்து போய்விடுவான்

सर्वं मिथ्येति यो वक्ति वेदान्तकठिनाशयः ।
प्रेमभावं तु भक्तस्य विज्ञातुं शक्नुयात्कथम् ॥६॥

6. இது எல்லாம் மித்யை என்று சொல்லும் வேதாந்தி பக்தனின் ப்ரேமபாவத்தை எப்படி அறிய முடியும்?

वृत्तिशून्यं मनो योगी परिपक्वस्य लक्षणम् ।
शास्त्रप्रमाणैर्वदति किन्तु कृष्णो न लभ्यते ॥७॥

7. அத்தகைய யோகி சித்தவ்ருத்திகள் சூன்யமாகி விடுவதே பரிபக்வத்தின் லக்ஷணம் என்கிறான். ஆனால் க்ருஷ்ணன்தான் கிடைப்பதில்லை.

योगिनो ज्ञानिनश्चापि भक्तं निन्दन्ति पामरम् ।
तेन प्रेमविमुग्धेन सदा क्रीडति माधवः ॥८॥

8. யோகிகளும் ஞானிகளும் பக்தனை பாமரன் என்று நிந்தை செய்கின்றனர். ப்ரேமையில் மயங்கிய அந்த பக்தனுடன்தான் ஸதாகாலமும் மாதவன் விளையாடுகிறான்.

सर्ववेदान्तवेद्योपि न वेदान्ती हरिः स्वयम् ।
केवलं रसिकः सोपि रमते रसिकैः सह ॥९॥

9. வேதாந்தங்களால் அறியப்படும் ஹரி ஸ்வயம் வேதாந்தி யில்லை. அவன் கேவலம் ரஸிகன். அதனால்தான் ரஸிகர்களான பக்தர்களுடன் ரஸிக்கிறான்,

प्रेमभक्तिरसस्येदं माहात्म्यं शास्त्रपण्डितः ।
प्रत्यक्षावगमञ्चापि शास्त्रेण द्रष्टुमिच्छति ॥१०॥

10. ப்ரேமபக்திரஸம் ப்ரத்யக்ஷமானது. ஆனால் சாஸ்த்ர பண்டிதனோ அதை சாஸ்த்ரப்ரமாணத்தினால் அறிய விரும்புகிறான்.

भावं तु परमोत्कृष्टं मनोवाचामगोचरम् ।
कथं तर्केण जानीयात्प्रमाणं स्वयमेव हि ।।११।।

11. மனதுக்கும் வாக்குக்கும் எட்டாத மிகவும் உயர்ந்ததான பாவத்தை தர்க்கத்தினால் எப்படி நிரூபிக்கமுடியும்? பக்திரஸம் சுயம் ப்ரமாணமானது அல்லவா!

जन्मान्तरकृतैः पुण्यैः कृपया च श्रियःपतेः ।
लभ्यते सा परा भक्तिः परमप्रेमलक्षणा ।।१२।।

12. ஜன்மாந்த்ரங்களில் செய்த புண்யங்களாலும் ஸ்ரீயப்பதியின் க்ருபையாலுமே அந்த ப்ரேமலக்ஷணமான பக்தி உண்டாகிறது.

नानाभावग्रन्थियुक्तप्रेमवागुरया ननु ।
गृह्यते वैष्णवव्याधैर्भगवान् खेचरोत्तमः ।।१३।।

13. பலவிதமான பாவங்களாகிய முடிகள்உள்ளதான ப்ரேமபக்தியாகிய வலையை வீசி வைஷ்ணவர்களாகிய வேடர்கள் பகவானாகிய பக்ஷியைப் பிடித்து விடுகின்றனர்

प्रेमरत्नाकरे नानाभावकल्लोलसङ्कुले ।
प्रकाशते कृष्णचन्द्रो वैष्णवानन्ददायकः ।।१४।।

14. நானாவித பாவங்களாகிய அலைகளுடன் கூடிய ப்ரேமஸாகரத்தில் உதித்த க்ருஷ்ணசந்த்ரன் வைஷ்ணவர் களுக்கு ஆனந்தத்தைத் தருகிறான்.

प्रेमभक्तिलता सेयं नानाभावरसाङ्कुरा ।
वासुदेवतरुं प्राप्य लंबते चारुपुष्पिणी ।।१५।।

15. பலவிதமான பாவங்களாகிய அங்குரங்களுடன் கூடிய ப்ரேமபக்தி லதையானது அழகிய புஷ்பங்களுடன் கூடியதாய் வாஸுதேவவ்ருக்ஷத்தை அவலம்பித்து விளங்குகிறது.

प्रेमभक्तितटाके तु नानाभावरसान्विते ।
विराजते समुत्फुल्लं नन्दनन्दनपङ्कजम् ॥१६॥

16. நாநாவித பாவங்களாகிய ரஸத்துடன் கூடிய ப்ரேம தடாகத்தில் நந்தகுமாரனாகிய நீலோத்பலம் மலர்கிறது.

दिव्यभावसुगन्धेन प्रेमपुष्पस्य मोहितः ।
आयाति हृदयोद्यानं गोपीरमणषट्पदः ॥१७॥

17. திவ்யபாவங்களாகிய ஸுகந்தமுடைய ப்ரேமபுஷ்பத்தின் பரிமளத்தினால் மயங்கிய கோபீரமணனாகிய வண்டு ஹ்ருதயமாகிய பூங்காவிற்கு தானே வருகிறது

विशुद्धप्रेमवीणाया भावतन्त्रीसमुद्भवः ।
ददाति श्रवणानन्दं गोविन्दमधुरस्वरः ॥१८॥

18. பாவமாகிய தந்தியுடன்கூடிய ப்ரேமவீணையை மீட்டினால் கோவிந்தனாகிய நாதப்ரம்மம் தானே தோன்றுகிறது.

दिव्यभावतटिद्युक्तं प्रेमभक्तिरसाम्बुदम् ।
दृष्ट्वा नृत्यति सानन्दं व्रजनन्दनबर्हिणः ॥१९॥

19. திவ்யமான பாவமாகிய மின்னலுடன்கூடிய ப்ரேமையாகிய மேகத்தைக்கண்டு கோகுலநந்தனனாகிய மயில் தானே நர்த்தனமாடும்.

प्रेमभक्तिवसन्ते तु भावमारुतसेविते ।
भक्तानां हृदयोद्याने कूजति श्यामकोकिलः ॥२०॥

20. பாவமாகிய மந்தமாருதத்துடன் கூடிய ப்ரேமையாகிய வஸந்தகாலத்தில் பக்தர்களின் இதயமாகிய உத்யானவனத்தில் ச்யாமஸுந்தரனாகிய கோகிலம் கூவும்.

दिव्यभावाब्जसंपूर्णे दिव्यप्रेमसरोवरे ।
गोविन्दराजहंसोऽयं स्वच्छन्दं क्रीडति स्वयम् ॥२१॥

21. திவ்யமான பாவங்களாகிய கமலம்பூத்த திவ்யமான ப்ரேம ஸரோவரத்தில் கோவிந்தராஜஹம்ஸம் நீந்தி விளையாடும்.

माधुर्यभावसंपूर्णां प्रेमभक्तिवराङ्गनाम् ।
विलोक्य स्वयमायाति गोविन्दः पुरुषोत्तमः ॥२२॥

22. மதுரமான பாவங்களுடன்கூடிய ப்ரேமையாகிய யுவதியைப் பார்த்து கோவிந்தனாகிய புருஷோத்தமன் தானே வருவான்.

प्रेमप्रवालममलं नानाभावसमुज्ज्वलम् ।
नन्दनन्दनसूत्रं तत्सुलभं विशति स्वयम् ॥२३॥

23. நாநாபாவங்களால் அழகிய ப்ரேமையாகிய பவழத்தில் நந்தகுமாரனாகிய நூல் சுலபமாய் நுழையும்.

प्रेमभक्ष्यमिदं स्वादु दिव्यभावघृताप्लुतम् ।
चपलः स्वयमायाति भोक्तुकामो व्रजात्मजः ॥२४॥

24. திவ்யமான பாவமாகிய நெய்யில் செய்த ப்ரேமையாகிய மதுரமான பக்ஷணத்தை சபலனான கண்ணன் தானே சாப்பிட ஓடி வருவான்.

परिपक्वं प्रेमफलं दिव्यभावसुगन्धितम् ।
भुनक्ति कृष्णकीरोऽयं परमानन्दसंयुतः ॥२५॥

25. திவ்யமான பாவமாகிய ஸுகந்தமுடைய பக்வமான ப்ரேமபழத்தை சாப்பிட கிருஷ்ணனாகிய கிளி தானே பறந்து வரும்.

प्रेमभक्तिरसस्यैवं माधुर्यं परमाद्भुतम् ।
कथितुं नैव शक्नोति सर्वज्ञो भगवानपि ॥२६॥

26. பரமஅத்புதமான ப்ரேமபக்திரஸத்தின் மாதுர்யத்தை வர்ணிக்க பகவானாலும் முடியாது.

कणिका कापि लोकेऽस्मिन् प्रेमभक्तिरसाम्बुधेः ।
लभ्यते यदि कीटोऽहं भवेयं मौक्तिकोज्ज्वलः ॥२७॥

27. ப்ரேமபக்திரஸஸாகரத்தின் ஒரு திவிலையாவது இந்த ஜன்மாவில் ஒருபுழு போன்ற என் மேல் விழுமானால் நான் ரத்னம்போல் ஜொலிப்பவனாவேன்.

पत्रं कृत्वा च धरणिं मेरुं कृत्वा च लेखनीम् ।
माहात्म्यं भक्तियोगस्य दैवेनापि न लिख्यते ॥२८॥

28. பூமியையே பத்ரமாக்கி, மேருவையே பேனாவாக்கி, பக்திமாஹாத்மியத்தை ஈச்வரனே எழுதினாலும் எழுதி மாளாது.

भक्तस्य वशगो ब्रह्मा भक्तस्य वशगः शिवः ।
भक्तस्य वशगो विष्णुर्भक्तिः सर्ववशङ्करी ॥२९॥

29. ப்ரம்ஹாவும், விஷ்ணுவும், சிவனும்கூட பக்தர்களுக்கு வசமானவர்கள். பக்தி உலகில் யாவரையும் வசமாக்கிவிடும்.

धर्मार्थकाममोक्षाणां साधनं भक्तिरेव हि ।
तथापि सा प्रेमभक्तिः स्वयं हि फलरूपिणी ॥३०॥

30. அறம், பொருள், இன்பம், வீடு எதற்கும் பக்தியே ஸாதனமாக இருந்த போதிலும் பக்தியோ தானே பலமாகவும் இருக்கிறது.

श्लोकानां शतकं वापि श्लोकानामयुतञ्च वा ।
कर्तुं शक्नोमि तां भक्तिं नैव जानामि तत्त्वतः ॥३१॥

31. நூறு ச்லோகம் செய்யலாம். பதினாயிரம் ச்லோகம் பாடலாம். ஆனால் பக்தியின் ரஹஸ்யத்தை சொல்லிவிட முடியாது. அறியவும் முடியாது.

जन्तोः सर्षपमात्रस्य समुद्र इव दृश्यते ।
अहो भक्तिरसाम्भोधिः क्षुद्रस्य मम सन्निधौ ॥३२॥

32. கடுகுபோன்ற ப்ராணிக்கு ஒரு கடல்போல் தெரிகிறது ப்ரேமபக்தி. பக்தியோ ப்ரேம ஸாகரம். அதன் எதிரில் நானோ அற்பஜந்து.

काव्यकल्पनयाऽलं मे ममैवं यशसाप्यलम् ।
लभ्यते यदि सा भक्तिर्जीवनं सफलं मम ॥३३॥

33. இவ்வாறு காவ்யகல்பனையாலும், எனக்கு நானே புகழ் தேடிக் கொள்வதாலும் என்ன பயன்? அந்த ப்ரேமபக்தி எனக்குக் கிடைக்குமானால் என் ஜன்மம் ஸபலமாகும்.

इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये भागवतधर्मकाण्डे प्रेमभक्तिनिरूपणं नाम नवमोऽध्यायः ॥९॥

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமி மஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில் பாகவததர்மகாண்டத்தில் ஒன்பதாம் அத்யாயம்.**

## अथ दशमोऽध्यायः

## பத்தாம் அத்யாயம்

### श्रीसद्गुरुरुवाच

यत्रकुत्रापि सञ्जातः सन्त्यज्य सकलं सुखम् ।
कृष्णभक्तिसुखं ध्यायन् गच्छेद्बृन्दावनं सुधीः ॥१॥

### ஸ்ரீஸத்குரு

1. ஒரு ஜீவன் எந்த தேசத்தில் பிறந்தாலும் ஸகல ஸுகத்தையும் விட்டு க்ருஷ்ணபக்திரஸத்தை விரும்பி ப்ருந்தாவனம் ஓடி வருவானானால் அவனே புத்திசாலி.

बृन्दावने वसन्नित्यं चिन्तयन् व्रजनन्दनम् ।
कृष्णभक्तिरसानन्दमनन्तं प्राप्नुयान्नरः ॥२॥

2. ப்ருந்தாவனத்திலேயே நித்யவாஸம் செய்துகொண்டு நந்தநந்தனனையே த்யானம் செய்யும் மனிதன் அளவுகடந்த ப்ரேமபக்திரஸானந்தத்தைப் பெறுவான்.

मुहुर्मुहुर्विलुठतां घोरे संसारकर्दमे ।
इच्छताञ्च मनः शान्तिं कृष्णभक्तिः परागतिः ॥३॥

3. கோரமான ஸம்ஸார சேற்றில் அடிக்கடி புரண்டும் மனசாந்தியை விரும்பும் மனிதர்களுக்கு க்ருஷ்ண பக்தியே கதி.

स्वर्गाच्च पारमेष्ठ्याच्च वैकुण्ठादपि वैष्णवाः ।
वदामि सत्यमेवाहं कृष्णभक्तिः परं सुखम् ॥४॥

4. ஹே வைஷ்ணவர்களே! ஸ்வர்கத்தைக் காட்டிலும் ப்ரம்மபட்டத்தைக் காட்டிலும், வைகுண்டத்தைக் காட்டிலும் உண்மையாகவே சொல்லுகிறேன் க்ருஷ்ணபக்தியே பரம ஸுகமானது.

आत्मारामगणश्रेष्ठो मुनयः सनकादयः ।
तुलसीगन्धमाघ्राय जहुरक्षरभावनाम् ॥५॥

5. அக்ஷரப்ரம்மநிஷ்டர்களான ஸனகாதி முனிவர்கள்கூட பகவானின் துளஸீகந்தத்தை முகர்ந்ததும் உடனே அக்ஷர ப்ரம்மநிஷ்டையை விட்டுவிட்டனர்.

तदा ते मेनिरे व्यर्थं निराकारस्य चिन्तनम् ।
साक्षात्कृते भगवति साकारे परमात्मनि ॥६॥

6. அவர்கள் ஸகுணஸாக்ஷாத்காரம் பெற்றதும் நிர்குணநிராகார பாவனையை வீண் என்று நினைத்தனர்.

तथा व्यासकुमारश्च कृष्णभक्तिवशङ्गतः ।
निर्विकल्पसमाधिञ्च त्यक्त्वा कृष्णकथां जगौ ॥७॥

7. வ்யாஸகுமாரரான ஸ்ரீசுகரும் தனது நிர்விகல்பஸமாதியையும் கூட விட்டுவிட்டு க்ருஷ்ணகதையை கானம் செய்யலானார்.

तथा पवनपुत्रश्च तिरस्कृत्य परं पदम् ।
भक्तिमेव जगन्नाथे प्रार्थयामास राघवे ॥८॥

8. அவ்வாறே ஹனுமானும் பரமபதத்தை உபேக்ஷித்துவிட்டு ராமபக்தியையே வேண்டினார்.

एवं विभीषणश्चैव चिरञ्जीवित्वमागतः ।
करोति राघवे भक्तिं राघवध्यानतत्परः ॥९॥

9. விபீஷணனும் சிரஞ்ஜீவியாகி ராமத்யானமே லக்ஷ்ய மானவராக ராமபக்தி செய்துகொண்டிருக்கிறார்.

तथा कायाधवश्चैव पौत्रेण बलिना सह ।
वसन् रसातले नित्यं कृष्णे भक्तिं करोति हि ॥१०॥

10. அவ்வாறே ப்ரஹ்லாதனும் தனது பௌத்ரனான பலிசக்ரவர்த்தியுடன் இன்றும் ரஸாதலத்தில் வாஸம் செய்துகொண்டு க்ருஷ்ண பக்தியே செய்துவருகிறார்.

उद्धवश्च महाभागो वसन् बदरिकाश्रमे ।
करोति भक्तिं गोविन्दे सुदृढां प्रेमरूपिणीम् ॥११॥

11. மஹாபாக்யவானான உத்தவனும் பத்ரிகாச்ரமத்தில் வாஸம் செய்துகொண்டு க்ருஷ்ணனிடம் திடமான ப்ரேம பக்தியே செய்கிறான்.

देवर्षिश्च तथा नित्यं कीर्तयन् वीणया हरिम् ।
इतस्ततः सञ्चरति वैकुण्ठं नैव गच्छति ॥१२॥

12. தேவர்ஷியான நாரதரும் வீணையுடன் ஹரிகீர்த்தனம் செய்துகொண்டு இங்குமங்கும் அலைகிறார். இதுவரை வைகுண்டமே போகவில்லை.

एवं प्रधाना भक्तास्तु वैकुण्ठनिरपेक्षया ।
सदा भजन्ति गोविन्दं भक्तितत्त्वविचक्षणाः ॥१३॥

13. இவ்வாறு ப்ரதானமான பக்தர்கள் பலரும் பக்திரஸத்தை அறிந்தவர்களாக இருப்பதால் கோவிந்தனையே பஜிக்கின்றனர். வைகுண்டத்தை விரும்பவில்லை.

उत्तमो भजनानन्दो वैकुण्ठे नैव लभ्यते ।
तत्र नास्त्येव वात्सल्यं वासुदेवे परात्मनि ॥१४॥

14. ஏனெனில் சிறந்த பஜனானந்தம் வைகுண்டத்திலும் துர்லபமானது. ஏனெனில் அங்கு பரவாஸுதேவனிடம் வாத்ஸல்யப்ரேமை உண்டாகாது.

नरावतारे वात्सल्यं सुतरां संप्रकाशते ।
वैकुण्ठादुत्तमं प्रोक्तं तस्मादेव हि गोकुलम् ॥१५॥

15. மனுஷ்யாவதாரத்திலோ கண்ணனிடம் வாத்ஸல்யம் உண்டாகும். எனவே வைகுண்டத்தைவிட கோகுலமே சிறந்தது.

केचित्कैवल्यमिच्छन्ति तथान्ये परमं पदम् ।
अन्ये साम्राज्यमिच्छन्ति केचित्स्वर्गसुखं नराः ॥१६॥

16. சிலர் கைவல்யத்தை விரும்புகின்றனர். சிலர் வைகுண்டத்தை விரும்புகின்றனர். சிலர் ஸாம்ராஜ்யத்தையும் ஸ்வர்கஸுகத்தையும் விரும்புகின்றனர்.

उद्धवप्रमुखा भक्ता भजनानन्दतत्पराः ।
तृणजन्म प्रार्थयन्ते यत्र क्वापि हरेर्वने ॥१७॥

17. உத்தவன் முதலிய பக்தர்களோ பஜனானந்தரஸத்தை அறிந்தவர்களாக இருப்பதால் ப்ருந்தாவனத்தில் ஒரு புல்லாய் பிறவி வேண்டுகின்றனர்.

किं कर्मणामनुष्ठानैर्वेदान्तपठनैश्च किम् ।
रसिकानां वैष्णवानां कृष्णप्रेम परं सुखम् ॥१८॥

18. கர்மானுஷ்டானம் செய்தும் என்ன அடையவேண்டும், வேதாந்தம் படித்தும் என்ன அறியவேண்டும். ரஸிகர்களான பக்தர்களுக்கோ க்ருஷ்ணபக்தியே பரம ஸுகம்.

कृष्णभक्तिं समाश्रित्य परमप्रेमरूपिणीम् ।

सफलं भवति ज्ञानमन्यथा निष्फलं भवेत् ॥१९॥

19. பரமப்ரேமரூபமான க்ருஷ்ணபக்தியை ஆச்ரயித்துதான் ஞானமும் ஸபலமாகும். க்ருஷ்ணபக்தி இல்லாத ஞானமும் நிஷ்பலமே.

तथा हि निखिलं कर्म वेदोक्तमपि वैष्णवाः ।
कृष्णभक्तिमनाश्रित्य निष्फलं भवति ध्रुवम् ॥२०॥

20. ஹே வைஷ்ணவர்களே! அவ்வாறே வேதோக்தமான ஸகல புண்ய கர்மமும் க்ருஷ்ணபக்தியை ஆச்ரயித்தே ஸபலமாகும். இல்லாவிடில் புண்யகர்மங்களும் நிஷ்பலமே.

किन्तु गोविन्दभक्तिस्तु स्वयं हि फलरूपिणी ।
न ज्ञानं न च वैराग्यं न कर्म तदपेक्षते ॥२१॥

21. ஆனால் க்ருஷ்ணபக்தியோ ஸ்வயமே பலரூபமானது. அது ஞானத்தையோ வைராக்யத்தையோ கர்மாவையோ எதிர்பார்க்க வில்லை.

ज्ञानयोगात्कर्मयोगात्तथैवाष्टाङ्गयोगतः ।
भक्तकोलाहले कृष्णे भक्तिरेवोत्तमोत्तमा ॥२२॥

22. ஞானயோகத்தைக் காட்டிலும், கர்மயோகத்தைக் காட்டிலும், அஷ்டாங்க யோகத்தைக் காட்டிலும் ஸ்ரீபக்த கோலாஹல கண்ணனிடம் பக்தி செய்வதே உத்தமோத்தமம்.

दुर्वासा दुःखमापन्नस्तपसा गर्वितो मुनिः ।
विनिन्दन्नम्बरीषं तं महाभागवतोत्तमम् ॥२३॥

23. தவத்தினால் கர்வமடைந்த துர்வாஸமுனிவரும் பக்தனான அம்பரீஷனைப் பழித்ததால் துக்கமடைந்தாரன்றோ!

एवं तद्भक्तिमाहात्म्यं सर्वशास्त्रेषु कीर्तितम् ।
सहस्रवदनेनापि प्रवक्तुं नैव शक्यते ॥२४॥

24. ஸர்வசாஸ்த்திரங்களிலும் சொல்லப்பட்ட பக்தி மாஹாத்மியத்தை ஆயிரம் நாவு படைத்த ஆதிசேஷனும் சொல்லிமாளாது.

कृष्णभक्तिं विना नूनं वेदान्तपठनं वृथा ।
तस्मात्सर्वस्वभावेन गोविन्दं शरणं भजेत् ॥२५॥

25. க்ருஷ்ணபக்தியை விட்டு வேதாந்தம் படிப்பது வீணே. ஆகையால் எல்லா விதத்திலும் ஒருமுகமாக க்ருஷ்ணனையே சரணடைய வேண்டும்.

वदेयं स्वानुभवेन मनोवाचामगोचरम् ।
कथं शास्त्रविचारेण जानीयात्तं महेश्वरम् ॥२६॥

26. ஸ்வானுபவத்தாலேயே அறியத்தக்க அந்த மஹேச்வரனை வெறும் சாஸ்த்ரவிசாரத்தால் மட்டும் எப்படி அறியமுடியும்?

रसरूपं परं ब्रह्म वेत्तुं तत्प्रेमसाधनम् ।
ननु शुष्कैरनुष्ठानैर्वैदिकैर्नैव लभ्यते ॥२७॥

27. வேதத்தில் சொன்ன வறட்டு அனுஷ்டானங்களாலும் அந்த பகவானை அடைய முடியாது. ரஸரூபமான ப்ரம்ஹத்தை அறிய ப்ரேமபக்தியே ஸாதனம்.

हृदये यस्य नास्त्येव प्रेम सर्वजनेष्वपि ।
सदा विमुखचित्तानां वैदिकैः कर्मभिश्च किम् ॥२८॥

28. எவர்களுக்கு ஸர்வஜனங்களிடமும் ப்ரேமை இல்லையோ அவர்களுக்கு வைதீககர்மங்களால்தான் என்ன வந்துவிடப் போகிறது?

ऊर्ध्वपुण्ड्रं ललाटे च मुद्रां कुर्वन्ति हस्तयोः ।
किन्तु प्रेम न कुर्वन्ति सर्वव्यापिनि माधवे ॥२९॥

29. நெற்றியில் ஊர்த்வபுண்ட்ரத்தையும், புஜங்களில் சங்கசக்ரமுத்திரைகளையும் தரிக்கின்றனர். ஆனால் ஸர்வ வ்யாபியான மாதவனிடம் ப்ரேமையை தரிக்கவில்லையே.

जले वसति मीनश्च बिले वसति मूषिकः ।
पर्णमश्नाति मेषश्च भुजङ्गो वायुभोजनः ॥३०॥

*30. மீன் ஜலத்திலேயே வஸிக்கிறது, எலி வளையிலேயே வஸிக்கிறது. ஆடும் இலைதான் சாப்பிடுகிறது. ஸர்ப்பமோ வாயுபக்ஷணமே செய்கிறது.*

खरो दधाति भस्मापि मृगाः सर्वे दिगम्बराः ।
नाप्नुवन्ति परं मोक्षमिमे जीवाः स्वकर्मभिः ॥३१॥

*31. கழுதை சாம்பலில் புரளுகிறது, ம்ருகங்கள் யாவும் திகம்பரமாய் அலைகிறது. இந்த ஜீவன்கள் யாவும் தன் கர்மங்களால் மோக்ஷமடையவில்லையே!*

कृष्णभक्तिं विना सर्वमनुष्ठानं वृथा वृथा ।
सरसेनैव चित्तेन नन्दबालं सदा स्मरेत् ॥३२॥

*32. எனவே க்ருஷ்ணபக்திஇல்லாமல் எல்லா அனுஷ்டானங் களும் வீணே. ஸரஸசித்தத்துடன் கண்ணனையே ஸதா ஸர்வகாலமும் ஸ்மரணம் செய்யவேண்டும்.*

क्रियाविशेषबहुलैः कर्मभिर्वञ्चिता नराः ।
प्रेमधर्मस्य सारं तु नैव जानन्ति पामराः ॥३३॥

*33. ஆடம்பரமான க்ரியைகளால் ஏமாற்றப்பட்ட பாமரமக்கள் ப்ரேமதர்மத்தின் ஸாரத்தை அறிவதில்லை.*

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये भागवतधर्मकाण्डे भक्तिमाहात्म्यनिरूपणं नाम दशमोऽध्यायः ॥१०॥*

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமி மஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவனமாஹாத்மியத்தில் பாகவததர்மகாண்டத்தில் பத்தாம் அத்யாயம்.**

# अथैकादशोऽध्यायः
# பதினோராம் அத்யாயம்

## श्रीसद्गुरुरुवाच

प्राप्तुमिच्छति यो मर्त्यः पुरुषार्थान् सुदुर्लभान् ।
भजेत्कृष्णपदाम्भोजमाश्रितानां तु कल्पकम् ॥१॥

## ஸ்ரீஸத்குரு

1. எந்த மனிதன் கிடைத்தற்கரிய புருஷார்த்தங்களை அடைய விரும்புகிறானோ அவன் அண்டியவர்களுக்கு கல்பகவ்ருக்ஷம் போல் வேண்டியதைத் தரும் க்ருஷ்ணபாதாரவிந்தத்தை பஜிக்கவேண்டும்.

प्राप्तुमिच्छति यः शीघ्रममोघां भगवत्कृपाम् ।
तस्मिन् कुर्याद्दृढां भक्तिं नामसङ्कीर्तनादिभिः ॥२॥

2. சீக்ரமே பகவானின் அருளைப்பெற விரும்புகிறவன் நாமஸங்கீர்த்தனம் முதலியவைகளால் பகவானிடம் திடமான பக்தி செய்யவேண்டும்.

वृथाहङ्कारयुक्तानां तथा पण्डितमानिनाम् ।
दुर्लभा भगवद्भक्तिर्दुष्टानां दोषदर्शिनाम् ॥३॥

3. பிறரிடம் குற்றம் பார்ப்பவர்களும், ஆனால் தன்னிடம் குற்றமுள்ளவர்களும், தான் பண்டிதன் என்ற அஹம்பாவ முள்ளவர்களுமான ஜனங்களுக்கு உண்மையான பக்தி கைகூடாது.

शिष्टाचारं प्रवक्ष्यामि वैष्णवानां महात्मनाम् ।
वदन्ति शाश्वतान् धर्मानिमान् द्वैपायनादयः ॥४॥

4. வைஷ்ணவர்களின் ஸதாசாரத்தை இனி சொல்வேன். வ்யாஸர்முதலிய முனிவர்களால் இவை சொல்லப்பட்டன.

लोकवेदपराणां तु प्रेममोहितचेतसाम् ।
नियमो वा निषेधो वा नास्ति तेषां महात्मनाम् ॥५॥

5. ப்ரேமையால் உன்மத்தர்களான மஹான்கள் உலகத்தையும் வேதத்தையும் தாண்டிச் சென்றுவிட்டதால் அவர்களுக்கு விதியோ நிஷேதமோ கிடையாது.

किन्तु साधारणीं वृत्तिमाश्रिता भगवत्पराः ।
चरेयुर्नियमं स्वीयं भक्तियोगस्य साधकाः ॥६॥

6. ஆனால் ஸாதாரணமான ஸாதனபக்தி செய்பவர்கள் பக்தியோகத்திற்கு அங்கமாகச் சொல்லியிருக்கும் நியமங்களை அவசியம் அனுசரிக்கவேண்டும்.

येनकेनप्रकारेण कुर्यादुदरपोषणम् ।
अधर्मं वर्जयित्वैव न्यायवृत्तेन वैष्णवः ॥७॥

7. ஏதோ ஒருவ்ருத்தியால் வைஷ்ணவன் ஜீவனம் நடத்த வேண்டும். ஆனால் அநீதி செய்யக்கூடாது. நியாயமான வ்ருத்தியால் உழைத்துச் சம்பாதிக்க வேண்டும்.

नियम्य दुष्टां रसनां प्रकुर्यात्प्राणधारणम् ।
विरसेनापि शुष्केन मितेनान्नेन वैष्णवः ॥८॥

8. விதவிதமாக சாப்பிடும் ஆசையைவிட்டு ப்ராண தாரணைக்குத் தேவையான ஆஹாரத்தைமட்டும் வைஷ்ணவன் சாப்பிடவேண்டும்.

आच्छादनार्थं वस्त्रञ्च तथान्नं जीवनाय च ।
स्वयं संपादयेद्भक्तो दृढवैराग्यसंयुतः ॥९॥

9. திடவைராக்யமுள்ள பக்தன் உடுத்துவதற்கு துணியையும் பசிக்கு அன்னத்தையும் தானே சம்பாதிக்க வேண்டும்.

उञ्छवृत्तिः परो धर्मो वैष्णवानां विधीयते ।
कीर्तयन् हरिनामानि भिक्षायै सञ्चरेद्बुधः ॥१०॥

10. வைஷ்ணவர்களுக்கு உஞ்சவ்ருத்தி பரமதர்மமாக விதிக்கப்பட்டுள்ளது. ஹரிநாமகீர்த்தனம் செய்துகொண்டு பிக்ஷை எடுக்கவேண்டும்.

न दुःखमाप्नुयाद्भक्तो दारिद्र्येणापि पीडितः ।
यदृच्छयोपलब्धेन प्राप्नुयात्परमं सुखम् ॥११॥

11. ஏழ்மையால் பீடிக்கப்பட்டாலும் பக்தன் வருந்தலாகாது. கிடைத்ததைக் கொண்டு ஸந்தோஷமடைய வேண்டும்.

कामिनीकाञ्चनासक्ता वृथाऽहंभावसंयुताः ।
धनलोभेन दौर्भाग्यात्पराधीना भवन्ति ते ॥१२॥

12. காமினி காஞ்சனங்களில் பேராசை உள்ளவர்களும், வீண் அஹம்பாவம் பிடித்தவர்களும், பணத்திலுள்ள ஆசையினால் துர்பாக்யத்தினால் பிறருக்கு அடிமையாகின்றனர்.

किन्तु भागवताः शुद्धा विरक्ता विजितेन्द्रियाः ।
यदृच्छालाभसन्तुष्टाः सन्ति स्वच्छन्दचेष्टिताः ॥१३॥

13. ஆனால் பாகவதர்களோ வைராக்யத்தினால் சுத்தமானவர்களாயும், புலன்களை அடக்கியவர்களாயும், கிடைத்ததைக் கொண்டு ஸந்தோஷமடைகின்றவர்களாயும், சுதந்திரமாக இருக்கின்றனர்.

वैष्णवं क्षेत्रमाश्रित्य संवसेद्भक्तिमान्नरः ।
श्रीरङ्गं वा पण्डरीं वा श्रीवनं वा यथाक्रमम् ॥१४॥

14. பக்திமானாகிய மனிதன் ஸ்ரீரங்கமோ, பண்டரிபுரமோ, ஸ்ரீப்ருந்தாவனமோ தன் ருசிக்கு உகந்தபடி ஏதாவதொரு விஷ்ணுக்ஷேத்ரத்தை நாடி வஸிக்க வேண்டும்.

नित्यं प्रातः समुत्थाय हरिनामानि कीर्तयन् ।
स्नात्वा पवित्रे सलिले जपेन्मन्त्रं यथाविधि ॥१५॥

15. தினமும் காலையில் எழுந்து ஹரிநாமகீர்த்தனம்

செய்துகொண்டே ஸ்னானம் செய்துவிட்டு முறைப்படி மந்த்ரஜபம் செய்யவேண்டும்.

विलिखन्नूर्ध्वपुण्ड्रञ्च द्वादशाङ्गेषु वैष्णवः ।
पुण्याञ्च तुलसीमालां धरेच्च प्रेमपूर्वकम् ॥१६॥

16. வைஷ்ணவன் தனது பன்னிரண்டு அங்கங்களிலும் ஊர்த்வபுண்ட்ரமணிய வேண்டும். துளஸிமணிமாலையையும் ஆசையுடன் தரிக்கவேண்டும்.

शिखां यज्ञोपवीतञ्च श्वेतं वस्त्रं यथोचितम् ।
जपमालामूर्ध्वपुण्ड्रं धरेद्भक्तो दिने दिने ॥१७॥

17. சிகை, உபவீதம், வெண்மையான வஸ்த்ரம், ஜபமாலை, ஊர்த்வபுண்ட்ரம் இவைகளை உசிதம்போல் வைஷ்ணவன் தினந்தோறும் தரிக்கவேண்டும்.

हरिनामजपं कुर्याच्छ्रीमद्भागवतं पठेत् ।
उञ्छवृत्तिं ततः कुर्यादर्चनाय श्रियःपतेः ॥१८॥

18. தினமும் ஹரிநாமஜபம் செய்யவேண்டும். பிறகு ஸ்ரீமத்பாகவதம் படிக்க வேண்டும். ஸ்ரீபகவத் பூஜைக்காக உஞ்சவ்ருத்தி எடுக்கவேண்டும்.

पत्न्याऽनुकूलया सार्धं गार्हस्थ्यं धर्ममाचरन् ।
कृष्णस्याराधनं कुर्यान्नैवेद्यञ्च समर्पयेत् ॥१९॥

19. அனுகூலமான மனைவியுடன் இல்லறதர்மத்தை செய்து கொண்டு பகவானை பூஜித்து நைவேத்யமும் ஸமர்ப்பிக்க வேண்டும்.

सन्यासिनो वैष्णवांश्च दीनानभ्यागतानपि ।
तर्पयन्नन्नपानाभ्यामश्नीयाच्छिष्टमोदनम् ॥२०॥

20. ஸந்யாசிகள், வைஷ்ணவர்கள், ஏழைகள், அதிதிகள் இவர்களுக்கு அன்னதானம் செய்தபிறகு அவர்களின்

ப்ரஸாதத்தை சாப்பிட வேண்டும்.

संपादयेदुञ्छवृत्त्या तण्डुलान् भक्तिमान्नरः ।
वृत्त्याऽयाचितया युक्तो धनं प्रवचनादिभिः ॥२१॥

21. உஞ்சவ்ருத்தியால் அரிசியை ஸம்பாதிக்க வேண்டும். மற்ற பொருட்களை ப்ரவசனம்முதலிய அயாசிதவ்ருத்தியால் ஸம்பாதிக்க வேண்டும்.

रात्रौ हरिकथां कुर्याद्धनलोभं विवर्जयन् ।
आत्मस्तुतिं विशेषेण न कुर्याद्धनिकस्तुतिम् ॥२२॥

22. இரவு ஹரிகதாப்ரவசனம் செய்யவேண்டும் ஆனால் ஸம்பாவனையில் லக்ஷியம் கூடாது. ஆத்மஸ்துதியையோ, தனிகஸ்துதியையோ கதையில் விட்டுவிட வேண்டும்.

यदृच्छयोपपन्नञ्च स्वीकुर्याद्वैष्णवो धनम् ।
दद्याद्दीनजनेभ्यश्च स्वाधिकं लभ्यते यदि ॥२३॥

23. வாயைத்திறந்து கேட்காமல் எதிர்பாராமல் கிடைத்ததைப் பெற்றுக் கொள்ளவேண்டும். தனக்கு மிஞ்சி கிடைத்ததை ஏழைகளுக்கு தானம் செய்துவிட வேண்டும்.

विद्यया विनयेनापि वैराग्येण शमेन च ।
भवेद्भागवतो नित्यं संमान्यः सकलैर्जनैः ॥२४॥

24. வித்யையாலும், வினயத்தாலும், தன்னடக்கத்தாலும், விரக்தியாலும் பாகவதன் ஸகல மக்களாலும் கௌரவிக்கத் தக்கவனாக இருக்கவேண்டும்.

विविक्तदेशमाश्रित्य लौकीकविमुखो वसेत् ।
गूढधर्मो वदेच्चापि लौकिकैर्मितभाषणः ॥२५॥

25. லௌகீகர்களின் சங்கத்தைவிட்டு எப்போதும் தனிமையை விரும்பவேண்டும். தேவையானஅளவு லௌகீகர்களிடமும் பேசிப்பழகவேண்டும். அவர்கள் பக்ஷத்தையே பேசி அவர் களை அனுப்பிவிட வேண்டும். தனது பக்தியை அவர்களிடம்

காண்பித்துக் கொள்ளக் கூடாது.

क्षमाशीलो भवेन्नित्यमन्यदोषं न कीर्तयेत् ।
स्मितपूर्वं वदेल्लोके सारं सुष्ठु मितं मधु ॥२६॥

26. பிறர் குற்றத்தைப் பேசக்கூடாது. எப்போதும் பிறர் பிழையைப் பொறுத்துப் போகவேண்டும். யாவரிடமும் ப்ரஸன்னமாய்ப் பேசிப்பழகவேண்டும். ஸாரமாயும், தெளிவாயும், மிதமாயும், மதுரமாயும் பேசவேண்டும்.

आत्मनो गौरवं रक्षेन्न निन्देदितरं जनम् ।
सौलभ्यञ्च प्रकटयेत् डम्भाहङ्कारवर्जितः ॥२७॥

27. தனது மதிப்பைக் காப்பாற்றிக் கொள்ளவேண்டும். பிறரைக் குறை கூறக் கூடாது. டம்பம் அஹம்பாவமின்றி யாவரிடமும் ஸௌலபமாய்ப் பழக வேண்டும்.

सत्यमेव वदेद्भक्तः सत्यार्थं मौनमुच्यते ।
मौनाय नामस्मरणमेतद्वैष्णवलक्षणम् ॥२८॥

28 ஸத்யமே பேச வேண்டும். அதிகப் பேச்சுக்களாலும் பொய் வந்துவிடும். எனவே மௌனமாய் இருக்கவேண்டும். மௌனத்திற்கு நாமகீர்த்தனமே மேலாகும்.

कायेन मनसा वाचा वर्जयेच्च नृशंसताम् ।
अहिंसा परमो धर्मः सर्वभूतसुखावहः ॥२९॥

29. மனது, வாக்கு காயத்தினால் கொடுமை கூடாது. அஹிம்ஸையே பரமதர்மம். அஹிம்ஸையே உலகுக்கு நன்மை தரும்.

क्षमा सत्यं क्षमा दानं क्षमैव परमं तपः ।
क्षमयैव जयेत्क्रोधं हिंसितोपि मुहुर्मुहुः ॥३०॥

30. பொறுமையே ஸத்யம். பொறுமையே தானம். பொறுமையே பெருந்தவம். எனவே அடிக்கடி பிறர் துன்பப்படுத்தினாலும் பொறுமையையே பரிபாலிக்க வேண்டும்.

भवेदार्जवसंयुक्तो बालवद्वैष्णवोत्तमः ।
आश्रयेद्भगवद्भक्तो धर्मं प्रोज्झितकैतवम् ॥३१॥

31. வைஷ்ணவோத்தமன் குழந்தைபோல் கபடமின்றி இருக்கவேண்டும். பகவத் பக்தன் கபடமற்ற தர்மத்தையே நாட வேண்டும்

उपकाराय लोकस्य साधूनां प्राणधारणम् ।
एतत्तत्वं न जानन्ति स्वार्थोन्मूलितसौहृदाः ॥३२॥

32. ஸாதுக்கள் ஜீவிப்பதே லோகோபகாரார்த்தம். சுயநலமே லக்ஷியமானவர்கள் இதை அறியார்.

दयैव सर्वभूतेषु कर्तव्या वैष्णवैः सदा ।
आश्रित्य वैष्णवं लोके सर्वे जीवन्ति जन्तवः ॥३३॥

33. வைஷ்ணவர்கள் யாவரிடமும் கருணையைச் செய்ய வேண்டும். ஏனெனில் ஸாதுக்களின் தயையாலேயே உலகம் க்ஷேமமாக இருக்கும்

समतां सर्वभूतेषु वैष्णवो मनसा स्मरेत् ।
ब्रह्मादिस्तम्बपर्यन्तं भगवान् व्याप्य तिष्ठति ॥३४॥

34. வைஷ்ணவன் யாவரிடமும் ஸமபுத்தியுடன் இருக்க வேண்டும். ஏனெனில் ப்ரும்மாமுதல் புழு பூச்சிவரை வாஸுதேவனே வ்யாபித்துள்ளான்.

वैराग्यं वर्धयेद्भक्तो विषयेषु दृढव्रतः ।
नाशयेद्भगवद्भक्त्या कामं सांसारिके सुखे ॥३५॥

35. விஷயஸுகங்களில் விரக்தியை வளர்க்க வேண்டும். திடசித்தத்துடன் பகவத்பக்தியால் காமத்தை வெல்ல முடியும்.

मातृभावं परस्त्रीषु कुर्याद्भागवतः सदा ।
ब्रह्मचर्यव्रते युक्तो ऋतुगामी तथा भवेत् ॥३६॥

36. பாகவதன் பிறர் மனைவியை தன் தாயாராகப் பார்க்க வேண்டும். தன் மனைவியுடன்கூட காலத்தில் சேரவேண்டும். மற்றஸமயம் ப்ரம்ஹசரியத்துடன் இருக்க வேண்டும்.

आत्मानात्मविचारेण प्रशान्तहृदयो बुधः ।
विविक्तस्थानमाश्रित्य लौकीकविमुखो वसेत् ॥३७॥

37. ஆத்மாநாத்மவிசாரத்தினால் ப்ரசாந்தி அடைந்த மனதுள்ளவனாய் தனிமையில் ஸுகமாய் இருக்க வேண்டும். லோகஸுகங்களில் இருந்து விலக வேண்டும்.

सत्यं क्षमा ब्रह्मचर्यमहिंसा समता दया ।
उपकारश्च विषये वैराग्यं ज्ञानमार्जवम् ॥३८॥
एते दशमहाधर्माः सज्जनैः शुभकाङ्क्षिभिः ।
सर्वदा पालनीया हि वैष्णवैर्दृढनिष्ठया ॥३९॥

38,39 ஸத்யம், க்ஷமா, ப்ரம்ஹசர்யம், அஹிம்ஸா, ஸமதா, தயா, உபகாரம், விஷயவிரக்தி, ஞானம், நேர்மை இவை பத்தும் நன்மையை விரும்பும் நல்ல ஜனங்களுக்கு முக்ய தர்மங்களாகும். இவைகளை வைஷ்ணவர்கள் திடசித்தத்துடன் பரிபாலிக்க வேண்டும்.

हीनमात्मगुणैर्भक्तं भगवान्नाभिमन्यते ।
आर्जयेद्वैष्णवो नित्यं पुण्यानात्मगुणान् बहून् ॥४०॥

40. துர்குணமுள்ள பக்தர்களை பகவான் அபிமானிப்பதில்லை. எனவே நல்ல குணங்களையே பக்தன் பரிபாலிக்க வேண்டும்.

एवं हि भगवद्भक्तः शिष्टाचारेण संयुतः ।
लोकपूज्यो भवेत्सत्यमेवं हि भगवत्प्रियः ॥४१॥

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये भागवतधर्मकाण्डे शिष्टाचारनिरूपणं नामैकादशोऽध्यायः ॥११॥*

41. இவ்வாறு ஸதாசாரத்துடன்கூடிய பக்தனை உலகமே பூஜிக்கும். இந்த பக்தனையே பகவானும் நேசிப்பார். இது ஸத்யம்.

இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமி மஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில் பாகவததர்மகாண்டத்தில் பதினோராம் அத்யாயம்.

# अथ द्वादशोऽध्यायः

## பன்னிரெண்டாம் அத்யாயம்.

### भागवता ऊचुः

भगवन् श्रोतुमिच्छामः पुण्यं वैष्णवलक्षणम् ।
यस्य श्रवणमात्रेण महान् हर्षः प्रजायते ॥१॥

### பாகவதர்கள்

1. பகவானே! எதைக் கேட்டதுமே பரமானந்தம் உண்டாகுமோ அத்தகைய புண்யமான வைஷ்ணவலக்ஷணத்தைக் கேட்க விரும்புகிறோம்.

### श्रीसद्गुरुरुवाच

विसृज्य लज्जां यो नित्यं सुस्वरं कृष्णकीर्तनम् ।
करोति परमानन्दं स हि भागवतोत्तमः ॥२॥

### ஸ்ரீஸத்குரு

2. லஜ்ஜையைவிட்டு தினமும் ஸுஸ்வரமாய் க்ருஷ்ணகீர்த்தனம் செய்பவனே பாகவதோத்தமன்.

दूरादागत्य यो नित्यं डम्भाहङ्कारवर्जितः ।
शृणोति कृष्णचरितं स हि भागवतोत्तमः ॥३॥

3. வெகுதூரத்திலிருந்து வந்து தினந்தோறும் டம்பம் அஹம்பாவமின்றி க்ருஷ்ணகதையைக் கேட்பவனே பாகவதோத்தமன்.

सन्ततं हृदयाम्भोजे पुण्डरीकाक्षमच्युतम् ।
गोविन्दं यः स्मरेन्नित्यं स हि भागवतोत्तमः ॥४॥

4. எப்போதும் இதயகமலத்தில் புண்டரீகாக்ஷனான பகவானை த்யானம் செய்பவனே பாகவதோத்தமன்.

युक्तान् वैष्णवचिह्नेन चण्डालानपि पामरान् ।
यो भक्त्या सेवते नित्यं स हि भागवतोत्तमः ॥५॥

5. ஊர்த்வபுண்ட்ரம்முதலிய வைஷ்ணவலக்ஷணம் அணிந்தவன் சண்டாளனாயினும் பார்த்ததுமே அவனை ஜாதிபேதமின்றி பாகவதோத்தமனாகக் கருதி ஸேவிப்பவன் பாகவதோத்தமன்.

कृष्णं पद्मपलाशाक्षं यः पूजयति सादरम् ।
नित्योत्सवं प्रकुर्वाणः स हि भागवतोत्तमः ॥६॥

6. நித்யோத்ஸவம் செய்பவனாய். கமலபத்ராக்ஷனான க்ருஷ்ணனை தினமும் பூஜிப்பவன் பாகவதோத்தமன்.

परिचर्यां पादसेवां वैष्णवाणां करोति यः ।
साक्षादीश्वरबुद्ध्यैव स हि भागवतोत्तमः ॥७॥

7. பகவானுக்கும் பாகவதர்களுக்கும் பேதம் பார்க்காமல் கைங்கர்யமும் பாதஸேவையும் செய்பவன் பாகவதோத்தமன்.

सर्वभूतेषु कारुण्यमहिंसाव्रतमाचरन् ।
यः करोति विशुद्धात्मा स हि भागवतोत्तमः ॥८॥

8. ஜீவகாருண்யமும், அஹிம்சையும் வ்ரதமாய்க்கொண்டு சுத்தசித்தத்துடன் கூடினவன் எவனோ அவனே பாகவதோத்தமன்.

नित्यं परोपकाराय शरीरञ्च दधाति यः ।
निःस्वार्थशुद्धचारित्रः स हि भागवतोत्तमः ॥९॥

9. சுயநலமற்றவனாய் தினமும் பரோபகாரத்திற்காகவே

ஜீவித்திருப்பவன் பாகவதோத்தமன்.

मातृभावेन यो भक्त्या परदारांश्च सेवते ।
ब्रह्मचर्यव्रते युक्तः स हि भागवतोत्तमः ॥१०॥

10. ப்ரஹ்மசர்யத்துடன் கூடியவனாய் பிறர் மனைவியைப் பார்த்தால் பெற்ற தாயாரைப்போல் நினைப்பவன் பாகவதோத்தமன்.

दुर्जनैर्बहुधा लोके निन्दितस्ताडितोपि च ।
यः करोति क्षमां शश्वत् स हि भागवतोत्तमः ॥११॥

11. துஷ்டர்கள் துன்புறுத்தியபோதிலும், பலவிதமாய்க் கேலி செய்தபோதிலும் பொறுமையுடன் இருப்பவனே பாகவதோத்தமன்.

गुणानपि तथा दोषानन्येषां यो न पश्यति ।
सर्वभूतसमः शान्तः स हि भागवतोत्तमः ॥१२॥

12. பிறருடைய குணதோஷங்களைப் பாராமல் ஸர்வ பூதங்களிலும் ஸமபுத்தியுடன் இருப்பவனே பாகவதோத்தமன்.

यो न शुष्यति दुःखेन सुखेनापि न हृष्यति ।
कृष्णैकमात्रशरणः स हि भागवतोत्तमः ॥१३॥

13. துன்பம்வந்தால் கலங்காதவனும், இன்பம் வந்தால் மகிழ்ச்சி யடையாதவனுமாய் க்ருஷ்ணனையே சரணமடைந்திருப்பவனு மாய் எவன் இருப்பானோ அவனே பாகவதோத்தமன்.

कुर्वन् कर्मापि लौकीकं गार्हस्थ्यं धर्ममाचरन् ।
जितेन्द्रियो विरक्तो यो स हि भागवतोत्तमः ॥१४॥

14. லௌகீக கார்யங்களையும் செய்து கொண்டும், இல்லறம் நடத்திக்கொண்டும், ஆனால் புலன்களை அடக்கியவனாய் விரக்தி உடையவனாய் எவன் இருப்பானோ அவனே பாகவதோத்தமன்.

उदासीनो विरक्तश्च गृहेष्वतिथिवद्वसन् ।
कार्यं कर्म यः करोति स हि भागवतोत्तमः ॥१५॥

15. விருப்பு வெறுப்பற்று க்ருஹத்தில் அதிதிபோல் வஸித்துக் கொண்டு ஆனால் கடமையைச் செய்துகொண்டிருப்பவனே பாகவதோத்தமன்.

दारिद्र्यात्सुखमाप्नोति तथा दुःखं धनादपि ।
लोकधर्मविमुक्तो यः स हि भागवतोत्तमः ॥१६॥

16. ஏழ்மையில் ஸந்தோஷப்படுபவனும், பணத்தைக் கண்டால் துக்கப்படுபவனும், லோகதர்மத்தை அனுஸரிக்காதவனுமாய் இருப்பவன் பாகவதோத்தமன்.

आत्मानं श्रीवने चैवमात्मन्येव च श्रीवनम् ।
यः पश्यति महाबुद्धिः स हि भागवतोत्तमः ॥१७॥

17. ப்ருந்தாவனத்தில் தன்னையும், தன்னிடமே ப்ருந்தாவனத்தையும் பார்ப்பவன் எவனோ அந்த மஹாபுத்திமானே பாகவதோத்தமன்.

उपेक्ष्य पण्डितान्नित्यं बालकैः सह भाषते ।
सदा कृष्णकथां यो वै स हि भागवतोत्तमः ॥१८॥

18. பண்டிதர்களை விட்டுவிட்டு பாலகர்களுடனேயே எவன் பேசுகிறானோ எப்போதும் க்ருஷ்ணகதை சொல்வதில் குதூஹலமுடைய அவனே பாகவதோத்தமன்.

आनन्दबाष्पनयनः पुलकाञ्चितविग्रहः ।
यो नृत्यति मदोन्मत्तः स हि भागवतोत्तमः ॥१९॥

19. ஆனந்தக்கண்ணீர்விட்டு மெய்சிலிர்த்து மதோன்மத்தன் போல் நர்த்தனமாடுபவன் பாகவதோத்தமன்.

सर्वं सन्त्यज्य सततं सुतदारधनादिकम् ।
सत्सङ्गं यः कामयते स हि भागवतोत्तमः ॥२०॥

20. மனைவி, மக்கள்,பணம் எதையும்விட்டுவிட்டு ஸத்ஸங்கத்தை எவன் விரும்புகிறானோ அவனே பாகவதோத்தமன்.

मानापमानयोश्चैवं जयापजययोरपि ।
लीलां पश्यति यः शौरेः स हि भागवतोत्तमः ॥२१॥

21. மானம் வந்தாலும், அவமானம் வந்தாலும், வெற்றி கிடைத்தாலும், தோல்விகிடைத்தாலும் இதுவும் க்ருஷ்ணலீலை என்று பார்ப்பவன் பாகவதோத்தமன்.

प्रकृतिं पुरुषञ्चापि तथैव परमेश्वरम् ।
सर्वं जानाति यो व्यक्तं स हि भागवतोत्तमः ॥२२॥

22. ப்ரக்ருதி, புருஷன், ஈச்வரன் என்ற தத்வங்களை உள்ளது உள்ளபடி அறிந்தவனே பாகவதோத்தமன்.

सर्वज्ञोपि महाशान्तः सदा क्रीडति बालवत् ।
शुद्धान्तरङ्गो यो भक्तः स हि भागवतोत्तमः ॥२३॥

23. எல்லாம் அறிந்தவனாயினும் ஒன்றும் அறியாத குழந்தை போல் இருப்பவனும், சுத்தமான மனது உடையவனும் எவனோ அவனே பாகவதோத்தமன்.

सन्त्यज्य सर्वसङ्कल्पमीश्वराधीनचेष्टितः ।
यन्त्रवद्वर्तते यो वै स हि भागवतोत्तमः ॥२४॥

24. ஸர்வஸங்கல்பங்களையும் விட்டு எல்லாம் ஈசன் செயல் என்று யந்த்ரம் போல் எவன் ஈச்வராதீனமாய் இயங்குகிறானோ அவனே பாகவதோத்தமன்.

नामश्रवणमात्रेण यो वै भवति मूर्च्छितः ।
सर्वलक्षणसंयुक्तः स हि भागवतोत्तमः ॥२५॥

25. க்ருஷ்ணநாமத்தைக் கேட்டதுமே எவன் மூர்ச்சை யடைவனோ ஸர்வப்ரேம லக்ஷணமுமுள்ள இவனே பாகவதோத்தமன்.

सत्यं वदति यो नित्यं विपद्यपि महामतिः ।
आर्जवेनैव संयुक्तः स हि भागवतोत्तमः ॥२६॥

26. ஆபத்திலும் பொய் சொல்லாதவன், ஆர்ஜவத்துடன் கூடியவன், உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசாதவன் பாகவதோத்தமன்.

सन्त्यजेदात्मनिष्ठायै प्राणान् दारान् सुतानपि ।
दृढभक्त्यैव संसिद्धः स हि भागवतोत्तमः ॥२७॥

27. தன் ஆத்மநிஷ்டைக்காக தன் மனைவி, மக்கள், தன் உயிரைக்கூட விடக்கூடியவனும், திடபக்தி உள்ளவனுமான இவனே பாகவதோத்தமன்.

सर्वेषां कुरुते दास्यं नीचवद्विहिताञ्जलिः ।
पूजितो लभते लज्जां स हि भागवतोत्तमः ॥२८॥

28. எல்லோருக்கும் கைகுவித்து தொண்டுசெய்பவனும், ஆனால் தன்னை யாராவது ஸேவித்துவிட்டால் வெட்கப்படுப வனும் எவனோ அவனே பாகவதோத்தமன்.

गुणं पश्यन् परेषाञ्च दोषं पश्यंस्तथात्मनः ।
आत्मानं शोधयत्येवं स हि भागवतोत्तमः ॥२९॥

29. பிறருடைய குணத்தைப் பார்ப்பவனாய், தனது குற்றத்தைப் பார்ப்பவனாய், எவன் தன்னைத்தானே திருத்திக்கொள்கி றானோ அவனே பாகவதோத்தமன்.

निर्दोषोपि बहून् दोषानात्मन्यारोप्य भावयन् ।
लज्जामाप्नोति यो लोके स हि भागवतोत्तमः ॥३०॥

30. குற்றமில்லாதபோதிலும் பல குற்றங்களை தன்னிடம் ஆரோபித்துக்கொண்டு எவன் தன்னைக் குற்றவாளியாக நினைத்து வெட்கிப்போகிறானோ அவனே பாகவதோத்தமன்.

पालयन् समयाचारं पाषण्डं ,वर्जयन् सदा ।

धर्मसूक्ष्मार्थतत्त्वज्ञः स हि भागवतोत्तमः ॥३१॥

31. பாஷண்டமதத்தில் சேராமல் தன் ஸதாசாரத்தைப் பரிபாலித்துக்கொண்டு தர்மஸூக்ஷ்மமறிந்தவனாய் இருப்பவன் பாகவதோத்தமன்.

सामान्यधर्मं सन्त्यज्य वैष्णवं धर्ममाश्रितः ।
यो वर्तते गूढधर्मः स हि भागवतोत्तमः ॥३२॥

32. ஸாமான்யதர்மத்தைவிட்டு வைஷ்ணவதர்மத்தை ஆச்ரயித்து எவன் தனது தர்மத்தை ப்ரகடனம் செய்துகொள்ளாமல் இருக்கிறானோ அவனே பாகவதோத்தமன்.

ययाकया च वृत्त्यैव गार्हस्थ्यं धर्ममाचरन् ।
यः सदा भजते कृष्णं स हि भागवतोत्तमः ॥३३॥

33. ஏதோஒரு தொழிலால் இல்லறம் நடத்திக்கொண்டு ஸதாகாலமும் க்ருஷ்ணஸேவையிலேயே ஈடுபட்டிருப்பவன் பாகவதோத்தமன்.

क्वचिदुन्मत्तवन्नृत्यन् क्वचिद्बालकवद्रुदन् ।
दृश्यते लोकबाह्यो यः स हि भागवतोत्तमः ॥३४॥

34. உன்மத்தன்போல் குதித்துக்கொண்டும், குழந்தைபோல் பேசிக்கொண்டும், லோகவிலக்ஷணமாய் இருப்பவன் பாகவதோத்தமன்.

लोकवेदभयं त्यक्त्वा बाधितोपि च दुर्जनैः ।
निर्भयं रमते यो वै स हि भागवतोत्तमः ॥३५॥

35. லோகவேதபயமின்றி துஷ்டர்களால் துன்புறுத்தப்பட்ட போதிலும் நிர்பயமாய் ரமிக்கின்றவன் பாகவதோத்தமன்.

सर्वसद्गुणसंपन्नं जानीयाद्वैष्णवोत्तमम् ।
ब्रह्मणापि न शक्यन्ते वक्तुं तेषां महागुणाः ॥३६॥

*36.* பாகவதோத்தமனை ஸர்வஸத்குணஸம்பன்னன் என்று அறியவேண்டும். அவனது குணங்களை ப்ரம்மாவே வர்ணித்து மாளாது.

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये भागवतधर्मकाण्डे वैष्णवलक्षणं नाम द्वादशोऽध्यायः ॥१२॥*

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிமஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில்பாகவததர்மகாண்டத்தில் பன்னிரெண்டாவது அத்யாயம்.**

# अथ त्रयोदशोऽध्यायः

## பதிமூன்றாம் அத்யாயம்

### भागवता ऊचुः

हरेरर्चावतारस्य सौलभ्यरसवारिधेः ।
नित्योत्सवविधानञ्च वद सद्गुरुपुङ्गव ॥१॥

### பாகவதர்கள்

*1.* குருதேவரே! அர்ச்சாவதாரம் எடுத்து ஸர்வஸுலபமாய் எழுந்தருளியிருக்கும் பகவானுக்கு எப்படி நித்யோத்ஸவம் செய்யவேண்டும் என்று எங்களுக்குச் சொல்வீராக.

### श्रीसद्गुरुरुवाच

अवतारवरिष्ठोयं भगवान् भक्तवत्सलः ।
अर्चारूपेण सौलभ्यं प्रकाशयति माधवः ॥२॥

### ஸ்ரீஸத்குரு

*2.* அர்ச்சாவதாரமே சிறந்தது. இந்த அவதாரத்தில் பக்தவத்ஸலனான பகவான் மிகவும் சுகமாய் இருக்கிறான்.

नित्यं प्रातः समुत्थाय संस्मरेन्नन्दनन्दनम् ।
नामानि कीर्तयेत्तस्य सर्वमङ्गलदायकम् ॥३॥

*3.* தினமும் அதிகாலையில் எழுந்திருந்து நந்தநந்தனனை ஸ்மரிக்க வேண்டும். ஸர்வமங்களத்தையும் தரவல்லவன்

க்ருஷ்ணன். அவனது நாமங்களைக் கீர்த்தனம் செய்யவேண்டும்.

स्नानसन्ध्यादिकं कृत्वा कृष्णस्मरणपूर्वकम् ।
देवस्य सन्निधिं गच्छेद्वैष्णवः शुद्धमानसः ॥४॥

4. க்ருஷ்ணஸ்மரணம் செய்துகொண்டே ஸ்னானம் ஸந்த்யாவந்தனம் செய்துவிட்டு சுத்தமான மனதுடன் பகவானின் ஸன்னிதிக்கு வரவேண்டும்.

उत्तिष्ठोत्तिष्ठ गोविन्द प्रसीद व्रजनन्दन ।
उत्तिष्ठ राधिकाकान्त त्रैलोक्यं मङ्गलं कुरु ॥५॥

5. கோவிந்த! எழுந்தருளுக. கோகுலபால! எழுந்தருளுக. ப்ரஸன்னமாக இரு. ராதிகாகாந்த! எழுந்தருளுக. மூவலகுக்கும் மங்களம் செய்க.

इति प्रबोधनं कृत्वा पूजयेन्नन्दनन्दनम् ।
मुद्गान्नं लड्डुकं क्षीरं ताम्बूलञ्च समर्पयेत् ॥६॥

6. இவ்வாறு க்ருஷ்ணனை எழுப்பி பூஜை செய்ய வேண்டும். பொங்கல், இட்லி, பால், தாம்பூலம் ஸமர்ப்பிக்க வேண்டும்.

अथ पुष्पाणि रम्याणि तुलसीञ्च समाहरेत् ।
चन्दनं सलिलञ्चैव वस्त्राण्याभरणानि च ॥७॥

7. பிறகு ஸுகந்தமான புஷ்பமும் துளசியும் பறித்து வரவேண்டும். சந்தனம், வஸ்த்ரம், ஆபரணம், தண்ணீர்முதலிய பூஜா த்ரவ்யங்களைச் சேகரிக்க வேண்டும்.

कृष्णस्य कुर्याच्छृङ्गारं राधायाश्च यथाविधि ।
नवनीतं दधिक्षीरमर्पयेत्प्रेमपूर्वकम् ॥८॥

8. ராதைக்கும் கண்ணனுக்கும் முறைப்படி அலங்காரம்செய்து அன்புடன் வெண்ணெய், பால்,தயிர் ஸமர்ப்பிக்க வேண்டும்.

व्योममध्यङ्गते सूर्ये भोगकाले यथाविधि ।
सर्वोपचारपूजाञ्च कुर्याद्भागवतोत्तमः ॥९॥

9. உச்சிப்பொழுதானதும் போஜனவேளையில் பாகவதோத்தமன் விதிப்படி ஸர்வோபச்சாரபூஜை செய்ய வேண்டும்.

शङ्खपूजादिकं कृत्वा कल्पयेदासनं तथा ।
पाद्यार्घ्याचमनीयादि भक्तिपूर्वं समर्पयेत् ॥१०॥

10. சங்கபூஜை, கலஸபூஜை, கண்டாபூஜை முதலியன செய்து யோகபீடத்தைப் பூஜித்து, பிறகு அதில்பகவானை த்யானம், ஆவாஹனம், ஆஸனம், பாத்யம், அர்க்யம், அபிஷேகம், வஸ்த்ரம், ஆபரணம், சந்தனம், புஷ்பம் இவைகளை க்ரமப்படி ஸமர்ப்பிக்க வேண்டும்.

नानाविधानि भक्ष्याणि शाकपाकयुतानि च ।
शाल्यन्नं षड्रसोपेतमर्पयेत्प्रेमपूर्वकम् ॥११॥

11. பிறகு தூபம், தீபம், நைவேத்யம் ஸமர்ப்பிக்க வேண்டும். பலவிதமான பக்ஷணங்களும், கறிகாய்களும் அறுசுவையுடன் கூடிய அன்னமும் ப்ரேமையுடன் நிவேதனம் செய்ய வேண்டும்.

प्रदर्श्य मङ्गलं दीपमभ्यर्च्य कुसुमैरपि ।
कुर्याद्राजोपचारञ्च छत्रव्यजनचामरैः ॥१२॥

12, பிறகு தீபாராதனை காட்டி புஷ்பாஞ்ஜலி செய்து சத்ரம்,சாமரம் முதலிய ராஜோபசாரம் செய்ய வேண்டும்.

अथ पादोदकं पीत्वा गृहीत्वा तुलसीमपि ।
भुक्त्वा महाप्रसादञ्च कुर्यान्नामजपं ततः ॥१३॥

13. பிறகு பாததீர்த்தமும் துளசியும் எடுத்துக்கொண்டு மஹாப்ரஸாதத்தை சாப்பிட்டுவிட்டு பிற்பகலில் நாமஜபம் செய்ய வேண்டும்.

पठेच्च वैष्णवान् ग्रन्थान् प्रवदेद्भक्तिपूर्वकम् ।
व्यर्थं न नेयं तत्त्वज्ञैः क्षणार्धमपि वैष्णवैः ॥१४॥

14. வைஷ்ணவ க்ரந்தங்களை படித்துக்கொண்டோ, ப்ரவசனம்

செய்துகொண்டோ பொழுதுபோக்க வேண்டும். வைஷ்ணவர்கள் வீண்பொழுது போக்கக் கூடாது.

सायं सन्ध्यां ततः कृत्वा पठंस्तोत्राणि भक्तिमान् ।
कृष्णस्याराधनं कुर्वन् कुर्यादारार्तिकं तथा ॥१५॥

15. ஸாயங்காலத்தில் ஸந்த்யாவந்தனத்திற்குப்பிறகு ஸ்தோத்திர பாடங்கள் முடிந்து க்ருஷ்ணபகவானுக்கு ஆரதி செய்ய வேண்டும்.

भक्तैः सङ्गम्य चान्योन्यं प्रेमालिङ्गनपूर्वकम् ।
मृदङ्गवीणातालैश्च कुर्याच्छ्रीकृष्णकीर्तनम् ॥१६॥

16. பிறகு வீணை, ம்ருதங்கம்., தாளம்முதலிய வாத்யங்களுடன் பக்தர்களுடன் கூடி அன்யோன்யம் ரஸித்து க்ருஷ்ணகீர்த்தனம் செய்ய வேண்டும்.

कृष्णं सङ्कीर्तयन्नृत्यन् पुलकाञ्चितविग्रहः ।
आनन्दबाष्पसंयुक्तो वर्धयेद्भक्तिमात्मनः ॥१७॥

17. ஆனந்தக்கண்ணீர் விட்டு மெய் புளகித்து க்ருஷ்ண கீர்த்தனம் செய்து தனது பக்தியை வளர்த்துக் கொள்ள வேண்டும்.

अथ डोलोत्सवं कृत्वा शयनोत्सवमाचरेत् ।
कपाटबन्धनं कृत्वा प्रविशेदात्मनो गृहम् ॥१८॥

18. பிறகு டோலோத்ஸவமும், சயனோத்ஸவமும் செய்துவிட்டு கோவிலைப் பூட்டிக்கொண்டு தனது வீட்டிற்கு வரவேண்டும்.

तत्रापि ध्यानयोगेन हरेः सुरतकेलिकाम् ।
संस्मरन् संस्मरन्नित्यं परमानन्दमाप्नुयात् ॥१९॥

19. வீட்டுக்குவந்து க்ருஷ்ணலீலையையே த்யானம் செய்து கொண்டு இரவு வேளையைக் கழிக்க வேண்டும்.

एवं राधाविलोलस्य कृष्णस्य परमात्मनः ।

नित्योत्सवविधिः प्रोक्तः सर्वपापविनाशनः ॥२०॥

20. இவ்வாறு பரமாத்மாவான ராதாக்ருஷ்ணனின் நித்யோத்ஸவம் சொல்லப்பட்டது. இது ஸர்வபாபங்களையும் நாசம் செய்யக்கூடியது.

एवमर्चाविधानेन कृष्णसेवां प्रकुर्वताम् ।
योगक्षेमं वहत्येव भक्तानां भक्तवत्सलः ॥२१॥

21. இவ்வாறு பூஜாவிதானத்தினால் க்ருஷ்ணஸேவையே செய்பவர்களின் யோகக்ஷேமத்தை பகவானே நிர்வஹிப்பான்.

वैराग्येण गृहस्थोपि कुर्यादाराधनं हरेः ।
उञ्छवृत्त्यैव सन्तुष्टः सर्वसद्गुणसंयुतः ॥२२॥

22. ஸர்வஸத்குணங்களும் உடையவனாய், இல்லறத்தில் இருந்தபோதிலும் உஞ்சவ்ருத்தி எடுத்துக்கொண்டு, விரக்தனாய் பகவானை ஆராதிக்க வேண்டும்.

लौकिकं वैदिकं कर्म सन्त्यज्य प्रेमभक्तिमान् ।
परिचर्यां मुकुन्दस्य कुर्यान्नित्यं यथाविधि ॥२३॥

23. லௌகீகவைதீக கர்மங்களைவிட்டு, பக்தியுடன் தினமும் முறைப்படி க்ருஷ்ண ஸேவையே செய்யவேண்டும்.

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये भागवतधर्मकाण्डे नित्योत्सवविधानं नाम त्रयोदशोऽध्यायः ॥१३॥*

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமி மஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில் பாகவததர்மகாண்டத்தில் பதிமூன்றாம் அத்யாயம்.**

## अथ चतुर्दशोऽध्यायः

## பதினான்காம் அத்யாயம்

*भागवता ऊचुः*

नित्योत्सवस्त्वया प्रोक्तः कृपया सद्गुरूत्तम ।

नैमित्तिकोत्सवञ्चापि सङ्ग्रहेण वद प्रभो ॥१॥

**பாகவதர்கள்**

1. ஸத்குருநாத! க்ருபையால் உம்மால் நித்யோத்ஸவம் சொல்லப்பட்டது. பகவானின் நைமித்திகோத்ஸவங்களையும் சுருக்கமாகச் சொல்லவேண்டும்.

केषु केषु च पुण्येषु दिनेषु भगवान् हरिः ।
अर्चितव्यः कथं भक्त्या भक्तैर्वैष्णवसत्तमैः ॥२॥

2. பக்தர்களான வைஷ்ணவர்கள் எந்தெந்த புண்யகாலத்தில் பகவானை எப்படி எப்படி வழிபட வேண்டுமோ அதைச் சொல்லுவீராக.

**श्रीसद्गुरुरुवाच**

अर्चितव्यो हरिर्भक्तैः पञ्चस्वपि च पर्वसु ।
विशेषतोऽभिषेकाद्यैर्विधिभिः शास्त्रसंमतैः ॥३॥

**ஸ்ரீஸத்குரு**

3. பஞ்சபர்வகாலங்களிலும் பகவானுக்கு விசேஷமான அபிஷேக ஆராதனைகளை சாஸ்த்ரவிதிப்படி பக்தர்கள் செய்யவேண்டும்.

अमावास्या च सङ्क्रान्तिः श्रवणं पक्षयोर्द्वयोः ।
एकादशी च शास्त्रेषु पर्वाणः पञ्च कीर्तिताः ॥४॥

4. அமாவாஸை, ஸங்கராந்தி, இரண்டு பக்ஷங்களிலும் வரும் ஏகாதசிகள், ச்ரவணம் இவை பஞ்சபர்வங்களாகும்.

अरुणोदयकाले तु यद्यस्ति दशमीतिथिः ।
परेऽहनि व्रतं कुर्यात् त्रयोदश्यां च पारणम् ॥५॥

5. அருணோதயகாலத்தில் தசமிதிதி இருக்குமேயானால் அந்த ஏகாதசியை விட்டுவிட்டு மறுநாள் விரதமிருக்கவேண்டும். த்ரயோதசியில் பாரணை செய்வதால் தோஷமில்லை.

सङ्कल्प्य पूर्वरात्रौ तु पूजां कुर्यात् परेऽहनि ।
उपवासं तथा रात्रौ कुर्वन् जागरणं मुदा ॥६॥

6. தசமியன்று ராத்ரி ஸங்கல்பம் செய்துகொண்டு பூஜை செய்யவேண்டும். ஏகாதசியன்று உபவாஸமும், ராத்ரி ஜாகரணமும் (தூங்காமல் இருக்கும் வ்ரதம்) செய்யவேண்டும்.

कथयन् श्रीपतेर्लीलां शृण्वन् नामानि कीर्तयन् ।
नृत्यन् भागवतैः साकं निशां नीत्वा तु वैष्णवः ॥७॥
प्रातः स्नात्वा हरेः पूजां पुनः कृत्वा यथाविधि ।
महाप्रसादमश्नीयाद्धात्रीफलसमन्वितम् ॥८॥

7, 8. ஸ்ரீபதியின் லீலைகளை ப்ரவசனம் செய்துகொண்டும், கதாச்ரவணம் செய்துகொண்டும்; பக்தர்களுடன்கூடி நாம கீர்த்தனம் செய்துகொண்டும், இரவுப் பொழுதைக் கழித்து காலையில் ஸ்னானம் செய்து புனர்பூஜையைச் செய்து முடித்து, நெய் சக்கரையுடன் கூடிய மஹாப்ரஸாதத்தை சாப்பிட வேண்டும்.

पक्षयोरुभयोः कुर्यादेवमेकादशीव्रतम् ।
भार्यापुत्रादिभिः साकं बन्धुभिर्भक्तिपूर्वकम् ॥९॥

9. இவ்வாறு இரண்டு பக்ஷங்களிலுமே மனைவி மக்கள் பந்துபரிவாரங்களுடன் ஏகாதசிவ்ரதம் அனுஷ்டிக்க வேண்டும்.

द्वादश्याः प्रथमं पादं वदन्ति हरिवासरम् ।
अनतिक्रम्य तं भक्तैः कर्तव्यं नैव पारणम् ॥१०॥

10. துவாதசியில் முதல்பாதத்திற்கு ஹரிவாஸரம் என்று பெயர். அந்த முதல் பாதம் முடிந்தபிறகே பக்தர்கள் பாரணை செய்யவேண்டும்.

श्रवणद्वादशी मुख्या वैष्णवानामुपोषणे ।
उपवासद्वयं कुर्याद्यदि शक्तो दृढव्रतः ॥११॥

11. ச்ரவணத்வாதசியிலும் வைஷ்ணவன் உபவாஸம் இருக்க வேண்டும். ச்ரவணத்வாதசி மிகவும் முக்கியமானது. சக்தி யுள்ளவர்கள் இரண்டு உபவாஸமும் செய்யவேண்டும்.

अशक्तश्चेत्फलाहारमेकादश्यां विधाय च ।
श्रवणद्वादशीमेव नयेदनशनव्रती ॥१२॥

12. சக்தியில்லாதவன் ஏகாதசி விரதத்தை பலாஹாரத்துடன் செய்துவிட்டு ச்ரவணத்வாதசியில் சுத்தோபவாஸம் செய்யலாம்.

आषाढैकादशीं पुण्यां कार्तिकैकादशीं तथा ।
आश्रित्य श्रीपतेः कुर्याच्छयनं च प्रबोधनम् ॥१३॥

13. ஆஷாடஏகாதசியில் விஷ்ணுவிற்கு சயனமும், கார்த்திக ஏகாதசியில் உத்தானமும் செய்யவேண்டும்.

चातुर्मास्ये विशेषेण वैष्णवः पूजनं व्रतम् ।
कर्तव्यं हि यथाशक्ति भक्त्या विष्णोः परात्मनः ॥१४॥

14. இந்த சாதுர்மாஸ்யத்தில் வைஷ்ணவன் விரதம், பூஜை இவைகளை பரமாத்மாவான விஷ்ணுவிடம் பக்தியுடன் தனது சக்திக்குத் தக்கபடி அவசியம் செய்யவேண்டும்.

वैशाखे कार्तिके माघे प्रातःस्नानं समाचरेत् ।
विशेषतो विष्णुपूजां दानमुद्यापनं तथा ॥१५॥

15. வைசாகம், கார்த்திகம், மாகம் இந்த மாதங்களில் ப்ராதஸ்னானம் விசேஷம். தினமும் முடிவில் உத்யாபனமும் செய்யவேண்டும்.

कार्तिके मासि कृष्णस्य मन्दिरे दीपमालिकाम् ।
वैष्णवः श्रद्धया दद्यात् सायं सायं दिने दिने ॥१६॥

16. கார்த்திகமாதத்தில் விஷ்ணுஆலயத்தில் தினந்தோறும் ச்ரத்தா பக்தியுடன் தீபங்கள் ஏற்றவேண்டும்.

द्वादश्यां शुक्लपक्षे तु कार्तिके मासि वैष्णवः ।

तुलसीकृष्णयोः सायं विवाहोत्सवमाचरेत् ॥१७॥

17. கார்த்திகமாதத்து சுக்லபக்ஷ த்வாதசியன்று ஸாயங்காலம் துளஸிக்கும் க்ருஷ்ணனுக்கும் விவாஹம் நடத்தவேண்டும்.

चापमासे विशेषेण प्रातः सङ्कीर्त्य केशवम् ।
पूजयेच्छ्रद्धया भक्त्या मुद्गान्नञ्च न्यवेदयेत् ॥१८॥

18. தனுர்மாதத்தில் விடியற்காலை பஜனைசெய்து பகவானுக்கு பொங்கல் நைவேத்யம் செய்யவேண்டும்.

सन्निधाने मुकुन्दस्य कुर्यादध्ययनोत्सवम् ।
पठन्नित्यं क्रमेणैव वेदं सब्राह्मणं द्विजः ॥१९॥

19. பகவானின் ஸன்னிதியில் தனுர்மாதம்முழுவதும் வேத பாராயணம் நடத்தி அத்யயனோத்ஸவம் செய்யவேண்டும்.

चैत्रशुक्लनवम्यां तु श्रीरामजननोत्सवे ।
कृत्वा पूजां राघवस्य माध्याह्ने भक्तिपूर्वकम् ॥२०॥
कुर्यादुपोषणं भक्तो रात्रौ सङ्कीर्तनं तथा ।
शृणुयाद्रामजननं परेऽहनि च पारणम् ॥२१॥

20,21. சைத்ரமாதம் சுக்லபக்ஷநவமியன்று ஸ்ரீராமஜனனோத்ஸவம் நடத்தவேண்டும். அன்று உபவாஸமிருந்து ஸ்ரீராமபூஜை செய்து, இரவு ஸ்ரீராமஜனனகதாச்ரவணமும் நாமஸங்கீர்த்தனமும் செய்து மறுநாள் பாரணை செய்யவேண்டும்.

वैशाखे शुक्लपक्षे तु चतुर्दश्यां दिनक्षये ।
नृसिंह्मं पूजयेद्भक्त्या प्रह्लादचरितं पठेत् ॥२२॥
उपोष्य श्रद्धया भक्त्या रात्रौ कृत्वा च कीर्तनम् ।
प्रातः पूजां पुनः कृत्वा पारणञ्च समाचरेत् ॥२३॥

22,23. வைசாகமாதம் சுக்லபக்ஷம் சதுர்தசி மாலை ஸ்ரீந்ருஸிம்ஹபகவானை பூஜை செய்து ப்ரஹ்லாதசரிதம்

படிக்கவேண்டும். அன்றும் ச்ரத்தையுடன் உபவாஸமிருந்து இரவு நாமஸங்கீர்த்தனம் செய்து மறுநாள் பாரணை செய்ய வேண்டும்.

श्रावणे कृष्णपक्षे तु जन्माष्टम्यां तथा हरेः ।
अहन्युपोष्य रात्रौ च पूजयेद्बालमाधवम् ॥२४॥

24. ச்ராவணமாதத்து க்ருஷ்ணபக்ஷஅஷ்டமியில் பகலில் உபவாஸமிருந்து ராத்ரி பாலக்ருஷ்ணனை பூஜிக்கவேண்டும்.

भक्ष्याणि विविधान्येवं नवनीतं पयो दधि ।
फलानि जम्बूमुख्यानि गोपालाय न्यवेदयेत् ॥२५॥

25.விதவிதமான பக்ஷணங்களும் தயிர், பால், வெண்ணையும் பாலகோபாலனுக்கு நிவேதனம் செய்யவேண்டும்.

श्रीकृष्णजननं भक्त्या शृणुयात्कीर्तनं चरेत् ।
डोलोत्सवं तथा कुर्यान्निशि जागरणं तथा ॥२६॥

26. பக்தியுடன் ஸ்ரீக்ருஷ்ணஜனனகதையைக் கேட்க வேண்டும். பிறகு தொட்டிலில் குழந்தை கண்ணனைவிட்டுத் தாலாட்ட வேண்டும். இரவு கண் விழித்திருக்க வேண்டும்.

प्रातर्हरिद्राचूर्णेन दधिक्षीरघृतादिभिः ।
परस्परं विलिम्पन्तः सिञ्चन्तः सलिलेन च ॥२७॥
कुसुमानि किरन्तश्च वैष्णवाः प्रेमपूर्वकम् ।
गायन्तश्च नटन्तश्च कुर्युर्नन्दोत्सवं मुदा ॥२८॥

27,28. காலையில் தயிர், பால், மஞ்சள் நீர் இவைகளால் பரஸ்பரம் பூசிக்கொண்டு புஷ்பவர்ஷம் செய்துகொண்டு ப்ரேமையுடன் பக்தர்கள்கூடி கீர்த்தனமும் நர்த்தனமும் செய்து, நந்தோத்ஸவமும் கொண்டாடவேண்டும்.

ततः संपूज्य गोविन्दं भोजयित्वा द्विजानपि ।
पारणञ्च स्वयं कुर्याद्वैष्णवः कृष्णकिङ्करः ॥२९॥

29. பிறகு கோவிந்தனைப் பூஜித்து ப்ராம்மணபோஜனம் செய்வித்துவிட்டு, வைஷ்ணவன் பாரணை செய்ய வேண்டும்.

भक्तैः सङ्गम्य रसिकैर्नानाभावविचक्षणैः ।
पुष्पचन्दनताम्बूलतिलकादिपरिष्कृतैः ॥३०॥
वसन्ते तु विशेषेण कुर्याद्डोलोत्सवं प्रभोः ।
शृङ्गारकेलिकां भक्त्या कृष्णस्याभिनयेन्मुदा ॥३१॥

30,31. வஸந்தகாலத்தில் புஷ்பசந்தனதாம்பூலங்கள் தரித்து நாநாவித பாவங்களுடன்கூடிய ரஸிகர்களான பக்தர்களுடன் கூடி க்ருஷ்ணலீலைகளை அபிநயம் செய்து பகவானுக்கு டோலோத்ஸவமும் நடத்தவேண்டும்.

आषाढपूर्णिमायां वा द्वादश्यां वा तु वैष्णवः ।
कृष्णस्य श्रद्धया भक्त्या पवित्रोत्सवमाचरेत् ॥३२॥

32. ஆஷாடபௌர்ணமியிலோ, அல்லது துவாதசியிலோ வைஷ்ணவன் ச்ரத்தையுடன் பகவானுக்கு பவித்ரோத்ஸவம் நடத்தவேண்டும்.

अष्टोत्तरग्रन्थियुतं नाभिपर्यन्तलम्बिनम् ।
कौशेयसूत्ररचितं नानावर्णपरिष्कृतम् ॥३३॥
पवित्रं विधिवत्कृत्वा पूर्वेद्युरधिवासयेत् ।
परेऽहनि हरेः पूजां कृत्वा होमं यथाविधि ।
आचरेद्वैष्णवैः सूक्तैर्मूलमन्त्रेण चादरात् ॥३४॥
समर्पयेद्विष्णुकण्ठे पवित्रं भक्तिपूर्वकम् ।
नानावाद्यप्रघोषेण नामसङ्कीर्तनेन च ॥३५॥

33-35. நூற்றெட்டு முடிச்சுகள் உள்ளதும், நாபிவரை தொங்கக்கூடியதும், பல வர்ணங்களால் அழகியதுமான பட்டுநூலால் செய்யப்பட்ட பவித்ரமாலையைச் செய்து

முதல்நாளே அந்த மாலையை அதிவாஸம் செய்வித்து மறுநாள் ஜபஹோமங்களின் விதிப்படி செய்து மூலமந்த்ரத்தாலும் விஷ்ணுஸூக்தங்களாலும் ஹோமம் நடத்தி பிறகு பல மங்களவாத்ய கோஷத்துடனும் நாமஸங்கீர்த்தனத்துடனும் விஷ்ணுவின் கண்டத்தில் பவித்ர மாலையை சாத்தவேண்டும்.

पठेन्नामसहस्रञ्च वेदोपनिषदं तथा ।
सेतिहासं पुराणञ्च यथाशक्ति दिने दिने ॥३६॥
त्रिरात्रं पञ्चरात्रं वा कुर्याद्भक्त्या महोत्सवम् ।
उत्सवान्ते पवित्रं तद्वैष्णवाय समर्पयेत् ॥३७॥

*36-37.* தினந்தோறும் ஸஹஸ்ரநாமம், வேதஉபநிஷத் பாராயணம், இதிஹாஸபுராண பாராயணமும் யதாசக்தி நடத்தி, மூன்றுநாளோ ஐந்து நாளோ பவித்ரோத்ஸவம் நடத்தவேண்டும். உத்ஸவம் முடிந்து பவித்ரமாலையை வைஷ்ணவனுக்குத் தரவேண்டும்.

एवं श्रीवासुदेवस्य नानाविधमहोत्सवम् ।
कुर्वन् भक्त्या वैष्णवस्तु परमानन्दमाप्नुयात् ॥३८॥

38. இவ்வாறு ஸ்ரீவாஸுதேவனுக்கு பக்தன் பலவிதமான உத்ஸவங்களைச் செய்து பரமானந்தமடைவான்.

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये भागवतधर्मकाण्डे नैमित्तिकोत्सवविधानं नाम चतुर्दशोऽध्यायः ॥१४॥*

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமி மஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில் பாகவததர்மகாண்டத்தில் பதினான்காம் அத்யாயம்.**

## अथ पञ्चदशोऽध्यायः

## பதினைந்தாமத்யாயம்

### श्रीसद्गुरुरुवाच

शृणुध्वं साधवः सर्वे कृष्णस्य परमात्मनः ।

पूजाविधिं प्रवक्ष्यामि नारदादिप्रकीर्तितम् ।।१।।

ஸ்ரீஸத்குரு

1. ஸாதுக்கங்களே! கேளுங்கள். ஸ்ரீக்ருஷ்ணபகவானுடைய பூஜாவிதியைச் சொல்வேன். இது நாரதர்முதலிய முனிவர் களால் சொல்லப்பட்டது.

प्रातरुत्थाय विधिवत्स्नात्वा सङ्कीर्तयन् हरिम् ।
गोमलेनैव शुद्धेन मार्जयेत् कृष्णमन्दिरम् ।।२।।

2. காலையில் எழுந்திருந்து ஹரிகீர்த்தனம்செய்துகொண்டே ஸ்னானம் செய்துவிட்டு பசுஞ்சாணியால் கிருஷ்ணாலயத்தை மெழுகவேண்டும்.

लिखित्वा रङ्गवल्लीञ्च दीपं प्रज्वाल्य सुस्थिरम् ।
पूजोपकरणं सर्वं स्वयमेव समाहरेत् ।।३।।

3. கோலம்போட்டு, தீபமும் ஏற்றிவிட்டு, ஸகல பூஜோபகாரங் களையும் தானே ஸேகரிக்க வண்டும்.

पुष्पाणि तुलसीञ्चैव चन्दनं सलिलं फलम् ।
तथैव धूपदीपादीन् भक्तियुक्तः समाहरेत् ।।४।।

4. புஷ்பம், துளசி, சந்தனம், ஜலம், பலம், தூபம் முதலியவை களைத் தானே கொண்டு வந்து வைத்துக்கொள்ள வேண்டும்.

अथ बद्धासनो योगी नासाग्रन्यस्तवीक्षणः ।
आत्मानं भावयेद्भक्तो गोपीभावेन निर्मलः ।।५।।

5. பிறகு ஆஸனத்தில் உட்கார்ந்து கண்களை மூடி த்யானம் செய்யவேண்டும். தன்னை ஒரு கோபிகையாக பாவிக்க வேண்டும்.

प्रसन्नवदनां शुद्धां राधाप्रेमपरायणाम् ।
ललितादिसखीवर्गैर्लालितां प्रेमपूर्वकम् ।।६।।
बृन्दावनस्थितां भक्तां कृष्णकैङ्कर्यतत्पराम् ।

आत्मानं भावयेद्गोपीं सर्वसौन्दर्यसंयुताम् ॥७॥

6. 7 ப்ரஸன்னமான முகம் உடையவளும், சுத்தமானவளும், ராதையிடம் ப்ரேமை செய்வதே லக்ஷியமானவளும், லலிதா முதலிய ஸகிவர்கங்களால் ப்ரேமையுடன் லாலனை செய்யப் படுபவளாயும், ஸகலஅழகும் உடையவளான கோபிகையாக தன்னை பாவிக்க வேண்டும்

अथ बृन्दावनं ध्यायेन्नानावृक्षलताकुलम् ।
उत्फुल्लप्रसवामोदपूरितं चित्तरञ्जनम् ॥८॥

8. பிறகு பலவிதமான லதாவ்ருக்ஷங்களுடன் கூடியதும், புஷ்பங்களின் நறுணத்துடன் கூடியதும், மனதிற்கு ரஞ்சக மானதுமான ப்ருந்தாவனத்தை த்யானம் செய்ய வேண்டும்.

देवीं बृन्दां नमस्कृत्य प्रार्थयेद्भक्तिपूर्वकम् ।
श्रीं बृन्दायै नम इति पुष्पैरभ्यर्चयेत्तथा ॥९॥

9. ஸ்ரீம் ப்ருந்தாயை நம: என்று புஷ்பத்தினால் ப்ருந்தாதேவியை அர்ச்சித்து வணங்கி, அவளது அனுமதியைப் பெற்று பூஜையை ஆரம்பிக்க வேண்டும்.

नमस्तुभ्यं जगन्मातर्बृन्दे बृन्दावनेश्वरि ।
अनुज्ञां कृष्णपूजार्थं देहि मे भक्तवत्सले ॥१०॥

10. நமஸ்துப்யம் ஜகன்மாதர்ப்ருந்தே ப்ருந்தாவனேச்வரி அனுக்ஞாம் க்ருஷ்ணபூஜார்த்தம் தேஹி மே பக்தவத்ஸலே

कलशं गन्धपुष्पाद्यैरलङ्कृत्य यथाविधि ।
आवाहयेच्च यमुनां स्मरणात्पापनाशिनीम् ॥११॥

11. பிறகு கலஸத்தை சந்தனம் புஷ்பத்தால் அர்ச்சித்து, கலஸத்தில் ஸகலபாபங்களையும் நினைத்தமாத்திரத்தில் போக்கக்கூடிய யமுனையை ஆவாஹனம் செய்ய வேண்டும்.

यमुनायै नम इति पूजयेत् पावनं जलम् ।

पूजोपकरणं सर्वं तेन तीर्थेन पावयेत् ॥१२॥

*12. யமுனாயை நம: என்று கலஸத்தில் யமுனையைப் பூஜித்துவிட்டு, அந்த தீர்த்தத்தால் ஸகல பூஜோபகரணங்களையும் ப்ரோக்ஷிக்க வேண்டும்.*

अर्घ्यं पाद्यमाचमनीयं स्नानीयं सर्वसाधनम् ।
इति संस्थापयेत् पञ्च पात्राणि यथाक्रमम् ॥१३॥
तान्यम्बुभिः पूरयित्वा सुगन्धोशीरसंयुतैः ।
मूलमन्त्रं लिखित्वा च पूजयेत्तुलसीदलैः ॥१४॥

*13, 14. அர்க்யம், பாத்யம், ஆசமனீயம், ஸ்னானீயம், ஸர்வஸாதனம் என்று ஐந்துபாத்ரங்களை வைத்து முறைப்படி பாத்ரஸாதனம் செய்துகொண்டு, அதில் தீர்த்தம்விட்டு சந்தனம் புஷ்பங்களால் பூஜித்து, பிறகு மூலமந்த்ரத்தை ஜபித்துவிட்டு பூஜையை ஆரம்பிக்க வேண்டும்.*

यथाशक्ति जपेन्मन्त्रं भावयन् हृदये हरिम् ।
आवाहयेत्तथा बिम्बे हृदयस्थं जनार्दनम् ॥१५॥

*15. ஹ்ருதயகமலத்தில் பகவானை த்யானம் செய்துவிட்டு யதாசக்தி மூலமந்த்ரத்தை ஜபித்துவிட்டு, பிறகு ஹ்ருதயத்தில் உள்ள பகவானை பிம்பத்தில் ஆவாஹனம் செய்ய வேண்டும்.*

नवनीरदसङ्काशं द्विभुजं मुरलीधरम् ।
पद्मपत्रविशालाक्षं प्रसन्नवदनाम्बुजम् ॥१६॥
दिव्यपीताम्बरधरं सर्वाभरणभूषितम् ।
विशालवक्षसं कृष्णं भावयेन्नन्दनन्दनम् ॥१७॥

*16,17. புதிய மேகம்போல் நீலவர்ணமானவனும், தாமரைபோன்ற கண்கள் உடையவனும், ப்ரஸன்னமானமுகமுடையவனும், இரண்டுகைகள் உடையவனும், முரளீதரனும், திவ்யபீதாம்பர*

தாரியும், ஸர்வாபரணபூஷிதனும், விசால வக்ஷ:ஸ்தலமுடைய வனும், நந்தநந்தனனுமான க்ருஷ்ணனை த்யானம் செய்ய வேண்டும்.

भावयेन्नन्दबालस्य वामाङ्के वृषभानुजाम् ।
दरान्दोलितदीर्घाक्षीं दामोदरमनोहरीम् ॥१८॥
दिव्यसौन्दर्यसंयुक्तां दुकूलपरिशोभिताम् ।
नवचम्पकवर्णाञ्च नानाभूषणभूषिताम् ॥१९॥

18,19. க்ருஷ்ணனின் இடதுபுறத்தில் புதிய சம்பகபுஷ்பம்போல் அங்ககாந்தி உள்ளவளும், பட்டுப்புடவை உடுத்தியிருப்பவளும், பலவிதமான பூஷணங்கள் அணிந்தவளும், அலைகின்ற கருவிழிகள் உடையவளும், திவ்யமான அழகுடையவளும், வ்ருஷபானுகுமாரியுமான ஶ்ரீராதையை த்யானம் செய்ய வேண்டும்.

हृत्पद्मकर्णिकामध्ये भावयन् दिव्यदम्पती ।
अष्टौ सखीश्च कृष्णस्य चित्रां पद्माञ्च भावयेत् ॥२०॥

20. இவ்வாறு ஹ்ருதயகமலத்தில் திவ்யதம்பதிகளைப் பார்த்து அஷ்டதளங்களிலும் அஷ்டஸகிகளையும் த்யானிக்க வேண்டும்.

ललिताञ्च विशाखाञ्च चम्पकां चन्द्रलेखिकाम् ।
तुङ्गविद्यां रङ्गदेवीं चित्रां पद्माञ्च भावयेत् ॥२१॥
पद्मपीठस्य पत्रेषु पूजयेच्च यथाक्रमम् ।
मध्ये माधवमासीनं राधया सह पूजयेत् ॥२२॥

21,22. லலிதா, விசாகா, சம்பகவல்லி, சந்த்ரலேகா, துங்கவித்யா, ரங்கதேவி, சித்ரா, பத்மா என்ற எட்டு ஸகிகளையும் பத்மபீடத்தில் எட்டு தளங்களிலும் பூஜிக்க வேண்டும். நடுவில் ராதையுடன் வீற்றிருக்கும் மாதவனை பூஜிக்கவேண்டும்.

श्वेतच्छत्रेण संयुक्तं नानारत्नविराजितम् ।
पद्मपत्रसमाकीर्णमासनं स्वीकुरु प्रभो ॥२३॥

23. ச்வேதச்சத்ரேண நாநாரத்னவிராஜிதம்
பத்மபத்ரஸமாகீர்ணமாஸனம் ஸ்வீகுரு ப்ரபோ
ஸ்ரீராதாக்ருஷ்ணாய நம: ஆஸனம் ஸமர்ப்பயாமி

एलालवङ्गकर्पूरपद्मपत्रसुगन्धितम् ।
अर्घ्यं गृहाण गोविन्द गोपीजनमनोरम ॥२४॥

24. ஏலாலவங்ககர்பூரபத்மபத்ரஸுகந்திதம்
அர்க்யம் க்ருஹாண கோவிந்த கோபீஜனமனோரம
ஸ்ரீராதாக்ருஷ்ணாய நம: அர்க்யம் ஸமர்ப்பயாமி

दूर्वाङ्कुरैश्च संयुक्तं दुरितक्षयसाधनम् ।
पाद्यं ददामि ते कृष्ण प्रसीद पुरुषोत्तम ॥२५॥

25. தூர்வாங்குரைச்ச ஸம்யுக்தம் துரிதக்ஷயஸாதனம்
பாத்யம் ததாமி தே க்ருஷ்ண ப்ரஸீத புருஷோத்தம
ஸ்ரீராதாக்ருஷ்ணாய நம: பாத்யம் ஸமர்ப்பயாமி

इदमाचमनीयञ्च सुगन्धद्रव्यसंयुतम् ।
भक्तवत्सल गोविन्द स्वीकुरु श्यामसुन्दर ॥२६॥

26. இதமாசமனீயம் ச ஸுகந்தத்ரவ்யஸம்யுதம்
பக்தவத்ஸல கோவிந்த ஸ்வீகுரு ச்யாமஸுந்தர
ஸ்ரீராதாக்ருஷ்ணாய நம: ஆசமனீயம் ஸமர்ப்பயாமி.

यमुनापुण्यतीर्थेन तैलेन च सुगन्धिना ।
सुगन्धौषधिचूर्णैश्च स्नापयामि यथाविधि ॥२७॥

27.யமுனாபுண்யதீர்த்தேன தைலேன ச ஸுகந்தினா
ஸுகந்தௌஷதிசூர்ணைச்ச ஸ்னாபயாமி யதாவிதி
ஸ்ரீராதாக்ருஷ்ணாய நம: சுத்தோதகஸ்னானம் ஸமர்ப்பயாமி

पीताम्बरमिदं कृष्ण दिव्यक्षौमोत्तरीयकम् ।
कृपया करुणासिन्धो गृहाण श्यामसुन्दर ॥२८॥

28. பீதாம்பரமிதம் க்ருஷ்ண திவ்யக்ஷௌமோத்தரீயகம்
க்ருபயா கருணாஸிந்தோ க்ருஹாண ச்யாமஸுந்தர
ஸ்ரீராதாக்ருஷ்ணாய நம: வஸ்த்ரம் ஸமர்ப்பயாமி

सुवर्णभूषणान्येवं नवरत्नमयानि च ।
रमणीयानि गोविन्द राधया स्वीकुरु प्रभो ॥२९॥

29.ஸுவர்ணபூஷணாந்யேவம் நவரத்னமயானி ச
ரமணீயானி கோவிந்த ராதயா ஸ்வீகுரு ப்ரபோ
ஸ்ரீராதாக்ருஷ்ணாய நம: ஆபரணானி ஸமர்ப்பயாமி

कर्पूरकेसरयुतं वरार्हं हरिचन्दनम् ।
विलिम्पामि च गोविन्द विशाले तव वक्षसि ॥३०॥

30. கர்பூரகேஸரயுதம் வரார்ஹம் ஹரிசந்தனம்
விலிம்பாமி ச கோவிந்த விசாலே தவ வக்ஷஸி
ஸ்ரீராதாக்ருஷ்ணாய நம: திவ்யபரிமளகந்தானி தாரயாமி

मल्लीचम्पकमन्दारपुन्नागतुलसीदलैः ।
राधिकावल्लभ स्वामिन् श्रद्धया पूजयाम्यहम् ॥३१॥

31. மல்லீசம்பகமந்தாரபுன்னாகதுளஸீதளை:
ராதிகாவல்லப ஸ்வாமின் ச்ரத்தயா பூஜயாம்யஹம்
ஸ்ரீராதாக்ருஷ்ணாய நம: புஷ்பமாலாம் ஸமர்ப்பயாமி

गुग्गुल्वगरुधूपञ्च मनोरञ्जनसौरभम् ।
आघ्रापयामि गोविन्द वृषभानुसुताप्रिय ॥३२॥

32. குக்குல்வகருதூபஞ்ச மனோரஞ்ஜனஸௌரபம்
ஆக்ராபயாமி கோவிந்த வ்ருஷபானுஸுதாப்ரிய
ஸ்ரீராதாக்ருஷ்ணாய நம: தூபமாக்ராபயாமி

साज्यं त्रिवर्तिसंयुक्तं दीपज्योतिरिदं प्रभो ।
ददातु मङ्गलं तुभ्यं दामोदर दयानिधे ॥३३॥

*33. ஸாஜ்யம் த்ரிவர்த்திஸம்யுக்தம் தீபஜ்யோதிரிதம் ப்ரபோ*
*ததாது மங்களம் துப்யம் தாமோதர தயாநிதே*
*ஸ்ரீராதாக்ருஷ்ணாய நம:* தீபம் தர்சயாமி

निवेदयामि ते कृष्ण शाल्यन्नं पायसं तथा ।
नानाविधानि भक्ष्याणि फलानि च जनार्दन ॥३४॥

*34. நிவேதயாமி தே க்ருஷ்ண சால்யன்னம் பாயஸம் ததா*
*நாநாவிதானி பக்ஷ்யாணி பலானி ச ஜனார்தன*
*ஸ்ரீராதாக்ருஷ்ணாய நம:* நைவேத்யம் நிவேதயாமி

एलालवङ्गकर्पूरजातीपत्रसमन्वितम् ।
तरुणीजनमन्दार ताम्बूलं स्वीकुरु प्रभो ॥३५॥

*35. ஏலாலவங்ககர்பூரஜாதீபத்ரஸமந்விதம்*
*தருணீஜனமந்தார தாம்பூலம் ஸ்வீகுரு ப்ரபோ*
*ஸ்ரீராதாக்ருஷ்ணாய நம:* தாம்பூலம் ஸமர்ப்பயாமி

मङ्गलारार्तिकं कृष्ण कर्पूरज्योतिरच्युत ।
सन्दर्शयामि गोविन्द सर्वमङ्गलदायक ॥३६॥

*36. மங்களாரார்திகம் க்ருஷ்ண கர்பூரஜ்யோதிரச்யுத*
*ஸந்தர்சயாமி கோவிந்த ஸர்வமங்களதாயக*
*ஸ்ரீராதாக்ருஷ்ணாய நம:*
ஸமஸ்தாபராதநிவர்த்யர்த்தம் ஸர்வமங்களப்ராப்த்யர்த்தம் கர்பூரநீராஜனம் தர்சயாமி

धारयामि च रक्षां ते गोवर्धनधर प्रभो ।
कृत्वा पुष्पाञ्जलिञ्चापि पूजयामि यथाविधि ॥३७॥

*37. தாரயாமி ச ரக்ஷாம் தே கோவர்தனதர ப்ரபோ*
*க்ருத்வா புஷ்பாஞ்ஜலிஞ்சாபி பூஜயாமி யதாவிதி*

ஸ்ரீராதாக்ருஷ்ணாய நம: ரக்ஷாம் தாரயாமி,
புஷ்பாஞ்ஜலிம் ஸமர்பயாமி
பிறகு ப்ரதக்ஷிணம், நமஸ்காரம், ப்ரார்த்தனை செய்யவேண்டும்

प्रकृष्टपापनाशाय प्रकृष्टफलसिद्धये ।
प्रदक्षिणं करोमि त्वां प्रसीद पुरुषोत्तम ॥३८॥
नमस्ते गोकुलेशाय नमस्ते नन्दसूनवे ।
नमस्ते सर्वलोकेश नमस्ते राधिकाप्रिय ॥३९॥
नमस्ते पुण्डरीकाक्ष नमस्ते भक्तवत्सल ।
नमस्ते वासुदेवाय नमस्ते व्रजनन्दन ॥४०॥
प्रसीद गोपिकालोल गोवर्धनधराच्युत ।
प्रसीद भक्तमन्दार बृन्दावनचर प्रभो ॥४१॥
न कामये परं स्वर्गं साम्राज्यं संपदं हरे ।
दृढाभक्तिर्भवतु मे त्वयि जन्मान्तरेष्वपि ॥४२॥
अपराधान् क्षमस्वाद्य देहि मे सर्वमङ्गलम् ।
कटाक्षदीक्षया कृष्ण पाहि मां भक्तवत्सल ॥४३॥

*38-43. ப்ரக்ருஷ்டபாபநாசாய ப்ரக்ருஷ்டபலஸித்தயே.
ப்ரதக்ஷிணம் கரோமி த்வாம் ப்ரஸீத புருஷோத்தம..
நமஸ்தே கோகுலேசாய நமஸ்தே நந்தஸூனவே
நமஸ்தே ஸர்வலோகேச நமஸ்தே ராதிகாப்ரிய
நமஸ்தே புண்டரீகாக்ஷ நமஸ்தே பக்தவத்ஸல.
நமஸ்தே வாஸுதேவாய நமஸ்தே வ்ரஜநந்தன
ப்ரஸீத கோபிகாலோல கோவர்தனதராச்யுத
ப்ரஸீத பக்தமந்தார ப்ருந்தாவனசர ப்ரபோ
ந காமயே பரம் ஸ்வர்கம் ஸாம்ராஜ்யம் ஸம்பதம் ஹரே
த்ருடாபக்திர்பவது மே த்வயி ஜன்மாந்தரேஷ்வபி
அபராதான் க்ஷமஸ்வாத்ய தேஹி மே ஸர்வமங்களம்*

*கடாக்ஷதீக்ஷயா க்ருஷ்ண பாஹி மாம் பக்தவத்ஸல*

इति संप्रार्थयन् भक्त्या प्रणमेद्दण्डवद्भुवि ।
अथ सङ्कीर्तयेत्कृष्णं तन्त्रीलयसमन्वितः ॥४४॥

44. இவ்வாறு ப்ரார்த்தித்து பக்தியுடன் பூமியில் விழுந்து ஸேவிக்கவேண்டும். பிறகு ச்ருதி தாளத்துடன் க்ருஷ்ண ஸங்கீர்த்தனம் செய்யவேண்டும்.

भक्तैः सङ्गम्य चान्योन्यं नृत्यन् गायन् हरिं सदा ।
सर्वपापविशुद्धात्मा प्रेमभक्तिमवाप्नुयात् ॥४५॥

45. பக்தர்களுடன்கூடி ஹரியை கானமும் நாட்யமும் செய்வதால் ஸர்வபாபமும் நீங்கி ப்ரேமபக்தியை அடைவான்.

अथ पादोदकं पीत्वा तुलसीं कर्णसंपुटे ।
धृत्वा महाप्रसादञ्च भक्षयेत्प्रेमपूर्वकम् ॥४६॥

46. பிறகு பாததீர்த்தம் சாப்பிட்டு துளஸியை காதில் தரித்து மஹாப்ரஸாதத்தை ப்ரேமையுடன் சாப்பிடவேண்டும்.

एवं पूजाविधिः प्रोक्तो निगमागमसंमतः ।
पूजयेद्गोकुलाधीशं सर्वकामितदायकम् ॥४७॥

47. இவ்வாறு வேதத்திலும் ஆகமத்திலும் சொல்லப்பட்ட பூஜாவிதி சொல்லப்பட்டது. எல்லா பலனையும் தரவல்ல கோகுலாதீசனை இவ்வாறு பூஜிக்கவேண்டும்.

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये भागवतधर्मकाण्डे पूजाविधिर्नाम पञ्चदशोऽध्यायः ॥१५॥*

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமி மஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில் பாகவததர்மகாண்டத்தில் பதினைந்தாம் அத்யாயம்.**

# अथ षोडशोऽध्यायः

## பதினாறாம் அத்யாயம்

### श्रीसद्गुरुरुवाच

नामकीर्तनमाहात्म्यं कृष्णस्य जगतीपतेः ।
आलोड्य सर्वशास्त्राणि वक्ष्ये शृणुत साधवः ॥१॥

ஸ்ரீஸத்குரு

1. ஸர்வசாஸ்த்ரங்களையும் அலசிப் பார்த்து ஜகன்னாதனான க்ருஷ்ணனின் நாமமாஹாத்மியத்தைச் சொல்வேன். ஸாதுக்களே! இதைக் கேளுங்கள்.

शिपिविष्टस्य नामैव सर्वमङ्गलसाधनम् ।
सर्वधर्मोत्तमञ्चेति प्रशंसति पराश्रुतिः ॥२॥

2. விஷ்ணுவின் நாமகீர்த்தனமே ஸர்வதர்மங்களிலும் சிறந்தது என்று வேதம் புகழ்கிறது.

अपरोक्षानुभूतिं यः प्राप्तुमिच्छति पण्डितः ।
नामसङ्कीर्तनं कुर्यादिति गायति च श्रुतिः ॥३॥

3. அபரோக்ஷஞானத்தை அடைய விரும்புபவன் விஷ்ணு நாமத்தைக் கீர்த்தனம் செய்யவேண்டும் என்று வேதம் பாடுகிறது.

सर्वशास्त्रेषु मुनिभिर्नामसङ्कीर्तनं हरेः ।
सर्वेषामपि पापानां प्रायश्चित्तमितीरितम् ॥४॥

4. ஸர்வபாபங்களுக்கும் ஹரிநாமகீர்த்தனமே பரிஹாரம் என்று ஸகல சாஸ்த்ரங்களும் கூறுகின்றன.

कालक्षेपो न कर्तव्यः पठन् शास्त्राणि सर्वदा ।
वेदवेद्यस्य कृष्णस्य कर्तव्यं नामकीर्तनम् ॥५॥

5. வீணாக சாஸ்த்ரங்களைப் படித்துக்கொண்டு காலதாமதம்

செய்யவேண்டாம். வேதங்களால் பாடப்படும் க்ருஷ்ணனின் நாமகீர்த்தனமே செய்யவேண்டியது.

वेदोक्तं निखिलं कर्तुं शक्यते न यथाविधि ।
तस्मात् कृष्णस्य नामानि कीर्तयेत् सततं द्विजः ॥६॥

6. விதிப்படி வேதத்தில் சொன்ன தர்மங்களை ப்ராஹ்மணன் அனுஷ்டிக்க முடியவில்லை. எனவே க்ருஷ்ணநாமகீர்த்தனமே செய்யவேண்டும்.

मन्त्रलोपादिदोषेण युक्तं वैदिककर्म च ।
साङ्गं संपूर्णतां याति नामसङ्कीर्तनाद्धरेः ॥७॥

7. வைதீககர்மங்களில் மந்த்ரலோபம்முதலிய தோஷங்கள் இருந்தாலும் ஹரிநாம கீர்த்தனத்தாலேயே தோஷம் நீங்கி, அந்த கர்மம் பூர்ணமாக அனுஷ்டித்த பலனைத் தரும்.

अलं व्रतैरलं तीर्थैरलं योगैरलं मखैः ।
एक एव परो धर्मो नामसङ्कीर्तनं हरेः ॥८॥

8. வ்ரதம் போதும். தீர்த்தயாத்ரை போதும். யோகம் போதும். யாகமும் போதும். ஹரிநாமகீர்த்தனமே சிறந்த தர்மம்.

नामकीर्तनमात्रेण कृष्णे साक्षादुपस्थिते ।
वृथा कुर्वन्ति यतयः कायक्लेशं व्रतादिभिः ॥९॥

9. நாமகீர்த்தனத்தினால் க்ருஷ்ணன் ப்ரத்யக்ஷமாகும்போது யதிகளாகி வீணாய் காயக்லேசம் பண்ணிக்கொண்டிருக்க வேண்டியதில்லை.

महावाक्यजपेनालमलं वेदान्तचर्चया ।
जपतां हरिनामानि मुक्तिः करतले स्थिता ॥१०॥

10. மஹாவாக்ய ஜபம் போதும். வேதாந்தசர்ச்சையும் வீணே. ஹரிநாம ஜபத்தினாலேயே முக்தி கையில் கிடைத்துவிடும்.

ब्राह्मणा यज्ञलोपेन भवन्ति ब्रह्मराक्षसाः ।
तस्मादहर्निशं कुर्यान्नामसङ्कीर्तनं हरेः ॥११॥

11. யாகத்தில் தவறுதல் ஏற்பட்டால் ப்ராஹ்மணர்கள் ப்ரம்ம ராக்ஷஸர்கள் ஆவார்கள். எனவே இரவுபகலாக ஹரிநாம கீர்த்தனமே செய்யவேண்டும்.

ब्राह्मणाः क्षत्रिया वैश्याः शूद्राश्च श्वपचास्तथा ।
सर्वेऽधिकारिणो विष्णोः कीर्तनस्य जगद्गुरोः ॥१२॥

12. ப்ராஹ்மணர்கள், க்ஷத்ரியர்கள், வைசியர்கள், சூத்ரர்கள், சண்டாளர்கள் யாவருக்குமே ஹரிநாமகீர்த்தனம் செய்ய அதிகாரம் உண்டு.

वेदवेदान्ततत्त्वज्ञः कर्मानुष्ठानतत्परः ।
न स्मरेद्यदि गोविन्दं तस्य सर्वञ्च निष्फलम् ॥१३॥

13. வேதம், வேதாந்தம், தத்வம் அறிந்தவனாயினும் கர்மானுஷ்டானம் தவறாதவனாயினும் கோவிந்தனை ஸ்மரிக்காவிடில் அவன் செய்தது எல்லாம் வீணே.

देवदेवस्य कृष्णस्य नामसङ्कीर्तनं विना ।
न ज्ञानं न च वैराग्यं न भक्तिर्न परं पदम् ॥१४॥

14. தேவதேவனான க்ருஷ்ணனின் நாமகீர்த்தனம் செய்யாவிடில் அவனுக்கு ஞானமுமில்லை, பக்தியுமில்லை, வைராக்யமுமில்லை, மோக்ஷமும் கிடைக்காது.

प्राप्तुमिच्छति यो भक्तिं परमप्रेमरूपिणीम् ।
नामसङ्कीर्तनं कुर्याल्लज्जां सन्त्यज्य सुस्वरम् ॥१५॥

15. ப்ரேமபக்தியை அடைய விரும்புகிறவன் லஜ்ஜையைவிட்டு ஸுஸ்வரமாய் நாமஸங்கீர்த்தனம் செய்யவேண்டும்.

अजामिलश्च गणिका क्षत्रबन्धुश्च पापकृत् ।
नामकीर्तनमात्रेण प्रापुस्तत्परमं पदम् ॥१६॥

16. அஜாமிளன், கணிகா, க்ஷத்ரபந்துமுதலிய பாபிகள்கூட நாமகீர்த்தன மாத்ரத்தால் பரமபதம் அடைந்துவிட்டனர்.

उच्चैः सङ्कीर्तयेत्कृष्णमन्योन्यं वैष्णवैः सह ।
शृण्वतामपि मर्त्यानां पापराशिर्विशिष्यते ॥१७॥

17. வைஷ்ணவர்களுடன்கூடி உரத்த குரலில் க்ருஷ்ணநாம கீர்த்தனம் செய்ய வேண்டும். இதைக் கேட்பவர்களுக்கும் பாபங்கள் நாசமடையும்.

हरे कृष्णेति कृष्णेति यत्र सङ्कीर्तनध्वनिः ।
नैव तिष्ठति तत्रायं पापाचारपरः कलिः ॥१८॥

18. 'ஹரே க்ருஷ்ண க்ருஷ்ண' என்ற த்வனி கேட்கும் இடத்தில் பாபத்திற்கு ஹேதுவான கலி நிற்கமாட்டான்.

अस्मिन् घोरे कलौ लोके धर्मा नष्टाः सनातनाः ।
केवलं शिष्यते विष्णोर्नामस्मरणमेव च ॥१९॥

19. இந்த கோரமான கலியுகத்தில் எல்லா தர்மங்களும் அழிந்து போய்விட்டன. நாமஸ்மரணம் ஒன்றே மிஞ்சியிருக்கிறது.

ब्रह्मघ्नो वा सुरापो वा परदाररतोपि वा ।
क्षिप्रं भवति धर्मात्मा श्रीपतेर्नामकीर्तनात् ॥२०॥

20. ப்ரம்மஹத்தி, ஸுராபானம், பரதாரஸங்கமம் முதலிய மஹாபாபங்களைச் செய்தவன்கூட ஸ்ரீபதியின் நாமகீர்த்தனத்தால் இதே பிறவியில் தர்மாத்மாவாக ஆவான்.

दुराचारोपि यो भक्तः कृष्णनाम जपेत्सकृत् ।
अचिरेणैव कालेन महाभागवतो भवेत् ॥२१॥

21. துராசாரமுடையவனாயினும் க்ருஷ்ணநாமஜபம் செய்தவன் இதே ஜன்மத்தில் மஹாபாகவதோத்தமனாகி விடுவான்.

न योगेन न सांख्येन मनः शुद्धिर्हि विद्यते ।
हरिकीर्तनमात्रेण शुद्धात्मा भवति ध्रुवम् ॥२२॥

22. யோகத்தினாலும் ஸன்யாசத்தினாலும்கூட அவ்வளவு சித்தசுத்தி வந்துவிடாது. ஆனால் ஹரிநாமகீர்த்தனமாத்ரத்தினால் சித்தசுத்தி உண்டாகும் நிச்சயம்.

यः स्मरेत् सततं विष्णोर्नाम सर्वशुभप्रदम् ।
प्रणमन्ति च तं देवाः सिद्धविद्याधरैः सह ॥२३॥

23. எப்போதும் எவன் விஷ்ணுவின் நாமஸ்மரணத்தைச் செய்கிறானோ அவனைக் கண்டதுமே தேவர்களும் ஸித்தர்களும் வித்யாதரர்களும் வணங்குகின்றனர்.

महापातकयुक्तोपि यः स्मरेत्पुरुषोत्तमम् ।
स्वप्नेपि स महाभागो नरकं नैव गच्छति ॥२४॥

24. மஹாபாதகம் செய்தவனாயினும் புருஷோத்தமனை ஸ்மரிப்பவன் ஸ்வப்னத்தில்கூட நரகம் போகமாட்டான்.

म्लेच्छः किरातश्चण्डालो यवनः पुल्कसोपि वा ।
कीर्तयेद्यदि गोविन्दं दण्डवत्प्रणमेच्च तम् ॥२५॥

25. மிலேச்சனாயினும், கிராதனாயினும், புல்கஸனாயினும், யவனனாயினும் ஹரிநாமம் சொல்லிவிட்டால் அவனைக்கூட வணங்கவேண்டும்.

महापुण्यवशादेव गोकुलेन्द्रस्य कीर्तने ।
रतिः सञ्जायते नृणां संसारे भ्रमतामिह ॥२६॥

26. மஹாபுண்யபாக்யத்தினாலேயே கோவிந்தநாமகீர்த்தனத்தில் ஸம்ஸாரிகளுக்கும் ருசி உண்டாகிறது.

महापापवशादेव नृणां गोविन्दकीर्तने ।
उपेक्षा जायते नूनं नरकायैव गच्छताम् ॥२७॥

27. மஹாபாபவசத்தினாலேயே நரகத்திற்கே பயணமாகியுள்ள மக்களுக்கு கோவிந்தகீர்த்தனத்தில் வெறுப்பு உண்டாகிறது.

येन केन प्रकारेण भक्तं रक्षितुमिच्छति ।
तस्मात्प्रतीक्षते कृष्णः केवलं नामकीर्तनम् ॥२८॥

*28.எப்படியாவது க்ருஷ்ணன் பக்தர்களைக் காப்பாற்ற நினைக்கிறான். எனவே நாமகீர்த்தனத்தையாவது எதிர்பார்க்கிறான்.*

अश्रद्धयापि यः कृष्णं कीर्तयेद्धेलनादपि ।
अव्याजकरुणासिन्धोः कृपा तस्मिन् प्रवर्धते ॥२९॥

*29. ச்ரத்தையாகவோ, ஹேளனமாகவோ நாமத்தைச் சொல்லிவிட்டால் அந்த பக்தனிடம் பகவானின் க்ருபை பெருகுகிறது.*

नामकीर्तनेमाहात्म्यमर्थवादमिति स्मरन् ।
प्राप्नोति नरकं घोरमाशशाङ्कदिवाकरम् ॥३०॥

*30. நாமகீர்த்தன மாஹாத்மியத்தை அர்த்தவாதம் என்று நினைப்பவன் நரகத்தை அடைவான். ஸூர்யசந்த்ரர்கள் உள்ளவரை நரகத்திலிருந்து மீளமாட்டான்.*

किमत्र चित्रं कृष्णस्य निर्व्याजकरुणानिधेः ।
नामकीर्तनमात्रेण पापिनामपि रक्षणे ॥३१॥

*31. அவ்யாஜக்ருபாளுவான க்ருஷ்ணபரமாத்மாவால் நாமகீர்த்தனமாத்ரத்தால் பாபிகளைக் காப்பாற்ற முடியாதா என்ன?*

श्रुतिस्मृतिपुराणेषु सर्वत्र जगतीपतेः ।
नामकीर्तनमाहात्म्यं प्रोक्तं कण्ठरवेण हि ॥३२॥

*32. ச்ருதி, ஸ்ம்ருதிபுராணங்களில் ஜகன்னாதனின் நாமமாஹாத்மியம் விஸ்தாரமாகச் சொல்லப்படுகிறது.*

लभन्ते नैव विश्वासं वासुदेवस्य कीर्तने ।
पठन्तोपि च शास्त्राणि भाग्यहीना नराः कलौ ॥३३॥

33. நாமகீர்த்தனமஹிமை சாஸ்த்ரங்களில் வெளிப்படையாகச் சொல்லப்பட்டிருந்தும் இந்த கலியில் அந்த சாஸ்த்ரங்களைப் படித்தவர்களும் கூட நம்புவதில்லை.

इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये भागवतधर्मकाण्डे नामकीर्तनमाहात्म्यं नाम षोडशोऽध्यायः ॥१६॥

இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமி மஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில் பாகவததர்ம காண்டத்தில் பதினாறாம் அத்யாயம்.

# अथ सप्तदशोऽध्यायः

# பதினேழாம் அத்யாயம்

## श्रीसद्गुरुरुवाच

अजामिलस्य चरितं नाममाहात्म्यतत्परम् ।
शृणुध्वं साधवः सर्वे कलिकल्मषनाशनम् ॥१॥

1. ஸாதுக்களே! கலிகல்மஷத்தைப் போக்கக்கூடியதும் ஹரிநாம மாஹாத்மியத்தை சொல்லக்கூடியதுமான அஜாமிள சரித்ரத்தைச் சொல்லுவேன் கேளுங்கள்!

आसीदजामिलो नाम ब्राह्मणो वेदपारगः ।
पितृभक्तो मातृभक्तः सत्यधर्मपरायणः ॥२॥

2. பித்ருபக்தியும் மாத்ருபக்தியும் ஸத்யம், தர்மம்தவறாதவனாயும், வேதம் அறிந்தவனாயும் அஜாமிளன் என்ற ஒரு ப்ராம்மணன் இருந்தான்.

सवर्णामनुकूलाञ्च पत्नीं प्राप्य महामनाः ।
गार्हस्थ्यं धर्ममाश्रित्य सर्वमान्यो बभूव सः ॥३॥

3. தனது குலத்திற்கேற்ற அனுகூலமான பத்னியை அடைந்து இல்லறம் நடத்திக் கொண்டும் யாவருக்கும் கண்யமானவனாய் இருந்து வந்தான்.

यदृच्छया दुष्टसङ्गं प्राप्य वेश्या गृहङ्गतः ।

तया रेमे सदा तत्र निवसन् कामलालसः ॥४॥

4. எதிர்பாராமல் துஷ்டஸங்கம் ப்ராப்தமாயிற்று. எனவே வேசிவீட்டுக்குப் போய் காமுகனாய் வேசியுடன் ரமித்துக் கொண்டு அங்கேயே வஸிக்கலானான்.

मातरं पितरं पत्नीं विसृज्य सततं खलः ।
कुलाचारमतिक्रम्य चक्रे पापानि दुर्मतिः ॥५॥

5. துஷ்டனாகிவிட்ட அவன் பெற்றோர்களையும் மனைவியையும்கூட கைவிட்டுவிட்டான். ஸகலபாபங்களையும் செய்யலானான். குலதர்மத்தை விட்டுவிட்டான்.

चकार वेश्यया सार्धं मधुमांसादिभक्षणम् ।
धनार्जनं चकारायं चौर्यद्यूतादिकर्मभिः ॥६॥

6. வேசியுடன்கூடி மது மாம்ஸம் சாப்பிடலானான். சூதாட்டம், கொள்ளையடிப்பது முதலிய பாபகாரியங்களில் பணம் சேகரித்தான்.

तस्यामेव स वेश्यायां दशपुत्रानजीजनत् ।
तान् लालयन् पालयंश्च कालक्षेपञ्चकार सः ॥७॥

7. அந்த வேசியிடம் பத்து பிள்ளைகளைப் பெற்றான். அந்த குழந்தைகளைக்கொஞ்சி குலாவிக்கொண்டே பொழுது போக்கினான்.

एवं कृतदुराचारो वार्धक्यं प्राप स क्रमात् ।
आसन्नमरणः शिश्ये कफसंरुद्धनाडिकः ॥८॥

8. இவ்வாறு பாபம் செய்துகொண்டே மூப்பு அடைந்து விட்டான். கண்டத்தில் கபம் கட்டிக்கொண்டு இழுத்துக் கொண்டே மரணப்படுக்கையில் இருந்தான்.

तत्यजुर्बान्धवाः सर्वे तं दुराचारतत्परम् ।
वेश्या च सा तदा तस्मिन्नुपेक्षां प्राप दुर्मतिः ॥९॥

9. துராசாரமுள்ள அவனை எல்ல பந்துக்களும் கைவிட்டு விட்டனர். அந்த வேசியும் துர்புத்தியுடையவள். அஜாமிள னிடம் அலக்ஷியம் அடைந்தாள்.

एतस्मिन्नन्तरे दूतान् कृतान्तस्य महात्मनः ।
पाशहस्तान् ददर्शायमात्मानं नेतुमागतान् ॥१०॥

10. இந்தஸமயம் தன்னைக் கொண்டுபோக பாசத்துடன் வந்துள்ள யமதூதர்களை ப்ரத்யக்ஷமாகக் கண்டான்.

भीतभीतो महापापी पुत्रमेव स्मरंस्तदा ।
नारायणेति चुक्रोश पूर्वपुण्यप्रचोदितः ॥११॥

11. நடுநடுங்கிய மஹாபாபி பூர்வபுண்யத்தினால் புத்ரனையே நினைத்துக் கொண்டு ' நாராயண ' என்று கூவினான்.

आविर्भूय तदा तत्र चत्वारो विष्णुपार्षदाः ।
निरुद्ध्य यमदूतांस्तान् तस्मै चाप्यभयं ददौ ॥१२॥

12. அப்போதே அங்கே விஷ்ணுதூதர்கள் ஆவிர்பவித்து யமதூதர்களைத் தடுத்து அஜாமிளனுக்கு அபயம் கொடுத்தனர்.

आश्चर्यचकिताः सद्यो विष्णुपार्षददर्शनात् ।
के यूयमिति पप्रच्छुर्वैष्णवान् कालकिङ्कराः ॥१३॥

13. விஷ்ணுதூதர்களைக் கண்டு ஆச்சர்யமடைந்த யமதூதர்கள், நீங்கள் யார் என்று கேட்டனர்.

तदा भगवतो दूता यमदूतान् विलोक्य तान् ।
प्रसन्नहृदयाः प्रोचुर्धर्मं भागवतं शुभम् ॥१४॥

14. அப்போது விஷ்ணுதூதர்கள் காலதூதர்களைப் பார்த்து ப்ரஸன்னமான மனதுள்ளவர்களாய் பாகவததர்மத்தைச் சொன்னார்கள்.

विष्णुदूता ऊचुः

वयं तु देवदेवस्य श्रीपतेश्चक्रधारिणः ।

किङ्कराः सञ्चरामोऽत्र सतां संरक्षणाय हि ॥१५॥

**விஷ்ணுதூதர்கள்**

15. நாங்கள் தேவதேவனான சக்ரபாணியின் தூதர்கள். வைஷ்ண வர்களை ரக்ஷிக்கவேண்டி இவ்வுலகில் ஸஞ்சரிக்கிறோம்.

ब्रह्महत्यादिपापानामाकरोपि च मानवः ।
कीर्तयन्नाम कृष्णस्य सर्वपापात्प्रमुच्यते ॥१६॥

16. ப்ரம்மஹத்திமுதலிய பாபங்களை அளவுகடந்து செய்த போதிலும் மனிதன் க்ருஷ்ணநாமகீர்த்தனம் செய்த மாத்திரத்தில் பாபங்களிலிருந்து விடுபடுவான்.

न देशकालनियमो नोपदेशविधिस्तथा ।
केवलं कीर्तयन् कृष्णं मुक्तपापो भवेन्नु ॥१७॥

17. க்ருஷ்ணநாமகீர்த்தனத்திற்கு தேச கால நியமங்களில்லை. உபதேசமும் தேவையில்லை. க்ருஷ்ண என்று சொன்னதுமே பாபங்களிலிருந்து விடுபடுவான்.

हरिकीर्तनमात्रेण यमो जीवमुपेक्षते ।
अपेक्षते सद्य एव तं जीवं हरिरच्युतः ॥१८॥

18. ஹரி என்று சொன்னதுமே ஜீவனை யமன் விட்டுவிடுவான். அந்த ஜீவனை பகவான் அழைக்கிறான்.

व्याजेनापि कृतं विष्णोः कीर्तनं पापनाशनम् ।
नापेक्षा चिन्तनस्यापि श्रीपतेः परमात्मनः ॥१९॥

19. ஏதாவதொரு வ்யாஜத்தினால் விஷ்ணுவின் நாமகீர்த்தனம் செய்தாலே பாபம் போகும்.

हेलया लीलया वापि श्रद्धयाऽश्रद्धयापि वा ।
कीर्तितं श्रीपतेर्नाम सर्वमङ्गलदं भवेत् ॥२०॥

20. ஏளனமாகவோ லீலையாகவோ ஸ்ரத்தையாகவோ அஸ்ரத்தையாகவோகூட சொன்ன பகவன்நாமம் ஸர்வ

மங்களத்தையும் தரும்.

अव्याजकरुणासिन्धुः स्वभावेनैव चात्मनः ।
जीवं तु रक्षति स्वांशं स्वशिशुं जननी यथा ॥२१॥

21. தாயார் சிசுவை ரஷிப்பதுபோல் அவ்யாஜக்ருபாளுவான பகவான் தனது ஸ்வபாவத்தினால் தன் அம்சமான ஜீவனைக் காப்பாற்றுகிறான்.

जीवं पातयितुं विष्णुर्नरके नैव मन्यते ।
यथाकथञ्चित्कारुण्यात् पापिनञ्चापि रक्षति ॥२२॥

22. ஜீவனை நரகத்தில் தள்ள பகவான் விரும்புதில்லை. எப்படியாவது காப்பாற்றி விடுவான்.

यद्यस्ति वैष्णवे धर्मे संशयो यमकिङ्कराः ।
यूयं पृच्छत युष्माकं प्रभुं धर्मविदां वरम् ॥२३॥

23. யமதூதர்களே! உங்களுக்கு இந்த வைஷ்ணவதர்மத்தில் ஸம்சயம் இருந்தால் உங்கள் தலைவனான தர்மராஜனையே போய்க் கேளுங்கள்.

### श्रीसद्गुरुरुवाच

इत्युक्त्वा विष्णुदूतास्तं ब्रह्मबन्धुममोचयन् ।
वैवस्वतसभां प्रापुः किङ्करास्ते च विस्मिताः ॥२४॥

### ஸ்ரீஸத்குரு

24. இவ்வாறு விஷ்ணுதூதர்கள் அஜாமிளனைக் காப்பாற்றி விட்டனர். யமதூதர்கள் யமனிடம் சென்று இந்த ஆச்சர்யத்தை தெரிவித்தனர்.

अजामिलस्तु शुद्धात्मा ववन्दे विष्णुपार्षदान् ।
अन्तर्धानं गतास्तावत्तेजोरूपास्तु वैष्णवाः ॥२५॥

25. அஜாமிளனோ விஷ்ணுதூதர்களை ஸேவித்தான். ஜோதிர்மயமான அவர்கள் உடனே மறைந்துவிட்டனர்.

पश्चात्तापङ्गतो विप्रस्त्यक्त्वा वेश्याञ्च तत्सुतान् ।
पुण्यारण्यं गतश्चक्रे नामसङ्कीर्तनं हरेः ॥२६॥

26. பச்சாதாபமடைந்த அஜாமிளன் உடனே வேசியையும் புத்ரர்களையும் மறந்தான். அவர்களைவிட்டு புண்யமான காட்டிற்கு வந்து பகவன்னாம கீர்த்தனம் செய்யலானான்.

हरिकीर्तनमाहात्म्यात्प्राप्य भक्तिं जनार्दने ।
ज्ञानवैराग्यसंयुक्तः प्राप विष्णोः परं पदम् ॥२७॥

27. நாமகீர்த்தனமஹிமையால் பக்தி, வைராக்யம் ஞான முண்டாகி பரமபதத்தை அடைந்தான்.

धर्मराजोपि तच्छ्रुत्वा नामकीर्तनवैभवम् ।
उवाच स्वमुखेनापि स्वदूतान् प्रति सादरम् ॥२८॥

28. தர்மராஜரும் இதைக்கேட்டு தனது தூதர்களைப் பார்த்து தன் முகத்தாலேயே நாமமஹிமையைச் சொன்னார்.

तदाप्रभृति ते दूता हरिकीर्तनतत्परान् ।
प्रणम्य दूरतो यान्ति सभयं भक्तिपूर्वकम् ॥२९॥

29. அதுமுதல் யமதூதர்கள் ஹரிநாமகீர்த்தனம் செய்யும் பாகவதோத்தமர்களை தூரத்திலிருந்தே வணங்கிவிட்டுச் செல்கின்றனர்.

अजामिलोपि यन्नाम पुत्रव्याजेन कीर्तयन् ।
मुक्तिं प्राप नमस्तस्मै केशवाय कृपालवे ॥३०॥

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये भागवतधर्मकाण्डे*
*अजामिलचरितं नाम सप्तदशोऽध्यायः ॥१७॥*

30. அஜாமிளன்கூட எவருடைய நாமகீர்த்தனத்தால் முக்தியடைந்தானோ அந்த க்ருபாளுவான கேசவனுக்கு

நமஸ்காரம்.

இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிமஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில் பாகவததர்மகாண்டத்தில் பதினேழாம் அத்யாயம்.

# अथाष्टादशोऽध्यायः

# பதினெட்டாம் அத்யாயம்

### भागवता ऊचुः

श्रीविष्णोश्च तथान्येषां देवानामपि सद्गुरो ।
तारतम्यं वद स्वामिन् त्वमेव ज्ञानिनां वरः ॥१॥

### பாகவதர்கள்

1. ஸத்குரோ! ஸ்ரீவிஷ்ணுவிற்கும் மற்ற தேவதைகளுக்கும் உள்ள பேதத்தைச் சொல்வீராக. நீங்கள் ஞானிகளில் சிறந்தவர்.

### श्रीसद्गुरुरुवाच

सर्वत्र वेदवाक्येषु हरिरेव परः स्मृतः ।
सर्वे देवाः समाराध्यास्तद्व्यापकतयैव हि ॥२॥

### ஸ்ரீஸத்குரு

2. வேதத்தின் எல்லாவிடத்திலும் ஹரியையே பரம்பொருளாகச் சொல்லியிருக்கிறது. மற்ற தேவர்களுக்கும் ஹரியே அந்தர்யாமியாக இருப்பதால் மற்ற தேவர்களையும் வேதம் புகழ்கிறது.

शुद्धसत्त्वगुणो विष्णुर्ब्रह्मा राजस उच्यते ।
तमोगुणयुतो रुद्रस्त्वेवं वेदेषु दृश्यते ॥३॥

3. விஷ்ணு ஸத்வகுணமுள்ளவர். ப்ரம்மா ரஜோகுணமுள்ளவர். ருத்ரன் தமோ குணமுள்ளவர் என்று வேதமே சொல்கிறது.

गुणातीतं परं ब्रह्म सृष्टिस्थितिलयात्मकम् ।
गुणत्रयं स्वमायाया गृह्णाति च यथोचितम् ॥४॥

4. நிர்குணமான ப்ரும்மம், ஸ்ருஷ்டி, ஸ்திதி ஸம்ஹாரம் என்ற லீலைக்காக மாயா குணங்களான இம்மூன்று குணங்களையும் தன் தேவைக்காக எடுத்துக் கொள்கிறது.

एक एव परो देवो ब्रह्मविष्णुशिवाभिधाम् ।
सृष्टिस्थितिलयायैव दधाति त्रिगुणात्मिकाम् ॥५॥

5. ஒரே தேவன் மூன்று லீலைகளைச் செய்வதற்காக மும்மூர்த்திகளைத் தரித்து மூன்று குணங்களுடன் மூன்று லீலைகளைச் செய்கிறான்.

वस्तुतस्तु न भेदोस्ति ब्रह्मविष्णुशिवेषु च ।
एकमेव परात्मानं भेदेनाज्ञोऽनुपश्यति ॥६॥

6. ப்ரும்மா, விஷ்ணு, ருத்ரன் இம்மூர்த்திகளிடம் உண்மையில் பேதமில்லை. அக்ஞானியே பேதப்படுத்திப் பார்ப்பான்.

मुमुक्षवो घोररूपान् संसारसुखदायकान् ।
राजसांस्तामसांश्चैव वर्जयेदपरान् सुरान् ॥७॥

7. முமுக்ஷுக்கள் கேவலம் ஸம்ஸாரஸுகத்தையே தரக்கூடிய கோரமான தாமஸ தேவதைகளை உபாஸிக்கலாகாது.

भक्तास्तु यादृशं देवं भजन्ते तादृशं गुणम् ।
तस्माद्विमुक्तिकामस्तु विष्णुं शान्तगुणं भजेत् ॥८॥

8. பக்தர்கள் எந்த தேவதைகளை உபாஸிக்கின்றனரோ அந்த குணங்களை அடைகின்றனர். எனவே சாந்தகுணமுள்ள விஷ்ணுவை உபாஸிப்பவனே ஸத்வ குணமுள்ளவனாவான்.

विष्णोराराधनेनैव सत्त्वशुद्धिः प्रजायते ।
सत्त्वाज्ज्ञानं समुद्भूतं ज्ञानान्मोक्षस्तु लभ्यते ॥९॥

9. விஷ்ணுவை உபாஸிப்பதால் சுத்தமான ஸத்வகுணம் உண்டாகும். ஸத்வ குணத்தினால் ஞானம் உண்டாகும். ஞானத்தினால் மோக்ஷம் கிடைக்கும்.

तस्मान्मोक्षविरोधित्वाद्देवतान्तरपूजनम् ।
वर्जयेद्बुद्धिमान् भक्तः कुर्वन् भक्तिं दृढां हरौ ॥१०॥

10. மோக்ஷவிரோதமாக இருப்பதால் வைஷ்ணவன் தேவதாந்தர பூஜை செய்யக்கூடாது. திடபக்தியுடன் விஷ்ணுவையே பூஜிக்க வேண்டும்.

तारतम्येन देवेषु भक्तिं कुर्याद्यथारुचि ।
ज्ञानमोक्षप्रदे विष्णौ विशेषेण जनार्दने ॥११॥

11. தேவர்களின் தாரதம்யம் அறிந்தவனாகி இருப்பானாகில் பூஜிக்கலாம். ஆனால் விஷ்ணுவிடமே விசேஷமான பக்தி வேண்டும்.

भक्तिं कुर्याद्दृढां विष्णौ न निन्देद्देवतान्तरम् ।
सर्वदेवमयो विष्णुः सर्वकर्मफलप्रदः ॥१२॥

12. விஷ்ணுவிடமே திடபக்தி செய்ய வேண்டும். மற்ற தெய்வங்களை நிந்திக்கலாகாது. விஷ்ணுவே அந்தந்த தெய்வங்களாயுமிருந்து அந்தந்த பூஜாபலன்களைத் தருகிறார்.

भक्ताः सत्त्वगुणैर्युक्ता भजन्ते मधुसूदनम् ।
राजसास्तामसाश्चैवमिष्टदेवं भजन्ति ते ॥१३॥

13. ஸத்வகுணமுள்ள பக்தர்கள் மதுசூதனனை வழிபடுகின்றனர். ராஜஸிகளும் தாமஸிகளும் தம் இஷ்ட தெய்வங்களைப் பூஜிக்கின்றனர்

न बुद्धिभेदं जनयेदज्ञानां वैष्णवः स्वयम् ।
स्वे स्वेधिकारे या निष्ठा स गुणः परिकीर्तितः ॥१४॥

14. அக்ஞானிகளான அவர்களின் புத்தியை வைஷ்ணவன் கலைக்கக்கூடாது. அவரவர் விதிப்படி அவரவர் பூஜிக்கின்றனர் என்று விட்டுவிட வேண்டும்.

यदि भक्तिर्दृढा तेषामितरेषु सुरेष्वपि ।

तैरेवानुग्रहपरैर्विष्णुभक्तिः प्रदीयते ॥१५॥

15. அவரவர் தம் இஷ்டதெய்வங்களை ச்ரத்தையுடன் வழிபட்டிருந்தால் அவரவர் தெய்வத்தின் க்ருபையாலேயே காலாந்தரத்தில் இவர்களுக்கும் பக்தி உண்டாகும்.

तस्मान्न निष्फलं नृणां देवतान्तरपूजनम् ।
अचिरेणैव कालेन स्वयं विष्णुं भजन्ति ते ॥१६॥

16. ஆகையால் தேவதாந்த்ரபூஜை வீணாகாது. அந்த பூஜாபலனாலேயே ஹரி பக்தி உண்டாகிவிடும்.

सर्वे देवाः समाश्रित्य नारायणमनामयम् ।
इष्टान् वरान् प्रयच्छन्ति स्वभक्तानां सुमेधसाम् ॥१७॥

17. எல்லா தேவர்களும் நாராயணனை ஆச்ரயித்தே தம்தம் பக்தர்களுக்கு விரும்பிய வரன்களை நாராயணனிடமே வாங்கிக்கொடுக்கின்றனர்.

विष्णोश्च गोकुलेन्द्रस्य नास्ति भेदस्तु वस्तुतः ।
श्रीकृष्णस्तु रसोत्कर्षात्परमो मधुसूदनात् ॥१८॥

18. விஷ்ணுவிற்கும் க்ருஷ்ணனுக்கும் தத்வத்தில் பேதமில்லை. ஆனால் விஷ்ணுவைக்காட்டிலும் க்ருஷ்ணன் ரஸத்தினால் உயர்ந்தவன்.

सौन्दर्येण च सौलभ्यात्सौकुमार्याद्रसादपि ।
कारुण्येन च सौशील्यात्कृष्णो विष्णोः परः स्मृतः ॥१९॥

19. ஸௌந்தர்யம், ஸௌலப்யம், ஸௌகுமார்யம், ரஸம், காருண்யம், ஸௌசீல்யம்முதலிய குணங்களால் க்ருஷ்ணன் விஷ்ணுவைக் காட்டிலும் உயர்ந்தவனாக இருக்கிறான்,

वस्तुतो वृक्षवर्गे तु न भेदः स्थावरात्मके ।
तथापि कल्पकः श्रेष्ठः सर्वसौख्यप्रदायकः ॥२०॥

20. ஸ்தாவரங்களான வ்ருக்ஷங்களுள் உண்மையில் பேத மில்லை ஆயினும் ஸர்வ பலனையும் தரும் கல்பகவ்ருக்ஷமே சிறந்தது.

एवञ्च नरवर्गे तु न भेदोस्ति स्वरूपतः ।
तथापि ब्राह्मणः श्रेष्ठो वेदवेदान्तपारगः ॥२१॥

21. மனிதர்களுள் பேதமில்லை. ஆயினும் வேதவேதாந்தமறிந்த ப்ராம்மணன் சிறந்தவன்.

एवं दानववर्गे च न भेदः किल जन्मतः ।
विष्णुभक्तिपरो धीमान् प्रह्लादः श्रेष्ठ उच्यते ॥२२॥

22. அசுரர்களுள் ப்ரஹ்லாதனும் ஒருவன்தான். எனவே ஜாதி பேதமில்லை. ஆயினும் ப்ரஹ்லாதன் விஷ்ணுபக்தியால் சிறந்தவன்.

स्वरूपतो न भेदोस्ति तत्त्वमेकं परं मनः ।
तथापि लोके दृश्यन्ते सद्गुणा दुर्गुणा नराः ॥२३॥

23. மனம் என்ற தத்வம் ஒன்றே. ஆயினும் அவரவர்களுக்கு நல்ல மனமும் இருக்கிறது. கெட்ட மனமும் இருக்கிறது.

एवं सर्वेषु देवेषु नैव भेदोस्ति तत्त्वतः ।
परन्तु साक्षाद्विष्णुर्हि कल्याणगुणसंभृतः ॥२४॥

24. இவ்வாறு எல்லா தெய்வங்களும் ஒன்றே ஆயினும் விஷ்ணு கல்யாண குணங்கள் நிரம்பியவராய் இருக்கிறார்.

एवं विमृश्य बुद्ध्यैव तारतम्यं विचिन्त्य च ।
आलोड्य सर्वशास्त्राणि विष्णुभक्तिः परा स्मृता ॥२५॥

25. இவ்வாறு ஆலோசித்துப் பார்த்து ஸர்வசாஸ்த்ர ப்ரமாணப்படி விஷ்ணு பக்தியே சிறந்தது என்று நிர்ணயம் செய்யப்பட்டது.

सर्ववेदान्तसंवेद्यं विष्णुमव्ययमीश्वरम् ।
त्यक्त्वा भजन्त्यन्यदेवं दौर्भाग्येन युता नराः ॥२६॥

26. ஸர்வவேதாந்தங்களிலும் புகழப்பட்ட பரமாத்மாவான விஷ்ணுவைவிட்டு துர்பாக்யசாலிகளான மனிதர்கள் மற்ற தெய்வங்களை நாடுகின்றனர்.

सात्त्विकास्तु महात्मानो वैष्णवाः शुद्धमानसाः ।
भजन्ति दृढया भक्त्या देवदेवं जनार्दनम् ॥२७॥

27. ஸத்வகுணமுள்ள சித்தசுத்தர்களான வைஷ்ணவர்களோ திடபக்தியுடன் தேவதேவனான ஜனார்தனனையே உபாஸிக்கின்றனர்.

न योगेन न साङ्ख्येन न यज्ञैर्न व्रतादिभिः ।
लभ्यते दृढया भक्त्या भगवान् भक्तवत्सलः ॥२८॥

28. யோகத்தினாலோ ஸன்யாஸத்தாலோ வ்ரதங்களாலோ பகவான் கிடைத்துவிட மாட்டான். திடபக்தியாலேயே கிடைப்பான். பக்தவத்ஸலன் அல்லவா?

नास्ति वेदात्परं शास्त्रं न दैवं केशवात्परम् ।
न साधनं भक्तियोगान्न मोक्षाल्लाभ उत्तमः ॥२९॥

29. வேதத்தைக்காட்டிலும் உயர்ந்த சாஸ்த்ரமில்லை. கேசவனைக்காட்டிலும் உயர்ந்த தெய்வமில்லை. பக்தியைக் காட்டிலும் சிறந்த ஸாதனமில்லை. மோக்ஷத்தைக்காட்டிலும் சிறந்த லாபமில்லை.

तस्मान्निःसंशयो भूत्वा भजेद्विष्णुं सनातनम् ।
विष्णुरेव हि संपूज्यो वैदिकैस्तु महात्मभिः ॥३०॥

30 எனவே கொஞ்சமும் ஸம்சயமின்றி விஷ்ணுவையே வைதீகர்களான பெரியோர்கள் பூஜிக்கவேண்டும்.

नारायणः परं दैवमिति वेदेन घुष्यते ।

तथाप्यसूयया मूढा निन्दन्ति हरिमुत्तमम् ॥३१॥

31. நாராயணனே பரமதெய்வம் என்று வேதமே கோஷிக்கிறது. ஆயினும் மூடர்கள் அஸூயையால் விஷ்ணுவை நிந்திக்கின்றனர்.

कल्पितानि पुराणानि बहुधा तामसैर्जनैः ।
सात्त्विको विष्णुभक्तस्तच्छृणुयान्न कदाचन ॥३२॥

32. தாமஸஜனங்களால் பல புராணங்கள் கல்பனை செய்யப்பட்டன. ஸாத்விகனான விஷ்ணுபக்தன் அவைகளைக் கேட்கவே கூடாது.

ब्रह्मादिस्तम्बपर्यन्ताः सर्वे संसारिणः स्वयम् ।
मुह्यन्ति मायया विष्णोः परत्वं न विदन्ति ते ॥३३॥

33. ப்ரும்மாமுதல் புழு பூச்சிவரை யாவரும் ஸம்ஸாரிகளே. விஷ்ணுமாயையால் மயங்கிய இவர்கள் விஷ்ணுவின் பெருமையை அறிவதில்லை.

विज्ञाय विष्णुमाहात्म्यं सदाचार्यमुखेन हि ।
प्राप्नोति भक्तिनिष्ठस्तु तद्विष्णोः परं पदम् ॥३४॥

34. ஸத்குருவின் முகமாய் விஷ்ணுபரத்வத்தை அறிந்த வைஷ்ணவனே மோக்ஷமடைவான்.

जन्मान्तरेषु ये देवाः पूजिताश्च यथाविधि ।
ते प्रसन्नाः प्रयच्छन्ति परां भक्तिं जनार्दने ॥३५॥

35. ஜன்மாந்தரங்களில் வேறு தேவர்களைப் பூஜித்திருந்தால் அந்த தேவர்களே இப்பிறவியில் விஷ்ணுபக்தியைத் தருகின்றனர்.

येऽप्यन्यदेवता भक्ता यजन्ते श्रद्धयान्विताः ।
तेपि सर्वेश्वरं विष्णुं भजन्त्यविधिपूर्वकम् ॥३६॥

36. அன்யதெய்வங்களை அன்யபக்தர்கள் பஜித்தபோதும் அவர்கள் விதி தவறி விஷ்ணுவையே பஜிக்கின்றனர்.

एतत्तत्वं न जानन्ति मायया मोहिता हि ते ।
तस्मात्सर्वोत्तमं विष्णुं न भजन्ति नराधमाः ॥३७॥

37. இந்த உண்மையை அவர்கள் அறிவதில்லை. எனவே ஸாக்ஷாத்தாகவே விஷ்ணுவை அவர்கள் பஜிப்பதில்லை.

देवतान्तरभक्तास्तु भगवद्रसिकादयः ।
अचिरेणैव कालेन प्रापुर्भक्तिं जनार्दने ॥३८॥

38. பகவத்ரஸிகர் முதலிய தேவதாந்தரபக்தர்கள்கூட கொஞ்சநாளில் க்ருஷ்ண பக்தர்களானார்கள்.

एवञ्च बहवो भक्ता देवतान्तरतत्पराः ।
तत्तद्देवप्रसादेन ह्यभवन् कृष्णतत्पराः ॥३९॥

39. இவ்வாறு பல தேவதாந்தரபக்தர்களும் அந்தந்த தேவர்களின் க்ருபையாலேயே க்ருஷ்ணபக்தியை அடைந்தனர்.

जन्मान्तरसहस्रेषु नानादेवार्चनात्परम् ।
नराणां बहुपुण्यानां कृष्णभक्तिः प्रजायते ॥४०॥

40. ஆயிரம் பிறவி எடுத்து பல தெய்வங்களை வழிபட்ட பிறகே ஒரு ஜீவனுக்கு க்ருஷ்ணபக்தி உண்டாகிறது.

सिद्धानामपि मुक्तानां मुनीनाञ्च दिवौकसाम् ।
ज्ञानिनां योगिनाञ्चापि कृष्णभक्तिः सुदुर्लभा ॥४१॥

41. ஸித்தர்கள், முக்தர்கள், யோகிகள், ஞானிகளுக்கும்கூட க்ருஷ்ணபக்தி துர்லபமானது.

इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये भागवतधर्मकाण्डे विष्णुपरत्वनिर्णयो नामाष्टादशोऽध्यायः ॥१८॥

இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமி மஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில் பாகவததர்மகாண்டத்தில் பதினெட்டாம் அத்யாயம்.

# अथैकोनविंशोऽध्यायः

## பத்தொன்பதாம் அத்யாயம்

### श्रीसद्गुरुरुवाच

पुराणेषु च संप्रोक्तं बृन्दामाहात्म्यमुत्तमम् ।
सारं तु न हि जानीयात्कृष्णभक्तिं विना नरः ॥१॥

### ஸ்ரீஸத்குரு

1. புராணங்களில் ப்ருந்தாவனமாஹாத்மியத்தைச் சொல்லி இருந்தபோதிலும் க்ருஷ்ணபக்தர்களுக்கே அது புரியும்.

नानाशास्त्रपुराणज्ञा मुह्यन्त्येव परस्परम् ।
न विदन्ति च ते सारं कृष्णभक्तिविनिन्दकाः ॥२॥

2. பல சாஸ்த்ரங்களைப் படித்து புத்தியைக் குழப்பிக் கொண்டிருப்பவன் க்ருஷ்ணபக்தியை நிந்திக்கிறான்.

### भागवता ऊचुः

पुराणेषु वरं यत्तद्वदास्माकं गुरूत्तम ।
यद्ग्राह्यं वैष्णवैर्नित्यं कृष्णभक्तिफलप्रदम् ॥३॥

### பாகவதர்கள்

3. குருதேவ! புராணங்களில் எது சிறந்தது? எதைப் படித்தால் க்ருஷ்ணபக்தி உண்டாகும்? வைஷ்ணவர்களுக்கு எந்த புராணம் ப்ரமாணம்? எங்களுக்குச் சொல்லவேண்டும்.

### श्रीसद्गुरुरुवाच

परतत्त्वविवेकाय प्रमाणं श्रुतिरेव हि ।
अपौरुषेयो वेदस्तु साक्षान्नारायणात्मकः ॥४॥

### ஸ்ரீஸத்குரு

4. பாகவதத்தை அறிய ச்ருதியே ப்ரமாணம். ஏனெனில் ச்ருதி ஒருபுருஷனால் செய்யப்பட்டதல்ல. ஸாக்ஷாந்நாராயண ஸ்வரூபம் வேதம்.

तस्योपबृह्मणार्थञ्च मनुमुख्यैर्महात्मभिः ।
कृतानि धर्मशास्त्राणि श्रुतिवाक्यप्रमाणतः ॥५॥

5. அந்த வேதத்திற்கு உபப்ரம்ஹணமாய் வேதப்ரமாணத்தைக் கொண்டு மனுமுதலியவர்கள் தர்மசாஸ்த்ரங்களை எழுதினார்கள்.

श्रुतिस्मृतिविरोधे तु श्रुतिरेव गरीयसी ।
विरुद्धं वेदवाक्येन न प्रमाणं मुनेर्वचः ॥६॥

6. ச்ருதிக்கு விரோதமாக ஸ்ம்ருதி இருந்தால், ஸ்ம்ருதியைத் தள்ளிவிட்டு ச்ருதியை எடுத்துக் கொள்ளவேண்டும். முனிவர்களே சொன்னாலும் வேதத்துக்கு விரோதமாகில் அது ப்ரமாணமாகாது.

इतिहासपुराणानि कृष्णद्वैपायनादिभिः ।
क्षेमाय सर्वजगतां कृतानि मुनिसत्तमैः ॥७॥

7. வ்யாஸர்முதலிய முனிவர்களால் இதிஹாஸபுராணங்கள் ஜனங்களின் க்ஷேமத்திற்காகவே இயற்றப்பட்டது.

तारतम्यं पुराणेषु वर्तते गुणभेदतः ।
सात्त्विकानि पुराणानि ग्राह्याणि च मुमुक्षुभिः ॥८॥

8. ஸாத்வீகம், ராஜஸம், தாமஸம் என்ற பேதம் புராணங்களி லும் இருக்கின்றன. முமுக்ஷுக்கள் ஸாத்விகமான புராணங்க ளையே எடுத்துக் கொள்ள வேண்டும்.

सात्त्विकेषु पुराणेषु माहात्म्यमधिकं हरेः ।
ग्राह्यमन्यत्पुराणञ्च सत्पुराणाविरोधतः ॥९॥

9. ஸாத்விகபுராணங்களில் ஹரியின் மஹிமையே சொல்லப்படுகிறது. ஸாத்விக புராணத்திற்கு விரோதமில்லாத இடங்கள் ராஜஸதாமஸபுராணங்களிலும் ப்ரமாணமாகும்.

श्रीवैष्णवञ्च वाराहं पाद्मं गारुडमेव च ।
नारदीयं भागवतमिति षट् सात्विकानि हि ॥१०॥

10. ஶ்ரீவிஷ்ணுபுராணம், வராஹபுராணம், பாத்மபுராணம், கருடபுராணம், நாரதபுராணம்,ஶ்ரீமத்பாகவதம் என்ற ஆறு புராணங்கள் ஸாத்விகபுராணங்களாகும்.

अणुभ्यश्च महद्भ्यश्च पुराणेभ्यस्तु पण्डितः ।
सर्वतः सारमादद्याद्वैष्णवं धर्ममेव हि ॥११॥

11. சிறிய உபபுராணங்கள் பெரிய மஹாபுராணங்கள் எதைப் படித்தாலும் பண்டிதர்கள் ஸாரத்தையே எடுத்துக்கொள்ள வேண்டும்.

राजसानां तामसानां जनानां रुचिभेदतः ।
हेयानि च पुराणानि ग्राह्याण्येव हि तैर्नरैः ॥१२॥

12. ராஜஸ தாமஸ சுபாவமுடைய மக்களுக்கு ஏற்றபடி அவர்கள் ருசியை அனுசரித்து அந்த புராணங்கள் அவரவர் களுக்கு ப்ரமாணம்.

मुमुक्षुभिर्वैष्णवैस्तु सात्त्वीकगुणवृद्धये ।
उत्तमानि पुराणानि श्रोतव्यानि पुनः पुनः ॥१३॥

13. முமுக்ஷுக்களான வைஷ்ணவர்களோ ஸாத்விககுண ப்ரதானர்களாக இருப்பதால் ஸத்வகுணத்தை வளர்க்க வேண்டி ஸாத்விகபுராணங்களையே படிக்கவேண்டும்.

किमन्यैः शास्त्रविस्तारैर्नानातर्कभ्रमावहैः ।
एकं भागवतं शास्त्रं कृष्णभक्तिप्रदं कलौ ॥१४॥

14. பலவிதமான தர்க்கம் செய்து புத்தியில் ப்ரமையை உண்டாக்கும் பல சாஸ்த்ரங்களால் என்ன பயன்? க்ருஷ்ண பக்தியைத் தரக்கூடிய ஶ்ரீபாகவதமே போதுமானது.

पठेद्भागवतं शास्त्रं कीर्तयेच्छृणुयादपि ।

यत्र श्रीकृष्णमाहात्म्यं वर्णितं व्याससूनुना ॥१५॥

15. பாகவத்தையே படிக்க வேண்டும். ப்ரவசனமும் செய்ய வேண்டும், கேட்கவும் வேண்டும். ஸ்ரீசுகர் க்ருஷ்ண மாஹாத்மியத்தை விஸ்தாரமாக ஸ்ரீமத்பாகவதத்திலேயே சொல்லியிருக்கிறாரன்றோ!

देवानामुत्तमः कृष्णो ज्ञानिनामुत्तमः शुकः ।
पुराणानामुत्तमञ्च श्रीमद्भागवतं तथा ॥१६॥

16. தெய்வங்களுக்குள் சிறந்தவன் ஸ்ரீக்ருஷ்ணன். ஞானிகளுக்குள் சிறந்தவர் ஸ்ரீசுகர். புராணங்களில் சிறந்தது ஸ்ரீமத்பாகவதமே.

तर्कं न कुर्यान्मूर्खैश्च न निन्देदितरं मतम् ।
आश्रित्य श्रीभागवतं कुर्यात्कृष्णरतिं सुधीः ॥१७॥

17. மூர்க்கர்களுடன் தர்க்கம் செய்யக்கூடாது. பிற மதங்களைக் கண்டிக்கவும் வேண்டாம். ஸ்ரீபாகவதத்தை ஆச்ரயித்து ஸ்ரீக்ருஷ்ணபக்தி செய்பவனே புத்திசாலி.

निन्दन्तु वा प्रशंसन्तु यथारुचि नरा भुवि ।
वस्तुतो नेतरच्छास्त्रं श्रीमद्भागवतात्परम् ॥१८॥

18. அவரவர் புத்திக்கு ஏற்றபடி மக்கள் ஸ்ரீபாகவதத்தைக் கொண்டாடட்டும். அல்லது அலக்ஷியம் செய்தாலும் சரி. ஸ்ரீமத்பாகவதத்தைவிட சிறந்த சாஸ்த்ரம் உலகிலேயே இல்லை.

श्रद्धया ब्रह्मसूत्राणि पठन्ति यतयो यथा ।
यथैव धर्मशास्त्राणि पठन्ति गृहमेधिनः ॥१९॥
तथाधिकारिणो भक्ता वैष्णवा रसिकोत्तमाः ।
श्रीमद्भागवतं श्रोतुं पठितुञ्च दिने दिने ॥२०॥

19, 20. ச்ரத்தையுடன் கர்மடர்களான க்ருஹஸ்தர்கள் தர்மசாஸ்த்ரத்தைப் படிப்பதுபோலும், ஞானயோகிகளான

ஸன்யாஸிகள் வேதாந்தம் படிப்பது போலும், பக்தி நிஷ்டர்களான வைஷ்ணவர்கள் ஸ்ரீமத்பாகவதத்தையே படிக்கவேண்டும். தினமும் ப்ரவசனமும் ச்ரவணமும் செய்ய வேண்டும். ஏனெனில் வைஷ்ணவர்களே ஸ்ரீமத்பாகவதத்தை ஸேவிக்க முக்ய அதிகாரிகள்.

भगवद्भक्तिहीनानां भगवद्भक्तिवर्धनम् ।
तथा भक्तवरिष्ठानां भजनानन्दवर्धनम् ॥२१॥

21. பகவத்பக்தியில்லாதவர்களுக்கு ஸ்ரீபாகவதம் பக்தியைத் தரும். பக்தியுள்ளவர்களுக்கு பக்தியை மேன்மேலும் வளர்க்கும்.

शृणुयाद्यः सकृन्मर्त्यः कृष्णप्रीतिकरो भवेत् ।
किं दुर्लभं प्रसन्ने तु तस्मिन्नाश्रितवत्सले ॥२२॥

22. ஒருதரம் பாகவதம் கேட்டாலும் க்ருஷ்ணன் ப்ரீதி அடைவான். ஸ்ரீக்ருஷ்ணன் ப்ரீதி அடைந்துவிட்டால் பிறகு என்னதான் பலன் கிடைக்காது!

वाक्यानि साक्षाद्राधैवमर्थः श्रीकृष्ण एव हि ।
राधाकृष्णस्वरूपं हि श्रीमद्भागवतं परम् ॥२३॥

23.ஸ்ரீமத்பாகவதத்திலுள்ள வாக்யங்கள் யாவும் ஸாக்ஷாத் ராதையே. அதன் அர்த்தம் ஸ்ரீக்ருஷ்ணனே. இவ்வாறு ராதாக்ருஷ்ணஸ்வரூபமே ஸ்ரீமத்பாகவதம்.

उवाच कृष्णचरितं राधया लालितः शुकः ।
शृणुयान्मञ्जुलालापं श्रीशुकस्य पुनः पुनः ॥२४॥

24. ஸ்ரீராதையினால் லாலனை செய்யப்பட்ட ஸ்ரீசுகர் ஸ்ரீமத்பாகவதத்தை ஆலாபனம் செய்தார். ஸ்ரீசுகரின் மஞ்சுள மான ஆலாபனத்தை மறுபடியும் மறுபடியும் கேட்கவேண்டும்.

अग्राह्यरसरूपत्वाद्राधामाहात्म्यमुत्तमम् ।
श्रीमद्भागवते तस्मिन्नोवाच व्यासनन्दनः ॥२५॥

25. க்ரஹிக்கமுடியாத ரஸரூபமாக இருப்பதால் ஸ்ரீராதையின் லீலைகளை ஸ்ரீசுகர் ஸ்ரீபாகவதத்தில் சொல்லவில்லை.

लीलारहस्यं राधाया गोप्यं परममुच्यते ।
परीक्ष्य शिष्यान् गुरुभिः कीर्तितव्यं यथातथा ॥२६॥

26. ஸ்ரீராதையின் லீலை மிகவும் ரஹஸ்யமானது. அதை குரு சிஷ்யனை வெகுவாக பரீக்ஷை செய்தபிறகே உபதேசிக்க வேண்டும்.

सामान्यतः पुराणेषु प्रोक्तं तच्चरितं महत् ।
जानन्ति तद्विशेषेण भक्तास्तु व्रजवासिनः ॥२७॥

27. பொதுவாக ராதையின் சரித்ரம் புராணங்களிலும் சொல்லப் பட்டிருக்கிறது. அது ஸாதாரணம்.ஆனால் ராதையின் லீலைகள் விசேஷமாக வ்ரஜவாஸிகளே அறிவார்கள்.

ज्ञातुमिच्छति यो भक्तो राधालीलारसं यथा ।
सर्वधर्मान् परित्यज्य स वसेद्यमुनातटे ॥२८॥

28. ஸ்ரீராதாதேவியின் லீலாரஸங்களைத் தெரிந்து கொள்ள விரும்புகிறவன் ஸர்வஸாதனைகளையும்விட்டு ஸ்ரீப்ருந்தா வனத்தில் வஸிக்கவேண்டும்.

जानीयाद्राधिकातत्त्वं वसन् बृन्दावने सदा ।
जानीयात्कृष्णतत्त्वञ्च श्रीमद्भागवतं पठन् ॥२९॥

29. ப்ருந்தாவனவாஸமாத்ரத்தினால் ஸ்ரீராதாதத்வத்தை அறிவான். ஸ்ரீபாகவதத்தைப் படிப்பதனாலேயே க்ருஷ்ண தத்வத்தை அறிவான்.

तस्माच्छ्रीयमुनातीरे वसन् भागवतं पठन् ।
कालक्षेपं तु यः कुर्यात् स हि भागवतोत्तमः ॥३०॥

30. ஆகையால் ப்ருந்தாவனத்தில் யமுனாதீரத்தில் ஸ்ரீமத் பாகவதத்தைப் படித்துக்கொண்டு எவன் வஸிப்பானோ அவனே பாகவதோத்தமன்.

यमुनातीरवासाच्च पाठाद्भागवतस्य च ।
भक्तश्रेष्ठो वशीकुर्याद्दम्पती जगतांपती ॥३१॥

31. யமுனாதீரத்தில் வஸிப்பதாலும், ஸ்ரீபாகவதத்தைப் படிப்பதாலும், ஜகத்பதியான அந்த திவ்ய தம்பதிகளை வசம் செய்யமுடியும்.

विष्णुराताय भक्ताय प्रोवाच व्यासनन्दनः ।
श्रीमद्भागवतं पुण्यं केवलं कृपयैव हि ॥३२॥

32. பரீக்ஷித்துமஹாராஜாவிற்கு ஸ்ரீசுகர் க்ருபையாலேயே ஸ்ரீமத்பாகவதத்தைச் சொன்னார்.

व्यासेन रचितं पुण्यं श्रीशुकेन प्रकाशितम्
कृष्णदासः प्रतिदिनं श्रीमद्भागवतं पठेत् ॥३३॥

33. வ்யாஸரால் செய்யப்பட்டதும், ஸ்ரீசுகரால் ப்ரகாசப் படுத்தப்பட்டதுமான ஸ்ரீமத்பாகவதத்தை க்ருஷ்ணதாஸன் தினமும் படிக்கவேண்டும்.

कुर्यान्नीराजनं नित्यं पूजयेत्तुलसीदलैः ।
ननु भागवतस्यैतद्राधाकृष्णमयं वपुः ॥३४॥

34. ஸ்ரீமத்பாகவதத்தை துளஸியாலும் புஷ்பத்தாலும் தினமும் பூஜித்து தீபாராதனை செய்யவேண்டும். நிச்சயமாக ஸ்ரீமத்பாகவதம் ஸ்ரீராதாக்ருஷ்ண ஸ்வரூபமே.

क्षीराब्धिञ्चापि वैकुण्ठं त्यक्त्वा गोलोकमुत्तमम् ।
श्रीमद्भागवते नित्यं वसति श्यामसुन्दरः ॥३५॥

35. க்ஷீராப்தி, வைகுண்டம், கோலோகம் இவைகளைக்கூட விட்டு பகவான் ஸ்ரீமத்பாகவதத்திலேயே வஸிக்கிறான்.

भक्ताः सङ्गम्य चान्योन्यं प्रेमाश्रुभरिताननाः ।
पठन्ति यत्र तद्भक्त्या तत्र तिष्ठति माधवः ॥३६॥

36. பக்தர்கள் பரஸ்பரம் ப்ரேமையுடன் ஆனந்தக்கண்ணீர் விட்டுக்கொண்டு எங்கு ஸ்ரீமத்பாகவதம் படிக்கின்றனரோ அங்கு மாதவன் ப்ரஸன்னமாக இருக்கிறான்.

इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये भागवतधर्मकाण्डे श्रीमद्भागवतमाहात्म्यं नामैकोनविंशोऽध्यायः ॥१९॥

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிமஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில் பாகவததர்மகாண்டத்தில் பத்தொன்பதாவது அத்யாயம்**

# अथ विंशोऽध्यायः

## இருபதாம் அத்யாயம்

### भागवता ऊचुः

भगवान् व्यासपुत्रस्तु राधया लालितः कथम् ।
एतद्रहस्यमस्माकं वद सद्गुरुसत्तम ॥१॥

**பாகவதர்கள்**

1. வ்யாஸபுத்ரரான ஸ்ரீசுகர் எப்போது எப்படி ராதையால் லாலனை செய்யப்பட்டவர்? இந்த ரஹஸியத்தைச் சொல்ல வேண்டும்.

### श्रीसद्गुरुरुवाच

पुरा गोलोकवासिन्याः स्वामिन्याः करवारिजे ।
कश्चित्कीरः कृतावासो लीलारसपरायणः ॥२॥
किंशुकारुणतुण्डश्च मञ्जुभाषणतत्परः ।
कृष्ण कृष्णेति सततं नामकीर्तनलोलुपः ॥३॥
पत्रवर्णः सुन्दराङ्गो राधाप्रेमैकवत्सलः ।
आनन्दं परमं लेभे मुनीनामपि दुर्लभम् ॥४॥

**ஸ்ரீஸத்குரு**

2-4. முன்பு கோலோகவாஸினியான ராதையின் கரகமலத்தில்

வஸிப்பதாய் ஒரு கிளி இருந்தது. அது எப்போதும் லீலைகள் செய்வதாயும், சிவந்த அலகு உள்ளதாயும், கொஞ்சிக்கொஞ்சிப் பேசுவதாயும், க்ருஷ்ண க்ருஷ்ண என்று நாமகீர்த்தனம் செய்யக்கூடியதாயும், ராதையின் ப்ரேமைக்கு பாத்ரமானதாயும் இருந்தது. முனிவர்களுக்குக்கூட துர்லபமான ஆனந்தம் அதற்குக் கிடைத்தது.

अवतीर्य भुवं कृष्णे नन्दगोकुलमागते ।
आगतायाञ्च राधायां वृषभानुपुरं तदा ॥५॥
विरहेण कृशाङ्गस्तु शुको दीनमना भृशम् ।
त्रींल्लोकान् संपरिक्रम्य कैलासगिरिमागतः ॥६॥

5,6. ஸ்ரீக்ருஷ்ணன் அவதாரம் செய்து கோகுலம் வந்தபிறகு, ஸ்ரீராதை அவதாரம் செய்து வ்ருஷபானுபுரம்(பர்ஸானா) வந்துவிட்ட பிறகு ராதாக்ருஷ்ணர்களின் பிரிவுதாளாமல் மூவுலகிலும் பறந்தோடி கைலாஸமலைக்கு வந்து சேர்ந்தது.

गिरीन्द्रशिखरे तस्मिन् सर्वसत्त्वनिषेविते ।
वटवृक्षस्य मूले तु भगवान् फणिभूषणः ॥७॥
आनन्दबाष्पनयनः पुलकाञ्चितविग्रहः ।
रमते प्रियया सार्धं श्रीमद्भागवतं पठन् ॥८॥

7,8. அங்கு கைலாஸசிகரத்தில் ஒரு ஆலமரத்தடியில் நாகாபரணமணிந்த சிவபெருமான் பார்வதிதேவியுடன் ஆனந்தக்கண்ணீர் விட்டுக்கொண்டும் புளகாங்கிதமாயும் ஸ்ரீமத்பாகவதத்தைப் படித்துக்கொண்டிருந்தார்.

शम्भुवक्त्राब्जसंभूतं राधालीलामृतं तदा ।
आस्वाद्य सा जगन्माता पार्वती स्तिमिताऽभवत् ॥९॥

9. சிவனின் முககமலத்திலிருந்து பெருகிய ராதாலீலையாகிய அமுதத்தைப் பருகி பார்வதிதேவி ஸ்தம்பித்துவிட்டாள்.

तदन्तरे राधिकायाश्चरित्रास्वादलोलुपः ।
उपश्रोता शुकः सोपि चक्रे हुङ्कारमादरात् ॥१०॥

*10. இடையில் ராதாதேவியின் லீலையைக் கேட்க விரும்பிய உபச்ரோதாவான கிளி உம் என்று குரல் கொடுத்தது.*

तं दृष्ट्वा शुकमीशानः करुणाकुललोचनः ।
उवाच श्लक्ष्णया वाचा शुकं कृष्णकथोत्सुकम् ॥११॥

*11. க்ருஷ்ணகதையில் குதூஹலமுள்ள கிளியைப்பார்த்து ஈச்வரன் கருணையுடன் சொன்னான்.*

एकान्तसंस्थयोरद्य कृष्णतत्त्वविमुग्धयोः ।
आवयोरन्तरे कस्त्वमागतोसि महामते ॥१२॥
न श्रोतव्यमिदं गुह्यं राधाचरितमद्भुतम् ।
तस्मादितो गच्छ शीघ्रं न चेन्मन्युर्भवेन्मम ॥१३॥

*12,13. ஏகாந்தமாக நாங்களிருவரும் க்ருஷ்ணகதையைப் பேசும்போது கூடவந்து கேட்கும் மஹாபுத்திசாலியான நீ யார்? ராதையின் சரித்ரம் மிகவும் ரஹஸ்யமானது. நீ கேட்கக் கூடாது. நீ இங்கிருந்து போய்விடு.*

एवं विद्रावितः कीरः श्रीकृष्णविरहाकुलः ।
व्यासपुत्रोऽभवच्छीघ्रमन्यजन्मनि साधवः ॥१४॥

*14. ஸாதுக்கஜளே! இவ்வாறு விரட்டப்பட்ட அந்த கிளியே ஸ்ரீக்ருஷ்ணனின் பிரிவுதாளாமல் வ்யாஸபுத்ரரான ஸ்ரீசுகமுனி யாக அவதரித்தார்.*

तुच्छीकृतान्यविषयः कृष्णध्यानपरायणः ।
चचार भुवने सोपि जडोन्मत्तपिशाचवत् ॥१५॥

*15. அன்யவிஷயத்தை துச்சமாகக் கருதி எப்போதும் ஸ்ரீக்ருஷ்ண த்யானத்திலேயே மக்னமாகி ஒரு ஜடம்போலும், பித்தன்போலும், பேய்போலும் ஸ்ரீசுகர் உலகில் அலைந்தார்.*

उन्मत्तमात्मजं दृष्ट्वा व्यासः शोकसमाकुलः ।
नारदेनोपदिष्टं तच्चक्रे भागवतं परम् ॥१६॥

16. தன் புத்ரன் உன்மத்தனாய் ஓடிவிட்டதை நினைத்து மனம் கலங்கிய வ்யாஸர் நாரதரின் ப்ரேரணையால் பாகவதத்தை அருளிச் செய்தார்.

कदाचिद्व्यासशिष्याश्च चरन्तः काननान्तरे ।
समाहरन्तो गुरवे समित्पुष्पफलान्यपि ॥१७॥
श्लोकमेकं जगुर्भक्त्या श्रीमद्भागवते स्थितम् ।
कीर्तितं गोपकन्याभिर्माधुर्यपरिपूरितम् ॥१८॥

17,18. ஒரு சமயம் வ்யாஸசிஷ்யர்கள் கானகத்தில் அலைந்து புஷ்பம், ஸமித்து, பழம் இவைகளை சேகரிக்கும்போது ஸ்ரீமத்பாகவதத்தில் கோபிகைகளால் பாடப்பட்ட ஒரு பாடலைப் பாடினர்.

बर्हापीडमिति श्रुत्वा तत्क्षणं प्रेममोहितः ।
गोविन्दाक्रान्तहृदयः पितरं प्राप वै शुकः ॥१९॥

19. பர்ஹாபீடம் என்ற அந்த ச்லோகத்தைக் கேட்டதுமே கோவிந்தனால் ஆக்ரமிக்கப்பட்ட இதயம் உடையவராய், ப்ரேமாகர்ஷணத்தால் தன்னை மறந்து தந்தையான வ்யாஸரிடம் வந்தார் சுகர்.

### श्रीशुक उवाच

भगवन् भवतः शिष्या गायन्ति मधुरं पदम् ।
कामयेहञ्च तद्गीतमुपदेशं कुरु प्रभो ॥२०॥

### ஸ்ரீசுகர்

20. பகவானே! தங்கள் சிஷ்யர்கள் மிகவும் மதுரமான ஒரு ச்லோகத்தைப் பாடுகின்றனரே! அதை நானும் பாட விரும்புகிறேன். ப்ரபோ! எனக்கும் அதை உபதேசம் செய்ய வேண்டும்.

अहं विस्मृत्य विषयान् केवलं स्थित आत्मनि ।
जीवन्मुक्तः सञ्चरामि जडोन्मत्तपिशाचवत् ॥२१॥

21. நான் உலகை மறந்து ஆத்மாவில் லயித்தவனாய் ஜீவன் முக்தனாய் ஜடம் போல் உலகில் ஸஞ்சரிக்கிறேன்.

तथापि मे मनः शुद्धं चित्तचोरो हरिः स्वयम् ।
श्लोकश्रवणमात्रेण हरति श्यामसुन्दरः ॥२२॥

22. என் சுத்தமான சித்தத்தை இந்த ச்லோகத்தைக் கேட்டதுமே ச்யாமஸுந்தரன் கவர்ந்து விட்டான். அவன் சித்தசோர னல்லவா?

अहो श्लोकस्य माधुर्यं स्वादु स्वादु पदे पदे ।
उन्मादयति मां तात दत्वा कृष्णरतिं प्रभो ॥२३॥

23. அப்பா! இந்த ச்லோகத்தின் இனிமை அத்புதமாக இருக்கிறது. சொல்லுக்குச் சொல் இனிமையாக இருக்கிறது. ப்ரபோ! என் உள்ளத்தில் க்ருஷ்ணரதியைக் கொடுத்துப் பித்தனாக்குகிறது.

किमात्मनिष्ठया ब्रह्मन् किं कैवल्यसुखेन च ।
मुक्तानामपि भक्तानामयं श्लोको महारसः ॥२४॥

24. ஆத்மசிந்தனையாலோ கைவல்யத்தாலோ என்ன பயன் என்று தோன்றுகிறது. இந்த ச்லோகம் முக்தர்களுக்கும் பக்தர் களுக்கும் ஆனந்தத்தைத் தரவல்லது. மிகவும் ரஸமானது.

**श्रीसद्गुरुरुवाच**

श्रुत्वैतद्भगवान् व्यासः शुकवागमृतं तदा ।
आयुष्मान् भव पुत्रेति सगद्गदमुवाच ह ॥२५॥

**ஸ்ரீஸத்குரு**

25. இவ்வாறு பகவானாகிய வ்யாஸர் சுகருடைய வாக்

அமுதத்தைப் பருகி 'ஆயுஷ்மான் பவ புத்ர' என்று தொண்டை தழுதழுத்து ஆசீர்வதித்தார்.

आलिङ्ग्य पुत्रं सुप्रीतः पराशरसुतो हरिः ।
श्रीमद्भागवतं सर्वं प्रोवाच प्रेमतत्परः ॥२६॥

26. பராசரஸுதரான வ்யாஸபகவான் புத்ரனான ஸ்ரீசுகரை ஆலிங்கனம் செய்து கொண்டு ஸ்ரீமத்பாகவதத்தை பூர்ணமாக அவருக்குச் சொல்லிக் கொடுத்தார்.

गृहीतचेताः कीरोपि पुण्यश्लोकस्य लीलया ।
शनैः शनैर्भागवतं पठन् भुवि चचार च ॥२७॥

27. க்ருஷ்ணலீலையால் ஆகர்ஷிக்கப்பட்ட சித்தமுள்ள ஸ்ரீசுகரும் மெள்ள மெள்ள பாகவதத்தை படித்துக்கொண்டே உலகில் சஞ்சரித்தார்.

कदाचिज्जाह्नवीतीरे स्वच्छन्दगमनः शुकः ।
प्रायोपविष्टं राजानं विष्णुरातं ददर्श च ॥२८॥

28. ஒரு நாள் சுதந்திரமாய் அலையும் ஸ்ரீசுகர் கங்காதீரத்தில் ப்ராயோபவேசம் செய்து உட்கார்ந்துள்ள பரீக்ஷித்துராஜனைக் கண்டார்.

तस्मै प्रोवाच कृपया श्रीमद्भागवतं परम् ।
नानोपाख्यानसंयुक्तं कृष्णमाहात्म्यमुत्तमम् ॥२९॥

29.பல உபாக்யானங்கள் உள்ளதும், க்ருஷ்ணமாஹாத்மியத்தைச் சொல்வதுமான ஸ்ரீமத்பாகவதத்தை பரீக்ஷித்திற்கு ஸ்ரீசுகர் உபதேசம் செய்தார்.

धर्मं भागवतं शुद्धं परमात्मा सनातनः ।
सङ्ग्रहेण ददौ विष्णुर्ब्रह्मणे प्रणतात्मने ॥३०॥

30. ஸனாதனபரமாத்மாவான பகவானான விஷ்ணு முதன்முதல் சுத்தமான பாகவததர்மத்தை ஸங்க்ரஹமாக ப்ரம்மதேவனுக்கு உபதேசித்தார்.

नारदायोपदिश्याह भगवान् कमलासनः ।
विस्तारयेति भुवने कृष्णभक्तिविवर्धनम् ॥३१॥

31. பகவானாகிய ப்ரம்மா நாரதருக்கு உபதேசித்து, நீர் இதை உலகில் க்ருஷ்ணபக்தி உண்டாகும்படி விஸ்தாரப் படுத்துவீராக என்றார்.

व्यासाय प्रददौ सोपि शम्याप्रासनिवासिने ।
श्रीमद्भागवतञ्चैतत् पुराणं श्रेष्ठमुत्तमम् ॥३२॥

32. ஸம்யாப்ராஸம் என்ற ஆச்ரமத்தில் வ்யாஸர் இருக்கும் போது நாரதர் இந்த ஸ்ரேஷ்டமான புராணத்தை வ்யாஸருக்குச் சொன்னார்,

आत्मारामाग्रगण्याय पुत्रायैव महामुनिः ।
प्रेमानन्दरसस्निग्धं श्रीमद्भागवतं ददौ ॥३३॥

33. ஆத்மாராமர்களில் சிறந்த ஸ்ரீசுகருக்கு வ்யாஸர் க்ருஷ்ண ப்ரேமானந்தரஸம் நிரம்பிய இந்த பாகவதத்தைத் தந்தார்.

प्रददौ विष्णुराताय भगवान् बादरायणिः ।
शुश्रुवुर्मुनयः सर्वे तदा गङ्गातटे स्थितः ॥३४॥

34. பரீக்ஷித்துராஜனுக்கு ஸ்ரீசுகர் இந்த பாகவதத்தை உபதேசித்தார். அப்போது கங்காதீரத்திலிருந்த பல முனிவர்கள் இதைக் கேட்டனர்.

एवं वैष्णवधर्मस्य संप्रदायपुरःसराः ।
सर्वपापहरा नृणां प्रोक्ता गुरुपरम्परा ॥३५॥

*इति श्रीमत्परमहंसपरिव्राजकाचार्यवर्यसर्वप्राणिसंरक्षकजगद्गुरु-श्रीभगवन्नामबोधेन्द्रचरणारविन्दमकरन्दरसिकेन श्रीकृष्णप्रेमिमहाप्रभुणा विरचिते श्रीबृन्दावनमाहात्म्ये भागवतधर्मकाण्डे श्रीमद्भागवतमाहात्म्यं नाम विंशोऽध्यायः॥२०॥*

35. இவ்வாறு பாகவததர்மத்தின் குருபரம்பரை. இது ஸர்வபாபங்களையும் போக்கவல்லது.

**இவ்வாறு பரமஹம்ஸபரிவ்ராஜகாச்சார்யவர்ய ஸர்வப்ராணி ஸம்ரக்ஷக ஜகத்குரு ஸ்ரீபகவன்னாமபோதேந்த்ரஸரஸ்வதிசரணாரவிந்தங்களை ஆச்ரயித்த ஸ்ரீக்ருஷ்ணப்ரேமி மஹாப்ரபுவால் அருளிச்செய்யப்பட்ட ஸ்ரீப்ருந்தாவனமாஹாத்மியத்தில் பாகவததர்மகாண்டத்தில் இருபதாமத்யாயம் முற்றும்.**

|| इति भागवतधर्मकाण्डः समाप्तः ||

பாகவததர்மகாண்டம் ஸம்பூர்ணம்.

*|| श्रीभक्तकोलाहलार्पणमस्तु ||*

श्रीहरिः

*श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचितं*

# श्रीबृन्दावनमाहात्म्यम्

# ஸ்ரீப்ருந்தாவனமாஹாத்மியம்

## श्रीकृष्णवैभवकाण्डम्

## ஸ்ரீக்ருஷ்ணவைபவகாண்டம்

### अथ प्रथमोऽध्यायः

### முதல் அத்யாயம்

***भागवता ऊचुः***

स्वामिन् भागवता धर्माः साक्षात्तव मुखाम्बुजात् ।
संश्रुताः सर्वजीवानां संसारश्रमनाशनाः ॥१॥

**பாகவதர்கள்**

*1. ஸ்வாமின்! ஸர்வஜீவன்களுக்கும் ஸம்ஸார துக்கத்தை நீக்கும் பாகவததர்மங்களை தங்கள் முககமலத்திலிருந்தே கேட்டோம்.*

सांप्रतं श्रोतुमिच्छामो वयं कृष्णस्य वैभवम् ।
वाचामगोचरं दिव्यं परं कौतूहलं हि नः ॥२॥

*2. இப்போது ஸ்ரீக்ருஷ்ணவைபவத்தைக் கேட்க விரும்புகிறோம். அது சொல்லுக்கு அடங்காததுதான். இருந்தாலும் அதைக் கேட்க எங்களுக்கு குதூஹலமாக இருக்கிறது.*

***श्रीसद्गुरुरुवाच***

प्रभावमिह वक्ष्यामि कृष्णस्य परमात्मनः ।
भजन्ते यत्पदाम्भोजं ब्रह्मरुद्रादयः सुराः ॥३॥

ஸ்ரீஸத்குரு

3. இப்போது உங்களுக்கு ஸ்ரீக்ருஷ்ணப்ரபாவத்தைச் சொல்ல விரும்புகிறேன். ப்ரம்மருத்ராதி தேவர்கள்கூட ஸ்ரீக்ருஷ்ணபாதாரவிந்தத்தையே பஜிக்கின்றனர் அல்லவா?

संव्याप्तं श्रीवने पुण्ये घोरं दावानलं हरिः ।
निपीय शमयामास गर्वमग्नेः सुदुःसहम् ॥४॥

4. ப்ருந்தாவனத்தில் வியாபித்த காட்டுத்தீயையே அள்ளிக் குடித்து அக்னிதேவனின் கர்வத்தை கண்ணன் அடக்கி விட்டானன்றோ!

बलादपहृतं नन्दं वरुणेन महात्मना ।
आनीय दर्शयामास चात्मनो वैभवं महत् ॥५॥

5. பலாத்காரமாய் நந்தகோபனைக் கொண்டு போய்விட்ட வருணதேவனையும் அடக்கிக் கண்ணன் நந்தகோபனை மீட்டு வந்தான்.

कामञ्च पञ्चविशिखं सर्वभूतमनोहरम् ।
रासलीलान्तरे कृष्णो मोहयामास लीलया ॥६॥

6. உலகில் யாவரையும் வெற்றிகொண்டு கர்வமடைந்திருந்த காமதேவனையும் ராஸலீலையில் மோஹித்துவிழச் செய்தான் கண்ணன்.

आजहार गुरोः पुत्रमाज्ञया देवकीसुतः ।
शमयन् शमनं साक्षात्सर्वभूतमनोहरम् ॥७॥

7. ஸர்வபூதபயங்கரனான யமனையும் அடக்கி தேவகீ நந்தனனான கண்ணன் குருபுத்ரனைக்கொண்டு வந்து தந்தான்.

उद्धरन् गिरिराजेन्द्रं पालयन् गोकुलं हरिः ।
गर्वं पाकबलारातेः शमयामास माधवः ॥८॥

8. கோவர்த்தனமலையைக் குடையாய் பிடித்து தேவராஜனான இந்த்ரனின் கர்வத்தை அடக்கினான் கோவிந்தன்.

परिभूय सुरान् सर्वान् समरे सत्यभामया ।
शमयन् सुरराजेन्द्रमाजहार सुरद्रुमम् ॥९॥

9. தேவலோகம் சென்று எல்லாதேவர்களையும் யுத்தத்தில் வென்று ஸத்யபாமை வேண்டிய பாரிஜாதவ்ருக்ஷத்தைக் கொண்டுவந்தான்.

आच्छादयामास हरिश्चक्रेणामिततेजसा ।
तेजसा गर्वितं सूर्यं लीलया रणमण्डले ॥१०॥

10. பாரதயுத்தத்தில் தனது சக்ரத்தினால் ஸூர்யனின் தேஜஸும் மங்கும்படி செய்தான் மாதவன்.

चारयन् यमुनातीरे गोकुलं बाललीलया ।
ब्रह्माणं मोहयामास वेदगर्भं चतुर्मुखम् ॥११॥

11. ப்ருந்தாவனத்தில் மாடுமேய்க்கும் பாலலீலையில் ப்ரும்மாவையே மோஹிக்கச் செய்துவிட்டான் ஜகன் மோஹனன்.

शरासनस्य शाङ्र्गस्य टङ्कारेणैव केवलम् ।
बाणासुरमहायुद्धे वासुदेवो महाबलः ॥१२॥

विद्रावयामास गुहं गणेशं चण्डिकेश्वरम् ।
सर्वभूतगणोपेतं महादेवञ्च माधवः ॥१३॥

12,13. பாணாஸுரயுத்தத்தில் சார்ங்கம் என்ற தனது வில்லின் நாணொலியாலேயே கணேசன், முருகன், சண்டேசன்முதலிய சிவகணங்களுடன் சிவனையே ஓடும்படி செய்துவிட்டான் வாஸுதேவன்.

मायामाज्ञापयामास व्रजं गच्छेति माधवः ।
सापि चक्रे पराशक्तिरादेशं परमात्मनः ॥१४॥

14. கோகுலம்போய் தேவகிகர்பத்தை ரோஹிணிகர்பத்தில் சேர்க்கும்படி மஹாமாயையை நியமனம் செய்தான். பராசக்தியும் அப்படியே செய்தாள்.

पुनरावृत्तिरहिताद्वैकुण्ठादपि केशवः ।
आजहार शिशुं कृष्णः फाल्गुनेन समन्वितः ॥१५॥

साक्षान्नारायणो देवः कृष्णेन च महात्मना ।
अप्राकृतस्वरूपोपि सौन्दर्येण विनिर्जितः ॥१६॥

15,16. திரும்பிவராத மோக்ஷஸ்தானமான வைகுண்டம் போய் துவாரகாவாஸி ப்ராம்மணனின் புத்ரர்களை மீட்டுத் தந்தான். தனது ஸௌந்தர்யத்தினாலும் சாதுர்யத்தினாலும் பரவாஸுதேவனையே மோஹிக்கச் செய்துவிட்டான்.

एवं सर्वैः सदा देवैः संसेव्यो नन्दनन्दनः ।
ईश्वरः परमः कृष्णः स्वच्छन्दाखिलचेष्टितः ॥१७॥

17. இவ்வாறு எல்லா தேவர்களாலும் எப்போதும் ஸேவிக்கப்படும் க்ருஷ்ணபரமாத்மாவே ஸுதந்திரமான ஸர்வேச்வரன்.

नास्ति कृष्णात्परं दैवं नास्ति कृष्णात्परं पदम् ।
नास्ति कृष्णात्परं तत्त्वं नास्ति कृष्णात्परा गतिः ॥१८॥

18. ஸ்ரீக்ருஷ்ணனைக் காட்டிலும் பரதெய்வமில்லை.
ஸ்ரீக்ருஷ்ணனைக் காட்டிலும் பரமபதமில்லை.
ஸ்ரீக்ருஷ்ணனைக் காட்டிலும் பரதத்வமில்லை.
ஸ்ரீக்ருஷ்ணனைக் காட்டிலும் பரகதியில்லை.

कृष्ण एव परं ब्रह्म सर्वकारणकारणम् ।
ब्रह्मविष्णुमहेशाद्यास्तदंशा लोकनायकाः ॥१९॥

19. ஸ்ரீக்ருஷ்ணனே பரம்ப்ரும்மம். லோகநாயகர்களான ப்ரம்மா, விஷ்ணு, ருத்ரன்என்ற மும்மூர்த்திகளும் க்ருஷ்ணனின் அம்சரூபங்களே அன்றோ!

अवतारवरिष्ठत्वमपि कृष्णे प्रकाशते ।
अन्ये त्वंशावतारा हि कृष्णस्तु भगवान् स्वयम् ॥२०॥

20. அவதாரங்களில் சிறந்தது க்ருஷ்ணாவதாரமே. மற்ற எல்லா அவதாரமும் அம்சாவதாரமே. ஸ்ரீக்ருஷ்ணனே பூர்ணாவதாரம்.

अवतारेषु कृष्णस्य मत्स्यकूर्मादिषु स्फुटम् ।
वाञ्छितं भक्तनिकरैर्वात्सल्यं नैव शोभते ॥२१॥

21. க்ருஷ்ணன் செய்த மத்ஸ்ய கூர்ம வராஹ அவதாரங்களில் பக்தவாத்ஸல்யம் ப்ரகாசமாய் தெரியவில்லை.

नारसिंह्ये मुकुन्दस्य प्रह्लादवरदस्य तु ।
शोभते भक्तवात्सल्यं किन्तु लीला न दृश्यते ॥२२॥

22. ஸ்ரீக்ருஷ்ணன் செய்த நரஸிம்மாவதாரத்தில் ப்ரஹ்லாத வரதனாக இருப்பதால் பக்தவாத்ஸல்யம் ப்ரகாசமாகத் தெரிகிறது. ஆனால் நரசிம்மனிடம் லீலைகள் ஏதுமில்லை.

रामावतारे कृष्णस्य धीरोदात्तगुणान्विते ।
सामान्यधर्ममुख्यत्वात्प्रेमधर्मो निवार्यते ॥२३॥

23. தீரோதாத்தநாயகனான ராமாவதாரத்தில் ஸ்ரீராமன் ஸாமான்யதர்மத்திற்கு முக்கியத்துவம் தரவேண்டிய அவசியத்தினால் ப்ரேமைக்கு சுதந்திரம் கொடுக்கவில்லை.

अस्मिन् कृष्णावतारे तु सर्वसद्गुणसंयुते ।
रमन्ते रसिकाः सर्वे प्रेमभक्तिरसप्रियाः ॥२४॥

24. இதே க்ருஷ்ணாவதாரத்திலோ எல்லா குணங்களும் நிரம்பி இருப்பதால் ப்ரேமபக்தி ரஸத்தை விரும்பும் ரஸிகர்கள் இந்த அவதாரத்தை மிக விரும்புகின்றனர்.

अवतारी स्वयं कृष्णोप्यवतारं करोति च ।
तद्रहस्यमविज्ञाय मुह्यन्त्यपि महर्षयः ॥२५॥

25. ஸாக்ஷாத் பகவானே ஸ்ரீக்ருஷ்ணன். அவதாரம் மாத்ரமில்லை. பூர்ணப்ரும்மமாக இருந்துகொண்டே

அவதாரத்திலும் ஒருவனாய் மஹரிஷிகளால் பேசப்படுகிறான்.

कालकर्मस्वभावश्च प्रकृतिः पुरुषस्तथा ।
चित्तं बुद्धिर्मनश्चैव महाभूतानि पञ्च च ॥२६॥

ब्रह्मा विष्णुश्च रुद्रश्च देवाः सिद्धा महर्षयः ।
अण्डमण्डान्तरञ्चैव सर्वं श्रीकृष्ण एव हि ॥२७॥

26,27. காலம், கர்ம, சுபாவம், ப்ரக்ருதி, புருஷன், சித்தம், புத்தி, மனம், பஞ்ச பூதங்கள், மும்மூர்த்திகள், தேவர்கள், ஸித்தர்கள், மஹரிஷிகள், அண்டம், அண்டாந்தரம் யாவும் ஸ்ரீக்ருஷ்ணனே.

स एकः परमो देवो नानारूपधरो हरिः ।
आत्मना रमते नित्यमद्वैतं तदिति श्रुतिः ॥२८॥

28. ஒரே தேவனான க்ருஷ்ணபரமாத்மாவே பலரூபம் தரித்து விளையாடுகிறான் என்று அத்வைதமாய் ச்ருதி பேசுகிறது.

एकमेव परं ब्रह्म निराकारञ्च निर्गुणम् ।
संश्लिष्टं शक्तिभिर्नित्यं बहुरूपं प्रकाशते ॥२९॥

29. நிர்குண, நிராகாரமான ஏகமான பரப்ரும்மமே தனது சக்தியால் அனந்தநாம ரூபங்களுடன் தோன்றுகிறது.

सर्वशक्तस्य कृष्णस्य शक्तिं नानाविधां पराम् ।
वदन्त्युपनिषत्सङ्घा नामभिर्विविधैस्तथा ॥३०॥

30. ஸர்வசக்தனான ஸ்ரீக்ருஷ்ணபரமாத்மாவின் சக்திகள் அனந்தம் என்று உபநிஷத்துக்கள் யாவும் கூறுகின்றன.

तत्त्वज्ञा एव जानन्ति ब्रह्मशक्तिं यथाक्रमम् ।
अनन्तशक्तेः कृष्णस्य दुरूहा शक्तिरव्यया ॥३१॥

31. தத்வமறிந்த ப்ரும்மநிஷ்டர்களே முறைப்படி அந்த சக்திகளை அறிவார்கள். ஸர்வசக்தனான க்ருஷ்ண பரமாத்மாவின் அனந்தசக்திகளை யார் அறியமுடியும்!

परास्य शक्तिर्विविधा सर्ववेदान्तवेदिता ।
यया दधाति भगवान् दिव्यां ज्ञानबलक्रियाम् ॥३२॥

*32. இந்த பரமாத்மாவின் சக்தி பலவிதம் என்றும், அதனாலேயே ஞானம், பலம் க்ரியைகள் பரமாத்மாவிற்கு அனந்தம் என்றும் உபநிஷத்து கூறுகிறது.*

नारोप्यते वेदविद्भिः कृष्णे ज्ञानबलक्रिया ।
स्वाभाविक्येव सा प्रोक्ता कृष्णस्य परमात्मनः ॥३३॥

*33. ஸ்ரீக்ருஷ்ணபரமாத்மாவிடம் இத்தகைய சக்தியோ க்ரியையோ ஆரோபணம் செய்யப்படவில்லை. உண்மையாகவே இருக்கின்றன. ஸ்வாபாவிகீ என்று வேதமே கூறுகிறது அன்றோ!*

अनन्तशक्तिसंश्लिष्टः परमात्मा सनातनः ।
शुद्धसत्त्वमयं रूपं दधाति निजमायया ॥३४॥

*34. இவ்வாறு அனந்தசக்தியுடைய பகவான் சுத்தஸத்வமயமான திவ்யமான ரூபத்தை தரிக்கிறான்.*

स एव भगवान् कृष्णो बृन्दावनमुपागतः ।
लीलया मोहयन् सर्वं भुवनं सेश्वरं प्रभुः ॥३५॥

*35. அதே க்ருஷ்ணபரமாத்மாவே ப்ருந்தாவனம் வந்து தனது லீலைகளால் மும்மூர்த்திகளையும் மூன்று உலகங்களையும் மோஹிக்கச் செய்தான்.*

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये*
*श्रीकृष्णवैभवकाण्डे ऐश्वर्यनिरूपणं नाम प्रथमोऽध्यायः ॥१॥*

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமி மஹாப்ரபு அருளிய ப்ருந்தாவனமாஹாத்மியத்தில் ஸ்ரீக்ருஷ்ணவைபவகாண்டத்தில் முதல் அத்யாயம்.**

# अथ द्वितीयोऽध्यायः

## இரண்டாம் அத்யாயம்.

### श्रीसद्गुरुरुवाच

चतुर्भुजान्महाविष्णोः शङ्खचक्रगदाधरात् ।
सौन्दर्येण विशिष्टं तद्रूपं बृन्दावनप्रभोः ॥१॥

*1.சங்கசக்ரகதாதரனான விஷ்ணுவின் சதுர்புஜரூபத்தைவிட ப்ருந்தாவன விஹாரியான க்ருஷ்ணரூபம் அழகில் சிறந்ததாகும்.*

व्यक्ताव्यक्तस्वरूपोऽयं परमात्मा सनातनः ।
दधाति मङ्गलं रूपं भक्तानुग्रहतत्परः ॥२॥

*2. சிலஸமயம் ப்ரகடனமாயும், சிலஸமயம் மறைந்தும் பரமாத்மா பக்தர்கள் விரும்பிய ரூபத்தில் தோன்றுகிறான்.*

ब्रह्मविष्णुमहेशादिस्वरूपेण यथाक्रमम् ।
गृह्णाति लीलया कृष्णो मायिकञ्च गुणत्रयम् ॥३॥

*3. ப்ரம்மா விஷ்ணு ருத்ரன் என்னும் மும்மூர்த்திரூபத்தால் ஸ்ரீக்ருஷ்ணன் மாயையின் மூன்று குணங்களை எடுத்துக் கொள்கிறான்.*

न बाध्यते परं ब्रह्म मायिकैः प्राकृतैर्गुणैः ।
शुद्धसत्त्वस्वरूपं तत् सच्चिदानन्दलक्षणम् ॥४॥

*4. ப்ராக்ருதமான மாயாகுணங்களால் பரமாத்மா பாதிக்கப் படுவதில்லை. ஏனெனில் பரமாத்மா ஸத்சித்ஆனந்த ஸ்வரூப மானவர்.*

ब्रह्मरूपेण सृष्टिञ्च विष्णुरूपेण रक्षणम् ।
रुद्ररूपेण संहारं करोति भगवान् स्वयम् ॥५॥

*5. ஸ்ரீக்ருஷ்ணபரமாத்மாவே ப்ரம்மரூபத்தினால் ஸ்ருஷ்டியை யும் விஷ்ணுரூபத்தினால் ரக்ஷணத்தையும் ருத்ரரூபத்தினால் ஸம்ஹாரத்தையும் ஸ்வயமே செய்கிறார்.*

मूर्तित्रयेषु कृष्णस्य नारायणमनामयम् ।
मुमुक्षवः पूजयन्ति सात्त्विका वैष्णवा हरिम् ॥६॥

6. மும்மூர்த்திகளில் முமுக்ஷுக்களான வைஷ்ணவர்கள் குற்றமற்ற நாராயணமூர்த்தியையே உபாஸிக்கின்றனர்,

आराध्य विष्णुमीशानं सत्त्वशुद्धिः प्रजायते ।
सत्त्वाज्ज्ञानं तथा तेन मायामोहो विनश्यति ॥७॥

7. விஷ்ணுவை ஆராதித்தால்தான் ஸத்வகுணம் உண்டாகும். ஸத்வகுணத்தினால் சித்தஸுத்தி உண்டாகும். சித்தஸுத்தியினால் ஞானம் உண்டாகும். ஞானத்தினால் மோக்ஷம் உண்டாகும்.

तदेव परमं ब्रह्म विष्णोरंशेन भूतले ।
अवतीर्य यदोर्वंशे ववृधे व्रजमण्डले ॥८॥

8. அந்த பரப்ரும்மமே இந்த பூலோகத்தில் யதுகுலத்தில் தோன்றி கோகுலத்தில் வளர்ந்தது.

वासुदेवः परं ब्रह्म वासुदेवोऽभवद्भुवि ।
यमाश्रित्य सुराः सर्वे दनुजेन्द्रभयं जहुः ॥९॥

9. பரப்ரும்மமாகிய வாஸுதேவனே வஸுதேவன் குமாரனாகி தேவர்களின் துக்கத்தை நீக்கினான். அசுரர்களை வதம் செய்தான்.

सर्वाण्यप्राकृतान्येव रूपाणि परमात्मनः ।
तेषु कृष्णस्वरूपं तु सौन्दर्येण विशिष्यते ॥१०॥

10. பரமாத்மாவின் எல்லா ரூபங்களுமே அப்ராக்ருதமானவை. அவைகளுள் க்ருஷ்ணஸ்வரூபமே மிகவும் அழகியது.

साक्षात्कामयते लक्ष्मी रासमण्डलसंस्थितम् ।
वंशीधरं किशोरञ्च जगन्मोहनविग्रहम् ॥११॥

11. ராஸமண்டலத்தில் உள்ள கிசோரமூர்த்தியான வம்சீதரனான ஜகன்மோஹன ஸுந்தரனை ஸாக்ஷாத் மஹாலக்ஷ்மியே

ஆசைப்படுகிறாள்.

कृष्णपत्न्यस्तथा गोप्यश्चक्रपाणिं श्रियःपतिम् ।
अनन्यप्रेमसंपूर्णा नेच्छन्त्येव कदाचन ॥१२॥

12. ஆனால் க்ருஷ்ணபத்னிகளோ கோபிகைகளோ சக்ரபாணியான வைகுண்ட பதியைப் பார்க்கக்கூட ஒருக்காலும் விரும்பவில்லை.

स्वयं नारायणो देवः कृष्णदर्शनकौतुकात् ।
जहार बालकं कञ्चिद्द्वारकाजातमच्युतः ॥१३॥

13. ஸாக்ஷாத் நாராயணனே கண்ணனின் அழகைக் காணவேண்டி த்வாரகையில் உள்ள குழந்தைகளைக் கொண்டு ஒளித்தானன்றோ!

कदाचिद्यमुनातीरे भगवान् श्यामसुन्दरः ।
क्रीडन् गोपीजनैः साकं चचार मुरलीधरः ॥१४॥

14. ஒருஸமயம் முரளீதரனான க்ருஷ்ணன் கோபிகைகளுடன் விளையாடிக்கொண்டிருந்தான்.

तदा लीलान्तरे कृष्णो वञ्चयन् कुञ्जमागतः ।
विचिन्वन्त्यश्च ताः सर्वास्तन्निकुञ्जमुपाययुः ॥१५॥

15. விளையாட்டின் மத்தியில் கோபிகைகளை ஏமாற்றிவிட்டு கண்ணன் ஓடிவந்து ஒரு நிகுஞ்ஜத்தில் ஒளிந்துகொண்டான். தேடிவந்த கோபிகைகள் நிகுஞ்ஜத்தில் நுழைந்தனர்.

अलब्धमार्गो गोविन्दो निकुञ्जाद्धावितुं तदा ।
सद्य एव दधौ रूपं वैष्णवं तच्चतुर्भुजम् ॥१६॥

16. வெளியில் ஓடிவிட வழியில்லாத கண்ணன் உடனே சதுர்புஜமாய் விஷ்ணுரூபத்தில் காட்சியளித்தான்.

तदा ता गोपिकाः सर्वाः कृष्णप्रेमपरायणाः ।
कोयमन्यो निकुञ्जेस्ति शङ्खचक्रगदाधरः ॥१७॥

अस्माकं प्राणनाथस्तु द्विभुजो मुरलीधरः ।
सौन्दर्यसारसर्वस्वस्वरूपः कुत्र तिष्ठति ॥१८॥

अन्योन्यमेवं पृच्छन्त्यो गोपिका विरहाकुलाः ।
अन्यत्र जग्मुः कृच्छ्रेण कृष्णान्वेषणतत्पराः ॥१९॥

17-19. அப்போது அந்த கோபிகைகள் கண்ணனிடமே காதல் கொண்டவர்களாயிருப்பதால் ' அடீ, இங்கே யாரோ ஒருவர் நான்குகைகளுடன் நிற்கிறார். சங்கு சக்ரம் வைத்துக் கொண்டிருக்கிறார். நமது முரளீதரன் எங்கே போனான்? அவனல்லவோ நமது ப்ராணநாதன். அவன் அழகுக்கு உலகில் யார்தான் ஈடு! வாடி போவோம்.' என்று பரஸ்பரம் கேட்டுக் கொண்டே கண்ணனை தேடி வெளியே ஓடிவிட்டனர்.

सद्य एव प्रभुः कृष्णः स्वीयरूपेण संस्थितः ।
आनीय गोपिकाः सर्वाः परिरेभे पुनः पुनः ॥२०॥

20. உடனே கண்ணன் தனது நிஜரூபத்தில் காட்சி தந்து கோபிகைகளைக் கூப்பிட்டு ஆலிங்கனம் செய்து கொண்டு ஆறுதல் சொன்னான்.

अन्येषु क्षेत्रमुख्येषु मधुराद्वारकादिषु ।
विष्णोरंशावतारोऽयं श्रीकृष्णो देवकीसुतः ॥२१॥

21. மதுரை, த்வாரகை முதலிய மற்ற க்ஷேத்ரங்களில் க்ருஷ்ணன் விஷ்ணுவின் அம்சாவதாரமாக இருக்கின்றான்.

बृन्दावने स्वयं कृष्णः पूर्णं ब्रह्म सनातनम् ।
प्रेमभावेन शुद्धेन गोपीभिरनुभूयते ॥२२॥

22. ப்ருந்தாவனத்திலோ க்ருஷ்ணன் சுயம் பூர்ணப்ரும்மமாகவே இருந்து ப்ரேமையுடன் கோபிகைகளால் அனுபவிக்கப் படுகிறான்.

अत्रैव रसरूपस्य कृष्णस्य परमात्मनः ।
स्वच्छन्दचेष्टितस्यायं प्रेमभावो निरङ्कुशः ॥२३॥

23. இங்கு ப்ருந்தாவனத்தில்தான் ரஸரூபனான ஸ்ரீக்ருஷ்ணனின் ப்ரேமையும் லீலைகளும் தடையின்றி இருக்கின்றன.

अन्यत्र भगवान् कृष्णो धर्मरक्षणतत्परः ।
लोकवेदपरैर्दिव्यैर्व्यवहारैर्निबध्यते ॥२४॥

24. மற்ற இடங்களில் க்ருஷ்ணன் லோகத்துக்கு பயந்தும், வேதத்துக்கு பயந்தும், தர்மத்திற்கு கட்டுப்பட்டு நடக்கிறான்.

सर्वस्वतन्त्रो भगवानवतीर्य स्वमायया ।
आत्मानं लोकधर्मेण बध्नाति स्वयमेव हि ॥२५॥

25. பகவான் ஸர்வசுதந்திரமானவன் ஆயினும் தனது மாயையால் அவதரித்துக் கட்டுப்பட்டவன்போல் நடிக்கிறான்.

बृन्दावने परं ब्रह्म प्रेमभाववशीकृतम् ।
लोकवेदक्रियां त्यक्त्वा रमते वल्लवीगणैः ॥२६॥

26. ப்ருந்தாவனத்திலோ அதே பரமாத்மா கோபிகைகளின் ப்ரேமைக்கு வசமாகி சுதந்திரமாய் லீலைகள் புரிகிறான்.

अत एव प्रियं कृष्णं धर्मरक्षणतत्परम् ।
योगिभिश्च समाराध्यं लौकिकैर्वैदिकैर्जनैः ॥२७॥

धर्मार्थकाममोक्षाणां दातारं द्वारकापतिम् ।
साक्षान्नारायणं देवं नररूपेण संस्थितम् ॥२८॥

रुक्मिणीसत्यभामादिमहिषीगणसेवितम् ।
नानाकर्माणि कुर्वन्तं जगतां मङ्गलाय च ॥२९॥

समन्तकपञ्चकक्षेत्रे दृष्ट्वापि प्राणवल्लभम् ।
याचिताश्चापि तेनैव गन्तुञ्च द्वारकापुरीम् ॥३०॥

किन्तु वल्लवसुन्दर्यः कृष्णस्मरणतत्पराः ।
स्वामिन्या राधया सार्धं ययुः श्रीवनमेव ताः ॥३१॥

27-31. கோபிகைகள் குருக்ஷேத்ரத்தில் கண்ணனைக் கண்டபோது கண்ணன் சுதந்திரமாக இல்லை என்று பார்த்து வருந்தினர். முனிவர்களுக்கும் யோகிகளுக்கும் சாஸ்த்திரத்திற்கும் வேதத்திற்கும் லோகத்துக்கும் கட்டுப்பட்டு பலவிதமான அவதாரகார்யங்களை செய்துகொண்டிருப்பதையும் அந்த க்ருஷ்ணனை ருக்மிணி, சத்யபாமா முதலிய பட்டமஹிஷிகள் ஸேவித்துக் கொண்டிருப்பதையும் கண்டனர். துவாரகைக்கு தன்னுடனேயே வந்துவிடும்படி கண்ணன் கூப்பிட்டும்கூட ராதையும் கோபிகைகளும் ப்ருந்தாவனமே சென்றுவிட்டனர். ப்ருந்தாவனத்திலேயே இருந்துகொண்டு க்ருஷ்ணஸ்மரணமே போதுமென்று நினைத்தனர்.

बृन्दावने गोकुले च शुद्धभक्तिः प्रकाशते ।
ज्ञानवैराग्यसंयुक्ता भक्तिरन्यत्र दृश्यते ॥३२॥

32. கோகுலத்திலும் ப்ருந்தாவனத்திலும் சுத்தபக்தி ப்ரகாசிக்கிறது. மற்ற இடங்களில் ஞானவைராக்யத்துடன் கூடிய பக்தியே இருக்கிறது.

वैदिकानि च कर्माणि योगाभ्यासं व्रतानि च ।
आत्मानात्मविचारञ्च नेच्छन्ति व्रजवासिनः ॥३३॥

33. வைதிககர்மங்கள், யோகாப்யாஸம், ஆத்மவிசாரம் இவைகளை வ்ரஜவாஸிகள் விரும்புவதில்லை.

सदा सर्वत्र गोविन्दं नवमन्मथविग्रहम् ।
भावयन्तः कीर्तयन्तश्चरन्ति यमुनावने ॥३४॥

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये वैभवकाण्डे श्रीकृष्णसौन्दर्यनिरूपणं नाम द्वितीयोऽध्यायः ॥२॥*

34. எப்போதும் எங்கும் நவமன்மதவிக்ரஹனான கோவிந்தனையே நினைத்துக் கொண்டும் பாடிக்கொண்டும்

ப்ருந்தாவனத்தில் யமுனாதீரத்தில் ஸஞ்சரிக்கின்றனர்.

**இவ்வாறுஸ்ரீக்ருஷ்ணப்ரேமி மஹாப்ரபுஅருளிய ப்ருந்தாவனமாஹாத்மியத்தில் ஸ்ரீக்ருஷ்ணவைபவகாண்டத்தில் இரண்டாம் அத்யாயம்**

# अथ तृतीयोऽध्यायः

## மூன்றாம் அத்யாயம்

### भागवता ऊचुः

त्यक्त्वा प्रेमपरां राधां तथैव व्रजसुन्दरीः ।
कथं जगाम मधुरां भगवान् करुणानिधिः ॥१॥

**பாகவதர்கள்**

1. ப்ரேமையே வடிவான ராதையையும் அவ்வாறே கோபிகைகளையும் விட்டுவிட்டு கருணாநிதியான பகவான் எப்படித்தான் மதுரைக்குப் போனானோ!

आश्रितस्य जनस्यास्य परित्यागो न शोभते ।
वद सद्गुरुराजेन्द्र तत्र कारणमुत्तमम् ॥२॥

2. அண்டிய ஜனங்களைக் கைவிடுவது அழகாக இல்லையே! குருதேவ! இதற்குக் காரணமென்ன?

### श्रीसद्गुरुरुवाच

सन्ततं नित्यलीलायां गोलोके रासमण्डले ।
दिव्ये बृन्दावने सूक्ष्मे शाश्वते च सनातने ॥३॥

रमते भगवान् कृष्णो गोपीभिः सह राधया ।
कदापि विरहो नैव सत्यं सत्यं वदाम्यहम् ॥४॥

**ஸ்ரீஸத்குரு**

3,4. சாச்வதமான கோலோகத்தில் திவ்யமான ப்ருந்தாவனத்தில் ராஸமண்டலத்தில் நித்யலீலையில் ராதையுடனும் கோபிகைகளுடனும் கண்ணன் தினமும் லீலை செய்கிறான். ஒரு போதும் பிரிவதில்லை. இது ஸத்யத்தின்மேல் ஸத்யம்.

व्यवहारे चरित्रे तु विरहोऽयं प्रदृश्यते ।
मायैषा देवदेवस्य नानाभावप्रदर्शिनी ॥५॥

5. வ்யவஹாரலீலையில் விரஹம் காட்டப்படுகிறது. இது பகவானின் மாயா சேஷ்டிதம். மாயை பலவிதமான பாவங்களைக் காட்டுகிறது.

रङ्गमध्ये समासीना नाट्यभावविचक्षणाः ।
दुःसहं विरहञ्चापि दर्शयन्ति यथा नटाः ॥६॥

6. அரங்கில் நடிகர்கள் சேர்ந்து ஒரே இடத்திலிருக்கும்போதே விரஹமடைந்தது போல் பாவங்களைக் காட்டுகின்றனரே. அதுபோல்தான்.

तथा राधामुकुन्दौ च प्रेमभावप्रकाशकौ ।
संयुक्तौ नित्यलीलायामप्यत्र विरहाकुलौ ॥७॥

7. அவ்வாறே ராதையும் க்ருஷ்ணனும் நித்யலீலையில் சேர்ந்தே இருந்தபோதிலும் வியவஹாரலீலையில் பிரிந்ததுபோல் விரஹத்தை நடிக்கின்றனர்.

केवलं नाट्यमेवैतत्तयोर्विरहचेष्टितम् ।
संसिद्धे नित्यसंयोगे नित्यलीलैव वास्तवी ॥८॥

8. விரஹம் வெறும் நடிப்பு மட்டுமே. நித்யஸம்யோகம் ஸித்திக்கும் நித்யலீலையே வாஸ்தவம்.

भोजराजप्रभृतिभिः पीडितं सज्जनं तथा ।
देवकीवसुदेवौ च पुत्रशोकेन पीडितौ ॥९॥

चिन्तयन् करुणासिन्धुस्तत्याज व्रजमण्डलम् ।
सर्वलोकहितायैव जहौ चैवात्मनः सुखम् ॥१०॥

9,10. கம்ஸனால் மக்கள் துன்பப்படுவதையும், பெற்றோர்களான தேவகி வஸுதேவர்கள் கஷ்டப்படுவதையும் பார்த்து, கருணாஸிந்துவான கண்ணன் தனது ஸுகத்தைக்கூட பாராட்டாமல் வ்ரஜபூமியைத் த்யாகம் செய்துவிட்டான்.

एककार्यार्थमागत्यानेककार्यकरो हि सः ।
एवं कृष्णेन लोकेऽस्मिन् स्वचारित्रं प्रकाशितम् ॥११॥

11. ஒரு கார்யார்த்தம் வந்துவிட்டு பல கார்யங்களை செய்து முடிப்பது க்ருஷ்ணாவதார சாதுர்யம். இவ்வாறே சரித்ரத்தைப் ப்ரகாசப்படுத்துகிறான்.

न कदापि परित्यागः कृष्णेन परमात्मना ।
आश्रितानां स्वभक्तानां क्रियतेपि यदृच्छया ॥१२॥

12. ஒருக்காலும் அண்டியவர்களை ஸ்ரீக்ருஷ்ணன் கைவிடவே மாட்டான். க்ருஷ்ணனுக்கு தவறுதலோ மறதியோ கிடையாது.

भक्ता एव हि जानन्ति तस्य लीलारसं परम् ।
दुरूहं परमं पुण्यं जगन्मङ्गलकारणम् ॥१३॥

13. அவனுடைய லீலாரஸத்தை பக்தர்களே அறிவார்கள். அவனது லீலை நுட்பமானது. பரம பவித்ரமானது. ஜகன்மங்களமானது.

तस्माद्भक्तजनश्रेष्ठो रसिको रम्यमानसः ।
नित्यलीलां सदा ध्यायेद्द्विविधां चित्तरञ्जनीम् ॥१४॥

14. ஆதலால் ரஸிகனான பக்தன் பலவிதமான மனதுக்கு இனிய க்ருஷ்ணனின் நித்யலீலைகளையே சிந்திக்கவேண்டும்.

नानारसविलुब्धानां भक्तानां व्यवहारिणाम् ।
रञ्जनायैव कृष्णेन मायालीला प्रदर्शिता ॥१५॥

15. பலவிதமான ரஸத்தை அனுபவிக்கும் பலவிதமான மனப்போக்கு உடைய வியவஹாரிகளுக்காகவே மாயாமயமான வ்யவஹாரலீலை காட்டப்பட்டது.

गोपीभावेन संयुक्ताः शृङ्गाररसरञ्जिताः ।
भावयन्ति सदा प्रेम्णा नित्यलीलां तु वास्तवीम् ॥१६॥

16. கோபீபாவத்துடன்கூடிய ரஸிகபக்தர்களே ச்ருங்காரரஸ பூர்ணமான ராதாக்ருஷ்ண நித்யலீலைகளையே பாவிப்பார்கள்.

शुद्धप्रेमानुभूत्यैव द्रवीभूतात्ममानसाः ।
न स्मरन्ति कदाप्यस्य लीलां तु व्यावहारिकीम् ॥१७॥

17. சுத்தப்ரேமையால் உருகும் மனமுடைய ப்ரேமபக்தர்களோ க்ருஷ்ணனின வ்யவஹாரலீலைகளை ஒருக்காலும் நினைத்துக் கூட பார்ப்பதில்லை.

श्रीमद्भागवतञ्चापि न पठन्ति च भारतम् ।
ध्यायन्तः श्रीवनं नित्यं जीवन्ति सुखमेव ते ॥१८॥

18. இவர்கள் ஸ்ரீமத்பாகவதம், ஸ்ரீமஹாபாரதம்முதலிய இதிஹாஸபுராணங்களைக்கூட படிப்பதில்லை. ஸ்ரீப்ருந்தாவன ஸ்மரணத்திலேயே ஸுகமாய் ஜீவிக்கின்றனர்.

मधुरं श्रीवनञ्चापि मधुरं गोपिकागणम् ।
मधुरं माधवञ्चापि मधुरं रासमण्डलम् ॥१९॥

राधाविलासं मधुरं मधुरञ्च लतागृहम् ।
नृत्यन्ति परमोन्मत्ताः स्मृत्वा स्मृत्वा पुनः पुनः ॥२०॥

19,20. மதுரமான ஸ்ரீவனத்தையும், மதுரமான கோபீமண்டலத்தையும், மதுரமான மாதவனையும், மதுரமான ராஸலீலையையும், மதுரமான ராதாவிலாஸத்தையும் மதுரமான நிகுஞ்ஜத்தையும் மீண்டும் மீண்டும் நினைத்து நினைத்து பித்தர்களாகி கூத்தாடுகின்றனர்.

न तेषामवकाशोस्ति नित्यलीलाकुलात्मनाम् ।
व्यवहारकथां स्मर्तुं श्रोतुं भागवतं तथा ॥२१॥

21. நித்யலீலையில் சொக்கிப்போன இவர்களுக்கு வ்யவஹாரக் கதைகளை நினைப்பதற்கோ, வ்யவஹார கதைகளான கம்ஸவதம் முதலியவைகளை சொல்லும் ஸ்ரீபாகவதத்தைக் கேட்பதற்குக்கூட அவகாசமில்லை.

बृन्दावनपरित्यागं हरेः प्रियतमस्य ते ।
मिथ्येति प्रवदन्त्येव नित्यलीलारसोन्मदाः ॥२२॥

22. நித்யலீலாரஸபித்தர்களான பக்தர்கள் ஸ்ரீக்ருஷ்ணன் ப்ருந்தாவனத்தைவிட்டு மதுரைக்கும் போகவில்லை. துவாரகைக்கும் போகவில்லை. பாரதயுத்தமும் நடத்தவில்லை. இது எல்லாம் பொய் என்பார்கள்.

सत्यमेव हि तत्सर्वं मायिकं व्यावहारिकम् ।
कृष्णस्य देवदेवस्य नित्यलीलैव वास्तवी ॥२३॥

23. வ்யவஹாரலீலைகள் மாயிகமாக இருந்தபோதிலும் அவைகளும் உண்மைதான். ஆனால் நித்யலீலையே நித்யமானவை. வ்யவஹாரலீலை தாற்காலிகமானவை.

तस्माद्रसज्ञो भक्तस्तु सदा बृन्दावनं स्मरन् ।
गोपीजनप्रियेनैव कृष्णेन सह मोदते ॥२४॥

24. ஆகையால் ரஸமறிந்த ப்ரேமபக்தன் எப்போதும் நித்யலீலைகளை அனுஸந்தானம் செய்துகொண்டு கண்ணனுடன் கூடி மகிழ்வான்.

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये श्रीकृष्णवैभवकाण्डे नित्यसंयोगनिरूपणं नाम तृतीयोऽध्यायः ॥३॥*

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிமஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில் ஸ்ரீக்ருஷ்ணவைபவகாண்டத்தில் மூன்றாம் அத்யாயம்**

# अथ चतुर्थोऽध्यायः

## நான்காம் அத்யாயம்

**भागवता ऊचुः**

कृष्णस्य रूपसौन्दर्यमिह वर्णय सद्गुरो ।
परमानन्दसन्दोहवर्धनञ्चोपशृण्वताम् ॥१॥

**பாகவதர்கள்**

1. ஸத்குரோ! கண்ணனின் ரூபஸௌந்தர்யத்தை வர்ணிப்பீராக. கேட்பவர்களுக்குப் பரமானந்தகரமானதல்லவா!

**श्रीसद्गुरुरुवाच**

अप्राकृतैर्लक्षणैस्तत्संपूर्णं चिन्मयं हरेः ।

स्वरूपमद्य वक्ष्यामि साधवः शृणुतादरात् ॥२॥

ஸ்ரீஸத்குரு

2. ஸ்ரீக்ருஷ்ணனின் சின்மயமான ஸ்வரூபம் அப்ராக்ருதமான அனேக லக்ஷணங்களுடன் கூடியது அவைகளைச் சொல்வேன். ஸாதுக்களே! கேளுங்கள்.

केवलं भगवद्रूपे प्रकाशन्ते ह्यशेषतः ।
शास्त्रेषु लक्षणान्येवं द्वात्रिंशत्कथितानि तु ॥३॥

3. சாஸ்த்ரங்களில் சொல்லப்பட்ட முப்பத்திரெண்டு லக்ஷணங்களும் பகவத்ரூபத்தில்மட்டும் காணக்கிடைக்கின்றன.

सप्तस्वङ्गेषु रागश्च षट्सु स्थानेषु तुङ्गता ।
स्थानत्रयेषु विस्तारः खर्वता च प्रगल्भता ॥४॥

पञ्चस्वङ्गेषु दैर्घ्यञ्च तथा पञ्चसु सूक्ष्मता ।
द्वात्रिंशल्लक्षणान्येवं दृश्यन्ते कृष्णविग्रहे ॥५॥

4,5. ஏழு அங்கங்களில் சிவப்பும், ஆறு இடங்களில் உயர்வும், மூன்று இடங்களில் கரவும். மூன்று இடங்களில் விஸ்தாரமும், மூன்று இடங்களில் கம்பீரமும், ஐந்து இடங்களில் தீர்கமும், ஐந்து இடங்களில் மென்மையும், இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ண விக்ரஹத்தில் முப்பத்திரெண்டு லக்ஷணங்கள் காணப் படுகின்றன.

नेत्रान्ततालुरसनास्वोष्ठाधरनखेषु च ।
पादयोः करयोरेवं रक्तिमा दृश्यते स्फुटम् ॥६॥

6. கண்ஓரம், கன்னம், நாக்கு, உதடுகள், நகம், கரதலம், சரணம் இந்த ஏழு இடங்களில் சிவப்பு காணப்படுகிறது.

नासिकायां मुखे कट्यां वक्षः स्कन्धनखेषु च ।
तुङ्गता दृश्यते व्यक्तं कृष्णस्याङ्गेषु षट्सु च ॥७॥

7. மூக்கு, முகம், இடுப்பு, மார்பு, நகம், கழுத்து இந்த ஆறு இடமும் உன்னதமானது.

वक्षःस्थले तथा कट्यां ललाटे च जगत्पतेः ।
एवमङ्गेषु कृष्णस्य विस्तारस्त्रिषु दृश्यते ॥८॥

8. மார்பு, நெற்றி, இடுப்பு இம்மூன்றும் லோகநாதனான கண்ணனுக்கு விஸ்தாரமானவை.

ग्रीवायामपि जङ्घायां मेहने च श्रियःपतेः ।
स्थानत्रये स्वरूपस्य खर्वता दृश्यते स्फुटम् ॥९॥

9. ஸ்ரீய:பதியான கண்ணனின் ரூபத்தில் கழுத்து, முழங்கால், குறி இம்மூன்றும் கரவு சரிவானது.

नाभ्यां स्वरे तथा सत्त्वे त्रिषु गम्भीरता स्मृता ।
पद्मनाभो महासत्त्वो मत्तहंसस्वनो हरिः ॥१०॥

10. பகவானின் தோற்றம், குரல், நாபி இம்மூன்றும் கம்பீரமானது. ஆதலால்தான் பத்மநாபன் என்றும், மஹாஸத்வன், மத்தஹம்ஸஸ்வரன் என்றும் சொல்லுகிறோம்.

नासिकाभुजनेत्रेषु हनौ जानुनि चैव हि ।
दृश्यते दीर्घता व्यक्तं कृष्णस्य परमात्मनः ॥११॥

11. மூக்கு, புஜம், நேத்ரம், கன்னம், குதிகால் இவை ஐந்து கண்ணனுக்கு தீர்க்கமானவை.

त्वक्केशाङ्गुलिदन्तेषु तथैवाङ्गुलिपर्वसु ।
सूक्ष्मता दृश्यते व्यक्तं कृष्णस्य जगतीपतेः ॥१२॥

12. ஜகத்பதியான க்ருஷ்ணனின் ரூபத்தில் தோல், கேசம், விரல், விரல்களின் மூட்டு, பல் இவை ஸூக்ஷ்மமானவை.

सर्वलक्षणसंपन्नं श्रीकृष्णः पुरुषोत्तमः ।
सौन्दर्यादपि गाम्भीर्यात्सेव्यते सकलैर्नरैः ॥१३॥

13. இவ்வாறு ஸர்வலக்ஷணங்களும் உள்ள ஸ்ரீக்ருஷ்ணனே புருஷோத்தமன். ஆதலால்தான் ஸர்வ ஜனங்களும் அவனைக் கண்டு மயங்குகின்றனர்.

महापुरुषचिह्नानि सकलानि श्रियःपतिः ।
प्रकाशते स्फुटं शुद्धं गोकुलेन्द्रस्य विग्रहे ॥१४॥

14. மஹாபுருஷ லக்ஷணங்கள் யாவும் ஸ்ரீக்ருஷ்ணனின் திருமேனியில் மட்டும் ஸ்புரிக்கின்றன.

अष्टकोणञ्चोर्ध्वरेखा स्वस्तिकं पद्ममेव च ।
ध्वजो वज्रञ्चाङ्कुशश्च यवश्च कलशं तथा ॥१५॥

इन्द्रचापं त्रिकोणञ्च मत्स्यचिह्नञ्च गोष्पदम् ।
जम्बूफलमर्धचन्द्रश्चाम्बरञ्चेति षोडश ॥१६॥

लक्षणानि मुकुन्दस्य सव्यदक्षिणयोः पदोः ।
दृश्यन्ते मङ्गलान्येव दिव्यानि च यथाक्रमम् ॥१७॥

15,16,17. முகுந்தனின் வலது சரணத்தில் அஷ்டகோணம், ஊர்த்வரேகா, ஸ்வஸ்திகம், பத்மம் த்வஜம், வஜ்ரம், அங்குசம், யவம் என்னும் எட்டு ரேகைகளும், இடது சரணத்தில் கலசம், இந்த்ரதனுஸ், த்ரிகோணம், மத்யஸ்தம், கோஷ்பதம், ஜம்பூபலம், அர்த்தசந்த்ரம், அம்பரம் என்னும் எட்டு ரேகைகளும் காணப்படுகின்றன. இவை திவ்யமானவை. மங்களமானவை.

अत एव स्वयं कृष्णो भगवानिति गीयते ।
एवं सुलक्षितः कृष्णो लक्षणैरन्यदुर्लभैः ॥१८॥

17. மற்றவர்களுக்கு துர்லபமான இந்த ரேகைகள் இருப்பதால்தான் ஸ்ரீக்ருஷ்ணன் பகவான் எனப்படுகிறான்.

एवं तत्कथितं दिव्यं महापुरुषलक्षणम् ।
महाभागवता यूयं किमन्यच्छ्रोतुमिच्छत ॥१९॥

इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये वैभवकाण्डे
श्रीकृष्णसामुद्रिकालक्षणवर्णनं नाम चतुर्थोऽध्यायः ॥४॥

*18. பாகவதோத்தமர்களே! இவ்வாறு திவ்யமான மஹாபுருஷலக்ஷணம் உங்களுக்குச் சொல்லப்பட்டது. மேலும் என்ன கேட்க விரும்புகின்றீர்கள்?*

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமி மஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில் ஸ்ரீக்ருஷ்ணவைபவகாண்டத்தில் நான்காம் அத்யாயம்.**

# अथ पञ्चमोऽध्यायः

## ஐந்தாம் அத்யாயம்

### भागवता ऊचुः

कृष्णस्य देवदेवस्य गुणमाहात्म्यवर्णनम् ।
सांप्रतं श्रोतुमिच्छामः पुण्यश्लोकशिखामणेः ॥१॥

**பாகவதர்கள்**

*1. புண்யச்லோகசிகாமணியும், தேவதேவனுமான ஸ்ரீக்ருஷ்ணனின் குணமாஹாத்மியத்தைக் கேட்க விரும்புகிறோம்.*

### श्रीसद्गुरुरुवाच

प्रज्ञानघनरूपोऽयं परमात्मा सनातनः ।
कल्याणगुणसंपूर्णो यः सर्वज्ञ इति श्रुतेः ॥२॥

**ஸ்ரீஸத்குரு**

*2. ஸனாதனமான ஸ்ரீக்ருஷ்ணபரமாத்மா ஞானகனஸ்வரூபன். ய:ஸர்வக்ஞ: ய:ஸர்வவித் என்று ச்ருதி கூறுவதால் அனந்த கல்யாணகுணங்களுடையவன்.*

सर्वज्ञे सच्चिदानन्दे न सन्ति प्राकृता गुणाः ।
तस्माद्वेदान्तवाक्यानि निर्गुणं तं वदन्ति हि ॥३॥

*3. ஸர்வக்ஞனான பகவானிடம் ப்ராக்ருதமான குணங்கள் இல்லை. ஆதலால்தான் வேதாந்தவாக்யங்கள் அவனை நிர்குணனென்று ப்ரதிபாதிக்கின்றன.*

अनन्तत्वाद्गुणानाञ्च गोविन्दस्य महात्मनः ।
प्राधान्यतः प्रवक्ष्यामि नास्त्यन्तो विस्तरस्य तु ॥४॥

4. பரமாத்வான கோவிந்தனின் குணங்கள் அனந்தமாக இருப்பதால் முக்யமாக சில குணங்களைச் சொல்வேன். அவைகளுக்கு ஒரு எல்லையே இல்லை.

न पार्थिवानि गणयेद्रजांसि कुशलोपि सन् ।
एवं बृन्दावनेशस्य गुणान् वक्तुं न शक्नुयात् ॥५॥

5. உலகில் உள்ள மணலை ஒவ்வொன்றாக எண்ணினாலும் எண்ணிவிடலாம். ஆனால் ப்ருந்தாவனவிஹாரியின் குணங்களை எண்ணிவிட முடியாது.

सत्यसन्धः सदाचारः पवित्रगुणचेष्टितः ।
अपारकरुणासिन्धुः क्षमावानपराधिषु ॥६॥

भक्तार्थं त्यक्तसर्वस्वः सदा सन्तुष्ट एव च ।
ऋजुस्वभावः शान्तश्च दान्तश्चापि महातपाः ॥७॥

सर्वभूतसमश्चायमात्मारामो बहुश्रुतः ।
तितिक्षावान् विरक्तश्च सर्वज्ञः सर्वपालकः ॥८॥

ईश्वरः परमः कृष्णस्तेजस्वी शौर्यवारिधिः ।
बलवान् स्मृतिमान् धीरो दिव्यप्रतिभयायुतः ॥९॥

स्वतन्त्रः कुशलः कान्तः प्रगल्भः प्रश्रयान्वितः ।
मृदुस्वभावो भगवानोजस्वी महसान्वितः ॥१०॥

सुशीलः सुव्रतश्चैव गम्भीरः सुस्थिरो महान् ।
आस्तिको वैदिकश्चैव कीर्तिमान् मानवांस्तथा ॥११॥

नित्यनूतनसौन्दर्यो नित्ययौवनविग्रहः ।
सच्चिदानन्दरूपश्च सर्वसिद्धिनिषेवितः ॥१२॥

अप्रमेयमहाशक्तिः कोटिब्रह्माण्डनायकः ।
परमाद्भुतलीलश्च मधुरप्रेमपण्डितः ॥१३॥

जगन्मोहनलावण्यो नारीगणमनोहरः ।
एवञ्च सर्वसुलभो डम्भासूयाविवर्जितः ॥१४॥

सर्वलक्षणसंयुक्तः सर्वभाषाविचक्षणः ।
प्रियंवदः पूर्वभाषी वावदूकः सुपण्डितः ॥१५॥

सर्वसामर्थ्यसंयुक्तः सर्वशास्त्रविशारदः ।
दृढव्रतः कृतज्ञश्च सर्वेषामुपकारकृत् ॥१६॥

अनृशंसो वदान्यश्च धार्मिको मान्यमानकृत् ।
श्रीमान् ह्रीमान् विनीतश्च शरणागतपालकः ॥१७॥

भक्तप्रियः प्रेमवश्यः सुखी सर्वसुखप्रदः ।
गुप्तार्थो गूढसङ्कल्पः सर्वलोकशुभङ्करः ॥१८॥

*6-18. ஸத்யஸந்தன், ஸதாசாரமுடையவன், பவித்ரமான குணமும் நடத்தையுமுடையவன். அபாரமான கருணாஸிந்து. அபராதம் செய்தாலும் பொறுப்பவன். தனது பக்தர்களுக்காக எதையும் தியாகம் செய்பவன். எப்போதும் ஸந்தோஷமாக இருப்பவன். உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசாதவன். சாந்தஸ்வபாவன். புலன்களை அடக்கியவன். உயர்ந்த தபஸ் உள்ளவன். யாரிடமும் ஸமபுத்தி உடையவன். ஆத்மாராமன், பல சாஸ்த்ரங்களைப் படித்தவன், ஸஹிப்புத்தன்மை உடையவன், விரக்தி உள்ளவன், ஸர்வக்ஞன், யாவரையும் பரிபாலிப்பவன், பரமேச்வரன், பிறரை ஆகர்ஷிக்கும் தேஜஸ் உடையவன், நல்ல ஸௌர்யமுள்ளவன், அதாவது மஹாசூரன், பலவான், ஞாபகசக்தி மிக உடையவன், தீரன், மேன்மேலும் வியக்கத்தக்க புத்திசக்தி உடையவன் சுதந்திரமானவன்,*

ஸர்வஸமர்த்தன், கவர்ச்சிகரமானவன், ப்ரகடனமானவன், வணக்கமுள்ளவன், ம்ருதுஸ்வபாவன், பாக்யவான், நல்ல தேஜஸ் உள்ளவன், அங்ககாந்தி உள்ளவன். நல்ல சீலமுள்ளவன், நல்லவ்ரதமுள்ளவன், கம்பீரமானவன், ஸ்திரபுத்தி உள்ளவன், பெரியவன், ஆஸ்திகன், வேதமார்கப்படி நடப்பவன், கீர்த்திமான், மானீ, நித்யநூதனமான ஸௌந்தர்ய முள்ளவன், நித்யயௌவனமானவிக்ரஹமுள்ளவன், ஸத்,சித்,ஆனந்தரூபன், ஸர்வஸித்திகளுமுடையவன், அறியமுடியாத மஹாசக்தி உடையவன், கோடிப்ரம்மாண்ட நாயகன், பரம அத்புதமான லீலைகள் செய்பவன், மதுரமான ப்ரேமை செய்வதில் பண்டிதன், ஜகன்மோஹனமான லாவண்யமுள்ளவன், நாரீகணங்களின் மனத்தைக் கவருபவன், மேலும் ஸர்வ ஸுலபன், டம்பம், அஸூயை இல்லாதவன், ஸர்வ லக்ஷணங்களுடையவன், ஸர்வபாஷையிலும் பண்டிதன், ப்ரியமாகப் பேசுபவன், முன்னமேயே பேசுபவன், பேச்சில் சிறந்தவன், நல்ல பாண்டித்யமுள்ளவன், ஸர்வஸாமர்த்ய முள்ளவன், ஸர்வசாஸ்த்ரமுமறிந்தவன், திடமான வ்ரதமுள்ள வன், நன்றிமறவாதவன், யாவருக்கும் உபகாரம் செய்பவன், கொடுமைப்படுத்தாதவன், அள்ளிக் கொடுக்கும் வள்ளல், தார்மீகன், கௌரவிக்கத்தக்கவர்களை கௌரவிப்பவன், ஸ்ரீமான், லஜ்ஜை உள்ளவன், வினயமுள்ளவன், சரணாகத பாலகன், பக்தப்ரியன், ப்ரேமைக்கு வசமாகுபவன், ஸுகியாக இருப்பவன், பிறரையும் ஸுகப்படுத்துபவன், தன் பொருளை வெளியிடாதவன், தன் ஸங்கல்பத்தை வெளியிடாதவன். ஸர்வலோகங்களுக்கும் நல்லதே செய்பவன்.

बहवस्तस्य कल्याणगुणाः सन्ति परात्मनः ।
भक्तानानन्दयत्येष भगवानमितैर्गुणैः ॥१९॥

19. இவ்வாறு அனந்த கல்யாணகுணங்கள் உள்ளவன் ஸ்ரீக்ருஷ்ணன். தனது குணங்களால் பக்தர்களை ஆனந்தப் படுத்துகிறான்.

अपि चेत्प्राकृता भक्ता मुच्यन्ते प्राकृतैर्गुणैः ।
कल्याणगुणपूर्णस्य कृष्णस्य परिकीर्तनात् ॥२०॥

20. ப்ராக்ருதபக்தர்கள் ப்ராக்ருதகுணங்கள் உள்ளவர்களாக இருந்தபோதிலும் பகவானின் கல்யாணகுணங்களைக் கேட்பார்களானால் சொல்லுவார்களானால் சிந்திப்பார் களானால் ப்ராக்ருதகுணங்களிலிருந்து விடுபடுவார்கள்.

इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये
श्रीकृष्णवैभवकाण्डे श्रीकृष्णगुणवर्णनं नाम पञ्चमोऽध्यायः ॥५॥

இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமி மஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில் ஸ்ரீக்ருஷ்ணவைபவகாண்டத்தில் ஐந்தாம் அத்யாயம்.

# अथ षष्ठोऽध्यायः

## ஆறாம் அத்யாயம்

### भागवता ऊचुः

अनन्तगुणपूर्णस्य कृष्णस्य परमात्मनः ।
अप्राकृतगुणानेतान् सद्गुरो वद विस्तरात् ॥१॥

### பாகவதர்கள்

*1. ஸத்குரோ! அனந்த குணபூர்ணனான க்ருஷ்ணபரமாத்மாவின் அப்ராக்ருதமான குணங்களை விஸ்தாரமாகச் சொல்வீராக.*

### श्रीसद्गुरुरुवाच

अहो धन्योस्मि धन्योस्मि शृणुध्वं साधुसत्तमाः ।
जायते परमानन्दो ब्रह्मणो गुणवर्णने ॥२॥

### ஸ்ரீஸத்குரு

*2. ஸாதுக்களே!ஆஹா! நான் மிகவும் பாக்யவான். பகவானின் குணங்களை வர்ணிப்பதில் பரமானந்தமுண்டாகிறது.*

सत्यरूपः स्वयं कृष्णः सत्यं पालयति प्रभुः ।
सत्येन लोकान् जयति सदा सत्यव्रतो हरिः ॥३॥

3. ஸத்யஸ்வரூபனாக இருந்து கொண்டு க்ருஷ்ணன் ஸத்யத்தைப் பரிபாலிக்கிறான். ஸத்யத்தாலேயே உலகை வெல்கிறான். எப்போதும் ஸத்யவ்ரதனாகவே இருக்கிறான்.

कायेन मनसा वाचा शौचं संरक्षति प्रभुः ।
सदाचारेण संयुक्तो बीभत्सारसवर्जितः ॥४॥

4. மனது வாக்கு காயம் மூன்றாலும் எப்போதும் சுத்தமாகவே இருக்கிறான். வெறுக்கத்தக்க எதுவும் க்ருஷ்ணனிடம் கிடையாது.

निर्व्याजकरुणासिन्धुर्भक्तान् पालयति प्रभुः ।
अपात्रेषु च दीनेषु सन्ततं कुरुते कृपाम् ॥५॥

5. காரணமின்றி கருணை செய்கிறான். பக்தர்களைப் பரிபாலிக்கிறான். பாத்ராபாத்ரம் பாராமல் கேட்டதை எல்லாம் வர்ஷிக்கிறான். ஏழைகளிடமும் க்ருபையுள்ளவன்.

असह्यानपराधांश्च कृतान् भृत्यैः पुनः पुनः ।
कदापि न स्मरत्येष क्षमया परिपूरितः ॥६॥

6. ஸஹிக்கமுடியாத அபராதங்களை மீண்டும் மீண்டும் செய்தாலும் அவைகளைப் பொருட்படுத்தாமலே அன்பு காட்டுகிறான்.

तथैवाश्रितवात्सल्यात्सर्वं त्यक्त्वाऽऽत्मनः सुखम् ।
दीनो भवति लोकेशः स्वयं भूत्वा श्रियःपतिः ॥७॥

7. ஆச்ரிதவாத்ஸல்யத்தினால் எல்லாவற்றையும் பக்தர்களுக்கே கொடுத்துவிட்டு தான் ஸ்ரீய:பதியாயினும் ஏழையாகி விடுகிறான்.

सदा सन्तोषसंपूर्णः परमानन्दविग्रहः ।
अल्पेनैवोपकारेण लभते तुष्टिमुत्तमाम् ॥८॥

8. எப்போதும் ஸந்தோஷமாகவே இருக்கிறான். பரமானந்த மூர்த்தி. அல்பம் உபகாரம் செய்தாலும் பெரியதாகப் பாராட்டுகிறான்.

एवमार्जवसंपन्नो हृदयस्थं वदत्ययम् ।
न वञ्चयति शुद्धात्मा कदापि शरणागतान् ॥९॥

9. உள்ளதுஉள்ளபடி பேசிப்பழகுகிறான். வஞ்சனையே இல்லாதவன். சரணாகதர்களை ஏமாற்றவே மாட்டான்.

शमेन परिपूर्णोऽयं कामक्रोधविवर्जितः ।
शान्तसद्गुणसंपन्नः सुखाराध्यो विराजते ॥१०॥

10. காமமோ க்ரோதமோ இல்லாதவன். மனதை அடக்கியவன். சாந்த குணமுள்ளவனாக இருப்பதால் பழகுவதற்கு இனியவன்.

आत्मारामः स्वयं बुद्ध्वा दान्तश्च विजितेन्द्रियः ।
नापेक्षते स्वभक्तानामुपकारं कदाचन ॥११॥

11. புலன்களை அடக்கியவனாகவும், ஆத்மாவிலேயே ஸுகப்படுபவனாகவும் இருப்பதால் பக்தர்களிடமிருந்து எதையும் எதிர்பார்ப்பதில்லை.

तपोबलेन सर्वेषां जगतां क्षेममाचरन् ।
सर्वसङ्गपरित्यागी साधुभिः सह वर्तते ॥१२॥

12. தபோபலத்தினால் ஸர்வஜகத்துக்கும் க்ஷேமத்தைச் செய்பவன். ஸர்வஸங்கபரித்யாகம் செய்து ஸாதுக்களுடனேயே பழகுபவன்.

ब्राह्मणे वापि चण्डाले पण्डितेपि जडे तदा ।
दरिद्रे धनिके चैव समबुद्ध्या प्रवर्तते ॥१३॥

13. ப்ராம்மணன், சண்டாளன், பண்டிதன், மூர்க்கன், ஏழை, பணக்காரன் என்ற பேதமில்லாமல் யாவரிடமும் ஸமமாய்ப் பழகுபவன்.

आरोपितानात्मनैव लीलया प्राकृतान् गुणान् ।
तदुद्भवानि दुःखानि सहते च तितिक्षया ॥१४॥

14. விளையாட்டாக ப்ரக்ருதி குணங்களை தன்னிடம் ஆரோபித்துக்கொண்டு அதனால் வரும் துன்பங்களைப் பொறுத்துக் கொள்கிறான்.

मृगेन्द्र इव विक्रान्तः सर्वशक्तः स्वयं हरिः ।
उपरत्या क्षमाशीलो वर्तते गूढवैभवः ॥१५॥

15. ஸிம்மம்போன்ற பராக்ரமம் உள்ளவன். ஸர்வசக்தன். ஆனால் எதிலும் பற்றுதலற்று தன் மஹிமையை

வெளிக்காட்டாமல் நடப்பது நடக்கட்டும் என்று பொறுத்துப் போவான்.

शास्त्रयोनिः स्वयं भूत्वा सद्भिः सङ्गम्य सन्ततम् ।
वेदवेदान्ततत्त्वार्थान् शृणोति सुविनीतवत् ॥१६॥

16. தானே ஸர்வசாஸ்த்ரங்களுக்கும் காரணமாக இருந்த போதிலும் வேதவேதாந்த வித்வான்களைக்கூட்டி அவர்கள் சொல்வதை வினயமாகக் கேட்டு மகிழ்வான்.

अनन्तकोटिजीवानां कर्म कर्मफलं तथा ।
आत्मानं प्रकृतिं सर्वं जानाति भगवान् स्वयम् ॥१७॥

17. அனந்தகோடிஜீவர்களையும் அவரவர் கர்மாக்களையும் கர்மபலன்களையும் ப்ரக்ருதி ஆத்மா யாவற்றையும் அறிந்தவன்.

सृष्ट्यादिकार्यनिर्वाहात्त्यक्त्वा स्वार्थसुखं प्रभुः ।
कल्याणायैव जीवानां विरक्तोऽपि प्रवर्तते ॥१८॥

18. ஸ்ருஷ்ட்யாதி உலககாரியங்களில் தனக்குப் பயன் ஏதுமில்லாதுபோனாலும் ஜீவகோடிகளின் க்ஷேமத்திற்கா கவே ப்ரவ்ருத்திப்பவன்.

आत्मानञ्च श्रियं वापि जगदीश्वरतां तथा ।
विरक्तोपि विभुः कृष्णो भक्तायैव बिभर्ति सः ॥१९॥

19. தனது திவ்யமங்களவிக்ரஹம் லக்ஷ்மி ஐச்வர்யம் இவை யாவற்றையும் பக்தர்களின் ஆனந்தத்திற்காகவே தரிப்பவன்.

ब्रह्मरुद्रमहेन्द्राग्नियमवारीश्वरादयः ।
यस्य सन्ति वशे सोयं श्रीकृष्णः परमेश्वरः ॥२०॥

20. ப்ரம்மா, ருத்ரன், இந்த்ரன், அக்னி, யமன், வருணன் முதலிய எல்லாதேவர்களையும் தன் வசத்தில் வைத்துக்கொண்டிருப்ப தால் ஸ்ரீக்ருஷ்ணனே பரமேச்வரன்.

तस्य शौर्यं परं दृष्ट्वा सर्वे देवाः शिवादयः ।
बाणासुरमहायुद्धे दुद्रुवुर्भयवेपिताः ॥२१॥

21. அவனுடைய பராக்ரமத்தைக் கண்டு பாணஸுரயுத்தத்தில் சிவன்முதலிய தேவர்கள் பயந்து ஓடிவிடவில்லையா!

आत्मनस्तेजसा कृष्णः साक्षाद्विष्णुः श्रियःपतिः ।
शमयन्नाजहारामुमर्भकं फाल्गुनान्वितः ॥२२॥

22. தனது அழகினால் க்ருஷ்ணன் நாராயணனையும் மிஞ்சியவன். வைகுண்டமே சென்று குழந்தையை மீட்டு வந்தான் அன்றோ?

सप्ताहमेकहस्तेन बालकः सप्तहायनः ।
गोवर्धनं दधारैष बलवान् भगवान् हरिः ॥२३॥

23. ஏழு நாட்கள் கோவர்த்தனமலையையே குடையாகப்பிடித்த கோவிந்தனைவிட பலவான் யார்தான் உண்டு?

न विस्मरति सर्वात्मा कदापि निजकिङ्करान् ।
तथापि चिन्तया ग्रस्ताः प्रपन्ना अपि वैष्णवाः ॥२४॥

24. தனது பக்தர்களை பகவான் ஒருக்காலும் மறப்பதில்லை. ஆயினும் ஏனோ பக்தர்கள் கவலைப்படுகின்றனர்.

सर्वस्वतन्त्रो भगवान् तर्जयन्नन्तकं मृतम् ।
आजहार गुरोः पुत्रमनुल्लङ्घितशासनः ॥२५॥

25. ஸர்வஸ்வதந்த்ரனான க்ருஷ்ணன் யமனையும் மிரட்டி குருபுத்ரர்களை மீட்டுவந்தான். அவன் உத்தரவை யார்தான் மீற முடியும்?

एककार्यार्थमागत्यानेककार्यं करोति सः ।
समदुःखसुखो भूत्वा कुशलो योगमायया ॥२६॥

26. ஒரு காரியத்திற்கு வந்துவிட்டு பல கார்யங்களை முடித்துச் செல்வான். ஸுகதுக்கங்களைப் பொருட்படுத்தமாட்டான். அவன் ஸாமர்த்தியம் யாருக்கு வரும்?

स्वविग्रहस्य कान्त्यैव रञ्जयन् यमुनावनम् ।
मोहयामास गोविन्दः सौन्दर्येण व्रजाङ्गनाः ॥२७॥

27. ப்ருந்தாவனத்திலேயே ஒளிவிடும் தனது அழகு அங்ககாந்தியால் கோபஸுந்தரிகளை மயக்கி விளையாடும் கண்ணனைவிட ஸுந்தரன் யார்?

अवरुद्धां महाशूरैश्चैद्यरुक्मिमुखैर्नृपैः ।
एक एव पुरीं गत्वा जहार धृतिमान् प्रियाम् ॥२८॥

28. பல அரசர்கள் தடுத்துவைத்துள்ள ருக்மிணிதேவியை அவர்கள் முன்னிலையிலேயே தூக்கிவந்த க்ருஷ்ணனின் தைர்யத்தைக் கண்டீர்களா?

स्वभावमधुरो ह्येष भगवान्नन्दनन्दनः ।
तस्य सौरभसंयुक्तं शिरीषमृदुलं वपुः ॥२९॥

29. நந்தநந்தனன் மதுரஸ்வபாவன். அவனது திருமேனி மிகவும் கோமளமானது. அலாதி பரிமளம் வீசுமாக்கும்!

समुद्र इव गाम्भीर्ये स्थैर्ये च हिमवानिव ।
शीले च प्रणये चैवमौदार्ये चात्मना समः ॥३०॥

30. சமுத்ரம்போல் கம்பீரமானவன். இமயமலைபோல் ஸ்திரமானவன். சீலம், ப்ரேமை, ஔதார்யம் இவைகளில் தனக்குத்தானே நிகரானவன்.

प्रख्यातकीर्तियुक्तोपि गर्वाहङ्कारवर्जितः ।
वैदीकसमयाचारयुक्तः पाषण्डखण्डनः ॥३१॥

31. உலகம் புகழும் கீர்த்தி இருந்தும் கர்வமில்லாதவன். வைதீகஸமயாசாரம் உள்ளவன். பாஷண்ட மதங்களைக் கண்டிப்பவன்.

एवमप्राकृतैर्दिव्यैर्गुणैर्लोकोत्तरैः शुभैः ।
शोभते तत्परं ब्रह्म सच्चिदानन्दविग्रहम् ॥३२॥

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये वैभवकाण्डे श्रीकृष्णगुणवर्णनं नाम षष्ठोऽध्यायः ॥६॥*

32. இவ்வாறு லோகாதீதமான ஸுபமான அப்ராக்ருதமான குணங்களால் க்ருஷ்ணபரமாத்மா சோபிக்கிறான்.

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமி மஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில் ஸ்ரீக்ருஷ்ணவைபவகாண்டத்தில் ஆறாம் அத்யாயம்.**

# अथ सप्तमोऽध्यायः

## ஏழாமத்யாயம்.

### भागवता ऊचुः

सकलोपनिषद्वेद्यं यत्परं ब्रह्म लक्षणम् ।
अवतारेपि तेनैव लक्ष्यते भगवान् कथम् ॥१॥

**பாகவதர்கள்.**

1. ஸகலோபநிஷத்துக்களிலும் பாடப்படும் பரப்ரும்மலக்ஷணம் அவதாரத்திலும் எப்படிக் காணப்படுகின்றது என்று சொல்லுவீராக.

### श्रीसद्गुरुरुवाच

एवं सङ्कीर्तितो दिव्या नित्यास्तस्य महागुणाः ।
अथ वक्ष्यामि माहात्म्यं कृष्णस्य परमात्मनः ॥२॥

**ஸ்ரீஸத்குரு**

2. இவ்வாறு பகவான் ஸ்ரீக்ருஷ்ணனின் நித்யமான மஹாகுணங்களைச் சொன்னோம். க்ருஷ்ணபரமாத்மாவின் மாஹாத்மியத்தைச் சொல்கிறேன்.

अवतारा ह्यसंख्येया कृष्णस्य परमात्मनः ।
अंशांशेनैव सञ्जाता कृष्णस्तु भगवान् स्वयम् ॥३॥

3. க்ருஷ்ணபரமாத்மாவின் அவதாரங்கள் பல. அவையாவும் க்ருஷ்ணனின் அம்சங்களேயானவை. க்ருஷ்ணனோ ஸ்வயம் பகவான்.

सर्वज्ञः सर्वशक्तश्च सर्वव्यापक एव च ।
सर्वाधारः सर्वरूपः सर्वकारणकारणम् ॥४॥

एवं षड्गुणसंपन्नः परमात्मा सनातनः ।
अवतीर्णोऽपि गोविन्दः शोभते षड्गुणैः सदा ॥५॥

4,5. ஸர்வக்ஞன், ஸர்வசக்தன், ஸர்வவ்யாபகன் ஸர்வாதாரன், ஸர்வரூபன், ஸர்வகாரணமானவன் என்று இவ்வாறு ஆறு குணங்களுடன் கூடியவன் ஈச்வரன். இந்த ஆறுகுணங்களும் அவதாரத்திலும் காணப்படுகின்றன.

यत्रक्वापि समासीनः सर्वत्र व्याप्य तिष्ठति ।
साकारोपि निराकारः श्रीकृष्णः सर्वशक्तिमान् ॥६॥

6. ஒருஇடத்தில் இருந்தபோதிலும் உலகமெங்கும் வ்யாபித்துள்ளான். த்வாரகையில் இருந்தபோதிலும் ஸ்ரீக்ருஷ்ணபரமாத்மா உலகெங்கும் வ்யாபித்துள்ளான்.

द्वारकायां वसन्नेव द्रौपद्याः परिदेवनम् ।
बुबोध भगवान् कृष्णः सर्वज्ञत्वाच्छ्रियःपतिः ॥७॥

7. த்வாரகையிலிருந்தபடியே ஸ்ரீக்ருஷ்ணபரமாத்மா ஸர்வக்ஞனாய் இருப்பதால் ஹஸ்தினாபுரத்திலும் த்ரௌபதி கூவுவதை அறிந்தான்.

चतुर्विंशति तत्त्वानि ब्रह्माण्डानि बहूनि च ।
श्रीकृष्णः सर्वकर्तृत्वाद्दर्शयामास वेधसे ॥८॥

8. ஸர்வகர்த்தாவாக இருப்பதால் ஸ்ரீக்ருஷ்ணன் ப்ரும்ம மோஹனலீலையில் தானே எல்லாவற்றையும் படைத்துக் காண்பித்தான்.

समानिनाय गोविन्दो मृतं सान्दीपनेः सुतम् ।
रविमाच्छादयामास पारिजातं जहार च ॥९॥

9. ஸர்வசக்தனாக இருப்பதால் பதினாறாயிரத்து நூற்றெட்டு பட்டமஹிஷிகளுக்கும் ஒரே வல்லபனாக இருந்து தன் மஹிமையை ப்ரகடனம் செய்தான்.

उद्दधार गिरीन्द्रञ्च वैकुण्ठञ्च जगाम सः ।
शम्भुं विद्रावयामास मोहयामास वेधसम् ॥१०॥

षोडशस्त्रीसहस्रेशो बभूव निजमायया ।
एवं हि सर्वशक्तत्वं कृष्णेन प्रकटीकृतम् ॥११॥

*10-11.* இறந்துபோன குருபுத்ரனையும் மீட்டுத் தந்தான். ஸூர்யனையும் மறைத்தான். பாரிஜாதவ்ருக்ஷத்தைக் கொண்டு வந்தான். கோவர்த்தன மலையையும் குடையாய் பிடித்தான். வைகுண்டமே சென்று பிள்ளைகளை மீட்டு வந்தான். சிவனையும் விரட்டினான். ப்ரம்மனையும் மயக்கினான். க்ருஷ்ணன் ஸர்வசக்தன். இல்லாவிடில் இப்படியெல்லாம் செய்யமுடியுமா?

पदातिषु तुरङ्गेषु गजेषु स्यन्दनेषु च ।
सर्वत्र व्यापकत्वं तद्दर्शयामास चात्मनः ॥१२॥

दुर्योधनाय दुष्टाय चात्मानं बद्धुमिच्छते ।
दूतो धनञ्जयस्यास्य भगवानात्ममायया ॥१३॥

*12,13.* பாண்டவர்களுக்காக தூதுபோனபோது துரியோதனன் க்ருஷ்ணனைக் கைது செய்ய நினைக்கவே அந்த போலீஸ்காரர்களிடமும் தானே வ்யாபித்திருப்பதைக் காட்டினான்.

आधेयमात्मनः सर्वमण्डमण्डान्तराणि च ।
आधारं स्वस्वरूपञ्च बालरूपेण माधवः ॥१४॥

बाललीलान्तरे कृष्णः कुर्वन् मृद्भक्षणं प्रभुः ।
जनन्यै दर्शयामास यशोदायै महाद्भुतम् ॥१५॥

*14,15.* குழந்தையாய் மண் தின்ன, யசோதை மிரட்டவே தனது வாயில் உலகமெல்லாம் காட்டி தானே உலகுக்கு ஆதாரம் என நிருபித்தான்.

चराचरमिदं सर्वं निजरूपेण संस्थितम् ।
दर्शयामास पार्थाय भगवान् रणमण्डले ॥१६॥

16. யுத்தகளத்தில் அர்ஜுனனுக்கு விச்வரூபம் காட்டியபோது ஸகலசராசரமும் தானே என்று பகவான் நிரூபித்தான்.

कृष्णे सन्त्येव सततं सर्वज्ञत्वादयो गुणाः ।
अवतारेपि पूर्णोऽपि मायया नोपहन्यते ॥१७॥

17. இவ்வாறு ஸர்வக்ஞத்வம்முதலிய ஈச்வரகுணங்கள் அவதாரத்திலும் காணப்படுகின்றன. எனவே அவதாரத்தில் மாயையால் ஈச்வரன் பாதிக்கப்படவில்லை.

सौन्दर्यं सौकुमार्यञ्च सौलभ्यञ्च तथा हरेः ।
सौशील्यञ्चापि वात्सल्यमौदार्यमिति षड्गुणाः ॥१८॥

अवतारे विशेषेण शोभन्ते परमात्मनि ।
वक्ष्यामि परमानन्दं शृणुध्वं साधुपुङ्गवाः ॥१९॥

18,19. மேலும் ஸௌந்தர்யம், ஸௌகுமார்யம், ஸௌசீல்யம், ஸௌலப்யம், வாத்ஸல்யம், ஔதார்யம் என்னும் ஆறு குணங்களும் பரமாத்மாவிடம் அவதாரத்தில் விசேஷித்து சோபிக்கின்றன. ஸாதுக்களே! அவைகளைக் கேளுங்கள்.

द्वात्रिंशल्लक्षणोपेतं दिव्यमङ्गलविग्रहम् ।
दधाति भगवान् कृष्णो नयनानन्दवर्धनम् ॥२०॥

20. முப்பத்திரெண்டு லக்ஷணங்களுள்ள திவ்யமங்கள விக்ரஹத்தை ஸ்ரீக்ருஷ்ணபரமாத்மா தரிக்கிறார். அதில் ஸௌந்தர்யம் பூர்ணமாக இருக்கிறது.

अप्राकृतशरीरत्वान्निर्विकारो विभाति सः ।
नित्ययौवनरूपत्वात्सौकुमार्येण संयुतः ॥२१॥

21. அப்ராக்ருதமான ரூபமாக இருப்பதால் விகாரப் படுவதில்லை. நித்யயௌவனமாக இருக்கிறது அந்த திருமேனி. எனவே ஸௌகுமார்யம் நித்யமானது.

न तस्य प्राकृता मूर्तिः पञ्चभूतमयी हरेः ।
शुद्धसत्त्वमयेनैव स्वरूपेण विराजते ॥२२॥

22. பகவானின் திருமேனி பாஞ்சபௌதிகமானதல்ல. சுத்தஸத்வமயமானது.

ब्रह्मादीनां दुर्लभोऽपि गोपवेषधरो हरिः ।
सौलभ्यं दर्शयंल्लोके श्रीदामानमुवाह च ॥२३॥

23. ப்ரம்மாதிதேவர்களுக்கும் துர்லபமானவனாயினும் கோபால சிறுவனாகி ஸ்ரீதாமா என்ற இடையச் சிறுவனை தூக்கிச்சென்று விளையாடுவதைப் பார்த்தீர்களா? இதனால் அவனது ஸௌலப்யம் தெரியவருகிறது.

उलूखले निबद्धश्च गोपीभिरपि तर्जितः ।
दूतो बभूव सौलभ्यात्पार्थानां सारथिस्तथा ॥२४॥

24. உரலிலும் கட்டுண்டான். கோபிகைகள் மிரட்டும்படியும் நின்றான். பாண்டவர்களுக்கும் தூதனானான். பார்த்தனுக்கும் ஸாரதியானானன்றோ!

राजसूयमहायज्ञे पादशौचं समाचरन् ।
ब्राह्मणानां स्वयं कृष्णो ब्रह्मरुद्रादिपूजितः ॥२५॥

दर्शयामास सौशील्यमात्मनो भगवान् हरिः ।
तथैव पूजयन् धर्मं पितरं सान्त्वयंस्तथा ॥२६॥

25,26. ராஜஸூயயாகத்தில் பரம்மாதிதேவதுர்லபனாக இருந்தும் ப்ராம்மணர்களுக்கு பாதபூஜை செய்தானன்றோ! பெற்றோர்களிடமும் வினயமாக நடந்து கொண்டு தனது ஸௌசீல்யத்தை நிரூபித்தானன்றோ!

गोपीगोपालगोविप्रानक्रूरोद्धवपाण्डवान् ।
वात्सल्यात्पोषयामास भगवान् भक्तवत्सलः ॥२७॥

27. கோபிகைகள், கோபர்கள், கோக்கள், ப்ராம்மணர்கள், அக்ரூரன், உத்தவன், பாண்டவர்கள் இவர்களிடம் தனது வாத்ஸல்யத்தைக் காட்டினான். அதனால் பக்தவத்ஸலன்.

कुचेलं ब्राह्मणं दीनमालिङ्ग्य भगवान् हरिः ।

श्रियःपतित्वं विस्मृत्य पृथुकान् बहुमानयन् ॥२८॥

पादसंवाहनं कुर्वंस्तस्य दत्वा महाधनम् ।
औदार्यं दर्शयामास गोविन्दो भक्तवत्सलः ॥२९॥

*28,29.* தான் ஸ்ரீய:பதி என்பதையும் மறந்து ஏழைபிராமணனான குசேலனைக் கண்டதுமே ஓடிவந்து அவனை அழைத்து பாதபூஜை செய்து அவனது அவலைப் பெற்று உகந்து அவனுக்கு அளவுகடந்த ஸம்பத்து தந்தானன்றோ! இதனால் ஔதார்யகுணம் தெரியவருகிறது.

एवं षड्गुणसंपन्नो भगवान्नन्दनन्दनः ।
अनन्तगुणगम्भीरः सुखाराध्यो विराजते ॥३०॥

*30.* இவ்வாறு அனந்தகல்யாணகுணங்களுக்கு இருப்பிடமான பகவானான க்ருஷ்ணனின் ஆறு குணங்களை மட்டும் சொன்னோம்.

एवं सौन्दर्यसौलभ्यसौकुमार्यादिभिर्गुणैः ।
विशिष्यते परं ब्रह्म तस्मान्निर्गुणमुच्यते ॥३१॥

*31.* இவ்வாறு ஸௌலப்யம், ஸௌந்தர்யம், ஸௌசீல்யம், ஸௌகுமார்யம் முதலிய அனந்த கல்யாணகுணங்களுடன் கூடியது பரப்ருமமம். அதனிடம் அவகுணமே கிடையாது. எனவே நிர்குணமென்று ச்ருதி கூறுகிறது.

इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये वैभवकाण्डे
श्रीकृष्णषाड्गुण्यवर्णनं नाम सप्तमोऽध्यायः ॥७॥

இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமிமஹாப்ரபு அருளிய
ஸ்ரீப்ருந்தாவனமாஹாத்மியத்தில் ஸ்ரீக்ருஷ்ணவைபவகாண்டத்தில்
ஏழாம் அத்யாயம்.

# अथाष्टमोऽध्यायः
## எட்டாம்அத்யாயம்

### श्रीसद्गुरुरुवाच

रसदो रसिकश्चैव श्रीकृष्णो नायकोत्तमः ।
तस्मात्तमनुवर्तन्ते गोपिकाः प्रेमतत्पराः ॥१॥

1. ரஸத்தைத் தருபவனும், ரஸிப்பவனுமான ஸ்ரீக்ருஷ்ணனே நாயகோத்தமன். ஆதலால்தான் கோபிகைகள் அவனிடம் மயங்குகின்றனர்.

वदन्ति सर्वशास्त्रेषु नायकांश्च चतुर्विधान् ।
वक्ष्यामि सङ्ग्रहेणैव धीरोदात्तादिलक्षणैः ॥२॥

2. நான்குவிதமான நாயகர்களை ரஸசாஸ்த்ரங்கள் சொல்லுகின்றன. தீரோதாத்தன்முதலிய அந்த நாயக லக்ஷணத்தைச் சுருக்கிக் கூறுகிறேன்.

विनीतश्च प्रगल्भश्च क्षमावान् करुणानिधिः ।
अकत्थनो गूढगर्वो दृढनिष्ठः सुसत्त्वभृत् ॥३॥

धीरोदात्तगुणानेवं वदन्ति रसिका जनाः ।
इमे गुणा विशेषेण दृश्यन्ते राघवे स्फुटम् ॥४॥

3,4. வினயம், காம்பீர்யம், பொறுமை, கருணை மனதுக்குள் கர்வமிருந்தும் ஜம்பம் அடித்துக் கொள்ளாமலிருப்பது முதலிய இந்த குணங்கள் தீரோதாத்தநாயகனிடம் காணப்படுகின்றன. ஸ்ரீராமன் தீரோதாத்தநாயகன்.

विवेकी च महाशान्तो विनयादिगुणान्वितः ।
सुखदुःखसमश्चैव धीरशान्त इतीर्यते ॥५॥

इमे गुणा हि दृश्यन्ते धर्मपुत्रे युधिष्ठिरे ।
सर्वं दुःखमसह्यञ्च यः सेहे शमयन् मनः ॥६॥

5,6. விவேகியாயும், மஹாசாந்தஸ்வபாவனாயும், வினயம் உள்ளவனாயும், ஸுகதுக்கங்களை ஸமமாய் பார்ப்பவனாயுமிருப்பவன் தீரசாந்தநாயகன். தர்மபுத்ரர் தீரசாந்தன்.

अहङ्कारी च मायावी मत्सरी रोषणश्छलः ।
विकत्थनस्तत्त्वविद्भिर्धीरोद्धत इतीर्यते ॥७॥

इमे गुणाश्च दृश्यन्ते भीमे भीमपराक्रमे ।
एवं वदन्ति रसिका नायकांश्च चतुर्विधान् ॥८॥

7,8. அஹம்பாவமுள்ளவனாயும், மாயாவியாகவும், அஸூயையும் சத்ருவிடம் கோபமும் உடையவனாயும், வஞ்சகனாயும், தற்பெருமை பேசுபவனாயுமிருப்பவன் தீரோத்ததன். பீமசேனன் தீரோத்ததன்.

विदग्धो नवतारुण्यः प्रेयसीनां वशङ्गतः ।
निश्चिन्तो निर्भयश्चैव परिहासविचक्षणः ॥९॥

श्रीकृष्णं धीरललितं वदन्ति रसिका जनाः ।
यं प्राप्य रसराजस्तु सर्वोत्कर्षेण शोभते ॥१०॥

9,10. இவ்வாறு நான்கு நாயக லக்ஷணங்களை ரஸிகர்கள் சொல்லுகின்றனர். கலாரஸிகனாயும், நவயுவனாயும், ப்ரியைகளுக்கு வசமாகிவிடுபவனாகவும், கவலையற்றவனாயும், பயமில்லாதவனாயும், கேளிபரிஹாஸங்களில் பண்டிதனாயும் தீரலலிதன் இருப்பான். ஸ்ரீக்ருஷ்ணனே தீரலலிதன். ச்ருங்கார ரஸம் தீரலலிதநாயகனான ஸ்ரீக்ருஷ்ணனிடமே ப்ரகாசிக்கிறது.

सर्वलक्षणसंपन्नो भगवान्नन्दनन्दनः ।
गुणान् गृह्णाति निखिलान् यथाकालं यथारुचि ॥११॥

11. ஸ்ரீக்ருஷ்ணனிடம் எல்லா நாயகலக்ஷணங்களும் ஸந்தர்ப்பத்துக்கு ஏற்றபடி காணப்படுகின்றன.

धीरोदात्तगुणः कृष्णः क्षत्रियाणां सभान्तरे ।
धीरशान्तगुणः कृष्णो महर्षीणां च मण्डले ॥१२॥

धीरोद्धतगुणः कृष्णः पुरतो यक्षरक्षसाम् ।
तथैव धीरललितो वल्लवीजनमण्डले ॥१३॥

*12,13. க்ஷத்ரியர்களின் ஸபையில் தீரோதாத்தனாயும், மஹரிஷிகளின் மண்டலத்தில் தீரசாந்தனாயும், யக்ஷராக்ஷஸர்கள் எதிரில் தீரோத்ததனாகவும், கோபீஜனமண்டலத்தில் தீரலலிதனாயும் காணப்படுகிறான்.*

प्रकृत्या धीरललितो भगवान्नन्दनन्दनः ।
धैर्ययुक्तोपि यो नित्यं वल्लवीनां वशङ्गतः ॥१४॥

कोटिमन्मथलावण्यो नित्ययौवनविग्रहः ।
साक्षात्केलिकलामूर्तिः परिहासरसार्णवः ॥१५॥

मुरलीगानरसिको नाट्यलीलाविशारदः ।
समयोचितवेषश्च कृष्णः सर्वकलानिधिः ॥१६॥

अनेकनारीरमणः शृङ्गाररसवर्धनः ।
नित्यनूतनलीलाश्च सततं प्रियभाषणः ॥१७॥

स्वभावमधुरश्चैवं साध्वीगणमनोहरः ।
प्रणयक्रोधसंयुक्तप्रियासान्त्वनकोविदः ॥१८॥

नारीसौन्दर्यरसिकः प्रणयाबद्धचेष्टितः ।
लोकवेदपरो धीरो नानालीलास्पदो हरिः ॥१९॥

एवं हि धीरलालित्यं शृङ्गाररसगर्भितम् ।
प्रकाशते स्फुटं कृष्णे बृन्दावनविहारिणः ॥२०॥

*14-20. ஆனால் ஸ்வபாவத்தில் ஶ்ரீக்ருஷ்ணன் தீரலலிதனே. ஏனெனில் அபார தைர்யமுள்ளவனாயினும் கண்ணன்*

கோபிகைகளுக்கு வசமாகிவிடுகிறான். கோடிமன்மத லாவண்யன், நித்யயௌவனவிக்ரஹன். ஸாக்ஷாத்கேளிகலா மூர்த்தி, பரிஹாஸரஸார்ணவன், முரளீகானரஸிகன், நாட்ய லீலாவிசாரதன், ஸமயோசிதமான அலங்காரமுள்ளவன், ஸர்வகலாநிதி. அனேக நாரிகளுக்கு ஒரே நாயகன், ச்ருங்காரரஸத்தை வளர்ப்பதில் ஸமர்த்தன், நித்யநூதனமான லீலைகள் செய்பவன், எப்போதும் ப்ரியமாகவே பேசுபவன், ஸ்வபாவமாகவே மதுரமானவன், பதிவ்ரதைகளின் மனதைக் கூட கவருபவன், ப்ரணயகோபமடைந்த ப்ரியையை ஸமாதானம் செய்துவிடுவதில் ஸமர்த்தன், நாரீமணிகளின் அழகை ரஸிப்பவன், அன்புக்குக் கட்டுப்பட்ட சேஷ்டைகள் உள்ளவன், லௌகீக வைதீகஜனங்களைக் கண்டு பயப்படாதவன். சாஸ்த்ரம் ஸம்ப்ரதாயம் இவைகளுக்குக் கட்டுப்படாமல் ஸுதந்திரமாய் ப்ரேமை காட்டுபவன்.. பலவிதமான லீலைகளுக்கு இருப்பிடமானவன். இவ்வாறு ப்ருந்தாவனவிஹாரியிடமே தீரலலிதஸ்வபாவம் ப்ரகாசிக்கிறது.

धीरोदात्ते नायके तु परया धर्मनिष्ठया ।
बाधितो मधुरश्चायं रसराजो न राजते ॥२१॥

21. தீரோதாத்தநாயகனிடம் தர்மநிஷ்டையால் பாதிக்கப்பட்டு ச்ருங்காரரஸம் ப்ரகாசிக்கவில்லை.

धीरशान्ते नायके तु शमादिगुणसंयुते ।
बाधितो रसराजस्तु वैराग्येण न शोभते ॥२२॥

22. தீரசாந்தநாயகனிடம் வைராக்யத்தினால் பாதிக்கப்பட்டு ச்ருங்காரரஸம் ப்ரகாசிக்கவில்லை.

धीरोद्धते नायके तु डम्भाहङ्कारसंयुते ।
प्रकाशते न शृङ्गारो बाधितो मायया तथा ॥२३॥

23. தீரோத்ததநாயகனிடம் கபடஸ்வபாவத்தால் பாதிக்கப்பட்டு ச்ருங்காரரஸம் ப்ரகாசிக்கவில்லை.

नायके धीरललिते नारीगणमनोहरे ।
सर्वसद्गुणसंपन्ने रसराजो विराजते ॥२४॥

24. ஸர்வஸத்குணஸம்பன்னனும், நாரிகளின் மனோஹரனுமான தீரலலித நாயகனிடமே ச்ருங்காரரஸம் ப்ரகாசிக்கிறது.

माधुर्यभावमुग्धास्तु रसराजेन रञ्जिताः ।
नायिकाभावसंयुक्ता गोपीभावविशारदाः ॥२५॥

महाभागवता भक्ता रसिकाः प्रेमतत्पराः ।
श्रीकृष्णं धीरललितं भजन्तो नायकोत्तमम् ॥२६॥

लभन्ते परमानन्दं वसन्तो यमुनावने ।
तृणीकृतत्रिभुवना वैराग्येण बलीयसा ॥२७॥

25-27. மாதுர்யபாவத்தில் மயங்கியவர்களும், ச்ருங்காரரஸத்தில் ரமிப்பவர்களும், நாயிகாபாவமுள்ளவர்களும், கோபீ பாவத்தில் சிறந்த பண்டிதர்களும், ப்ரேமையே லக்ஷியமானவர் களும், ரஸிகர்களும் பக்தர்களுமான பாகவதோத்தமர்கள் நாயகோத்தமனான தீரலலிதனான ஸ்ரீக்ருஷ்ணனையே பஜிப்பவர்களாய், மூவுலகையும் மதிக்காதவர்களாய், ப்ருந்தாவனத்திலேயே வஸிப்பவர்களாய் பரமானந்த மடைகின்றனர்.

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये वैभवकाण्डे नायकोत्तमवर्णनं नामाष्टमोऽध्यायः॥८॥*

இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமி மஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில் ஸ்ரீக்ருஷ்ணவைபவகாண்டத்தில் எட்டாம் அத்யாயம்

## अथ नवमोऽध्यायः

## ஒன்பதாம் அத்யாயம்

### श्रीसद्गुरुरुवाच

सर्वशास्त्रार्थतत्त्वज्ञः कृष्णः सर्वकलानिधिः ।
यमाश्रित्य कलाः सर्वा लभन्ते नवजीवनम् ॥१॥

ஸ்ரீஸத்குரு

1. ஸ்ரீக்ருஷ்ணன் ஸர்வசாஸ்த்ரமும் அறிந்தவன். ஸர்வகலைகளுக்கும் நிதி. எல்லா கலைகளும் அவனை அடைந்தே ஜீவிக்கின்றன.

प्राधान्यतः प्रवक्ष्यामि चतुःषष्टिकलारसम् ।
सर्वशक्तस्य कृष्णस्य नास्त्यन्तो वैभवस्य हि ॥२॥

2. முக்யமாக அறுபத்துநான்கு கலைகளும், பதினான்கு வித்யைகளும் ஸ்ரீக்ருஷ்ணன் அறிந்துள்ளான் என்று சொல்வேன். ஸர்வசக்தனுக்கு எது முடியாது? ஸர்வக்ஞனுக்கு எது தெரியாது?

सेतिहासं पुराणञ्च श्रुतिश्च स्मृतिसंयुता ।
आन्वीक्षिकीयोगशास्त्रमणिमाद्यष्टसिद्धयः ॥३॥

शिक्षाकल्पव्याकरणनिरुक्तज्योतिषाणि च ।
मीमांसातर्ककाव्यानि नाटकं रङ्गकर्म च ॥४॥

आयुर्वेदो धनुर्वेदो गान्धर्वो वेद एव च ।
चतुर्विधा क्षत्रविद्या ब्रह्मविद्या विमुक्तिदा ॥५॥

गीतं नृत्तञ्च वाद्यञ्च शिल्पं चित्रं प्रहेलिका ।
अङ्गरागानुलेपादिज्ञानं केशप्रसाधनम् ॥६॥

सभाचैत्यादिनिर्माणं चित्रास्तरणकर्म च ।
साङ्केत्यकर्म विविधं कर्णपत्रविलेखनम् ॥७॥

एवं सुरतलीलायां चतुः षष्ट्यासनानि च ।
बालशिक्षा च शुद्धान्तपरीक्षा कूटभाषणम् ॥८॥

कृषिशास्त्रञ्च वाणिज्यं यन्त्रनिर्माणमेव च ।

वस्त्रकर्म तथा कांस्यपात्रनिर्माणमेव च ॥९॥

नानारत्नपरीक्षा च हेमभूषणकर्म च ।
वास्तुकर्म तथोद्यानननिर्माणं प्लवकर्म च ॥१०॥

वृक्षशास्त्रञ्चाक्षविद्या नानाभोजनकर्म च ।
गजविद्याऽश्वविद्या च गोविद्याऽऽयुधकर्म च ॥११॥

सारथ्यं मन्त्रशास्त्रञ्च सभायां वावदूकता ।
मल्लयुद्धं गदायुद्धं खड्गयुद्धं तथैव च ॥१२॥

नानाभाषासु पाण्डित्यं बालक्रीडनकानि च ।
एवञ्च विविधं रम्यं पुष्पमालादिकर्म च ॥१३॥

चतुःषष्टिकलाः सर्वामेवं जानाति माधवः ।
सर्वतन्त्रस्वतन्त्रोऽयं भगवान्नन्दनन्दनः ॥१४॥

*3-14.* ச்ருதி, ஸ்ம்ருதி, இதிஹாசம், புராணம், ந்யாயம், தர்க்கம், யோகசாஸ்த்ரம், அஷ்டமஹாசித்திகள், ஸிக்ஷா, கல்பம், வ்யாகரணம், நிருக்தம், சந்தஸ், ஜோதிஷம், மீமாம்ஸை,தர்க்கம், காவ்யம், நாடகம், ரங்ககர்மம், ஆயுர்வேதம், தனுர்வேதம், காந்தர்வவேதம், நான்கு விதமான அஸ்த்ரவித்யை, மோக்ஷம் தரும் ப்ரம்மவித்யை, கீதம், ந்ருத்யம், வாத்யம், சில்பம், சித்ரம், ப்ரஹேளிகா, அங்கராகம்தீட்டுதல், தலைவாரி சிகாலங்காரம் செய்தல், ஸபா, சைத்யம் முதலிய நிர்மாணம், சித்ரமான விரிப்பு தயாரித்தல், பலவிதமாய் ஸங்கேதம்செய்தல், ஸ்த்ரீகளுக்கு கர்ணபத்ரம் எழுதுவது, அறுபத்துநாலுவிதமான ஸுரதலீலை, பாலசிக்ஷா, சுத்தாந்தபரீக்ஷா, கூடபாஷணம், பயிர்த்தொழில், வணிகம், யந்த்ரநிர்மாணம், துணிநெய்தல், வெண்கலபாத்ர நிர்மாணம், பலவிதமான ரத்னபரீக்ஷை, தங்கநகைகள் செய்தல், வீடு கட்டுதல், தோட்டம் போடுதல், ஓடம் ஓட்டுதல், வ்ருக்ஷம் நட்டு வளர்த்தல், சூதாட்டம், பலவிதமான சமையல் செய்தல்,

கஜவித்யை, அச்வவித்யை, கோவித்யை, ஆயுதம் தயார்செய்தல், ஸாரத்யம், மந்த்ரசாஸ்த்ரம், ஸபைக்கு ஏற்றபடி பேசுதல், மல்யுத்தம், கதாயுத்தம், கத்திசண்டை, பல பாஷைகளில் பாண்டித்யம், பாலக்ரீடைகள், விதவிதமாய் மாலை கட்டுதல் இவ்வாறு எல்லாவித்யைகளையும், அறுபத்துநான்கு கலைகளையும் கற்று அதில் வல்லவன் கண்ணன். ஆகையால் கண்ணன் ஸர்வதந்த்ரஸ்வதந்த்ரன்.

किमत्र चित्रं गोविन्दे सर्वलोकेश्वरेश्वरे ।
सर्वशास्त्रार्थपाण्डित्ये गीयमाने शुकादिभिः ॥१५॥

15. ஸர்வலோகேச்வரனான கோவிந்தன் விஷயத்தில் இது என்ன ஆச்சர்யமோ! ஸ்ரீசுகர்முதலிய முனிவர்கள் க்ருஷ்ணனை ஸர்வசாஸ்த்ரபண்டிதனாக சொல்லுகின்றனரன்றோ!

आश्चर्यकेलिसंपूर्णे कृष्णस्य चरिते शुभे ।
एवमेव सर्वकलावल्लभत्वं प्रदृश्यते ॥१६॥

16. ஆச்சர்யகுணசேஷ்டிதனான ஸ்ரீக்ருஷ்ணனின் சரித்ரங்களில் ஆங்காங்கு ஸகலகலாவல்லவன் என்று நிரூபணமாகிறது.

पुराणेषु पठन् भक्तः श्रीमद्भागवतादिषु ।
लभते परमानन्दं तत्कलाकौशलं मुहुः ॥१७॥

17. ஸ்ரீமத்பாகவதம்முதலிய புராணங்களில் அதைப்படித்து பக்தர்கள் ஸ்ரீக்ருஷ்ணனின் கலாசாதுர்யத்தை அறிந்து ஆனந்தப்படுகின்றனர்.

*इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये वैभवकाण्डे*

*श्रीकृष्णसकलकलावल्लभत्वं नाम नवमोऽध्यायः॥९॥*

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமி மஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவனமாஹாத்மியத்தில் ஸ்ரீக்ருஷ்ணவைபவகாண்டத்தில் ஒன்பதாம் அத்யாயம்.**

# अथ दशमोऽध्यायः

## பத்தாம் அத்யாயம்

### श्रीसद्गुरुरुवाच

अद्य वक्ष्यामि कृष्णस्य योगमायाबलं प्रभोः ।
यमेवं सर्वयोगीशं वदन्ति श्रीशुकादयः ॥१॥

ஸ்ரீஸத்குரு

1. ஸ்ரீக்ருஷ்ணனின் யோகசக்தியைச் சொல்வேன். ஸ்ரீசுகர் முதலிய முனிவர்கள் அவனையே யோகேச்வரனாகச் சொல்லுகின்றனர்.

निरुन्धन् मनसो वृत्तिं कामभोगेषु सम्यमी ।
ऊर्ध्वरेताः परं तत्त्वं ध्यायन् सिद्धिमवाप्नुयात् ॥२॥

2. காமபோகங்களில் மனதை அடக்கி வென்ற ப்ரம்மசர்யமுள்ள ஊர்த்வரேதஸுகளுக்குத்தான் யோகஸித்திகள் உண்டாகின்றன.

सिद्धिरष्टविधा प्रोक्ता योगशास्त्रेषु योगिभिः ।
गृह्णाति यां लीलयैव सर्वलोकेश्वरो हरिः ॥३॥

3. யோகிகள் யோகசாஸ்த்ரங்களில் எட்டுவிதமான யோகஸித்திகளைச் சொல்கின்றனர். ஸ்ரீக்ருஷ்ணனோ அவைகளை விளையாட்டாகவே கையாளுகின்றான்.

मुमुक्षूणामन्तरायं करोति ननु योगिनाम् ।
यद्याश्रिता योगसिद्धिरनादृत्य रतिं हरौ ॥४॥

4. ஹரிபக்தியை ஆச்ரயிக்காமல் முமுக்ஷுக்கள் இந்த யோக ஸித்திகளைக் கையாண்டால் மோக்ஷத்திற்கு விக்னமேற்படும்.

अणिमा महिमा चैव गरिमा लघिमा तथा ।
प्राप्तिः प्रकाममीशित्वं वशित्वञ्चाष्टभूतयः ॥५॥

5. அணிமா, மஹிமா, கரிமா, லகிமா, ப்ராப்தி, ப்ராகாம்யம், ஈசிதா, வசிதா என்பன அஷ்டஸித்திகள்.

अणिमादिर्योगसिद्धिर्योगिनामूर्ध्वरेतसाम् ।
तपस्विनां हि सुलभा दुर्लभा च्युतरेतसाम् ॥६॥

6. இந்த அணிமா முதலிய ஸித்திகள் ஊர்த்வரேதஸுகளான யோகிகளுக்கே கிடைக்கும். அதோரேதஸுகளுக்குக் கிடைக்காது.

तृणावर्तेन गोविन्दे वायुनापहृते हरौ ।
अणिमा दृश्यते सिद्धिस्तत्रैव गरिमा तथा ॥७॥

7. த்ருணாவர்த்தன் கண்ணனைத்தூக்கிச் செல்லும்போது ஒரு அணுபோல் பறந்த கண்ணன் அதே த்ருணாவர்த்தனிடம் தூக்கவே முடியாமல் கனத்தை உண்டாக்கி கரிமா என்ற ஸித்தியைக் காட்டினான்.

सभायां कौरवाणाञ्च पुरतः फाल्गुनस्य च ।
कृष्णेन विश्वरूपेण महिमा च प्रकाशिता ॥८॥

8. அர்ஜுனனுக்கு விச்வரூபம் காட்டும்போது மஹிமா என்ற ஸித்தியால் பெரிய ரூபத்தைக் காட்டினான்.

गोमन्तपर्वतात्कृष्णो बलभद्रेण संयुतः ।
लघिम्नोत्पत्य तरसा द्वारकामगमद्धरिः ॥९॥

9. கோமந்தபர்வதத்திலிருந்து பலராமனுடன் லகிமா என்ற ஸித்தியால் ஆகாயத்தில் லகுவாகக் கிளம்பி த்வாரகைக்கு வந்து சேர்ந்தான்.

सर्वं गृह्णाति विषयमेकत्र निवसन् हरिः ।
सुदूरे वर्तमानञ्च प्राप्तियोगात्स्वयं हरिः ॥१०॥

यथा कुरुसभायां तु द्रौपद्याः परिदेवनम् ।
द्वारवत्यां वसन्नेव शुश्राव पुरुषोत्तमः ॥११॥

10,11. ஒரு இடத்திலிருந்தே வெகு தூரத்தில் நடப்பதை அறிவது ப்ராப்தியாகும். த்வாரகையிலிருந்தே ஹஸ்தினாபுரத்தில் த்ரௌபதி அலறுவதை அறிந்து அவளுக்கு வஸ்த்ரங்களைத் தந்து மானத்தை ரக்ஷித்தானன்றோ!

षोडशस्त्रीसहस्रेशो योगवीर्येण संयुतः ।
भुङ्क्ते भोगान् यथाकामं पुत्रपौत्रादिसंयुतः ॥१२॥

यद्यत्कामयते देवस्तत्तत्प्राप्नोति दुर्लभम् ।
स्वर्गस्थमतलस्थं वा प्राकाम्येन स्वयं हरिः ॥१३॥

12,13. பதினாராயிரத்து நூற்றெட்டு ஸ்த்ரீகளுக்கு ஒரே வல்லபனாகி லக்ஷக்கணக்கான புத்ரபௌத்ரர்களுடன் ஸகலபோகங்களையும் அனுபவித்தான். தன் இஷ்டப்படி நினைத்ததை நடத்து ான். அவன் ஆசை பங்கப்படவே படாது. ஸ்வர்கம்முதலிய லோகங்களுக்கு தன் இஷ்டப்படி போய் வருவான். இதுவே ப்ராகாம்யம் என்ற ஸித்தி.

अकर्तुमन्यथाकर्तुं कर्तुञ्च स्वयमीश्वरः ।
ईष्टे च लीलया देवः सर्वकार्येषु माधवः ॥१४॥

शैलं समुद्धरत्येवमनलं पिबति प्रभुः ।
यमं नियमयत्येवमीशिता प्रथिता हरेः ॥१५॥

14,15. ஒரு கார்யத்தைச் செய்வதற்கும், நிறுத்துவதற்கும், அந்யதாசெய்வதற்கும் சக்தியுடையவன், சுதந்திரமானவன், ஸர்வகார்யங்களையும் லீலையாகவே செய்து முடிப்பவன். மலையையும் குடைபிடிப்பான். அக்னியையும் குடிப்பான். யமனையும் அடக்குபவன். இவ்வாறு கண்ணனிடம் ஈசிதா என்ற சக்தி காணப்படுகிறது.

शीतोष्णसुखदुःखेषु द्वन्द्वेषु प्राकृतेषु च ।
जितेन्द्रियो जितक्रोधो ब्रह्मचर्यव्रते स्थितः ॥१६॥

अक्षोभ्यहृदयो ज्ञानी समाराध्यश्च योगिनाम् ।
वशङ्करोति योगेन चञ्चलं प्रसभं मनः ॥१७॥

16,17. சீதம்,உஷ்ணம், ஸுகம், துக்கம், முதலிய த்வந்த்வங்களில் ஸமபுத்தியுடையவனாய் காமக்ரோதங்களை வென்றவனாய்

ப்ரம்மசர்யத்துடன் கூடினவனாய் யாராலும் வரண்டு போகாத ஹ்ருதயமுள்ளவனாய் யோகிகளுக்கு ஈச்வரனாய் தனது யோகத்தினால் சஞ்சலமான மனதை அடக்கியவனாய் கண்ணன் காணப்படுகிறான்.

विना वशित्वं यततां संयमो नैव विद्यते ।
सम्यमेन विना योगो नैव सिद्ध्यति तत्त्वतः ॥१८॥

18. இத்தகைய வசிதா என்ற ஸித்திஇல்லாமல் சஞ்சலமான மனதை அடக்கமுடியாது. மனது அடங்காதவனுக்கு யோகஸித்தி இல்லை.

दुरूहो योगमार्गोऽयं विषयासक्तचेतसाम् ।
नृणां तु क्षुद्रकामानां मैथुनायैव जीवताम् ॥१९॥

19. சிற்றின்ப நாட்டமுள்ளவர்களுக்கு யோகமார்கம் பிடிபடாது. மனிதர்கள் அல்ப காமர்கள்.

स्त्रियमेकामपि नरः क्षुद्रकामश्च्युतेन्द्रियः ।
न शक्नुयात्तोषयितुं सुरतैरल्पचेष्टितैः ॥२०॥

सम्यमी योगवीर्येण स्त्रीसहस्रेण सम्युतः ।
समृद्धकामो रमते भगवान् विजितेन्द्रियः ॥२१॥

20,21. அல்பகாமர்களான அதோரேதஸுக்கு ஒரு ஸ்த்ரீயைக் கூட ஸுகப்படுத்தமுடியாது. ஸத்யகாமனான யோகீச்வரனான ஸ்ரீக்ருஷ்ணனோ ஆயிரம் ஸ்த்ரீகளையும் ஸுகப்படுத்துபவன்.

अन्यथा च्युतवीर्यस्य योगसिद्धिर्न विद्यते ।
योगीश्वरत्वाच्छ्रीकृष्णे दृश्यते वशितैव सा ॥२२॥

22. அதோரேதஸுகளான மனிதர்களுக்கு யோகஸித்திகள் உண்டாவதில்லை. ஸ்ரீக்ருஷ்ணன் ஊர்த்வரேதஸாக யோகீச்வரனாக இருப்பதாலேயே அஷ்டமஹாஸித்திகளும் உடையவனாய் இருக்கிறான்.

षोडशस्त्रीसहस्रस्य नायकत्वं प्रकाशयन् ।

आत्मनो योगवीर्यं तद्दर्शयामास माधवः ॥२३॥

23. இவ்வாறு பதினாராயிரத்து நூற்றெட்டு பட்டமஹிஷி களுக்கும் ஒரே நாயகனாகி ஸ்ரீக்ருஷ்ணன் தன்னை நித்யப்ரம்மசாரியாகவும் யோகீச்வரனாகவும் நிரூபித்தான்.

किमत्र चित्रं सर्वेशे वशितायां स्वभावतः ।
लोका यस्य वशे सन्ति सर्वे लोकेश्वरास्तथा ॥२४॥

24. ஸர்வேச்வரனுக்கு எல்லாம் வசம்தானே. இதில் என்ன ஆச்சர்யம்!

इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये वैभवकाण्डे श्रीकृष्णयोगमायाबलवर्णनं नाम दशमोऽध्यायः॥१०॥

**இவ்வாறுஸ்ரீக்ருஷ்ணப்ரேமி மஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில் ஸ்ரீக்ருஷ்ணவைபவகாண்டத்தில் பத்தாம் அத்யாயம்.**

## अथैकादशोऽध्यायः

## பதினோராம் அத்யாயம்

### श्रीसद्गुरुरुवाच

केचिद्वदन्ति सगुणं निर्गुणञ्चापि केचन ।
केचिद्वदन्ति साकारं निराकारञ्च केचन ॥१॥

### ஸ்ரீஸத்குரு

1. சிலர் ப்ரும்மத்தை ஸகுணமென்றும், சிலர் நிர்குணமென்றும், சிலர் ஸாகாரமென்றும், சிலர் நிராகாரமென்றும் சொல்கின்றனர்.

केचिद्वदन्ति प्रकृतिं परमाणूंश्च केचन ।
केचिद्वदन्ति कर्मैव केचित्प्रज्ञानमेव च ॥२॥

2. சிலர் ஜகத்காரணவஸ்துவை ப்ரக்ருதி என்றும், சிலர் பரமாணு என்றும், சிலர் கர்மமென்றும், சிலர் ப்ரக்ஞான மென்றும் சொல்கின்றனர்.

केचिद्वदन्ति शक्तिञ्च तथा केचित्परं शिवम् ।

केचिद्वदन्ति विघ्नेशं स्कन्दं सूर्यञ्च केचन ||३||

3. சிலர் சக்தி என்றும், சிலர் சிவன் என்றும், சிலர் கணபதி என்றும், சிலர் ஸ்கந்தன் என்றும் சிலர் ஸூர்யன் என்றும் சொல்கின்றனர்.

एवं नानाविधैर्लोके संप्रदायैः सनातनैः |
आराध्यते सदा सर्वैर्वासुदेवः श्रियःपतिः ||४||

4. இவ்வாறு பல ஸனாதனமான ஸம்ப்ரதாயங்களால் ஸ்ரீய:பதியான வாஸுதேவனே ஆராதிக்கப்படுகிறான்.

नारायणात्परं तत्त्वं वेदान्तेषु न विद्यते |
बहुधा कल्पयन्त्येवं देवदेवमुपासकाः ||५||

5. நாராயணனைக் காட்டிலும் பரதத்வம் ஸர்வவேதாந்தங்களிலும் காணப்படவில்லை. அந்த தேவதேவனையே உபாஸகர்கள் பலவிதமாய் த்யானிக்கின்றனர்.

उपासकानां भावज्ञो भगवान् करुणानिधिः |
निराकारोपि कृपया दधाति परमं वपुः ||६||

6. உபாஸகர்களுக்கு அருள் செய்யவேண்டி பகவானும் நிராகாரமாயினும் பல நாமரூபங்களை தரிக்கின்றான்.

केचिद्वदन्ति गोविन्दं सर्वकारणकारणम् |
तस्यांशेन भवन्तीति ब्रह्मविष्णुशिवादयः ||७||

7. சிலர் கோவிந்தனே பரப்ரும்மம் என்றும் அவனது அம்சமே மும்மூர்த்திகள் என்றும் சொல்கின்றனர்.

केचिद्वदन्ति च व्यक्तं नानाशास्त्रप्रमाणकाः |
विष्णोरंशेन संभूतं कृष्णं श्रीनन्दनन्दनम् ||८||

8. சிலர் சாஸ்த்ரப்ரமாணத்தால் விஷ்ணுவே பரப்ரும்மமென்றும் க்ருஷ்ணன் விஷ்ணுவின் அவதாரமென்றும் சொல்கின்றனர்

नारायणो वा कृष्णोस्तु कृष्णो नारायणोस्तु वा |

एतयोर्न हि मे भेदस्तत्र कोपि न मे श्रमः ॥९॥

9. நாராயணன்தான் க்ருஷ்ணனாக இருக்கட்டும். க்ருஷ்ணன்தான் நாராயணனாக இருக்கட்டும். எனக்கு இதில் பேதமில்லை. எனக்கு ஏதும் சிரமமில்லை.

तत्तद्बुद्धिबलेनैव संप्रदायप्रवर्तकाः ।
व्यर्थं कुर्वन्ति शास्त्रार्थं सर्वं तत्सत्यमेव हि ॥१०॥

10. அவரவர் புத்திபலத்தினாலேயே ஸம்ப்ரதாய ப்ரவர்த்தகர்களான பண்டிதர்கள் ஸித்தாந்தம் செய்கின்றனர். அது யாவும் உண்மையே.

ब्रह्मणोऽनन्तरूपत्वान्मार्गाश्च बहवः स्मृताः ।
यथारुचि प्रवर्तन्ते संप्रदायेषु मानवाः ॥११॥

11. பரமாத்மா அனந்தமூர்த்தியாக இருப்பதால் உபாஸனமும் ஸம்ப்ரதாயமும் அனந்தமாக இருக்கின்றன. அவரவர் ருசிக்கு ஏற்றபடி நடக்கின்றன.

वृथा वादो न कर्तव्यः स्मर्तव्यः सततं हरिः ।
सर्वलोकसमाराध्यः सर्वदेवमयो ह्यसौ ॥१२॥

12. வீண் வாதங்களைவிட்டு ஸதாகாலமும் ஹரிஸ்மரணமே செய்யவேண்டும். யாவராலும் ஆராதிக்கப்படும் ஹரி எல்லா தெய்வமாயுமிருக்கிறான்.

सत्यं सत्यं पुनः सत्यं सत्यमेव वदाम्यहम् ।
नास्ति कृष्णात्परं दैवमद्भुतं रसपूरितम् ॥१३॥

13. ஸத்யத்தின்மேல் ஸத்யமாகச் சொல்கிறேன். க்ருஷ்ணனைக் காட்டிலும் ஆச்சர்யகரமான ரஸமான தெய்வமில்லை.

महाश्मशाननिलयः कपाली भस्मभूषितः ।
ज्ञानवैराग्यरूपोऽयं भगवान् परमेश्वरः ॥१४॥

14. பஸ்மாவும் கபாலமும் அணிந்து மஹாச்மசானத்தில் இருப்பவர் பரமேச்வரன். ஞானமும் வைராக்யமும் தருபவர்.

शङ्खचक्रधरः श्रीमान् विष्णुर्वेदात्मवाहनः ।
परतत्त्वस्वरूपोऽयं भगवान् मोक्षदायकः ॥१५॥

*15. சங்க சக்ரம் ஏந்தும் சதுர்புஜபகவான் விஷ்ணு கருடவாஹனன். மோக்ஷம் தருபவர்.*

धर्मो विग्रहवान् रामः सत्यसन्धो महामतिः ।
सर्वलोकप्रियः साधुः शरणागतवत्सलः ॥१६॥

*16. தர்மமே வடிவமானவர் ராமர். ஸத்யஸந்தர். மஹாபுத்தி மான். சரணாகதவத்ஸலர். ஸர்வலோகப்ரியர். மிக நல்லவர்.*

कृष्णस्तु सुन्दराकारो विशुद्धप्रेमचेष्टितः ।
सख्यमाधुर्यवात्सल्यदास्यादिरसपोषकः ॥१७॥

*17. அழகு மிக்க கண்ணனோ சுத்தமான ப்ரேமையே வடிவமானவன். வாத்ஸல்யம், ஸக்யம், மாதுர்யம், தாஸ்யம், என்னும் ப்ரேமையைப் போஷிப்பவன்.*

न हि कृष्णेन तुल्यं स्याद्दैवमन्यज्जगत्त्रये ।
सौन्दर्येण रसेनैव लीलया स विशिष्यते ॥१८॥

*18. மூவுலகிலும் கண்ணனைக் காட்டிலும் சிறந்த தெய்வமில்லை. ஸௌந்தர்யம், ரஸம், லீலை இவைகளால் கண்ணன் மிக்கவன்.*

त्रिभङ्गिललिताकारं किशोरं मुरलीधरम् ।
ये स्मरन्ति सदा चित्ते ते नूनं भाग्यशालिनः ॥१९॥

*19. த்ரிபங்கிலலிதாக்ருதியும் கிசோரமூர்த்தியுமான முரளீதரனை யார் இதயத்தில் தினமும் த்யானிக்கின்றனரோ அவர்களே பாக்யவான்கள்.*

कश्चित् त्रिनेत्रो जटिलः कश्चिल्लम्बोदरस्तथा ।
कश्चिच्चतुर्भुजश्चैवं कश्चित्षण्मुख एव च ॥२०॥

इमानि दिव्यरूपाणि तत्तद्भक्तप्रियाणि हि ।
स्वारस्यं कृष्णरूपस्य मध्यस्थो वदतु स्वयम् ॥२१॥

20,21. ஒரு தேவன் முக்கண்ணன். ஜடாதரன். ஒருவன் பருத்த தொந்தி உடையவர், ஒருவர் நான்கு கைகள் உடையவர். ஒருவர் ஆறுமுகமுள்ளவர். இந்த ரூபங்கள் யாவுமே திவ்யம்தான். அந்தந்த பக்தர்களுக்கு ப்ரியமானவை. ஆனால் இவ்விஷயத்தில் எது அழகான ரூபமென்று மத்யஸ்தர்கள் சொல்லட்டும். ஸ்ரீக்ருஷ்ணனா மற்ற தெய்வங்களா?

न भेदं जनयिष्यामि भक्तानां हृदयेष्वहम् ।
प्रमाणतः प्रवक्ष्यामि कृष्णमाहात्म्यमद्भुतम् ॥२२॥

22. நான் பக்தர்களுக்குள் பேதப்படுத்தவில்லை. ப்ரமாணத்துடன் க்ருஷ்ண மாஹாத்மியத்தை நிரூபிக்கிறேன். இது அத்புதம்.

श्रीकृष्णात्सुन्दराकारो नान्योऽस्ति भुवनत्रये ।
श्रीकृष्णाद्रसरूपश्च नान्योऽस्ति भुवनत्रये ॥२३॥

श्रीकृष्णाद्गुणपूर्णश्च नान्योऽस्ति भुवनत्रये ।
श्रीकृष्णात्केलिलोलश्च नान्योऽस्ति भुवनत्रये ॥२४॥

श्रीकृष्णात्करुणासिन्धुर्नान्योऽस्ति भुवनत्रये ।
श्रीकृष्णाद्धर्मसूक्ष्मज्ञो नान्योऽस्ति भुवनत्रये ॥२५॥

श्रीकृष्णात्सुखजीवी च नान्योऽस्ति भुवनत्रये ।
श्रीकृष्णात्सुखदाता च नान्योऽस्ति भुवनत्रये ॥२६॥

श्रीकृष्णात्परमो देवो नान्योऽस्ति भुवनत्रये ।
श्रीकृष्णात्प्रेमपूर्णश्च नान्योऽस्ति भुवनत्रये ॥२७॥

23-27. ஸ்ரீக்ருஷ்ணனைக் காட்டிலும் ஸுந்தராகாரனோ, ரஸரூபனோ, குணபூர்ணனோ, கேளிலோலனோ, கருணைக்கடலோ, தர்மஸூக்ஷ்மம் அறிந்தவனோ, ஸுகஜீவியோ ஸுகத்தைக் கொடுப்பவனோ ப்ரேமரூபனோ பரதெய்வமோ மூவுலகிலுமில்லை.

प्रमाणतोपि निर्णीतं कृष्णमाहात्म्यमद्भुतम् ।
न विदन्ति जना मूढा दौर्भाग्येनाप्यसूयया ॥२८॥

*28. ப்ரமாணத்தினால் க்ருஷ்ணமாஹாத்மியத்தை நிரூபித்தும் பொறாமையால் சில துர்பாக்யவான்கள் இதை அறிவதில்லை.*

अहो कृष्णस्य माधुर्यमहो कृष्णस्य चेष्टितम् ।
अहो कृष्णस्य वैचित्र्यं न जानन्त्यात्मवञ्चकाः ॥२९॥

अहो कृष्णस्य सौन्दर्यमहो कृष्णस्य कौशलम् ।
अहो कृष्णस्य चारित्रं न जानन्त्यात्मवञ्चकाः ॥३०॥

अहो कृष्णस्य सौलभ्यमहो कृष्णस्य सौरभम् ।
अहो कृष्णस्य रासिक्यं न जानन्त्यात्मवञ्चकाः ॥३१॥

अहो कृष्णस्य गाम्भीर्यमहो कृष्णस्य सौभगम् ।
अहो कृष्णस्य कारुण्यं न जानन्त्यात्मवञ्चकाः ॥३२॥

*29-32. ஆஹா! க்ருஷ்ணனின் இனிமை, லீலை, விசித்ரம், அழகு, ஸாமர்த்யம், சரித்ரம், எளிமை, ராஸிக்யம், நறுமணம், காம்பீர்யம், கருணை, யாவும் ஆஹா! ஆஹா!! ஆச்சர்யகர மானது. இதையறியாதவர்கள் தனக்குத்தானே ஏமாந்தவர்கள்.*

भाग्यवन्तो वयं सर्वे कृष्णानुग्रहलालिताः ।
स्मरामः कृष्णमाहात्म्यं ब्रह्मादिसुरदुर्लभम् ॥३३॥

*33. க்ருஷ்ணனின் காருண்யத்தினால் லாலனை செய்யப்படும் நாமே பாக்யவான்கள். ப்ரம்மாதிதேவர்களுக்கும் துர்லபமான க்ருஷ்ணமாஹாத்மியத்தை நினைக்கிறோம்.*

वयं धन्या वयं धन्या वयं धन्या जगत्त्रये ।
श्रुतं श्रीकृष्णमाहात्म्यं कीर्तितञ्च तथा स्मृतम् ॥३४॥

*34. மூவுலகிலும் நாமே தன்யர்கள். க்ருஷ்ண மாஹாத்மியத்தைக் கேட்டோம். சொன்னோம். நினைக்கிறோம்.*

गोपीभावरहस्यञ्च माहात्म्यं श्रीवनस्य च ।
प्रेमभक्तिविशेषञ्च वेदान्तविषयं शुभम् ॥३५॥

सर्वं भागवतं धर्मं साध्यसाधनलक्षणम् ।
साक्षाद्विष्णोः परत्वञ्च मुमुक्षूणां गतिं तथा ॥३६॥

लीलारहस्यं कृष्णस्य राधाभावं महाद्भुतम् ।
सर्वं व्यक्तमिदं प्राह भक्तकोलाहलो हि मे ॥३७॥

*35-37.கோபீபாவரஹஸ்யமும், ஸ்ரீப்ருந்தாவனமாஹாத்மியமும், ப்ரேமபக்திவிசேஷமும், சுலபமான வேதாந்தவிஷயமும், ஸாத்யஸாதன லக்ஷணமான ஸகல பாகவததர்மமும், ஸாக்ஷாத் விஷ்ணுவின் பரத்வமும், முமுக்ஷுக்களின் பரகதியும், ஸ்ரீக்ருஷ்ணனின் லீலாரஹஸ்யமும், பரம அத்புதமான ஸ்ரீராதா பாவமும், இது எல்லாவற்றையும் எனக்கு ஸ்ரீபக்த கோலாஹலனே தெளிவாகச் சொன்னான்.*

जानामि सर्वशास्त्रार्थसारं तस्य कृपाबलात् ।
न मे संशयलेशोऽपि शास्त्रेषु गहनेष्वपि ॥३८॥

*38. அவனது அருளால் சாஸ்த்ரங்கள் யாவையும் தெளிவாய் அறிகிறேன். எனக்கு எள்ளளவாகிலும் ஸந்தேஹமில்லை.*

तस्य दर्शनमात्रेण भक्तानां भाग्यशालिनाम् ।
जायते परमाह्लादपूर्णकोलाहलस्वनः ॥३९॥

तस्मादयं कृपासिन्धुर्भक्तकोलाहलः स्मृतः ।
आश्रितानामर्थिनाञ्च भक्तानां कल्पकाधिकः ॥४०॥

*39,40. அவனை தர்சனம்செய்த அளவில் பக்தர்களுக்கு பரம ஆஹ்லாதத்தினால் கோலாஹலம் உண்டாவதால் பக்தகோலாஹலன் எனப்படுகிறான். அண்டியவர்களுக்கு விரும்பிய வரன்களைத் தருவதில் கல்பகவ்ருக்ஷத்தைக் காட்டிலும் உதாரகுணமுள்ளவன்.*

माहात्म्यं श्रीवनस्येदमस्यैव कृपया हरेः ।
करामलकवद्वेद्मि युष्माकं प्रवदामि च ॥४१॥

41. இந்த ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியம் எங்கே! நான் எங்கே! இவை யாவையும் ஸ்ரீபக்தகோலாஹலன் க்ருபையால் உள்ளங்கைநெல்லிக்கனிபோல் அறிந்து உங்களுக்குச் சொன்னேன்.

भगवानेव वक्ता हि श्रोता च भगवान् हरिः ।
निमित्तमात्रभूतोस्मि केवलं दारुयन्त्रवत् ॥४२॥

42. பகவானே வக்தா, பகவானே ச்ரோதா, நாம் வெறும் மரயந்திரம் போன்றவர்களே அன்றோ!

नाहं करोमि ग्रन्थेऽस्मिन् श्लोकं श्लोकार्धमेव वा ।
वैभवन्त्वात्मनो दिव्यं प्रकाशयति माधवः ॥४३॥

43. இந்த க்ரந்தத்தில் ஒரு அரை ச்லோகம்கூட நானாகவே செய்யவில்லை. ஸ்ரீபக்தகோலாஹலனே என்னைக்கொண்டு தன் மஹிமையை ப்ரகாசப்படுத்திக் கொண்டான்.

क्वेदं श्रीवनमाहात्म्यं क्वाहं कीटसमो भुवि ।
प्रचोदनं विना तस्य तद्वक्तुं शक्नुयां कथम् ॥४४॥

44. ஸ்ரீப்ருந்தாவனமாஹாத்மியம் எங்கே? ஒரு புழுவான நான் எங்கே? கோலாஹலன் ப்ரேரணையின்றி இதை எப்படி என்னால் சொல்லமுடியும்!

भवतां लोकपूज्यानां वैष्णवानां महात्मनाम् ।
पुराणमेतद्रचितं सन्तोषायैव केवलम् ॥४५॥

45. லோகபூஜ்யர்களும் மஹாத்மாக்களும் வைஷ்ணவர்களுமான உங்கள் சந்தோஷத்திற்காகவே இந்த புராணம் செய்யப்பட்டது.

श्रीमद्भागवतस्येदं भवतूपपुराणकम् ।
यस्य श्रवणमात्रेण सुलभो भगवान् हरिः ॥४६॥

46. இது ஸ்ரீமத்பாகவதத்திற்கு உபபுராணம் ஆகும். இதை

ச்ரவணம் செய்தால் பகவானாகிய ஹரி சுலபமாவார்.

अनन्तं किल माहात्म्यं रजसोपि व्रजस्य तु ।
सङ्ग्रहेणैव कथितं मयेदं बालबुद्धिना ॥४७॥

47. ப்ருந்தாவனத்தின் ரஜஸின் மாஹாத்மியமே அனந்தம். பாலபுத்தியுடைய என்னால் அது சுருக்கிச் சொல்லப்பட்டது.

भक्तकोलाहलः साक्षी ग्रन्थस्यास्य कृपानिधिः ।
पठतां शृण्वताञ्चापि मङ्गलं प्रददात्वयम् ॥४८॥

48. இந்த க்ரந்தத்திற்கு ஸ்ரீபக்தகோலாஹலனே ஸாக்ஷி. க்ருபாளுவான அவன் படிப்பவர்களுக்கும் கேட்பவர்களுக்கும் மங்களம் தரட்டும்.

इति श्रीकृष्णप्रेमिमहाप्रभुविरचिते श्रीबृन्दावनमाहात्म्ये वैभवकाण्डे
श्रीकृष्णमाहात्म्यं नामैकादशोऽध्यायः ॥११॥

**இவ்வாறு ஸ்ரீக்ருஷ்ணப்ரேமி மஹாப்ரபு அருளிய ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில் ஸ்ரீக்ருஷ்ணவைபவகாண்டத்தில் பதினோராம் அத்யாயம்.**

# अथ द्वादशोऽध्यायः

## பன்னிரெண்டாம் அத்யாயம்.

### श्रीसद्गुरुरुवाच

अत्र सङ्कीर्तितः कृष्णो भगवान् भक्तवत्सलः ।
प्रतिश्लोकं प्रतिपदं प्रत्यक्षरमजोऽच्युतः ॥१॥

### ஸ்ரீஸத்குரு

1. இந்த க்ரந்தத்தில் ப்ரதிச்லோகம், ப்ரதிபதம், ப்ரதி அக்ஷரம், பக்தவத்ஸலனான க்ருஷ்ணன் புகழப்படுகிறான்

सर्वत्र गीयते कृष्णो जगन्मङ्गलविग्रहः ।
अस्मिन् श्रीवनमाहात्म्ये भक्तकोलाहलप्रभुः ॥२॥

2. இந்த ப்ருந்தாவனமாஹாத்மியத்தில் ஜகன்மங்களவிக்ரஹனான ஸ்ரீபக்தகோலாஹலனே எங்கும் பாடப்படுகிறான்.

ज्ञानवैराग्यसंयुक्ता भक्तिः प्रेमस्वरूपिणी ।
प्रकाशते प्रतिश्लोकं परमानन्ददायिनी ॥३॥

3. ப்ரதிச்லோகம் பரமானந்தத்தையே தரும் ஞானவைராக்யத்துடன் கூடிய ப்ரேமபக்தியே ஸித்தாந்தம் செய்யப்படுகிறது.

सात्त्विकानां वैष्णवानां साधूनां समदर्शिनाम् ।
इदं श्रीवनमाहात्म्यं पुराणं सर्वसंमतम् ॥४॥

4. ஸாத்விகர்களும், ஸமதர்சிகளும், ஸர்வக்ஞர்களுமான ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு இந்த புராணம் ஸர்வஸம்மதமாகும்.

आदौ वेणानदीतीरे सतां सद्गुरुसङ्गमः ।
प्रश्नो वैष्णवधर्मस्य श्रीबृन्दावनवर्णनम् ॥५॥

अथ गोलोकमाहात्म्यं गोमाहात्म्यं तथैव हि ।
चतुर्विंशतितत्त्वानां सङ्ग्रहः सृष्टिरेव च ॥६॥

आविर्भावो महाविष्णोर्ब्रह्मणश्च शिवस्य च ।
मत्स्यकूर्मवराहादिनानाख्यानोपवर्णनम् ॥७॥

अम्बरीषस्य वृत्तान्तो ध्रुवस्य च महात्मनः ।
रुक्माङ्गदस्य चरितं प्रह्लादस्य च वैभवम् ॥८॥

एवं श्रीरामचन्द्रस्य चरितं किल्बिषापहम् ।
बृन्दायाश्चरितं पुण्यं यमुनायास्तथैव च ॥९॥

गोवर्धनस्य माहात्म्यं श्रीमूर्तीनाञ्च वैभवम् ।
अथ गोविन्दकाण्डेऽपि श्रीकृष्णजननोत्सवः ॥१०॥

5-10. முதலில் வேணாநதிதீரத்தில் ஸாதுக்கள் ஸத்குருவை அணுகி பாகவத தர்மத்தைக் கேட்டலும், பிறகு ஸ்ரீப்ருந்தாவன் வர்ணனமும், பிறகு கோலோகமாஹாத்மியமும், இருபத்தி

நான்கு தத்துவங்கள், லக்ஷ்மி மஹாவிஷ்ணு ப்ரும்மா சிவன் இவர்களின் ஆவிர்பாவம், மத்ஸ்ய கூர்ம வராஹாதி அவதாரங்கள் அம்பரீஷசரிதம், த்ருவசரிதம், ருக்மாங்கத சரிதம், ப்ரஹ்லாத சரித்ரம், ஸ்ரீராமசரித்ரம், ப்ருந்தாதேவி சரித்ரம், யமுனாதேவியின் சரித்ரம். கோவர்தன மாஹாத்மியம், ஸ்ரீமூர்த்திகளின் வைபவம் இவைகள் சொல்லப்பட்டன.

बालक्रीडा च विविधा पूतनाया वधस्तथा ।
तृणावर्तस्य निष्पेषः शकटासुरभञ्जनम् ॥११॥

नवनीतदधिक्षीरहरणं धेनुपालनम् ।
बृन्दावनाटनञ्चैव कालीयनटनं तथा ॥१२॥

गोपीवस्त्रापहरणं दानलीलादयस्तथा ।
गोवर्धनोद्धारणञ्च गोविन्दस्याभिषेचनम् ।
एवं बहुविधा लीलाः कृष्णस्य परिकीर्तिताः ॥१३॥

*11-13.* பிறகு கோவிந்தகாண்டத்தில் ஸ்ரீக்ருஷ்ணஜனனம், பலவிதமான பாலக்ரீடை, பூதனாவதம், த்ருணாவர்த்தவதம், சகடாஸுரபஞ்ஜனம், நவநீதலீலை, ஆநிரைமேய்த்தல், ப்ருந்தாவனசஞ்சாரம், காளீயநர்த்தனம், கோபீவஸ்த்ராபஹரணம், தானலீலை, கோவர்த்தனோத்தாரணம், கோவிந்த பட்டாபிஷேகம் இவ்வாறு பலவிதமான லீலைகள் சொல்லப்பட்டன.

देवीकाण्डे जगन्मातुराविर्भावः शुभावहः ।
बालक्रीडा च विविधा नारदस्तुतिरेव च ॥१४॥

बृन्दारण्याटनञ्चाथ कृष्णप्रथमदर्शनम् ।
विरहानुभवश्चैव नानाशृङ्गारचेष्टितम् ॥१५॥

गान्धर्वविधिना देव्या विवाहो यमुनावने ।
लीलाकाण्डे तु विविधा राधामाधवकेलिका ॥१६॥

14-16. பிறகு தேவீகாண்டத்தில் ஜகந்மாதாவான ஸ்ரீராதாதேவியின் ஆவிர்பாவம், விதவிதமான பாலலீலை, நாரதஸ்துதி, ப்ருந்தாவனத்தில் ஸ்ரீக்ருஷ்ணனை முதலில் ஸந்தித்தல், விரஹானுபவம், பலவிதமான ச்ருங்கார சேஷ்டைகள், ப்ருந்தாவனத்தில் காந்தர்வவிதியால் ராதாக்ருஷ்ணவிவாஹம், பிறகு லீலாகாண்டத்தில் பலவிதமான ராதாக்ருஷ்ணலீலைகளும் சொல்லப்பட்டன.

एवञ्च मधुराकाण्डे मधुरागमनं हरेः ।
अक्रूरव्रजयात्रा च भोजराजवधस्तथा ॥१७॥

उद्धवव्रजयात्रा च गोपीनां प्रेमभाषणम् ।
विविधं कृष्णचारित्रं व्यक्तमेव हि वर्णितम् ॥१८॥

17,18. மதுராகாண்டத்தில் அக்ரூரர் கோகுலம் வருதலும், பகவான் மதுரைக்குப் போவதும், கம்ஸவதமும், உத்தவன் தூது, கோபீஸம்பாஷணமும், விதவிதமான க்ருஷ்ணசரித்ரமும் தெளிவாகச் சொல்லப்பட்டது.

ततश्च द्वारकाकाण्डे रुक्मिण्युद्वाह एव च ।
रुक्मिणीकृष्णसंवादो व्रजमाहात्म्यवर्णनम् ॥१९॥
समन्तपञ्चकक्षेत्रे गोपीनां दर्शनं तथा ।
शिशुपालवधश्चैव व्रजयात्रा हरेः पुनः ॥२०॥
गोलोकप्रेषणं तेषां नन्दादीनां महात्मनाम् ।
कुरुपाण्डवयुद्धञ्च सङ्ग्रहेण प्रकीर्तितम् ।
अन्ते भगवतो हन्त वैकुण्ठप्राप्तिवर्णनम् ॥२१॥

19-21. பிறகு த்வாரகாகாண்டத்தில் ஸ்ரீருக்மிணீகல்யாணம், ஸ்ரீருக்மிணியும் ஸ்ரீக்ருஷ்ணனும் செய்த ஸம்பாஷணையில் வ்ரஜமாஹாத்மியம், ஸமந்தபஞ்சக க்ஷேத்ரத்தில் கண்ணனும் கோபிகைகளும் ஸந்தித்தல், சிசுபாலவதம், கண்ணனின் வ்ரஜயாத்ரை, நந்தன்முதலியவர்களை கோலோகம் அனுப்புதல் குரு பாண்டவ யுத்தம், முடிவில் பகவானின் வைகுண்டகமனம்

இவைகள் சொல்லப்பட்டது.

अथ भागवतो धर्मो विस्तरेण प्रकीर्तितः ।
कृष्णस्य वैभवञ्चापि कीर्तितं व्यक्तमेव हि ॥२२॥

22. பிறகு பாகவததர்மகாண்டத்தில் பாகவததர்மமும், க்ருஷ்ணவைபவ காண்டத்தில் க்ருஷ்ணவைபவமும் விஸ்தாரமாகச் சொல்லப்பட்டது.

यः पठेच्छ्रुणुयाद्वापि भक्तियुक्तो दिने दिने ।
इदं श्रीवनमाहात्म्यं स भवेत्कृष्णबान्धवः ॥२३॥

23. தினந்தோறும் பக்தியுடன் இந்த ப்ருந்தாவன மாஹாத்மியத்தை படிப்பவனும் கேட்பவனும் ஸ்ரீக்ருஷ்ண னுக்கு பந்து ஆவான்.

कृष्णप्रीतिकरं पुण्यं कृष्णभक्तसुखावहम् ।
पठन् श्रीवनमाहात्म्यं दुःखग्रामाद्विमुच्यते ॥२४॥

24. க்ருஷ்ணப்ரீதிகரமும், க்ருஷ்ணபக்தர்களுக்கு ஆனந்தகரமு மான ஸ்ரீப்ருந்தாவனமாஹாத்மியத்தைப் படிப்பவன் துக்கங்களிலிருந்து விடுபடுவான்

लोकवेदविमुक्तानां वैष्णवानां महात्मनाम् ।
इदं श्रीवनमाहात्म्यं कर्णानन्दप्रदं भवेत् ॥२५॥

25. லோகவேதபந்தங்களிலிருந்து விடுபட்ட வைஷ்ணவர் களுக்கு இந்த ப்ருந்தாவனமாஹாத்மியம் கர்ணானந்தமாக இருக்கும்.

आयुरारोग्यमैश्वर्यं धनं धान्यञ्च संपदम् ।
जगत्याममलां कीर्तिं सत्पुत्राणाञ्च संभवम् ॥२६॥

दाम्पत्यस्यानुकूल्यञ्च धर्मनिष्ठां दृढामपि ।
एवं कृष्णे प्रेमभक्तिं ज्ञानं वैराग्यमेव च ॥२७॥

एवञ्श्रीवनमाहात्म्यं सर्वकामफलप्रदम् ।
पठतां शृण्वताञ्चापि प्रददाति न संशयः ॥

26-28. ஆயுள், ஆரோக்யம், ஐச்வர்யம், தனம், தான்யம், ஸம்பத்து, புகழ், ஸத்புத்ரஸந்தானம் தாம்பத்ய அனுகூலம், திடமான தர்மநிஷ்டை, ஸ்ரீக்ருஷ்ணனிடம் ப்ரேமபக்தி, ஞானம், வைராக்யம்முதலிய பக்தர்கள் விரும்பும் ஸர்வகாமித பலன்களையும் இந்த ஸ்ரீப்ருந்தாவனமாஹாத்மியம் தரும்.

नित्यलीलाप्रवेशाय यः पठेद्दृढभक्तिमान् ।
स नूनं प्राप्नुयात्सत्यं गोलोकञ्च सनातनम् ॥२९॥

29. ஸ்ரீராதாக்ருஷ்ணனின் நித்யலீலையில் ப்ரவேசிப்பதற்காக எவன் திடபக்தியுடன் இதைப் படிப்பானோ அவன் ஸனாதனமான கோலோகத்தை அடைவான்.

*इति श्रीमत्परमहंसपरिव्राजकाचार्यवर्यसर्वप्राणिसंरक्षकजगद्गुरु-*
*श्रीभगवन्नामबोधेन्द्रचरणारविन्दमकरन्दरसिकेन श्रीकृष्णप्रेमिमहाप्रभुणा*
*विरचिते श्रीबृन्दावनमाहात्म्ये श्रीकृष्णवैभवकाण्डे*
*श्रीबृन्दावनमाहात्म्यसङ्ग्रहो नाम द्वादशोऽध्यायः ॥१२॥*

**இவ்வாறு பரமஹம்ஸபரிவ்ராஜகாசார்யஸர்வப்ராணிஸம்ரக்ஷகஜகத்குரு ஸ்ரீபகவன்னாமபோதேந்த்ரஸரஸ்வதி சரணாரவிந்தங்களை ஆச்ரயித்த ஸ்ரீக்ருஷ்ணப்ரேமி மஹாப்ரபுவால் அருளிச்செய்யப்பட்ட ஸ்ரீப்ருந்தாவன மாஹாத்மியத்தில் ஸ்ரீக்ருஷ்ணவைபவகாண்டத்தில் பன்னிரெண்டாமத்யாயம் முற்றும்.**

॥ इति श्रीकृष्णवैभवकाण्डः समाप्तः ॥

**ஸ்ரீக்ருஷ்ணவைபவகாண்டம் முற்றும்.**

# ॥इति श्रीबृन्दावनमाहात्म्यम्॥

**ஸ்ரீப்ருந்தாவனமாஹாத்மியம் ஸம்பூர்ணம்.**

॥ श्रीभक्तकोलाहलार्पणमस्तु ॥

**ஸ்ரீபக்தகோலாஹலார்ப்பணமஸ்து.**

